# பவணந்தி முனிவர்

இயற்றிய

# நன்னூல் மூலமும்

சங்கர நமச்சிவாயர் செய்து
சிவஞான முனிவரால் திருத்தப்பட்ட
புத்தம் புத்துரை
என்னும்

# விருத்தியுரையும்

பதிப்பாசிரியர்

அ. தாமோதரன்

ஹைடெல்பெர்க் பல்கலைக்கழகம், ஜெர்மனி



உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

தரமணி, சென்னை

1999

பவணந்தி முனிவர்
இயற்றிய

# நன்னூல் மூலமும்

சங்கர நமச்சிவாயர் செய்து
சிவஞான முனிவரால் திருத்தப்பட்ட
புத்தம் புத்துரை
என்னும்

# விருத்தியுரையும்

பதிப்பாசிரியர்

**அ. தாமோதரன்**

ஹைடெல்பெர்க் பல்கலைக்கழகம், ஜெர்மனி

**உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்**

**தரமணி, சென்னை**

*1999*

## Bibliographical Data


| | |
|---|---|
| Title | : Nannul Mulamum Viruttiyuraiyum |
| Editor | : Dr. A. Dhamotharan |
| Publisher | : International Institute of Tamil Studies, C.I.T. Campus, Tharamani, Chennai - 600 113. |
| Publication No. | : 330 |
| Language | : Tamil |
| Date of Publication | : 1999 |
| Edition | : First |
| Paper used | : JK Maplitho 31Kg |
| Size of the book | : 1/4 Crown |
| Printing types | : 10 Points |
| No.of pages | : X + 590 = 600 |
| Price | : Rs. 225 |
| No. of Copies | : 1200 |
| Wrapper Design | : V. Karunanithy |
| Printed by | : The PARKAR 293, Ahamed Complex 2nd Floor, Royapettah High Road, Chennai 14. |


---




Layout and typesetting: Thomas Lehmann, Heidelberg

Published with financial assistance from South Asia Institute, University of Heidelberg, Germany.

காணிக்கை

எனக்குத்

தமிழறிவும்

மொழியுணர்வும்

வழங்கிய

நல்லாசிரியர்களுக்கு.

முனைவர் மு. தமிழ்க்குடிமகன், எம். ஏ., பிஎச். டி.
தமிழ் ஆட்சிமொழி, தமிழ்ப் பண்பாடு,
இந்து சமயம் மற்றும் அறநிலையத்துறை அமைச்சர்

# அணிந்துரை

ஏறத்தாழ, கி.மு.500இல் பிறந்த தொல்காப்பியத்திற்குப் பின்னால் அதிலுள்ள இலக்கண அமைப்புகளை விரிவுபடுத்தும் வகையிலும், வேண்டாதன விடுத்து வேண்டுவனவற்றைச் சிறப்பித்துச் சொல்லும் வகையிலும் பல இலக்கண நூல்கள் வெளிவந்துள்ளன. புறப்பொருளின் விரிவாக 'புறப்பொருள் வெண்பா மாலை'யும், அகப்பொருளின் விரிவாக 'நம்பியகப் பொருளும்', யாப்பு அணி தொடர்பாக 'யாப்பருங்கலக் காரிகை', 'தண்டியலங்காரம்' ஆகியவையும் வெளிவந்துள்ளன. எழுத்து, சொல் ஆகியவற்றின் இலக்கணக் கூறுகளை உள்ளடக்கிய நூலாக 'நன்னூல்' வெளிவந்துள்ளது. காலமுறைப்படி இது 13ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் வெளிவந்ததெனலாம். பவணந்தி முனிவர் 'தொல்காப்பியம் பிறந்து' ஏறத்தாழ 1700 ஆண்டுகளுக்குப் பின்னால் இந்த நூலை எழுதியுள்ளார். இதற்கு விருத்தியுரைகளும், காண்டிகை உரைகளும் வெளிவந்துள்ளன. அவைபற்றியெல்லாம் ஜெருமனி நாட்டில் ஹைடெல்பெர்க் பல்கலைக்கழகத்தின் பேராசிரியர் திரு. அ. தாமோதரன் விரிவாக அலசி ஆராய்ந்துள்ளார்.

சங்கர நமச்சிவாயர் செய்து சிவஞான முனிவரால் திருத்தப்பட்ட புத்துரையையும் வெளியிட்டுள்ளார். ஒருகாலத்தில் 'நன்னூல் - நன்னூலன்று' என்ற தலைப்பில் தொல்காப்பியர் காலத்தில் இல்லாத சில புது வழக்குகளைப் புகுத்தியதால், தமிழுக்குத் தீங்கு விளைவித்து விட்டதாகவே கருதி, 'மொழி ஞாயிறு' ஞா. தேவநேயப்பாவாணர் அவர்களும் 'பன்மொழிப்புலவர்' அப்பாதுரை அவர்களும் திறனாய்வு செய்து கட்டுரைகள் எழுதினார்கள். 'ஆவோடு அல்லது யகரம் முதலாது' என்ற நூற்பா தொல்காப்பியத்தில் இருக்கும்போது நன்னூலார் சில வடமொழிச் சொற்களையும் இணைத்துக்கொண்டு இலக்

கணம் வகுத்துள்ளார். எனினும் இப்போது நாம் அந்தத் திறனாய்வில் இறங்க வில்லை. மூலத்தையும் உரையையும் பதிப்பித்த அன்புக்குரிய தாமோதரன் அவர்கள் பெரிதும் பாராட்டுக்குரியவர். பதிப்பினை மிக நேர்த்தியாக வெளிக் கொணர்ந்த உலகத் தமிழாராய்ச்சி நிறுவனமும் பாராட்டுக்குரியது. இந்த வங்கயில் தாமோதரன் மிக விரிவான பதிப்புரை ஒன்றை எழுதியுள்ளார். அதுவே ஒரு தனி நூலாகுமளவுக்குச் சிறப்புடையதாக அமைகின்றது.

நன்னூல் எளிமையும் தெளிவும் கொண்ட நல்ல இலக்கணம்; செறிவும் சுருக்கமும் வாய்க்கப் பெற்றது. சொல்லில் நயம், பொருளில் வளம், முறையில் ஒழுங்கு, அமைப்பில் அழகு, நடையில் எளிமை முதலிய சிறப்பியல்புகள் எல்லாம் ஒருங்கே அமையப்பெற்ற புதுநூல். அதிகாரம், இயல், சூத்திரம் ஆகியவற்றின் தொகையிலும் நூற்பாக்களின் அடியளவிலும் தொல்காப் பியத்தை விட நன்னூல் மிகவும் சுருங்கியது.

மயிலைநாதர் செய்த நன்னூலுரை சிறப்பாக இல்லை என்பதனால்தான் சங்கர நமச்சிவாயர் இதற்கு உரை காணத் தொடங்கினார் என்பது குறிப்பா கும். 17ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட சங்கர நமச்சிவாயர் உரையே நன்னூலுக்கு எழுதிய உரைகளில் சிறந்ததாகுமென ஆசிரியர் வலியுறுத்திக் கூறுகிறார். “சங்கர நமச்சிவாயர் உரையே நன்னூலுக்கு எழுந்த உரைகளுள் சிறந்தது என்பதில் இருவேறு கருத்துகளுக்கு இடம் இல்லை. அவர் உரை மூல நூலின் உட்பொருளை முழுமையாக விளக்கத்தக்கது; அழகான உரைநடை யில் அமைந்தது; தெளிவான பொழிப்புரை, கருத்தாழம் மிக்க நயவுரைப் பகுதிகள், பொருத்தமான உதாரணப் பாடல்கள், தருக்கநெறி தவறாத வினா விடைகள், மனதில் நிற்கும் உவமைகள், மாற்றார் மதிக்கும் மதிப்புரைகள் முதலிய விருத்தியுரைப் பண்புகளைக் கொண்ட பேருரை. எனவே, அவருடைய உரையைத் தமிழுலகு இருகை ஏந்தி ஏற்றுக்கொண்டது; தமிழ் மாணவர்கள் விரும்பிக் கற்றனர். சிவஞான முனிவரைப் போன்ற ஆசிரியர்கள் அவர் உரை யைக் கற்பித்துச் சுவை கண்டனர்; பயன் கொண்டனர்.”

மேலும், இலக்கண இலக்கிய நூற்பயிற்சி ஒரு நல்ல உரையாசிரியரின் அடிப்படைத் தகுதி. அதனோடு உதாரணமும் ஆசிரிய வசனமும் உரையின் இரு கண்கள் ஆகும். இப்படிப்பட்ட சங்கர நமச்சிவாயரையே சிவஞான முனிவர் குறை கண்டார். சங்கர நமச்சிவாயரிடம் தமிழ் நூற்பயிற்சி மட்டுமே இருந்தது என்பது அவர் கருத்து. என்னைக் கேட்டால் வடநூல் உணர்ந்தால்

தான் தமிழியல்பைச் சிறப்பாக விளக்கமுடியும் என்னும் சிவஞான முனிவரின் கூற்றை ஏற்க இயலாது. அது நடுநிலையான மதிப்பீடும் ஆகாது. இப்படியாக இந்த உரைநிலை பற்றிய கருத்துகள் ஏராளமாக உள்ளன.

“சிவஞான முனிவர் நன்னூல் முழுமைக்கும் உரை எழுதவில்லை என்பது முன்பே சொல்லப்பட்டது. சங்கர நமச்சிவாயர் இயற்றிய விருத்தியுரையில் முனிவர் பல பகுதிகளைக் கூட்டினார்; சில பகுதிகளைக் குறைத்தார்; சிற்சில பகுதிகளைக் குறைத்தும் கூட்டியும் மாற்றினார்; மூன்று நூற்பாக்களுக்கு (நன்.50, 125, 293) மட்டுமே புத்துரை எழுதினார். முனிவர் கூட்டி எழுதிய விளக்கங்கள் எல்லாம் அவரே சொந்தமாக எழுதியவை என்றும் சொல்ல முடியவில்லை.”

இந்த அடிப்படையில் மாணவர்க்குப் பாடம் சொல்லிக் கொடுக்க விரும்பிய சிவஞான முனிவர் சில திருத்தங்களைச் செய்துகொண்டார் என்பது மட்டுமே பொருத்தமாக இருக்கமுடியும். எனினும் சிவஞான முனிவர் உரையிலும் சில சிறப்புகள் இருந்தன. காட்டாகச் சொற்களை உச்சரிக்கும் முறைக்கு, “எல்லாச் சொற்களையும் கூறுங்கால் பொருள் சிறக்கும் இடத்து எழுத்தினை எடுத்தும் அயலெழுத்தினை நலிந்தும் ஏனை எழுத்துகளைப் படுத்தும் கூறுக” (நன்.132) என்று முனிவர் தரும் விளக்கத்தைக் கூறலாம்.

இதுபோன்று எத்தனையோ வகையான உரை நுட்பங்களைப் பதிப்பாசிரியர் சிறப்புறத் தொகுத்தளித்துள்ளார். அவரே கூறுவதுபோல நன்னூல் விருத்தியுரைக்கு இது ஒரு செம்பதிப்பு எனலாம். இந்த அளவுக்குத் தன் ஆராய்ச்சி அறிவைப் பயன்படுத்தி, அருமையான ஒரு நூலை வெளிக் கொணர்ந்த முனைவர் அ. தாமோதரன் அவர்களுக்கு என்னுடைய நெஞ்சார்ந்த பாராட்டுகள்!

**29. 06. 1999** **மு. தமிழ்க்குடிமகன்**

# பொருளடக்கம்

*முனைவர் ச.சு. இராமர் இளங்கோ*
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை - 600 113.

## கருத்துரை

உலகின் தொன்மையான மொழிகள் சிலவற்றில் ஒன்றாகவும் இன்றளவும் மக்கள் வழக்காற்றில் உள்ள மொழியாகவும் விளங்குவது தமிழ். எனவே தமிழ் மொழி பழமைக்குப் பழமையாகவும், புதுமைக்குப் புதுமையாகவும் விளங்கும் பேறுபெற்றது. இங்ஙனம் தமிழ்மொழி வளர்ச்சிக்கும் நிலைபேற்றிற்கும் அடிப் படையாக அமைந்தவற்றுள் முதலிடம் பெறுவது இலக்கணம்.

நீண்ட இலக்கண வரலாறு உடைய மொழி தமிழ், நமக்குக் கிடைத்திருக் கும் பழைய இலக்கணமாகிய தொல்காப்பியத்தின் கூற்றுப்படி தொல்காப் பியத்திற்கு முன்னமே இலக்கண நூல்கள் இருந்துள்ளமை தெளிவாகிறது.

எழுத்து, சொல், பொருள் என்னும் முப்பெரும் அதிகாரங்களைக் கொண்ட தொல்காப்பியம் தமிழ் மொழிக்குக் கிடைத்த முதல் முழு இலக்கண நூலா கும். தொல்காப்பியம் மொழிக்கு அடிப்படையாக அமைந்த இலக்கணக் கூறு களை விளக்குவதுடன் மேலும் புதிய இலக்கண நூல்கள் தோன்றவும் வழி வகுத்தது.

தொல்காப்பியத்திற்குப் பின்னர்த் தோன்றிய இலக்கண நூல்களுள் சிறப் பாகக் குறிப்பிடத்தக்க நூல் நன்னூலாகும். இந்த நன்னூல் தொல்காப்பியத் தின் வழி வந்தது மட்டுமல்ல, பின்னர் வந்த இலக்கண நூல்களைக் காட்டி லும் சிறந்தது என்பர் அறிஞர்.

நன்னூல் என்பதற்கு நல்ல நூல் என்பது பொருளாகும். தன்மையால் பெயர் பெற்ற நூல் நன்னூலாகும். நன்னூலை ஆக்கிய பவணந்தி எனும் புலவர் பெருமான் சமண சமயத்தைச் சார்ந்தவர்.

சண்மதி முனிவர் இவருடைய ஆசிரியர். பவணந்தி முனிவர் பிறந்த ஊர் பொன் மதிற்சனகை என்று சிறப்புப் பாயிரம் பொதுவாகக் குறிப்பிடுகிறது. சனகை என்பதற்குச் சனநாதபுரம் என்று மயிலைநாதரும் சனகாபுரம் என்று சங்கரநமச்சிவாயரும் விளக்கம் கூறுவர். சனகாபுரம் என்ற பெயரில் மூன்று ஊர்கள் உள்ளன. பவணந்தி முனிவர் பிறந்த ஊர் சோழசிங்கபுரத்தைச் சேர்ந்த ஊர் என்று தொண்டை மண்டல சதகம் கூறுகிறது. ஆயின் கொங்கு மண்டல சதகம் ஈரோடு வட்டத்தில் உள்ள ஊர் என்று குறிப்பிடுகிறது. டாக்டர் உ.வே. சாமிநாத ஐயர் அவர்கள் பவணந்தியார் பிறந்த ஊர் மைசூர் மாநிலத்தில் உள்ள நசரபுரம் என்னும் வட்டத்தில் உள்ள ஊர் என்று குறிப் பிடுகிறார்.

பவணந்தி முனிவர் மூன்றாம் குலோத்துங்க சோழனின் ஆட்சிக் காலத் தில் சிற்றரசனாக விளங்கிய சீயகங்கனால் புரக்கப்பட்டவர். அவர் வேண்டு கோளுக்கு இணங்க நன்னூல் எழுதினார். மூன்றாம் குலோத்துங்க சோழனின் காலம் கி.பி.1178 - 1218 ஆகும். எனவே சீயகங்கன் ஆட்சி செய்த காலத் தையே பவணந்தியார் வாழ்ந்த காலம் எனக் கொள்ளலாம்.

நன்னூல் எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி ஆகிய ஐந்து இலக் கணங்களைக் கொண்டு அமைக்கப்பெற்ற நூல் என்பர். ஆயின் இன்று கிடைக் கப் பெறுபவை எழுத்து, சொல் என்ற இரு இயல்கள் மட்டுமே. பவணந்தி முனிவர் தம் காலத்திற்கு முன்னர்த் தோன்றிய தொல்காப்பியத்தையும் அதற் குப் பின்னர்த் தோன்றிய இலக்கண உரைகளையும் நன்கு கற்றவர். வடமொழி யில் வல்லவர். தம் காலத்து மக்கள் மொழி வழக்குகளை நன்கு அறிந்தவர்.

இவரை, பல்கலைக்குரிசில் பவணந்தியென்னும் பெருமான் எனவும், முன் னூல் ஒழியப் பின்னூல் பலவினுள் நன்னூலார் தமக்கெந்த நூலாரும் இணையோ வென்னுந் துணிவே மன்னுக என்றும் புகழ்வர். நன்னூலுக்கு மயிலைநாதர் எழுதிய உரை தொன்மையானது. இதன் பின்னர்ச் சங்கர நமச்சிவாயர் விருத்தியுரை புகழ் பெற்றது. தொடர்ந்து மாதவச் சிவஞான முனிவர் சங்கரநமச்சிவாயர் உரையில் சில திருத்தங்களையும் மாற்றங்களை யும் செய்து தந்த விருத்தியுரை சிறப்புப் பெற்றது.

நன்னூல் உரையாசிரியர் யாழ்ப்பாணம் ஆறுமுகநாவலர் எழுதிய காண் டிகை உரையும் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது. முகவை இராமானுசக்

கவிராயர், திருத்தணிகை 'விசாகப் பெருமாளையர், கூழங்கைத் தம்பிரான், ஊற்றங்கால் ஆண்டிப்புலவர், சடகோப ராமானுசாச்சாரியார், பவானந்தம் பிள்ளை, களத்தூர் வேதகிரி முதலியார், கா. நமச்சிவாய முதலியார். தண்டபாணி தேசிகர், புலவர் சோம இளவரசு, மோசசு பொன்னையா முதலியோர் எழுதிய நன்னூல் உரைகள் குறிப்பிடத்தக்கன.

மொழியைப் புரிந்துகொள்ள இலக்கணங்கள் தோன்றின. இலக்கணங் களை விவரித்துக் கூறின உரைகள். உரைகளை எளிமையாக்குகின்றன பதிப்பு கள். இன்றைய காலக்கட்டத்திலும் பதிப்புகள் பரந்துபட்ட அனுபவம், அறிவு மற்றும் ஆராய்ச்சியின் விளைவாகச் சிறப்புறுகின்றன.

பேராசிரியர் அ. தாமோதரன் பதிப்பித்த இந்த நூலில் பவணந்தி முனிவர் இயற்றிய நன்னூல் மூலமும் விருத்தியுரையும் தரப்பட்டுள்ளன.

இந்த நூலின் சந்திப்பிரிப்பு, மொழி எளிமையாக்கம் இரண்டும் படிப் பவர்கள் எளிதில் புரிந்து கொள்ளும் வகையில் அமைந்துள்ளன. பாட பேதங் களுக்கு அளிக்கப்பட்டுள்ள அடிக்குறிப்புகள் எல்லா உரைகளிலிருந்தும் மீட்டுருவாக்கப்பட்ட முடிவுகளைக் காட்டுவதால் இந்த நூல் எல்லா உரை களையும் உள்ளடக்கிய முழுமையான உரையாகத் திகழ்கிறது எனலாம்.

இந்நூலாசிரியர் முனைவர் அ. தாமோதரன் அவர்கள் நன்னூல் உரை யாசிரியர்கள், மற்றும் ஆய்வாளர்களால் மறைந்துவிட்டது என்று கருதப்பட்ட கூழங்கைத் தம்பிரான் உரையை மீட்டு எடுத்துத் தந்தவர். இலண்டன் நூல கத்தில் இருந்து அதனைப் பேராசிரியர் அ. தாமோதரன் அவர்கள் படியெடுத்து ஜெர்மனியில் வெளியிட்டார். பின்னர் நிறுவனம் அந்நூலை மறுபதிப்புச் செய்தது.

வெளிநாட்டுத் தமிழறிஞரான அ. தாமோதரன் அவர்களின் இந்த நன்னூல் விருத்தியுரையையும் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் வெளியிடு வதில் மகிழ்ச்சி அடைகிறது. அவரின் அறிவும், ஆற்றலும், புலமையும் இந்த உரை தெளிவு பெற வழி வகுத்துள்ளன. இந்த அரிய படைப்பு, காலத்தை வென்று என்றும் நிலைத்திருக்கும் என்பதில் சிறிதும் ஐயம் இல்லை.

இந்நூலை வெளியிடுவதற்கு நிதி நல்கிய மேற்கு ஜெர்மனி தெற்காசிய நிறுவனத்தில் உள்ள ஹைடல்பெர்க் பல்கலைக் கழகத்திற்கு நன்றி.

இந்நிறுவன வளர்ச்சியில் ஆக்கமும் ஊக்கமும் காட்டி வருகின்ற நிறுவனத் தலைவர் மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி - பண்பாடு மற்றும் இந்து சமய அறநிலையத்துறை அமைச்சர் முனைவர் மு. தமிழ்க்குடிமகன் அவர்களுக்கும், தமிழ் வளர்ச்சி - பண்பாடு மற்றும் அறநிலையத்துறைச் செயலாளர் திருமிகு த. இரா.சீனிவாசன் இ.ஆ.ப. அவர்களுக்கும் நன்றி.

நூலை வனப்புடன வெளியிட்ட தி பார்க்கர் நிறுவனத்திற்கும் நன்றி.

**இயக்குநர்**

# சிறப்புரை

**பேராசிரியர் முனைவர் பொன். கோதண்டராமன்**
தமிழ் இலக்கியத்துறை, சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை.

பல்கலைக் குரிசில் பவணந்தி என்னும் புலவர் பெருமான் வழங்கி அருளிய நன்னூல் பல உரைகளையும் பதிப்புகளையும் பெற்று இலக்கண உலகில் செல்வாக்கோடும் புகழோடும் திகழ்கிறது. அதற்கு இப்போது செம்பதிப்பு ஒன்று வெளிவருகிறது. இது ஆய்வுலகின் கவனத்தை ஈர்க்கும் என்பது உறுதி.

**"நம்புவது நல்லது; அதை விடவும் நல்லது பரிசோதனை செய்வது"** (பதிப்புரை பக். 77) என்று முனைவர் தாமோதரன் கூறுவது ஆய்வுப் பணியில் உள்ள அனைவரும் பின்பற்ற வேண்டிய கொள்கை. இந்தக் கொள்கை கைநழுவும் போது பிழைகள் எங்காவது நுழைந்துவிடும். இந்த நூலின் பதிப்பாசிரியர் இந்தக் கொள்கையைக் கைநழுவ விடாதவர். அதனால்தான் இப்படிப்பட்ட ஒரு செம்பதிப்பை அவரால் உருவாக்க முடிந்திருக்கிறது. இதுவரை வெளிவந்துள்ள நன்னூல் பதிப்புகளில் காணப்படும் எந்தக் குறையும் இந்தப் பதிப்பில் இல்லை என்றே கூறலாம். அதற்கு மேலாக அந்தப் பதிப்புகள் எதிலும் காணப்படாத நிறைகளும் இந்தப் பதிப்பில் சேர்ந்துள்ளன என்பது மகிழ்ச்சிக்கு உரியது.

தனி ஒரு மனிதர் நினைத்துப் பார்க்க முடியாத அளவுக்கு நன்னூல் பதிப்புகளையும் சுவடியையும் பதிப்பாசிரியர் ஊன்றி நோக்கி ஒப்பிட்டிருக்கிறார். பாடபேதங்கள், மேற்கோள்கள் முதலியவற்றை ஒன்று விடாமல் பரிசோதித்திருக்கிறார். அப்படிப் பரிசோதிக்கும் போது ஆனைக்கும் அடி சறுக்கும் என்பதற்கேற்ப உ. வே. சா. போன்ற பெரியவர்களுக்கே அது நேர்ந்திருப்பது (பதிப்புரை பக். 22, 66) பதிப்பாசிரியருக்குப் புலப்பட்டிருக்கிறது.

புலமை வேறு; ஆராய்ச்சி வேறு. புலமை பெற்ற எல்லோரையும் ஆராய்ச்சி வல்லுநர் என்று கொள்ள முடியாது. ஆராய்ச்சி வல்லுநர் எல்லோரையும் புலமை பெற்றவராகவும் கொள்ள முடியாது. புலமையும் ஆராய்ச்சித் திறனும் இருந்தால்தான் சிறந்த பதிப்புகளை உருவாக்க முடியும் என்பது இந்த நூலின் பதிப்புரையிலிருந்து

நமக்கு விளங்குகிறது. "குற்றியலுகரம் பற்றிய நூற்பாவின் உரைக்குச் சிவஞான முனிவர் திருத்தி எழுதிய விளக்கத்தில், **'அங்ஙனம் பாகுபடுத்துக் கருவி செய்த-தனால் போந்த பயன் இன்று என்பதாம்'** (நன். 94) என்று ஒரு தொடர் உள்ளது. இதுவரை வெளிவந்த பதிப்புகளில் இத்தொடர், **'போதப் பயன் இன்று என்பதாம்'** என்று பிழையாகக் காணப்படுகிறது. இப்பகுதி தொல்காப்பியச் சூத்திர விருத்தி-யிலிருந்து (பக். 54) எடுத்து எழுதப்பட்டது. அந்நூலில், **'போந்த பயன் இன்று'** என்பதே பாடம். இந்த உண்மை மற்ற பதிப்பாசிரியர்களுக்குத் தெரிந்து அதோடு இப்பகுதியை அவர்கள் ஒப்பிட்டிருந்தால் இந்தப் பிழைப்பாடம் நூற்றாண்டு விழாக் கண்டிருக்காது" என்று பதிப்பாசிரியர் எழுதியுள்ள பகுதி (பதிப்புரை பக். 82) நீண்ட கால இருட்டுக்கு ஒளியூட்டி உண்மையைச் சுவைபட விளக்கியிருக்கிறது.

பழைய பதிப்புகளைப் பின் வந்த பதிப்புகள் பல வகைகளில் பயன்படுத்தியிருக்க வேண்டும். பயன்படுத்திக்கொண்ட பதிப்புகளைக் குறிப்பிடாமல் விடுவது பெருமை அளிக்கும் செயல் ஆகாது. சில பதிப்பாசிரியர்கள் தாங்கள் பயன்படுத்திக்கொண்ட பதிப்புகளை அவ்வாறு குறிப்பிடாமல் விட்டிருப்பது தெளிவாகத் தெரிந்த நிலையில், **"தடயங்களை மறைப்பது சட்டவியலில் குற்றம்; தண்டனைக்கு உரியது. ஆனால் தமிழியலில் அதுவே பாராட்டுக்குரிய தகுதியாகத் தோன்றுகிறது."** என்று (பதிப்புரை பக். 88) எல்லோர்க்கும் மனத்தில் உறைக்கும்படி முனைவர் தாமோதரன் எடுத்துக் கூறுகிறார்.

சந்தியைப் பற்றியும் சொற்களைப் பிரித்துப் பதிப்பிக்கும் முறையைப் பற்றியும் பதிப்-பாசிரியர் கவனம் காட்டியிருப்பதும் இந்த வகையில் ஒரு பொது நெறிமுறை உருவாக வேண்டும் என்று சுட்டியிருப்பதும் தமிழுலகம் செயற்படுத்தத் தக்கன.

தொட்ட பணியைத் தொய்வில்லாமல் முற்ற முடிக்கும் இயல்பினராக விளங்கும் திரு தாமோதரன் இதற்கு முன்பே கூழங்கைத் தம்பிரான் உரையைப் பதிப்பித்து நன்னூலுக்குப் பெருமை சேர்த்தவர். இப்போது சங்கர நமச்சிவாயர் உரையின் தகுதியை நமக்கு உணர்த்தியிருக்கிறார். வழிவழியாக இறுகிப்போன தவறான நம்பிக்கையைத் தக்க சான்றுகளோடு மாற்றிச் சங்கர நமச்சிவாயரின் உரைத்திறனைத் துலக்கிக் காட்டி, உரிய முறையில் அவரைப் பாராட்டியிருப்பது இந்தப் பதிப்பின் தனிச் சிறப்பு.

ஒரு பெரும் புலவருக்கு உள்ள புலமை, ஒரு அறிவியல் வல்லுநருக்கு உள்ள நெறிமுறை அறிவு, ஒரு தொழில்நுட்ப வல்லுநருக்கு உள்ள வினைநுட்பம், ஒரு

கலைஞருக்கு உள்ள கலைத்திறம் ஆகிய இவை அனைத்தும் ஒரு நல்ல பதிப்பாசிரியருக்கு ஒருங்கே அமைந்திருக்க வேண்டும். இந்தச் செம்பதிப்பை நோக்குவோருக்கு அந்த உண்மை பளிச்சென விளங்கும்.

நன்னூலுக்கு எடுத்துக்காட்டான வகையில் ஒரு செம்பதிப்பை உருவாக்கி விரிவான ஒரு பதிப்புரையையும் வழங்கிப் பதிப்புத் துறையில் ஒரு சிறந்த பணியை நிறைவேற்றியுள்ள முனைவர் அ. தாமோதரன் நமது பாராட்டுக்கு உரியவர். தமிழுலகம் அவரைப் பயன்படுத்திக்கொள்ள வேண்டும்.

சென்னை — பொன். கோதண்டராமன்

அக்டோபர், 1998

# பதிப்புரை

*"எழுத்தறியத் தீரும் இழிதகைமை; தீர்ந்தான்*
*மொழித்திறத்தின் முட்டறுப்பான் ஆகும்." (குறள். 392 பரிமேலழகர்)*

**இலக்கண மரபு-- புத்திலக்கணத் தோற்றம்-- பவணந்தி முனிவர்-- நன்னூல்-- உரைகள்-- பதிப்புகள்-- புதிய விருத்தியுரைப் பதிப்பு-- நன்றி-- நிறைவுரை**

## இலக்கண மரபு

உலகமொழிகள் அனைத்துக்கும் தனித்தனி இலக்கண அமைப்பு உண்டு. இலக்கிய வளம் பெற்றுள்ள மொழிகளுக்கே அன்றி வரிவடிவும் அரிச்சுவடியும் பெறாமல் பேச்சுவழக்கில் மட்டுமே வழங்கிவரும் மொழிகளுக்கும் காலப்போக்கில் பேச்சு-வழக்கை இழந்து ஏடுகளிலும் கல்வெட்டுகளிலும் நிலைத்துவிட்ட மொழிகளுக்கும் இது பொருந்தும். சுருங்கச் சொன்னால் உலகில் வழங்கும் எந்த ஒரு மொழிக்கும் அதற்கே உரிய இலக்கண அமைப்பு உண்டு. இது மொழியியல் உண்மை. ஆனால் அந்த இலக்கண அமைப்பை முறையாக வரையறுத்துக் கூறும் இலக்கணம் அதாவது இலக்கண நூல் எல்லா மொழிகளுக்கும் இல்லை. எனவே இலக்கண நூல் இல்லாத, எழுதப்படாத எண்ணற்ற மொழிகள் நிலப்பரப்பின் எல்லாப் பகுதிகளிலும் பேசப்-படுகின்றன; கருத்துப் பரிமாற்றத்துக்குக் காலம் காலமாகப் பயன்பட்டுவருகின்றன. நூற்றுக் கணக்கான மொழிகளுக்கு வரிவடிவும் பால பாடமும் இந்த நூற்றாண்டில்-தான் முதன் முதலாக உருவாயின; இலக்கண நூல்களும் எழுதப்பட்டன. வரிவடிவு பெறாமல், இலக்கணம் காணாமல் ஒலிவடிவிலேயே வாழும் மொழிகள் இன்னும் ஏராளம் உண்டு. இந்த மொழியியல் உண்மைகளை எல்லாம் தமிழ்மொழியின் வரலாற்றோடு ஒப்பிட்டு நோக்கினால்தான் தமிழிலக்கண மரபின் தொன்மையும் பெருமையும் புலப்படும்; அதன் செழிப்பும் சிறப்பும் விளங்கும்.

மொழி உணர்வும் இலக்கணச் சிந்தனையும் ஏறத்தாழ 2500 ஆண்டுகளுக்கு முன்பே தோன்றிவிட்டதாக மொழியியலார் கருதுகின்றனர். இந்த நெடிய வரலாற்றில் இந்திய இலக்கணிகளின் பங்களிப்பு தொடக்கம் முதலே இருந்துள்ளது. அதனால்தான்

தொன்மையான இலக்கண மரபுகளில்[1] இரண்டு இந்திய மண்ணுக்குச் சொந்தமாக இருக்கின்றன. ஒன்று வடமொழி இலக்கண மரபு; இன்னொன்று தமிழிலக்கண மரபு. தருக்கவியல் முறையில் மொழியை ஆராய்ந்து, விதிகளை வகுத்து வரையறை செய்த இந்திய இலக்கணிகளுள் பாணினியே முதல்வராகக் கருதப்படுகிறார். வடமொழி இலக்கண மரபின் காலப் பழமை, கருத்துச் செறிவு, நெறிமுறை ஒழுங்கு ஆகியவற்றுக்குப் பாணினியே மூலவர்; அவர் இயற்றிய எட்டத்தியாயமே (அஷ்டாத்யாயீ) இலக்கணம்; இலக்கணங்களுக்கு இலக்கணம். வடமொழி வல்லுநர்களின் எண்ணப் போக்கில் வேரூன்றி வளர்ந்த இந்தப் பாணினீயத் தாக்கம் வடமொழி இலக்கண மரபில் ஒரு தேக்கநிலையை உருவாக்கிவிட்டது; நாளடைவில் அந்த நீரோட்டம் நின்றுவிட்டது.

தமிழ்மொழியின் இலக்கண மரபு வடமொழி மரபை விடக் காலத்தால் சிறிது பிந்தியதாகக் கருதப்பட்டாலும் கருத்து வளத்தில் பிந்தியது அல்ல. எழுத்து, சொல் என்னும் இரண்டு பகுதிகளோடு அமையாமல் பொருள் என்னும் மூன்றாவது ஒரு பகுதியையும் இலக்கணத்தில் இணைத்து நோக்கிய தமிழ்மரபு மற்ற மரபுகளிலிருந்து மாறுபட்டது; தனித்தன்மை வாய்ந்தது. மொழியியல் அறிஞர்கள் பாணினீயத்தை ஆராய்வதுபோலத் தொல்காப்பியத்தையும் ஆராய்ந்தால் இந்த உண்மை விளங்காமல் போகாது. அதோடு இந்த இரு மரபுகளுக்குள் இன்னொரு வேறுபாடும் உண்டு. வடமொழியில் முன்பே கூறியதுபோல இலக்கண மரபு தேங்கி நின்றுவிட்டது; தமிழ்மொழியில் அது தொடர்கிறது. இக்கருத்தைச் சற்றுத் தெளிவுபடுத்த வேண்டும்.

வடமொழியில் பாணினீயத்துக்குப் பின்னர் உரைகள் தோன்றிப் பெருகின. அதன் விளைவாக அந்த மொழியில் உரைமரபு செழித்து வளர்ந்தது. ஆனால் எட்டத்தியாயத்துக்குப் பின்னர் வடமொழியில் தோன்றிப் பெருகிய இலக்கணங்கள் குறைவு; பாணினிக்குப் பிறகு தோன்றிய நல்ல இலக்கணிகள் குறைவு. அதாவது எட்டத்தியாயத்துக்குப் பின்னர் இலக்கண நூல் இயற்றும் அறிவுரம் எந்த வடமொழிப் புலவருக்கும் உண்டாகவில்லை. அதனால் அவர்கள் உரை, சிற்றுரை, பேருரை, உரை விளக்கம் என்று வகை வகையான உரைகளை எழுதி அமைதி கண்டார்கள். நல்ல காலமாகத் தமிழில் அந்த நிலைமை நேர்ந்துவிடவில்லை. ஒல்காப் பெரும் புகழ்த் தொல்காப்பியத்துக்குப் பிறகு நாவலர் போற்றும் நன்னூல் தோன்றியது. தொல்காப்பிய உரைகளுக்குப் பின்னரும் தமிழில் புதிய இலக்கணங்களும் உரைகளும்

[1]மேலை நாட்டு மொழிகளில் இலத்தீனும் கிரேக்கமும் தொன்மையான இலக்கண மரபுகளை உடையன.

தோன்றின; நூல்மரபும் உரைமரபும் தனித்தனியே வளர்ந்து செழித்தன; ஒன்றை ஒன்று ஒதுக்காமல் ஒன்றுக்கு ஒன்று உரமிட்டன.

இயற்கை இழைத்த கொடுமை, ஏடுகளைப் போற்றிப் பேணாமை, மூடநம்பிக்கை முதலிய காரணங்களால் மறைந்துபோன தமிழிலக்கண நூல்களை விட்டுவிட்டாலும் தொல்காப்பியத்துக்குப் பின்னர் எழுந்துள்ள ஐம்பதுக்கும் மேற்பட்ட[2] மரபிலக்கண நூல்கள் தமிழிலக்கண மரபின் உயிரோட்டத்தைப் புலப்படுத்தும். எண்ணிக்கையோடு இலக்கணப் பொருட்பரப்பும் கடந்த இரண்டாயிரம் ஆண்டுகளில் விரிவடைந்தது. எழுத்து, சொல், பொருள் எனத் தொல்காப்பியர் காலத்தில் மூன்றாக அமைந்திருந்த தமிழ் இலக்கணம் காலப்போக்கில் கிளைத்து வளர்ந்தது; இறையனார் களவியலுரை காலத்தில்[3] எழுத்து, சொல், பொருள், யாப்பு என நான்காகவும் வீரசோழியத்தின் காலத்தில் எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என ஐந்தாகவும் விரிவு பெற்றது. இவற்றோடு பாட்டியல் என்ற பகுதியும் கூடித் தமிழ் இலக்கணம் மேலும் வளர்ந்தது. இலக்கணக் கோட்பாடுகளில் ஏற்பட்ட இந்த வளர்ச்சி ஒவ்வொரு துறையிலும் தனித்தனி இலக்கண நூல்கள் தோன்ற வழிவகுத்தது. இலக்கண மரபு இவ்வாறு நூற்றாண்டுதோறும் வளர்ந்த காரணத்தால் இலக்கணத்தை நூற்பாக்களாக எழுதி, மனனப்படுத்தும் வழக்கம் தமிழ்மொழியில் இன்றளவும் தொடர்கிறது. உரைநடையின் பயிற்சியும் வளர்ச்சியும் மிகுந்துவிட்ட இந்த நூற்றாண்டிலும் வினைத்திரிபு விளக்கம், தமிழ்நூல், இக்காலத் தமிழியல் போன்ற மரபுமுறை இலக்கணங்கள்[4] தோன்றுகின்றன. தொன்னெறி மரபின் தொடர்ச்சிக்கு இவையே தக்க சான்றுகள். வாழும் மொழியில் மரபுகள் வளரும்; வாழும். தமிழிலக்கண வரலாறு உணர்த்தும் உண்மை இதுவே.

## புத்திலக்கணத் தோற்றம்

ஆற்றொழுக்குபோலத் தொடரும் தமிழிலக்கண வரலாற்றில் நன்னூல் தோன்றிய காலமும் சூழலும் குறிப்பிடத் தக்கன. தொல்காப்பியம் தோன்றிப் பத்துப் பன்னிரண்டு நூற்றாண்டுகளுக்குப் பிறகு நன்னூல் எழுந்தது. இந்த நெடிய காலப்பரப்பில் தமிழக அரசியல், சமயம், மொழி முதலியவற்றில் நிகழ்ந்த மாற்றங்கள் சொல்லி முடியா. பாண்டியர், களப்பிரர், பல்லவர், சோழர் என்று வெவ்வேறு அரச பரம்பரை மாறி

---

[2] **பொன். கோதண்டராமன், இலக்கண அகரவரிசை (தமிழாய்வு தொகுதி 5), சென்னை, *1977*.**

[3] **களவியல் என்ற இறையனார் அகப்பொருள், கழகம், சென்னை, *1969*. பக். *7, 14*.**

[4] **மு. இராகவையங்கார், வினைத்திரிபு விளக்கம், மானாமதுரை, *1958*; த. சரவணத்-தமிழன், தமிழ்நூல் (தமிணூல்), திருவாரூர், *1972*; சொ. சிங்காரவேலன், இக்காலத் தமிழியல், மயிலாடுதுறை, *1987*.**

மாறித் தமிழகத்தை ஆட்சி புரிந்தது. சமணம், பௌத்தம், வைணவம், சைவம் என்று வெவ்வேறு சமயங்கள் தமிழ்ச் சமுதாயத்தில் தழைத்தன. களப்பிரர் காலத்தில் தொடங்கிய வடமொழிச் செல்வாக்கு தொடர்ந்தது; நிலைத்தது. இறுதியாக ஆட்சிக்கு வந்த பிற்காலச் சோழர்கள் காலத்தில்தான் நாட்டில் அமைதி நிலவியது; சமயங்களும் கலைகளும் செழித்தன; இலக்கியங்களும் இலக்கணங்களும் பெருகி வளர்ந்தன. இவை எல்லாம் புதிய இலக்கணம் தோன்றுவதற்கு நல்ல சூழலை உருவாக்கின[5] என்பது பொருந்துவதே. என்றாலும் இந்தச் சூழலை உருவாக்கப் பெரும் பங்கு வகித்தது மொழிவளர்ச்சி. இதனையே, **"இலக்கியம் கண்டதற்கு இலக்கணம்"** (நன். 141) என்றும்,

> **"பழையன கழிதலும் புதியன புகுதலும்**
> **வழுவல கால வகையி னானே."** (நன். 462)

என்றும் பவணந்தி முனிவர் குறிப்பிடுகிறார்.

சங்க இலக்கியங்களின் மொழி அமைப்பை முழுமையாக விளங்கிக்கொள்ளத் தொல்காப்பிய விதிகள் போதியனவாக இல்லை என்ற எண்ணம் ஏழு எட்டாம் நூற்றாண்டுகளில் தோன்றியிருக்கக் கூடும். அதோடு திருக்குறள், நாலடியார் போன்ற அறநூல்கள், சிலப்பதிகாரம், சீவக சிந்தாமணி போன்ற காப்பியங்கள், தேவாரம், திவ்வியப் பிரபந்தம் போன்ற பக்திநூல்கள், வில்லி பாரதம், கம்ப ராமாயணம் போன்ற இதிகாச நூல்கள், பெரிய புராணம் போன்ற புராண நூல்கள் என்று சங்க இலக்கியங்களுக்குப் பின்னர்த் தமிழில் ஒரு இலக்கியப் பூங்காடே மலர்ந்தது. யாப்பருங்கலம், வீரசோழியம், தண்டியலங்காரம் போன்ற புதிய இலக்கணங்கள் தோன்றி ஐந்திலக்கணக் கோட்பாட்டை வலிவுறச் செய்தன. இலக்கிய இலக்கண மரபுகளைப் போலவே உரைமரபும் வளர்ந்தது. களவியல் உரை, யாப்பருங்கல விருத்தி, இளம்பூரணர் உரை, காப்பிய உரைகள் முதலியன தோன்றின.

தொல்காப்பியத்துக்குப் பின்னர் ஏற்பட்ட இலக்கிய இலக்கண வளர்ச்சியால் தமிழ்மொழியின் அமைப்பில் நிகழ்ந்திருந்த மாற்றங்களை இளம்பூரணர் நன்றாக உணர்ந்திருந்தார். அவை அனைத்தையும் தொல்காப்பிய விதிகளுக்குள் அடக்கிவிட முடியாது என்பதை அறிந்து அவற்றுள் சிலவற்றைத் தம்முடைய உரையில் அவர் எடுத்துக்காட்டினார். அதனால் தொல்காப்பியத்துக்கும் வளரும் தமிழுக்கும் இடையே

---

[5] **க. ப. அறவாணன், எழுநூறு ஆண்டுகளில் நன்னூல், சென்னை, 1977. பக். 25; இராம. சுந்தரம், நன்னூல்- சொல்லதிகாரம் (இலக்கணக் கருவூலம் 2), அண்ணாமலைநகர், 1987. பக். 171.**

ஏற்பட்டிருந்த இடைவெளி தெற்றெனப் புலப்பட்டது. அகப்பொருள், புறப்பொருள், யாப்பு, அணி போன்ற இலக்கணக் கூறுபாடுகளுக்குத் தனித்தனி இலக்கணங்கள் தோன்றின. அதன் விளைவாகப் பேரிலக்கணத்தின் பயன் குறையலாயிற்று. அதோடு இறையனார் அகப்பொருள், புறப்பொருள் வெண்பாமாலை, யாப்பருங்கலம், தண்டி-யலங்காரம் போன்ற சிற்றிலக்கணங்களின் செல்வாக்கு வளர்ந்தது. இங்கே இன்னொரு கருத்தையும் நாம் கருத வேண்டும்.

இலக்கணப் பகுதிகள் எல்லாவற்றையும் ஒருங்கே விளக்கும் பெருநூல்களைக் கற்பதில் தொய்வுணர்வு தோன்றுவது இயல்பு. அந்த உணர்வை மாற்றி, வேண்டிய இலக்கணப் பகுதியை வேண்டியோர் வேண்டியவாறு கற்பதற்கு ஏற்பச் சுருக்கநூல் முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. அதனால் யாப்பருங்கலக் காரிகை, நேமிநாதம் போன்ற நூல்கள் தோன்றலாயின. சுருங்கச் சொன்னால் பெருமரபின் செல்வாக்கு குறைந்தது; சிறுமரபின் செல்வாக்கு கூடியது. அதன் விளைவாகச் சங்கப் பாடல்களே இலக்கியம்; தொல்காப்பியமே இலக்கணம் என்ற கருத்து ஒன்பது அல்லது பத்தாம் நூற்றாண்டு வாக்கில் மாறத் தொடங்கியது. இவ்வாறு இலக்கிய மரபு, இலக்கண மரபு, உரைமரபு ஆகியவற்றில் ஏற்பட்ட வளர்ச்சி ஒரு புதிய மொழிச்சூழலைத் தோற்றுவித்தது. புத்திலக்கணம் ஒன்று உருவாகக் காலம் கனிந்துவிட்டது என்பதை அது புலமை உலகுக்கு அறிவித்தது. இந்த மொழிச்சூழலையும் கால முதிர்ச்சியையும் பவணந்தி முனிவர் உணர்ந்தார்; செயல்பட்டார்; நன்னூல் தோன்றிவிட்டது. ஆகவே இலக்கியம் கண்டதற்கு இலக்கணம் இயம்பல், பழையன கழிதல், புதியன புகுதல் என்னும் தொடர்களில் நன்னூல் என்னும் புத்திலக்கணம் தோன்றிய வரலாறே அடங்கியுள்ளது என்று கருதத் தோன்றுகிறது.

## பவணந்தி முனிவர்

பெயருக்கு ஏற்ப நன்னூல் ஒரு நல்ல இலக்கணம். அதனைத் தமிழுக்கு வழங்கிய பவணந்தி முனிவரைப், **"பல்கலைக் குரிசில் பவணந்தி என்னும் புலவர் பெருமான்"** (நன். 137) என்று சங்கர நமச்சிவாயர் நாவாரப் புகழ்வார். பவணந்தி முனிவர் சமணத் தமிழ்மரபில் வந்தவர்; வடமொழி அறிந்தவர். அதனால் அம்மரபைத் தழுவித் தமது இலக்கண நூலில் அவர் பதவியலை அமைத்தார் என்பது அனைவர்க்கும் உடன்பாடு. சங்கர நமச்சிவாயர், **"இப்பதவியலுக்கு மேற்கோள் ஆரியம் என்பார் மொழி என்னாது, 'பதம்' என்றும் கூறினார்."** (நன். 128) என்றும், **"வடநூல் மேற்கோளாக ஒருமொழிகளை விதந்து, பகாப்பதம், பகுபதம் எனக் காரணக்குறி தாமே தந்து, அவற்றை நல்விருந்தென்ன நாவலர் பயில, "எழுத்தே தனித்தும்" என்னும்**

சூத்திரம் முதல் இச்சூத்திரம் ஈறாகப் பகாப்பதம், பகுபதம் எனப் பல்காற் கூறுதல் தன் குறி வழக்கம் மிக எடுத்து உரைத்தல் என்னும் உத்தி." (நன். 137) என்றும், "முன்னைத் தமிழ்நூல்களுள் இல்லனவற்றை இவ்வாசிரியர் தாமே பகாப்பதம், பகுபதம் என முன்னர் நாட்டி, இச்சூத்திரங்காறும் அவற்றிற்கு இலக்கணம் தந்து நிறுத்தமையின் தாஅன் நாட்டித் தனாது நிறுப்பு என்னும் மதம்." (நன். 145) என்றும் இதனை விளக்குவார். "நன்னூலார் பதவியல் கூறியதற்கு முதனூல் வடநூல் ஆகலின் அது தோன்ற, மொழியியல் என்னாது பதவியல் என வடசொல்லான் அதற்குப் பெயரிட்டு, அவ்வோத்துள் வடவெழுத்துத் தமிழில் வருமாறும் கூறினார்." (இல. சூறா. பக். 100) என்று சிவஞான முனிவரும் இக்கருத்தை வலியுறுத்துவார். இவர்களுக்கு முன்பே சுப்பிரமணிய தீக்கிதர் செயப்படு-பொருளை நன்னூலார், "ஆக்கல், அழித்தல், அடைதல் முதலாகச் சைநேந்திரன் மதம் பற்றிப் பல ஆக்குவார்." (பி. வி. 12 உரை) என்றும் பண்புத்தொகையை, "வாமனன் சிநேந்திரன் செய்த சத்தநூல் பற்றி அவ்வாறு கூறுவர்." (பி. வி. 49 உரை) என்றும், "பழையன கழிதலும் புதியன புகுதலும்" (நன். 462) என்னும் சூத்திரத்தைப், "பாணினி கூறியவாறு கூறினார்." (பி. வி. 50 உரை) என்றும் இதே கருத்தைச் சுட்டிக்காட்டினார். இவற்றால் பவணந்தி முனிவர் வடமொழிப் புலமையும் வியாகரணப் பயிற்சியும் உடையவர் என்பது விளங்கும்.

நன்னூல் மூலத்தைத் தவிரப் பவணந்தியின் வரலாற்றை அறிய உதவும் சான்றுகள் இரண்டு. ஒன்று நன்னூலின் சிறப்புப் பாயிரம். இதனை இயற்றியவர் யார் என்று சொல்ல முடியவில்லை. இரண்டாவது கல்வெட்டுச் சான்றுகள். இவற்றை ஆதாரமாகக் கொண்டு அவருடைய வரலாற்றைப் பலர்[6] விரிவாக எழுதியுள்ளனர். அவர் சமணர்; துறவி. பவணந்தி முனிவர் என்னும் அவரது பெயரே இவற்றுக்குச் சான்று. அன்றியும், "பவணந்தி என்னும் நாமத் திருந்தவத் தோனே" என்று அவரைச் சிறப்புப் பாயிரம் குறிக்கிறது. பூமலி அசோகின் புனைநிழல் அமர்ந்த நான்முகனுக்கும் (நன். 56) முச்சகம் நிழற்றும் முழுமதி முக்குடை அச்சுதனுக்கும் (நன். 258) தமது நூலில் அவர் இறைவணக்கம் கூறுவதாலும் இச்செய்திகள் உறுதிப்படும். இதற்கு மாறாக, ஆதாரம் எதுவும் இல்லாமல் பவணந்தி முனிவரை அந்தணர் என்று[7] கூறுவது இலக்கிய வரலாற்றுக்கு முற்றிலும் புறம்பானது.

[6] உ. வே. சாமிநாதையர், நன்னூல் மூலமும் மயிலைநாதர் உரையும், சென்னை, 1918. பக். vii-xii; நன்னூல் மூலமும் சங்கர நமச்சிவாயர் உரையும், சென்னை, 1925. பக். 9-13; எஸ். வையாபுரிப் பிள்ளை, தமிழ்ச் சுடர்மணிகள், சென்னை, 1968. பக். 181-185; மு. அருணாசலம், தமிழ் இலக்கிய வரலாறு, பதின்மூன்றாம் நூற்றாண்டு, திருச்-சிற்றம்பலம், 1970. பக். 155-171.

[7] சடகோப ராமாநுஜாசாரியரும் பிறரும், நன்னூற் காண்டிகையுரை, சென்னை, 1903. பக். 1.

பவணந்தி முனிவரின் ஆசிரியர் சன்மதி முனிவர். அவர் சனகாபுரம் என்ற ஊரில் வாழ்ந்தவர் என்பதைப்,

**"பொன்மதிற் சனகைச் சன்மதி முனியருள்**
**பன்னருஞ் சிறப்பிற் பவணந்தி"**

என்று சிறப்புப் பாயிரம் தெரிவிக்கிறது. மயிலைநாதர் உரை (1918. பக். 18) இந்த ஊரைச் சனநாதபுரம் என்று குறிப்பிடுகிறது. தொண்டைநாட்டிலும் கொங்குநாட்டிலும் இந்தப் பெயரை உடைய ஊர்கள் இருந்தாலும் மைசூர் மாவட்டத்தில், நரசிபுர வட்டத்தில், காவிரியின் வடகரையில் உள்ள ஊரே அது என்பது கோபிநாத ராவ்[8] கருத்து. பவணந்தி முனிவரைப் புரந்த சீயகங்கன் கங்கநாட்டு அரசன். ஆகவே கங்கநாட்டில் அமைந்துள்ள ஊரே சன்மதி முனிவரும் பவணந்தி முனிவரும் வாழ்ந்தது என்பது பொருந்தும். இக்கருத்துக்கு மாறாகச் சிறப்புப் பாயிரத்தில் குறிக்கப்படுவது கொங்கு-நாட்டுச் சனநாதபுரம் என்று சொல்லப்படுவதும்[9] உண்டு.

பவணந்தி முனிவரின் காலத்தை அறியவும்,

**"திருந்திய செங்கோற் சீய கங்கன்**
**அருங்கலை வினோத னமரா பரணன்**
**மொழிந்தன னாக முன்னோர் நூலின்**
**வழியே நன்னூற் பெயரின் வகுத்தனன்"**

என்ற சிறப்புப் பாயிரப் பகுதி உதவுகிறது. இதன் மூலம் அமராபரணன் என்னும் சிறப்புப் பெயரை உடைய கங்க அரசனாகிய சீயகங்கன் வேண்டிக்கொண்டவாறு பவணந்தி முனிவர் நன்னூலை இயற்றி அருளினார் என்பது பெறப்படுகிறது. எனவே சீயகங்கன் காலமே பவணந்தியின் காலம் என்பது தெளிவு. மூன்றாம் குலோத்துங்கன் காலத்தில் (கி. பி. 1178-1218) கங்கநாட்டை ஆண்டுவந்த சிற்றரசன் சீயகங்கன். அவன் காலத்தை அறுதியிட உதவும் கல்வெட்டுச் சான்றுகளுள் ஒன்று குலோத்துங்கனின் முப்பத்துநான்காம் ஆட்சி ஆண்டின் (கி. பி. 1212) கல்வெட்டு. சீயகங்கனின் மனைவி அரியப்பிள்ளை திருவல்லத்தில் திருவல்லமுடைய நாயனாருக்குச் சாந்தி விளக்கு வைத்த செய்தியை இந்தக் கல்வெட்டு கூறுகிறது. அதனால் நன்னூலை ஆக்குவித்த

[8] சாமிநாதையர், 1925. பக். 11.
[9] மு. அருணாசலம், 1970. பக். 159.

சீயகங்கன் பதின்மூன்றாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் ஆட்சி புரிந்திருக்கிறான் என்று தெரிகிறது.

மூன்றாம் குலோத்துங்க சோழன் காலத்துக்குப் பின்னரும் சீயகங்கன் ஆட்சியில் இருந்த செய்தியை வேறொரு கல்வெட்டு குறிப்பிடுவதாக வையாபுரிப் பிள்ளை கூறுகிறார். அவர் குறிப்பிடுவது கோப்பெருஞ்சிங்கன் காலத்துக் கல்வெட்டு. அவன் குலோத்துங்கனின் மகனாகிய மூன்றாம் இராசராசனைச் சிறைப் பிடித்த பல்லவ மரபினன் என்பது வரலாறு. அவனது ஆட்சிக் காலம் கி. பி. 1243 வரை நீடித்ததாகச் சொல்லப்படுகிறது. கோப்பெருஞ்சிங்கனுக்கு அடங்கிய சிற்றரசனாகவும் சீயகங்கன் ஆட்சி புரிந்துள்ள செய்தி மேலே குறிப்பிடப்பட்ட கல்வெட்டால் தெரிய வருகிறது. அதனால் சீயகங்கனின் காலம் கி. பி. 1200-1250 என்று அவர்[10] அறுதியிடுகிறார். ஆகவே பவணந்தி முனிவர் நன்னூலை இயற்றிய காலம் பதின்மூன்றாம் நூற்றாண்டின் முற்பகுதி என்று துணிந்து கூறலாம்.

## நன்னூல்

நன்னூல் எளிமையும் தெளிவும் கொண்ட நல்ல இலக்கணம்; செறிவும் சுருக்கமும் வாய்க்கப் பெற்றது. சொல்லில் நயம், பொருளில் வளம், முறையில் ஒழுங்கு, அமைப்பில் . அழகு, நடையில் எளிமை முதலிய சிறப்பியல்புகள் எல்லாம் ஒருங்கே அமையப் பெற்ற புதுநூல். அதிகாரம், இயல், சூத்திரம் ஆகியவற்றின் தொகையிலும் நூற்பாக்களின் அடியளவிலும் தொல்காப்பியத்தை விட நன்னூல் மிகவும் சுருங்கியது. தமிழ்மரபு செய்யுள்மரபு. இது மனப்பாடக் கல்விக்கு ஏற்றது. செய்யுளின் அளவு குறைந்து எதுகை மோனைகளோடு இன்னோசையும் இணைந்துவிட்டால் மனப்பாடம் செய்வது எளிது; மனனம் செய்த பாடம் நினைவில் நிற்கும். செய்யுளுக்கு வரையறை (நன். 268) கூறிய பவணந்தி முனிவர் நூற்பாவும் செய்யுள் என்பதை அறிவார். ஆகவே நன்னூலின் பெரும்பகுதி நூற்பாக்களை அவர் ஓரடி, ஈரடி கொண்டனவாகவும் தொடைநயம், ஒலிநயம் உடையனவாகவும் இயற்றினார். அடுத்து வரும்,

**"இசைகெடின் மொழிமுத லிடைகடை நிலைநெடில்**
**அளபெழு மவற்றவற் றினக்குறில் குறியே."**

**"இயல்பெழு மாந்த ரிமைநொடி மாத்திரை."**

---

[10] எஸ். வையாபுரிப் பிள்ளை, 1968. பக். 185.

"மொழியாய்த் தொடரினு முன்னனைத் தெழுத்தே."

"சினைவினை சினையொடு முதலொடுஞ் செறியும்."

"வல்லொற்று வரினே யிடத்தொகை யாகும்
மெல்லொற்று வரினே பெயர்த்தொகை யாகும்."

"எப்பொரு ளெச்சொலி னெவ்வா றுயர்ந்தோர்
செப்பின ரப்படிச் செப்புதன் மரபே."

என்னும் (நன். 91, 100, 127, 345, 371, 388) நூற்பாக்களை வாய் விட்டு உரக்கச் சொல்லிப் பார்த்தால் இந்த உண்மை விளங்கும். இக்காரணங்களால் மனப்பாடக் கல்விமுறையில் நன்னூல் விரைந்து ஏற்றுக்கொள்ளப்பட்டது. இடைக்காலத் தமிழின் மொழியமைப்பை அறிவதற்கு இளையோரும் புலவரும் இவ்விலக்கணத்தைக் கற்கத் தொடங்கினர். அதன் விளைவாகத் தொல்காப்பியப் பயிற்சி குறையத் தொடங்கியது. பதினைந்தாம் நூற்றாண்டு முதல் சென்ற நூற்றாண்டு முடிய ஏறக்குறைய ஐந்நூறு ஆண்டுகள் தொல்காப்பியத்தை விடவும் விரும்பிப் பயிலப்பட்ட இலக்கணம் நன்னூல் என்பதை அறிஞர் உலகம் அறியும்.

"**அரும்பொரு ளைந்தையும் யாவரு முணர**" என்று சிறப்புப் பாயிரப் பகுதி குறிப்பதால் நன்னூலை ஐந்திலக்கண நூலாக மயிலைநாதர் (நன். 257, 418, 461), சங்கர நமச்சிவாயர் (நன். சிற. பாயி.), சிவஞான முனிவர்[11] முதலானோர் பலரும் கருதுகின்றனர். "**நன்னூல், சின்னூல் முதலிய நூல்கள் இரண்டனையே உணர்த்தும்.**" (இல. கொ. 6 உரை) என்று சாமிநாத தேசிகர் கூறுவதும், '**சிற்றதிகாரம்**' என்ற வழக்கும் இதற்கு மாறான கருத்தைக் குறிக்கும். இவற்றில் உண்மை எது? வெற்றூகம் எது என்று முடிவு காணப் போதிய சான்றுகள்[12] இல்லை. எங்ஙனம் ஆயினும் நமக்குக் கிடைத்துள்ள நன்னூலில் இப்போது இருப்பவை எழுத்ததிகாரம், சொல்லதிகாரம் என்ற இரண்டே; இயல்கள் பத்து; நூற்பாக்கள்[13] நானூற்று ஏழு. அவற்றோடு நூல் முகப்பில், பாயிரப் பகுதியில் உள்ள ஐம்பத்தைந்து நூற்பாக்களையும் சேர்த்து நன்னூல் நூற்பாக்கள் நானூற்று அறுபத்திரண்டு. அவற்றுள் நான்கு (நன். 9, 24, 25,

---

[11] தருக்க சங்கிரகம் தருக்க சங்கிரக தீபிகை என்னும் உரையுடன், திருவாவடுதுறை, 1983. பக். 1.

[12] சாமிநாதையர் (1918. பக். xiii) வேறு சில சான்றுகளையும் குறிப்பிட்டுள்ளார்.

[13] சாமிநாதையர் (1918. பக். 139, 312) காட்டியுள்ள பழைய வெண்பாக்கள் இதனை உறுதிப்படுத்தும்.

55) வெண்பாக்கள்; எஞ்சிய எல்லாம் நூற்பா அகவலில் அமைந்தவை. வெண்பா யாப்பில் அமைந்துள்ள நான்கும் பாயிரப் பகுதியிலேயே இருப்பதும் அவற்றுள் ஒன்றை (நன். 9) மயிலைநாதர் மேற்கோளாகக் கொள்வதும் கருதத் தக்கன.

பாயிரத்தோடு தொடர்புடைய வேறு சில செய்திகளையும் இங்கே குறிப்பிட வேண்டும். நன்னூலுக்குச் சிறப்புப் பாயிரம் யாரால், எப்போது இயற்றப்பட்டது என்று உறுதியாகச் சொல்ல முடியவில்லை. எனினும் மயிலைநாதர் இதற்குக் கவிதை நடையில் பதவுரை எழுதியுள்ளதால் அவர் காலத்துக்கு முன்பே இது பயிற்சிக்கு வந்திருக்க வேண்டும். அதனால் பவணந்தியோடு பயின்றவரோ அல்லது அவருடைய மாணாக்கருள் ஒருவரோ நன்னூல் தோன்றிய நூற்றாண்டிலேயே இப்பாயிரத்தை எழுதியிருக்கலாம் என்று தோன்றுகிறது. தொல்காப்பியச் சிறப்புப் பாயிரத்தைத் தழுவியதாகத் தோன்றினாலும் நன்னூல் சிறப்புப் பாயிரம் அதை விட விரிவானது; நடையழகு மிக்கது. வரலாற்றுச் செய்திகளை வழங்குவது இதன் மற்றொரு சிறப்பு.

பொதுப் பாயிரப் பகுதியில் பவணந்தி முனிவர் இயற்றிய நூற்பாக்கள் எவை? பழைய உரைகளிலிருந்து அவர் எடுத்துத் தொகுத்தவை எவை என்று உறுதியாகக் கூற முடியவில்லை; கூறவும் முடியாது. **"எந்நூல் உரைப்பினும் அந்நூற்குப் பாயிரம் உரைத்து உரைக்க என்பது மரபு."** (தொல். சிற. பாயி.) என்ற இளம்பூரணர் உரையும் உரைத் தோற்றுவாயில் உரையாசிரியர்கள் காட்டிய[14] மேற்கோள் சூத்திரங்களும் பவணந்தி முனிவரை ஈர்த்திருக்க வேண்டும். அதனால் தமிழிலக்கண உரைகளில் உதிரிகளாகச் சிதறிக் கிடந்த பாயிரத் தொடர்பான நூற்பாக்களோடு ஆசிரிய வசனங்களாகச் சில தொல்காப்பிய நூற்பாக்களையும் (தொல். செய். 163, 164; மரபு. 96) இணைத்து, ஒரு பதிப்பாசிரியரைப் போல அவற்றை நிரல்படத் தொகுத்துப் பாயிரப் பகுதியை உருவாக்கியது பவணந்தி முனிவருடைய பங்களிப்பு. பொருள் தொடர்பு கருதி இடை இடையே அவரும் சில நூற்பாக்களை எழுதிச் சேர்த்திருக்க வேண்டும். அவையே நூல் முகப்பில் பாயிரவியலாக அமைந்துவிட்டன. ஒவ்வொரு அதிகாரத்தின் துவக்கத்திலும் பவணந்தி முனிவர் இறைவணக்கம் (நன். 56, 258) கூறியுள்ளார். ஆனால் பாயிரப் பகுதியில் அவர் அவ்வாறு கூறவில்லை. **"ஆகவே பாயிரம் இவர் செய்யவில்லை என்பது கருத்து; முழுமையும் தானெடுத்து மொழிதலாக அமைந்ததே ஆகும்."** என்று[15] சொல்லப்படுவதும் உண்டு.

[14] *சாமிநாதையர், 1918. பக்.* xiv.

[15] *மு. அருணாசலம், 1970. பக். 166. எஸ். கலியாண சுந்தரையர் (நன்னூல் மூலமும் மயிலைநாதர் உரையும், சென்னை, 1946. பக்.* iv*) இக்கருத்தை முன்பே குறிப்பிட்டுள்ளார்.*

பவணந்தி முனிவர் தொல்காப்பியத்திலிருந்து பத்துக்கு மேற்பட்ட நூற்பாக்களை ஆசிரிய வசனங்களாக எடுத்தாளுகிறார்.

**"முன்னோர் மொழிபொருளே யன்றி யவர்மொழியும்**
**பொன்னேபோற் போற்றுவம்"** *(நன். 9)*

என்ற நூற்பாவும், **"தானெடுத்து மொழிதல்"** *(நன். 14)* என்னும் உத்தியும் இந்த முறைக்குத் துணை செய்கின்றன. நன்னூல் தொல்காப்பியத்துக்கு வழிநூலே தவிர எதிர்நூல் *(இறை. 1 உரை; யா. வி. பாயி.; மயிலைநாதர் நன். 62; சங்கர நமச்சிவாயர் நன். 164)* அல்ல என்பதை உணர்த்தவும் அவர் இந்த முறையைக் கையாண்டிருக்கலாம். ஆனால் பவணந்திக்கு முன் எந்த இலக்கணியும் இந்த முறையைக் கையாளவில்லை.

'தான் எடுத்து மொழிதல்' என்னும் நூல் உத்தியைக் கையாண்டுள்ள முறையில் தொல்காப்பியருக்கும் பவணந்தி முனிவருக்கும் நுண்ணிய வேறுபாடு காணப்படுகிறது. தொல்காப்பியர் தம்முடைய நூற்பாக்களையே தான் எடுத்து மொழிதலாகத் தொல்காப்பியத்தில் பல இடங்களில் பயன்படுத்துகிறார். காட்டாக,

**"அல்வழி யெல்லா முறழெனு மொழிப."**

**"அளபெடைப் பெயரே யளபெடை யியல."**

**"தொழிற்பெய ரெல்லாந் தொழிற்பெய ரியல."**

**"வேற்றுமைக் கண்ணு மதனோ ரற்றே."**

என்னும் *(தொல். புள்ளி. 73, 103; விளி. 18, 24, 32; புள்ளி. 11, 32, 81, 106; உயிர். 14, 23, 50, 57, 64, 74)* நூற்பாக்களை எழுத்து மாறாமல் அவர் எடுத்தாளுகிறார். ஆனால் பவணந்தி முனிவர் இந்த முறையை ஏனோ பின்பற்றவில்லை. ஆசிரிய வசனங்களாகத் தமது நூலில் *(நன். 6, 16, 17, 90, 252, 317, 336, 396, 404, 439)* தொல்காப்பிய நூற்பாக்களை இவர் எடுத்தாளுவதோடு சில தொல்காப்பிய நூற்பாக்களைச் சிறு மாற்றங்களோடும் *(நன். 232, 397, 400, 408, 431, 435)* எடுத்து அமைத்துக்கொண்டார். ஆழ்ந்து நோக்கினால் இந்த முறைகள் இரண்டிலும் நிறை குறைகள்[16] உண்டு. தான் எடுத்து மொழிதல் அளவோடு அமைந்தால் நூல்நெறி; அளவிறந்தால்

[16] **வ. சுப. மாணிக்கம், எழுத்து முறை, தாமரைச் செல்வர் வ. சுப்பையா பிள்ளை பவளவிழா மலர், கழகம், சென்னை, 1973. பக். 63-69.**

குழப்பநூல் நெறி. அதுபோல ஆசிரிய வசனங்களைப் போற்றுதல் அளவோடு அமைந்தால் நூல்நெறி; அளவை மீறினால் நகல்நூல் நெறி.

நன்னூலைப் பொறுத்த வரையில் மூலபாடம், நூற்பாக்களின் அடியளவு, அவற்றின் தொகை, வைப்புமுறை, இயல்களின் வரிசைமுறை ஆகியவற்றில் நிகழ்ந்துள்ள வேறுபாடுகள் குறைவு; நன்னூலின் பயிற்சியை நோக்க மிக மிகக் குறைவு. ஆயினும் சென்ற நூற்றாண்டில் நன்னூலுக்கு விருத்தியுரை எழுதிய இராமாநுச கவிராயர் இயல்களின் வைப்புமுறையில் செய்த ஒரு மாற்றத்தை மட்டும் குறிப்பிட வேண்டும். பொதுவியல் சொல்லதிகாரத்தின் இறுதி இயலாக இருக்க வேண்டும் என்பது அவர் கருத்து. சொல்லதிகாரத் தோற்றுவாயில்[17] அவர் இக்கருத்தை விளக்கிவிட்டுப் பொதுவியலை இடை உரியியல்களுக்குப் பின்னர், நூலின் இறுதியில் வைத்துவிட்டார். இந்த மாற்றத்துக்கு ஏற்றவாறு உரியியலில் உள்ள புறனடை நூற்பாக்கள் இரண்டை எடுத்துப் பொதுவியலின் இறுதியில் வைத்தார். அவரிடம் தமிழ் பயின்ற போப் பதிப்பித்த நன்னூல் பொழிப்புரையிலும் *(1857)* இந்த முறையே காணப்படுகிறது. ஆனால் இந்த நூற்றாண்டில் நன்னூலுக்குக் காண்டிகையுரை எழுதிய உரையாசிரியர்களுள் பவானந்தம் பிள்ளையைத் தவிர வேறு யாரும் இந்த மாற்றத்தை ஏற்றுக்கொள்ளவில்லை.

உண்மையைச் சொன்னால் கவிராயரின் இந்த வைப்புமுறை மாற்றம் புதியதே அல்ல. தொல்காப்பியச் சொல்லதிகாரத்தின் இறுதியில் எச்சவியல் இருப்பதைத் தழுவி, வைத்தியநாத தேசிகர் தமது இலக்கண விளக்கத்தில் சொல்லதிகாரத்தின் இறுதி இயலாகப் பொதுவியலை அமைத்தார். அந்த முறைவைப்பின் தழுவலே[18] கவிராயர் நன்னூலில் செய்த இந்த இயல் மாற்றம். தமது உரையில் இயலை மட்டும் அவர் மாற்றி வைக்கவில்லை. **"தொல்லை வடிவின"** (நன். *98*) என்னும் நூற்பாவில், **"எகர ஒகரமெய்"** என்பதை, **"ஏகார ஓகாரமெய்"** என்று *(1847. பக். 46)* நன்னூல் மூலபாடத்தையும் அவர் திருத்தி அமைத்துக்கொண்டார். அவ்வாறு திருத்தியதற்குப், **"பழையன கழிதலும் புதியன புகுதலும்"** என்னும் புறனடை விதி (நன். *462*), **"இறந்தது விலக்க லெதிரது போற்றல்"** என்னும் உத்திகள் (நன். *14*), வழக்கு மிகுதி ஆகிய மூன்று காரணங்களையும் அவர் காட்டுவார். ஆராய்ச்சிக்கு உரியது நன்னூலின் மூல அமைப்பு; அவர் காட்டும் காரணங்கள் அல்ல. எனவே காலம் காலமாக வழங்கிவரும் மூலநூலின் இயல் அமைப்பையும் பாடத்தையும் கவிராயர்

---

[17] **இராமாநுச கவிராயர், நன்னூல் விருத்தியுரை, (சென்னை), 1847. பக். 146.**

[18] **இராமாநுச கவிராயர் இலக்கண விளக்கத்தைத் தமது உரையில் பல இடங்களில் (சிற. பாயி., நூ. 58, 260, 323, 338, 348, 396, 410, 439) எடுத்துக்காட்டியுள்ளார்.**

மாற்றியது தமிழ் உரைமரபுக்கு ஒவ்வாது. இதற்கு மாறாகக் கவிராயர் செய்த இந்த இயல் மாற்றம் தொல்காப்பிய இயல் அமைப்புக்கு முரண்பட்டது ஆகாது என்று கருதுவோரும்[19] உளர். ஆனால் அது மூலபாடத் திறனாய்வுக்கு முற்றும் முரண்பட்டது என்பதை அவர்கள் எண்ணிப் பார்ப்பது நல்லது.

நூலின் துவக்கத்தில் அதன் அமைப்பு முறையைத் தொகுத்துச் சொல்வது நூலாசிரியர் மரபு. **"எழுத்தசை சீர்தளை யடிதொடை தூக்கொடு"** (நூ. 1) என்று யாப்பருங்கலமும், **"எழுத்தசைசீர், பந்த மடிதொடை பாவினங் கூறுவன்"** (பாயி.) என்று யாப்பருங்கலக் காரிகையும் நூலின் அமைப்பைத் தொடக்க நூற்பாக்களில் தொகுத்துக் கூறும். பவணந்தி முனிவரும் இந்த மரபைத் தழுவி, நூல் நுதலும் பொருள்களை,

**"நூலே நுவல்வோ னுவலுந் திறனே**
**கொள்வோன் கோடற் கூற்றா மைந்தும்**
**எல்லா நூற்கு மிவைபொதுப் பாயிரம்."**

**"எண்பெயர் முறைபிறப் புருவ மாத்திரை**
**முதலீ றிடைநிலை போலி யென்றா**
**பதம்புணர் பெனப்பன் னிருபாற் றதுவே."**

**"ஒருமொழி தொடர்மொழி பொதுமொழி யென்றா**
**இருதிணை யைம்பாற் பொருளையுந் தன்னையும்**
**மூவகை யிடத்தும் வழக்கொடு செய்யுளின்**
**வெளிப்படை குறிப்பின் விரிப்பது சொல்லே."**

**"அதுவே,**
**இயற்சொற் றிரிசொ லியல்பிற் பெயர்வினை**
**எனவிரண் டாகு மிடையுரி யடுத்து**
**நான்குமாந் திசைவட சொலணு காவழி."**

என்னும் (நன். 3, 57, 259, 270) நான்கு நூற்பாக்களில் தொகுத்துக் கூறுவார். உரையாசிரியர்கள், **"நிறுத்த முறையானே"** என்னும் உரைமரபுத் தொடரால் இதனை விளக்குவார்கள். விளக்க வேண்டிய கருத்துகளை, **"முந்துநூல் கண்டு முறைப்பட**

---
[19] **க. ப. அறவாணன், 1977. பக். 60.**

**எண்ணி"** (தொல். சிற. பாயி.) அவற்றின் அமைப்பியலை வழிநூல் இயற்றும் ஆசிரியன் உருவாக்கிக்கொள்ள வேண்டும். அப்போதுதான் நூலின் கட்டமைப்பு சிறக்கும்; ஆசிரியனின் நூலாக்கத் திறன் விளங்கும். பவணந்தி முனிவர் இந்த நூல்மரபை உணர்ந்த பேராசிரியர். அதனால்தான் தமது நூலின் பொருளமைதியைக் கணித முறையில் இவ்வளவு நிரல்பட அவரால் தொகுத்துக் கூற முடிந்தது. இது பவணந்தி முனிவரின் தனித்தன்மை. தொல்காப்பியக் கல்வி தொய்வுற்ற காலகட்டத்தில் தோன்றி, இலக்கண வேருக்கு நீர் ஊற்றிய பவணந்தி முனிவர்க்கு இத்தனித்தன்மை வாய்த்திருந்ததில் வியப்பு ஒன்றும் இல்லை.

ஆக்குவித்தோன், **"தொகைவகை விரியிற் றருகென"** (நன். சிற. பாயி.) வேண்டிக்கொண்டவாறு பவணந்தி முனிவர் நன்னூலை ஆக்கியுள்ள திறன், தொல்காப்பியத்துக்கும் நன்னூலுக்கும் இடையே உள்ள ஒற்றுமை வேற்றுமைகள் ஆகியவற்றை உரையாசிரியர்களும் ஆய்வாளர்களும்[20] பல வகைகளில் ஆராய்ந்துள்ளனர். இந்தக் கண்ணோட்டத்தில் தொல்காப்பிய நன்னூல் நூற்பாக்களை ஒப்பிட்டு நோக்கிய சிவஞான முனிவர் கருத்தை மட்டும் சான்றுகளோடு சுட்டிவிட்டு அடுத்த பகுதிக்குச் செல்லலாம்.

தொல்காப்பியர் சொல் பல்கவும் பவணந்தி சொல் சுருங்கவும் சூத்திரம் செய்வர் என்பது முனிவர் (இல. சூறா. பக். 108) கருத்து. சான்றாகச்,

**"சாவ வென்னுஞ் செயவெ னெச்சத்**
**திறுதி வகரங் கெடுதலு முரித்தே."**

**"வாழிய வென்னுஞ் செயவென் கிளவி**
**யிறுதி யகரங் கெடுதலு முரித்தே."**

என்னும் (தொல். உயிர். 7, 9) தொல்காப்பிய நூற்பாக்களை,

**"வாழிய வென்பத னீற்றி னுயிர்மெய்**
**ஏகலு முரித்தஃ தேகினு மியல்பே."**

**"சாவவென் மொழியீற் றுயிர்மெய் சாதலும்விதி."**

---

**[20] இ. சாமுவேல் பிள்ளை- வால்ற்றர் ஜாயீஸ், தொல்காப்பிய நன்னூல், சென்னை மாநகரம், 1858; வெள்ளைவாரணர், தொல்காப்பியம்- நன்னூல், எழுத்ததிகாரம், அண்ணாமலைநகர், 1962; சொல்லதிகாரம், சிதம்பரம், 1971; இராம. சுந்தரம், நன்னூல்- சொல்லதிகாரம், 1987.**

என்னும் (நன். 168, 169) நன்னூல் நூற்பாக்களோடு ஒப்பிட்டு நோக்கினால் பவணந்தி முனிவரின் சொற்சுருக்கம், நடையியல், வைப்புமுறை முதலியவற்றின் சிறப்பியல்பு எளிதில் விளங்கும்.

அனைத்திற்கும் மேலாக, வாழ்வையும் சாவையும் மரபு நோக்கி, அடுத்தடுத்து வைத்ததோடு, சாதலும் விதி என்ற தொடரால் சாவ என்னும் வினைச்சொல்லுக்குப் புணர்ச்சி விதி கூறும் போது வாழ்க்கைத் தத்துவத்தையும் உடன் உணர்த்துவது உய்த்துணர்தற்கு உரியது. இவ்வாறே, **"உடன்மே லுயிர்வந் தொன்றுவ தியல்பே"** (நன். 204) என்று உயிர்ப்பண்பை உய்த்துணர்ந்து கூறும் பவணந்தி முனிவரின் திறமும் நினையத் தக்கது.

தொல்காப்பியத்துக்குப் பின்னர்த் தோன்றியுள்ள செந்தமிழ் இலக்கணங்களைச் சீர்தூக்கிப் பார்த்தால் நன்னூலுக்கு இணையான நூல் எதுவும் இல்லை. இக்கருத்தை,

> **"முன்னூ லொழியப் பின்னூல் பலவினும்**
> **நன்னூ லார்தமக் கெந்நூ லாரும்**
> **இணையோ வென்னுந் துணிவே மன்னுக."**

என்று (இல. கொ. 8 உரை) சாமிநாத தேசிகர் புகழ்ந்து கூறுவார். இவரைப் போலவே பவணந்தி முனிவரையும் நன்னூலையும் பலரும்[21] வியந்து பாராட்டியுள்ளனர்.

## உரைகள்

உரைவளம் கொண்ட நூல்களுள் ஒன்று நன்னூல். நன்னூலின் உரைகளையும் உரையாசிரியர்களையும் பற்றிச் சாமிநாதையரின் நன்னூல் பதிப்புகளிலும் இலக்கிய இலக்கண வரலாறுகளிலும் பரக்கக் காணலாம். இவை தவிர, 'எழுநூறு ஆண்டுகளில் நன்னூல்' (க. ப. அறவாணன், 1977.) என்ற ஆய்வேட்டிலும் நன்னூலின் உரை வரலாறு ஆராயப்பட்டுள்ளது. இந்நூல் அமிர்தலிங்கம் செட்டி (பக். 259), ஆறுமுக சுவாமிகள் (பக். 256), தெய்வசிகாமணி முதலியார் (பக். 258), போப்பையர் (பக். 210), ஸ்ரீநிவாச முதலியார் (பக். 258) போன்ற பதிப்பாசிரியர்களையும் இலக்கண விளக்கம் இயற்றிய நூலாசிரியரையும் (பக். 172; 354) நன்னூல் மொழிபெயர்ப்பாளர்களையும் (பக். 179; 241-252) உரையாசிரியர்களாகக் கொண்டதால் நன்னூலுக்கு உரைப்பணி செய்தோர் ஏறத்தாழ நாற்பத்துநான்கு பேர் (பக். 89; 179) என்று மிகைப்படுத்தும். இந்தக்

[21] **இப்புகழ்மொழிகளை எல்லாம் சாமிநாதையரின் நன்னூல் பதிப்புகளில் (1918. பக். xvi-xv; 1925. பக். 17-18) காணலாம்.**

கருத்தும் கணக்கும் பிழை. எப்படி இருந்தாலும் தோன்றிய காலம் முதல் இன்று வரை நன்னூலுக்கு உரை காணும் பெருமுயற்சி தொடர்கிறது. சென்ற நூற்றாண்டின் தொடக்கத்திலிருந்து வெவ்வேறு நோக்கங்களோடு நன்னூலுக்குப் பல புதிய உரைகள் தோன்றின. அவற்றை எல்லாம் பழைய உரைகளோடு ஒப்பிட்டு ஆராய்ந்து மதிப்பீடு செய்த பின் நன்னூலுக்கு உரைப்பணி செய்தோரைக் கணக்கிடுவது முறை. அவ்வாறு செய்தால் நன்னூலுக்கு உரைப்பணி செய்தோரின் தொகை கணிசமாகக் குறைந்துவிடும்.

## மயிலைநாதர்

நன்னூலின் பழைய உரையாசிரியர் மயிலைநாதர். அவருடைய உரையில் காணப்படும், **"இதற்குப் பிறவாறு சொல்லுவாரும் உளர்."** (நன். 271) என்பது போன்ற சொல்லாட்சி மயிலைநாதருக்கு முன்னரோ அல்லது அவர் காலத்திலோ நன்னூலுக்கு வேறு உரை இருந்திருக்கலாம் என்ற கருத்தைத் தோற்றுவிக்கிறது. அது ஆசிரியர் மாணவர் வழியில் வாய்மொழியாக வழங்கிய உரையா? எழுத்து வடிவில் ஏட்டில் நிலவிய உரையா என்று சொல்வதற்குப் போதிய சான்றுகள் கிடைக்கவில்லை. எனவே கிடைத்துள்ள நன்னூல் உரைகளில் மயிலைநாதர் உரையே காலத்தால் முந்தியது. அதனால் இதற்குப் பழைய உரை என்ற பெயரும் உண்டு. இவ்வுரை சைன முனிவர் உரை என்றும் சைனர் உரை என்றும்[22] அழைக்கப்பட்டது என்பார்கள். இது செவி-வழிச் செய்தியே தவிர நூல்வழிச் செய்தி அல்ல. அதாவது நூல்களில் அல்லது பழைய உரைகளில் இப்பெயர்கள் பதிவானதாகத் தெரியவில்லை.

மயிலைநாதர் பதினான்காம் நூற்றாண்டினர் என்றும் சமண மதத்தினர் என்றும்[23] கூறுவார்கள். செறிவும் தெளிவும் அவர் உரையின் சிறப்பியல்புகள். வினாவிடைகள், மறுப்புரைகள் போன்றவை அவர் உரையில் குறைவு. அதனால் அது காண்டிகையுரை என்றும் சொல்லப்படும். மயிலைநாதர் உரையின் அமைப்பை ஆழ்ந்து நோக்கினால் அது விருத்தியுரை என்பது எளிதில் விளங்கும். சிறப்புப் பாயிரத்தின் உரையை அவர் பாயிர நூற்பாக்களின் இறுதியில் வைத்து உரை கூறுவது ஆராய்தற்கு உரியது. அதற்கு அவர் நடைநயம் தோன்ற வரைந்துள்ள பதவுரை பல முறை படித்து மகிழத் தக்கது. நன்னூலுக்கு அவர் வரைந்துள்ளது பொழிப்புரை. நான்கு நூற்பாக்களுக்கு மட்டுமே (நன். 55, 107, 150, 187) பதவுரை காணப்படுகிறது. அவரது உரைநடை தொடைநயமும் கவிதைச் சுவையும் கொண்டது. முந்தைய நூலாசிரியர்களை,

---

[22] சி. வை. தாமோதரம் பிள்ளை, இலக்கண விளக்கம் மூலமும் உரையும், சென்னபட்டணம், 1889. பதிப்புரை பக். 6; சாமிநாதையர், 1918. முகவுரை பக். ii.

[23] சாமிநாதையர், 1918. பக். xvii மு. அருணாசலம், இலக்கிய வரலாறு, பதினான்காம் நூற்றாண்டு, திருச்சிற்றம்பலம், 1969. பக். 113.

**"மிகத் தெளி கேள்வி அகத்தியனார்", "ஒல்காப் பெருமைத் தொல்காப்பியனார்"** (நன். 130) என்று அழகான அடைமொழிகளால் அவர் குறிப்பிடுவார். அகத்தியம், தொல்காப்பியம், அவிநயம் போன்ற முன்னைத் தமிழ் இலக்கணங்களோடு நன்னூலை ஒப்பிட்டு ஆராய்ந்த முதல் உரையாசிரியர் மயிலைநாதர். உரையாசிரியர்களுள் அவரே மிகுதியான அகத்தியச் சூத்திரங்களை மேற்கோள் காட்டியுள்ளார். மயிலைநாதர் மேற்கோள் காட்டியுள்ள அகத்தியச் சூத்திரங்களையே பிற்கால உரையாசிரியர்கள் பலரும் எடுத்தாளுவார்கள்.

பிறர் உரைகளை எடுத்தாளும் போது அவர்களுடைய பெயர்களைச் சுட்டுவது மயிலைநாதர் முறை. காட்டாக எச்சங்களைக் கூறும் நூற்பாவின் உரையில், **"இஃது ஒல்காப் புலமைத் தொல்காப்பியத்துள் உளங்கூர்கேள்வி இளம்பூரணர் எனும் ஏதமில் மாதவர் ஓதிய உரை என்று உணர்க."** (நன். 359) என்று புலமை நேர்மை புலப்பட எழுதுவார். பொருத்தமான இலக்கிய உதாரணங்களைத் தேர்ந்தெடுப்பதில் மயிலைநாதர் கைதேர்ந்தவர். அவர் காட்டியுள்ள உதாரணப் பாடல்களைப் பல இடங்களில் சங்கர நமச்சிவாயர் தழுவிக்கொள்வார். காட்டாக இடையியல் இறுதிச் சூத்திரங்கள் இரண்டிலும் மயிலைநாதர் காட்டிய உதாரணப் பாடல்கள் அனைத்தையும் சங்கர நமச்சிவாயர் தமது உரையில் எடுத்தாளுவார். இதுபோலவே ஒப்பியல் நோக்கில் மயிலைநாதர் மேற்கோள் காட்டிய பதினேழு அகத்தியச் சூத்திரங்களுள் பத்தினைச் சங்கர நமச்சிவாயரும் மேற்கோள் காட்டுவார். மயிலைநாதர் உரை ஒரு வகையில் இளம்பூரணர் உரையோடு ஒப்பிடத் தக்கது. இவ்வுரையின் சிறப்புகளைச் சாமிநாதையர் (1918. பக். xvii-xxii) ஆராய்ந்துள்ளார்.

மயிலைநாதர் உரையைப் பற்றி நீண்ட நாளாக ஒரு தவறான கருத்து சொல்லப்படுகிறது. சங்கர நமச்சிவாயர் உரையின் முதல் பதிப்பில், உரையாசிரியர் வரலாறு என்ற தலைப்பில், **"நன்னூற் சூத்திரங்களில் விருப்பும் மயிலைநாதர் உரை அந்நூலுக்கு ஏற்ற உரை அன்று என்பதுபற்றி அதன்பால் வெறுப்பும் உள்ள தம் ஆசிரியர் சாமிநாத தேசிகர், "நன்னூலுக்குச் சிறந்ததோர் உரை நீர் செய்திடுக" என்று பணித்தமையானும், கல்வி கேள்விகளிற் சிறப்புற்று, 'முத்தமிழ்ப் புலமையும் முறையர சுரிமையும் இத்தலத் தெய்திய இறைமகன்' என்று பாராட்டப்படும் ஊற்றுமலை மருதப்பத் தேவருடைய வேண்டுகோளாலும் இந்நூலுக்கு மிக அழகிதாகிய ஓர் உரையை இவர் இயற்றுவாராயினார். சாமிநாத தேசிகருக்கு அக்கருத்துக்கள் உண்மை, "சேற்று நிலத்திற் கவிழ்ந்த பால் தேன் நெய் முதலியனவும் சேறானாற்போல நன்னூற் சூத்திரமும்**

அவ்வுரையுடனே கலந்து குற்றப்பட்டது என்க;

"முன்னூல் ஒழியப் பின்னூல் பலவினும்
நன்னூ லார்தமக்கு எந்நூ லாரும்
இணையோ என்னும் துணிவே மன்னுக."

"முன்னோர் ஒழியப் பின்னோர் பலரினும்"

**என்றலும் ஒன்று."** (இல. கொ. சூ. 8 உரை), **"அவனருளால்"** (பக். 2) **என்பவற்றாலும், மருதப்ப தேவர் விரும்பினமை, "நன்னூலுட் கருத்துலகோ ரறியவுரை செய்க-வென"** (பக். 4) **என்பது முதலிய மூன்று அருமைச் செய்யுட்களாலும் விளங்கும்."** என்று சாமிநாதையர் (1925. பக். 20) முதன் முதல் இக்கருத்தை எழுதினார். இந்தப் பகுதியில் அவர் குறிப்பிட்டுள்ள கருத்துகளில் ஒன்று மட்டுமே நமது தலைப்புக்கு முக்கியம். அதாவது மயிலைநாதர் உரை நன்னூலுக்கு ஏற்றது அல்ல என்பதால் அதன் மீது வெறுப்புக் கொண்டவர் சாமிநாத தேசிகர்[24] என்பதே முக்கியம். இலக்கணக் கொத்து மறுப்புரையின் (நூ. 8) பிற்பகுதியை அவர் அதற்குச் சான்றாகக் காட்டுவார். சாமிநாதையர் கொண்ட முடிபும் சான்றும் பலரால்[25] எடுத்தாளப்பட்டுள்ளன; ஆனாலும் அவற்றை யாரும் ஆழமாக ஆராய முயலவில்லை.

சாமிநாத தேசிகர் எழுதியுள்ள மறுப்புரையின் (இல. கொ. 8 உரை) முற்பகுதியிலும் சிறப்பாக ஆராய வேண்டிய தொடர்கள் உள்ளன. அவற்றுள், **"நன்னூலார்க்குப் பின்னூலார் இச்சூத்திரத்திற்கு** (நன். 66) **அளவிறந்த குற்றம் கூறினர்."** என்பது முதலாவது தொடர். இத்தொடரில், **"பின்னூலார்"** என்பது ஒரு நூலாசிரியரையும், **"இச்சூத்திரத்திற்கு"** என்பது குற்றம் கூறப்பட்டது ஒரு நூற்பாவுக்கு என்பதையும், **"அளவிறந்த குற்றம்"** என்பது ஒன்றுக்கு மேற்பட்ட குற்றங்களையும் குறிக்கின்றன. ஆனால் மயிலைநாதர் நூலாசிரியர் அல்லர்; **"அஇ உம்முதற் றனிவரிற் சுட்டே."** என்னும் நூற்பாவின் உரையில் (நன். 65) அவர் அந்நூற்பாவுக்கு எந்தக் குற்றமும் கூறவில்லை. எனவே சாமிநாத தேசிகர் எழுதியுள்ள மறுப்புரை மயிலைநாதரைக் கருதியது அல்ல என்பது தெளிவு. அப்படி என்றால் இம்மறுப்புரை யாரைக் கருதி

[24] மயிலைநாதர் உரைப் பதிப்பில் சாமிநாதையர் இக்கருத்தைக் குறிப்பிடவில்லை.

[25] கழகப் புலவர் குழுவினர், நன்னூல் விருத்தியுரை, கழகம், சென்னை, 1964. பக். 19; மு. வை. அரவிந்தன், உரையாசிரியர்கள், சிதம்பரம், 1968. பக். 462; சென்னை, 1995. பக். 555; தி. வே. கோபாலையர், இலக்கண விளக்கம் எழுத்ததிகாரம், தஞ்சாவூர், 1971. பக். 97; க. ப. அறவாணன், 1977. பக். 84, 99; கி. நாச்சிமுத்து, டாக்டர் உ. வே. சா. இலக்கணப் பதிப்புகள், சென்னை, 1986. பக். 51-52; இரா. இளங்குமரன், இலக்கண வரலாறு, சென்னை, 1988. பக். 295.

எழுதப்பட்டது? இதற்கான விடை இலக்கண விளக்கத்தில் கிடைக்கிறது. அதன் உரையில், **"மொழி முதற்கண் தனித்து வரின் சுட்டு என்றாரும் உளராலோ எனின், "சுட்டு வகரம்"** (நன். 235) **எனவும், "சுட்டின்முன் ஆய்தம்"** (நன். 251) **எனவும் உறுப்பாய் வருவனவற்றையும் சுட்டு என்று அவர்தாமே ஆளுதலானும், ஆசிரியர் தொல்காப்பியனாரும் "அஇஉ அம் மூன்றும் சுட்டு."** (தொல். நூன். 31) **எனப் பொதுப்படக் கூறிச், "சுட்டுமுதல் உகரம்"** (தொல். உருபு. 4) **எனவும், "சுட்டுமுத லாகிய ஐயென் இறுதி"** (தொல். உருபு. 5) **எனவும் பிறாண்டும் உறுப்பாய் வருவனவற்றையும், "சுட்டின் முன்னர் ஞநமத் தோன்றின்"** (தொல். உயிர். 3) **எனவும், "சுட்டின் இயற்கை"** (தொல். உயிர். 36) **எனவும் பிறாண்டும் சார்ந்து வருவனவற்றையும் சுட்டு என்று ஆளுதலானும் அவர்க்கு அது கருத்து அன்று என்க."** (இல. விள. 6) என்று வைத்தியநாத தேசிகர் ஒரு மறுப்புரை வரைந்துள்ளார்.

இம்மறுப்புரையில் வைத்தியநாத தேசிகர் நன்னூல் சூத்திரங்கள் இரண்டை (நன். 235, 251) எடுத்துக்காட்டுவதாலும், **"அவர்தாமே ஆளுதலானும்"** என்று சுட்டுவதாலும் நாம் அறிய வேண்டிய செய்திகள் மூன்று. இங்கு மறுக்கப்பட்டவர் பவணந்தி முனிவர்; மறுக்கப்பட்டது நன்னூல் சூத்திரம்; மறுப்புரை வரைந்தவர் வைத்தியநாத தேசிகர்[26] என்னும் மூன்று. இவரே நன்னூல் சூத்திரத்தின், **"முதற் றனிவரிற் சுட்டே"** (நன். 66) என்ற தொடரில் பெருங்குற்றம் கண்டு அதற்கு மாறாக, **"மொழிமுதல் வரிற்சுட்டு"** (இல. விள. 6) என்று நூற்பா இயற்றியவர்; நன்னூல் சூத்திரத்துக்கு அளவிறந்த குற்றம் கூறியவரும் இவரே. மேலும் நன்னூலுக்குப் பிறகு இலக்கண விளக்கத்தைத் தவிரக் குறிப்பிடுமாறு வேறு இலக்கணம் தோன்றாததால், **"நன்னூலார்க்குப் பின்னூலார்"** என்று சாமிநாத தேசிகர் சுட்டுவது வைத்தியநாத தேசிகரையே குறிக்க வேண்டும். பின்னூலார் என்ற சொல்லாட்சி இப்பொருளில் இலக்கணக் கொத்தில் வேறொரு இடத்திலும் (நூ. 9 உரை) வருகிறது.

இந்த மறுப்புரைக்கு முத்தாய்ப்பாக அமைவது,

> **"முன்னூல் ஒழியப் பின்னூல் பலவினும்**
> **நன்னூ லார்தமக்கு எந்நூ லாரும்**
> **இணையோ என்னும் துணிவே மன்னுக."**

---

[26] **தண்டபாணி தேசிகரும் (நன்னூல் விருத்தியுரை, 1957. பக். 57) இக்கருத்தைக் குறிப்பிட்டுள்ளார்.**

(இல. கொ. 8 உரை) என்று சாமிநாத தேசிகர் இயற்றியுள்ள உரைச் சூத்திரமே. "முதற் றனிவரிற் சுட்டே" (நன். 66) என்னும் சூத்திரத்தின் சொல்லமைதியையும், "அவர்க்கு அது கருத்து அன்று" என்னும் தொடரால் பவணந்தி முனிவரையும் குறை கூறிய வைத்தியநாத தேசிகரை மறுப்பதே இந்த உரைச் சூத்திரத்தின் உட்பொருள். நன்னூலுக்குப் புகழாரம் புனையும் இந்த உரைச் சூத்திரத்தை அதனால்தான் சாமி-நாத தேசிகர் தமது மறுப்புரையின் இறுதியில் அமைத்துள்ளார். இவற்றை எல்லாம் ஒருசேரத் தொகுத்து நோக்காமல் சாமிநாத தேசிகரின் மறுப்புரை மயிலைநாதரைக் குறிப்பதாக வலிந்து கொள்வது ஒரு வகையிலும் ஒவ்வாது.

ஆகவே நன்னூல் சூத்திரத்துக்குக் குற்றம் கூறிய பின்னூல் ஆசிரியர் என்னும் மறுப்புரைக்கு இலக்கானவர் வைத்தியநாத தேசிகர்; மயிலைநாதர் அல்லர் என்பதே முறையான முடிபு. சிவஞான முனிவர், "**நன்னூலார் மொழி முதற்கண் சுட்டுப் பொருள் உணர்த்தி வரினல்லது சுட்டெழுத்து ஆகா என்பார், "தனிவரிற் சுட்டு"** (நன். 66) **என்றார். தாமும் அவ்வாறு கூறாது எவ்வாறு வரினும் சுட்டெழுத்தாம் என்று பொருள்பட வாளா, "மொழிமுதல் வரிற்சுட்டு"** (இல. விள. 6) **என்றதுவும் அன்றி, அவர் கருத்து அறியாது குற்றமும் கூறினார்."** என்று வைத்தியநாத தேசிகரை மறுத்து இலக்கண விளக்கச் சூறாவளியில் (பக். 91) எழுதியுள்ள குறிப்பும் இம்முடிபை உறுதிப்படுத்தும்.

சாமிநாத தேசிகர் மறுப்புரையின் முற்பகுதியில் (இல. கொ. 8 உரை) ஊன்றி நோக்க வேண்டிய இரண்டாவது தொடர், "**அதுபற்றித் தமக்கு என ஒன்று இலரும் அதுவே.**" என்பது. இத்தொடர் யாரைப் பற்றியது என்ற கேள்விக்கும் இலக்கண விளக்கமே விடை தருகிறது. வைத்தியநாத தேசிகர் இயற்றிய இலக்கண விளக்கம் ஒரு படைப்பு நூல்[27] அல்ல; தொல்காப்பியம், யாப்பருங்கலம், தண்டியலங்காரம், நன்னூல் போன்ற நூல்களிலிருந்து நூற்றுக் கணக்கான நூற்பாக்களை அள்ளி அமைத்துக்கொண்ட ஒரு வகைத் தொகுப்பு நூல். ஆசிரியர் இயற்றிய நூற்பாக்கள் அந்நூலில் குறைவு. விளங்கச் சொன்னால் இலக்கண விளக்கத்தில் நூலாசிரியரின் சொந்தக் கருத்துகளை விடப் பிற நூல்களிலிருந்து அவர் எடுத்துக்கொண்ட இரவல் கருத்துகளே மிகுதி. இந்த உண்மையை உள்ளடக்கி, வைத்தியநாத தேசிகரின் நூலாக்க முறைபற்றிச் சாமிநாத தேசிகர் செய்த ஒரு வரி விமர்சனமே அந்த இரண்டாவது தொடர். அவரைப் பின்பற்றிச் சிவஞான முனிவரும், "**இவ்விலக்கண விளக்க நூலுள், "எச்சொல் லாயினும் பொருள் வேறு கிளத்தல்"** (தொல். உரி. 1) **என இவரால்**

[27] **இக்கருத்துரை அதன் உரைக்கும் பொருந்தும்.**

**தரப்பட்ட ஆணை யாண்டையது என்க."** (இல. சூறா. பக். 129) என்று இம்முறையை வினாக்கணை தொடுத்து விமர்சிப்பார்.

**"நன்னூலுக்குச் சைனர் உரை என்று ஒன்று உண்டு; அது பயனற்றது."** என்பதும்[28] மயிலைநாதர் உரை நன்னூலுக்குத் தகுதியான உரை அல்ல என்பதால் சாமிநாத தேசிகர் அவ்வுரையின் மீது வெறுப்புக் கொண்டிருந்தார் என்பதும்[29] ஆதீன வட்டத்தில் வழங்கிய கதைகளாக இருக்க வேண்டும். சமயக் காழ்ப்பு காரணமாக எழுந்திருக்கக் கூடிய இவற்றை உறுதிப்படுத்தும் சான்றுகளை எந்த இலக்கண நூலும் வழங்கவில்லை. சைனர் உரையைப் பற்றிச் சாமிநாத தேசிகர் தமது நூலில் எந்த இடத்திலும்[30] குறிப்பிடவில்லை. மயிலைநாதர் உரையை அவர் தமது நூலில் மறுக்கவும் இல்லை. அதற்கு முற்றிலும் மாறானது உண்மை. சாமிநாத தேசிகர் மயிலைநாதரை ஏற்று மதித்திருக்கிறார்; அதனால்தான் அவர் தமது நூலில் இரண்டு இடங்களில் மயிலைநாதர் உரையைக் குறித்துள்ளார். வினைமுற்று எச்சம் ஆவதை விளக்கும் பகுதியில், **"ஏனை மூன்றும் நன்னூலில், "வினைமுற் றேவினை யெச்ச மாகலும்"** (நன். 351) **என்னும் சூத்திரத்தில் காட்டிய உதாரணங்களால் அறிக."** (இல. கொ. 82 உரை) என்றும் ஒரு தொடர், பல தொடர் என்பவற்றை விளக்கும் பகுதியில், **"வினைமுற் றேவினை யெச்ச மாகலும்"** (நன். 351) **என்னும் சூத்திரத்தில், "கானவ ரிரிய"** (சீவக. 452) **என்னும் செய்யுளில் காண்க."** (இல. கொ. 124 உரை) என்றும் சாமிநாத தேசிகர் மயிலைநாதர் உரையைக் குறிப்பிட்டுள்ளார்.

இவற்றை எல்லாம் ஒருங்கு வைத்து நோக்கினால் சாமிநாத தேசிகரால் (இல. கொ. 8 உரை) மறுக்கப்படுவது இலக்கண விளக்க உரை; **"முதல் தனிவரிற் சுட்டே"** (நன். 66) என்னும் தொடருக்கு, **"மொழி முதற்கண் தனித்து வரின் சுட்டு"** என்று இலக்கண விளக்க உரையில் (நூ. 6) வைத்தியநாத தேசிகர் வழங்கியுள்ள உரையே என்பது உறுதி. அத்தொடருக்கு இவ்வாறு அவர் உரை கொண்டதற்கு மயிலை-நாதருடைய உரையும் ஒரு காரணமாக இருந்திருக்கக் கூடும். என்றாலும் சாமிநாத தேசிகரால் மறுக்கப்படுவது மயிலைநாதரின் உரை அல்ல. மயிலைநாதர் உரையின் மீது சாமிநாத தேசிகர் வெறுப்புணர்வு கொண்டிருந்தார் என்று மெய்ப்பிக்கவும்

---

[28] **சாமிநாதையர், 1918. முகவுரை பக்.** ii.

[29] **சாமிநாதையர், 1925. பக். 20.**

[30] **மயிலைநாதர் உரையிலிருந்து வேறுபட்டதொரு சமணர் உரையைச் சாமிநாத தேசிகர் குறிப்பிடுகிறார் (க. ப. அறவாணன், 1977. பக். 99) என்னும் புதுக் கருத்துக்கும் இலக்கணக் கொத்தில் சான்று இல்லை. கி. நாச்சிமுத்து இக்கருத்தை முன்பே (1986. பக். 51-52) மறுத்துள்ளார்.**

இலக்கணக் கொத்தில் சான்றுகள் இல்லை. மாறாக, மயிலைநாதர் உரையைத் தேசிகர் மதித்துள்ளார் என்பதை நிறுவ அவர் நூலில் சான்றுகள் உண்டு. எனவே நன்னூலுக்குப் புதிய உரை ஒன்றை இயற்றுமாறு சங்கர நமச்சிவாயரைச் சாமிநாத தேசிகர் தூண்டியிருந்தால்[31] அதற்கு எந்த வெறுப்புணர்வும் காரணம் அல்ல என்று துணிந்து கூறலாம்.

## ஆண்டிப் புலவர்

மயிலைநாதருக்குப் பிறகு பதினாறாம் நூற்றாண்டில் நன்னூலுக்கு ஒரு உரை எழுந்ததாகத் தெரிகிறது. ஆசிரிய நிகண்டை இயற்றிய ஆண்டிப் புலவர் இந்தப் புதுவகை உரையின் ஆசிரியர். செய்யுள் நடையில்[32] இயன்ற இவ்வுரை ஆசிரிய விருத்தத்தில் அமைந்தது. **'நன்னூல் ஆசிரிய விருத்தம்'** என்றும், **'உரையறி நன்னூல்'** என்றும்[33] இது வழங்கப்பட்டது. ஆசிரிய நிகண்டின் பாயிரப் பகுதியே இந்தச் செய்திகளுக்கு எல்லாம் ஆதாரம். ஆண்டிப் புலவரின் உரை நன்னூல் முழுமைக்கும் கிடைக்கவில்லை. **"செம்மை சிறுமை"** என்னும் நூற்பாவின் (நன். 135) உரையாக அமைந்த ஒரே ஒரு ஆசிரிய விருத்தம் அவருடைய உரைக்கு உரைகல்போல நின்று நிலவுகிறது.

## சங்கர நமச்சிவாயர்

இலக்கண வரலாற்றில் பதினேழாம் நூற்றாண்டு சிறப்பு வாய்ந்தது. இந்த நூற்றாண்டில்தான் இலக்கண விளக்கம், பிரயோக விவேகம், இலக்கணக் கொத்து முதலிய இலக்கண நூல்கள் தோன்றின. தொகுப்பு நூல் எனினும் இந்நூற்றாண்டில் தோன்றிய இலக்கண விளக்கம் ஒன்றே நன்னூலுக்குப் பின் வந்த வரலாற்று முறைத் தமிழ் இலக்கணம். அது மட்டும் அல்ல. நன்னூலுக்குத் தலைசிறந்த உரை தோன்றியதும் இந்த நூற்றாண்டே. மூலநூலைப் போலவே தோன்றிய காலம் தொட்டு விரும்பிக் கற்கப்படும் இந்த உரையை இயற்றி அருளியவர் சங்கர நமச்சிவாயப் புலவர். அவர் திருநெல்வேலியினர்; சைவ வேளாள மரபினர்; இலக்கணக் கொத்தை இயற்றிய சாமிநாத தேசிகரின் தலைமாணாக்கர். அவரிடம் தமிழ் இலக்கண இலக்கியங்களை முறையாகப் பாடம் கேட்டவர்; தொல்காப்பிய உரைகளை ஊன்றிக் கற்றவர்; உரை-மரபுகளை உணர்ந்தவர். தம்முடைய ஆசிரியர் நன்னூல் மீது கொண்டிருந்த மதிப்பை

---

[31] நன்னூலுக்கு உரை எழுதுமாறு சாமிநாத தேசிகர் சங்கர நமச்சிவாயரைத் தூண்டி-னார் என்பதற்கு நூல்வழிச் சான்று இல்லை.

[32] அகநானூற்றுக்கும் செய்யுள் நடையில் அமைந்த உரை ஒன்று இருந்ததாகக் (மு. அருணாசலம், 1970. பக். 114-115) கூறப்படுகிறது.

[33] சோம. இளவரசு, இலக்கண வரலாறு, சிதம்பரம், 1963. பக். 143.

அருகில் இருந்து கண்டவர். மயிலைநாதர் உரையையும் இலக்கண விளக்கத்தில் தாம் எடுத்தாண்ட நன்னூல் நூற்பாக்களுக்கு மயிலைநாதர் உரையைத் தழுவி வைத்தியநாத தேசிகர் வரைந்திருந்த உரையையும் சங்கர நமச்சிவாயர் கற்றுத் தேர்ந்தவர். அதனால் அவற்றின் நிறை குறைகளை அவர் நன்றாக அறிந்திருந்தார். எனவே நன்னூலுக்குப் புதிய உரை ஒன்றை இயற்றும் எண்ணம்[34] இளமையிலேயே அவருக்கு அரும்பியிருக்க வேண்டும். அந்த எண்ணத்துக்கு அவருடைய ஆசிரியரும் ஊக்கம் அளித்திருக்கக் கூடும். அனைத்திற்கும் மேலாக, மருதப்பன் என்னும் ஊற்றுமலைப் புரவலர்,

**"நன்னூற் குரைநீ நவையறச் செய்து**
**பன்னூற் புலவர்முன் பகர்தி"**

என்று (பாயிர உரை) அவரைக் கேட்டுக்கொண்டார். இவ்வாறு கல்விச் சூழலும் புலவர் தொடர்பும் புரவலர் அரவணைப்பும் சங்கர நமச்சிவாயப் புலவருக்கு ஒருங்கே வாய்த்திருந்தன. அதனால் அவருடைய எண்ணம் ஈடேறியது; புலமை புலப்பட்டது; நன்னூலுக்கு நல்லதொரு விருத்தியுரை அமைந்தது.

சங்கர நமச்சிவாயர் உரையே நன்னூலுக்கு எழுந்த உரைகளுள் சிறந்தது என்பதில் இருவேறு கருத்துகளுக்கு இடம் இல்லை. அவர் உரை மூலநூலின் உட்பொருளை முழுமையாக விளக்கத் தக்கது; அழகான உரைநடையில் அமைந்தது; தெளிவான பொழிப்புரை, கருத்தாழம் மிக்க நயவுரைப் பகுதிகள், பொருத்தமான உதாரணப் பாடல்கள், தருக்கநெறி தவறாத வினாவிடைகள், மனதில் நிற்கும் உவமைகள், மாற்றார் மதிக்கும் மறுப்புரைகள் முதலிய விருத்தியுரைப் பண்புகளைக் கொண்ட பேருரை. எனவே அவருடைய உரையைத் தமிழுலகு இருகை ஏந்தி ஏற்றுக்கொண்டது; தமிழ் மாணவர்கள் விரும்பிக் கற்றனர். சிவஞான முனிவரைப் போன்ற ஆசிரியர்கள் அவர் உரையைக் கற்பித்துச் சுவை கண்டனர்; பயன் கொண்டனர்.

இலக்கண நூல்கள் கூறும் விருத்தியுரைப் பண்புகள் அனைத்தும் அவருடைய உரையில், ஒவ்வொரு நூற்பாவுக்கும் அமைந்துள்ளன என்று சொல்ல முடியாது. என்றாலும் உரை நெடுக இப்பண்புகள் விரவிக் கிடப்பது உண்மை. உதாரணத்துக்கு, **"ஏற்கு மெவ்வகைப் பெயர்க்கும்"** (நன். 291) என்ற நூற்பாவைக் குறிப்பிடலாம். சூத்திரக் கிடக்கை முறையில் அமைந்த பொழிப்புரை, முன்னும் பின்னும் உள்ள நூற்பாக்களோடு இந்நூற்பா கொண்டுள்ள பொருளியைபு, நூற்பாவின் தொடரியல்

[34] **இலக்கண விளக்கத்தைத் தாழ்வுபடுத்தும் குறுகிய நோக்கத்தில் திருவாவடுதுறை ஆதீனத்தார் நன்னூலுக்குப் புதிய உரை எழுதுமாறு சங்கர நமச்சிவாயரைத் தூண்டினர் (சி. வை. தாமோதரம் பிள்ளை, 1889. பதிப்புரை பக். 7) என்றும் சொல்லப்படுகிறது.**

முடிபு, மூலபாடச் சொற்களில் புதைந்துள்ள பொருளை விளக்கும் நயவுரை, பிற நூல் கோட்பாடுகள், வேறுரை, மறுப்புரை முதலிய உரை உறுப்புகள் இந்நூற்பாவின் உரையில் ஒட்டு மொத்தமாக அமைந்துள்ளன. சங்கர நமச்சிவாயர் உரையை உணர்ந்து படிப்போர்க்கு இத்தகைய உரைப் பகுதிகள் தேடாமலே கிடைக்கும்.

சங்கர நமச்சிவாயரின் உரைநடை இயல்பானது. அவருடைய பொழிப்புரைக்குத் தெளிவூட்டுவது இந்த நடையே. பொதுவாக அவரது பொழிப்புரை நூற்பாவின் சொற்கிடக்கை முறையிலேயே அமையும். நூற்பாவின் கிடக்கை முறைக்கு மாறாகச் சொற்றொடர்களை மாற்றிப் பொழிப்புரை எழுதுவதை அவர் இயன்ற வரையில் தவிர்ப்பார். இன்றியமையாத இடங்களில் மட்டும் அவர் சொல் வருவித்து எழுதுவார். தாம் வருவிக்கும் சொற்களுக்கு அவர் விளக்கம் கூறத் தவறமாட்டார். காட்டாக, **"அன்ஆன் அள்ஆள்"** (நன். 140) என்னும் நூற்பாவில் வினையின் விகுதி என்ற தொடருக்குத் தெரிநிலை வினையின் விகுதிகள் என்று அவர் சொல் வருவித்துப் பொருள் கூறுவார். அவ்வாறு தாம் வருவித்த சொல்லுக்குப், **"பெயரினுஞ் சில என்ற மாத்திரையின் குறிப்புவினையினும் சில என்பது கூறாதே அமைதலின் இங்ஙனம் வினை என்றது அவ்விரண்டும் ஒழிந்த தெரிநிலைவினை என்பது பெற்றாம்."** என்று அவர் காரணம் காட்டி விளக்குவார்.

மூலபாடத்தில் அமைந்துள்ள சொற்களுக்கு நயவுரை கூறி விளக்குவதில் சங்கர நமச்சிவாயர் வல்லவர். **"பதசாரம் எழுதுவதில் இவருக்கு யாரும் இணை இல்லை"** என்று தண்டபாணி தேசிகரும் (1957. முகவுரை பக். 23) இதனை உணர்ந்து எழுதுவார். சொல்லதிகாரத்தின் முதல் நூற்பாவுக்குத், **"தோன்றி அழியும் மாலைய என்பார், 'சகம்' என்றும் உலகமே உருவம் ஆயினான் உயிர் இன்புறுவதே தான் இன்புறு-வது என்பார் அக்கடவுள் முடிமேல் நிழற்றும் குடையை முச்சகத்திற்கும், 'நிழற்றும்' என்றும் நிறைந்த தண்ணளியை உடையன் என்பார் அதனை உவமை முகத்தால் குடைமேல் வைத்து, 'முழுமதி முக்குடை' என்றும் சுதந்திரமின்றித் தோன்றி அழியும் உயிரும் பிறவும் ஆகிய சகத்திற்கு அவ்வாறு தோன்றி அழியான் தலைவனாக வேண்டும் என்பார், 'அச்சுதன்' என்றும் நம் செயல் அன்று என்பார், 'அடிதொழு தறைகுவன்' என்றும் வரையறைப்படாத பெருமையை உடையது என்பார் அவ்வாற்றல் தோன்றச், 'சொல்' என்றும் கூறினார்."** (நன். 258) என்று அவர் வரையும் நயவுரை இதற்கு நல்ல உதாரணம். இது போன்ற நயவுரைப் பகுதிகளை அவர் உரையில் பல இடங்களில் (நன். 265, 289, 291, 348, 351) காணலாம்.

சங்கர நமச்சிவாயர் தமிழ் இலக்கியங்களையும் இலக்கணங்களையும் ஆழ்ந்து கற்றவர். அவருடைய இலக்கியப் பயிற்சி இளம்பூரணர், நச்சினார்க்கினியர் போன்ற தொல்காப்பிய உரையாசிரியர்களோடு ஒருங்கு வைத்து எண்ணத் தக்கது. சங்க இலக்கியங்கள், கீழ்க்கணக்கு நூல்கள், காப்பியங்கள், திருமுறைகள், தொல்காப்பியம், இறையனார் அகப்பொருள், புறப்பொருள் வெண்பாமாலை போன்ற நாற்பதுக்கு மேற்பட்ட நூல்களிலிருந்து பொருத்தமான மேற்கோள்களை அவர் எடுத்தாளுவார். இத்தகைய நூற்பயிற்சி ஒரு நல்ல உரையாசிரியனின் அடிப்படைத் தகுதி என்பதையும் உதாரணமும் ஆசிரிய வசனமும் உரையின் இருகண்கள் என்பதையும் சங்கர நமச்சிவாயர் நன்றாக அறிவார். ஆகவே சிறந்த உதாரணப் பாடல்களால் தமது உரையை அவர் அழகுபடுத்தியுள்ளார். ஒரு நூலின் பல பாடல்களை ஒரு நூற்பாவிலும் ஒரே பாடலை ஒன்றுக்கு மேற்பட்ட சூத்திரங்களிலும் எடுத்துக்காட்டுவது, இசையெச்சத்தை விளக்கும் பகுதியில் (நன். 360) குறட்பாவுக்கு விரிவுரை கூறுவது முதலியவற்றால் இலக்கிய உதாரணங்களுக்கு அவர் சிறப்பிடம் கொடுப்பது தெரிய வரும். அவருடைய உதாரணங்களில் பெரும்பாலானவை அகநானூறு, புறநானூறு, திருக்குறள், நாலடியார், சீவக சிந்தாமணி போன்ற நூல்களைச் சார்ந்தன. இன்னொரு கருத்தும் இங்கே கருதப்பட வேண்டும்.

கருத்து விளக்கத்துக்கும் ஒப்புமைக்கும் இலக்கண உரையாசிரியர்கள் தங்கள் உரைகளில் எண்ணற்ற உதாரணப் பாடல்களையும் நூற்பாக்களையும் மேற்கோள் காட்டுவது உரைமரபு. ஆனால் ஒரு உரையாசிரியர் எடுத்தாளும் மேற்கோள்கள் அனைத்தையும் அவரே மூலநூல்களை நேரில் பார்த்து எடுத்துக்காட்டியதாகக் கொள்ள முடியாது; கொள்ளவும் கூடாது. களவியல் உரையாசிரியர், இளம்பூரணர் போன்ற பழைய உரையாசிரியர்களைத் தவிர மயிலைநாதர் உள்ளிட்ட பிற உரையாசிரியர்கள் எல்லோரும் தாம் காட்ட வேண்டிய மேற்கோள்களைப் பழைய உரைகளிலிருந்தும் வாரிக்கொண்டனர். உதாரணம் கருத்தை விளக்க உதவும் கருவி. உரைக்குத் தெளிவும் சுவையும் தருவதால் காரணம் இல்லாமல் உரையாசிரியர்கள் உதாரணங்களை மாற்றுவதில்லை. மாற்றுவதால் உரையின் தெளிவு குறையலாம்; உரையைப் பிறழ உணரும் வாய்ப்பு ஏற்படலாம். அதோடு மனப்பாடக் கல்விமுறைக்கும் இம்மாற்றம் உதவாது. எனவே ஒருவர் காட்டிய உதாரணங்களையே வேறொரு உரையாசிரியரும் காட்டுவதுண்டு. இது வழிவழியாக வரும் மரபு.

எல்லா இலக்கணக் கருத்துகளுக்கும் ஏற்ற உதாரணங்கள் கிடைப்பதில்லை. காட்டாக உம்மைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை இலக்கியத்தில்

அருகி வருவதால் அதற்கு உதாரணம் கிடைப்பது அரிது. எனவே, 'தகரஞாழல்' என்று இளம்பூரணர் (தொல். எச்ச. 22 உரை) அதற்கு எடுத்துக்காட்டிய ஒரு உதாரணத்தையே[35] உரையாசிரியர்கள் பலரும் எடுத்துக்காட்டுவார்கள். ஆகவே ஒரு உரையில் உள்ள நல்ல உதாரணங்களை இன்னொரு உரையாசிரியர் எடுத்தாளும் உரைநெறி புதிது அல்ல. சங்கர நமச்சிவாயரும் இந்த நெறியைப் பின்பற்றியவரே. செய்யுளுக்கு வரையறை கூறும் நூற்பாவில் (நன். 268) சங்கர நமச்சிவாயர் காட்டும் திருக்கோவையார் பாடல் இலக்கண விளக்கத்தில் (நூ. 169) வைத்தியநாத தேசிக-ரால் காட்டப்பட்ட உதாரணம். அதனால் சங்கர நமச்சிவாயர் காட்டியுள்ள செய்யுள், நூற்பா ஆகிய அனைத்தும் மூலநூல்களிலிருந்து அவரே முயன்று தேடி எடுத்தவை என்று எண்ணக் கூடாது. மயிலைநாதர் உரையோடு சங்கர நமச்சிவாயர் உரையை ஒப்பிடுவோர்க்கு இது தெற்றெனத் தெரிந்துவிடும். உதாரணமாக, **"வினைமுற் றேவினை"** என்னும் நூற்பாவின் உரையில் மயிலைநாதர் (நூ. 350) எடுத்துக்காட்டிய முப்பதுக்கு மேற்பட்ட இலக்கிய உதாரணங்களையும் சங்கர நமச்சிவாயர் தமது உரையில் (நூ. 351) எடுத்தாளுவார். இதுபோல அவர் வேறு சில இடங்களிலும் (நூ. 440, 441, 457, 458, 459) மயிலைநாதர் காட்டிய உதாரணங்களைத் தழுவிக்கொள்வார்.

இந்த உண்மையை அறவே எண்ணிப் பார்க்காமல், சங்கர நமச்சிவாயர் உரையில் உள்ள மேற்கோள்களை மட்டுமே ஆதாரமாகக் கொண்டு, அவர் காலத்தில் வழங்கிய நூல்கள், வழக்கங்கள் முதலியவற்றை எல்லாம் ஆராய முற்படக் கூடாது. காட்டாகச் சங்கர நமச்சிவாயர் பத்து அகத்தியச் சூத்திரங்களைத் தம்முடைய உரையில் (நன். 260, 265, 291, 295, 297, 300, 323, 327, 340, 342) எடுத்தாளுகிறார். **"இதனால் இவர் காலத்தில் அகத்தியம் என்ற பெயரில் ஓர் இலக்கண நூல் உலாவி இருக்கிறது என்பதுவும் அவ்விலக்கண நூலை இவர் துறைபோகக் கற்றிருக்கிறார் என்பதுவும் புலனாகின்றன."** என்று கூறுவது[36] பொருந்தாது. இந்த அகத்தியச் சூத்திரங்கள் பத்தும் மயிலைநாதரால் எடுத்தாளப்பட்டவை. அவர் எடுத்தாளாத அகத்தியச் சூத்திரம் ஒன்றைக் கூடச் சங்கர நமச்சிவாயர் எடுத்தாளவில்லை. எனவே சங்கர நமச்சிவாயர் இச்சூத்திரங்களை எல்லாம் அகத்தியத்தைப் பார்த்து எடுத்துக்-காட்டினார் என்பதை விடப் பழைய உரையாகிய மயிலைநாதர் உரையிலிருந்து எடுத்திருப்பார் என்று கொள்வதே ஏற்புடையது. மேலும் 17-ஆம் நூற்றாண்டில்

---

[35] இக்கருத்து திருக்குறள் மேற்கோள் விளக்கத்தில் (அ. தாமோதரன், ஹைடெல்-பெர்க், 1970. பக். 53-54) விளக்கப்பட்டுள்ளது.

[36] க. ப. அறவாணன், 1977. பக். 128.

அகத்தியம் வழக்கில் இருந்தது என்னும் புனைகதையை இலக்கிய வரலாறு ஏற்றுக்-கொள்ளாது.

உரையின் நடுநடுவே வினா எழுப்பி விடை கூறுவது உரைநெறி. ஆசிரியரும் மாணவரும் நேருக்கு நேர் உரையாடுவது போன்ற உணர்வை உருவாக்கும் இந்த நேரிய முறை சங்கர நமச்சிவாயரின் உரையில் இயல்பாக அமைந்துள்ளது. காட்டாக உத்தியை விளக்கும் இடத்தில், **"மதத்தினுள்ளும் அழகினுள்ளும் வருவன சிலவற்றை உத்தியுள்ளும் கூறியது என்னை எனின் கொள்கை வகையான் மதம் என்றும் சிறப்பு வகையான் அழகு என்றும் இம்மதம், அழகு முதலிய எல்லாம் புத்திநுட்பத்து அமையும் வகையான் உத்தி என்றும் கூறப்படும் என்க. அங்ஙனம் ஆயின் மதம், அழகு எல்லாவற்றையும் உத்தியின்பாற் படுத்துக் கூறாது, சிலவற்றைக் கூறியது என்னை எனின் வரம்பின்றி வரும் உத்தியுள், தலைமைபற்றிக் கூறும் முப்பத்திரண்டில் வந்தன கூறினார் என்க."** (நன். 14) என்று மதம், அழகு, உத்தி ஆகியவற்றை வினாவிடைகளால் அவர் வேறுபடுத்தி விளக்குவதைக் குறிப்பிடலாம். இந்த விளக்க முறையைத் தம்முடைய உரையில் வேறு பல இடங்களிலும் (நன். 109, 152, 153, 156, 161, 162) அவர் கையாளுவார்.

இலக்கணக் கருத்துகளை அழகான உவமைகளால் சுவைபட விளக்குவது சங்கர நமச்சிவாயருக்குக் கைவந்த கலை. ஆய்தம் உயிர்களோடும் மெய்களோடும் கூடியும் கூடாதும் அலிபோல் நிற்கும் (நன். 60) என்றும் பாலன் விருத்தன் ஆனாற்போலக் குறிலது விகாரமே நெடில் (நன். 72) என்றும் எழுத்தால் அமையும் சொல் மலரால் அமையும் மாலை (நன். 128) என்றும் குடத்தின்கண் மண்போல் வினையாகிய காரியத்தின்கண் முதற்காரணமாகிய செயல் உண்டு (நன். 321) என்றும் அவர் எடுத்துக்-காட்டும் உவமைகள்[37] நெஞ்சில் நிலைப்பன. சில சமயங்களில் ஒரு இலக்கணக் கருத்தை இன்னொரு கருத்தோடு அவர் ஒப்புமை காட்டுவதும் உண்டு. பண்புப் பகாப்பதங்களின் மைவிகுதியை விளக்கும் இடங்களில் (நன். 135, 136) இம்முறையைக் காணலாம். மெய்யெழுத்து அகரமின்றி இயங்காது; அதுபோலப் பண்புப் பகாப்-பதம் மைவிகுதியின்றி இயங்காது. மெய்யோடு உயிர் புணரும் போது அந்த அகரம் நீங்கிவிடும்; அதுபோலப் பண்படியோடு வேறு விகுதி புணரும் போது மைவிகுதி நீங்கிவிடும். இக்கருத்துகளை அவர் தொல்காப்பிய நூற்பாவைச் சான்று காட்டி உவமிப்பது படிப்பவர் நெஞ்சில் பசுமரத்தாணிபோலப் பதிந்துவிடும்.

---

[37] **அவர் உரையில் காணப்படும் உவமைகளைச் சாமிநாதையர் (1935. பக். xxiv) எடுத்துக்காட்டுவார்.**

சங்கர நமச்சிவாயரின் மறுப்புரை அமைப்பு அவர் உரைநெறியின் மற்றொரு சிறப்பியல்பு. பிறருடைய உரைகளை மறுக்கும் போது வெவ்வேறு உத்திமுறைகளை அவர் பயன்படுத்துவார். மூலபாடச் சான்று (நன். 358), மூலநூல் விதிகள் (நன். 254), நூற்பாக்களின் இயைபு (நன். 124), முதல்நூல் ஆணை (நன். 316), இலக்கிய வழக்கு (நன். 397), காரணங்களின் தொகுப்பு[38] (நன். 398), அழகான உவமைகள் (நன். 152) முதலியவற்றை எடுத்துக்காட்டி மறுப்பது அவருடைய முறைகளில் சில. என்றாலும் தம்முடைய ஆசிரியரைப் போலக் கடுமையான நடையை அவர் கையாளவில்லை. பொருந்தா உரைகளைப் பொருத்தமான உவமைகளால் மறுப்பதற்கு நல்ல உதாரணம், **"இனைத்தென் றறிபொருள்"** (நன். 399) என்னும் பொதுவியல் நூற்பாவின் உரை. பவளக்கோட்டு நீலயானை போன்ற உலகில் இல்லாப் பொருள் காலத்தோடு பட்டது அல்ல. அதனால் அதனை வினையோடு சேர்த்துக் கூறும் போது காலப்பெயரோடு முற்றும்மை கொடுத்துப் பவளக்கோட்டு நீலயானை என்றும் இல்லை என்று கூற வேண்டும் என்பார் சங்கர நமச்சிவாயர். இவ்வாறன்றிக் காலத்தோடு பட்டதுபோல் பவளக்கோட்டு நீலயானை பண்டும் இல்லை என்று எச்சவும்மை கொடுத்து மயிலை-நாதர் கூறுவார். அவ்வாறு கூறுவது, **"யானை குடத்திலும் இல்லை; குழிசியிலும் இல்லை என்பது போலும்."** என்று நகைச்சுவை தோன்றச் சங்கர நமச்சிவாயர் மறுப்பார். தொகுத்துச் சொன்னால் சங்கர நமச்சிவாயர் உரை தோன்றியதால் மூலநூல் மேலும் விளக்கம் பெற்றது; பவணந்தியின் ஆக்கத்திறன் புலப்பட்டது; இலக்கணக் கலை வளர்ந்தது; உரைநெறி செழித்தது; பழைய உரைமரபு தொடர்ந்தது.

சங்கர நமச்சிவாயர் உரையோடு தொடர்புள்ள ஒருசில கருத்துகளையும் இங்கே குறிப்பிட்டாக வேண்டும். தமிழிலக்கணக் கல்வியில் வடமொழியின் செல்வாக்கு வளர்ந்திருந்த காலத்தில் வாழ்ந்த சங்கர நமச்சிவாயர் சாமிநாத தேசிகரின் மாணவர். ஆகவே அவர் வடமொழியை ஓரளவேனும் கற்றிருக்க வாய்ப்பு உண்டு. அவர் உரையில் (நன். 62, 133, 134, 269) காணப்படும் வடமொழிக் கருத்துகள் இதை உறுதிப்படுத்தும். என்றாலும், **"தமிழ்நூற் பயிற்சி ஒன்றுமே உடையார்"** என்று சிவஞான முனிவர் (நன். 125) அவரிடம்[39] குறை காண்பார். சங்கர நமச்சிவாயர் எந்த வடமொழி நூலுக்கும் வியாக்கியானம் எழுத முற்படவில்லை; ஒப்பியல் நோக்கில் வடமொழி

---

[38] அவர் இம்முறையைத் தம்முடைய ஆசிரியரிடம் கற்றிருக்கக் கூடும். பவணந்தி முனிவர் ஓதிய தெரிநிலை விகுதிகள் (நன். 140) சிறப்பு விகுதிகளே என்று நிறுவுதற்குச் சாமிநாத தேசிகர் பத்துக்கு மேற்பட்ட காரணங்களை அடுக்கிக் காட்டுவது (இல. கொ. 117 உரை) இக்கருத்தை மெய்ப்பிக்கும்.

[39] இவ்வாறே, "தமிழ்நூல் ஒன்றே வல்ல உரையாசிரியர்" (தொல். விரு. பக். 46) என்று அவர் இளம்பூரணரிடத்தும் குறை காண்பார்.

இலக்கண மரபையும் கூறும் வீரசோழியம், பிரயோக விவேகம் போன்ற நூல்களுக்கு விளக்கவுரை எழுதவும் முயலவில்லை; வடமொழி நூல் எதையும் தமிழாக்கம் செய்யவும் அவர் முனையவில்லை. நற்றமிழ் இலக்கணமாகிய நன்னூலுக்கே அவர் உரை இயற்றத் துணிந்தார். ஆகவே வடமொழிப் புலமையும் வடநூல் பயிற்சியும் சங்கர நமச்சிவாயருக்கு மிகுதியாக இல்லை என்பது ஒரு குறை ஆகாது. வடநூல் உணர்ந்தார்க்கே தமிழியல்பு விளங்கும் என்பது சிவஞான முனிவர் (தொல். விரு. பக். 47) கொள்கை. அதனால் அவர் சங்கர நமச்சிவாயரை இவ்வாறு குறைத்து மதிப்பிடுகிறார். ஆனால் அது நடுநிலையான மதிப்பீடு அல்ல.

சங்கர நமச்சிவாயர் வரலாற்றை விரிவாக ஆராய்ந்த சாமிநாதையர், **"வடநூற் கடலையும் தென்றமிழ்க் கடலையும் நிலைகண்டு உணர்ந்த ஸ்ரீ சிவஞான யோகிகள் இருமொழிக்கண்ணும் தாம் ஆராய்ந்தறிந்த அரிய விதிகளை அமைத்தற்குத் தக்க இடம் என்று கொள்வார் ஆயின் சங்கர நமச்சிவாயருடைய உரையின் பெருமையைக் கூற வல்லவன் யானோ?"** (1925. முகவுரை பக். 22) என்று தமக்கே உரிய முறையில் முடிவுரை[40] கூறுகிறார். அப்படி ஒன்றும் அரிய இலக்கண விதிகளைச் சங்கர நமச்சிவாயர் உரையில் சிவஞான முனிவர் புதிதாக அமைத்துவிடவும் இல்லை; அவற்றால் சங்கர நமச்சிவாயர் உரையின் பெருமை உயர்ந்துவிடவும் இல்லை என்பதே உண்மை.

ஒரு பேருரையின் நடுநடுவே முனிவர் சேர்த்தவை சிற்சில அடிக்குறிப்புகளே; அவற்றுள்ளும் செம்பாதி பிற உரைகளிலிருந்து எடுக்கப்பட்டவை என்பது அடுத்த பகுதியில் சான்றுகளோடு விளக்கிக் காட்டப்படும். உண்மையில், அரிய விதிகளை அமைக்க விரும்புவோர் தனியாக உரை எழுதுவதே நேரிய முறை; சிறப்பு. அதற்குரிய திறமையும் புலமையும் முனிவர்க்கு உண்டு. அவ்வாறு செய்யாமல் சங்கர நமச்சிவாயர் உரையைத் திருத்தியது முனிவர் பெருமைக்குப் பொருந்தவில்லை. உண்மை இவ்வாறு இருக்கவும் நன்னூல் முழுவதற்கும் சிவஞான முனிவர் புத்தம் புதிய உரை ஒன்றை இயற்றிவிட்டதுபோல் இலக்கிய வரலாறுகள் அவரைப் போற்றுவது விளங்கவில்லை. சங்கர நமச்சிவாயர் உரையோடு சிவஞான முனிவர் வலிந்து கொண்ட தொடர்பால் சிறப்பும் சீர்மையும் சிவஞான முனிவருக்கே பெருகின; சங்கர நமச்சிவாயருக்கு அல்ல. இக்கருத்தை ஆய்வாளர்கள் தெளிவுபடுத்தத் தயங்கிவிட்டனர்.

---

[40] **ச. தண்டபாணி தேசிகர் (நன்னூல் விருத்தியுரை, திருவாவடுதுறை, 1957. பக். 23), க. ப. அறவாணன் (1977. பக். 160), கி. நாச்சிமுத்து (1986. பக். 72), க. விநாயகம் (சிவஞான முனிவர் உரைத்திறன், மயிலம், 1991. பக். 18) முதலியோரும் இக்கருத்தை எடுத்து எழுதுவார்கள்.**

தமிழ் உரைமரபை இலக்கண உரை, இலக்கிய உரை, சமயச் சார்பான உரை என்று மு. அருணாசலம்[41] மூன்றாக வகைப்படுத்துகிறார். அப்பகுதியில், "**இலக்கிய இலக்கணப் பேருரைகள் 15-ஆம் நூற்றாண்டோடு நின்றுபோகின்றன. பிறகு தோன்றியவை யாவும் சிறப்புடைய சைவ சாத்திர உரைகளே அன்றி இலக்கிய இலக்கண உரைகள் எழவில்லை.**" என்று அவர் முடிவு கூறுகிறார். பதினைந்தாம் நூற்றாண்டோடு பேருரைகள் நின்றுபோகின்றன என்பதை விடவும் குறைந்து-போகின்றன என்று முடிவு கூறுவது இன்னும் பொருத்தம். பதினாறாம் நூற்றாண்டில் மாறனலங்காரத்திற்கு மிகச் சிறந்ததோர் இலக்கண உரை தோன்றியதாக அவரே[42] கூறியுள்ளார். அடுத்த நூற்றாண்டில் சங்கர நமச்சிவாயர் நன்னூலுக்கு ஒரு பேருரை இயற்றியுள்ளார். பரிமேலழகர், சேனாவரையர் உரைகளோடு ஒப்பிடத்தக்க சங்கர நமச்சிவாயரின் நன்னூல் விருத்தியுரையை ஊன்றிப் படித்திருந்தால் அவர் அந்த முடிவுக்கு வந்திருக்கமாட்டார் என்று தோன்றுகிறது.

பதினெட்டாம் நூற்றாண்டின் உரைவேந்தர் சிவஞான முனிவர். அவரும் கூட எந்தப் பழந்தமிழ் இலக்கிய இலக்கணத்துக்கும் முழுமையாக உரை இயற்றவில்லை என்பதால் 17-ஆம் நூற்றாண்டுக்குப் பின்னர் இலக்கிய இலக்கணப் பேருரைகள் எதுவும் தோன்றவில்லை என்பதே பொருந்தக் கூடியது. ஆகவே எழுநூறு எண்ணூறு ஆண்டுகளாகத் தமிழில் தழைத்து வளர்ந்த பழைய உரைமரபு சங்கர நமச்சிவாயர் உரையோடு நின்றுவிட்டது என்பது ஏற்கத் தக்கது. உரை வரலாற்றுக்கும் இம்முடிபே ஒத்துவரக் கூடியது.

சங்கர நமச்சிவாயர் நன்னூலுக்கு வரைந்தது விருத்தியுரை. சங்கர நமச்சிவாயர் இயற்றிச் சிவஞான முனிவரால் திருத்தப்பட்ட உரைக்குப் புத்தம் புத்துரை என்ற சிறப்புப் பெயர் இருந்தாலும் அதையும் விருத்தியுரை என்று அழைப்பது பெருவழக்கு. புத்தம் புத்துரையில் சங்கர நமச்சிவாயர் உரை எது? சிவஞான முனிவர் திருத்திய உரைப் பகுதி எது என்று அறியுமாறு அடையாளம் செய்து தண்டபாணி தேசிகர் (1957) திருத்தமாகப் பதிப்பித்தார். எது யாருடைய உரை என்பதில் அதுவரை இருந்து-வந்த குழப்பம் தேசிகர் பதிப்புக்குப் பிறகு பேரளவில் தீர்ந்தது. ஆனால் அவருக்குப் பின்னால் நன்னூல் விருத்தியுரையைப் பதிப்பித்த சோம. இளவரசு (அண்ணாமலை-நகர், 1981) இந்த நல்ல பதிப்பு முறையை ஏனோ பின்பற்றவில்லை. அதாவது சிவஞான முனிவரின் திருத்தங்களை வேறுபடுத்திக் காட்டத் தேசிகர் இட்டிருந்த

[41] இலக்கிய வரலாறு, பன்னிரண்டாம் நூற்றாண்டு, திருச்சிற்றம்பலம், 1973. பக். 525.

[42] மு. அருணாசலம், இலக்கிய வரலாறு, பதினாறாம் நூற்றாண்டு- இரண்டாம் பாகம், திருச்சிற்றம்பலம், 1975. பக். 193.

உடுக்குறிகளை அவர் முற்றாக நீக்கிவிட்டார். அதனால் மீண்டும் பழைய குழப்பம். அதன் விளைவாக ஒருவர் உரையை இன்னொருவர் உரையாகப் பிறழ உணரும் நிலை ஏற்பட்டுவிட்டது. அது தன்னையும் பாதிக்கும் என்று அவர் அறிந்திருக்கவில்லை.

தமது பதிப்பில் ஒவ்வொரு அதிகாரத்தின் இறுதியிலும் (1981. பக். 225-276; 543-572; 1990. பக். 250-310; 617-651) சோம. இளவரசு விளக்கக் குறிப்புகள் எழுதியுள்ளார். உரையாசிரியர்களின் கருத்துகளுக்கு இப்பகுதியில் விளக்கம் தரும் போது எது சங்கர நமச்சிவாயர் உரை? எது சிவஞான முனிவர் திருத்திய பகுதி என்று அவரால் வேறுபடுத்தி அறிய முடியவில்லை. உதாரணத்துக்காக, 152-ஆம் நூற்பாவுக்கு அவர் கொடுத்துள்ள குறிப்பைப் பார்க்கலாம். இந்நூற்பாவின் உரையில், **"வினைத்தொகை, பண்புத்தொகை, அன்மொழித்தொகை என்னும் அல்வழிப் புணர்ச்சியவாய தொகைநிலைத் தொடர்மொழிகளை ஒருமொழிகள் என்பாரும் உளர். அவர் கூற்றுத் தாய் மலடி என்றாற் போலும்."** என்னும் மறுப்புரையைச் சோம. இளவரசு (1981. பக். 260; 1990. பக். 291) எடுத்துக்காட்டி, அது சிவஞான முனிவர் உரை என்று[43] விளக்குவார். உண்மையில் அது சங்கர நமச்சிவாயர் உரை. இவ்வாறு அவர் பிறழ உணர்ந்த, உணர்த்திய இடங்கள்[44] மிகப் பல. அவற்றை எல்லாம் திருத்தி வெளியிடுவது மாணவர்களுக்கு மட்டும் அல்ல, ஆசிரியர்களுக்கும் நல்லது.

### கூழங்கைத் தம்பிரான்

உரைவளம் கொண்ட நன்னூலுக்குச் சங்கர நமச்சிவாயர் உரைக்குப் பின்னர் வேறு புதிய உரை தோன்றவில்லை என்றால் பலர் வியப்படையக் கூடும். ஆனால் அதுதான் உண்மை. 18-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த கூழங்கைத் தம்பிரானும் சிவஞான முனிவரும் நன்னூல் உரைப்பணியில் ஈடுபட்டார்கள் என்றாலும் இத்துறையில் அவர்களின் பங்களிப்பு மிக மிகக் குறைவு. அவர்கள் இருவரும் மாணவர் புடைசூழ வாழ்ந்த தமிழாசிரியர்கள். நல்ல மாணவர் பரம்பரையை உருவாக்கிய பெருமை இருவருக்கும் உண்டு. எனவே மாணவர்களுக்குப் பயன்படும் வகையில், தாம் பாடம் சொல்லிய உரையை அவரவர் நோக்கில் மாற்றிச் செப்பம் செய்தனர். கூழங்கைத் தம்பிரான் மயிலைநாதர் உரையைச் சுருக்கினார்; அதன் பொழிப்புரைப் பகுதிகளைப் பதவுரையாக மாற்றி எளிமைப்படுத்தினார். முனிவர் சங்கர நமச்சிவாயர் உரையைச் சில இடங்களில் குறைத்தார்; பல இடங்களில் கூட்டினார்; வேறு சில இடங்களில்

---

[43] **இப்பதிப்பின் சிறப்பியல்புக்குச் சான்றாக இந்தப் பிழைப் பகுதியை நா. பாலுசாமி தமது முன்னுரையில் எடுத்துக்காட்டியது அபத்தம்.**

[44] **அவர் தவறாகக் குறித்த பிற இடங்கள்: நூ. 109, 110, 124, 158, 162, 164, 178, 194, 207, 233, 254, 260, 261, 265, 273, 275, 284, 291, 338, 355, 356, 361, 363, 365, 369, 397, 398, 434.**

கூட்டியும் மாற்றியும் திருத்தினார். ஆகவே அவ்விருவரும் நன்னூலுக்குச் சொந்தமாக உரை இயற்றவில்லை; பிறர் உரைகளை மாற்றி அமைத்தனர். தெளிவாகச் சொன்னால் நன்னூல் உரைப்பணியில் அவர்கள் செய்தது ஒரு வகைச் செப்பப் பணி; மூலப் பணி அல்ல.

கூழங்கைத் தம்பிரானும் சிவஞான முனிவரும் ஒத்த காலத்தினர். பதினெட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதி வரை இருவரும் வாழ்ந்துள்ளனர். என்றாலும் யார் எப்போது இந்த உரைமாற்றப் பணியைச் செய்திருக்கக் கூடும் என்று அறுதியிட்டுச் சொல்ல முடியவில்லை. கூழங்கைத் தம்பிரான் தமிழகத்தில் இருந்த போது தமது வாழ்நாளின் முற்பகுதியிலும் சிவஞான முனிவர் காஞ்சிபுரத்தில் ஆசிரியப் பணியில் ஈடுபட்டிருந்த போது, தமது வாழ்நாளின் பிற்பகுதியிலும் இப்பணிகளைச் செய்திருக்கலாம் என்று தோன்றுகிறது. அப்படி என்றால் கூழங்கைத் தம்பிரானின் காண்டிகையுரை 1750-க்கு முன்பும் முனிவரின் புத்தம் புத்துரை 1750-க்குப் பின்பும் எழுந்திருக்கலாம் என்று ஒருவாறு ஊகிக்கலாம். இந்தக் காலமுறையை மாற்றிக் கூறவும்[45] வாய்ப்பு உண்டு.

நன்னூலுக்கு எழுந்த முதல் காண்டிகையின் ஆசிரியர் கூழங்கைத் தம்பிரான். அவர் காஞ்சிபுரத்தில் பிறந்தவர்; தஞ்சைப் பகுதியிலும் ஈழநாட்டிலும் வாழ்ந்தவர். திருவாரூர் மடத்தில்[46] தங்கித் தமிழ் கற்றவர்; கற்பித்தவர். அங்கே நடந்த வன்முறை நிகழ்ச்சியால் அவருக்குக் கை ஊனமாயிற்று என்றும் அதனால் அவருக்குக் கூழங்கைத் தம்பிரான் என்ற பெயர் ஏற்பட்டது என்றும்[47] கூறுவார்கள். அந்த நிகழ்ச்சியால் அவர் மனம் நொந்து தாயகத்திலிருந்தும் சைவத்திலிருந்தும் வெளியேறினார் என்றும் சொல்லப்படுகிறது. தமது வாழ்நாள் முழுதும் ஆசிரியப்பணி[48] ஆற்றிய கூழங்கைத் தம்பிரான் 1795 வாக்கில் உயிர் நீத்தார் என்று ஈழத்தமிழ் இலக்கிய வரலாறுகள் கூறும்.

கூழங்கைத் தம்பிரானின் காண்டிகையுரை முழுக்க முழுக்க மயிலைநாதரின் உரையைத் தழுவியது. பொழிப்புரையாக அமைந்துள்ள மயிலைநாதர் உரையை இளநிலை இலக்கண மாணவர்களுக்கு ஏற்பப் பதவுரையாக அவர் மாற்றிச் சுருக்கினார். அந்த உரையின் நடையையும் தம்பிரான் சிறிதளவு எளிமைப்படுத்தினார். புகுமுக

[45] க. ப. அறவாணன், 1977. பக். 172.

[46] அவர் திருவத்தூர் மடத்தில் தங்கியிருந்ததாகவும் கூறப்படுகிறது.

[47] Simon Casie Chitty, The Tamil Plutarch, New Delhi, 1982. p. 55; மு. வை. அரவிந்தன், 1968. பக். 479; 1995. பக். 570.

[48] அவருடைய மாணவர் பரம்பரையை மயிலை சீனி. வேங்கடசாமி (பத்தொன்பதாம் நூற்றாண்டில் தமிழ் இலக்கியம், சென்னை, 1962. பக். 312) வரைபடமாகக் காட்டியுள்ளார்.

நிலையில், விருத்தியுரைக்கு முன்பாக எளிய பதவுரையைக் கற்பதே நலம் பயக்கும் என்று மாணவர் மனப்பாங்கையும் கற்பித்தல் முறையையும் கருத்தில் கொண்டு கூழங்கைத் தம்பிரான் இந்தக் காண்டிகையுரையை வடிவமைத்திருக்க வேண்டும். மறைந்துபோனதாகக் கருதப்பட்ட இந்த உரையின் கடிதப்பிரதி ஒன்று லண்டன் அருங்காட்சியக நூலகத்தில் பாதுகாப்பாக இருக்கிறது. அந்தச் சுவடியை ஆதாரமாகக் கொண்டு ஹைடெல்பெர்க் பல்கலைக்கழகத் தெற்காசிய நிறுவனம் ஒரு துவக்க நிலைப் பதிப்பை (அ. தாமோதரன், 1980.) வெளியிட்டுள்ளது.

## சிவஞான முனிவர்

சிவஞான முனிவர் திருத்திய புத்தம் புத்துரை தனித்த உரை அல்ல; இந்த உரை முழுமைக்கும் சிவஞான முனிவரே ஆசிரியரும் அல்லர். என்றாலும் தமிழ் கூறும் நல்லுலகம் இந்த உரையை அவர் பெயரால் அழைத்து மகிழ்கிறது. இவ்வுரையைப் பற்றி, **"இது சங்கர நமச்சிவாயர் உரையைப் பெரும்பாலும் தழுவிச் சில சில பகுதிகளை மாற்றி, அரிய வடமொழி தென்மொழி விதிகளை உரிய இடங்களிற் சேர்த்து, திருவாவடுதுறை ஆதீனத்து ஸ்ரீ சிவஞான யோகிகளால் விரிவாக இயற்றப் பெற்றது."** என்றும் (சாமிநாதையர், 1925. முகவுரை பக். 2), **"இவ்வுரையே புலமைக்குப் பெருந்துணையாய், புலவர் புலத்தை அளக்கும் அளவுகோலாய், திருக்குறள், திருக்கோவையார், சங்க இலக்கியங்கள், மெய்கண்ட நூலுரைகள் (ஆகிய) இவற்றைப் படித்துய்ய உதவும் உறுதுணையாய் அமைந்தது."** என்றும் (தண்டபாணி தேசிகர், 1957. முகவுரை பக். 8), **"சிவஞான முனிவர் தமிழ் இலக்கண உலகிற்குச் செய்த பெருந் தொண்டுகளில் ஒன்று நன்னூலுக்கு விருத்தியுரை இயற்றியதேயாம்."** என்றும் (மு. வை. அரவிந்தன், 1968. பக். 423; 1995. பக். 538) புகழ்ந்து கூறுவார்கள். விருத்தியுரையில் அவர் செய்த திருத்தங்களுக்கு இந்தப் புகழ்மொழிகள் பொருந்துமா? மாதவச் சிவஞான முனிவரின் பெரும்புலமைக்குப் புத்தம் புத்துரை[49] உண்மையில் பெருமை தரக் கூடியதா என்று யாரும் ஆராயவில்லை.

---

[49] ஒரு உரையாசிரியர் இயற்றிய உரையில் சில விளக்கக் குறிப்புகளைச் சேர்த்துவிட்டு அதைத் தனித்ததோர் உரையாகத் தமது பெயரால் வழங்கச் செய்யும் நோக்கம் இலக்கண விளக்கச் சூறாவளி எழுதிய சிவஞான முனிவருக்கு இருந்திருக்குமா என்பது மேலும் ஆராயப்பட வேண்டும்.

சங்கர நமச்சிவாயர் உரையோடு நன்னூலைப் பாடம் சொல்லிய காலத்தில் தமது கையேட்டில் சிவஞான முனிவர் ஒப்பியல் நோக்கில் சில கருத்துகளைக் குறித்து வைத்திருக்கக் கூடும். இது பயிற்றாசிரியர்களின் பழக்கம். முனிவரின் இந்தக் கையேடு ஆதீன வட்டத்தில் புத்தம் புத்துரை என்று வழங்கியிருக்கலாம் என்று தோன்றுகிறது.

சிவஞான முனிவர் திருநெல்வேலிப் பாபநாசத்துக்கு அருகில் உள்ள விக்கிரம சிங்கபுரத்தில் பிறந்தவர்; சைவ வேளாள மரபினர். அவருடைய தந்தையின் பெயர் ஆனந்தக்கூத்தர்; தாயின் பெயர் மயிலம்மை. சிவஞான முனிவரின் பிள்ளைப்பெயர் முக்களாலிங்கம். இப்பெயரை முக்காளலிங்கம் என்று[50] பிழையாகக் குறிப்பிடுவோரும் உண்டு. இப்பெயரின் வரலாற்றைப் பழநியப்பனார்[51] விரிவாகக் கூறுவார். அவர் இளமையிலேயே தீக்கை பெற்றவர்; சிவஞானம் என்ற தீக்கைப்பெயரே நாளடைவில் சிவஞானத் தம்பிரான் என்றும் சிவஞான யோகிகள் என்றும் வழங்கிப் பின்னாளில் சிவஞான முனிவர் என்று புலமை உலகில் நிலையாக நின்றுவிட்டது. அவருடைய காலத்தைப் பற்றி முரண்பட்ட கருத்துகள்[52] நிலவினாலும் அவரைப் பதினெட்டாம் நூற்றாண்டினராகக் கொள்வதே பொருத்தம். முகவை இராமாநுச கவிராயரின் ஆசிரியராகிய சோமசுந்தர கவிராயர் முனிவரின் மாணவர் என்ற செய்தி இம்முடிபை உறுதிப்படுத்தும். முனிவர் வாழ்நாள் முழுதும் சமயப் பணியும் தமிழ்ப் பணியும் ஆற்றிய சிவநெறிச் செல்வர். நல்ல மாணவர் பரம்பரையை உருவாக்கிய தமிழ்ப் புலவர். திருவாவடுதுறையிலும் காஞ்சிபுரத்திலும் தம் வாழ்க்கையின் பெரும்பகுதியைக் கழித்த சிவஞான முனிவர் சாலிவாகன சகாப்தம் 1708-இல் (கி. பி. 1785) இறைவன் மலரடி சேர்ந்தார் என்று[53] நம்பப்படுகிறது.

தமிழோடு வடமொழியையும் முற்றக் கற்றுத் தெளிந்த முனிவர் தமிழ் மொழிக்கு ஆற்றிய பணிகள் மிகப் பல. அவர் பல நூல்களைப் படைத்தார்; பல உரைகளை இயற்றினார்; வடமொழியிலிருந்து சில நூல்களை மொழிபெயர்த்தார். முனிவரின் பெயரில் மொத்தத்தில் இருபத்தொன்பது நூல்கள் உள்ளன. நல்ல சிற்றிலக்கிய நூல்களை முனிவர் படைத்திருந்தாலும் அவர் வரைந்த உரைநூல்களே அவருக்குப் பேரும் புகழும் ஈட்டித் தந்தன. அவற்றுள் தொல்காப்பியச் சூத்திர விருத்தியும் சிவஞான மாபாடியமும் தலையாயவை. முனிவரின் இலக்கியப் பயிற்சி, இலக்கணப் புலமை, சமயநூல் அறிவு, வாதத் திறமை, நடை நலம் முதலியவற்றை எடுத்துரைக்க இப்பேருரைகளே அமையும். 18-ஆம் நூற்றாண்டு உரைநடை வரலாற்றின் நாயகர் சிவஞான முனிவரே. தெளிவும் திட்பமும் மிடுக்கும் துடிப்பும் கொண்ட நடையில் சிற்றுரை பேருரைகளை இயற்றி இலக்கிய வரலாற்றில் சிறப்பிடம் பெற்ற முனிவரை

[50] மு. வை. அரவிந்தன், 1968. பக். 416; 1995. பக். 531; எம். சுந்தரேசம் பிள்ளை, நன்னூல் விருத்தியுரை, திருப்பனந்தாள், 1969. பக். 8; க. ப. அறவாணன், 1977. பக். 152.

[51] கி. பழநியப்பனார், மாதவச் சிவஞான யோகிகள், (திருக்கோயில், 25-3), 1983. பக். 3.

[52] க. விநாயகம், 1991. பக். 10.

[53] காஞ்சிப்புராணம், கலாரத்நாகரம், சென்னை, 1910. பக். 29; கா. சுப்பிரமணிய பிள்ளை, சிவஞான சுவாமிகள் வரலாறு, கழகம், சென்னை, 1955. பக். 12.

உரைத் தலைவர் என்று புகழ்வது[54] முற்றிலும் பொருந்தும். தமிழ் உரை வரலாற்றில் கண்டன உரை என்னும் புதுவகையைத் தோற்றுவித்த பெருமையும் முனிவரையே சாரும். சுடுமொழி நிறைந்த கடுநடையைத் தவிர்த்து, நடுநிலையோடு முனிவர் இந்த மறுப்புரைகளை எழுதியிருந்தால் தமிழ் விமர்சனக் கலைக்கு வித்திட்டவராக அவர் விளங்கியிருப்பார். ஆதீனங்களுக்குள் நிலவிய பகையுணர்வால் தூண்டப்பட்டு, இக்கண்டன நூல்களை முனிவர் எழுதியதால் புலமையை விடச் சீற்றமும் செருக்கும் அவற்றில் தலைதூக்கிவிட்டன. இந்தக் குறைபாடு முனிவரின் உரைநெறியில் மதிக்கண் மறுப்போல நிலைத்துவிட்டது.

மறுப்புரையும் கண்டனமும் எழுதுவதில் முனிவரின் முனைப்பு பெயர் பெற்றது என்றாலும் விருத்தியுரையின் திருத்தப் பகுதிகளில் அவை மிகுதியாக இடம் பெறவில்லை. தொல்காப்பியச் சூத்திர விருத்தியிலும் இலக்கண விளக்கச் சூறாவளியிலும் உள்ளவையே புத்தம் புத்துரையின் திருத்தப் பகுதிகளில் (நன். சிற. பாயி., 91, 94, 284, 290, 293) மீண்டும் தலைகாட்டுகின்றன. அவற்றைத் தவிர மயிலைநாதரையும் (நன். 137) சங்கர நமச்சிவாயரையும் (நன். 125, 295) மறுத்துள்ள பகுதிகளில் அவர் காட்டும் காரணங்களில் வலிவும் இல்லை; கையாண்ட நடையில் கடுமையும் இல்லை. இதோடு தொடர்புள்ள இன்னொரு கருத்தும் நினைவுக்கு வருகிறது.

பிற உரைகளிலிருந்து சிவஞான முனிவர் எடுத்து எழுதிய உரைப் பகுதிகள் புத்தம் புத்துரையில் கலந்திருப்பதால் அவருடைய மறுப்புரைகளை ஆராயும் போது பலர் தடுமாறுகின்றனர். குறிப்பு வினைமுற்றுகளைப் பற்றிய நூற்பாவுக்கு முனிவர் வழங்கியுள்ள திருத்தம் இதற்கு ஒரு நல்ல உதாரணம். அப்பகுதியில், **"இங்ஙனம் வரும் செய்யுட்கு எல்லாம் நச்சினார்க்கினியர், சேனாவரையர், பரிமேலழகர், உரையாசிரியர் முதலாயினார் முற்றாயும் எச்சமாயும் பொருள் உரைக்கின் வழுவாம் என்று கருதி வியங்கோட்பொருட்டு என்றும் விதிப்பொருட்டு என்றும் தகுதிப்பொருட்டு என்றும் வேண்டுவ என்றும் தமக்கு வேண்டியவாறே பொருள் எழுதிச் சொற்குணம் வாளா போயினர்."** (நன். 339) என்று ஒரு நீண்ட தொடர் காணப்படுகிறது. இந்தத் தொடரை ஆதாரமாகக் கொண்டு சிவஞான முனிவரின் உரைநெறியைச் சிலர்[55] வரையறுப்பார்கள். ஆனால் இத்தொடர் எழுத்து மாறாமல் இலக்கணக் கொத்திலிருந்து (இல. கொ. 85 உரை) எடுக்கப்பட்டது. அதனால் இது சாமிநாத தேசிகரின் உரைநெறி ஆகுமே தவிரச் சிவஞான முனிவரின் நெறி ஆகாது.

---

[54] கா. சுப்பிரமணிய பிள்ளை, 1955. பக். 3.

[55] க. ப. அறவாணன், 1977. பக். 165; இரா. இளங்குமரன், 1988. பக். 300; க. விநாயகம், 1991. பக். 44.

இனி முனிவரின் இலக்கண உரைகளைப் பார்க்கலாம். தொல்காப்பியச் சூத்திர விருத்தி, இலக்கண விளக்கச் சூறாவளி, விருத்தியுரைத் திருத்தம் என்பவை அவர் பெயரால் வழங்கும் இலக்கண உரைகள். இவை மூன்றும் மூன்று திறத்தன. ஒன்று பேருரை; மற்றொன்று கண்டன உரை; மூன்றாவது திருத்த உரை. தொல்காப்பியச் சிறப்புப் பாயிரம், முதற்சூத்திரம் ஆகிய இரண்டிற்கும் முனிவர் இயற்றிய பேருரையே தொல்காப்பியச் சூத்திர விருத்தி. நெஞ்சை அள்ளும் நடையும் நினைவில் பதியும் கருத்துகளும் கொண்ட இந்நூல் புலவர்க்கு விருந்து. குறைநூல் எனினும் முனிவரின் இலக்கணப் புலமையை எடுத்துக்காட்டுவது இதுவே. இதற்கு முற்றிலும் மாறுபட்டது இலக்கண விளக்கச் சூறாவளி. இது அளவால் மிகவும் சுருங்கியது; வெறும் கண்டனக் குறிப்புகளின் கோவை; ஆதீனங்களுக்கு நடுவே நடந்த போராட்டத்தின் விளைவாக, வேண்டும் என்றே எழுதப்பட்ட குறுநூல்; துண்டுப் பிரசுரம் என்றாலும் தவறு ஆகாது. இக்குறிப்புகளை இலக்கண விளக்கத்தில் இணைத்து எழுதாமல், முனிவர் தனியாக எழுதியதன் உள்நோக்கம் உய்த்துணரத் தக்கது. **'அநியாய கண்டனம்'** என்ற மறுபெயர்[56] இதற்கு மெத்தவும் பொருந்தும். இவ்விரண்டு நூல்களிலிருந்தும் எல்லா வகையிலும் வேறுபட்டது விருத்தியுரைத் திருத்தம். மற்ற இரண்டையும் போல இது தனி நூல் அல்ல; வெறும் திருத்தக் குறிப்புகளின் திரட்டு. இதனை ஆராய்வதற்கு முன்பாக இந்நூல்கள் மூன்றும் எழுந்த வரிசை முறையை அறிவது நல்லது.

இந்த நூல்களின் காலவரிசை குறித்துக் கருத்து வேறுபாடு[57] காணப்படுகிறது. சாமிநாதையர் குறிப்பிடும் (1925. முகவுரை பக். 3) மரபுவழிச் செய்தி தொல்காப்பியச் சூத்திர விருத்தி, இலக்கண விளக்கச் சூறாவளி, புத்தம் புத்துரை என்று வரிசைப்படுத்தும். இதற்கு மாறாக நெல்லையப்பப் பிள்ளையின்[58] கருத்தைத் தழுவி, முதன் முதல் எழுதப்பட்டது புத்தம் புத்துரை; இறுதியாக எழுதப்பட்டது தொல்காப்பியச் சூத்திர விருத்தி என்று கூறுவார் க. விநாயகம். இலக்கண விளக்கச் சூறாவளியில் இருபதுக்கு மேற்பட்ட இடங்களில் முனிவர் தொல்காப்பியச் சூத்திர விருத்தியைக் குறிப்பிட்டுள்ளார். எனவே சூறாவளிக்கு முந்தியது சூத்திர விருத்தி என்பது தெளிவு. தொல்காப்பியச் சூத்திர விருத்தியைச் சிவஞான மாபாடியத்திலும் ஐந்து இடங்களில்[59] முனிவர் குறிப்பிட்டுள்ளார். இதுபோலப் புத்தம் புத்துரையை அவர்

---

*56 சி. வை. தாமோதரம் பிள்ளை, 1889. பதிப்புரை பக். 7.*

*57 சோம. இளவரசு, 1963. பக். 199; மு. வை. அரவிந்தன், 1968. பக். 422; 1995. பக். 538; க. விநாயகம், 1991. பக். 8; ச. பாலசுந்தரம், இலக்கண விளக்கச் சூறாவளி, (இலக்கணக் கருவூலம் 3), அண்ணாமலைநகர், 1992. பக். 295-298.*

*58 சிவஞான போதமும் சிவஞான பாடியமும், கழகம், சென்னை, 1968, பக். 16-19.*

*59 மேலது, 1968. பக். 16, 36, 65, 116, 267.*

எங்கும்[60] பெயர் சுட்டிக் குறிப்பிட்டதாகத் தெரியவில்லை. மேலும் சூத்திர விருத்தியில் காணப்படும் இலக்கணக் கருத்துகளில் பல புத்தம் புத்துரையிலும் காணப்படுகின்றன. சார்பெழுத்துகள், எழுத்துகளின் கிடக்கைமுறை, போலி எழுத்துகள், ஆகுபெயர், ஆறன் உருபு முதலிய இலக்கணச் செய்திகள் தொல்காப்பியச் சூத்திர விருத்தியை நோக்கப் புத்தம் புத்துரையில் திருத்தமும் தெளிவும் பெற்றுள்ளன. அதனால் அவற்றை முனிவர் தொல்காப்பியச் சூத்திர விருத்தியிலிருந்து எடுத்துச் செம்மைப்படுத்திப் புத்தம் புத்துரையில் அமைத்ததாகக் கொள்வதே சிறப்பு. இவற்றை எல்லாம் ஒருங்கிணைத்து எண்ணும் போது முனிவர் எழுதிய இலக்கண உரைகளுள் இறுதியானது புத்தம் புத்துரை என்றே தோன்றுகிறது. இனி அதன் உள்ளடக்கத்தை நோக்குவோம்.

சிவஞான முனிவர் நன்னூல் முழுமைக்கும் உரை[61] எழுதவில்லை என்பது முன்பே சொல்லப்பட்டது. சங்கர நமச்சிவாயர் இயற்றிய விருத்தியுரையில் முனிவர் பல பகுதிகளைக் கூட்டினார்; சில பகுதிகளைக் குறைத்தார்; சிற்சில பகுதிகளைக் குறைத்தும் கூட்டியும் மாற்றினார்; மூன்று[62] நூற்பாக்களுக்கு *(நன். 50, 125, 293)* மட்டுமே புத்துரை எழுதினார். முனிவர் கூட்டி எழுதிய விளக்கங்கள் எல்லாம் அவரே சொந்தமாக எழுதியவை என்றும் சொல்ல முடியவில்லை. காட்டாக உயிர்மெய் உருவு திரிதலுக்கு அவர் கொடுத்துள்ள விளக்கம் *(நன். 89)* தொல்காப்பிய உரைகளிலிருந்து *(தொல். நூன். 17 உரை)* கொண்டது. சங்கர நமச்சிவாயர் உரையைக் குறைத்துள்ளமைக்குப் பொருத்தமான எடுத்துக்காட்டு தத்தம் பகாப்பதங்கள் *(நன். 134)* என்ற சூத்திரத் தொடரின் நயவுரை. சங்கர நமச்சிவாயர் உரையைக் குறைத்ததே இந்நூற்பாவின் உரையில் சிவஞான முனிவர் செய்த திருத்தம். வேறு பல பகுதிகளில் *(நன். 320, 326, 342)* இந்த உரைநீக்கம் சொல்லளவில் மட்டுமே நிகழ்ந்துள்ளது. முனிவர் குறைத்துக் கூட்டிய சில இடங்களில் கூட்டிய பகுதியை விடக் குறைத்த உரைப் பகுதியே மிகுதி. இதற்குத் தக்கதோர் உதாரணம், **"செய்யென் வினைவழி"** *(நன். 138)* என்னும் நூற்பாவின் உரை. இவ்விடுபாடுகள் எல்லாம் உண்மையிலேயே

---

[60] இலக்கண விளக்கச் சூறாவளியில், "சில இடங்களில் நன்னூல் விருத்தியுட் காண்க." என்று சிவஞான முனிவர் குறிப்பிட்டுள்ளதாக இலக்கண வரலாற்றில் (சோம. இளவரசு, 1963. பக். 199) கூறப்படுவதற்குச் சான்று இல்லை.

[61] பவானந்தம் பிள்ளை சிவஞான முனிவரை நன்னூல் உரையாசிரியர்களுள் ஒருவராகக் குறிக்காததோடு, "இவர் சங்கர நமச்சிவாயர் உரையைத் திருத்தியதாகக் கூறும் கூற்றும் ஆராயத் தக்கது." (நன்னூல், சென்னை, 1922. பக். xv; vxii) என்று கூறும் கருத்துரையை ஈண்டு ஒப்பிடுக.

[62] இவற்றுள் ஒரு நூற்பாவுக்கு (நூ. 50) முனிவர் எழுதிய புத்துரை ஆறுமுக நாவலர் (1851; 1933.), சந்திரசேகர கவிராஜ பண்டிதர் (1855), தெய்வசிகாமணி முதலியார்- சண்முகம் பிள்ளை (1889) முதலியோரின் பதிப்புகளில் இடம் பெறவில்லை.

முனிவர் செய்த திருத்தங்களா அல்லது ஏடு பெயர்த்து எழுதியோரால் நேர்ந்துள்ள பாட வேறுபாடுகளும் இந்தப் பகுதிகளில் கலந்துள்ளனவா என்பது ஆராயப்பட வேண்டும். சிவஞான முனிவர் தமது கைப்படத் திருத்திய ஏடு திருவாவடுதுறை ஆதீன நூல்நிலையத்தில்[63] இருப்பதாகச் சொல்லப்படுகிறது. அந்த ஏட்டைச் சங்கர நமச்சிவாயரின் உரை ஏடுகளோடு ஒப்பிட்டு ஆராய்ந்தாலன்றி முடிவு கூற முடியாது.

முனிவர் வரைந்துள்ள புத்துரைகளும் விவாதத்துக்கு அப்பாற்பட்டவை அல்ல. அவை வலிந்து கொள்ளப்பட்டன; வடமொழிச் சார்பின என்பதே பெரும்பாலோர் கருத்து. எழுத்தியலில், **"அவ்வாறு பொருள் கொண்டு உதாரணம் காட்டுமாற்றால் பெரும் பயன் இன்மையானும் வடநூலோடு மாறுபடும் ஆதலானும் அது பொருந்தாது என்க."** (நன். 125) என்று முனிவர் வரைந்துள்ள உரையே இதை உறுதிப்படுத்தும். முனிவர் செய்த திருத்தங்களை எல்லாம் நுணுகி நோக்கினாலன்றி அவற்றை மதிப்பீடு செய்ய முடியாது. எந்தெந்த இடங்களில் முனிவரின் திருத்தங்கள் அமைந்துள்ளன? அவற்றின் குணக் குற்றங்கள் என்னென்ன என்பவற்றை அறிவதற்குச் சிவஞான முனிவர் செய்த திருத்தங்கள்: ஒரு கண்ணோட்டம் என்ற பின்னிணைப்பு ஓரளவு உதவும்.

சிவஞான முனிவர் திருத்தி எழுதியதுபோல, **"ஓர் உரைக்குப் பின் கூட்டியும் குறைத்தும் பிற்காலத்தார் விளக்கி எழுதியுள்ள உரைகளை வடமொழியிற் பரக்கக் காணலாம்."** என்று சாமிநாதையரும் (1925. முகவுரை பக். 3) சங்கர நமச்சி-வாயருக்கும் சிவஞான முனிவருக்கும் இருந்துவந்த ஆதீனத் தொடர்பால் முனிவர் அவ்வாறு திருத்தினார் என்று தண்டபாணி தேசிகரும் (1957. முகவுரை பக். 8; 1971. பக். 2) சிவஞான முனிவரின் திருத்தப் பணியை நியாயப்படுத்துவார்கள். என்றாலும் இந்த முயற்சி மூலபாடத் திறனாய்வுக்கும் புலமை நேர்மைக்கும் பொருந்துமா என்பது நன்கு ஆராயப்பட வேண்டும்.

ஒருவர் உரைக்கு மேனிலை விளக்கமாக இன்னொருவர் குறிப்புரை எழுதுவது தமிழில் மிகவும் குறைவு. திருக்குறள் பரிமேலழகர் உரைக்கு 16-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த காரிரத்தின கவிராயர் நுண்பொருள் மாலை என்ற பெயரில் அரிய உரை விளக்கக் குறிப்புகளை எழுதினார். நாற்பது ஆண்டுகளுக்கு முன்பு ஆ. பூவராகம் பிள்ளை சொல்லதிகாரம் சேனாவரையர் உரைக்கு ஒரு உரை விளக்கம் எழுதினார்.

---

[63] சாமிநாதையர், 1925. முகவுரை பக். 3; உ. வே. சாமிநாதையர், என் சரித்திரம், சென்னை, 1950. பக். 559; தண்டபாணி தேசிகர், 1957. முகவுரை பக். 9; 1971. பக். 4.

இவை இரண்டும் நல்ல காலமாகத் தனித்தனி நூல்களாக[64] அமைந்தன. அதற்கு மாறாக அந்த மேனிலை விளக்கங்களை அந்தந்த உரைகளில் இடைமடுத்து எழுதிச் சேர்த்துவிட்டு, அந்நூல்களுக்குத் தாங்களே புத்துரை இயற்றியதாக அவர்கள் உரிமை கொண்டாடவில்லை; கொண்டாடவும் முடியாது. சங்கர நமச்சிவாயர் நன்னூலுக்கு இயற்றிய உரை அவருடைய அறிவாற்றலின் விளைவு; அவருடைய அறிவுடைமை; அறிவால் ஆக்கிய உடைமை. அவர் உரையில் முனிவர் சில திருத்தங்களைச் செய்து, அதற்குப் புத்தம் புத்துரை என்று பெயர் சூட்டி உரிமை கொண்டாட எண்ணியிருந்தால் அது எவ்வகையிலும் பொருந்தாது. ஒரு உரைப்பாடத்தை இவ்வாறு கூட்டிக் குறைத்துத் திருத்துவதை மூலபாடத் திறனாய்வும் அனுமதிப்பதில்லை. இவற்றை எல்லாம் ஆழ்ந்து நோக்கினால் புத்தம் புத்துரையை மதிப்பிடுவதில் புதிய அணுகுமுறை தேவை என்பது புலப்படாமல் போகாது.

சங்கர நமச்சிவாயர் உரையில் ஒருசில பகுதிகளுக்கே முனிவரின் திருத்தம் காணப்படுகிறது. அவற்றுள்ளும் பெரும்பாலான திருத்தங்கள் சிறிய அளவின. காட்டாக எழுத்ததிகாரத்தின் இறுதி இயல்கள் மூன்றிலும் அவர் செய்துள்ள திருத்தங்களைக் குறிப்பிடலாம். இப்பகுதியில் இரண்டு நூற்பாக்களைத் தவிர (நன். 182, 194) முனிவர் செய்த திருத்தங்கள் அனைத்தும் நூற்பா நுதலும் பொருளைக் கூறும் பகுதிகளில் மட்டுமே காணப்படுகின்றன. குறிப்பளவில் அமைந்துள்ள இத்தகைய திருத்தக் குறிப்புகளை யாரும் எளிதில் எழுதலாம். உதாரணமாகத், **"தனிக்குறின் முன்னொற்று"** (நன். 205) என்னும் சூத்திரம் நுதலும் பொருளை, **"எய்தியதன்மேல் சிறப்புவிதி உணர்த்துதல் நுதலிற்று."** என்று சங்கர நமச்சிவாயர் விளக்குவார். இப்பகுதியை, **"உடன்மே லுயிர்வந் தொன்றுவது என்னும் சூத்திரத்தான் எய்தியதன்மேல் சிறப்புவிதி உணர்த்துதல் நுதலிற்று."** என்று யாரேனும் திருத்தலாம். இதுபோல நிகழ்கால இடைநிலைகளைத் தொகுத்துக் கூறும் நூற்பாவில் சங்கர நமச்சிவாயர், **"தருவினையை, 'அறைவினை' என்றது இலக்கணை. மேலைச் சூத்திரத்தில் வருவதும் அது."** (நன். 143) என்று நயவுரை கூறி விளக்குவார். இப்பகுதியைத், **"தருவினையை, 'அறைவினை' என்றது இலக்கணை. மேலைச் சூத்திரத்தில், "இசைவினை" என வருவதும் அது."** என்றும் ஒருவர் திருத்த முற்படலாம்.

---

[64] இ. சுந்தரமூர்த்தி, திருமேனி காரி இரத்தின கவிராயர் இயற்றிய திருக்குறள் பரிமேலழகர் உரை நுண்பொருள் மாலை, தேன்மொழி நூலகம், சென்னை, 1980; ஆ. பூவராகம் பிள்ளை, தொல்காப்பியம் சொல்லதிகாரம் சேனாவரையம் விளக்கவுரை, கழகம், சென்னை, 1954.

எனவே இத்தகைய திருத்தங்கள் எல்லாம் எளிய அடிக்குறிப்புகளே தவிர அரிய விளக்கங்கள் ஆகா. அதோடு அல்லாமல் முனிவர் செய்துள்ள சில திருத்தங்களின் தேவை குறித்தும் ஐயம் உண்டாகிறது. காட்டாகப், **"பலசில வெனுமிவை"** (நன். 170) என்னும் சூத்திரத்தின் உரையில், **"செய்யிய வென்னும் என்ற சூத்திரத்தான்"** (நன். 167) என்ற தொடர் முனிவரால் கூட்டப்பட்டுள்ளது. இந்த விளக்கக் குறிப்பைச் சங்கர நமச்சிவாயரே, **"இதனுள் மிகுதல், "செய்யிய" என்னும் சூத்திரத்தான் விலக்கி, ஈண்டு விதித்தமையின் சிறப்புவிதி ஆயிற்று."** (நன். 170) என்று எழுதியுள்ளார். அதனால் சிவஞான முனிவர் இப்பகுதியில் செய்த மேனிலைத் திருத்தம் தேவைதானா என்று எண்ணத் தோன்றுகிறது.[65] இதுபோலவே இடைச்சொல்லின் பெயர்விளக்கம் கூறும் பகுதியில் பாலைத்திணை நடுவுநிலைத்திணை ஆயது எங்ஙனம் என்று முனிவர் விளக்குவது (நன். 420) மற்றொன்று விரித்தல் என்றே சொல்லத் தோன்றுகிறது. அன்றியும் இந்த விளக்கம் தொல்காப்பியச் சூத்திர விருத்தியில் (பக். 65-68) முன்பே ஒரு முறை அவரால் கூறப்பட்டுள்ளது. கூறியதையே மீண்டும் இந்த நூற்பாவின் உரையில் கூறுவதற்குத் தக்க காரணமும் இல்லை; அது உரைமரபும் ஆகாது.

சிவஞான முனிவரின் திருத்தம் வேறு சில இடங்களில், **"அடக்கிப்"** (நன். 262), **"இவன், உவன்"** (நன். 276), **"முதலிய"** (நன். 393), **"அவற்றை"** (நன். 399) என்பதுபோலச் சொல்லளவில் நின்றுவிட்டது. எனவே மேலே எடுத்துக்காட்டிய சிறு திருத்தங்கள், எல்லாம் சிவஞான முனிவருக்கோ அல்லது சங்கர நமச்சிவாயர் உரைக்கோ பெருமை அளிப்பனவாக அமையவில்லை.

சிவஞான முனிவர் செய்த விளக்கமான திருத்தங்களில் பல (நன். சிற. பாயி., எழுத்ததிகாரத் தோற்றுவாய், 73, 91, 94, 145, 267, 290, 296, 300, 420) தொல்காப்பியச் சூத்திர விருத்தி, இலக்கண விளக்கச் சூறாவளி, தொல்காப்பிய உரைகள், இலக்கணக் கொத்து போன்ற நூல்களிலிருந்து எடுத்து எழுதப்பட்டவை. வினையியலில் முனிவர் விரிவாகத் திருத்தி எழுதிய பகுதிகள் பலவும் பிற உரை-களிலிருந்து எடுத்துக்கொண்டவை. முன்னைய இரண்டும் முனிவருடைய நூல்கள். அவற்றிலிருந்து அவர் எடுத்துக்கொள்ளலாம். ஆனால் இலக்கணக் கொத்திலிருந்து பல பகுதிகளை எழுத்து மாறாமல் எடுத்து நன்னூல் பெயரியலில் முனிவர் சேர்த்துக்-கொண்டதைப் புத்துரைத் திருத்தம் என்று ஏற்றுக்கொள்ள இயலவில்லை. **"ஆசிரியர் தொல்காப்பியனார் கூறியவாறே அவ்வுரை வாசகத்தை எடுத்து எழுதினார்."**

[65] **இத்திருத்தம் ஆறுமுக நாவலர் பதிப்புகளில் இடம் பெறவில்லை.**

(இல. சூறா. பக். 107) என்றும் **"தொல்காப்பியத்தில் கிடந்தவாறே படியெடுத்து எழுதித் தமது அறியாமையை விளக்கினார் என அறிக."** (இல. சூறா. பக். 129) என்றும் வைத்தியநாத தேசிகரிடம் குறை கண்ட சிவஞான முனிவர் பிறருடைய உரைப் பகுதிகளை இவ்வாறு எடுத்து எழுதிப் புத்துரை ஒன்றை உருவாக்கியிருப்பார் என்று எண்ணவும் ஏற்கவும் தயக்கம் ஏற்படுகிறது.

சங்கர நமச்சிவாயர் சாமிநாத தேசிகரின் தலைமாணாக்கர். தமது நன்றி மறவாப் பண்பைத்,

**"தன்னடித் தாமரை தந்தெனை யாண்ட**
**திருவா வடுதுறைத் தேசிக னாகிய**[66]
**கருணையங் கடலையென் கண்ணைவிட் டகலாச்**
**சுவாமி நாத குரவனை யனுதினம்**
**மனமொழி மெய்களிற் றொழுது"**

என்னும் அடிகளில் (நன். சிற. பாயி. உரை) அவர் புலப்படுத்தியுள்ளார். தம்முடைய ஆசிரியரின் கருத்துகளைத் தமது உரையில் தழுவிக்கொள்ளவும் அவர் தவறவில்லை. காட்டாக வினையடி நான்கு என வகைப்படுத்தி, **"இயல்பாகிய வினையடி ஒன்றும் ஏனைப் பெயர், இடை, உரியடியாகப் பிறந்த வினையடி மூன்றும் ஆம்."** (நன். 167) என்று அவர் விளக்குவார். இவ்வுரை, **"பெயர்வினை யிடையுரி நான்கடியானும், பிறக்கும் வினை"** என்னும் இலக்கணக் கொத்து நூற்பாவைத் (68) தழுவியது.

இதுபோலவே வினையெச்சங்களின் முடிபை விளக்கும் பகுதியில், **"இவ்வினை-யெச்சங்கள் நடந்து வந்தான், மழை பெய்ய நெல் விளைந்தது எனக் காரணப் பொருட்டாயும் நெல் விளைய மழை பெய்தது எனக் காரியப் பொருட்டாயும் உண்ண வந்தான் எனக் காரணம், காரியம் என்னும் இருபொருட்டாயும்,**

**"...கடிக்கமல முகங்காட்ட....**
**...கருநெய்தல் கண்காட்டும்"** (தே. மேகராகக்குறிஞ்சி 1:3-4)

**எனக் காரண காரியம் இரண்டும் இன்றியும் உழுது பயன் கொண்டான் வேந்தன் எனத் தலைமைபற்றியும் உழுது பயன் கொண்டான் வறியன் என அஃது இன்மைபற்றியும் வருதல் காண்க."** (நன். 344) என்று சங்கர நமச்சிவாயர் எழுதுவது சாமிநாத தேசிகரின் (இல. கொ. 84: 7-8) உரையைத் தழுவியது. இவ்வாறு தம்

[66] இந்த அடி சிவஞான முனிவரால் சேர்க்கப்பட்டிருக்கக் கூடும்.

ஆசிரியரின் கருத்துகளைப் பெயரியலில் தழுவிக்கொள்ள வேண்டும் என்று சங்கர நமச்சிவாயர் உண்மையில் எண்ணியிருந்தால் அதை அவரே செய்திருப்பார். அவர் செய்யாதிருக்கவும் அவருடைய உரையில் இலக்கணக் கொத்து நூற்பாக்களையும் உரைப் பகுதிகளையும் சிவஞான முனிவர் இடைமடுத்து எழுதியது பொருந்தாது. வலிவற்ற காரணங்களைக் காட்டிப் பிறர்[67] இதற்கு அமைதி காண முயல்வார்கள். காரணம் எதுவாக இருந்தாலும் முனிவர் கடைப்பிடித்த முறை நல்ல உரைமரபுக்கு வழிகாட்டாது என்பது கருதப்பட வேண்டும்.

இவற்றை எல்லாம் எடுத்துக்காட்டி, முனிவர் திருத்தி எழுதிய பகுதிகளில் சிறந்த விளக்கங்களே இல்லை என்று சுட்டிக்காட்டுவது என் நோக்கம் அல்ல. நல்ல சில விளக்கங்களும் உண்டு. காட்டாகச் சொற்களை உச்சரிக்கும் முறைக்கு, **"எல்லாச் சொற்களையும் கூறுங்கால் பொருள் சிறக்கும் இடத்து எழுத்தினை எடுத்தும் அயலெழுத்தினை நலிந்தும் ஏனை எழுத்துக்களைப் படுத்தும் கூறுக."** (நன். 132) என்று முனிவர் தரும் விளக்கத்தைக் கூறலாம். இதுபோலவே இன் என்னும் இறந்தகால இடைநிலையைப் பற்றி, **"இன்னிடைநிலை எஞ்சியது எனக் கடைக் குறைந்தும் போனது என முதல் குறைந்தும் வரும்."** (நன். 142) என்றும் சிவஞான முனிவர் மேனிலை விளக்கம் எழுதுவார். இளம்பூரணர், மயிலைநாதர் முதலிய உரையாசிரியர்கள்[68] இக்கருத்துகளைத் தொட்டிருந்தாலும் சிவஞான முனிவரின் விளக்கங்களில் அமைந்துள்ள தெளிவும் பொருளாழமும் அவர்களுடைய உரைகளில் அமையவில்லை என்பது உண்மை.

சிவஞான முனிவரின் திருத்தங்களோடு தொடர்புள்ள இன்னொரு கருத்தையும் இங்கு ஆராய வேண்டும். புத்தம் புத்துரையில் பல இடங்களில் பிரயோக விவேக உரைப் பகுதிகள் விரவியுள்ளதாகச்[69] சொல்லப்படுகிறது. ஆனால் அது உண்மை அல்ல. சிவஞான முனிவர் வடமொழி இலக்கணக் கருத்துகளில் ஈடுபாடு கொண்டவர். அதனால் பிரயோக விவேகக் கருத்துகளை அவர் ஏற்று எழுதும் இடங்கள் புத்தம் புத்துரையில் இல்லாமல் இல்லை. சந்தியக்கரம் பற்றிய விளக்கம் (நன். 73, 125) இதற்குத் தக்க சான்று. என்றாலும் இலக்கணக் கொத்தை மதிப்பதுபோல அவர் பிரயோக விவேகத்தை மதித்துப் போற்றவில்லை. வடமொழி இலக்கணத் தாக்கம் இருவருக்கும் பொது என்றாலும் சுப்பிரமணிய தீக்கிதரின் கொள்கைகள் எல்லாவற்றையும் முனிவர் ஏற்பதில்லை. காட்டாகத் தொல்காப்பியத்தின் முதல்நூல் எது

[67] **க. ப. அறவாணன், 1977. பக். 167; க. விநாயகம், 1991. பக். 69.**

[68] **இப்பதிப்பின் அடிக்குறிப்புகளில் (நூ. 132, 142) காண்க.**

[69] **க. விநாயகம், 1991. பக். 66, 75, 358.**

என்பதில் இருவருக்கும் கருத்து வேறுபாடு உண்டு. தொல்காப்பியத்துக்கு முதல்நூல் ஐந்திரம் என்பது சுப்பிரமணிய தீக்கிதர் (பி. வி. 1 உரை) கொள்கை; அகத்தியம் என்பது முனிவர் (தொல். விரு. பக். 9-12) கொள்கை. அல்லாமலும் சுப்பிரமணிய தீக்கிதரைச் சொல்லியல்பு உணராதவர் என்று இலக்கண விளக்கச் சூறாவளியில் (பக். 101) முனிவர் கடுநடையில் சாடுவார். மேலும் பிரயோக விவேகம் வழங்கும் இலக்கணக் கருத்துகள் பலவும் தமிழ்நடையில் இலக்கணக் கொத்தில் விளக்கப்பட்டுள்ளதை முனிவர் நன்கு அறிவார். ஆகவே வாயில் நுழையா வடசொற்கள் மலிந்த பிரயோக விவேக உரையை எடுத்தாள வேண்டிய தேவை முனிவருக்கு ஏற்படவே இல்லை. அப்படி இருந்தும் நன்னூல் புத்தம் புத்துரையில் பிரயோக விவேக உரைப் பகுதிகள் விரவியுள்ளதாகக் கருதப்படுவதற்கு எளிய காரணம் ஒன்று உண்டு.

சாமிநாத தேசிகர் பிரயோக விவேக உரைப் பகுதிகளைப் பல இடங்களில் தழுவிக்கொண்டார். அதோடு அந்த உரையில் காட்டப்பட்டுள்ள உதாரணங்களையும் தேசிகர் தமது உரையில் எடுத்து அமைத்துக்கொண்டார். அதனால் இலக்கணக் கொத்திலிருந்து சிவஞான முனிவர் எடுத்து இணைத்துக்கொண்ட உரைப் பகுதிகள், மேலோட்டமாகப் பார்க்கும் போது பிரயோக விவேக உரையைப் போலத் தோற்றம் தரும். அதற்கு, **"வினைமுற் றேவினை"** (நன். 351) என்னும் நூற்பாவின் உரையில் சிவஞான முனிவர் எடுத்து எழுதிய பகுதி ஏற்ற எடுத்துக்காட்டு. கருத்து, உதாரணம் ஆகியவற்றால் இந்தத் திருத்தத்தின் பிற்பகுதி பிரயோக விவேக உரைபோலத் தோன்றுவது உண்மை. இந்த ஒற்றுமையைக் கண்ட தெய்வசிகாமணி முதலியாரும் சண்முகம் பிள்ளையும் தங்கள் நன்னூல் பதிப்பில் (1889. பக். 340) பிரயோக விவேக உரைப் பகுதியை (நூ. 35) அடிக்குறிப்பாகக் கொடுத்தார்கள். மற்ற பதிப்பாசிரியர்கள் இந்த அடிக்குறிப்பைத் தங்கள் பதிப்புகளில் எடுத்துச்[70] சேர்த்துக்கொண்டார்களே தவிர முனிவர் கூட்டி எழுதிய உரை இலக்கணக் கொத்தின் (நூ. 66) மூலப்பகுதியும் உரையும் என்பதைக் கவனிக்கத் தவறிவிட்டனர். எனவே இவ்விரு நூல்களுக்கும் ஒற்றுமை இருப்பது உண்மை; இலக்கணக் கொத்து பிரயோக விவேகத்தைப் பேரளவில் எடுத்தாளுவதும் உண்மை. என்றாலும் சிவஞான முனிவர் நன்னூல் பெயரியலிலும் வினையியலிலும் (நூ. 292, 295, 296, 297, 298, 299, 300, 301, 302, 317, 322, 339, 340, 351) எடுத்து இணைத்த உரைப் பகுதிகள் இலக்கணக் கொத்தைச் சார்ந்தன; அவற்றில் பிரயோக விவேக உரைப் பகுதி ஒன்றுகூட இல்லை.

---

[70] கழகப் புலவர் குழுவினர், நன்னூல் விருத்தியுரை, 1964. பக். 316; தண்டபாணி தேசிகர், 1971. பக். 486.

தொகுத்துச் சொன்னால் சிவஞான முனிவர் நன்னூலுக்குப் புதிதாக உரை ஒன்றும் இயற்றவில்லை. புத்தம் புத்துரை என்ற வழக்காறே விவாதத்துக்கு உரியது. நன்னூல் சூத்திரங்கள் மூன்றுக்கு மட்டுமே அவர் புத்துரை வரைந்தார்; அவர் செய்த மற்ற திருத்தங்களில் பெரும்பகுதி குறிப்பளவில் நின்றுவிட்டது. அவர் விரிவாக எழுதிய விளக்கங்கள் அனைத்தும் அவரே எழுதியவை அல்ல; பிறர் உரைகளிலிருந்து அவர் எடுத்துக்கொண்டவையும் அவற்றில் உள்ளன. புத்தம் புத்துரைக்காக அவர் புதிதாக எழுதியது குறைவு; தம்முடைய முந்தைய இலக்கண உரைகளிலிருந்து எடுத்துக்-கொண்டது மிகுதி. நன்னூலுக்குச் சங்கர நமச்சிவாயர் இயற்றியதே விருத்தியுரை. முனிவர் செய்த திருத்தங்களால் அதற்கு அத்தகுதி ஏற்பட்டது என்பது பொருந்தா முடிபு. உண்மை இவ்வாறு இருந்தும் புத்தம் புத்துரை தமிழ் இலக்கியங்களைப் படித்துய்ய உதவும் உறுதுணை; இலக்கண உலகிற்கு முனிவர் செய்த பெருந்தொண்டு என்று சொல்வது எல்லாம் புகழுரைகள்; ஆய்வுரைகள் அல்ல. எனவே சங்கர நமச்சிவாயர் உரையில் சிவஞான முனிவர் திருத்தி அமைத்த பகுதிகளை மூலபாடத் திறனாய்வு நோக்கில் மீண்டும் ஆராய வேண்டும். அப்போதுதான் நன்னூலுக்கு முனிவர் செய்த உரைப்பணியைத் துல்லியமாக மதிப்பிட முடியும்.

## புதிய உரைகள்

சென்ற நூற்றாண்டிலும் இந்த நூற்றாண்டிலும் நன்னூலுக்குப் பெயரளவில் எண்ணற்ற உரைகள் தோன்றின. காண்டிகையுரை, காண்டிகையுரை விளக்கம், தெளிவுரை, உரைத்தெளிவு, ஆராய்ச்சித் தெளிவுரை, இலகுபோதம், சுருக்கவுரை என்று வெவ்வேறு பெயர்களில் எழுதப்பட்டன. ஹென்றி பவர், சாமுவேல் பிள்ளை-வால்ற்றர் ஜாயீஸ், ஜான் லாசரஸ் போன்றவர்கள் எழுதிய ஆங்கில விளக்கமும் மொழிபெயர்ப்பும்[71] வெளிவந்தன. ஐரோப்பியர் வருகை, கல்வித்துறை மறுமலர்ச்சி, அச்சுப்பொறியின் அறிமுகம், பாடநூல் திட்டம், தேர்வுடன் இணைந்த கல்விமுறை முதலிய காரணங்கள் இந்த உரைப் பெருக்கத்துக்கு வழிகோலின. ஆராய்ந்து நோக்கும் போது விசாகப்பெருமாளையர், ஆறுமுக நாவலர் ஆகியோர் செய்த காண்டிகை-யுரைகள் உள்ளிட்ட அனைத்தும் தழுவல் உரைகளே.

---

[71] நன்னூலுக்கு ஆங்கில மொழிபெயர்ப்பு மூன்றும் (ஹென்றி பவர், *1837; 1876; 1972;* சாமுவேல் பிள்ளை- வால்ற்றர் ஜாயீஸ், *1848-51;* ஜான் லாசரஸ், *1878; 1977.*) மலையாள மொழிபெயர்ப்பு ஒன்றும் (மா. இளையபெருமாளும் பிறரும், *1967.*) வெளிவந்துள்ளன.

ஜீ. யூ. போப் நன்னூலை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துள்ளார் என்று சொல்வது (சூ. இன்னாசியும் பிறரும், தமிழியல், சென்னை, *1990.* பக். *25*) பிழைத் தகவல்.

இந்த உரைவெள்ளத்துக்கு ஊற்றுக்கண்ணாக விளங்கிய விசாகப்பெருமாளையர் காண்டிகையின் உரைப் பாயிரம் இந்த உண்மையை,

"முன்னூ லொழியப் பின்னூல் பலவினு
ளெந்நூ லாரு நன்னூ லாருக்
கிணையோ வெனத்தமி ழினிதுணர் பவர்க்கெலாந்
துணையீ தாமெனத் தோன்றுநன் னூற்கு
நயன்மிகு சங்கர நமச்சி வாயனாற்
பயன்மிகச் செய்திடப் பட்டதன் பின்னர்
தவஞா னந்தனிற் சால்புகூர் துறைசைச்
சிவஞான முனிவனாற் றிருத்திடப் பட்ட
விருத்தி யுரைதனை வெளிப்படச் சுருக்கிக்
கருத்துப் பதப்பொருள் காட்டுமற் றுஞ்சில
வுறுமுறை காண்டிகை யுரையுளங் கொண்டு
சிறுவரு முணர்தருஞ் செவ்வியிற் செய்தனன்"

என்று தெளிவாகக் குறிப்பிடுகிறது. எனவே இந்தக் காண்டிகையுரைகள் எல்லாம் மயிலைநாதர் உரையையும் சங்கர நமச்சிவாயர் செய்து சிவஞான முனிவர் திருத்திய விருத்தியுரையையும் தழுவி எழுதப்பட்டன என்று பொதுப்படக் கூறலாம்.

பத்தொன்பதாம் நூற்றாண்டில் நன்னூலுக்கு எழுந்த காண்டிகையுரைகளுள் விசாகப்பெருமாளையர் (1834), இராமாநுச கவிராயர் (1847), ஆறுமுக நாவலர் (1889), வை. மு. சடகோபராமாநுஜாசாரியர் (1892)[72] ஆகியோர் இயற்றிய நான்கு உரைகளும் குறிப்பிடத் தக்கன. இவற்றுள் கவிராயர் இயற்றியது விருத்தியுரை. இதற்கு இராமாநுச காண்டிகையுரை என்ற சிறப்புப் பெயரும்[73] உண்டு. மற்ற மூன்றும் பாடநூலுக்கு ஏற்றவாறு எளிய நடையில் சுருக்கமாக எழுதப்பட்ட காண்டிகையுரைகள்.

சென்ற நூற்றாண்டில் இலக்கணம் என்றால் நன்னூலே; காண்டிகை என்றால் விசாகப்பெருமாளையரின்[74] காண்டிகையே. இந்த உரையின் செல்வாக்கு அந்த

---

[72] இக்காண்டிகையின் முதல் பதிப்புக்கு இணையாசிரியர் கோவிந்தாசாரியர். பிந்திய பதிப்புகளுக்குச் சே. கிருஷ்ணமாசாரியரும் வை. மு. கோபாலகிருஷ்ணமாசாரியரும் இணையாசிரியர்கள்.

[73] இராமாநுச கவிராயர், நன்னூல் விருத்தியுரை, சஞ்சீவிராயன்பேட்டை (சென்னை), 1847. பக். 336.

[74] இவருடைய இளவல் சரவணப்பெருமாளையர் நன்னூலுக்கு உரை இயற்றினார்

அளவுக்குத் தமிழிலக்கண உலகில் செங்கோல் செலுத்தியது. அறுபது ஆண்டுகளுக்கு மேல் மாணவர் உலகம் அறிய வீற்றிருந்த இந்த உரை ஆறுமுக நாவலர், சடகோப ராமாநுஜாசாரியர் ஆகியோரின் காண்டிகைகள் வெளிவந்து பரவிய பின்னர் மெல்ல மெல்ல வழக்கு இழந்துவிட்டது. இந்த உரையாசிரியர்கள் இருவரும் தமிழிலக்கணக் கல்வியின் வேர்களை நன்றாக அறிந்தவர்கள்; வளரும் மாணவர் சமுதாயத்தின் தேவையைப் புரிந்துகொண்டவர்கள். எனவே தேர்வு நோக்கில் ஆசிரியர்களுக்கும் மாணவர்களுக்கும் பயன்படும் புதிய அம்சங்கள் பலவற்றைத் தங்கள் காண்டிகைகளில் சேர்த்தனர். தேர்வு வினாக்கள், இலக்கணப் பயிற்சிகள், பகுபத முடிபுகள், பொருள், யாப்பு, அணி பற்றிய இலக்கணச் சுருக்கங்கள், இலக்கணக் கண்ணாடி போன்ற பின்னிணைப்புகள் இந்த உரைகளில் சேர்ந்தன. மேலும் வசன நடையில் இருவரும் நன்றாகக் கவனம் காட்டியிருந்தார்கள். நாவலரின் உரைநடை பழந்தமிழ் நடை; வை. மு. ச. நடை புதுத்தமிழ் நடை. ஆயினும் தெளிவுக்கும் செறிவுக்கும் இருவரும் முதலிடம் கொடுத்திருந்தனர். அதனால் இக்காண்டிகைகள் விரும்பி வரவேற்கப்பட்டதில் வியப்பு இல்லை. ஆனால் இவை தலைமுறை தலைமுறையாக மாணவர்கள் கைகளில் தவழ்ந்து நூற்றாண்டு விழாக் கொண்டாடும் என்று யாரும் எதிர்பார்க்கவில்லை.

இந்த நூற்றாண்டில் நன்னூலுக்குத் தோன்றிய உரைகளுக்கும் குறைவு இல்லை. வெவ்வேறு பெயர்களைக் கொண்டிருந்தாலும் இவற்றை எல்லாம் ஒரு வகையில் காண்டிகையுரைகள்[75] என்றுதான் சொல்ல வேண்டும். இவற்றுள் ஈழத்திலிருந்து வெளிவந்த புலோலி வ. குமாரசுவாமிப் புலவரின் நன்னூற் காண்டிகையுரை விளக்கம் (1902), ச. பவானந்தம் பிள்ளையின் நன்னூல் (1922), கா. நமச்சிவாய முதலியாரின் நன்னூல் (1928-31), மோசசு பொன்னையாவின் நன்னூல் ஆராய்ச்சித் தெளிவுரை (1968; 1971) ஆகிய நான்கும் குறிப்பிட வேண்டியன. குமாரசுவாமிப் புலவருடைய காண்டிகையுரை விளக்கம் முற்ற முழுக்க ஆறுமுக நாவலரின் காண்டிகையைத் தழுவி அதற்கு விளக்கம்போல அமைந்துள்ளது. இது தமிழகத்தில் பரவாததால் இப்படி ஒரு உரை தோன்றவே இல்லை என்று சிலர்[76] மறுப்பதுண்டு.

---

என்று பலரும் (சி. வை. தாமோதரம் பிள்ளை, 1889. பதிப்புரை பக். 15; மு. வை. அரவிந்தன், 1968. பக். 539; 1995. பக். 655; க. ப. அறவாணன், 1977. பக். 356) கூறுவது உண்மை அல்ல.

[75] மோசசு பொன்னையா (நன்னூல் ஆராய்ச்சித் தெளிவுரை- எழுத்து, மதுரை, 1968; சொல்லதிகாரம், மதுரை, 1971.) தம்முடைய உரையை விருத்தியுரை என்று சொல்லிக்-கொள்வது (1968. பக். 17) தற்புகழ்ச்சி.

[76] க. ப. அறவாணன், 1977. பக். 258.

இதற்கு அடுத்ததாக 1922-இல் வெளிவந்த பவானந்தம் பிள்ளையின் நன்னூலே இந்த நூற்றாண்டில் வந்த காண்டிகைகளுள் மிகவும் சிறந்தது. பழைய உரைகளையும் இராமாநுச கவிராயர் உரையையும் தழுவி எளிய நடையில் அமைந்தது இவ்வுரை. இந்த நூலின் அமைப்பும் அச்சும் இது ஒரு பவானந்தர் பதிப்பு என்பதைப் பறை சாற்றுகின்றன. மயிலைநாதர் உரையைப் பின்பற்றிப் பொதுப் பாயிரப் பகுதிக்கும் எழுத்தியலுக்கும் இடையில் சிறப்புப் பாயிரத்தின் உரையும் இராமாநுச கவிராயர் விருத்தியுரையைத் தழுவி நூலின் இறுதியில் பொதுவியலும் இவ்வுரையில் மாற்றி வைக்கப்பட்டுள்ளன. இலக்கிய வரலாறு போன்ற இதன் முகவுரையும் (பக். xi-xxiii) தேர்வு நோக்கோடு நூலின் இறுதியில் இணைத்துள்ள பன்னிரண்டு அனுபந்தங்களும் (பக். 284-365) பவானந்தம் பிள்ளையின் கடுமையான உழைப்பின் பயன். இவை அனைத்தும் தேர்வு எழுதும் மாணவர்களுக்கு உற்றுழி உதவும் ஊன்றுகோல்கள். அவற்றுள் தமிழிலக்கண நூல்கள், நன்னூற் சூத்திர அகராதி, உரைவிகற்பங்களும் விசேஷக் குறிப்புகளும், நன்னூல் சூத்திரத் தொகைவகை விளக்கம் முதலிய அனுபந்தங்கள் அண்மையில் வெளிவந்த நூல்களிலும் ஆய்வேடுகளிலும் இடம் பெற்றுவிட்டன. உதாரணமாக நன்னூலின் அமைப்பை வரைபடங்களாக விளக்கும் நன்னூல் சூத்திரத் தொகைவகை விளக்கம் என்னும் பிற்சேர்க்கையை எழுநூறு ஆண்டுகளில் நன்னூல் அப்படியே எடுத்து[77] இணைத்துக்கொண்டது. பவானந்தரின் நன்னூலுக்குப் பின்னர் இந்த நூற்றாண்டில் வெளிவந்த எந்த உரையும் அவ்வளவு சிறப்பாக அமையவில்லை. என்றாலும் பவானந்தரின் காண்டிகை கல்வித்துறையில் காலூன்ற முடியவில்லை. கவிராயரைப் பின்பற்றி இயல்களின் வைப்புமுறையில் அவர் செய்திருந்த மாற்றம் அதற்கு ஒரு காரணமாக இருக்கக் கூடும்.

மொத்தத்தில் எளிமை, தெளிவு, சுருக்கம் என்பவற்றைக் காண்டிகையுரைகளின் சிறப்பியல்புகள் என்றும் மாணவர்களுக்குத் தேர்வுப் பயிற்சி அளிப்பது அவற்றின் தலைநோக்கம் என்றும் தொகுத்துச் சொல்லலாம். சொந்தமாக எழுதாமல் ஒருவர் உரையைப் பார்த்து மற்றவர் எழுதியதால் இக்காண்டிகைகளுள் பல வெறும் உரைப்-போலிகளாக அமைந்துவிட்டன. இது அவற்றின் பொதுக் குறைபாடு.

## பதிப்புகள்

நன்னூலின் பதிப்பு வரலாறு அதன் உரை வரலாற்றைப் போலவே சற்று நீண்டது. நன்னூலுக்குச் சென்ற நூற்றாண்டில் எளிய காண்டிகையுரை எழுதிய இயற்றமிழ் ஆசிரியராகிய விசாகப்பெருமாளையரே ஏறக்குறைய 160 ஆண்டுகளுக்கு முன்பு இந்த

[77] க. ப. அறவாணன், 1977. பக். 62-72.

வரலாற்றைத் தொடங்கிவைத்தார். அவர் தமது காண்டிகையைச் சாலிவாகன சகாப்தம் 1756 ஜெய வருடம் (கி. பி. 1834) அச்சிட்டார். ஆகவே முதன் முதலாக அச்சுத்தேரில் உலா வந்த மரபிலக்கணம்[78] நன்னூலே. தமிழிலக்கணப் பதிப்பு வரலாற்றுக்குப் பிள்ளையார் சுழி போட்டதும் இந்நூலே.

நூலாசிரியர் உரையாசிரியர்கள் போலவே பதிப்பாசிரியர்களும் மதிக்கத் தக்கவர்கள். ஆறுமுக நாவலர், தாமோதரம் பிள்ளை, சாமிநாதையர், பவானந்தம் பிள்ளை, வையாபுரிப் பிள்ளை போன்ற நல்ல பதிப்பாசிரியர்களின் ஆறா அயரா உழைப்பின் பயனே இன்று நாம் பெற்றுள்ள இலக்கிய இலக்கணச் செல்வங்கள். அது மட்டும் அல்ல. பதிப்பு வரலாறு இலக்கிய வரலாற்றின் ஒரு பகுதி. எனவே பதிப்பாசிரியர்களைப் பற்றிய செய்திகளும் பதிப்பு விவரங்களும் இலக்கிய வரலாறுகளில் இடம் பெற வேண்டும். ஆனால் இலக்கிய வரலாற்று ஆசிரியர்களில் பெரும்பாலோர் இந்த உண்மையை நன்றாக உணரவில்லை. இதை ஓரளவு உணர்ந்திருந்த மயிலை சீனி. வேங்கடசாமி, மு. அருணாசலம், இரா. இளங்குமரன் போன்ற ஒருசிலரும் பதிப்பு விவரங்களுக்குச் சிறப்பிடம் தரவில்லை. அதனால் அவர்கள் கொடுத்துள்ள பதிப்பு விவரங்கள் முழுமையாகவும் நம்பகமாகவும் அமையவில்லை. விசாகப்பெருமாளையர் காண்டிகையின் பதிப்பு விவரமே அதற்குப் போதிய சான்று. இந்த உரை வெளிவந்த ஆண்டு கி. பி. 1875 என்று மயிலை சீனி. வேங்கடசாமியும் கி. பி. 1880 என்று மு. அருணாசலமும் கி. பி. 1875 என்று இரா. இளங்குமரனும்[79] மனம் போன போக்கில் குறிப்பிட்டுள்ளனர். பவானந்தம் பிள்ளை (1922), சாமிநாதையர் (1925), தண்டபாணி தேசிகர் (1957), சோம. இளவரசு (1981) போன்ற பதிப்பாசிரியர்கள் தங்கள் நன்னூல் பதிப்புகளில் பயனுள்ள முன்னுரைகளை எழுதியிருந்தாலும் பதிப்புத் தகவல்களுக்கு அவர்களும் அவ்வளவு முக்கியத்துவம் அளிக்கவில்லை. அதனால் நன்னூல் பதிப்புச் செய்திகள் அவற்றில் செப்பமாகப் பதிவாகவும் இல்லை.

நன்னூல் பதிப்பு வரலாற்றுக்கு உதவும் ஆய்வு மூலங்கள் தமிழில் இல்லாமல் இல்லை. தமிழ் வளர்ச்சி ஆராய்ச்சி மன்றம் தொடர்ந்து வெளியிட்டு வரும் தமிழ்நூல் விவர அட்டவணைத் தொகுதிகள், நூலகங்கள் வெளியிட்டுள்ள நூல்பட்டியல்கள்,

---

[78] நன்னூலுக்கு முதல் காண்டிகையுரையை விசாகப்பெருமாளையர் வகுத்தார் என்றும் 1839-இல் முதன் முதல் அவர் அதை வெளியிட்டார் என்றும் அவருக்கு முன்பே தாண்டவராய முதலியார் 1835-இல் நன்னூலை அச்சிட்டுவிட்டார் என்றும் க. ப. அறவாணன் (1977. பக். 60, 183, 213, 354) திரும்பத் திரும்பச் சொல்லுவார். ஆனாலும் அவை உண்மை அல்ல.

[79] மயிலை சீனி. வேங்கடசாமி, 1962, பக். 296; மு. அருணாசலம், 1970. பக். 173. இரா. இளங்குமரன், 1988. பக். 307.

தமிழிலக்கண அகரவரிசை (பொன். கோதண்டராமன், 1977.) போன்ற நூலடைவுகள், நன்னூல் தொடர்பான ஆய்வுநூல்கள்[80] முதலியவற்றில் பதிப்புத் தகவல்கள் நிறையக் காணப்படுகின்றன. என்றாலும் நன்னூலின் பதிப்பு வரலாற்றுக்கும் நூலடைவுக்கும் இவை மட்டுமே போதுமானவை அல்ல. காட்டாக விசாகப்பெருமாளையர் எழுதிய காண்டிகையுரையின் முதல் பதிப்பு கி. பி. 1839-இல் தான் வெளிவந்தது என்று நிறுவ அறவாணன் வரிந்து வரிந்து (1977. பக். 183) எழுதுவார்; பஞ்சாங்க அறிவிப்பை எல்லாம் ஆதாரமாகக் காட்டுவார். ஆனால் அப்பதிப்பு சாலிவாகன சகாப்தம் 1756 ஜெய வருடமே (1834) வெளிவந்துவிட்டது.

இந்நூலிலிருந்து இன்னொரு உதா்ரணத்தையும் காட்டலாம். தில்லையம்பூர் சந்திரசேகர கவிராஜ பண்டிதர்[81] நன்னூலுக்கு நல்லதொரு பதிப்பை வெளியிட்டார். இந்தப் பதிப்பைப் பற்றிய தகவல்களை ஒருவரும் சரியாகக் கொடுக்கவில்லை. இதன் நூலடைவு விவரங்களைப் பதிவு செய்த க. ப. அறவாணன் (1977. பக். 255) இப்பதிப்பு 1895-இல் வெளிவந்ததாகக் குறிப்பிட்டுள்ளார். இத்தகவலை நம்பி, கி. நாச்சிமுத்தும் (1986. பக். 119) இதன் பதிப்பு ஆண்டு 1895 என்று கூறுவார். உண்மையில் இப்பதிப்பு இராட்சச வருடமே (1855) வெளிவந்துவிட்டது. எந்த ஆய்வு மூலத்தையும் நன்றாக ஆராயாமல் நம்பிவிடக் கூடாது என்று வலியுறுத்த இந்த உதாரணங்களே அமையும். நூலின் முகப்புத் தாளே நம்பகமான பதிப்பு விவரங்களை வழங்குவது. ஆகவே ஒரு நூலின் பதிப்பு வரலாற்றுக்கும் நூலடைவுக்கும் அதுவே ஆணித்தரமான ஆய்வு மூலம் என்பதை மறக்கவே கூடாது. மொத்தத்தில் நன்னூல் பதிப்பு வரலாற்றிலும் நூலடைவுத் தரவுகளிலும் பிழைகள் பெருகிவிட்டன. அவற்றைக் களைந்துவிட்டுத் தொல்காப்பியப் பதிப்பு வரலாறுபோல[82] நன்னூலின் பதிப்பு வரலாற்றையும் எழுதினால் இலக்கிய இலக்கண வரலாறுகளில் சில பகுதிகள் நிச்சயம் திருந்தும்.

## விருத்தியுரைப் பதிப்புகள்

இனி நன்னூல் விருத்தியுரைப் பதிப்புகளைப் பார்க்கலாம். இது யாழ்ப்பாணத்து நல்லூர் ஆறுமுக நாவலரால் முதன் முதல் விரோதிகிருது வருடம் ஐப்பசி மாதம்

---

[80] க. ப. அருணாசலம், நன்னூலும் அதன் உரைகளும், எம். லிட். ஆய்வேடு, சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை, 1973; எவ். எக்ஸ். நடராசா, நன்னூற் காண்டிகை உரையும் நாவலர் பெருமானும், காரைநகர், 1982; கி. நாச்சிமுத்து, 1986.

[81] இவர் நன்னூல் விருத்தியுரை, யாப்பருங்கலக் காரிகையுரை, தண்டியலங்கார உரை ஆகியவற்றை இயற்றியதாகக் கூறுவது (மு. வை. அரவிந்தன், 1968. பக். 543; 1995. பக். 660) பிழை; இவர் அவற்றின் பதிப்பாசிரியர் மட்டுமே.

[82] மு. சண்முகம் பிள்ளை, தொல்காப்பியப் பதிப்புகள் (தமிழாய்வு தொகுதி 8), சென்னை, 1978. பக். 17-86.

(கி. பி. 1851) முழுமையாகப் பதிப்பிக்கப்பட்டது. ஆனால் விருத்தியுரையைத் தழுவிக் காண்டிகையுரை இயற்றிய விசாகப்பெருமாளையர் இவ்வுரையின் சில பகுதிகளை நாவலருக்கு முன்பே 1834-இல் வெளியிட்டுவிட்டார். இத்தகவலை, **"இவ்வுரையின் அருமையை உணர்ந்து சென்னை அரசியலார் கல்லூரியில் முதன் முதலாகத் தமிழ்ப்புலமை நடாத்திய திருத்தணிகை விசாகப்பெருமாளையர் அவர்கள் சில குறிப்புகளுடன் முதன் முதல் அச்சிட்டனர்."** என்று தண்டபாணி தேசிகர் (நன்னூல் விருத்தியுரை 1957. முகவுரை பக். 8) தெளிவாகக் குறிப்பிட்டுள்ளார். எனவே சிவஞான முனிவரின் விருத்தியுரைப் பகுதிகள் சிலவற்றைக் களத்தூர் வேதகிரி முதலியார் முதன் முதல் அச்சிட்டார் என்று[83] கூறுவது பொருந்தாது. விசாகப்பெருமாளையருக்குப் பின்னர் இராமாநுச கவிராயர் தமது விருத்தியுரையை 1847-இலும் அவரை அடுத்து களத்தூர் வேதகிரி முதலியார் தமது காண்டிகையுரையை 1851-இலும் (விரோதிகிருது வருடம் ஆனி மாதம்) வெளியிட்டார்கள். இவர்கள் மூவரும் புத்தம் புத்துரையைத் தழுவி உரை இயற்றிய காரணத்தால்தான் அவ்வுரைகளில் விருத்தியுரைப் பகுதிகளும் இணைந்திருந்தன. அதைத் தவிர அவர்களுடைய நோக்கம் விருத்தியுரைப் பகுதிகளை வெளியிடுவது அல்ல என்பது அறிதற்கு உரியது.

ஆறுமுக நாவலருக்குப் பிறகு தில்லையம்பூர் சந்திரசேகர கவிராஜ பண்டிதர் நன்னூல் விருத்தியுரையை விசாகப்பெருமாளையர் செய்த பதவுரையோடு 1855-இல் வெளியிட்ட செய்தி முன்பே சொல்லப்பட்டது. அவருக்குப் பின்னர் ஜீ. யூ. போப், **'பவணந்தி முனி செய்த நன்னூல் மூலமும் பொழிப்புரையும்'** என்ற பெயரில் ஒரு அழகான பதிப்பை 1857-இல் வெளியிட்டார். இது அவருடைய இலக்கண நூலின் இரண்டாம் பகுதியாக[84] அமைந்துள்ளது. இதன் பொழிப்புரையை ஜீ. யூ. போப் எழுதியதாகக் கருதுவது[85] உண்மை அல்ல. இது சங்கர நமச்சிவாயர் செய்து சிவஞான முனிவரால் திருத்தப்பட்ட புத்தம் புத்துரையின் பொழிப்புரைப் பகுதியே என்பது இரண்டையும் ஒப்பிட்டு நோக்குவோர்க்கு விளங்கும். அதோடு அல்லாமல் முகப்புத் தாளில், **"இஃது ஜீ. யூ. போப்பையரால் பார்வையிடப்பட்டுப் பதிப்பிக்கப்பட்டது."** என்றே அச்சிடப்பட்டுள்ளது. எனவே போப்பையர் நன்னூலின் உரையாசிரியர் அல்லர்; பதிப்பாசிரியர் மட்டுமே; அவர் பதிப்பில் உள்ள பொழிப்புரை அவரால் எழுதப்பட்டது அல்ல; அது புத்தம் புத்துரையில் உள்ள பொழிப்புரைப் பகுதியே என்பன கொள்ள வேண்டிய செய்திகள்.

---

[83] க. ப. அறவாணன், 1977. பக். 204, 355.

[84] Pope's Third Tamil Grammar Part II Native Authorities: Nannûl, Madras, 1857.

[85] க. ப. அறவாணன், 1977. பக் 210-211; சோம. இளவரசு, நன்னூல் விருத்தியுரை, அண்ணாமலைநகர், 1981. பக். ix; 1990. பக். xi; எவ். எக்ஸ். நடராசா, 1982. பக். 4.

சென்ற நூற்றாண்டின் இறுதியில் திருமயிலை தெய்வசிகாமணி முதலியாரும் சண்முகம் பிள்ளையும் இணைந்து நன்னூல் விருத்தியுரைக்கு ஒரு பதிப்பை (1889) வெளியிட்டனர். சந்திரசேகர கவிராஜ பண்டிதரின் பதிப்பைப் போலவே இதுவும் விசாகப்பெருமாளையரின் பதவுரையையும் நன்னூல் விருத்தியுரையையும் கொண்டது. கல்லூரி மாணவர்களின் தேர்வு நோக்கில் அமைந்துள்ள இப்பதிப்பில் மேற்கோள் இடவிளக்கம், உரை ஒப்பீடு முதலிய பகுதிகள் முதன் முதல் அடிக்குறிப்புகளாகத் தரப்பட்டுள்ளன. தொல்காப்பியச் சூத்திர விருத்தி, இலக்கண விளக்கச் சூறாவளி, இலக்கணக் கொத்து ஆகியவற்றோடு சிவஞான முனிவரின் திருத்தப் பகுதிகளை ஒப்பிட்டுக் காட்டியுள்ளது இதன் சிறப்பியல்புகளுள் சிறந்தது. இப்பதிப்பின் அமைப்பு, சிறப்பு முதலியவற்றை நூலின் முன்னுரை தொகுத்துக் கூறுகிறது.

சங்கர நமச்சிவாயரின் உரையையும் சேர்த்து நன்னூல் விருத்தியுரைக்கு இந்த நூற்றாண்டில் மட்டும் ஐந்து பதிப்புகள் வந்துள்ளன. சாமிநாதையர் (1925), கழகப் புலவர் குழுவினர் (1956), தண்டபாணி தேசிகர் (1957), எம். சுந்தரேசம் பிள்ளை (1969), சோம. இளவரசு (1981) ஆகியோர் பார்வையில் இவை பதிப்பிக்கப்பட்டுள்ளன. மனம் திறந்து சொன்னால் அவர்களுள் சாமிநாதையரும் தண்டபாணி தேசிகரும் விருத்தியுரையை ஏட்டுச் சுவடிகளோடு ஒப்பிட்டுப் பதிப்பித்தார்கள்; மற்றவர்கள் அச்சுப்பிரதிகளைப் பார்த்துப் படியெடுத்து வெளியிட்டார்கள். அவர்கள் இருவரும் பதிப்பியல் நெறிமுறைகளுக்குச் சிறப்பிடம் அளித்தார்கள்; மற்றவர்கள் விற்பனை வழிமுறைகளுக்கு முதலிடம் தந்தார்கள். அவர்களுடைய பதிப்புகள் ஆய்வாளர்க்கும் பயன்படுபவை; மற்ற வெளியீடுகள் மாணவர்க்கும் உதவாதவை என்று பொதுவாகக் கூறலாம். இதற்கான சான்றுகளை அடுத்து வரும் பகுதிகளில் காணலாம்.

விசாகப்பெருமாளையர் பதிப்பு (1834) முதல் சோம. இளவரசு பதிப்பு (1981) முடிய விருத்தியுரை தொடர்பாக வெளிவந்துள்ள பதிப்புகளை எல்லாம் நான்கு வகையாகப் பாகுபடுத்தலாம். முதலாவது சங்கர நமச்சிவாயரின் உரை மட்டும் உள்ளது. சாமிநாதையர் பதிப்பு (1925) ஒன்றே இவ்வகையைச் சார்ந்தது. சங்கர நமச்சிவாயர் இயற்றிச் சிவஞான முனிவரால் திருத்தப்பட்ட புத்தம் புத்துரை இரண்டாவது வகை. ஆறுமுக நாவலர் (1851), கழகப் புலவர் குழுவினர் (1956), தண்டபாணி தேசிகர் (1957), சுந்தரேசம் பிள்ளை (1969), சோம. இளவரசு (1981) ஆகியோரின் பதிப்புகள் இந்த வகையின. புத்தம் புத்துரையும் விசாகப்பெருமாளையரின் பதவுரையும் கொண்ட பதிப்புகள் மூன்றாவது வகை. சந்திரசேகர கவிராஜ பண்டிதர் பதிப்பும் (1855) தெய்வசிகாமணி முதலியாரும் சண்முகம் பிள்ளையும் இணைந்து வெளியிட்ட பதிப்பும்

(1889) இந்த வகையைச் சாரும். சங்கர நமச்சிவாயர் இயற்றிச் சிவஞான முனிவர் திருத்திப் புதுக்கிய புத்தம் புத்துரையின் ஒருசில பகுதிகளை மட்டுமே கொண்ட பதிப்புகள் நான்காவது வகை. விசாகப்பெருமாளையரின் காண்டிகையுரை (1834), இராமாநுச கவிராயரின் விருத்தியுரை (1847), வேதகிரி முதலியாரின் காண்டிகையுரை (1851), போப்பையர் பதிப்பித்த பொழிப்புரை (1857) ஆகிய நான்கும் இந்த வகையைச் சார்ந்தன. நன்னூல் விருத்தியுரைக்கு ஒரு செம்பதிப்பை வெளியிட முயல்வோருக்கு முதல் இருவகைப் பதிப்புகளே மிகவும் பயன்படும்; மற்றவை சிறிதளவே உதவக் கூடும். எனவே முதல் இருவகைப் பதிப்புகளை மட்டும் தனித்தனியாக ஆராயலாம்.

## சாமிநாதையர் பதிப்பு

முதலில் சாமிநாதையரின் பதிப்பை எடுத்துக்கொள்வோம். அதற்கு முன்பாக அவருடைய நன்னூல் கல்வி, பதிப்புத் துறை அனுபவம் முதலியவற்றைக் கோடி காட்ட வேண்டும். அறியாப் பருவம் தொட்டே சாமிநாதையர் நன்னூலைப் படிக்கத் தொடங்கினார்; நூலையும் உரையையும் மனனம் செய்தார். நன்னூல் காண்டிகை-யையும் விருத்தியையும் பலரிடம் பாடம் கேட்டார்; கல்லூரிகளில் நன்னூலைக்[86] கற்பித்தார். சங்கர நமச்சிவாயர் உரையைப் பதிப்பிக்கும் முன்பே பல தமிழ் இலக்கிய இலக்கணங்களையும் அவர் பதிப்பித்துவிட்டார். அதனால் சுவடிக்கலையும் பதிப்புக்-கலையும் அவருக்குக் குற்றேவல் செய்தன. தமிழ் இலக்கிய இலக்கணங்களைப் பல கோணங்களில் ஆழ்ந்து ஆராய்ந்து நூல் விவரங்கள், விளக்கக் குறிப்புகள், பல வகை அகராதிகள் முதலியன அவரிடம் ஆயத்த நிலையில் இருந்தன. அவருடைய மனம் அறிந்து பணி புரியும் புலவர் குழாம் ஒன்று அவரோடு சேர்ந்து செயல்பட்டது. இந்தப் பின்னணியைக் கருத்தில் கொண்டு நன்னூல் சங்கர நமச்சிவாயர் உரைப் பதிப்பை மதிப்பிடுவது நல்லது.

எல்லாவற்றுக்கும் மேலாக மேலகரம் சுப்பிரமணிய தேசிகரிடம் 1876 வாக்கில் நன்னூலைப் பாடம் கேட்ட காலத்தில் சங்கர நமச்சிவாயர் உரையைப் பற்றி அவர் சொல்லிய சொற்கள் சாமிநாதையரின் தமிழ் நெஞ்சில் ஆழப் பதிந்திருந்தன. அந்த உரையின் பதிப்புப் பணியை அவை அவருக்குத் தொடர்ந்து நினைவூட்டி வந்தன. சுப்பிரமணிய தேசிகர் காட்டிய சங்கர நமச்சிவாயர் உரைச் சுவடியோடு தாம் ஏடு தேடும் பணியில் ஈடுபட்டிருந்த காலத்தில் கிடைத்த ஓரிரு சுவடிகளும் அவரிடம் இருந்தன. கடைசியாக முகப்பு ஏட்டுடன் கூடிய சங்கர நமச்சிவாயர் உரையேடு

---

[86] **அவருடைய என் சரித்திரத்தில் (1950. பக். 115, 151, 456, 559, 563, 599, 693, 694) இத்தகவல்கள் விரிவாகச் சொல்லப்பட்டுள்ளன.**

ஒன்று ஆழ்வார் திருநகரியிலிருந்து கிடைத்ததும் சாமிநாதையர் (1925. முகவுரை பக். 5) அதைப் பதிப்பிக்கலானார். சாமிநாதையர் சங்கர நமச்சிவாயர் உரையேட்டை முதன் முதலாகப் பார்த்த போது அவருக்கு வயது இருபத்தொன்று. அவர் அதைப் பதிப்பித்த போது அவருக்கு வயது எழுபது; அதன் இரண்டாவது பதிப்பு வெளிவந்த போது அவருக்கு எண்பது வயது நிறைந்துவிட்டது. இப்பதிப்பின் சிறப்பியல்புகளை எடுத்துச் சொல்ல இந்த நெடிய வரலாறே போதுமானது. இவ்வாறு பல ஆண்டுகளாக நன்னூலைப் பலவாறு படித்து ஆராய்ந்து வைத்திருந்ததால் அவர் பதிப்புகளில் சங்கர நமச்சிவாயர் உரை ஒரு மகுடமாகத் திகழ்கிறது. முகப்புத் தாள் முதல் பிழை திருத்தம் முடிய இப்பதிப்பின் பகுதிகள் ஒவ்வொன்றிலும் சாமிநாதையரின் முத்திரையைக் காண முடிகிறது; அவருடைய சலியா உழைப்பை உணர முடிகிறது.

இப்பதிப்புக்கு அவர் எழுதியுள்ள முகவுரை, நூற்பெருமை, பவணந்தி முனிவர், சீயகங்கன், சங்கர நமச்சிவாயர் ஆகியோரின் வரலாறுகள் முதலிய எல்லாம் தகவல் கருவூலங்கள். மூலமும் உரையும் கொண்ட நூலின் கருவறைப் பகுதி கவினுற அமைந்துள்ளது. நூற்பாவின் தலைப்பு, நூற்பா, உரை, ஒப்பீட்டுக் குறிப்பு, சுருக்கக் குறியீடு, நிறுத்தல் குறிகள், பத்திப் பிரிப்பு, மேற்கோள்களின் இடவிளக்கம், பாட வேறுபாடுகள் ஆகிய எல்லாவற்றிலும் சாமிநாதையரின் பதிப்புத் திறன் பளிச்சிடுகிறது. நூலின் இறுதியில் அமைந்துள்ள அரும்பத அகராதி, விளங்கா மேற்கோள் அகராதி, குறிப்புரை முதலிய பின்னிணைப்புகளின் பயன் அளவிட முடியாதது. அமைப்பிலும் உள்ளுறையிலும் முதல் பதிப்பை விடவும் இரண்டாம் பதிப்பு (1935) திருத்தம்[87] பெற்றுள்ளது. சுருங்கச் சொன்னால் 1935-க்குப் பிறகு தமிழில் வெளிவந்த, தரமான இலக்கணப் பதிப்புகள் எல்லாவற்றிலும் சங்கர நமச்சிவாயர் உரைப் பதிப்பின் தாக்கம் உண்டு; இனி வரும் பதிப்புகளிலும் அது இருக்கும்; இருக்கவும் வேண்டும். அதன் மூலம் தமிழ்ப் பதிப்புக் கலை தழைக்கும்; அந்தத் தவப் புதல்வரின் தன்னிகரற்ற தமிழ்த் தொண்டு வருங்காலச் சந்ததியினர்க்கும் விளங்கும்.

## ஆறுமுக நாவலர் பதிப்பு

சிவஞான முனிவர் திருத்திய புத்தம் புத்துரைக்கு இதுவரை வெளிவந்துள்ள ஐந்து பதிப்புகளில் யாழ்ப்பாணத்து நல்லூர் ஆறுமுக நாவலர் அச்சிட்டதே முதல் பதிப்பு. ஆறுமுக நாவலர் தமிழ்ப் பதிப்புக் கலைக்கு அடிக்கல் நாட்டிய பிதாமகன். ஏட்டுச் சுவடிகளை ஒப்பிட்டுப் பரிசோதித்துப் பழுதறப் பதிப்பிப்பதில் அவருக்கு இணை

[87] **கி. நாச்சிமுத்து (1986. பக். 84-90) இத்திருத்தங்களை வகைப்படுத்திக் காட்டுவார்.**

அவரே. அவர் பதிப்பித்த ஐம்பதுக்கு மேற்பட்ட நூல்களுள்[88] இலக்கணங்கள் ஏழு. அவற்றுள் தலைசிறந்தது[89] நன்னூல் விருத்தியுரை. நாவலர் இதைப் பதிப்பித்த போது அவருக்கு வயது இருபத்தொன்பது என்பது அறிய வேண்டிய செய்தி. "**சனகாபுரம் பவணந்தி முனிவர் இயற்றிய நன்னூன் மூலமும் திருநெல்வேலி சங்கர நமச்சிவாயப் புலவரால் செய்யப்பட்டு திருவாவடுதுறை ஆதீன வித்துவானாகிய சிவஞான சுவாமிகளால் திருத்தப்பட்ட விருத்தியுரையும்**" என்பது இப்பதிப்பின் தலைப்பு. நூலாசிரியர், நூல், உரையாசிரியர், திருத்தம் செய்த உரையாசிரியர் என்று எல்லாப் பெயர்களும் முகப்பிலேயே அமைந்த முழுத் தலைப்பு. நீண்டது என்றாலும் இதுவே[90] முறையானது. புத்தம் புத்துரை என்னும் பெயர் முகப்புத் தாளில் இடம் பெறாதது எண்ணத் தக்கது. 1851-இல் முதன் முதலாக வெளிவந்த இப்பதிப்பு ஒரு நூற்றாண்டுக்கு மேலாகச் செல்வாக்கோடு திகழ்ந்தது.

சுவடியில் உள்ளதை உள்ளவாறே பிழை இல்லாமல் மூலபாடமாக வழங்குவது, தொடர்களின் அமைப்புக்கு ஏற்றவாறு நிறுத்தல் குறிகளை அறிந்து பயன்படுத்துவது, பொருளியைபை உணர்ந்து பத்திகளை இயல்பாகப் பிரிப்பது என்பவை ஆறுமுக நாவலர் பதிப்புகளின் தனிச்சிறப்புகள். பொதுவாக அவருடைய பதிப்புகளில் மூலம், உரை, சூத்திர அகராதி, சோதன பத்திரம் (பிழை திருத்தம்) முதலியனவே காணப்-படும். மேற்கோள்களின் இடவிளக்கங்கள், பாட வேறுபாடுகள், விளக்கக் குறிப்புகள் முதலியவற்றை அவர் தருவதில்லை; முகவுரை, பதிப்புரை, பின்னிணைப்புகள் போன்ற புறப்பகுதிகள் அவருடைய பதிப்புகளில் இருப்பதில்லை. நூற்பாக்கள் சீரும் அடியும் பிரிக்கப்படாமல் உரைநடைபோல அமைந்திருக்கும். விருத்தியுரையில் அமைந்துள்ள இம்முறையை நாவலரின் பிற இலக்கணப் பதிப்புகளிலும் காணலாம். நன்னூலின் சிறப்புப் பாயிரப் பகுதியில் விமரிசம் என்பதற்கு விளக்கமும் (பக். 5) இளம்பூரணர் பற்றிய ஒரு சிறுகுறிப்பும் (பக். 7) அடிக்குறிப்புகளாகக் கொடுத்துள்ளது விதிவிலக்கு. நாவலர் பதிப்பு என்றால் பிழையற்ற பதிப்பு; நம்பகமான பதிப்பு என்ற நம்பிக்கை நிலவியது. அதனால் கல்வித்துறை அவர் பதிப்புகளை மகிழ்ந்து வரவேற்றது. ஆனால்

---

[88] யாழ். சி. செல்லையா பிள்ளை, யாழ்ப்பாண நல்லூர் ஸ்ரீ ல ஸ்ரீ ஆறுமுக நாவலர் சரித்திரச் சுருக்கமும் அவர்கள் இயற்றி அருளிய தனிப்பாமாலையும், கொழும்பு, 1914. பக். 10.

[89] இரத்தினச் சுருக்கம், இலக்கணக் கொத்து, இலக்கண விளக்கச் சூறாவளி, உவமான சங்கிரகம், தொல்காப்பியச் சூத்திர விருத்தி, பிரயோக விவேகம் என்பன அவர் பதிப்பித்த மற்ற இலக்கண நூல்கள். அன்றியும் 1868-இல் சி. வை. தாமோதரம் பிள்ளை பதிப்பித்த தொல்காப்பியம் சேனாவரையர் உரையைப் பரிசோதித்து உதவியவரும் நாவலரே.

[90] பிந்திய பதிப்புகளில் இத்தலைப்பு வேறு வகையாகக் காணப்படுகிறது.

அவர் மறைவுக்குப் பிறகு வெளிவந்த நாவலர் பதிப்புகளில் பிழைகள் கலந்துவிட்டன என்று பலரும் சொல்வது உண்மை; வெறும் குற்றச்சாட்டு அல்ல.

## கழகப் பதிப்பு

நாவலர் பதிப்புக்குப் பின்னர் நன்னூல் விருத்தியுரைக்கு 1956-இல் கழகம் ஒரு பதிப்பை வெளியிட்டது. புலவர் வகுப்புக்கு நன்னூல் விருத்தி பாடமாக இருந்த-தால் ஊதிய நோக்கோடு ஒழுங்கு செய்யப்பட்டது இப்பதிப்பு. இதற்கு அடிப்படை நன்னூல் விருத்தியுரையின் ஏடுகள் அல்ல; ஆறுமுக நாவலர், தெய்வசிகாமணி முதலியார்- சண்முகம் பிள்ளை, சாமிநாதையர் ஆகியோர் வெளியிட்ட பதிப்புகளே. தங்கள் பதிப்புரையில் புலவர் குழுவினர் இதைக் குறிப்பிடவில்லை என்றாலும் இதுவே உண்மை.

சங்கர நமச்சிவாயர் உரையிலிருந்து சிவஞான முனிவர் உரையைத் தனியாகத் தலைப்புக் கொடுத்து வேறுபடுத்திக் காட்டியது, நூற்பாக்களைச் சந்தி பிரித்து அமைத்தது, நூற்பாக்களுக்குத் தலைப்புக் கொடுத்தது, மேற்கோள்களுக்கு இட-விளக்கம் தந்தது, ஆசிரியர், உரையாசிரியர் வரலாறுகளை எழுதியது, மேற்கோள் நூல்களின் விளக்கம், அருஞ்சொற் பொருள், அருந்தொடர்கள் ஆகியவற்றுக்கு அகர-வரிசைகளைத் தொகுத்தது, தேர்வுக்குரிய வினாக்களைத் தொகுத்தது முதலியவற்றை இப்பதிப்பின் சிறப்பியல்புகளாகப் பதிப்புரை குறிப்பிடுகிறது. உண்மையில் இதற்காகப் புலவர் குழு செய்தது ஒன்றே ஒன்றுதான்; மற்றவை எல்லாம் பழைய பதிப்புகளிலிருந்து அப்படியே அள்ளி அச்சுக் கோத்துக்கொண்டவை. காட்டாக நூற்பாத் தலைப்பு-களை ஆறுமுக நாவலர் காண்டிகையிலிருந்தும்[91] ஆசிரியர்களின் வரலாறுகள், அகரவரிசைகள், மேற்கோள்களின் இடவிளக்கக் குறிப்புகள் முதலிய பகுதிகளைச் சாமிநாதையர் பதிப்பிலிருந்தும் அடிக்குறிப்புகளைத் தெய்வசிகாமணி முதலியார் (1889), சாமிநாதையர் பதிப்புகளிலிருந்தும் புலவர் குழுவினர் வாரிக்கொண்டனர். அவற்றில் நேர்ந்துள்ள பிழைகள் மட்டுமே புலவர் குழுவின் பங்களிப்பு. எனினும் அந்தப் பதிப்புகளையும் அவற்றின் பதிப்பாசிரியர்களையும் பற்றிப் பதிப்புரையிலோ அணிந்துரையிலோ எந்தத் தகவலும் இல்லை. அவர்களுக்கே கைவந்த இப்பதிப்பு முறை ஒரு வகை இலக்கியக் கொள்ளை என்று தொல்காப்பியப் பதிப்பு வரலாற்றில் மு. அருணாசலம் கூறுவது[92] முற்றிலும் பொருந்தும்.

[91] நன்னூல் மூலத்தை 1930-இல் வெளியிட்ட போதே இத்தலைப்புகளை நாவலர் காண்டிகையிலிருந்து கழகம் எடுத்துக்கொண்டது.

[92] தமிழ் இலக்கிய வரலாறு பதினொராம் நூற்றாண்டு, திருச்சிற்றம்பலம், 1971. பக். 401.

இனி இப்பதிப்பில் கழகப் புலவர்கள் செய்த, இன்னும் சரியாகச் சொன்னால் செய்ய நினைத்த ஒரே ஒரு நல்ல அம்சத்தையும் பார்க்கலாம். அதற்கான குறிப்பை அவர்களுக்கு வழங்கியவர் சாமிநாதையர். சுப்பிரமணிய தேசிகரிடம் தாம் நன்னூல் கற்ற வரலாற்றைக் கூறும் பகுதியில், விருத்தியுரை அச்சுப் புத்தகத்தில் சங்கர நமச்சிவாயர் உரையையும் சிவஞான முனிவர் உரையையும் முறையே, 'ச' என்றும், 'சி' என்றும் அடையாளம் செய்து படித்த முறையைச் சாமிநாதையர் (1925. முகவுரை பக். 3) விவரித்திருந்தார். அதுவும் அல்லாமல் சென்ற நூற்றாண்டில் வெளிவந்த விருத்தியுரைப் பதிப்புகள் எதுவும் இந்த உரை வேறுபாட்டைக் குறிப்பிட்டுக் காட்டவில்லை. சங்கர நமச்சிவாயர் உரைக்கு இரண்டாவது பதிப்பை (1935) வெளியிட்ட சாமிநாதையர் அவருடைய உரையில் சிவஞான முனிவர் திருத்திய பல இடங்களை[93] அடிக்குறிப்புகளில் காட்டியிருந்தார். இவற்றை எல்லாம் கவனித்த கழகப் புலவர்கள் அவ்விரு உரைகளையும் வேறுபடுத்திக் காட்டும் பாடநூல் பதிப்பு ஒன்றை வெளியிட எண்ணினார்கள். எண்ணுவது எளிது; எண்ணியாங்கு இயற்றுவது அரிது என்பதற்கு இப்பதிப்பே இலக்கியம்.

சிவஞான முனிவர் செய்திருந்த திருத்தங்களில் மூன்றில் ஒரு பகுதியைக் கூடக் கழகப் பதிப்பு வேறுபடுத்திக் காட்டவில்லை; காட்டாதது மட்டும் அல்ல. சிவஞான முனிவர் விளக்கம் என்று தலைப்பிட்டு வேறுபடுத்திய இடங்களில் நேர்ந்துவிட்ட குழப்பங்களுக்கும் குறைவு[94] இல்லை. உதாரணத்துக்காக ஒன்றிரண்டு. தெரிநிலை வினைப்பகுதி பற்றிய நூற்பாவுக்குச் சங்கர நமச்சிவாயர் வரைந்த உரையைச் சிவஞான முனிவர் குறைத்தும் கூட்டியும் மாற்றியும் திருத்தியுள்ளார். ஆனால் பவணந்தி முனிவரையும் அவர் இயற்றிய இந்நூற்பாவையும் வியந்து பாராட்டிக், **"கையறியா மாக்கட்கு அன்றி, நூல் இயற்றும் அறிவினை உடைய மக்கட்குப் பல்கலைக் குரிசில் பவணந்தி என்னும் புலவர் பெருமான் புகழ்போல விளங்கி நிற்றலான் உலகமலையாமை உள்ளிட்ட பத்து அழகோடும் பிறந்து நின்றது இச்சூத்திரம் என்று உணர்க."** (நன். 137) என்று சங்கர நமச்சிவாயர் எழுதிய உரை வாசகத்தை முனிவர் திருத்தவில்லை. இதுபோலவே திணைகளைப் பற்றிய நூற்பாவின் உரையில், **"மக்களாகப் பிறந்து, புண்ணிய பாவம் இயற்றிப், புண்ணிய மிகுதியால் தேவராயும் பாவ மிகுதியால் நரகராயும் பிறத்தலின், 'மக்க டேவர் நரகர்' எனச் சாதன சாத்திய முறையே வைத்தார் என்க."** (நன். 261) என்று சங்கர நமச்சிவாயர்

---

[93] **சாமிநாதையர் காட்டிய இடங்கள்: சிற. பாயி., நூ. 73, 94, 125, 137, 142, 182, 184, 194, 285, 293, 295, 296, 298, 299, 300, 317, 319, 321, 335, 420, 442, 449.**

[94] **சிவஞான முனிவர் திருத்தியவற்றில் ஐம்பதுக்கும் குறைவான இடங்களையே கழகப் பதிப்பு வேறுபடுத்திக் காட்டிற்று. அவற்றுள் செம்பாதி பிழை.**

தருக்கவியல் நயம் தோன்றச் சிறப்புரை எழுதுவார். இப்பகுதியையும் சிவஞான முனிவர் திருத்தவில்லை. இப்பகுதிகளை எல்லாம் முனிவருடைய திருத்தங்களாகக் கொண்டு, சிவஞான முனிவர் விளக்கம் என்று தலைப்புக் கொடுத்துக் கழகப் புலவர் குழுவினர் அச்சிட்டுவிட்டனர். இவ்வாறு அவர்கள் பிறழ உணர்ந்த இடங்கள் வேறு சிலவும்[95] உண்டு. இத்தகைய குழப்பங்கள் நல்ல ஆய்வாளர்களையும் இடறி விழச் செய்துவிடும். இந்தப் பதிப்பை நம்பி, அப்பகுதிகளைச் சிவஞான முனிவர் எழுதியனவாகக் கருதிச் சிலர்[96] ஆராய்வது இதற்கு நல்ல உதாரணங்கள். ஒரு வரியில் சொன்னால் கழகத்தின் நன்னூல் விருத்தியுரை ஒரு மலினப் பதிப்பு.

## தண்டபாணி தேசிகர் பதிப்பு

நாவலர் பதிப்பு வெளிவந்து ஒரு நூற்றாண்டுக்குப் பிறகு சிவஞான முனிவரின் குருபூசை விழாவை ஒட்டி 1957-இல் திருவாவடுதுறை ஆதீனம் விருத்தியுரைக்கு ஒரு பதிப்பை வெளியிட்டது. அதன் பதிப்பாசிரியர் தண்டபாணி தேசிகர். அவர் திருக்குறள் உரைவளம், திருக்குறள் உரைக் களஞ்சியம் போன்ற நல்ல நூல்களைத் தமிழியலுக்கு வழங்கிய முதுபெரும் புலவர். அவர் எழுதியும் பதிப்பித்தும் வெளிவந்த நூல்கள் நூற்றுக்கு மேற்பட்டன. அவர் சாமிநாதையரின் மாணவர். அவரைப் போல இளமையில், பதின்மூன்று வயது முதலே நன்னூலைப் படிக்கத் தொடங்கியவர்; யாழ்ப்பாணம் வேற்பிள்ளை போன்ற ஆசிரியர்களிடம் நன்னூலைப் பயின்றவர்; புலவர் வகுப்பு மாணவர்களுக்குப் பல ஆண்டுகள் நன்னூலைப் பாடம் சொன்னவர். அதோடு சாமிநாதையரிடம் ஆராய்ச்சி நெறிமுறைகளை[97] நேரில் கற்றவர். எனவே, **"இதனை இதனால் இவன்முடிக்கும் என்றாய்ந்து"** (குறள். 517) ஆதீனத் தலைவர் நன்னூல் பதிப்புப் பணியைத் தண்டபாணி தேசிகரிடம் ஒப்படைத்ததில் வியப்பு எதுவும் இல்லை. இந்தக் குறிப்புகளோடு இனி இப்பதிப்பின் குணக் குற்றங்களைப் பார்க்கலாம். குணம் மிகுதி; குற்றம் குறைவு என்று எடுத்த எடுப்பில் சொல்லிவிட வேண்டும்.

இது ஏடுகளை ஆராய்ந்து, அச்சுப் பிரதிகளோடு ஒப்பிட்டுப் பதிப்பிக்கப்பட்ட பதிப்பு. ஆதீனத் தலைவர், **"ஆதீனத்துச் சரஸ்வதிமால் என்னும் கலைமகள் நிலயத்துள்ள சங்கர நமச்சிவாயர் உரையில் ஸ்ரீ சிவஞான சுவாமிகள் திருத்திய**

---

[95] ***அவர்கள் பிறழ உணர்ந்த பிற இடங்கள்: சிற. பாயி., நூ. 91, 94, 194, 285, 295, 319, 321, 420.***

[96] ***இரா. இளங்குமரன், 1988. பக். 300-301; அ. மு. பரமசிவானந்தம், தமிழ் உரைநடை, சென்னை, 1976. பக். 170.***

[97] ***திருவாசகம், திருவாவடுதுறை, 1964. முகவுரை பக். 23.***

**ஏட்டை எடுப்பித்துத் தந்து ஒப்புநோக்கித் திருத்தி ஆதீனப் பதிப்பாகவே வெளியிடுக என அடியேற்கு ஆணை வழங்கினார்கள்."** என்று முகவுரையில் (1957. பக். 9) தேசிகரே குறிப்பிட்டுள்ளார். இப்பதிப்பின் சிறப்பியல்புகளுள் சிறந்தவை மூன்று. நன்னூல் விருத்தியுரையில் சங்கர நமச்சிவாயர் உரையையும் சிவஞான முனிவர் திருத்தங்களையும் எளிதில் அறியுமாறு திருத்தப் பகுதிகளின் முன்னும் பின்னும் உடுக்குறியிட்டு வேறுபடுத்திய பதிப்பு முறை முதலாவது.

முனிவரின் திருத்தங்களோடு கூடிய விருத்தியுரை ஏட்டைச் சங்கர நமச்சிவாயர் உரை மட்டும் உள்ள ஏட்டுடனும் அச்சுப் படிகளுடனும் ஒப்பிடுவது அரிய பணி. அதன் அருமையை எண்ணி அயராமல் ஏறக்குறைய நூறு நூற்பாக்களில் சிவஞான முனிவர் திருத்தங்களை எடுத்துக்காட்டியது அவரது அயரா உழைப்பு; **"அடக்கிப்"** (நன். 262), **"முதலிய"** (நன். 393), **"அவற்றை"** (நன். 399) முதலான சொல்லளவுத் திருத்தங்களையும் புறக்கணித்து ஒதுக்காமல், நுணுகி நோக்கிக் குறியிட்டது அவரது நுண்ணுணர்வு; அவற்றைத் தெளிவாகக் குறியிட்டுக் காட்ட முடியாத பகுதிகளில், **"இச்சூத்திர உரையில் சுவாமிகளின் திருத்தம் இடைக்கிடை கலந்துள்ளது; சங்கர நமச்சிவாயர் உரைப்பிரதி நோக்கி அறிக."** (நூ. 194) என்று அடிக்குறிப்பு வரைவது அவரது புலமை நேர்மை. இவை எல்லாம் ஒரு நல்ல பதிப்பாசிரியரின் அடிப்படைத் தகுதிகள். இவை தேசிகரிடம் ஒருங்கே அமைந்திருந்ததால் தமிழியல் வளம் பெற்றது.

பெயரியலிலும் வினையியலிலும் சிவஞான முனிவர் சேர்த்து எழுதியவற்றில் பெரும்பகுதி இலக்கணக் கொத்திலிருந்து எடுத்து எழுதப்பட்டது. பொருத்தமற்ற காரணங்களைக் கூறாமல், இந்த உண்மையை அவர் நேரடியாகச் சுட்டிக்காட்டியது இப்பதிப்பின் இரண்டாவது சிறப்பு. காட்டாக நான்காம் வேற்றுமையைக் கூறும் நூற்பாவின் உரையில் உள்ள திருத்தத்துக்கு, **"இவ்வேற்றுக்கோடற் பொருள் என்பது முதல் பாவனை எனவும் வரும் என்ற பகுதி வரை உள்ளன இலக்கணக் கொத்து 36-ஆம் சூத்திரமும் அதன் உரையும் ஆகும்."** (நூ. 298) என்ற அடிக்குறிப்பைத் தேசிகர் கொடுத்துள்ளார். அந்த விளக்கம் உண்மையில் யாருடையது என்று இந்தக் குறிப்பின் மூலம் அவர் இனம் காட்டியுள்ளார். தெய்வசிகாமணி முதலியார் (1889. பக். 277), சாமிநாதையர் (1935. பக். 252) ஆகியோர் இந்நூற்பாவுக்குக் கொடுத்துள்ள அடிக்குறிப்புகளோடு ஒப்பிட்டுப் பார்த்தால்தான் தேசிகர் அடிக்குறிப்பின் பயன் நன்றாக விளங்கும்.

நானூறுக்கு மேற்பட்ட நூற்பாக்களுக்கு நல்ல உரைவிளக்கக் குறிப்புகளைத் தேசிகர் வரைந்திருப்பது இப்பதிப்பின் மூன்றாவது சிறப்பு. உதாரணமாகச் சிறப்புப் பாயிரம் இயற்றுவோரைக் கூறும் நூற்பாவுக்குத், **"தொல்காப்பியச் சிறப்புப் பாயிர உரையில் இளம்பூரணரும் நச்சினார்க்கினியரும் உரைகாரனைச் சிறப்புப் பாயிரம் செய்தற்கு உரியவனாகக் குறிக்கவில்லை."** (நூ. 51) என்று அவர் துருவித் தேடிக் கொடுத்துள்ள அடிக்குறிப்பைக் காட்டலாம். இலக்கண உரைகளில் அவருக்கு இருந்த பயிற்சியை இது புலப்படுத்துகிறது. இவற்றைத் தவிர இப்பதிப்பில் காணப்படும் பத்திப் பிரிப்பு, சந்திக் குறியீடுகள், பாடபேதக் குறிப்புகள் முதலியனவும் சுட்டத் தக்கன.

இந்த நல்ல பதிப்பிலும் குறை இல்லாமல் இல்லை. இருக்கும் ஒன்றிரண்டைப் பார்க்கலாம். முதலாவது நூலின் தலைப்பைப் பற்றியது. **"ஸ்ரீ மாதவச் சிவஞான சுவாமிகள் இயற்றிய புத்தம் புத்துரை என்னும் நன்னூல் விருத்தியுரை"** என்பது நூலின் தலைப்பு. இது குறையுடையது; திரிபுடையது. பவணந்தி முனிவரின் நன்னூல் மூலம், சங்கர நமச்சிவாயரின் உரை, சிவஞான முனிவரின் திருத்தம் ஆகிய மூன்றும் புத்தம் புத்துரையின் உட்பகுதிகள். இவற்றுள் முதல் இரண்டுமே முக்கியமானவை என்பது சொல்லாமல் விளங்கும். சங்கர நமச்சிவாயர் உரையோடு ஒப்பிடும் போது முனிவர் திருத்திச் சேர்த்த பகுதி அளவில் மிக மிகக் குறைந்தது. இந்தத் திருத்தக் குறிப்புகள் இல்லாமல் நன்னூல் மூலமும் உரையும் தனித்து வழங்கக் கூடியன; வழங்கிவருவன. ஆனால் சிவஞான முனிவர் திருத்தி எழுதிய பகுதிக்கு அந்தத் தகுதி இல்லை. அதாவது பவணந்தி முனிவரின் மூலமும் சங்கர நமச்சிவாயரின் உரையும் இல்லாமல் சிவஞான முனிவரின் திருத்தங்கள் மட்டும் தனித்து வழங்க முடியாது; அவற்றைத் தனியே அச்சிட்டு வெளியிடவும் முடியாது. அப்படியே வெளியிட்டாலும் அதற்கு முதலும் இருக்காது; முடிவும் இருக்காது; இலக்கண விளக்கச் சூறாவளியைப் போல இதுவும் வழக்கற்றுப் போய்விடும். வேறு வார்த்தைகளில் சொன்னால் மூலம் இன்றேல் உரை இல்லை; உரை இன்றேல் திருத்தம் முற்றிலும் இல்லை. உருவும் ஒளியும் இன்றேல் நிழல் ஏது? இவற்றை எல்லாம் எண்ணிப் பார்த்து விருத்தியுரைக்கு அவர் முறையான தலைப்பை முழுமையாகக் கொடுத்திருக்க வேண்டும்; விருத்தியுரை முழுவதுமே சிவஞான முனிவரால் இயற்றப்பட்டது என்னும் தப்பெண்ணத்தைத் தோற்றுவிக்கக் கூடிய இந்தத் தலைப்பைத் தவிர்த்திருக்க வேண்டும். தலைப்பில் சிவஞான முனிவருக்குச் சிறப்பிடம் தந்து பவணந்தி முனிவர், சங்கர நமச்சிவாயர் ஆகியோர் பெயர்களைப் புறக்கணித்தது நல்ல முன்மாதிரி அல்ல.

நன்னூல் என்றால் பவணந்தி முனிவரை உணர்த்தும்; அதுபோல விருத்தியுரை என்றால் சங்கர நமச்சிவாயர் உரையை உணர்த்தும் என்று இதற்கு யாரேனும் அமைதி கூறக் கூடும். நூலின் தலைப்புக்கு எதற்கு அமைதியும் விளக்கமும்? ஆறுமுக நாவலர், தெய்வசிகாமணி முதலியார் போன்றோர் கொடுத்துள்ள தலைப்பு நீண்டது என்றாலும் தெளிவானது அல்லவா? அதுபோல நூலின் முகப்பில் அதன் முழுத் தலைப்பையும் கொடுப்பதே நேரிய முறை. அன்றியும், **"தண்டபாணி தேசிகர் எழுதிய குறிப்புரை ஆராய்ச்சி முதலியவற்றுடன்"** என்பது முகப்புத் தாளில் இடம் பெற்றிருக்கவும் சங்கர நமச்சிவாயர் பெயரை முகப்புத் தாளில் அச்சிடாதது நடுநிலை ஆகாது. இவை எல்லாம் தண்டபாணி தேசிகர் அறியாதவை அல்ல. அறிந்திருந்தும் தலைப்பை இவ்வாறு அமைத்ததற்குப் புறத்தலையீடு ஒருவேளை காரணமாக இருந்திருக்கக் கூடும். எப்படி இருந்தாலும் இந்தக் குறைத் தலைப்பு தவறானது; நூலின் உள்ளடக்கத்துக்கு ஒவ்வாதது.

சங்கர நமச்சிவாயரின் உரைப் பகுதிகள் பல இடங்களில் விடுபட்டுள்ளன. இது இந்தப் பதிப்பின் இரண்டாவது குறைபாடு. பத்துக்கு[98] மேற்பட்ட இடங்களில் நேர்ந்துள்ள இத்தகைய விடுபாடுகளில் பல இரண்டாவது பதிப்பிலும் திருத்தப்படவில்லை. இதற்கு நல்ல எடுத்துக்காட்டு, **"ளவிறு தொழிற்பெயர்"** (நன். 230) என்ற சூத்திரத்தின் உரை. இதன் பொழிப்புரையில், **"ளகாரத்தை இறுதியாக உடைய முதனிலை திரிந்த தொழிற்பெயரும்"** என்னும் உரைப் பகுதி விடுபட்டுள்ளது. இரண்டாவது பதிப்பிலும் (1971) இது திருத்தப்படாததால் இப்பதிப்பைப் பார்த்து நகல் செய்யப்பட்ட பதிப்பிலும் இவ்விடுபாடு இரண்டு இடங்களில்[99] உரிமையோடு இடம் பிடித்துக்கொண்டது. இது போன்ற உரை விடுபாடுகள் ஆறுமுக நாவலர் (1933. நூ. 183, 346, 425, 456), சாமிநாதையர் (1935. நூ. 406, 407) பதிப்புகளிலும் அருகிக் காணப்படுகின்றன.

மேற்கோள்களின் இடவிளக்கம் பற்றியது மூன்றாவது குறைபாடு. **"சில விகாரமா முயர்திணை"** என்னும் சூத்திரத் தொடரைச் சங்கர நமச்சிவாயர் 229-ஆம் நூற்பாவில் எடுத்தாளுகிறார். இது நன்னூலின் 159-வது சூத்திரம் என்று சாமிநாதையர் (1925. பக். 302) முதன் முதல் இதற்கு இடவிளக்கக் குறிப்பு எழுதி உதவினார். அவருடைய இரண்டாவது பதிப்பில் (1935. பக். 170) இந்த நூற்பாவின் எண் 139 என்று தவறாக அச்சிடப்பட்டுள்ளது. அது முதல் ஐந்தாவது பதிப்பு வரை (1991) சங்கர நமச்சிவாயர்

---

[98] **உரைப் பகுதிகள் விடுபட்டுள்ள இடங்கள்: நூ. 183, 230, 243, 261, 364, 365, 369, 371, 380, 386, 425.**

[99] **சோம. இளவரசு, 1981. பக். 37, 202; 1990. பக். 37, 224.**

உரைப் பதிப்புகளில் இப்பிழை[100] நிலைத்துவிட்டது. சாமிநாதையரின் பிந்திய பதிப்பைப் பார்த்து இந்த இடவிளக்கத்தைத் தண்டபாணி தேசிகர் எழுதினார்; தேசிகர் பதிப்பைப் பார்த்து இளவரசு எழுதினார்; இவ்வாறு ஒரு பதிப்பிலிருந்து மற்றொரு பதிப்புக்கு இப்பிழை குடியேறிவிட்டது.

பிழைகள் ஒரு பதிப்பிலிருந்து மற்றொரு பதிப்புக்கு இவ்வாறு ஊடுருவி நிலை-பெறுதற்கு இன்னொரு உதாரணமும் காட்டலாம். குறிப்பு வினைமுற்று அடுக்கி ஒரு பெயரோடு முடிதற்கு மயிலைநாதர் (நூ. 354),

**"இளையண் மெல்லியண் மடந்தை**
**அரிய சேய பெருங்கான் யாறே"**

என்ற அடிகளை எடுத்துக்காட்டுவார். அவர் காட்டிய இந்த உதாரணத்தையே சங்கர நமச்சிவாயரும் (நூ. 355) தம்முடைய உரையில் தழுவிக்கொள்வார். "எம்மூரல்லது" என்ற பாடலின் அடிகள் என்று மயிலைநாதர் உரையில் (1918. பக். 228) இந்த உதாரணத்துக்குச் சாமிநாதையர் சரியாக இடவிளக்கம் கொடுத்துள்ளார். ஆனால் அதே உதாரணத்துக்குச் சங்கர நமச்சிவாயர் உரையில் (1925. பக். 189; 1935. பக். 318) அவர் கொடுத்துள்ள இடவிளக்கம் தெளிவாக அமையவில்லை.

இந்த ஈரடி உதாரணம், "எம்மூ ரல்லது" என்று தொடங்கும் ஐங்குறுநூற்றுத் தனிப் பாடலின் இறுதிப் பகுதி. ஒரே பாடலில் அமைந்துள்ள இந்த இரண்டு அடிகளையும் சாமிநாதையர் இரண்டு உதாரணங்களாகக் கருதித், தனித்தனியாகக் குறியிட்டு, அவற்றுள் முதலடிக்கே, "எம்மூரல்லது" என்னும் செய்யுளில் உள்ளது என்று இடவிளக்கம் கொடுத்துள்ளார். இரண்டாவது அடியை அவர் இடம் விளங்கா மேற்கோள் என்று (1925. பக். 290; 1935. பக். 447) தவறாகக் குறித்துள்ளார்.

சங்கர நமச்சிவாயர் உரையைப் பதிப்பிப்பதற்கு முன்பே சாமிநாதையர் ஐங்குறு-நூற்றுக்கு இரண்டு பதிப்புகளை (1903, 1920) வெளியிட்டுவிட்டார். இருந்தாலும் இந்த மேற்கோள் பாடலைப் பொறுத்த வரையில் அவருக்கு எப்படியோ தடுமாற்றம் நிகழ்ந்துவிட்டது. அதனால் ஐங்குறுநூறு, சங்கர நமச்சிவாயர் உரை ஆகிய இரண்டு

---

**[100] இதுபோலவே, "படுமகன் கிடக்கை காணூஉ" என்னும் புறநானூற்றுத் தொடரின் (278:8) மேற்கோள் இடவிளக்கத்தில் நிகழ்ந்துள்ள பிழையும் (சாமிநாதையர், 1925. பக். 39) ஐந்தாவது பதிப்பு (1991. பக். 57) வரை நிலைத்துவிட்டது. இப்பிழையோடு இதனைப் பலரும் (தண்டபாணி தேசிகர், 1957. பக். 89; க. ப. அறவாணன், 1977. பக். 142) மேற்கோள் காட்டுவார்கள்.**

நூல்களிலும் இந்த அடிகளுக்கு அவர் கொடுத்துள்ள மேற்கோள் விளக்கக் குறிப்புகள் முழுமை பெறாததோடு பிழையுடையனவாகவும் அமைந்துவிட்டன. சாமிநாதையரிடம் நம்பிக்கையும் நன்மதிப்பும் கொண்டிருந்த தண்டபாணி தேசிகர் இந்த உண்மையை அறிந்திருக்கவில்லை. அதனால் அவருடைய பதிப்பில் அமைந்துள்ளவாறே[101] இந்த மேற்கோள் பாடலை,

**"இளையண் மெல்லியண் மடந்தை"**

**"அரிய சேய பெருங்கான் யாறே"**

என்று தம்முடைய பதிப்புகளில் (1957. பக். 368; 1971. பக். 494) தேசிகர் எடுத்து அமைத்துக்கொண்டார். விருத்தியுரையைப் பதிப்பித்த பிற பதிப்பாசிரியர்களும்[102] இந்த நகல்முறையையே கடைப்பிடித்துள்ளனர்.

இவ்வாறு ஆறுமுக நாவலரின் விருத்தியுரைப் பதிப்பு (1851) தொடங்கிச் சங்கர நமச்சிவாயர் உரையின் ஐந்தாவது பதிப்பு (1991) வரையில் இந்தப் பிழை சாகா வரம் பெற்றுவிட்டது. ஆறுமுக நாவலர், சாமிநாதையர் போன்ற பதிப்புச் செம்மல்களை மதித்துப் பின்பற்றுவது வேறு; அவர்களுடைய பதிப்புகளைக் கண் மூடிப் பிரதி செய்துகொள்வது வேறு. பதிப்புக் கலை வளரப் பின்னது அணுவளவும் பயன்படாது என்பது மறுக்க முடியாத உண்மை.

இத்தகைய குறைபாடுகள் இருந்தாலும் சங்கர நமச்சிவாயர் செய்து சிவஞான முனிவரால் திருத்தப்பட்ட புத்தம் புத்துரை என்னும் நன்னூல் விருத்தியுரைக்கு இதுகாறும் வெளிவந்துள்ள ஐந்து பதிப்புகளில் தண்டபாணி தேசிகர் பதிப்பே சிறந்தது. உணர வல்லார்க்கு இப்பதிப்பின் சிறப்பு உணர்த்தாமலே விளங்கும்; உணர-மாட்டார்க்கு உணர்த்தினாலும் அது விளங்காது.

## சுந்தரேசம் பிள்ளை பதிப்பு

திருவாவடுதுறை ஆதீனப் பதிப்புக்குப் பின்னர்த் திருப்பனந்தாள் செந்தமிழ்க் கல்லூரிப் பேராசிரியர் சுந்தரேசம் பிள்ளை நன்னூல் விருத்தியுரைக்கு 1969-இல் ஒரு பதிப்பை வெளியிட்டுள்ளார். இது விற்பனை நோக்கில் வெளியிடப்பட்ட பதிப்பு

---

[101] **ஆறுமுக நாவலர் பதிப்புகளிலும் (1851. பக். 239; 1933. பக். 255) இந்த உதாரணம் இவ்வாறுதான் காணப்படுகிறது.**

[102] **நன்னூல் விருத்தியுரை, கழகப் புலவர் குழுவினர், 1956. பக். 320; எம். சுந்தரேசம் பிள்ளை, சொல்லதிகாரம், 1969. பக். 103; சோம. இளவரசு, 1981. பக். 445.**

என்பதை, "**இந்நூல் தமிழகப் பல்கலைக்கழகங்களில் புலவர் வகுப்பிற்குப் பாடமாக வைக்கப்பட்டுள்ளது. ஆதலின் தமிழறிஞர்களும் மாணாக்கர்களும் இந்நூலினைப் பெற்று எனது பணியை ஊக்குவிக்க வேண்டுகிறேன்.**" (பதிப்புரை பக். 4) என்னும் வேண்டுகோள் அறிவிக்கிறது. "**இப்புதுப் பதிப்புக்கு இன்று வரை அச்சான நூல்கள் அனைத்தும் பேருதவி புரிந்தன.**" என்று பதிப்புரை (பக். 3) கூறுவதால் இதுவும் கழகப் பதிப்பைப் போன்று பதிப்புகளைப் பார்த்துத் தயாரிக்கப்பட்டது. பதிப்புப் பிழைகளில் எத்தனை வகை உண்டோ அத்தனை வகைக்கும் நல்ல உதாரணங்கள் இப்பதிப்பில் உண்டு. அந்த வகையில் இதையும், 'ஒரு முன்மாதிரிப் பதிப்பு' என்றே சொல்ல வேண்டும். நன்னூல் பதிப்பு விவரங்களைத் தொகுத்துள்ளவர்களில் யாரும் இப்பதிப்பைப் பார்த்ததாகத் தெரியவில்லை. அதனால் தமிழியல் வட்டத்தில் இது மிகுதியாகப் பரவவில்லை என்று தோன்றுகிறது. அதுவும் ஒரு நன்மைக்கே.

## இளவரசு பதிப்பு

நல்ல தமிழ் நூல்களை வழங்கிய அண்ணாமலைப் பல்கலைக்கழகம் 1981-இல் நன்னூல் விருத்தியுரைக்கு ஒரு பதிப்பை வெளியிட்டுள்ளது. தமிழியலுக்கு இலக்கண வரலாற்றை எழுதி உதவிய சோம. இளவரசு இதன் பதிப்பாசிரியர். தேர்வுக்கு உதவும் நோக்கத்தோடு ஒவ்வொரு இயலிலும் உள்ள நூற்பாக்களின் கருத்துகளை அதிகாரத் துவக்கத்தில் (1981. ப்க். 1-40; 277-323; 1990. பக். 1-42; 311-366), உரைநூல் பாணியில் பதிப்பாசிரியர் தொகுத்துத் தந்துள்ளார். இப்பதிப்பில் இப்பகுதி மட்டுமே அவருடைய பங்களிப்பு. நன்னூல் உரைகளைப் பற்றிய வரலாற்றுக் குறிப்புகள் (1981. பக். vi-xi 1990. பக். vii-xii), ஒவ்வொரு அதிகாரத்தின் இறுதியிலும் (1981. பக். 225-276; 543-572; 1990. பக். 250-310; 617-651) உள்ள விளக்கக் குறிப்புகள் முதலிய மற்ற பகுதிகளில் பெரும்பாலானவை உ. வே. சாமிநாதையரின் சங்கர நமச்சிவாயர் உரை, தண்டபாணி தேசிகரின் நன்னூல் விருத்தியுரை, க. ப. அறவாணனின் எழுநூறு ஆண்டுகளில் நன்னூல் போன்ற நூல்களிலிருந்து கொண்டவை. கைப்புண்ணுக்குக் கண்ணாடி தேவை இல்லாததுபோல் இவற்றை மெய்ப்பிக்கவும் சான்று தேவை இல்லை.

சுவடியைத் தொடாமலும் பதிப்புகளை ஒப்பிடாமலும் உருவான இந்த நகல்பதிப்புக்குத் தண்டபாணி தேசிகர் விருத்தியுரையின் இரண்டாவது பதிப்பு (1971) அசல். மூலம், உரை, மேற்கோள் முதலியவை அதிலிருந்து அப்படியே எடுத்து அச்சுக் கோக்கப்பட்டுள்ளன. அப்படியே என்பதில் அதன் பிழைகளும் அடங்கும். இதற்கு ஒருசில உதாரணங்களைக் காட்டுவது முறை. பதவியலின் இறுதி நூற்பாவில்,

"**உயிர்மெய் உயிரளபு** (நன். 150) என்பதும் புள்ளும் வள்ளும் என்னும் நூற்பாவில், "**தொழிற்பெயர் மானும்**" (நன். 234) என்பதும் தண்டபாணி தேசிகரின் இரண்டாவது பதிப்பில் (1971. பக். 189, 284) காணப்படும் பிழைப் பாடங்கள். சோம. இளவரசு இவற்றையே தமது விருத்தியுரைப் பதிப்பிலும் (1981. பக். 142, 205) பிழைகளோடு அச்சிட்டுக்கொண்டார். தேசிகரின் நன்னூல் பதிப்புகள் இரண்டையும் ஒப்பிடுவோர்க்கு, "**உயிர்மெய்யும் உயிரளபு**", "**தொழிற்பெயரும் மானும்**" என்று உம்மை சேர்த்து ஆறுமுக நாவலரும் (1851) சாமிநாதையரும் (1935) அந்த நூற்பாக்களுக்குக் கொண்ட உண்மைப் பாடங்களையே தமது முதல் பதிப்பில் (1957. பக். 133, 206) தண்டபாணி தேசிகரும் கொண்டுள்ளார் என்ற உண்மை புலப்படாமல் இருக்காது. இவை மட்டும் அல்ல. எந்த ஒரு பதிப்பிலும் இல்லாத புதுப் பாடங்களும் சோம. இளவரசு பதிப்பில் காணப்படுகின்றன. காட்டாக மொழியின் முதல் ஈறு இடைநிலைகளுக்குப் புறனடை கூறும் நூற்பாவில், "**இயலும் என்ப**" (நன். 121) என்பதே தேசிகர் பதிப்புகள் உள்ளிட்ட பழம்பதிப்புகள் அனைத்திலும் உள்ள பாடம். அதன் உரையில் அமைந்துள்ள, "**என்று சொல்லுவர் புலவர்**" என்ற உரைத் தொடருக்கு, "**என்ப**" என்பதே பாடம். பாடபேதம் நிகழாத நன்னூல் நூற்பாக்களுள் இதுவும் ஒன்று என்பதால் இளவரசு பதிப்பில் உள்ள, "**இயலும் என்க**" என்பது நிச்சயம் பிழைப் பாடம்.

அடுத்து, பெண்பாற்பெயரைக் கூறும் நூற்பாவின் உரையில், "**ளகர ஒற்றிற்கும் இகர உயிர்க்கும்**" என்று இருக்க வேண்டிய உரைத்தொடர் தண்டபாணி தேசிகர் பதிப்பில், "**ளகர ஒற்றிற்கும் இகர ஒற்றிற்கும்**" (நன். 277) என்று பிழையாக அச்சிடப்பட்டுள்ளது. இதுபோலவே, "**வையெயிற்றுச் சின்மொழி அரிவையைப்**" என்னும் குறுந்தொகைப் பாடலின் தொடர் தேசிகர் பதிப்பில், "**வையெயிற்றுச் சின்மொழி அரிவை வையைப்**" (நன். 431) என்று பிழைபட்டுள்ளது. இவ்வாறு தண்டபாணி தேசிகருடைய இரண்டாவது பதிப்பில் (1971) நேர்ந்துள்ள பிழைகளை எல்லாம் சோம. இளவரசு தமது பதிப்பில் அப்படியே அச்சிட்டுவிட்டார். தேசிகரின் முதல் பதிப்போடு (1957) இரண்டாவது பதிப்பை ஒப்புநோக்கியிருந்தால் இப்பிழைகளில் பலவற்றை அவர் தவிர்த்திருக்கலாம்.

இவற்றைத் தவிர இந்தப் பதிப்பில் இளவரசால் நேர்ந்த பிழைகளும் அதிகம். பிழை என்றால் வெறும் அச்சுப்பிழை அல்ல. அது தமிழ் நூல்களின் தொழிற்பண்பு என்பதால் அது அல்ல இங்கே குறிக்கப்படுவது. இது வேறு வகை. உரைப் பகுதிகள் இப்பதிப்பில் பல இடங்களில் விடுபட்டுள்ளன. காட்டாக வினைவிகுதிகளைக் கூறும்

நூற்பாவின் பொழிப்புரையில், **"பெயரிடத்தும் இவற்றுள் சில விகுதிகளாம்."** (நன். 140) என்ற பகுதியும் தேன்மொழிக்கு விதி வகுக்கும் நூற்பாவின் பொழிப்புரையில், **"கெடுதலும் வல்லினம் வரின் இறுதி இயல்பாதலே அன்றி"** (நன். 214) என்னும் உரை வாசகமும் விடுபட்டுள்ளன. வினைப்பகுதிக்குப் புறனடை கூறும் நூற்பாவுக்குச் சங்கர நமச்சிவாயர் வரைந்த மறுப்பும் விளக்கமும் கொண்ட ஒரு பத்தி (நன். 139) அடியோடு மறைந்துவிட்டது. அதற்குச் சாமிநாதையர் பதிப்பைப் பார்த்து எழுதிய அடிக்குறிப்பு மட்டும் தொடர்பற்று நிற்கிறது. இது போன்ற விடுபாடுகளை வேறு பகுதிகளிலும்[103] காணலாம். ஆகவே இதன் முன்னுரையில், **"இப்பதிப்பு இதுகாறும் வெளிவந்துள்ள நன்னூல் விருத்தியுரைப் பதிப்புகளினும் பல துறைகளில் சிறந்து விளங்குவதாகும்."** என்று நா. பாலுசாமி கூறியது ஒப்புக்குச் சொன்னது; உண்மை அல்ல.

நூலின் தலைப்பைப் பொறுத்த வரையில் பதிப்பாசிரியர் சோம. இளவரசு குருவை மிஞ்சிய சீடர். முகப்புத் தாளில் உரையாசிரியர் பெயர் எதுவும் இல்லாமல், **"நன்னூல் விருத்தியுரை"** என்று அவர் இப்பதிப்புக்குக் கொடுத்துள்ள தலைப்பு தண்டபாணி தேசிகர் கொடுத்துள்ளதை விடவும் அரைகுறையானது. விருத்தியுரை என்னும் பெயர் சங்கர நமச்சிவாயர் உரைக்கும் சிவஞான முனிவரால் திருத்தப்பட்ட புத்தம் புத்துரைக்கும் பொது என்றாலும் வெறுமனே விருத்தியுரை என்றால் முனிவர் திருத்தங்களைக் கொண்ட புத்தம் புத்துரையாகக் கொள்வது நடைமுறை. எனவே சோம. இளவரசு தம்முடைய பதிப்புக்குக் கொடுத்துள்ள குறைத் தலைப்பு நல்ல ஆய்வாளரையும் தடுமாறச் செய்துவிடும்; தவறு செய்ய வைத்துவிடும். இதற்கு ஏற்றதோர் உதாரணத்தை உரையாசிரியர்கள் என்னும் நூல் வழங்குகிறது.

சிவஞான முனிவரைப் பற்றி நோக்கு என்னும் தலைப்பில், **"சிவஞான முனிவர் நன்னூலில் சில நூற்பாக்களுக்கு நுண்பொருளும் விளக்கமும் எழுதுகின்றார். ஒவ்வொரு சொல்லையும் ஆழ்ந்து நோக்கிப் பொருள் கூறுகின்றார்."** என்று மு. வை. அரவிந்தன் (1995. பக். 536-537) கருத்துரை வழங்குகிறார். அதற்குச் சான்றாக, **"ஒருவ ரென்பது"** (நன். 289) என்ற நூற்பாவின் உரையில் விளக்கப்படும் நயவுரைக் கூறுகள் ஏழையும் பட்டியலிட்டுக் காட்டியதோடு, **"இப்பகுதி சிவஞான முனிவரின் இலக்கண ஆராய்ச்சியை வெளிப்படுத்துகின்றது."** என்று அவர் சான்றுரையும் கூறியுள்ளார். ஆனால் இந்த உரைப் பகுதி சிவஞான முனிவர் எழுதியதே அல்ல;

[103] **உரைப் பகுதிகள் விடுபட்டுள்ள பிற இடங்கள்: நூ. 130, 219, 229, 254, 296, 330, 407, 437.**

பவணந்தி முனிவரின் சொல்லாட்சியை ஆழ்ந்துணர்ந்து சொல்லுக்குச் சொல் நயவுரை வரைந்தவர் சங்கர நமச்சிவாயர். இவ்வாறு ஒருவர் உரையை மற்றொருவர் உரையாக மு. வை. அரவிந்தன் பிறழ உணர்ந்ததற்கு அவர் பயன்படுத்திய இந்த விருத்தியுரையின் பதிப்பியல் குறைபாடு மட்டும் காரணம் அல்ல; இப்பதிப்புக்குச் சோம. இளவரசு கொடுத்துள்ள குறைத் தலைப்பும் ஒரு காரணம். இத்தகைய குறைபாடுகளில் ஒன்றைக் கூடத் திருத்தாமல் இதற்கு ஒரு மறுபதிப்பை (1990) வெளியிட்டுள்ள பல்கலைக்கழக வெளியீட்டுத் துறையைப் பாராட்ட முடியவில்லை.

நிறை குறைகளை நினைத்துப் பார்க்கும் போது ஒரு பல்கலைக்கழகப் பதிப்பின் தரம் இன்னும் கொஞ்சம் உயர்ந்திருக்கலாம் என்று எதிர்பார்க்கத் தோன்றுகிறது. இப்பதிப்பைப் பயன்படுத்திப் பார்த்தவர்கள் இந்த எண்ணத்தை என்னுடன் பகிர்ந்து-கொள்வார்கள்.

## புதிய விருத்தியுரைப் பதிப்பு

இலக்கண மரபு, நூலாசிரியர், நூல், உரைகள், பதிப்புகள் ஆகியவற்றைப் பற்றி விரிவாகப் பார்த்தோம். இனி இப்பதிப்பைப் பற்றிப் பார்க்கலாம். இந்தப் பதிப்புக்கு ஆதாரங்கள் இரண்டு. ஒன்று நன்னூல் விருத்தியுரைச் சுவடி; இரண்டு விருத்தியுரைப் பதிப்புகள். இந்தச் சுவடி ஒரு கடிதப்பிரதி. திருநெல்வேலி அம்பலவாணர்[104] பரம்பரையினரின் குடும்பத்திலிருந்து கிடைத்த இந்தச் சுவடியை நண்பர் பா. ரா. சுப்பிரமணியன் எனக்கு வழங்கினார். அவர் அப்போது ஜெர்மனியில், கொலோன் பல்கலைக்கழக இந்தியவியல் துறையில் பணியாற்றினார். இது நன்னூல் மூலமும் சங்கர நமச்சிவாயர் செய்து சிவஞான முனிவர் திருத்திய புத்துரையும் கொண்டது. இதன் முகப்பில், "**நன்னூல் உரைப்பாடம்**" என்ற தலைப்பு மட்டுமே உண்டு; வேறு தகவல்கள் எதுவும் இல்லை. இரண்டு தொகுதிகளாகக் கட்டமைப்பு செய்யப்பட்டுள்ள இந்தச் சுவடியின் முதல் தொகுதியில் 305 பக்கமும் இரண்டாவது தொகுதியில் 538 பக்கமும் உள்ளன. ஒரு பக்கத்தில் 15 முதல் 18 வரிகள் வரை அடித்தல் திருத்தல்கள் இல்லாமல் தெள்ளத் தெளிவாக எழுதப்பட்டுள்ளன. இராமபாணப் பூச்சிகளின் துளைகளால் இந்தப் பிரதியின் பல பகுதிகளில் எழுத்துகள் உருக்குலைந்துள்ளன. சிவஞான முனிவர் மாணவர்களில் யாராவது சென்ற நூற்றாண்டின் தொடக்கத்தில் இந்தக் கையெழுத்துப் பிரதியை உருவாக்கியிருக்கலாம் என்பது என் கணிப்பு. இந்தப் பதிப்புக்கு இதுவே முதன்மை ஆதாரம்.

---

[104] **சாமிநாதையர் (என் சரித்திரம், 1950. பக். 866) இந்தக் குடும்பத்தைப் பற்றிப் புகழ்ந்து பேசியுள்ளார்.**

ஆறுமுக நாவலர், தண்டபாணி தேசிகர், சாமிநாதையர் ஆகியோர் ஆராய்ந்து வெளியிட்ட நன்னூல் விருத்தியுரை, சங்கர நமச்சிவாயர் உரை ஆகியவற்றின் முதல் பதிப்புகள் இப்பதிப்புக்குத் துணைமை ஆதாரங்கள். உரைப்பாடங்களை ஒப்பிட்டு ஆராய்வதற்குப் பிற பழைய பதிப்புகளும் ஓரளவு உதவின. அவற்றின் நூலடைவுக் குறிப்புகளைத் துணை புரிந்த நூல்கள் என்ற பகுதியில் காணலாம். ஆகவே இது ஒரு செம்பதிப்பு; கடிதப்பிரதியை அச்சுப் படிகளோடு ஒப்புநோக்கி ஆராய்ந்து பதிப்பிக்கப்பட்டுள்ளது; சங்கர நமச்சிவாயர் உரையில் சிவஞான முனிவர் செய்த திருத்தங்களைக் குறியீடுகளாலும் எழுத்தின் அளவாலும் வேறுபடுத்தி அறியுமாறு[105] தெளிவாகப் பதிப்பிக்கப்பட்டுள்ளது. நன்னூல் கூழங்கைத் தம்பிரான் உரையை நான் மீண்டும் செப்பமாகப் பதிப்பிக்க எண்ணியிருந்த சமயத்தில் நண்பர் பா. ரா. சுப்பிரமணியன் இந்தக் கையெழுத்துப் பிரதியை வழங்கி என்னை இந்தப் பணியில் ஈடுபடுத்தினார். அவருடைய எண்ணம் ஈடேறியுள்ளதாக நம்புகிறேன்.

ஆறுமுக நாவலர், சாமிநாதையர், தண்டபாணி தேசிகர் ஆகியோர் நன்னூல் விருத்தியுரைக்கு வெளியிட்ட பதிப்புகளைப் போல, அவர்கள் தொட்டுக் காட்டிய பதிப்பு முறைகளைக் கடைப்பிடித்து, நன்னூல் விருத்தியுரைக்குச் செம்பதிப்பு ஒன்றை வெளியிடுவதே என் முக்கியக் குறிக்கோள். அதோடு அவர்களுடைய பதிப்புகளில் தற்செயலாக விழுந்துவிட்ட ஓரிரு பிழை விதைகளிலிருந்து வளர்ந்துள்ள தப்புச் செடிகளைக் களையவும் முயன்றுள்ளேன். அறிவாற்றலும் செயல்திறனும் தலைமுறைதோறும் வளரக் கூடியன. "**தம்மின்தம் மக்கள் அறிவுடைமை**" என்று வள்ளுவம் உணர்த்துவதும் இதுவே. அதனால் மூலம், உரை, உதாரணம், மேற்கோள் என்னும் அகப்பகுதிகளும் பதிப்புரை, அடிக்குறிப்புகள், இலக்கணக் கலைச்சொற்கள் முதலிய புறப்பகுதிகளும் முன்னைய பதிப்புகளை விடவும் இப்பதிப்பில் சிறப்பாக ஆராயப்பட்டுள்ளன. பிற பதிப்புகளோடு இப்பதிப்பின் ஏதாவது ஒரு பகுதியை ஒப்பிட்டாலும் இதன் சிறப்பியல்புகளை உணர முடியும். என்றாலும் சிலவற்றை எடுத்துக்காட்டுவது நல்லது.

## பதிப்புத் தகவல்கள்

உரையோடு ஒரு நூலைப் பதிப்பிப்பவர் அந்நூலுக்கு எழுந்த மற்ற உரைகள், அவற்றுக்கு வெளிவந்த முந்தைய பதிப்புகள் ஆகியவற்றைப் பற்றிய தகவல்களைத்

[105] **'குறியீடுகளை அறிய உதவும் குறிப்புகள்' என்னும் பகுதியில் கொடுத்துள்ள முதல் மூன்று குறிப்புகளில் உரையையும் திருத்தப் பகுதிகளையும் வேறுபடுத்தியுள்ள முறை விளக்கப்பட்டுள்ளது. சிவஞான முனிவர் செய்த திருத்தங்கள்: ஒரு கண்ணோட்டம் என்ற பின்னிணைப்பிலும் இத்திருத்தப் பகுதிகள் தொகுத்துச் சுட்டப்பட்டுள்ளன.**

தெரிவிப்பது கடமை. அதனால்தான் சாமிநாதையர், தண்டபாணி தேசிகர் போன்றோர் தங்கள் முகவுரைகளில் பதிப்புத் தகவல்களைக் கொடுத்துள்ளனர். ஆனால் அவற்றை அவர்கள் முழுமையாகக் கொடுத்துள்ளதாகச் சொல்ல முடியாது. காட்டாக நன்னூல் விருத்தியுரையைப் பற்றி, **"இவ்வுரையைப் புத்தம் புத்துரை எனவும் வழங்குவர். இஃது அச்சிடப்பட்டுள்ளது."** என்றும் விசாகப்பெருமாளையர் காண்டிகையைப் பற்றித், **"திருத்தணிகை விசாகப்பெருமாளையர் முதலிய பலரால் அப்பொழுது அப்பொழுது காலத்திற்கு ஏற்ப ஆக்கப்பட்ட காண்டிகையுரைகள் பல இக்காலத்து வழங்குகின்றன."** என்றும் சாமிநாதையர் (1925. முகவுரை பக். 2) குறைத் தகவல்களையே கொடுத்துள்ளார். சென்ற நூற்றாண்டில் வெளிவந்து புகழ்பெற்ற இப்பதிப்புகளே அவருடைய இளமைக் கால நன்னூல் படிப்புக்குத் துணை நின்றவையாக இருக்க முடியும். அதை நினைத்தாவது சாமிநாதையர்[106] அவற்றின் நூலடைவு விவரங்களை முழுமையாகத் தெரிவித்திருக்க வேண்டும்.

சாமிநாதையர் கொடுத்துள்ளதை விடவும் குறைவான தகவல்களே தண்டபாணி தேசிகர் முகவுரையில் காணப்படுகின்றன. குமாரசுவாமிப் புலவர் நன்னூலுக்கு உரை எழுதியது, நன்னூல் விருத்தியுரைப் பகுதிகளை முதன் முதல் விசாகப்பெருமாளையர் அச்சிட்டது போன்ற தகவல்களை அவர் முகவுரை (1957. பக். 8) வழங்குகிறது. ஆயினும் அந்தப் பதிப்புகளின் பிற நூலடைவு விவரங்கள் எதையும் அதில் காண முடியவில்லை. ஆதார நூல்களைப் பற்றிய அடிப்படைத் தகவல்களைத் தொகுத்துப் பதிவு செய்வது ஆய்வின் வளர்ச்சிக்கு முக்கியம்; அந்த விவரங்களை முழுமையாகவும் துல்லியமாகவும் பதிவு செய்வது அதை விடவும் முக்கியம். இந்த நோக்கத்தோடு நன்னூலின் பதிப்பு வரலாறு விரிவாகப் பேசப்பட்டதோடு பழைய பதிப்புகளின் நூலடைவும் நூலின் இறுதியில் தரப்பட்டுள்ளது.

## முனிவர் திருத்தங்கள்

சங்கர நமச்சிவாயர் உரையில் சிவஞான முனிவர் செய்த திருத்தங்களையும் அவர் இலக்கணக் கொத்திலிருந்து எடுத்து எழுதிய பகுதிகளைப் பற்றிய குறிப்புகளையும் சாமிநாதையரும் தண்டபாணி தேசிகரும் தங்கள் பதிப்புகளில் காட்டியது முன்பே (பக். 61, 63) குறிப்பிடப்பட்டது. என்றாலும் அவர்கள் அம்முயற்சியில் முழு வெற்றி அடையவில்லை. சங்கர நமச்சிவாயரின் உரையில் முனிவர் கூட்டியும் குறைத்தும் செய்த திருத்தங்களுள் ஒரு வகை சங்கர நமச்சிவாயர் உரையை நீக்கியது. காட்டாக,

---

[106] **"தமக்கு முன்பு பிறர் பரிசோதித்து வெளியிட்ட பதிப்புகளைப் பற்றியும் இவர் பெரும்பாலும் குறித்ததே இல்லை." என்று எஸ். வையாபுரிப் பிள்ளை (1968. பக். 296) கூறுவது உண்மை.**

**"முதனூல் கருத்தன்"** (நன். 49) என்னும் நூற்பாவுக்குச் சங்கர நமச்சிவாயர் வரைந்த உரையில், **"நூற்பெயர்க்கும் யாப்பிற்கும் சிறப்புவிதி உணர்த்த வேண்டுதலின் அவ்விரண்டனுள்"** என்ற பகுதியைச் சிவஞான முனிவர் நீக்கிவிட்டார். இவ்வாறே பகுதியை விளக்கிக் கூறும் நூற்பாவின் (நன். 134) உரையிலும் முனிவர் ஒரு பத்தியை நீக்கிவிட்டார். இது போன்ற இடங்களில் சிவஞான முனிவர் செய்த திருத்தம் உரை நீக்கம் மட்டுமே; வேறு விளக்கம் ஒன்றும் அவர் எழுதவில்லை. சங்கர நமச்சிவாயர் உரையை முனிவர் மாற்றிக் குறைத்ததற்கும் வெறுமனே உரை நீக்கம் செய்ததற்கும் உள்ள நுண்ணிய வேறுபாட்டைப் பதிப்பாசிரியர்கள் கவனிக்கவில்லை. அதனால் அவற்றை ஒரு வகையிலும் அவர்கள் குறிப்பிடவில்லை.

சிவஞான முனிவர் சேர்த்து எழுதிய விளக்கங்களில் ஒரு பகுதி இலக்கணக் கொத்திலிருந்து எடுக்கப்பட்டவை என்பது மேலகரம் சுப்பிரமணிய தேசிகர் காலம் முதலே[107] தெரிந்த செய்தி. தெய்வசிகாமணி முதலியாரும் சண்முகம் பிள்ளையும் அவற்றுள் எட்டு இடங்களைத் (நூ. 292, 295, 296, 297, 298, 299, 300, 317) தங்கள் பதிப்பில் (1889) குறித்தார்கள். சாமிநாதையர் (1935) ஒரே ஒரு இடத்தை மட்டும் (நூ. 296) குறித்தார். அவர்களை விட மிகுதியான பகுதிகளைத் தண்டபாணி தேசிகர் குறித்திருந்தாலும் அவர் பதிப்பிலும் சில இடங்கள்[108] (நூ. 340, 351) விடுபட்டுவிட்டன. இவையன்றித் தொல்காப்பிய உரைப் பகுதிகளையும் தமது புத்துரை விளக்கங்களில் சிவஞான முனிவர் எடுத்துச் சேர்த்துள்ளார். உதாரணமாக நச்சினார்க்கினியர் உரையை அவர் சில இடங்களில் (நன். 89, சொல்லதிகாரத் தோற்றுவாய், 267, 321) எடுத்து இணைத்துள்ளார். அவற்றை எல்லாம் விருத்தியுரைப் பதிப்பாசிரியர்கள் கண்டுகொள்ளவே இல்லை. அதனால் அப்பகுதிகள் எல்லாம் சிவஞான முனிவரின் உரை[109] என்று பலரால் பிறழ உணரப்படுகின்றன. அந்த உரைப் பகுதிகள் அனைத்தும் இப்பதிப்பில் கோண அடைப்புக்குறிகளாலும் அடிக்குறிப்புகளாலும் வேறுபடுத்திக் காட்டப்பட்டுள்ளன.

## மேற்கோள் இடவிளக்கம்

மூலநூலின் விளக்கத்துக்கு உரை; உரையின் தெளிவுக்கு உதாரணம் என்று இவை ஒன்றுக்கு ஒன்று உறவுடையன. உயிர்க்கு உணவுபோல நூலுக்கு உரமூட்டுவது உரை

---

[107] ***சாமிநாதையர், 1925. முகவுரை பக். 3; என் சரித்திரம், 1950. பக். 559.***

[108] ***சிவஞான முனிவர் எடுத்துக்காட்டிய பகுதிகளில் சில (இல. கொ. 43, 52-58, 61, 84 முறையே நன். 317, 302, 317, 340) தி. வே. கோபாலையர் பதிப்பித்த இலக்கணக் கொத்திலும் (தஞ்சாவூர், 1973.) குறிக்கப்படவில்லை.***

[109] ***க. ப. அறவாணன், 1977. பக். 161, 166; க. விநாயகம், 1991. பக். 51.***

என்றால் உணவுக்கு உப்புபோல உரைக்குச் சுவையூட்டுவது உதாரணம் எனலாம். அதனால் இலக்கண உரையாசிரியர்கள் நல்ல இலக்கிய உதாரணங்களைத் தெரிவு-செய்து எடுத்துக்காட்டினார்கள். வெறும் விதிவிளக்கத்துக்காக மட்டுமே இலக்கிய உதாரணங்களை அவர்கள் எடுத்துக்காட்டவில்லை. அதோடு ஒப்பிலக்கியக் கல்வியும் இலக்கிய ஆராய்ச்சியும் அவர்களுடைய துணை நோக்கங்களாக இருந்திருக்கலாம். எச்சங்களை விளக்குவதற்கு மயிலைநாதர் (நன். 359) முப்பது செய்யுள்களை எடுத்துக்-காட்டுவதும் சங்கர நமச்சிவாயர் அப்பகுதியில் ஒரு குறட்பாவுக்கு (நன். 360) விரிவுரை வழங்குவதும் இக்கருத்துக்குச் சான்று கூறும். இவ்வாறு உரையாசிரியர்கள் எடுத்துக்-காட்டிய எண்ணற்ற இலக்கிய மேற்கோள்களுக்கு எல்லாம் இடவிளக்கம் தருவது அரிய பணி; ஆயினும் அது ஒரு நல்ல பதிப்பாசிரியனின் கடமை.

இலக்கணப் பதிப்புகளைப் பார்த்த வரையில் தெய்வசிகாமணி முதலியாரும் சண்முகம் பிள்ளையும் (1889) வெளியிட்ட நன்னூல் விருத்தியுரைப் பதிப்பில்தான் மேற்கோள் இடவிளக்கக் குறிப்புகள் முதன் முதல் தரப்பட்டுள்ளன. சாமிநாதையரின் இலக்கணப் பதிப்புகளில் அவை திருத்தமும் தெளிவும் பெற்றன. மேற்கோள்களுக்கு இடவிளக்கம் கொடுத்ததோடு அமையாமல், விளங்கா மேற்கோள்கள் நாளடைவில் விளங்கக் கூடும் என்னும் தொலைநோக்கோடு அவற்றுக்கும் அகராதி தொகுத்த நுண்ணறிவு சாமிநாதையருக்கே உரியது.

இலக்கண உரைகளில் சிறப்பாக இருவகை மேற்கோள்களைக் காணலாம். உரை வகுக்கப்படும் மூலநூலின் நூற்பாக்களை அல்லது நூற்பாக்களின் தொடர்களை உரையின் பிற பகுதிகளில் எடுத்துக்காட்டுவது ஒரு வகை; உரை விளக்கத்துக்காகப் பிற இலக்கிய இலக்கண மேற்கோள்களை எடுத்துக்காட்டுவது இரண்டாவது வகை. தமிழ் உரைமரபில் தொடக்கம் முதல் காணப்படும் இந்த இருவகை மேற்கோள்களை-யும் சங்கர நமச்சிவாயர் மிகுதியாகக் காட்டியுள்ளார்.

ஒரு நூற்பாவின் உரையில் அந்நூற்பாவின் சொற்களையும் தொடர்களையும் சங்கர நமச்சிவாயர் எடுத்துக்காட்டி நயவுரை எழுதுவது முன்பே விளக்கிக் கூறப்பட்டது. இது போன்ற தொடர்களுக்கு, **'மெய்தெரி பொருண்மே லன்மையும் விளம்புப'** (நூ. 376), **'உயர்திணை தொடர்ந்த பொருண்முத லாறு'** (நூ. 377) என்பதுபோல ஒற்றை மேற்கோள் குறியிடுவது[110] சாமிநாதையரின் (1935. பக். 347) பதிப்பு முறை.

**[110] இக்குறியீட்டு முறையைப் பிற இலக்கணப் பதிப்பாசிரியர்கள் கடைப்பிடிக்காதது வருந்தத் தக்கது.**

ஆனால் சங்கர நமச்சிவாயர் நயவுரை வரைந்த தொடர்கள் எல்லாவற்றுக்கும் அவர் அவ்வாறு குறியிட்டுக் காட்டவில்லை. உதாரணமாக, "**ஒருவ ரென்பது**" (நன். 289) என்னும் நூற்பாவில் இருசொற்களைத் தவிர ஏனையவற்றுக்குச் சங்கர நமச்சிவாயர் நயவுரை வரைந்துள்ளார். அவற்றில் எதுவும் சாமிநாதையர் பதிப்புகளில் மேற்கோள் குறியிட்டுக் காட்டப்படவில்லை.

கருத்து விளக்கம், பொருளியைபு, உதாரணம், முதற்குறிப்பு முதலிய காரணங்களுக்காகச் சங்கர நமச்சிவாயர் இருநூறுக்கு மேற்பட்ட இடங்களில் மூலநூலின் நூற்பாக்களையும் தொடர்களையும் தமது உரையில் பரவலாக எடுத்தாண்டுள்ளார். உதாரணமாக, "**ஒருமொழி யொழிதன் னினங்கொளற் குறித்தே**" (நன். 358) என்னும் நூற்பா அவரால் பல முறை (நூ. 92, 303, 315, 320, 328, 356, 380) எடுத்தாளப்பட்டுள்ளது. இந்த ஒரு வரிச் சூத்திரம் தண்டபாணி தேசிகர் பதிப்பில் (1957) நான்கு வகையாக அச்சிடப்பட்டுள்ளது. "**பொதுப்பெய ருயர்திணை**" (நன். 159) என்னும் நூற்பாவின் தொடர்கள் இதுபோல் பல இடங்களில் (நூ. 178, 211, 218, 229, 242, 372) அவரது உரையில் எடுத்தாளப்பட்டுள்ளன. சாமிநாதையர் (1935), தண்டபாணி தேசிகர் (1957) பதிப்புகளில் இவை வெவ்வேறு வகைகளில் அச்சிடப்பட்டுள்ளன. இவற்றை எல்லாம் மூல நூற்பாவில் உள்ளவாறு ஒரே வகையில் சீர் பிரித்துப் பதிப்பிப்பதே சிறப்பு. இனி, இரண்டாவது வகை மேற்கோள்களுக்கு இடவிளக்கம் தருவதைப் பற்றியும் சிறிது சொல்ல வேண்டும்.

சங்கர நமச்சிவாயர் உரையின் இரண்டாவது பதிப்பை வெளியிடும் முன்பு, தமது அரை நூற்றாண்டு நூற்பதிப்பு நற்பணியில் குறுந்தொகை, தமிழ்நெறி விளக்கம் நீங்கலாக ஏனைய இலக்கிய இலக்கணங்களை எல்லாம் சாமிநாதையர் வெளியிட்டுவிட்டார். அதனால் ஒரு நல்ல பதிப்பை உருவாக்குவதற்கு வேண்டிய பதிப்புக் களமும் கருவிகளும் அவரிடம் இருந்தன. அவற்றை எல்லாம் சங்கர நமச்சிவாயர் உரையின் இரண்டாவது பதிப்புக்கு அவர் தகுந்த முறையில் பயன்படுத்திக்கொண்டார். ஏறக்குறைய ஐம்பது நூல்களிலிருந்து சங்கர நமச்சிவாயர் எடுத்தாண்டிருந்த மேற்கோள்களுக்குத் தமது பதிப்பில் சாமிநாதையர் இடவிளக்கக் குறிப்புகளைக் குறித்திருந்தார். பதிப்பாசிரியர் பலரும் அவற்றை நம்பகமான குறிப்புகளாக ஏற்றுக்கொண்டனர்; தங்கள் பதிப்புகளில் அப்படியே எடுத்துச் சேர்த்துக்கொண்டனர். சாமிநாதையரிடம் கொண்டிருந்த நம்பிக்கை காரணமாக அவர்களில் யாரும் அவற்றை மீண்டும் மூலநூல்களோடு ஒப்பிட எண்ணவும் இல்லை; அப்பணியில் ஈடுபடவும் இல்லை.

நம்புவது நல்லது; அதை விடவும் நல்லது பரிசோதனை செய்வது என்னும் உயரிய குறிக்கோளுடன் சாமிநாதையரும் தண்டபாணி தேசிகரும் கொடுத்திருந்த மேற்கோள் குறிப்புகள் அனைத்தும் மூலநூல்களோடு மீண்டும் ஒப்பிடப்பட்டுள்ளன; அரிச்சந்திர புராணம், திருநூற்றந்தாதி போன்று பாடத்திட்டத்தில் இடம் பெறாத நூல்களோடும் ஒப்பிடப்பட்டுள்ளன. அதனால் அவர்களுடைய பதிப்புகளில் நேர்ந்திருந்த ஒருசில விடுபாடுகள் நீக்கப்பட்டுள்ளன; பிழைகள் திருத்தப்பட்டுள்ளன. திருக்குறளைத் தவிர ஏனைய இலக்கிய மேற்கோள்களுக்கு எல்லாம் பாடல் எண்களோடு அடி எண்களும் கொடுக்கப்பட்டுள்ளன. இடம் விளங்காத மேற்கோள்களுக்கு, அவற்றை எடுத்துக்-காட்டிய உரையாசிரியர்களின் கால்முறையைப் பின்பற்றி இடவிளக்கம் குறிக்கப்-பட்டுள்ளது; பாடபேதம் நிகழ்ந்துள்ள மேற்கோள்கள் உடுக்குறியிட்டுக் காட்டப்-பட்டுள்ளன. பாடபேதங்களைப் பற்றிப் பின்னர் (பக். 81) விரிவாகப் பேசுவதால் மற்றவைகளுக்கு மட்டும் சில உதாரணங்களைக் காட்டலாம்.

சங்கர நமச்சிவாயர், "**இன்னென வரூஉம் வேற்றுமை யுருபு**" என்னும் தொல்-காப்பியத் தொடரை (புணர். 29) உருபு புணரியலிலும் (நூ. 248, 254), "**புலிநின் றிறந்த நீரல் லீரத்து**" (நற். 103:4) என்னும் நற்றிணைத் தொடரைப் பெயரியலிலும் (நூ. 267), "**யான்பிற னளியன் வாழ்வா னாசைப்பட் டி ருக்கின் றேன்**" (சீவக. 1487:4) என்னும் சிந்தாமணித் தொடரை இடையியலிலும் (நூ. 441),

> **"கண்ண் கருவிளை கார்முல்லை கூரெயிறு**
> **பொன்ன் பொறிசுணங்கு போழ்வா யிலவம்பூ**
> **மின்ன் னுழைமருங்குன் மேதகு சாயலாள்**
> **என்ன் பிறமகளா மாறு."**

> **"எஃஃஃ கிலங்கிய கையரா யின்னுயிர்**
> **வெஃஃஃகு வார்க்கில்லை வீடு."**

என்னும் யாப்பருங்கல விருத்தியின் மேற்கோள் பாடல்கள் இரண்டை (யா. வி. 3) எழுத்தியலிலும் (நூ. 92) எடுத்துக்காட்டியுள்ளார். புத்தம் புத்துரையில், "**முறைப்பெயர் மருங்கி, னொற்றிய நகரமிசை**" (தொல். மொழி. 34) என்னும் தொல்காப்பியத் தொடரும் (நூ. 94), "**பித்தரிற் பேதையா ரில்**" (நாலடி. 52:4), "**தேற்றா வொழுக்க மொருவன்க ணுண்டாயின்**" (நாலடி. 75:2) என்னும் நாலடியாரின் தொடர்களும் (நூ. 302, 322) எடுத்தாளப்பட்டுள்ளன. இவற்றுக்கு எல்லாம் பதிப்பாசிரியர்கள் இடவிளக்கம் தராமல் விட்டுவிட்டார்கள்.

ஒருவர் என்னும் படர்க்கைப் பெயர் குறிப்பால் பால் உணர்த்தும் என்று விளக்கும் பகுதியில் மயிலைநாதர் (நூ. 264) காட்டிய,

**"நுண்ணறி வுடையோர் நூலொடு பழகினும்**
**பெண்ணறி வென்பது பெரும்பே தைமைத்தே"**

என்னும் மேற்கோள் பாடலைச் சங்கர நமச்சிவாயரும் (நூ. 265) எடுத்துக்காட்டுவார். சாமிநாதையர் பதிப்புகளில் (1925. பக். 206; 1953. பக். 177) இம்மேற்கோளுக்குப் பழம்-பாடல் என்ற இடவிளக்கமே தரப்பட்டுள்ளது. இவ்வாறு பொதுநிலையில் குறிப்பதை விட இறையனார் அகப்பொருள் (நூ. 23) உரை மேற்கோள் என்று இடவிளக்கம் தருவது பயனுள்ளது. இதுபோலவே வலம் என்னும் இடவேற்றுமை உருபுக்குக்,

**"காழ்வரை நில்லாக் களிறன்னான் கைவலத்**
**தியாழ்வரை நின்றது"**

என்று சங்கர நமச்சிவாயர் (நூ. 302) காட்டியுள்ள உதாரணத்துக்குப் பெருங்கதை என்று நூலின் உட்பிரிவு இல்லாமல் பொதுவாகச்[111] சாமிநாதையர் இடவிளக்கம் தந்துள்ளார். அவரைப் பின்பற்றிப் பிறரும் இவ்வாறே குறித்துள்ளனர். ஆனால் இப்பகுதி பெருங்கதையில் காணப்படவில்லை. இந்நூற்பாவின் உரையில் சங்கர நமச்சிவாயர் காட்டியுள்ள உதாரணங்களில் பெரும்பகுதி மயிலைநாதர் உரையிலிருந்து (நூ. 301) எடுக்கப்பட்டது. அதனால் நன்னூல் உரையில் மயிலைநாதரால் எடுத்துக்-காட்டப்பட்ட உதாரணம் என்று இதற்கு இடவிளக்கம் கொடுப்பது பொருத்தம்.

இதுபோலவே பதிகத்தை விளக்கச் சங்கர நமச்சிவாயர் (நூ. 1) காட்டியுள்ள,

**"பதிகக் கிளவி பல்வகைப் பொருளைத்**
**தொகுதி யாகச் சொல்லுத றானே."**

என்னும் நூற்பாவை யாப்பருங்கல விருத்தி, யாப்பருங்கலக் காரிகை உரைகளில் உள்ள மேற்கோளாகத் தண்டபாணி தேசிகர் (1957. பக். 17; 1971. பக். 45) குறித்துள்ளார். ஆனால் இம்மேற்கோள் அந்நூல்களில் காணப்படவில்லை. எனவே இதனை இடம் விளங்கா மேற்கோளாகக் குறிப்பது நல்லது.

அகநானூறு, கலித்தொகை, புறநானூறு போன்ற நெடும்பாடல்களின் அடிகள் உதாரணமாக எடுத்துக்காட்டப்படும் போது அவற்றுக்குப் பாடல் எண்களோடு அடி

[111] முதல் பதிப்பு (1925) முதல் ஐந்தாம் பதிப்பு (1991) வரை இந்த மேற்கோள் குறிப்பு எந்த மாற்றமும் இல்லாமல் நிலைபெற்றுவிட்டது.

எண்களும் கொடுப்பது சாமிநாதையர் முறை. ஆனால் இம்முறையை அவர் மிகச் சில இடங்களில் மட்டுமே (நூ. 302, 308, 317) கடைப்பிடித்துள்ளார்; பெரும்பாலான இடங்களில் (நூ. 269, 344, 435, 437, 440, 441, 456, 457, 459) அவற்றுக்கு அவர் அடி எண்கள் கொடுப்பதில்லை. அவை அனைத்திற்கும் முதன் முதலாக இப்பதிப்பில் அடி எண்கள் கொடுக்கப்பட்டுள்ளன.

பழந்தமிழ் நூல்களில் சில சிதைந்துபோயின; பல[112] மறைந்துபோயின. அதனால் உரையாசிரியர்கள் காட்டியுள்ள மேற்கோள்களுக்கு எல்லாம் மூலநூல் இடவிளக்கம் கொடுக்க முடிவதில்லை. இத்தகைய இடம் விளங்கா மேற்கோள்களுக்கு அவற்றை எடுத்தாண்ட உரையாசிரியர்களின் பெயரால் இடவிளக்கம் தருவது சாமிநாதையரின் பதிப்பு முறை. காட்டாக, **"மயிலியன் மாதர் மருண்ம்"** (நூ. 120) என்றும்,

> **"தநநு எம்முதன் மகர மிடையிட்டு**
> **னளரவா மீற்றன சுற்றப் பெயரே."**

என்றும் சங்கர நமச்சிவாயர் உரையில் (நூ. 120, 276) காணப்படும் இடம் விளங்கா மேற்கோள்களுக்கு முறையே நன். சூ. 119, 275, மயிலை. மேற்கோள் என்று அவர் இடவிளக்கம் தருவார். சங்கர நமச்சிவாயர் உரையில் வேறு சில இடங்களிலும் (நூ. 209, 290, 351, 378, 385, 403, 405, 409, 419, 436, 439, 440, 457) இம்முறையை அவர் பின்பற்றியுள்ளார்.

பயனுள்ள ஒரு திருத்தத்தோடு அந்த முறை இப்பதிப்பில் பின்பற்றப்பட்டுள்ளது. தெளிவாகச் சொன்னால் ஒரு இடம் விளங்கா மேற்கோள் எந்த உரையாசிரியரால் முதன் முதல் எடுத்துக்காட்டப்பட்டுள்ளது என்று அறியுமாறு உரையாசிரியர்களின் காலமுறையில் இப்பதிப்பில் இடவிளக்கம் குறிக்கப்பட்டுள்ளது. காட்டாகச் சங்கர நமச்சிவாயர் (நூ. 378) காட்டியுள்ள, **"வடுக ரருவாளர்"** என்னும் பாடலுக்கு நேமி. சொல். 9 உரை மேற்கோள் என்பது சாமிநாதையர் தரும் இடவிளக்கம். அதற்குப் பதிலாகத் தொல். கிளவி. 51 இளம். உரை மேற்கோள் என்று இந்தப் பதிப்பில் இடவிளக்கம் தரப்பட்டுள்ளது. இதுபோலவே அவர் உரையில் (நூ. 351) உள்ள, **"வெந்திறலினன் விறல்வழுதியொடு"** என்னும் உதாரணத்துக்கு இல. விள. மேற்கோள்[113] என்று சாமிநாதையர் கொடுத்துள்ள இடவிளக்கத்துக்குப் பதிலாக

---

**[112]அவை இருநூறுக்கு மேற்பட்டன என்பது மயிலை சீனி. வேங்கடசாமியின் (மறைந்துபோன தமிழ் நூல்கள், பாரி நிலையம், சென்னை, 1959.) கணிப்பு.**

**[113]இலக்கண விளக்க நூற்பாவின் (250) உரையில் காட்டப்பட்டுள்ள மேற்கோள்களில் பெரும்பகுதி மயிலைநாதர் (நன். 350) உரையிலிருந்து எடுக்கப்பட்டது என்பது கண்கூடு.**

இப்பதிப்பில் நன். 350* மயிலை. உரை மேற்கோள் என்று இடவிளக்கக் குறிப்பு தரப்பட்டுள்ளது. சங்கர நமச்சிவாயர் அடிமறிமாற்றுப் பொருள்கோளுக்கு (நூ. 419) உதாரணமாகக் காட்டியுள்ள, **"மாறாக் காதலர்"** என்று தொடங்கும் பாடலுக்குச் சாமிநாதையர் தொல். எச்ச. 11 நச்சினார்க்கினியர் மேற்கோள் என்று இடவிளக்கம் கொடுத்துள்ளதை விடவும் யா. வி. 73 மேற்கோள் என்று விளக்கம் தருவது சிறப்பு. இந்த உதாரணங்களை இளம்பூரணரும் மயிலைநாதரும் யாப்பருங்கல விருத்தியின் ஆசிரியரும் முதன் முதல் எடுத்துக்காட்டியுள்ளதால் அவர்கள் காலமுறையைத் தழுவி இடவிளக்கம் கொடுப்பதே மேற்கோள் விளக்க ஆராய்ச்சிக்குப் பயன்படக் கூடியது. இத்தலைப்பில் சொல்ல வேண்டிய இன்னொரு செய்தியும் உண்டு.

**"ஒருபொருட் பல்பெயர்"** (நன். 397) என்னும் நூற்பாவின் உரையில், **"வையைக் கிழவன்"** என்றும், **"கொய்தளிர்த் தண்டலை"** என்றும் தொடங்குகிற இரண்டு இனிய பாடல்களைச் சங்கர நமச்சிவாயர் எடுத்தாண்டுள்ளார். இவருக்கு முன்னர் இளம்பூரணர் (தொல். எச்ச. 63), சேனாவரையர் (தொல். எச்ச. 64), மயிலைநாதர் (நன். 396), வைத்தியநாத தேசிகர் (இல. விள. 355) முதலியோரும் இப்பாடல்களை எடுத்துக்காட்டியுள்ளனர். என்றாலும் இவற்றை இடம் விளங்கா மேற்கோள்களாகவே சாமிநாதையர் (1935. பக். 448-449) குறித்துள்ளார். இன்னும் சில[114] பதிப்புகளில் இவை முத்தொள்ளாயிரப் பாடல்கள் என்று குறிப்பிடப்பட்டுள்ளன. அவ்வாறு கூறுவதற்குப் போதிய சான்றுகள் இல்லாததால் இவற்றை எடுத்துக்காட்டிய உரையாசிரியர்களின் காலமுறையைக் கருத்தில் கொண்டு இளம்பூரணர் காட்டிய உதாரணப் பாடல்களாக இப்பதிப்பில் அவை குறிக்கப்பட்டுள்ளன. உரையாசிரியர்கள் காட்டியுள்ள இடம் விளங்கா மேற்கோள் பாடல்களை எல்லாம் கால அடிப்படையில் எப்போதேனும் தொகுப்பதற்கு இந்த முறை பயன்படும்.

## மரபுத்தொடர் விளக்கம்

உரைமரபுத் தொடர்களில் ஒன்று நிறுத்த முறை என்பது. நிறுத்திய அல்லது வைத்த முறை என்பது இப்பெயரெச்சத் தொடருக்குப்[115] பொருள். யார் நிறுத்திய முறை என்பதை விளக்கும் போது தொல்காப்பிய உரைகளில் (தொல். கிளவி. 1; செய். 1) முரண்பாடு எழுவது போன்று நன்னூல் உரைகளில் எழவில்லை. பவணந்தி

[114] தி. வே. கோபாலையர், இலக்கண விளக்கம் சொல்லதிகாரம், தஞ்சாவூர், 1971. பக். 777; சோம. இளவரசு, நன்னூல் விருத்தியுரை, 1981. பக். 491; 1990. பக். 557.

[115] நிறுத்த ("பல்புகழ் நிறுத்த படிமை யோனே"), நிறுத்திய என்றும் உடுத்த ("நீராரும் கடலுடுத்த நிலமடந்தை"), உடுத்திய என்றும் சில வினைகளுக்கே பெயரெச்சங்கள் இவ்வாறு அமையும்.

முனிவரின் வைப்புமுறையையே மயிலைநாதரும் சங்கர நமச்சிவாயரும் நிறுத்த முறை என்று குறிப்பிடுவார்கள். நூல் நுதலும் பொருள்களையும் அவற்றின் வைப்பு-முறையையும் பவணந்தி முனிவர் நான்கு நூற்பாக்களால் (நன். 3, 57, 259, 270) தொகுத்துக் கூறுவது முன்பே (பக். 18) விளக்கப்பட்டது. அவை தவிரத் தொகை-மொழிகளின் வகை (நன். 362), பொருள்கோள்களின் தொகை (நன். 411) ஆகியவற்றைக் கூறும் நூற்பாக்களிலும் அவர் இவ்வாறு தொகுத்துச் சுட்டுவதுண்டு. ஆசிரியரின் இந்த வைப்புமுறையைச் சுட்டிக்காட்டி விளக்குதற்கு நூற்பா நுதலும் பொருளைக் கூறும் பகுதிகளில் சங்கர நமச்சிவாயர்[116] இத்தொடரைப் பயன்படுத்துவார். எந்த நூற்பாவில் நிறுத்திய முறை என்பதைச் சில இடங்களில் (நன். 47, 260, 271, 320, 420) அவரே, **"பெயர்வினை, எனவிரண் டாகும் என நிறுத்த முறையானே"** (நன். 320) என்பதுபோலத் தெளிவாகச் சுட்டுவதுண்டு; பல இடங்களில் அவ்வாறு சுட்டுவதில்லை. சங்கர நமச்சிவாயர் சுட்டாத இடங்களில் அவர் கருதிய நூற்பா எது என்று சாமிநாதையரும் தண்டபாணி தேசிகரும் குறிப்பிட[117] முயன்றுள்ளனர்; ஆனால் ஒருவரும் முற்ற முடியக் குறிப்பிடவில்லை. அந்நூற்பாக்கள் அனைத்தும் இப்பதிப்பில் குறிப்பிடப்பட்டுள்ளன.

## பாடபேதங்கள்

கடந்த ஐம்பது ஆண்டுகளாக ஏடுகளைப் பார்த்து நூல் பதிப்பிக்கும் வழக்கம் குறைந்துவிட்டது. அதனால் பதிப்புக் கலையும் பாடபேத ஆராய்ச்சியும் தமிழியலில் நன்றாக வளரவில்லை. புறநானூறு, திருக்குறள் போன்ற சில இலக்கியங்களுக்கு மூலபாடத் திறனாய்வு நூல்கள் வெளிவந்திருந்தாலும் ஒரு இலக்கணத்தின் பாட-பேதங்களுக்கு ஆய்வுநூல் வந்துள்ளதாகத் தெரியவில்லை. அண்மையில் வெளிவந்த தொல்காப்பியப் பதிப்பின்[118] முன்னுரையில், **"கிடைத்துள்ள பாட வேறுபாடுகள் அனைத்தையும் இந்நூலில் தொகுத்துக் கொடுத்துள்ளோம். மூலபாடத்தை இப்பதிப்பில் நிறுவ முயலவில்லை. அதனை வருங்காலத்தில்தான் செய்து முடிக்க வேண்டும்."** என்று பேராசிரியர் வ. அய். சுப்பிரமணியம் கூறுவது இக்கருத்தை உறுதிப்படுத்தும். நீண்ட பதிப்பு வரலாற்றை நன்னூல் பெற்றிருந்தாலும் தொல்-காப்பியத்துக்கு இருப்பதைப் போலத் தரமான மூலபாடப் பதிப்புகள் அதற்கு இது-வரையில் வெளிவரவில்லை என்பதைச் சொல்லியாக வேண்டும்.

---

[116] **அவர் இத்தொடரைப் பயன்படுத்திய இடங்கள்: நன். 26, 36, 37, 40, 47, 58, 62, 73, 74, 98, 99, 102, 107, 110, 122, 128, 151, 260, 261, 262, 265, 266, 267, 268, 269, 271, 272, 273, 295, 320, 331, 363, 412, 420, 442.**

[117] **சாமிநாதையர் ஐந்து இடங்களிலும் தண்டபாணி தேசிகர் இருபத்தைந்து இடங்-களிலும் குறித்துள்ளனர்.**

[118] **தொல்காப்பிய மூலம் பாட வேறுபாடுகள்: ஆழ்நோக்காய்வு, கே. எம். வேங்கட-ராமையாவும் பிறரும், திருவனந்தபுரம், 1996. பக்.** ii.

நன்னூல் மூலம், உரை, உதாரணம் என்னும் மூன்று பகுதிகளிலும் நேர்ந்துள்ள நூற்றுக் கணக்கான பாடபேதங்களைக் குறித்த பெருமை சாமிநாதையரையே சேரும். அவரும் கூட மயிலைநாதர் பதிப்பில் குறித்த அளவு[119] சங்கர நமச்சிவாயர் பதிப்பில் பாடபேதங்களைக் குறிக்கவில்லை. நன்னூல் விருத்தியுரைப் பதிப்பாசிரியர்களுள் தண்டபாணி தேசிகரே (1971. முன்னுரை) பாடபேதங்களைக் குறிப்பதில் சிறிது கவனம் செலுத்தியுள்ளார். அவரும் நன்னூல் மூலபாடத்தில் சங்கர நமச்சிவாயரும் சிவஞான முனிவரும் மாறுபடும் இடங்களை முழுமையாகக் காட்டவில்லை.

நன்னூல் பதிப்புகளைப் பார்த்த வரையில் மூலபாடத்துக்கு மட்டும் முந்நூறு பாடபேதங்கள் காணப்படுகின்றன; ஏடுகளையும் ஒப்பிட்டால் இந்த எண்ணிக்கை இரட்டிக்கும் என்பது மிகை ஆகாது. உரைப்பாடங்களிலும் உதாரணப் பாடல்களிலும் நிகழ்ந்துள்ள பாடபேதங்கள் கணக்கில் அடங்கா. இவற்றை எல்லாம் முறையாகத் தொகுப்பது பெரும் பணி; குழுப்பணி. எனவே மூலபாடத்திலும் உரைப்பாடத்திலும் நேர்ந்துள்ள முக்கியமான சில பாடபேதங்களே இப்பதிப்பில் காட்டப்பட்டுள்ளன. மேற்கோள்களில் நிகழ்ந்துள்ள பாடபேதங்கள் குறிப்பளவில் உடுக்குறியிட்டுக் காட்டப்பட்டுள்ளன. வகைக்கு ஒரு உதாரணத்தைப் பார்க்கலாம்.

**"தொல்லை வடிவின"** (நன். 98) என்னும் நூற்பாவின் இரண்டாவது அடியில் சங்கர நமச்சிவாயர் கொண்ட பாடம், **"மெகர மொகரமெய்"** என்பது; புத்துரையில் உள்ள பாடம், **"மெகர வொகரமெய்"** என்பது. இப்பாடபேதம் எங்கும் குறிக்கப்-படவில்லை. குற்றியலுகரம் பற்றிய நூற்பாவின் உரைக்குச் சிவஞான முனிவர் திருத்தி எழுதிய விளக்கத்தில், **"அங்ஙனம் பாகுபடுத்துக் கருவி செய்ததனால் போந்த பயன் இன்று என்பதாம்."** (நன். 94) என்று ஒரு தொடர் உள்ளது. இதுவரை வெளி-வந்துள்ள பதிப்புகளில் இத்தொடர், **"போதப் பயன் இன்று என்பதாம்."** என்று பிழையாகக் காணப்படுகிறது. இப்பகுதி தொல்காப்பியச் சூத்திர விருத்தியிலிருந்து (பக். 54) எடுத்து எழுதப்பட்டது. அந்நூலில், **"போந்த பயன் இன்று"** என்பதே பாடம். இந்த உண்மை மற்ற பதிப்பாசிரியர்களுக்குத் தெரிந்து, அதோடு இப்பகுதியை அவர்கள் ஒப்பிட்டிருந்தால் இந்தப் பிழைப் பாடம் நூற்றாண்டு விழாக் கண்டிருக்காது என்று உறுதியாகக் கூறலாம்.

---

[119] கி. நாச்சிமுத்து (1986. பக். 61, 79) இக்கருத்தை ஆராய்ந்துள்ளார்.

இனி, **"இடைத்தொட ராய்தத் தொடர்"** (நன். 182) என்னும் நூற்பாவின் புத்துரைப் பகுதியில் சிவஞான முனிவர் தொல்காப்பிய நூற்பாக்கள் மூன்றை (தொல். குற்றிய. 6, 7, 8) மேற்கோள் காட்டியுள்ளார். அவற்றுள் இரண்டு நூற்பாக்களில் பாடபேதங்கள் நேர்ந்துள்ளன. தொல்காப்பியப் பதிப்புகளில் இல்லாத இப்பாட-பேதங்கள் வலிந்து கொள்ளப்பட்டவையாக இருக்க வேண்டும். தொல்காப்பிய உரை-களோடு ஒப்பிட்டால் இது விளங்கும். மேற்கோள் என்றாலும் அவற்றின் சிறப்பு நோக்கி இப்பாடபேதங்கள் அடிக்குறிப்பில் தரப்பட்டுள்ளன. இவ்வாறு தெரிவு செய்த பாடபேதங்கள் மட்டுமே இந்தப் பதிப்பில் குறிக்கப்பட்டுள்ளன என்பதை நினைவில் கொள்ளுதல் நல்லது.

இன்னொரு கருத்தையும் இத்தலைப்பில் குறிப்பிட வேண்டும். செவ்வெண்ணில் வரும் எச்சவும்மையை விளக்கும் (நன். 427) பகுதியில்,

> **"செய்பவன் கருவி நிலஞ்செயல் காலஞ்**
> **செய்பொரு ளுந்தருந் திறத்தது வினையே."**

என்று சங்கர நமச்சிவாயர் ஒரு உதாரணத்தைக் காட்டுவார். இந்த உதாரணம், **"செய்பவன் கருவி"** (நன். 320) என்னும் நூற்பாவோடு பெரிதும் ஒத்திருப்பதால் இது அந்நூற்பாவின் பாடபேதமாகத் தோன்றுகிறது என்று சாமிநாதையர் (1935. பக். 411) ஒரு அடிக்குறிப்பு[120] எழுதியுள்ளார். இக்கருதுகோளைப் பலர்[121] மறைமொழியாக ஏற்றுக்கொள்வார்கள். சாமிநாதையர் கருதுவதுபோல் இந்த உதாரணம் வினையியல் நூற்பாவின் பாடபேதமா என்பது நுனித்து நோக்கத் தக்கது.

சங்கர நமச்சிவாயர் தம்முடைய உரையில் நன்னூல் சூத்திரங்களைத் தாராளமாக எடுத்தாளுவது மேலே (பக். 76) சுட்டப்பட்டது. அவற்றுள் முழு நூற்பாக்கள் உண்டு என்றாலும் சூத்திரத் தொடர்களும் சொற்களுமே மிகுதி. ஒரு நூற்பாவைப் பல நூற்பாக்களின் உரைகளிலும் பல நூற்பாக்களை ஒரு நூற்பாவின் உரையிலும் அவர் எடுத்தாளுவார். காட்டாக, **"ஒருமொழி யொழிதன் னினங்கொளற் குரித்தே"** (நன். 358) என்னும் நூற்பாவை அவர் பல இடங்களில் எடுத்தாளுவதைக் கண்டோம். அதுபோலவே, **"சொற்றொறு மிற்றிதன் பெற்றி"** (நன். 461) என்னும் தொடரை அவர் எட்டு இடங்களில் (நன். 341, 354, 377, 378, 379, 390, 394, 414) எடுத்தாளுவதும் காலம் காட்டும் ஈறுகளைக் கூறும் நூற்பாவின் (நன். 145) உரையில் பன்னிரண்டு

---

[120] முதல் பதிப்பில் (1925) இக்குறிப்பு இல்லை.

[121] தண்டபாணி தேசிகர், 1957. பக். 462; 1971. பக். 614; க. ப. அறவாணன், 1977. பக். 151.

நூற்பாக்களை மேற்கோள் காட்டுவதும் அறிய வேண்டிய செய்திகள் எனலாம். தொடர்களையே அன்றிப், **"பாயிரம்"** (நூ. 2 உரை), **"இரண்டு"** (நூ. 283 உரை), **"பண்பு"** (நூ. 443 உரை) போன்ற சொற்களையும், **"ஒடு"** (நூ. 104, 447 உரை) போன்ற உருபையும் அவர் எடுத்தாளுவதுண்டு.

இவ்வாறு நன்னூல் சூத்திரங்களையும் தொடர்களையும் சங்கர நமச்சிவாயர் தமது உரையில் நூற்றுக் கணக்கான இடங்களில் மிகுதியாக மேற்கோள் காட்டியிருந்தாலும் ஒரு இடத்திலேனும் பாடபேதம் நிகழவில்லை; நிகழ்ந்திருந்தால் நிச்சயம் குறிக்கப்-பட்டிருக்கும். இனி, ஐயத்துக்கு இடமான வினையியல் நூற்பாவை நோக்குவோம். இந்நூற்பாவின், **"ஆறுந் தருவது வினையே"** (நன். 320) என்ற தொடரை மட்டும் சங்கர நமச்சிவாயர் இரண்டு இடங்களில் (நன். 340, 426) காட்டுவார். அவற்றுள் ஒன்று 426-ஆம் சூத்திரம் என்பது முக்கியம். ஏனென்றால் அதற்கு அடுத்த நூற்பாவின் உரையில்தான் (நன். 427) பாடபேதம் என்று கருதப்படும் அந்த உதாரணம் காட்டப்-பட்டுள்ளது. அந்த ஒரு மேற்கோளில் மட்டும் பாடபேதம் நிகழ்ந்திருக்கும் என்று கருதுவது சங்கர நமச்சிவாயரின் உரைப் போக்குக்குப் பொருந்தவில்லை. அப்படி என்றால் இப்பகுதியில் (நன். 427) சங்கர நமச்சிவாயர் காட்டியுள்ள உதாரணம் ஏது என்ற வினாவுக்கு நாம் விடை காண வேண்டும்.

உரைத் தெளிவுக்குத் தேவையான உதாரணங்களைத் தாமே படைத்துக்கொள்வதும் செய்யுளை உரைநடையாக அமைத்துக்கொள்வதும் உரையாசிரியர்களின் இயல்பு. இலக்கியச் செய்யுள், உரைச் செய்யுள், உரைச் சூத்திரம், உதாரணச் சூத்திரம் (இல. கொ. 7, 131 உரை) என்ற சொல்லாட்சி, நூலாசிரியர்கள் இயற்றியுள்ள[122] உதாரண நூற்பாக்கள், உதாரணங்களை அவர்கள் செய்யுளாகத் தொடுத்துக் காட்டும்[123] உரைச் செய்யுள்கள், சேனாவரையர் போன்ற உரையாசிரியர்கள் குறட்பாக்களை உரை-நடையாக மாற்றி அமைத்துக்கொண்ட தொடர்கள்[124] முதலியன இவற்றுக்கு நல்ல சான்றுகள். இவை மட்டும் அல்ல. சில சமயங்களில் நூற்பாக்களும் உதாரணங்களாக மாற்றப்படுவதுண்டு. காட்டாக வேண்டுவது, தக்கது என்ற பொருளில் பெயருக்குப்

---

[122]வேற்றுமைகள் வினையைக் கொண்டு முடிவதை விளக்கப் புத்தமித்திரனார் (வீர. 39), சுப்பிரமணிய தீக்கிதர் (பி. வி. 10), சாமிநாத தேசிகர் (இல. கொ. 15) முதலியோர் இயற்றியன. "ஆழிவெள்வேல்" (யா. கா. 2) என்ற தொடரும் இத்தகையதே.

[123]குணசாகரர், "கோழி வேந்தன்" (யா. கா. 5) என்றும் மயிலைநாதர், "சரிசமழ்ப்புச் சட்டி" (நன். 105) என்றும் மேற்கோள் செய்யுள்களை எடுத்துக்காட்டுவார்கள்.

[124]"இகழ்ச்சியிற் கெட்டான், மகிழ்ச்சியின் மைந்துற்றான்" (தொல். வேற். 17 சேனா.), "பயனில்சொற் பாராட்டினான்", "யான் எனது என்னும் செருக்கறுத்தான்" (இல. கொ. 8 உரை) முதலிய தொடர்கள்.

பின் படுசொல் வரும் என்பதற்கு, "**இனைத்தென அறிந்த பொருட்கு உம்மை படும், இன்னென் உருபிற்கு இன்னென் சாரியை இன்மை படும்**" என்ற உதாரணங்களைச் சாமிநாத தேசிகர் (இல. கொ. 78 உரை) எடுத்துக்காட்டுவார். இவை இரண்டும் தொல்காப்பிய நூற்பாக்களை (கிளவி. 33; புணர். 29) மாற்றி அமைத்துக்கொண்ட உதாரணங்கள்[125] என்று சொல்வது எளிது.

சங்கர நமச்சிவாயர் இந்த உரைமரபை உணர்ந்தவர். அதோடு அவர் சாமிநாத தேசிகரின் மாணவர். இவற்றை எல்லாம் கூர்ந்து நோக்கினால் எச்சவும்மை பற்றிய நூற்பாவின் உரையில் சங்கர நமச்சிவாயர் எடுத்துக்காட்டியுள்ள, "**செய்பவன் கருவி**" என்ற உதாரணம் வினையியல் நூற்பாவின் (நன். 320) பாடபேதம் அல்ல; உதாரணத்துக்காக அந்நூற்பாவிலிருந்து சங்கர நமச்சிவாயர் மாற்றி அமைத்துக்-கொண்ட உரை வாசகம் என்பது தானே விளங்கும். எனவே அந்த உதாரணத்தைச், "செய்பவன் கருவி" (நன். 320) என்னும் நூற்பாவின் பாடபேதமாகக் கருதுவதை விட அதன் உரை வாசகமாகக் கொள்வதே மூலபாட ஆராய்ச்சிக்குப் பொருந்தக் கூடிய முடிபு.

சங்க இலக்கியங்கள், காப்பியங்கள் என்று எண்ணற்ற நூல்களைப் பதிப்பித்த அனுபவ முதிர்ச்சியால் சங்கர நமச்சிவாயர் காட்டிய உதாரணப் பாடல்களில் காணப்-படும் பாடபேதங்களைச் சாமிநாதையர் ஆங்காங்கே குறித்துள்ளார். மூலம், உரை, உதாரணம் என்ற வேறுபாடு நோக்காமல் இவ்வாறு உதாரணச் செய்யுள்களின் பாடபேதங்களையும் குறிக்கத் தொடங்கிய பதிப்பாசிரியர் சாமிநாதையராகத்தான் இருக்க முடியும். ஆனால் அவர் அவ்வாறு குறித்த இடங்கள் குறைவு என்பது பலருக்குத் தெரியாது. காட்டாகச் சீவக சிந்தாமணியைப் பார்க்கலாம்.

சங்கர நமச்சிவாயர் இந்தக் காப்பியத்திலிருந்து நாற்பது பாடல்களை மேற்கோள் காட்டியுள்ளார். அவற்றுள் பதினேழு பாடல்களில் (நன். 297, 302, 341, 351(2), 372, 392, 396, 409, 410, 421(2), 422, 433, 441, 459(2) பாடபேதங்கள் காணப்படுகின்றன. முதல் பதிப்பில் ஒன்றே ஒன்று (நன். 392); இரண்டாவது பதிப்பில் புதிதாக மூன்று

---

[125] **நூற்பாவின் பொருளமைதியை எதிர்மறை முகத்தால் விளக்குதற்குத், "தனிநிலை யொற்றிவை" (யா. 3) என்னும் நூற்பாவை யாப்பருங்கல விருத்தி ஆசிரியரும் நூற்பாவின் சொல்லமைதிச் சிறப்பை விளக்குதற்குப், "பல்லோர் படர்க்கை" (நன். 348) என்னும் நூற்பாவைச் சங்கர நமச்சிவாயரும் மறுப்புரைச் சான்றுக்காகச், "செய்யா யென்னும்" (தொல். எச்ச. 54) என்னும் நூற்பாவைச் சிவஞான முனிவரும் மாற்றிக் காட்டுவது (தொல். விரு. பக். 59-60) வேறு வகை.**

(நன். 341, 351, 396) என்றவாறு அவற்றுள் நான்கு பாடபேதங்களை மட்டுமே சாமிநாதையர் குறித்துள்ளார். மேலும் சங்கர நமச்சிவாயர் (நன். 351) காட்டியுள்ள, **"கானவ ரிரிய"** என்று தொடங்கும் செய்யுளில் (சீவக. 452) நான்கு பாடபேதங்கள் காணப்படுகின்றன. இந்த நான்கில் ஒன்றைக் கூடச் சாமிநாதையர் குறிக்கவில்லை. நமச்சிவாயர் உரையை அவர் பதிப்பிப்பதற்கு முன்பே சீவக சிந்தாமணிக்கு மூன்று பதிப்புகள் வெளிவந்துவிட்டதால் இந்தப் பாடபேதங்களை அவர் குறித்திருக்கலாமே என்று நமக்கு எண்ணத் தோன்றுகிறது. இதுபோலவே அகநானூறு, புறநானூறு, கலித்தொகை முதலிய இலக்கிய மேற்கோள்களில் நிகழ்ந்துள்ள பாடபேதங்களும் அவரால் முழுமையாகக் குறிக்கப்படவில்லை. முதுமைத் தளர்ச்சியால் சாமிநாதையர் இவ்வாறு குறிக்காமல் விட்ட பாடபேதங்கள் முதல் முறையாக இப்பதிப்பில் உடுக்குறி-யிட்டுக் காட்டப்பட்டுள்ளன.

## ஒப்பியல்

நூற்பாக்களின் முதற்குறிப்பு அகராதியில் நன்னூலோடு ஒத்த தொல்காப்பிய நூற்பாக்களின் எண்களையும் இணைத்துள்ளது இப்பதிப்பின் இன்னொரு நல்ல பகுதி. இவ்விரு இலக்கணங்களையும் ஒப்பிட விரும்புவோருக்கு இப்பகுதி பயன்படும். இதன் அமைப்பு முறை அப்பகுதியில் விளக்கப்பட்டுள்ளது. மணிச்சுருக்கமாக அமைந்துள்ள இந்த ஒப்பியலின் வரலாறு அறிய வேண்டியது.

கல்விக் கோட்பாடுகளில் ஒப்பியல் முறை வாழையடி வாழையாக வருவது. இந்த முறையைத் தொல்காப்பியரும் பவணந்தி முனிவரும்,

**"அளபிறந் துயிர்த்தலு மொற்றிசை நீடலு**
**முளவென மொழிப விசையொடு சிவணிய**
**நரம்பின் மறைய வென்மனார் புலவர்."**

என்னும் (தொல். நூன். 33) நூற்பாவிலும்,

**"இன்ன தின்னுழி யின்னண மியலும்**
**என்றிசை நூலுட் குணகுணிப் பெயர்கள்**
**சொல்லாம் பரத்தலிற் பிங்கல முதலா**
**நல்லோ ருரிச்சொலி னயந்தனர் கொளலே."**

என்னும் (நன். 460) நூற்பாவிலும், **"பிறன்கோட் கூறல்"** (தொல். மரபு. 112; நன். 14) என்னும் உத்தி வகையிலும் குறிப்பிடுவார்கள். உரையாசிரியர்களுள் யாப்பருங்கல விருத்தியின் ஆசிரியரும் இளம்பூரணர், நச்சினார்க்கினியர் முதலிய தொல்காப்பிய

உரையாசிரியர்களும் அடியார்க்குநல்லாரும் இம்முறைக்குச் சிறப்பிடம் தருவார்கள். அவர்களுடைய உரைகளில் பயின்று காணப்படும் எண்ணற்ற இலக்கிய இலக்கண மேற்கோள்களே இதற்குச் சான்று கூறும்.

தொல்காப்பியருக்கும் பவணந்தி முனிவருக்கும் இடைப்பட்ட கால இடைவெளி பெரிது. அதோடு வடமொழி மரபைத் தழுவிப் பவணந்தி முனிவர் தமது நூலில் பகுபத உறுப்பிலக்கண விளக்கத்துக்குப் பதவியலை அமைத்திருந்தார். இவற்றால் இவ்விரு இலக்கணிகளின் கோட்பாடுகள் வேறு வேறு என்றும் நன்னூல் தொல்காப்பியத்துக்கு வழிநூல் அல்ல; எதிர்நூல் என்றும் இலக்கண உலகில் ஒரு கருத்து நிலவியிருக்கக் கூடும். இக்கருத்தை மறுக்கவும் மாற்றவும், **"இஃது எதிர்நூல் அல்ல."** (நன். 62) என்று மயிலைநாதரும் தொல்காப்பியத்தோடு, **"இந்நூல் மறுதலைப்பட்டது என்று கோடற்க."** (நன். 164) என்று சங்கர நமச்சிவாயரும் எழுதினர். அதோடு அமையாமல் இயலும் இடம் எல்லாம் தொல்காப்பிய நன்னூல் ஒப்பியல் முறையையும் அவர்கள் கடைப்பிடித்தனர்.

தொல்காப்பியத்துக்கும் நன்னூலுக்கும் இடையே ஊடுருவி நிற்கும் உறவு அடி-வேருக்கும் கிளைவிழுதுக்கும் உள்ளது போன்றது. ஒப்பீட்டுக் கண்ணோட்டத்தில் இந்த உறவை ஆராய வித்திட்டவர் மயிலைநாதர். சார்பெழுத்தின் தொகையைக் கூறும் நூற்பாவின் உரையில்,

**"எழுத்தெனப் படுப**
**அகரமுத னகர விறுவாய்**
**முப்பஃ தென்ப**
**சார்ந்துவரன் மரபின் மூன்றலங் கடையே."**

**என** (தொல். நூன். 1) **ஆசிரியர் தொல்காப்பியனாரும் இவ்வாறு முதல், சார்பு என வகுத்துக்கொண்டார் என்க. அஃதே, அவர் சார்பெழுத்து என மூன்றே கொண்டாராலோ எனின் அஃதே, நன்று சொன்னாய்! ஒழிந்தவை எப்பாற் படும் என்றார்க்கு மூன்றாவதோர் பகுதி சொல்லலாவது இன்மையானும் முதலெழுத்து ஆம் தன்மை அவற்றிற்கு இன்மையானும் சார்பின் தோன்றுதலானும் இப்-பத்தும் சார்பாகவே கொள்ள வேண்டும் என்பது. அஃதே அமைக."** என்று மயிலைநாதர் (நன். 59) நன்னூலைத் தொல்காப்பியத்தோடு ஒப்பிட்டு[126] ஆராய்வார்.

---

**[126] சார்பெழுத்துக் கோட்பாட்டில் தொல்காப்பியருக்கும் பவணந்தி முனிவருக்கும் உள்ள வேறுபாட்டைச் சிவஞான முனிவரும் (தொல். விரு. பக். 54-57) விரிவாக ஆராய்ந்துள்ளார்.**

இவ்விரு நூல்களுக்கும் உள்ள ஒற்றுமை வேற்றுமைகளை வேறு சில இடங்களிலும் (நன். 105, 130, 319, 357, 364, 371, 377, 388, 448) அவர் விளக்குவார். இந்த முறையைப் பின்பற்றி அவருக்குப் பின் வந்த சுப்பிரமணிய தீக்கிதர் (பி. வி. 2, 5, 8, 21, 49 உரை), வைத்தியநாத தேசிகர் (இல. விள. 5, 6, 142, 154, 175, 200, 204, 250, 313, 334, 336, 338 உரை), சாமிநாத தேசிகர் (இல. கொ. 6, 7, 8, 43, 117, 129 உரை), சங்கர நமச்சிவாயர் (நன். 94, 124, 128, 158, 233, 265, 270, 274, 295, 300, 316, 320, 360, 401), சிவஞான முனிவர் (தொல். விரு. பக். 12-14, 54-57; இல. சூறா. பக். 96, 99, 103, 108; நன். 3, 50, 60, 73, 91, 106, 137, 182, 261, 285, 449) முதலியோரும் இவ்விரு நூல்களையும் ஒப்பிடுவார்கள்.

இந்த ஒப்பியல் உரைமரபை நன்றாகக் கற்றுத் தெளிந்த சாமுவேல் பிள்ளை வால்ற்றர் ஜாயீஸ் என்பவரோடு இணைந்து தொல்காப்பிய நன்னூல் என்னும் ஒப்பியல் நூல் ஒன்றை 1858-இல் பதிப்பித்தார். தொல்காப்பியமும் நன்னூலும் கூறும் இலக்கணக் கருத்துகளை ஒப்பிட்டு ஆராய்ந்து முதன் முதல் வெளிவந்த மூலபாட ஒப்பியல் பதிப்பு இதுவே. இப்பதிப்பைத் தழுவி,[127] நன்னூல் நூற்பாக்களோடு ஒத்த தொல்காப்பிய நூற்பாக்களின் எண்களைப் பவானந்தம் பிள்ளை தம்முடைய பதிப்பில், நன்னூல் சூத்திர அகராதி என்னும் பகுதியில் (1922. பக் 288-298) அமைத்தார். இவ்விரு நூல்களுக்குப் பிறகு ஒப்பியல் நோக்கில் வெளிவந்த நூல்கள் எல்லாம்[128] அவற்றை முழுமையாகப் பயன்படுத்திக்கொண்டன. என்றாலும் அப்பதிப்புகளைப் பற்றி இந்நூல்களின் ஆசிரியர்கள் யாரும் மறந்தும் ஒரு வார்த்தை எழுதவில்லை. தடயங்களை மறைப்பது சட்டவியலில் குற்றம்; தண்டனைக்கு உரியது. ஆனால் தமிழியலில் அதுவே பாராட்டுக்குரிய தகுதியாகத் தோன்றுகிறது.

இப்பதிப்பில் உள்ள ஒப்பியல் தொகுப்புக்கு இந்த நூல்கள் எல்லாம் உதவின; பவானந்தம் பிள்ளை வகுத்துக் காட்டிய முறையே இங்கும் தழுவப்பட்டுள்ளது. ஆயினும் இந்த நூல்களில் நேர்ந்துள்ள விடுபாடுகள், குறைபாடுகள் முதலியவை தொல்காப்பிய நன்னூல் உரைகளோடு மீண்டும் ஒப்புநோக்கப்பட்டு, இயன்ற வரை நீக்கப்பட்டுள்ளன. இலக்கண ஒப்பியல் பரந்துபட்ட ஒரு துறை. எனவே இப்பகுதி இன்னும் செப்பமுற வாய்ப்பு உண்டு.

---

[127] **பவானந்தம் பிள்ளை, நன்னூல், சென்னை, 1922. பக்.** xxiii.

[128] **க. வெள்ளைவாரணர், தொல்காப்பியம்- நன்னூல், 1962; 1971; ச. வே. சுப்பிரமணியன், இலக்கணத் தொகை எழுத்து, சென்னை, 1967; இலக்கணத் தொகை சொல், நாகர்-கோவில், 1971; ரா. சீனிவாசன், தொல்காப்பிய நன்னூல், சென்னை, 1972; க. ப. அறவாணன், தொல்காப்பிய ஒப்பியல், சென்னை, 1974.**

### கலைச்சொற்கள்

இலக்கணப் பதிப்புகளில் அரும்பத அகராதி என்னும் பயனுள்ள பகுதியைச் சேர்த்தவர் சாமிநாதையர். சென்னைப் பல்கலைக்கழகப் பேரகராதி வெளிவந்த பின்னர் அப்பகுதியின் பயன் குறைந்துவிட்டது. எனவே இப்பதிப்பில் அரும்பத அகராதி இடம் பெறவில்லை. அதற்குப் பதிலாக இலக்கணக் கலைச்சொற்கள் என்னும் பகுதி சேர்க்கப்பட்டுள்ளது. நன்னூல் மூலபாடத்தில் வரும் இலக்கணக் கலைச்சொற்கள் அப்பகுதியில் தொகுக்கப்பட்டுள்ளன. அதன் அமைப்பும் முறையும் அங்கு விரிவாக விளக்கப்பட்டுள்ளன.

பல பல்கலைக்கழகங்களில் இலக்கண நூல்களுக்குத் தரமான சொல்லடைவுகள் நீண்ட காலமாகவே இருந்துவருகின்றன. ஆய்வேடுகளின் இணைப்புகளாக நன்னூல், தொல்காப்பியம் முதலிய இலக்கண நூல்களுக்கு இருக்கும் சொல்லடைவுகள்[129] அவற்றுள் குறிப்பிடத் தக்கன. சங்க இலக்கியம், திருக்குறள், சிலப்பதிகாரம், கம்ப ராமாயணம் போன்ற இலக்கியங்களுக்குச் சொல்லடைவுகள் அச்சிடப்பட்டிருந்தாலும் இலக்கணங்களுக்கு ஏனோ இதுவரையில் சொல்லடைவுகள் வெளியிடப்படவில்லை. அண்மைக் காலத்தில் அறிமுகமான மொழியியலுக்குக் கூட நான்கைந்து கலைச்சொல் அகராதிகள் இருக்கின்றன. ஆனால் மரபிலக்கணக் கலைச்சொற்களுக்கு விரிவான அகராதி[130] வெளிவராமல் இருப்பது தமிழியலுக்கு ஒரு குறை. கலைச்சொல் அகராதி போன்ற நோக்குநூல் இலக்கணத் துறையின் ஆய்வு வளர்ச்சிக்கு மிகவும் இன்றியமையாதது. அந்த எண்ணத்தை வலியுறுத்துவதே இக்கலைச்சொல் பட்டியலின்[131] நோக்கம்.

### சந்திக் குறியீடுகள்

இன்னொரு வகையிலும் பழைய பதிப்புகளிலிருந்து இப்பதிப்பு வேறுபட்டது. இங்கு நான் குறிப்பிடுவது இப்பதிப்பில் பின்பற்றப்பட்டுள்ள சந்திக் குறியீடுகள் பற்றியது. விளக்கிச் சொன்னால் சொல்லியல், தொடரியல், பொருளியைபு, மரபு

---

**[129] க. ப. அருணாசலம், எம். லிட். ஆய்வேடு, 1973; க. பாலசுப்பிரமணியன், பிஹெச். டி. ஆய்வேடு, அண்ணாமலைப் பல்கலைக்கழகம், அண்ணாமலைநகர், 1981.**

**[130] நான் குறிப்பிடுவது இலக்கணக் கலைக் களஞ்சியத்தை விட (பொன். கோதண்டராமன், சென்னை, 1985.) விரிவான அகராதி.**

**[131] ஜீ. யூ. போப்பின் இலக்கண அகராதியும் (பவணந்தி முனி செய்த நன்னூல் மூலமும் பொழிப்புரையும், 1857. பக். 137-184) வே. சீதாலட்சுமியின் கலைச்சொல் விளக்கப் பட்டியும் (நன்னூலாரின் இலக்கணக் கலைச்சொல்லாட்சி, சென்னை, 1993. பக். 124-210) வேறு வகையில் அமைந்துள்ளன.**

முதலியவற்றை நோக்கிச் சொற்களைச் சேர்த்தும் பிரித்தும் பதிப்பிப்பதற்கு விதிகளை வகுத்துக்கொண்டு, அவை நூல் முழுதும் ஒரே சீராகக் கடைப்பிடிக்கப்பட்டுள்ளன. அதனால் சாமிநாதையர் பதிப்பில் (சங்கர நமச்சிவாயர் உரை, 1935.) காணப்படும், 'கேட்போரென்பாருமுளர்' (பக். 4), 'பெயர்விகற்பங்களைக்கூறியது' (பக். 7), 'என்பாருமுளராலோவெனின்' (பக். 8), 'பாயிரங்கூறுதல்நூல்கட்கன்றி' (பக். 8), 'நூல்களின்வரலாறொன்றுமே' (பக். 8), 'அறிவினையுடைய' (பக். 10), 'இதுவுமது' (பக். 18), 'வேறெடுத்தோதினாரென்க' (பக். 61), 'மணியின்கண்ணொளி' (பக். 273) என்பன போன்ற தொடர்களையோ அல்லது தண்டபாணி தேசிகர் பதிப்பில் (நன்னூல் விருத்தியுரை, 1957.) காணப்படும், 'ஒருமுதலேயாகி' (பக். 5), 'திருமேனியாகவுடையான்' (பக். 5), 'காட்டப்படுவனவுமுள' (பக். 11), 'அக்காலத்துள்ளன' (பக். 12), 'இக்கருத்தறியாத' (பக். 13), 'இரண்டாய்வரினும்' (பக். 14), 'ஒன்றோடொன்று' (பக். 14), 'விதந்துகூறவேண்டும்' (பக். 31), 'முறையாகவைக்கப்பட்டன' (பக். 62), 'முதலிடைகடைகளினின்று' (பக். 74), 'குறுகுதற்கேதுவன்று' (பக். 78) என்பன போன்ற தொடர்களையோ இப்பதிப்பில் காண முடியாது.

இதுபோலவே, 'முழுவது மொத்து' (பக். 10), 'நூல்தழுவிய மதங்கள்' (பக். 13), 'கூறினா ரென்றுணர்க' (பக். 60), 'பலவென்னு மொருசொல்' (பக். 125), 'பிறசொற்களு மன்ன' (பக்.125), 'வினையெச்சத்திற் கின்மையின்' (பக்.126), 'முடித்த லென்னு முத்தியான் ஈண்டுக்கூறப்பட்ட தென்க' (பக். 142) என்று சாமிநாதையர் பிரித்துள்ளது போன்றோ அல்லது, 'கூறு முயற்சியானும்' (பக். 62), 'இவ்வாறே யொட்டுக' (பக். 210), 'எல்லா நம்மையும்' (பக். 214), 'எல்லா நம்மாலும்' (பக். 214), 'இறுதியாக வுடையமொழிகள்' (பக். 343), 'நிற்பனபெய ரெச்சவினை' (பக். 348), 'பெயர்ப்பால் பொதுமையினை' (பக். 373), 'இசை எச்சங்கள்' (பக். 378), 'பண்பு உருபு' (பக். 385) என்று தண்டபாணி தேசிகர் பிரித்துள்ளது போன்றோ சொற்கள் இப்பதிப்பில் பிரிக்கப்படவில்லை.

இந்த எடுத்துக்காட்டுகள் நன்னூல் பதிப்புகளுக்கு மட்டுமே உரியன அல்ல; பெரும்பாலான தமிழிலக்கணப் பதிப்புகளில் இத்தகைய தொடர்கள் தவறாமல் காணப்படும். கழகம் வெளியிட்ட இலக்கணப் பதிப்புகளில் அவை சிறிது கூடுதலாகவும் தி. வே. கோபாலையர் பதிப்பித்த இலக்கண விளக்கம், இலக்கணக் கொத்து, பிரயோக விவேகம் போன்ற இலக்கணப் பதிப்புகளில் கொஞ்சம் குறைவாகவும் காணப்படும். பழைய பதிப்பாசிரியர்கள் புணர்ச்சி விதிகளைப் புறக்கணித்தது இந்நிலைக்குக் காரணம் என்று விரைந்து முடிவுகட்டிவிடக் கூடாது; புணர்ச்சி விதிகளை அவர்கள் பின்பற்றியுள்ளார்கள்; ஆனால் நூல் முழுதும் ஒரே சீராக அவற்றைப் பின்பற்றிப்

புணர்மொழிகளைப் பிரிக்கவோ சேர்க்கவோ அவர்கள் முயலவில்லை. பழம்பதிப்புகளில் உள்ள குறைபாடு இதுவே.

ஆறுமுக நாவலர், தாமோதரம் பிள்ளை, சாமிநாதையர் போன்ற பழம்பெரும் பதிப்பாசிரியர்கள் ஏடுகளில் இருந்த தமிழ் நூல்களை இயன்ற வரையில் உண்மைப் பாடமாகப் பழைய வடிவத்தில் பதிப்பிப்பதையே தங்களது தலைமைக் குறிக்கோளாகக் கொண்டிருந்தனர். எனவே சொற்களைச் சந்தி பிரித்துப் பதிப்பிப்பதற்கு அவர்கள் அவ்வளவு முக்கியத்துவம் தரவில்லை என்று தோன்றுகிறது. இலக்கண மாணவர்களின் அன்றைய கல்வித்தரத்துக்கு அது தேவை இல்லை என்றும் அவர்கள் கருதியிருக்கக் கூடும். அதனால் பழம்பதிப்புகளில் ஒரே தொடர் வெவ்வேறு வகையாகக் காணப்படும். காட்டாக ஆசிரிய வசனம், இசையெச்சம், குறிப்பு வினைச்சொல், முதனிலைத் தொழிற்பெயர், வினையால் அணையும் பெயர் போன்ற இலக்கணக் கலைச்சொற்கள் ஒரே பதிப்பில் ஒரு இடத்தில் ஒரு சொல்லாகச் சேர்த்தும் ஒரு இடத்தில் பன்மொழித் தொடராகப் பிரித்தும் அச்சிடப்பட்டிருக்கும்.

இதுபோலவே என்னுதலிற்றோவெனின், உணர்த்துதனுதலிற்று, வகுத்துணர்த்துதனுதலிற்று, ஒத்துறுப்பாமாறுணர்த்துதனுதலிற்று, நிறுத்தமுறையானே முதலிய உரைமரபுத் தொடர்கள் ஏடுகளில் எழுதியிருந்தவாறே நீண்ட சொல்மாலைகளாகப் பழைய பதிப்புகளில் அச்சிடப்பட்டுள்ளன.

பதிப்பாசிரியர்கள் யாரும் இத்துறையில் கவனம் செலுத்தவே இல்லை என்று சுட்டிக்காட்டுவதற்காக இந்த உதாரணங்களை எடுத்துக்காட்டியுள்ளதாகக் கொள்ளக் கூடாது. ஆறுமுக நாவலரின் நன்னூல் விருத்தியுரைப் பதிப்பைத் (1851) தண்டபாணி தேசிகரின் விருத்தியுரைப் பதிப்போடு (1957) ஒப்பிட்டு நோக்கினால் ஒரு நூற்றாண்டில் இத்துறை அடைந்துள்ள வளர்ச்சியைக் கண்கூடாகக் காண முடியும். ஆனால் வளரும் தமிழியலுக்கு இந்த வளர்ச்சி போதாது; அதுவும் இந்தக் கணிப்பொறி யுகத்தில் இது நிச்சயம் போதாது.

மொழியியல் தமிழியலுக்கு நன்றாக அறிமுகமான பிறகு இலக்கண ஆராய்ச்சி புதுப் பரிமாணத்தில் வளர்ந்தது; இலக்கணக் கோட்பாடுகளில் புதிய சிந்தனைகள் உருவாயின. முதல்வினை, துணைவினை, கூட்டுவினை போன்ற வினையின் வகைகள், தொகைகள், இடைச்சொற்கள், உரிச்சொற்கள், தொடரியல் உறுப்புகள், வாக்கிய அமைப்பு, வாக்கிய வகைகள் முதலியன தனித்தனியே ஆழமாக ஆராயப்பட்டன;

**தெளிவு**படுத்தப்பட்டன. இந்தப் புதுவகை இலக்கணக் கோட்பாடுகளை மரபுமுறைக் கோட்பாடுகளுடன் ஒப்புநோக்கி, நிலைமொழி வருமொழிகளை வரையறுத்துக்கொண்டு, சந்திவிதிகள் வகுக்கப்பட்டுள்ளன. அவற்றை நூல் முழுதும் பின்பற்றிச் சொற்கள் சேர்த்தும் பிரித்தும் அச்சிடப்பட்டுள்ளன; இடம் இன்மையால் சொற்கள் செயற்கையாகப் பிரிக்கப்படும் போது வரியின் இறுதியில் இணைப்புக் கோடிட்டுக் காட்டப்பட்டுள்ளன. இந்தச் சந்திவிதிகள் அனைத்தையும் பதிப்புரையில் விளக்குவது பொருத்தம் ஆகாது. அதனால் சிலவற்றை மட்டும் குறிப்பாகச் சுட்டிச் செல்வேன்.

ஆகிய என்னும் சொல், 'ஆயனாகிய சாத்தன்' (நூ. 365) என்று பண்புருபாக வரும் போது சேர்த்துப் பதிப்பிக்கப்பட்டுள்ளது. 'வகுப்பதூஉம் வகுக்கப்படுவதூஉம் ஆகிய சம்பந்தம்' (சிற. பாயி.), 'இடுகுறிப்பெயரும் காரணப்பெயரும் ஆகிய இரண்டும்' (நூ. 62) என்று எண்ணும்மையும் தொகைச்சொல்லும் பெற்று எண்ணுப்பொருளிலும், 'நெட்டெழுத்தான் ஆகிய மொழி' (நூ. 129) என்று பெயரெச்சமாக ஆக்கவினைப் பொருளிலும் வரும் போது பிரித்துப் பதிப்பிக்கப்பட்டுள்ளது. ஆகிய என்பதன் மாற்று வடிவமாகிய ஆய என்பது, 'தாழாய கோல்' (நூ. 225), 'தெரிநிலை உடன்பாட்டு வினைமுற்றும் எச்சமும் எதிர்மறை வினைமுற்றும் எச்சமும் ஆய வினைப் பகுபதங்கள்' (நூ. 132), 'உயிரும் மெய்யும் ஆய இரண்டனையும்' (நூ. 108), 'எழுத்தான் ஆய பதம்' (நூ. 128) என்று அப்பொருள்களில் வரும் போது அதற்கும் இவ்விதி பொருந்தும். இதன் மற்றொரு மாற்று வடிவமாகிய ஆன என்பதற்கும் இதுவே விதிமுறை என்பது விளக்காமலே விளங்கும்.

'ஆகிய' போலவே, 'ஆம்' என்பதும் உரைகளில் பயின்று வரும் சொல். காட்டாக, **"மேல், "திரியும்" (நூ. 146) என்றவற்றுள் சிறப்பெழுத்தாகிய ஏழாம் உயிர் இகரமும் இருவும் ஆம்; ஐந்து வருக்கங்களினும் இடையில் நின்ற மூன்றும் அவ்வவ் வருக்கங்களின் முதலெழுத்து ஆம்; எட்டாம் மெய்யான சவ்வருக்கத்துள் எடுத்துச் சொல்லும் மெய் ஒரோவிடத்து யகரமும் ஆம்; முப்பதாம் மெய் மொழிமுதற்கண் சகரமும் இடைக்கண் யகரமும் ஆம்; முப்பத்தொன்றாம் மெய் மொழிமுதற்கண் சகரமும் இடைக்கண் டகரமும் ஆம்; முப்பத்திரண்டாம் மெய் மொழிமுதற்கண் சகரமும் இடைக்கண் தகரமும் ஆம்; முப்பத்துமூன்றாம் மெய் மொழிமுதற்கண் அகரமும் இடைக்கண் ககரமும் ஆம்; முப்பத்தைந்தாம் மெய் இரண்டு ககரம் ஆம்; பொதுவெழுத்துள் மொழியிறுதி ஆகாரம் ஐகாரம் ஆம்; மொழியிறுதி ஈகாரம் இகரம் ஆம்."** (நூ. 147) என்னும் பதவியல் நூற்பாவின் பொழிப்புரையில் இந்தச் சொல் பதினேழு முறை வந்துள்ளது. பழம்பதிப்புகளில்,

இத்தொடர்களில் உள்ள[132] ஆம் அனைத்தும் முன் நிற்கும் சொற்களோடு சேர்த்தே பதிப்பிக்கப்பட்டுள்ளன.

எண்ணுப்பெயர்களோடு, 'ஏழாம்', 'எட்டாம்' என்று வந்துள்ள, 'ஆம்' ஏழும் பின்னொட்டுகளாகச்[133] செயல்படுகின்றன. இந்த ஏழையும் எண்ணுப்பெயர்களோடு சேர்த்துப் பதிப்பித்துள்ளது முறை. ஆனால், 'இருவுமாம்', 'ஒரோவிடத்து யகரமுமாம்', 'மொழியிறுதி ஆகாரம் ஐகாரமாம்' என வரும் எஞ்சியுள்ள பத்தையும் சேர்த்துப் பதிப்பித்துள்ளது விவாதத்துக்கு உரியது.

'ஆம்' என்பது ஆகும் என்பதன் மாற்று வடிவம்; ஆகு[134] என்னும் வினையடி-யிலிருந்து தோன்றுவது. இது பெயரெச்சத்துக்கும் வினைமுற்றுக்கும் பொதுவானது. பவணந்தி முனிவர், **"என இரண்டு ஆகும்", "நான்கும் ஆம்"** (நூ. 270) என்று ஒரே நூற்பாவில் இருவடிவங்களையும் வினைமுற்றாகப் பயன்படுத்துவார். இந்நூற்பாவின் உரையில் சங்கர நமச்சிவாயர் அவை இரண்டையும், 'ஆம்' என்றே எழுதுவார். மூல-பாடத்தில் வரும் ஆகும் என்னும் வினைமுற்றுக்கு அவர் இவ்வாறு பல இடங்களில் (நூ. 6, 7, 8, 17, 60, 272, 298, 312, 415) ஆம் என்று உரை வரைவார். இது அவருடைய நடை.

மேலும், செய்யும் என்னும் வாய்பாட்டுப் பெயரெச்சத்துக்கும் வினைமுற்றுக்கும் சிறப்புவிதி கூறும் நூற்பாவில் முற்றுச் சொல்லின் இறுதி உயிராவது உயிர்மெய்-யாவது கெடுதலும் உண்டு என்று பவணந்தி முனிவர் (நன். 341) விதி வகுப்பார். சங்கர நமச்சிவாயர் அந்நூற்பாவின் உரையில், **"செய்யுளுள் உம் உந்து ஆம் எனவே ஏனைய வழக்குச் செய்யுள் ஈரிடத்தும் ஆம்"** என்று நயவுரை கூறி, **"அஃது ஆம், இவை போம்"** என்று வழக்கிலிருந்து உதாரணங்களும் வழங்குவார். அதோடு அல்லாமல், **"ஆம் என்பதனை எல்லா நூற்கும் ஆம் எனக் கூட்டுக."** (நூ. 3) என்றும், **"பல்லோர் பகுதியின் பெயர் ஆம் எனக் கூட்டுக."** (நூ. 278) என்றும் சிற்சில இடங்களில் அவர் தெளிவாக வினைமுடிபு கூறுவதும் உண்டு. மற்றொரு இடத்தில் **"சாலப் பல ஆம் என ஆம் என்னும் வினைப் பயனிலை தொக்கு**

---

[132]**"இடைக்கண் டகரமும் ஆம்" என்ற ஒரு தொடர் மட்டும் தண்டபாணி தேசிகர் பதிப்பில் (1957. பக். 131; 1971. பக். 187) பிரித்துப் பதிப்பிக்கப்பட்டுள்ளது.**

[133]*சங்கர நமச்சிவாயர் (நூ. 179), 'ஆம்' என்பதைச் சாரியை என்பார்.*

[134]*இந்த வினைச்சொல்லின் முதல்நிலைபற்றிப் பவணந்தி முனிவர், பரிமேலழகர், நச்சினார்க்கினியர் முதலியோர் கருத்துகளைச் சாமிநாத தேசிகர் (இல. கொ. 86) தொகுத்துக் கூறுவார்.*

**நின்றது** (நூ. 456) என்றும் குறிப்புரை வரைவார். இதுபோலவே, **"ஆம் என்னும் பெயரெச்சம் ஒலி என்னும் பெயரோடு முடிந்தது."** (நூ. 58) என்று எச்சத்துக்கும் அவர் முடிப்பு கூறுவார்.

ஆகவே இந்த நூற்பாவின் (நன். 147) பொழிப்புரையில், **'இருவும் ஆம்'**, **'ஒரோ-விடத்து யகரமும் ஆம்'**, **'மொழியிறுதி ஆகாரம் ஆம்'** என்று சங்கர நமச்சிவாயர் எழுதியுள்ள, 'ஆம்' என்பன பத்தும் வினைப் பயனிலைகள். பொழிப்புரையை அடுத்து வரும், "மேல், **"திரியும்" (நூ. 146) எனப் பொதுவிதி போந்தவற்றுள் பயின்று வருவனவற்றிற்குத் திரிபு கூறி, ஏனைய வந்தவழிக் காண்க என்பார் இகரமும் ஆகும் எனப் பயனிலை கொடுத்து முடியாது, 'இகரமும்' என அவாய்நிலையாக முடித்தார்."** என்ற அவரது விளக்கம் இதனைத் திரிபறத் தெளிவு-படுத்தும். அன்றியும் உதாரணப் பகுதியில் இவை அனைத்தையும் எழுவாய்க்கு ஏற்ப, 'ஆயிற்று', 'ஆயின' என்று ஒருமைப் பன்மை ஈறுகள் தோன்ற அவர் விரித்தே எழுதுவார். எனவே பயனிலையாகச் செயல்படும், 'ஆம்' என்னும் வினைமுற்றைத் தனிச்சொல்லாகப் பிரித்துப் பதிப்பிப்பது சிறப்பு. ஒலிநயம் குறைந்து பிளவுபட்டு ஒலித்தாலும் பொருள் தெளிவுக்கு இந்த முறையே ஏற்றது. இவ்விதி, **"மொழி முதற்-காரணம் ஆம் ஒலி"** (நூ. 58) என வரும் பெயரெச்சத்துக்கும் பொருந்தும்.

உரையில், 'கண்ணிற் காணலாம்' (நூ. 318) என்று துணைவினையாகவும், 'பனுவல் அன்றாம்' (நூ. 55), 'வருவனவாம்' (நூ. 62), 'இரட்டாவாம்' (நூ. 247), 'கொண்டனவாம்' (நூ. 346) என்று இடைச்சொல்லாகவும், 'ஆம்' என்பது செயற்படும் போது அதனை முன் நிற்கும் சொல்லோடு சேர்த்துப் பதிப்பிப்பது நல்லது. 'ஆம்' என்பது எல்லா இடத்திலும் எல்லாச் சொல்லிலும் வரும் அசைச்சொற்களுள் ஒன்று எனப் பவணந்தி முனிவர் (நன். 441) குறித்திருந்தாலும் அந்நூற்பாவின் உரையைத் தவிர வேறு எங்கும் சங்கர நமச்சிவாயர் இந்த அசைச்சொல்லைக் குறிப்பிடாதது ஆராயத் தக்கது.

அடுத்ததாக மேற் கூறிய என்னும் தொடரை நாம் எடுத்துக்கொள்ளலாம். சங்கர நமச்சிவாயர் இத்தொடரை ஏறக்குறைய முப்பது இடங்களில் பயன்படுத்தியுள்ளார். பழைய பதிப்பாசிரியர்கள் இந்தத் தொடரை ஒரு சொல்லாகக் கொண்டு, சேர்த்துப் பதிப்பித்துள்ளனர். 'மேற்கூறு' என்று ஒரு கூட்டுவினை வழக்கில் இல்லாததால் மேற்கூறிய என்பதைப் பெயரெச்சம் என்று கொள்ள முடியாது. அப்படி ஒரு கூட்டு-வினையை வலிந்து அமைப்பது சங்கர நமச்சிவாயரின் சொல்லாட்சிக்குப் பொருந்தாது என்றும் தோன்றுகிறது.

அவருடைய உரையில், 'மேல் உரைத்தவாறு' (நூ. 92), 'மேற் காட்டிய' (நூ. 270), 'மேற் சொன்ன' (நூ. 154), 'மேல் நின்ற' (நூ. 249), 'மேற் போந்த' (நூ. 296), 'மேல் வரும்' (நூ. 96), 'மேல் விதந்த' (நூ. 207) முதலிய தொடர்கள் பயின்று வருகின்றன. மேற்கூறு என்பதைக் கூட்டுவினை என்று கொண்டால் மேற்காட்டு, மேற்சொல், மேற்போ என வெவ்வேறு கூட்டுவினைகளைப் புதிதாக அமைத்தாக வேண்டும். இது எளிய தீர்வாக இருக்காது. அன்றியும், 'மேல் தொகுத்தும் வகுத்தும் கூறிய' (நூ. 15), 'மேல் விதந்து கூறலின்' (நூ. 134) என்னும் தொடர்களில் பிற சொற்கள் இடையில் வந்து அது பிரிந்து நிற்பதையும் நாம் கருத்தில் கொள்ள வேண்டும். எனவே இத்தொடரைச் சேர்த்து அச்சிடுவதை விட மேற் கூறிய எனப் பிரித்து அச்சிடுவது சிறந்ததாகத் தோன்றுகிறது. இம்முடிபு இக்காலத் தமிழ்நடைக்குப் பொருந்துமா என்பது மேலும் ஆராயப்பட வேண்டும். இருந்தாலும் சங்கர நமச்சிவாயரின் சொல்லாட்சியைக் கருதி அத்தொடர் இப்பதிப்பில் பிரிக்கப்பட்டுள்ளது.

இனி, உடைய என்பது, 'சாத்தனுடைய கை' (நூ. 300) என்று சொல்லுருபாக வரும் போது சேர்த்தும், 'நான்கு திருமுகங்களை உடைய கடவுள்' (நூ. 56) என்று ஐயுருபை அடுத்துக் குறிப்புப் பெயரெச்சமாக வரும் போது பிரித்தும் அச்சிடப்பட்டுள்ளது. இதுபோலவே உவமவுருபாகிய போல என்பது ஐயுருபின்றிக், 'குருவி-போலக் கூப்பிட்டான்' (நூ. 367) என்று வரும் போது சேர்த்தும் அதுவே இரண்டாம் வேற்றுமை உருபை அடுத்துத், 'துடியைப் போலச் சுருங்கிய இடை' (நூ. 367) என்று விரிந்து வரும் போது பிரித்தும் பதிப்பிக்கப்பட்டுள்ளது. இதன் மாற்று வடிவமாகிய போல் என்பதற்கும் பற்றி என்னும் பின்னொட்டுக்கும் இந்த விதி பொருந்தும்.

எதிர்மறை வாக்கியங்களில், 'இவ்வரையறை இல்லை' (நூ. 130), 'குழை இலன்' (நூ. 321), 'காலம் இன்று' (நூ. 382), 'அது பொருள் அன்று' (நூ. 20) 'இவை பெருவழக்கு அல்ல' (நூ. 138) என்று வரும் இல்லை, இலன், இன்று, அன்று, அல்ல என்னும் குறிப்பு வினைமுற்றுகள் தொடரியலை நோக்கிப் பிரித்துப் பதிப்பிக்கப்பட்டுள்ளன. உள, உள்ளன, உளர் என்னும் உடன்பாட்டுக் குறிப்பு வினைமுற்றுகளுக்கும் இந்த விதி பொருந்தும். கொள், பெறு போன்ற துணைவினைகள், 'கண்டுகொள்க' (சிற. பாயி.), 'வரப்பெறும்' (நூ. 157) என்று சேர்த்துப் பதிப்பிக்கப்பட்டுள்ளன. வேண்டு, தகு போன்ற[135] துணைவினைகள், 'விதந்து கூற வேண்டும்' (நூ. 20), 'இச்சோறு உண்ணத் தகும்' (நூ. 339) என்று பிரித்து அச்சிடப்பட்டுள்ளன.

---

[135] **இத்தகைய துணைவினைகள் ஐம்பதுக்கும் மேலாகக் காணப்படுகின்றன.**

விவாதத்துக்கு உரியது எனினும், 'உய்த்துணர்ந்து களைக' (நூ. 380) என்னும் வழக்கை நோக்கி, 'உய்த்துணர்ந்து கொள்க' (நூ. 356) என்றும் கலைச்சொல் எனினும், 'வினையால் அணையும் காரணக்குறி' (நூ. 275), 'குறிப்பு வினையால் அணைந்த எட்டுப் பெயர்களும்' (நூ. 280) என்னும் ஆட்சி நோக்கி, 'வினையால் அணையும் பெயர்' (நூ. 319) என்றும் உரைமரபுத் தொடர் எனினும் பொருள் தெளிவைக் கருதி, 'என் நுதலிற்றோ எனின்' (சிற. பாயி.) என்றும் பிரித்துப் பதிப்பிக்கப்பட்டுள்ளன. 'ஒருசார்' (நூ. 63), 'ஒருசாரார்' (சிற. பாயி.), 'ஒரோவழி' (நூ. 9), 'ஒரோவிடத்து' (நூ. 147), 'ஒரோ-வொன்று' (நூ. 199), 'கூறுவதோர்' (நூ. 162), 'நிற்பதொன்று' (நூ. 73) முதலிய தொடர்கள் நடைமரபு நோக்கி இப்பதிப்பில் பிரிக்கப்படவில்லை.

இங்ஙனம் சொற்களைப் பிரிக்கவும் சேர்க்கவும் இப்பதிப்பில் கடைப்பிடிக்கப்-பட்டுள்ள விதிகளை அடுக்கிக்கொண்டே போகலாம். இவற்றுள் பெரும்பாலன தற்காலிகமானவை; மேலும் திருத்தம் பெற வேண்டியவை. தொகைமொழிகள், கூட்டு-வினைகள், துணைவினைகள், இடைச்சொற்கள் முதலியவற்றை இன்னும் விரிவாக ஆராய வேண்டும். எனவே இந்த விதிகளை மேன்மேலும் இங்கு எடுத்துக்காட்ட-வில்லை. ஒரு நல்ல நாளில் ஊர் கூடித் தேர் இழுத்துத் திருவிழாக் கொண்டாடு-வதுபோலத் தமிழ் அறிஞர்களும் எழுத்தாளர்களும் பதிப்பாசிரியர்களும் என்றாவது ஒன்று கூடிக் குழு அமைத்துச் சந்திக் குறியீடுகளை வகுப்பார்கள். அதுவரையில் உரையாசிரியர்களின் உரைநடையை எல்லோரும் எளிதாகப் புரிந்துகொள்ள இந்த விதிமுறைகள் உதவும் என்று நான் உறுதியாக நம்புகிறேன்.

இவ்வாறே நூற்பாவின் தலைப்பு, நிறுத்தக் குறியீடு, பத்திகளின் அமைப்பு, அடிக்குறிப்பு முதலிய பகுதிகளும் இப்பதிப்பில் ஆராய்ந்து அமைக்கப்பட்டுள்ளன. கற்போரின் தெளிவு ஒன்றே என் குறிக்கோள் என்பதால் பழைய பதிப்புகளிலிருந்து இவை சிறிது வேறுபட்டிருக்கும். அறிந்து செய்துள்ள இந்த வேறுபாடுகள் ஆய்வின் வளர்ச்சியையும் பதிப்பின் தரத்தையும் எடுத்துக்காட்டும். ஆய்வுலகு இவற்றின் பயன் உணர்ந்து கணிக்கும் என்பதில் எனக்கு ஐயம் இல்லை.

## நன்றி

நல்ல பணிக்கு நாலு பேர் உதவுவது உலகியல். அந்த முறையில் இப்பணியில் எனக்குப் பலர் உதவினர். அவர்களுக்கு என் நிறைநெஞ்ச நன்றியைத் தெரிவிப்பது தலையாய கடமை. நன்னூல் விருத்தியுரையை எனக்குக் கற்பித்த ஆசிரியர் (1955-56) திரு ச. தண்டபாணி தேசிகர், மயிலாடுதுறை; பதிப்புக் கலையை எனக்குக் கற்பித்தவர்

திரு வ. அய். சுப்பிரமணியம், திருவனந்தபுரம்; நன்னூல் விருத்தியுரையின் கடிதப்பிரதியை எனக்கு வழங்கியவர் திரு பா. ரா. சுப்பிரமணியன், சென்னை; என் பதிப்புப் பணிக்குப் பேருதவி புரிந்த நன்னூல் விருத்தியுரைப் பதிப்புகளை வெளியிட்டு உதவியோர் திரு ஆறுமுக நாவலர், திரு உ. வே. சாமிநாதையர், திரு ச. தண்டபாணி தேசிகர்; நன்னூல் பதிப்புகளை எனக்குக் கொடுத்து உதவியோர் திரு அ. ம. சத்தியமூர்த்தி, கும்பகோணம்; திரு இரா. சாரங்கபாணி, அண்ணாமலைநகர்; திரு சொ. சிங்காரவேலன், மயிலாடுதுறை; திரு கோ. சீனிவாச வர்மா, அண்ணாமலைநகர்; திரு இ. சுந்தரமூர்த்தி, சென்னை; திரு மொ. மாசிலாமணி, சிதம்பரம்.

நன்னூல் ஆய்வுக்குத் தேவையான நூல்களை வழங்கியவை மறைமலை அடிகள் நூலகம், சென்னை; தமிழ்ப் பல்கலைக்கழக நூலகம், தஞ்சாவூர்; கொலோன் பல்கலைக்கழக நூலகம், கொலோன், ஜெர்மனி; சொற்களைச் சந்தி பிரித்து எழுதுவதில் உதவியோர் திரு கி. அரங்கன், தஞ்சாவூர்; திரு பொன். கோதண்டராமன், சென்னை; திரு செ. வை. சண்முகம், அண்ணாமலைநகர்; திரு இராம. சுந்தரம், தஞ்சாவூர்; நன்னூல் விருத்தியுரைக் கருத்துகள் சிலவற்றை விளக்கியவர் திரு தி. வே. கோபாலையர், பாண்டிச்சேரி; ஆய்வுப் பணிக்கு நிதியுதவி செய்த நிறுவனங்கள்: ஜெர்மன் ஆராய்ச்சிக் கழகம், போன், ஜெர்மனி; ஹைடெல்பெர்க் பல்கலைக்கழகம், ஹைடெல்பெர்க், ஜெர்மனி; பல்கலைக்கழக நிதிக்குழு, புது டில்லி.

சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் இலக்கியத் துறையின் ஆய்வாளனாக இருந்த மாதங்களில் (01. 10. 94 - 27. 03. 95) தோழமை உணர்வுடன் உதவியதோடு சிறப்புரை ஒன்றையும் வழங்கியவர் திரு பொன். கோதண்டராமன், சென்னை; பதிப்புரையைப் படித்துப் பயனுள்ள திருத்தங்கள் சிலவற்றை வழங்கியவர்கள் திரு இராம. சுந்தரம், தஞ்சாவூர்; திரு பா. ரா. சுப்பிரமணியன், சென்னை; பழம்பெரும் பல்கலைக்கழகம் ஒன்றில் அமைதியாகப் பணியாற்றும் வாய்ப்பை எனக்கு அளித்தவர் திரு கமில் சுவலபில் (Kamil V. Zvelebil), பிரான்சு.

மெய்ப்படிகளை எழுத்தெண்ணிப் படித்துத் திருத்தியவர் திரு பி. பட்டுசாமி, காவாலகுடி; என் தேவை அறிந்து மெய்ப்படிகளை அடிக்கடி அச்சிட்டுத் தந்ததோடு நூலின் வடிவத்தையும் அமைத்துக் கொடுத்தவர் திரு தாமஸ் லேமான் (Thomas Lehmann), ஹைடெல்பெர்க், ஜெர்மனி; இந்த நூலை விரைந்து அச்சிட்டு உதவியது உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை; நூல் வெளியீட்டுக்கு நிதியுதவி நல்கியது தெற்காசிய நிறுவனம், ஹைடெல்பெர்க், ஜெர்மனி.

ஆய்வுப் பணியில் ஆழ்ந்திருந்த சமயங்களில் எல்லாம் குடும்பக் கடமைகளை வலிந்து ஏற்றுக்கொண்டவள் என் வாழ்க்கைத் துணைவி திருமதி சின்னாயாள்; என் நல்ல முயற்சிகளுக்குத் தோன்றாத் துணையாய் என்னுள் நிறைந்திருப்பவன் எல்லாம் வல்ல இறைவன்.

எடுத்த பணி இனிது நிறைவேறும் இந்த நல்ல நேரத்தில் இவர்கள் எல்லோரையும் நன்றியுணர்வோடு நினைவுகூர்கிறேன்; நிறுவனங்களை மனக்கண் முன் நிறுத்தி மகிழ்கிறேன். இப்பதிப்பின் நல்லியல்புகள் எல்லாம் என் ஆசிரியர்களுக்கு உரியன; குற்றம் குறைகள் எனக்கே உரியன. இளமையில் மனப்பாடம் செய்த,

**"நீரளவே ஆகுமாம் நீராம்பல்; தான்கற்ற**
**நூலளவே ஆகுமாம் நுண்ணறிவு."** (வாக்குண்டாம் 7:1-2)

என்ற ஔவையார் வாக்கு நினைவுக்கு வருகிறது; குறைகள் கண்ணில் படும் போது அதை நினைத்துக்கொள்வது நல்லது.

## நிறைவுரை

நூல், உரை, பதிப்பு முதலியவற்றின் வரலாறுகளை ஒருங்கே எழுதியதால் பதிப்புரை வளர்ந்துவிட்டது. அதோடு, **"சொன்னால் விரோதமிது ஆகிலும் சொல்லுகேன், கேண்மினோ"** என்னும் நம்மாழ்வார் திருவாக்கின் வழி நின்று பிழைக் கருத்துகள் பல இங்கு மறுக்கப்பட்டதும் அதற்கு ஒரு காரணம். ஆயினும் அறிய வேண்டிய செய்திகளை அழுத்தம் திருத்தமாகச் சொல்லத்தானே வேண்டும்? பிழை திருத்தப் பட்டியல் இல்லாததால் நூலில் பிழை இல்லை என்பது பொருள் அல்ல; பிழைகள் இருக்கலாம். நூற்பாக்கள், மேற்கோள்கள், ஒப்புமைப் பகுதிகள், அடிக்குறிப்புகள், அகராதிகள் முதலியவற்றில் ஆயிரக் கணக்கான எண்கள் கடற்கரைக் கிளிஞ்சல்களாக நூல் முழுதும் கலந்து கிடக்கின்றன. அவற்றில் பிழை நேர வாய்ப்பு உண்டு; நேர்ந்திருந்தால் திருத்திக்கொள்க. ஆனால், 'அமெரிகன்', 'இராமாநுச கவிராயர்', 'சடகோப ராமாநுஜாசாரியர்', 'சென்னபட்டணம்', 'நிலயம்', 'புறநடை', 'ஜீ. யூ. போப்பையர்' முதலியன பிழைகள் அல்ல.

நன்னூல் விருத்தியுரைக்கு இது ஒரு செம்பதிப்பு; திருத்தப் பதிப்பு அல்ல. சிவஞான முனிவர் தமது கைப்படத் திருத்திய புத்தம் புத்துரையின் மூலக் கையேட்டைச் சங்கர

நமச்சிவாயர் உரை ஏடுகளோடு ஒப்பிட்டு அதற்கு ஒரு திருத்தப் பதிப்பு வெளியிடும் எண்ணம் தோன்ற இப்பதிப்பு உதவும் என்று நம்புகிறேன். அதுவே இப்பதிப்பின் பயன்.

**"நுண்ணுணர் வின்மை வறுமை; அஃதுடைமை**
**பண்ணப் பணைத்த பெருஞ்செல்வம்."** *(நாலடி. 251)*

அ. தாமோதரன்

ஹைடெல்பெர்க், ஜெர்மனி
*கார்த்திகை - நவம்பர், 1998*

## குறுக்க விளக்கங்கள்

### நூற்பெயர் முதலியன

| | |
|---|---|
| அகத். | அகத்திணையியல் |
| அகம். | அகநானூறு |
| அரிச். | அரிச்சந்திர புராணம் |
| அவி. | அவிநயம் |
| அள. | அளவை இலக்கணம் |
| ஆசாரக். | ஆசாரக்கோவை |
| இடை. | இடையியல் |
| இல. கொ. | இலக்கணக் கொத்து |
| இல. சூறா. | இலக்கண விளக்கச் சூறாவளி |
| இல. விள. | இலக்கண விளக்கம் |
| இளம். | இளம்பூரணர் |
| இறை. | இறையனார் அகப்பொருள் |
| இனிய. | இனியவை நாற்பது |
| உயிர். | உயிர் மயங்கியல் |
| உரி. | உரியியல் |
| உரிச். நிக. | உரிச்சொல் நிகண்டு |
| உருபு | உருபியல் |
| உவம. | உவமவியல் |
| எ. | எழுத்ததிகாரம் |
| எச்ச. | எச்சவியல் |
| ஏனாதி. | ஏனாதிநாயனார் புராணம் |
| ஐங். | ஐங்குறுநூறு |
| ஐந். எழு. | ஐந்திணை எழுபது |
| ஐந். ஐம். | ஐந்திணை ஐம்பது |
| கம்ப. | கம்பராமாயணம் |

| | |
|---|---|
| கலி. | கலித்தொகை |
| கள. | களவழி நாற்பது |
| களவு. | களவியல் |
| கார். | கார் நாற்பது |
| கிளவி. | கிளவியாக்கம் |
| குற்றிய. | குற்றியலுகரப் புணரியல் |
| குறள். | திருக்குறள் |
| குறுந். | குறுந்தொகை |
| சங்கரர் | சங்கர நமச்சிவாயர் |
| சிலப். | சிலப்பதிகாரம் |
| சிவ. சுப. | சிவஞானசித்தியார் சுபக்கம் |
| சிவ. போ. | சிவஞான போதம் |
| சிறுபாண். | சிறுபாணாற்றுப்படை |
| சீவக. | சீவகசிந்தாமணி |
| சூ. நிக. | சூடாமணி நிகண்டு |
| சூளா. | சூளாமணி |
| செய். | செய்யுளியல் |
| சேனா. | சேனாவரையர் |
| சொ. | சொல்லதிகாரம் |
| த. சரி. | தமிழ்நாவலர் சரிதை |
| தண்டி. | தண்டியலங்காரம் |
| த. விள. | தமிழ்நெறி விளக்கம் |
| திணை. நூற். | திணைமாலை நூற்றைம்பது |
| திரி. | திரிகடுகம் |
| திரு. | திருவாசகம் |
| திருக். | திருக்கோவையார் |
| திருநூற். | திருநூற்றந்தாதி |
| திருவாரூர். | திருவாரூர்த் திருநகரச் சிறப்பு |
| திவா. | திவாகரம் |
| தே. | தேவாரம் |
| தொகை. | தொகைமரபு |

| | |
|---|---|
| தொல். | தொல்காப்பியம் |
| தொல். விரு. | தொல்காப்பியச் சூத்திர விருத்தி |
| நச். | நச்சினார்க்கினியர் |
| நற். | நற்றிணை |
| நன். | நன்னூல் |
| நாலடி. | நாலடியார் |
| நான்மணி. | நான்மணிக்கடிகை |
| நூன். | நூன்மரபு |
| நேமி. | நேமிநாதம் |
| பதிற். | பதிற்றுப்பத்து |
| பரி. | பரிபாடல் |
| பி. வி. | பிரயோக விவேகம் |
| பிற. | பிறப்பியல் |
| புணர். | புணரியல் |
| பு. வெ. | புறப்பொருள் வெண்பாமாலை |
| புள்ளி. | புள்ளி மயங்கியல் |
| புறம். | புறநானூறு |
| பெயர். | பெயரியல் |
| பெரிய. | பெரிய புராணம் |
| பெரும்பாண். | பெரும்பாணாற்றுப்படை |
| பேர். | பேராசிரியர் |
| பொ. | பொருளதிகாரம் |
| பொருந. | பொருநராற்றுப்படை |
| மணி. | மணிமேகலை |
| மயான. | மயான காண்டம் |
| மயிலை. | மயிலைநாதர் |
| மரபு. | மரபியல் |
| மலைபடு. | மலைபடுகடாம் |
| மாறன். | மாறனலங்காரம் |
| முத். | முத்தொள்ளாயிரம் |
| முதற்போர். | முதற்போர்ப் படலம் |

| | |
|---|---|
| முருகு. | திருமுருகாற்றுப்படை |
| மொழி. | மொழிமரபு |
| யசோதர. | யசோதர காவியம் |
| யா. | யாப்பருங்கலம் |
| யா. கா. | யாப்பருங்கலக்காரிகை |
| யா. வி. | யாப்பருங்கல விருத்தி |
| விளி. | விளிமரபு |
| வினை. | வினையியல் |
| வீர. | வீரசோழியம் |
| வேற். | வேற்றுமையியல் |
| வேற். மய. | வேற்றுமை மயங்கியல் |

## குறியீடுகளும் குறிப்புகளும்

| | |
|---|---|
| இ-ள் | இதன் பொருள் |
| உ-ம் | உதாரணம் |
| எ-னின் | என்பது சூத்திரம் என் நுதலிற்றோ எனின் |
| கட. வாழ். | கடவுள் வாழ்த்து |
| சிற. பாயி. | சிறப்புப் பாயிரம் |
| சூ. | சூத்திரம் |
| தனி. | தனிப் பாடல்கள் |
| நூ. | நூற்பா |
| பக். | பக்கம் |
| ப-ர் | பதிப்பாசிரியர், பதிப்பாசிரியர்கள் |
| பாயி. | பாயிரம் |
| பொ. பாயி. | பொதுப் பாயிரம் |
| வ-று | வரலாறு |
| வி. மே. | இடம் விளங்காத மேற்கோள் |

## குறியீடுகளை அறிய உதவும் குறிப்புகள்

**குறிப்பு ஒன்று:**

{ }

சிவஞான முனிவர் திருத்திய உரைப் பகுதிகளுக்குரிய நூற்பாக்களின் எண்கள் கீழே உள்ளவாறு வளைவு அடைப்புக்குறிக்குள் தரப்பட்டுள்ளன.

உ-ம்: {3}, {10}, {50}, {56}, {00} அதிகாரத் தோற்றுவாய்

**குறிப்பு இரண்டு:**

அதோடு, சிவஞான முனிவரால் திருத்தப்பட்ட உரைப் பகுதிகள் சங்கர நமச்சி-வாயரின் உரைப் பகுதிகளிலிருந்து எழுத்துக்களின் அளவு வகையாலும் தெளிவாக வேறுபடுத்திக் காட்டப்பட்டுள்ளன.

உ-ம்: 1. நூ. 99.

உயிரளபெடை நான்கு மாத்திரைய ஆதலும் ஐகார ஒளகாரக் குறுக்கங்கள் ஒன்றரை மாத்திரைய ஆதலும் ஆரிடத்துள்ளும் அவை போல்வனவற்றுள்ளும் அருகி வந்து, செய்யுள் வழுவமைதியாய் முடிதலின் அவற்றை ஒழித்து, எல்லார்க்கும் ஒப்ப முடிந்து பயின்று வருவன மூன்று மாத்திரையும் ஒரு மாத்திரையுமே ஆகலின், 'மூன்றுயி ரளபு' என்றும், 'ஒன்றே குறிலோ டையௌக் குறுக்கம்' என்றும் கூறினார்.

குற்றியலுகரம் புணர்மொழி இடைப்படின் குறுகிக் கால் மாத்திரை பெறுதல் உரையிற் கோடல் என்பதனாற் கொள்க.

உ-ம்: 2. நூ. 142.

உ-ம்: நடந்தான், நடந்தாள், நடந்தார், நடந்தது, நடந்தன, நடந்தேன், நடந்தேம், நடந்தாய், நடந்தீர் எனவும் உண்டான் எனவும் சென்றான் எனவும் உறங்கினான் எனவும் வரும்.

இன்னிடைநிலை எஞ்சியது எனக் கடைக் குறைந்தும் போனது என முதல் குறைந்தும் வரும். பிறவும் அன்ன.

**குறிப்பு மூன்று:**

{{ }}

சங்கர நமச்சிவாயரின் உரைப் பகுதிகளை நீக்கிக் குறைத்தது மட்டுமே சில நூற்பாக்களுக்குச் சிவஞான முனிவர் செய்த திருத்தமாக அமைந்துள்ளது. இவ்வாறு முனிவரால் உரை நீக்கம் அடைந்துள்ள நூற்பாக்களின் எண்கள் கீழே உள்ளவாறு இரட்டை வளைவு அடைப்புக்குறிக்குள் தரப்பட்டுள்ளன.

உ-ம்: {{49}} {{134}} {{247}}

**குறிப்பு நான்கு:**

< >.

சங்கர நமச்சிவாயர் உரையில் சிவஞான முனிவரால் பிற நூல்களிலிருந்து எடுத்தெழுதிச் சேர்க்கப்பட்ட உரை வாசகங்கள் கீழே உள்ளவாறு கோண அடைப்புக்-

குறிக்குள் தரப்பட்டுள்ளன. எந்த நூல் அல்லது உரை என்பது ஆங்காங்கே அடிக்-குறிப்பில் விளக்கப்பட்டுள்ளது.

உ-ம்: 1. நூ. 267.

<மேற்றொட்டு மரீஇ வழங்கியது, "ஆப்பிநீ ரெங்கும் தெளித்துச் சிறுகாலை" (தொல். எச்ச. 47 நச்.), யானையிலண்டம், யாட்டுப்பிழுக்கை என வரும். தம் பொருள்மேல் நில்லாது அணி குறித்து நின்ற, "பகல்கான் றெழுதரும் பல்கதிர்ப் பருதி" (பெரும்பாண். 2*) என்றாற் போல்வன தம் பொருளை உணர்த்துங் கால் மறைத்துக் கூறப்படுமாறும் உணர்க.>

நச்சினார்க்கினியர் (தொல். எச்ச. 47) உரை.

உ-ம்: 2. நூ. 299.

இந்நீக்கப்பொருள், <"நிலைத்திணை யியங்கு திணைபண் பாதியின்" (இல. கொ. 38:1) வரும் எனவும் கொள்க. அவையாவன மலையின் இழிந்தான் எனவும் யானையின் இழிந்தான் எனவும், "சிறுமையி னீங்கிய" (குறள். 98*) எனவும் வரும். "ஆதி" (இல. கொ. 38:1) என்றதனால், "குடிப்பிறந்து குற்றத்தி னீங்கி" (குறள். 502), "ஐயத்தி னீங்கி" (குறள். 353) என வரும்> எனவும் கொள்க. இவ்விலக்கணத்தான் முன்னர்க் காட்டிய உதாரணங்களையும் உய்த்துணர்ந்து கொள்க.

இலக்கணக் கொத்து நூற்பாவும் (நூ. 38) உரையும்.

### குறிப்பு ஐந்து:

*

நன்னூல் மூலம், உரை மேற்கோள் ஆகியவற்றில் நிகழ்ந்துள்ள பாடபேதங்கள் கீழே உள்ளவாறு உடுக்குறியிட்டுக் காட்டப்பட்டுள்ளன.

நன்னூல் மூலம்:

உ-ம்: 1. நூ. 53. "தகும்புல வோற்கே*"
"தகும்புல வோர்க்கே" என்பது சங்கர நமச்சிவாயர் பாடம்.

உ-ம்: 2. நூ. 265. "றொருமைப்* பன்மை"
"றொருமை ப்ன்மைப்" என்பது சங்கர நமச்சிவாயர் பாடம்.

*உரை மேற்கோள்:*

*உ-ம்: நூ. 91 (யா. வி. 2*); நூ. 101 (முத்.*);*
*நூ. 202 (அகம். 384:5*); நூ. 222 (தொல். குற்றிய. 77* இளம்.).*

**குறிப்பு ஆறு:**

ஒரு நூற்பாவின் உரையில் அதே நூற்பாவில் வந்துள்ள சொற்களையும் தொடர்களையும் மீண்டும் விதந்து கூறி, அவற்றுக்கு இலக்கணக் குறிப்பும் நயவுரையும் கூறுவது உரைமரபு. அத்தகைய சொற்களும் தொடர்களும் ஒற்றை மேற்கோள் குறிகளுக்குள் இயன்ற வரையில் மூலத்தில் உள்ளவாறே தரப்பட்டுள்ளன.

*உ-ம்: 1. நூ. 301.*

*இடப்பொருளே அன்றி, ஏனை ஐந்து பொருளும் ஈண்டு இடனாய் நிற்றலின், 'பொருண்முத லாறும்' என்றும் வினை வரினும் அவ்வினைமுதல் இவ்விரு கிழமையின்பாற் படும் ஆதலின், 'கிழமையின் இடன்' என்றும் கூறினார்.*

*ஈண்டு, 'இது' என்றதூஉம் தொகுதியொருமை.*

*உ-ம்: 2. நூ. 399.*

*'பொருள்' என வேறு விதந்தமையின், 'உலகு' என்றது ஒழிந்த காலம் அனைத்தினையும் இடம் அனைத்தினையும் என்பதூஉம், 'இனைத்தென் றறிபொருள்' என்றமையானும், 'உலகு' எனக் காலம் அனைத்தினையும் இடம் அனைத்தினையும் கூறுதலானும், 'உம்மை' என்றது முற்றும்மையை என்பதூஉம் பெற்றாம்.*

**குறிப்பு ஏழு:**

இதுபோலவே ஒரு நூற்பாவின் உரையில் அதற்கு முன்னும் பின்னும் உள்ள நன்னூல் நூற்பாக்களை அல்லது நூற்பாக்களின் தொடர்களை இயைபு கருதி எடுத்துக்காட்டுவதும் உரைமரபு. இவை அனைத்தும் வழக்கமான மேற்கோள் குறிகளுக்குள் நூற்பா எண்களோடு மூலத்தில் உள்ளவாறே தரப்பட்டுள்ளன.

*உ-ம்: 1. நூ. 214.*

*"குறிலணை வில்லா ணனக்கள் வந்த*
*நகரந் திரிந்துழி நண்ணுங் கேடே" (நூ. 210)*

என்றமையின் இயல்பிற்கு நகரம் ஒழிந்த எட்டு மெய்யும் வருவித்துக் காண்க.

உ-ம்: 2. நூ. 338.

இங்ஙனம் கூறினார், "வகுத்துரை யாதவும் வகுத்தனர் கொளலே" (நூ. 257) என அல்லீற்று வியங்கோளும் உடன்பட்டுப் புணர்த்தமையான் எடுத்து ஓதாப் பிற ஈற்றவாய் இருதிணை ஐம்பால் மூவிடங்களினும் வாழ்த்து முதலிய ஏவற்பொருளவாய்ச் சென்றன உளவேல் அவை, "புதியன புகுதலும், வழுவல" (நூ. 462) என்னும் வழுவமைதியாய் வந்த வியங்கோள் என்பதூஉம் பெற்றாம்.

**குறிப்பு எட்டு:**

நூற்பெயர்க் குறுக்கம் எதுவும் இல்லாமல், அடைப்புக்குறிக்குள் உள்ள எண்கள் நன்னூல் நூற்பாக்களைக் குறிக்கும்.

உ-ம்: 1. நூ. 49.

எ-னின், மேற் கூறிய (47, 48) பதினொன்றனுள் நூற்பெயர்க்குச் சிறப்புவிதி உணர்த்துதல் நுதலிற்று.

உ-ம்: 2. நூ. 61.

இவை இத்துணைய ஆதல் (89-97) பிறப்பதிகாரத்தினுள் (74-97) காண்க. இவ்வாறு உயிர்மெய் ஒழிந்தனவற்றையும் விரித்தல் தொன்னெறி என்பார், 'என்ப' என்றார்.

**குறிப்பு ஒன்பது:**

இலக்கிய இலக்கண மேற்கோள்களுக்கு நல்ல பதிப்புகளைப் பின்பற்றி வழக்கம்-போலத் தொடர் எண்களும் அடி எண்களும் தரப்பட்டுள்ளன.

தொல்காப்பியத்துக்கு மர்ரே பதிப்பைப் (1960) பின்பற்றி இயலின் பெயரும் நூற்பா எண்ணும் (தொல். மரபு. 98) தரப்பட்டுள்ளன. உரை மேற்கோள்களுக்கு அந்தந்த உரையின் எண்முறை (தொல். தொகை. 4 நச்.) பின்பற்றப்பட்டுள்ளது.

தொல்காப்பியச் சூத்திர விருத்திக்குத் தண்டபாணி தேசிகர் பதிப்பையும் (1968) இலக்கண விளக்கச் சூறாவளிக்கு ஆறுமுக நாவலர் பதிப்பையும் (1956) பின்பற்றிப் பக்க எண்கள் (தொல். விரு. பக். 12-14), (இல. சூறா. பக். 100) கொடுக்கப்பட்டுள்ளன.

## பவணந்தி முனிவர் இயற்றிய

# நன்னூல் மூலமும்

### புத்தம் புத்துரை என்னும்

## விருத்தியுரையும்

*சிறப்புப் பாயிரம்*

{0} மலர்தலை யுலகின் மல்கிரு ளகல
இலகொளி பரப்பி யாவையும் விளக்கும்
பரிதியி னொருதா* னாகி முதலீ
றொப்பள வாசை முனிவிகந் துயர்ந்த
அற்புத மூர்த்திதன் னலர்தரு தன்மையின்
மனவிரு ளிரிய மாண்பொருண் முழுவதும்
முனிவற வருளிய மூவறு மொழியுளுங்
குணகடல் குமரி குடகம் வேங்கடம்
எனுநான் கெல்லையி னிருந்தமிழ்க் கடலுள்
அரும்பொரு ளைந்தையும் யாவரு முணரத்
தொகைவகை விரியிற் றருகெனத் துன்னார்
இகலற நூறி யிருநில முழுவதுந்
தனதெனக் கோலித் தன்மத வாரணந்
திசைதொறு நிறுவிய திறலுறு தொல்சீர்க்
கருங்கழல் வெண்குடைக் கார்நிகர் வண்கைத்
திருந்திய செங்கோற் சீய கங்கன்
அருங்கலை வினோத* னமரா பரணன்
மொழிந்தன னாக முன்னோர் நூலின்
வழியே நன்னூற் பெயரின் வகுத்தனன்
பொன்மதிற் சனகைச் சன்மதி முனியருள்
பன்னருஞ் சிறப்பிற் பவணந்தி
என்னு நாமத் திருந்தவத் தோனே.

*என்பது[1] பாயிரம்.*

---

[1]"பருதியி னொருதா" என்பதும் "விநோத னமரா" என்பதும் சங்கர நமச்சிவாயர் பாடங்கள்.

மலர்தலை யுலகிற் பலநூ லாய்ந்து
செய்வதுந் தவிர்வதும் பெறுவது முறுவதும்
உய்வது மறியே னொருபொரு ளாக
நன்னெறி பிறழா நற்றவத் தோர்பெறுந்
தன்னடித் தாமரை தந்தெனை யாண்ட
**திருவா வடுதுறைத் தேசிக னாகிய**[2]
கருணையங் கடலையென் கண்ணைவிட் டகலாச்
சுவாமி நாத குரவனை யனுதினம்
மனமொழி மெய்களிற் றொழுதவ னருளாற்
பொன்மலை யெனவிப் புவிபுகழ் பெருமை
மன்னிய வூற்று மலைமரு தப்பன்
முத்தமிழ்ப் புலமையு முறையர சுரிமையும்
இத்தலத் தெய்திய விறைமக னாதலின்
நன்னூற் குரைநீ நவையறச் செய்து
பன்னூற் புலவர்முன் பகர்தியென் றியம்பலின்
நன்னா வலர்முக நகைநா ணாமே
என்னா லியன்றவை யியற்றுமிந் நூலுள்

இப்பாயிரம் என் நுதலிற்றோ எனின்,

**<"வலம்புரி முத்திற் குலம்புரி பிறப்பும்[3]
வான்யா றன்ன தூய்மையும் வான்யாறு
நிலம்படர்ந் தன்ன நலம்பட ரொழுக்கமுந்
திங்க ளன்ன கல்வியுந் திங்களொடு
ஞாயி றன்ன வாய்மையும் யாவதும்
அஃகா வன்பும் வெஃகா வுள்ளமுந்
துலைநா வன்ன சமனிலை யுளப்பட
எண்வகை யுறுப்பின ராகித் திண்ணிதின்
வேளாண் வாழ்க்கையுந் தாஅ ளாண்மையும்
உலகிய லறிதலு நிலைஇய தோற்றமும்
பொறையு நிறையும் பொச்சாப் பின்மையும்
அறிவு முருவு மாற்றலும் புகழுஞ்
சொற்பொரு ளுணர்த்துஞ் சொல்வன் மையுங்**

[2] இந்த அடி சிவஞான முனிவரால் சேர்க்கப்பட்டிருக்கக் கூடும்.
[3] தொல்காப்பியச் சூத்திர விருத்தி (பக். 1-2).

கற்போர் நெஞ்சங் காமுறப் படுதலும்
இன்னோ ரன்ன தொன்னெறி மரபினர்
பன்னருஞ் சிறப்பி னல்லா சிரியர்
அறனே பொருட்பய னின்பெனு மூன்றின்
திறனறி பனுவல் செப்புங் காலை
முன்னர்க் கூறிய வெண்வகை யுறுப்பினுள்
ஏற்பன வுடைய ராகிப் பாற்படச்
சொல்லிய பொருண்மை சொல்லியாங் குணர்தலுஞ்
சொல்லிய பொருளொடு சூழ்ந்துநன் குணர்தலுந்
தன்னோ ரன்னோர்க்குத் தான்பயப் படுதலுஞ்
செய்ந்நன்றி யறிதலுந் தீச்சார் பின்மையும்
மடிதடு மாற்ற மானம்பொச் சாப்புக்
கடுநோய் சீற்றங் களவே காமம்
என்றிவை யின்மையுஞ் சென்றுவழி படுதலும்
அறத்துறை வழாமையுங் குறிப்பறிந் தொழுகலுங்
கேட்டவை நினைத்தலும் பாடம் போற்றலும்
மீட்டவை வினவலும் விடுத்தலு முரைத்தலும்
உடைய ராகி நடையறிந் தியலுநர்
நன்மா ணாக்க ரென்ப மண்மிசைத்
தொன்னூற் புலமைத் துணிபுணர் வோரே" (தொல். பொ. பாயி.*)

என ஆத்திரையன் பேராசிரியன் கூறிய பொதுப் பாயிரத்தானே[4] பன்னருஞ் சிறப்பின் நல்லாசிரியனை உணர்ந்து வழிபட்டு, ஒரு நூல் கேட்பான் புகுந்த நன்மாணாக்கர்க்கு அந்நூலான் நுவலப்படும் பொருளும் அந்நூல் கேட்டலாற் பெறப்படும் பயனும் கேட்டற்கு உரிய அதிகாரிகள் ஆவார் இவர் என்பதூஉம் இன்னது முற்றிய பின்னர் இந்நூல் கேட்கற்பாற்று என்னும் இயைபும் உணர்ந்தன்றி நூல் கேட்டற்கண் மனவூக்கம் செல்லாமையின் இன்றியமையாச் சிறப்பினவாய இந்நான்கும் ஒருதலையாக முன்னர் உணர்த்தல் வேண்டும். இந்நான்கும் உணர்ந்தவழியும் கற்று வல்ல சான்றோர் அல்லாராற் செய்யப்பட்ட நூல் ஆயின் கூறியது கூறல் முதலிய குற்றம் உடைத்தாம் அன்றே எனவும் கற்று வல்ல சான்றோரும் மற்றோர் கோட்பாடுபற்றிச் செய்யின் முனைவன்

[4] தொல்காப்பியப் பொதுப் பாயிரம் இயற்றிய பேராசிரியர் தொல்காப்பியத்துக்கு உரை எழுதிய பேராசிரியரின் வேறுபட்டவர்; காலத்தால் முந்தியவர்.

இப்பொதுப் பாயிரத்தை முதன்முதல் வைத்தியநாத தேசிகர் (இல. விள. பொ. பாயி.) எடுத்துக்காட்டுவார்.

**நூலொடு முரணும் அன்றே எனவும் ஐயுற்று ஊக்கம் செல்லாமையின் அவ் ஐயம் நீக்குதற்பொருட்டு ஆக்கியோன் பெருமையும் நூற் பெருமையும் அந்நூல் வழங்கும் நிலமும் அதன் முதல்நூலும் இவை என்பது தோன்ற, ஆக்கியோன் பெயரும் வழியும் எல்லையும் நூற்பெயரும் உணர்த்தல் வேண்டும். ஆகலின் இவ்வெட்டும்> இவ்வெட்டுடனே காலம், களன், காரணம் என்னும் மூன்றும் கூட்டிப் பதினொன்றும் தெரிப்பதே சிறப்புப் பாயிரத்தின் இலக்கணம் என** மேல் *(47, 48)* வகுக்கப்படும் ஆக்கியோன் பெயர் முதலியன உணர்த்துதல் நுதலிற்று.

*இ-ள்:* மலர் தலை உலகின்- பரந்த இடத்தை உடைய உலகத்தின்கண்ணே, மல்கு இருள் அகல- நிறைந்த கண்ணிருள் கெட, இலகு ஒளி பரப்பி- விளங்கும் கதிரை விரித்து, யாவையும் விளக்கும்- கட்பொறிக்கு விடயமாகிய உருவம் அனைத்தினையும் காட்டும், பரிதியின்- சூரியனைப் போல, ஒரு தான் ஆகி- உலகுக்கு எல்லாம் தான் ஒரு முதலே ஆகி, முதல் ஈறு ஒப்பு அளவு ஆசை முனிவு இகந்து உயர்ந்த- தோற்றமும் ஒடுக்கமும் உவமையும் அளவும் விருப்பும் வெறுப்பும் ஆகியவற்றை இயல்பாகவே நீங்கி நிற்றலால் தலைவன் ஆகிய, அற்புத மூர்த்தி- ஞானமே திருமேனியாக உடையான், தன் அலர் தரு தன்மையின்- தனது விரிந்த தன்மையாகிய கருணையினாலே, மன இருள் இரிய- உயிர்களின் மனத்திருளாகிய அவித்தை கெட, மாண் பொருள் முழுவதும்- மாட்சிமைப்பட்ட அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கு பொருளையும், முனிவு அற அருளிய- விருப்புடன் அருளிச்செய்த, மூவறு மொழியுளும்- பதினெண் நிலத்து மொழிகளுள்ளும், குண கடல் குமரி குடகம் வேங்கடம் எனும் நான்கு எல்லையின் இருந் தமிழ்க் கடலுள்- இந்நான்கு எல்லையினை உடைய நிலத்து **மொழியாகி இயல், இசை, நாடகம் என்று பெயர் பெற்ற** பெரிய தமிழ் என்னும் கடலுள், அரும் பொருள் ஐந்தையும்- அவ்வறம் முதல் பொருள் நான்கையும் உணர்தற்குக் கருவியாய் அருமையவாகிய **இயற்றமிழின் பாகுபாடான** எழுத்துச், சொல், பொருள், யாப்பு, அணி என்னும் ஐந்து பொருளையும், யாவரும் உணர- **அவ்வியற்றமிழ் உணர்தற்கு முன்னரே உயர்ந்தோர் செய்யுளிடத்து ஆராய்ச்சி உடையராய் அவ்வாராய்ச்சியான்** வலியோரே அன்றி எளியோரும் உணர, தொகை வகை விரியின் தருக என- **வழியின் நெறியாகிய நால்வகையுள் தொகுத்தும் வகுத்தும் விரித்தும் ஆக்கப்படும்** யாப்பினால் பாடித் தருக என, துன்னார் இகல் அற நூறி- பகைவரது பகைமை கெட அவரைத் துணித்து, இரு நிலம் முழுவதும் தனது எனக் கோலி- பெரிய பூமி அனைத்தினையும் தன்னுடையதாகப் பற்றிக்கொண்டு, தன் மத வாரணம் திசைதொறும் நிறுவிய திறல் உறு தொல் சீர்- தன் மதயானைகளை எட்டுத் திக்கினும் திசைக்களிறுகள்போல நிறுத்திய வெற்றி மிகுந்து, தன் அளவே அன்றித் தன் தாதை, மூதாதை முதலியோரைத் தொட்டு வரும் சீர்த்தியினையும்,

கருங் கழல்- பெருமை பொருந்திய வீரக்கழலினையும், வெண் குடை- வெண்கொற்றக் குடையினையும், கார் நிகர் வண் கை- மேகம்போலக் கைம்மாறு கருதாது கொடுக்கும் கையினையும், திருந்திய செங்கோல்- கோடாத செங்கோலினையும் உடைய, சீயகங்கன்- சிங்கம் போன்ற கங்கன், அருங் கலை வினோதன்- அரிய நூல்களை ஆராய்-தலே பொழுதுபோக்கும் விளையாட்டாக உடையான், அமர் ஆபரணன்- தன்னகத்து விழுப்புண் பட அமர் செய்தலையே ஆபரணமாக உடையான், மொழிந்தனன் ஆக- சொன்னானாக, முன்னோர் நூலின் வழியே- தொல்லாசிரியர் நூலின் வழியே, நன்னூற் பெயரின் வகுத்தனன்- நன்னூல் என்னும் பெயரினாற் செய்தனன், பொன் மதில் சனகை- பொன்மதில் சூழ்ந்த சனகாபுரத்துள் இருக்கும், சன்மதி முனி அருள்- சன்மதி முனிவன் பெற்ற, பன்னருஞ் சிறப்பின் பவணந்தி என்னும் நாமத்து- சொல்லுதற்கு அரிய ஞானவொழுக்கச் சிறப்பினையும் பவணந்தி என்னும் பெயரினையும் உடைய, இருந் தவத்தோன்- பெரிய தவத்தினை உடையோன் என்றவாறு.

இதனுள், 'பவணந்தி' எனவே ஆக்கியோன் பெயரும், 'முன்னோர் நூலின் வழியே' எனவே வழியும், 'நான் கெல்லை' எனவே எல்லையும், 'நன்னூல்' எனவே நூற்பெயரும், 'அரும்பொரு ளைந்து' எனவே நுதலிய பொருளும் அவற்றை, 'யாவரு முணர' எனவே முன்னர் நிகண்டு கற்றுச் செய்யுள் ஆராய்ச்சி உடையார்க்கே அவற்றை ஆராய்வுழி அவற்றின்கண்[5] உளவாகிய செய்கை வேறுபாடுகளும் சொல்முடிவு, பொருள்முடிவு வேறுபாடுகளும் இன்ன என்று துணியப்படாமையின் அவற்றைத் துணிந்து அறிய வேண்டி, இவ்வியற்றமிழ் நூல் கேட்டு அறிதலின்கண்ணே ஊக்கம் செல்லும் ஆகலின் <அவை[6] ஆராய்ந்த பின்னர் இவை கேட்கற்பாற்று என்னும் யாப்பும் அவை ஆராய்ந்தோர் இவை கேட்டற்கு உரியார் என்னும் கேட்போரும்> அவர் அப்பொருள் ஐந்தினையும் உணர்ந்து, மொழித்திறத்தின் முட்டு அறுத்தலின் மொழித்திறத்தின் முட்டு அறுத்தல் என்னும் பயனும் சீயகங்கன் மொழிந்தனனாக, 'நன்னூற் பெயரின் வகுத்தனன்' எனவே அவன் காலத்துப் பாடப்பட்டு, அவனது அவைக்களத்து அரங்கேற்றியது எனக் காலமும் களனும் சீயகங்கன் மொழிந்தமையானும் யாவரிடத்தும் இரக்கமுடைமையானும் வகுத்தமையால் காரணமும் பெறப்-பட்டன.

இனி இவற்றுள் <காலம்[7] முதலிய மூன்றும் நூல் செய்தார் காலத்து நிகழ்ந்தன; ஆக்கியோன் பெயர் முதலிய எட்டும் நூல் செய்தார் காலத்தும்

[5] தொல்காப்பியச் சூத்திர விருத்தியோடு (பக். 7) ஒப்பிடுக.

[6] தொல்காப்பியச் சூத்திர விருத்தி (பக். 24).

[7] தொல்காப்பியச் சூத்திர விருத்தி (பக். 24).

நூல் வழங்கும் காலத்தும் ஒப்ப நிகழ்வன. இவை தம்முள் வேற்றுமை. கழிந்த-வற்றை உணர்தலால் பெரும்பயன் இன்மையின் அவை ஒருசாராரால் கொள்ளப் பட்டன. ஆக்கியோன் பெயர் முதலியன ஒருதலையான் உணர வேண்டுதலின் அவை எல்லா ஆசிரியரானும் கொள்ளப்பட்டன.>

<வடநூலார்[8] யாப்பை ஆனந்தரியம் என்றும் நுதலிய பொருளை விடயம் என்றும் கேட்போரை அதிகாரிகள் என்றும் பயனைப் பிரயோசனம் என்றும் கூறுப. அவருள் ஒருசாரார் ஆனந்தரியப் பொருள் நூலைப் பயப்பித்தற்குக் காரணமாய்க் கேட்போரை விசேடித்து நிற்றலின் வேறு கூற வேண்டா என்னும் கருத்தால் ஆனந்தரியம் நீக்கிச் சம்பந்தம் ஒன்றும் கூட்டி நான்கு என்பாராயினார். சம்பந்தம் என்பதூஉம் யாப்பு என்னும் பொதுச்சொல்லால் கொள்ளப்படும். அது, 'நன்னூற் பெயரின் வகுத்தனன்' எனவே நூற்கும் நூல் நுதலிய பொருட்கும் வகுப்பதூஉம் வகுக்கப்படுவதூஉம் ஆகிய சம்பந்தம் என்பது பெறப்பட்டது. யாப்பு, இயைபு, தொடர்ச்சி என்பன ஒரு பொருட் கிளவி.

ஈண்டுக் கேட்டல் பாடம் கேட்டல். அது, "கேள்வி விமரிசம் பாவனை" *(வி. மே.)* என்பதனானும், "கேட்டவை நினைத்தலும் பாடம் போற்றலும்" *(தொல். பொ. பாயி. 29)* என்பதனானும், "ஒருகுறி கேட்போ னிருகாற் கேட்பின்" *(நூ. 42)* என்பதனானும் உணர்க.

இவ்வெட்டும் உணர்ந்ததற்குப் பயன் நூல் பயிலுதற்கண் ஊக்கம் உண்டாதல். ஊக்கம்- உள்ளக்கிளர்ச்சி.

இனி வாய்ப்பக் காட்டல் (15) என்பதனானே இத்துணைச் சிறப்பு இலவாய் அவ்வவற்றிற்கு இனமாய்க் காட்டப்படுவனவும் உள என்பது பெற்றாம். அவை ஆக்கியோன் பெயரே அன்றி ஆக்குவித்தோன் பெயர் கூறுதலும் வழியே அன்றி அதன் வகையாகிய தொகுத்தல் முதலிய நான்கனுள் (50) ஒன்று ஆமாறு கூறுதலும் தன் முதல்நூற்கு வழி கூறுதலும் அது வந்த மரபுவழி கூறுதலும் பொதுவெல்லை கூறுதலே அன்றிச் செந்தமிழ் முதலியவற்றின் சிறப்பெல்லை கூறுதலும் நூற்பெயரே அன்றிப் படலப்பெயர், ஓத்தின் பெயர் கூறுதலும் நூற்கு இயைபு கூறுதலே அன்றி நூலினுள் படலம் முதலியவற்றிற்கு இயைபு கூறுதலும் சம்பந்தம் காட்டுவார் மதத்தின் நூற்கும் நூல் நுதலிய பொருட்கும் கிழமை கூறுதலே அன்றி நூல் நுதலிய பொருட்கும் பயனுக்கும் கிழமை கூறுதலும்

[8] தொல்காப்பியச் சூத்திர விருத்தி (பக். 25-27).

நூற்கும் நூல் செய்தோனுக்கும் கிழமை கூறுதலும் நூல் நுதலிய பொருளே அன்றிப் படலம் நுதலியதூஉம் ஓத்து நுதலியதூஉம் சூத்திரம் நுதலியதூஉம் கூறுதலும் கேட்போரே அன்றிக் கேட்பிப்போரைக் கூறுதலும் பயனே அன்றிப் பயனுக்குப் பயன் கூறுதலும் ஆம்.>

இவ்வெட்டனுள், 'சீய கங்கன்' எனவே ஆக்குவித்தோன் பெயரும், 'தொகை-வகை விரி' எனவே வழியின் வகையும், 'மாண்பொருண் முழுவதும்' எனவே பயனுக்குப் பயனும் பெறப்பட்டன. ஏனைய இந்நூலுள் வந்துழி வந்துழிக் காண்க.

<பயனுக்குப்[9] பயனாவது,

(வெண்பா)

"எழுத்தறியத் தீரு மிழிதகைமை தீர்ந்தான்
மொழித்திறத்தின் முட்டறுப்பா னாகு - மொழித்திறத்தின்
முட்டறுத்த நல்லோன் முதனூற் பொருளுணர்ந்து
கட்டறுத்து வீடு பெறும்" (குறள். 392 பரிமேலழகர்)

என்பதனால்[10] காண்க.

எனவே முதல்நூற் பொருள் உணர்தற்கு முறையானே இது கருவிநூல் என்பது பெறப்பட்டது.> முதல்நூல் என்றது அறம் முதலிய நான்கினையும் (10) உணர்த்தும் நூலை என அறிக. <எழுத்து[11] என்றது இயற்றமிழை. அது, "எண்ணென்ப வேனை யெழுத்தென்ப" (குறள். 392) என்பதனானும் உணர்க.> இசைத்தமிழும் நாடகத்தமிழும் இவ்வியற்றமிழ்போல முதல்நூல் பொருள் உணர்தற்குக் கருவி அன்மையின் இயற்றமிழ் ஒன்றுமே கூறினார். ஆயின் இயற்றமிழை, 'அரும்பொரு ளைந்து' எனக் கூறினமையின் இந்நூலுட் கூறிய பொருள் யாப்பு அணிகள் என்னும் மூன்று அதிகாரங்களும்[12] அக்காலத்து உள்ளன போலும்.

---

[9] தொல்காப்பியச் சூத்திர விருத்தி (பக். 27).

[10] இப்பாடலின் துவக்கப் பகுதியை மயிலைநாதரும் (நன். 289) எடுத்துக்காட்டுவார்.

[11] தொல்காப்பியச் சூத்திர விருத்தி (பக். 21).

[12] மயிலைநாதரும், "இந்நூலிற் சொன்ன ஐந்து அதிகாரத்திற்கும் சிங்க நோக்காய் நிற்பதொரு புறநடை உணர்த்துதல் நுதலிற்று." என்றும், "இவ்வாறே மேல் வரும் அதிகாரங்களிலும் கண்டுகொள்க." (நன். 461) என்றும் இக்கருத்தைக் குறிப்பிடுவார்.

<ஈண்டுக்[13] கேட்பிப்போர் இயற்றமிழ் வல்ல ஆசிரியர். படலம் நுதலியது இவ்வதிகாரம் என் நுதலிற்றோ எனின் என்பது. ஓத்து நுதலியது இவ்வோத்து என் நுதலிற்றோ எனின் என்பது. சூத்திரம் நுதலியது இச்சூத்திரம் என் நுதலிற்றோ எனின் என்பது. படலத்திற்கு இயைபு மேலை அதிகாரத்தோடு இயைபு உடைத்தாயிற்று என்பது. ஓத்திற்கு இயைபு மேலை ஓத்தினோடு இயைபு உடைத்தாயிற்று என்பது. சூத்திரத்திற்கு இயைபு மேலைச் சூத்திரத்தோடு இயைபு உடைத்தாயிற்று என்பது. இவை நூன்முகத்துக் காட்டப்படுதலே அன்றிப் படலமுகத்தும் ஓத்துமுகத்தும் சூத்திரமுகத்தும் காட்டப்படும். இவை எல்லாம் பாயிரமேயாம். பிறவும் இவ்வாறே கண்டுகொள்க.

அற்றேல் கேட்போர் மாணாக்கரும் கேட்பிப்போர் ஆசிரியரும் ஆகலான் இவ்விரண்டும் பொதுப் பாயிரத்தால் பெறப்படுமாலோ எனின் அற்று அன்று. பொதுவகையான் ஆசிரியர்க்கும் மாணாக்கர்க்கும் இலக்கணம் பெறப்பட்டன-வல்லது இந்நூற்கு இன்னார் என்னும் சிறப்புவகை ஆண்டுப் பெறப்படாமை-யின் இஃது ஈண்டுக் காட்டப்படும். இது காட்டாக்கால் சிற்றறிவோர் பெருநூலும் பேரறிவோர் சிறுநூலும் முத்தமிழுள் ஒரு நூற்கு உரியார் ஏனை இரண்டு நூலும் அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கனுள் ஒன்றற்கு உரியார் ஏனை மூன்று நூலும் கேட்பான் புக்கு, இடர்ப்பட்டு மயங்குப. ஆகலின் இஃது ஒருதலையான் காட்டல் வேண்டும் என்பது. இதுபற்றி அன்றே பொது எனவும் சிறப்பு எனவும் பாயிரம் இரு பகுதிப்பட்டதூஉம் என்க.

இக்கருத்து அறியாத உரையாசிரியரை உள்ளிட்டோர் எல்லாரும்[14] நூல் அரங்கேறும் அவைக்களத்துக் கேட்டாரைக் கேட்போர் என்றும் தொகுத்தல் முதலிய வழியின் வகையினை யாப்பு என்றும் கூறினார். ஆக்கியோன் பெயர், நுதலிய பொருள் என்பனபோல இறந்தகாலத்தால் கூறாது, "கேட்போர்" (நூ. 47) என எதிர்காலத்தால் கூறியதே அஃது உரை அன்மைக்குச் சான்றாம் ஆகலானும் காலம் களத்துள் அடங்குதலின் வேறு கூற வேண்டாமையானும் ஆக்கியோன் பெயர் முதலியனபோல நூல் வழங்கும் காலத்து நிகழ்வது அன்று ஆகலின்

[13] தொல்காப்பியச் சூத்திர விருத்தி (பக். 27-29).

[14] எல்லாரும் என்பது களவியல் உரையாசிரியர் (இறை. 1), இளம்பூரணர், நச்சினார்க்-கினியர் (தொல். சிற. பாயி.), மயிலைநாதர், சங்கர நமச்சிவாயர் (நன். சிற. பாயி.), வைத்தியநாத தேசிகர் (இல. விள. சிற. பாயி.) முதலியோரைக் குறிக்கலாம்.

இவர்களுள் சங்கர நமச்சிவாயர், "கேட்போர்" என்பதற்குச் சீயகங்கன் என்று பொருள் கூறுவார்.

**அவற்றோடு ஒருங்கு வைத்து எண்ணல் பொருந்தாமையானும் கேட்டற்கு உரிய அதிகாரிகள் ஆவாரை ஒருதலையாக உணர்த்தல் வேண்டும் ஆகலானும் தொகுத்தல் முதலியன வழியுள் அடங்குதலானும் இயைபும் ஒருதலையான் உணர்தற்பாலது ஆகலானும் யாம் கூறியதே வடநூலார்க்கும் உடன்பாடு ஆகலானும் அவர் உரை போலியுரை என்க.>**

*__வழியின் வகையாகிய__ நால்வகை யாப்பினுள் (50) தொகைவிரி யாப்பு என ஒன்று போந்ததன்றித் தொகை, வகை, விரி எனப் போந்தது இல்லையாலோ எனின் நடு நின்ற வகை பின் நின்ற விரியை நோக்கின் தொகையாகவும் முன் நின்ற தொகையை நோக்கின் விரியாகவும் அடங்குதலின் இது தொகைவிரி யாப்பு என்றதன்பாற் படும் என்க. எனவே தொகை, விரி என இரண்டாய் வரினும் மரத்தினது பராரையினின்றும் கவடு, கோடு, கொம்பு, வளார் பலவாய் ஒன்றோடு ஒன்று தொடர்பட்டு எழுந்து நிற்றல்போல் தொகையினின்றும் ஒன்றோடு ஒன்று தொடர்படப் பகுக்கப்பட்டுப் பலவாய் வரினும் தொகைவிரி யாப்பேயாம் என்க.*

*இப்பாயிரம் ஒரு நூற்கு உரித்து ஆகலின் சிறப்புப் பாயிரமாம்[15] என்க. (சிற. பாயி.)*

*சிறப்புப் பாயிரம் முற்றிற்று.*

[15]**யாப்பருங்கல விருத்தி (பாயி.),**

**"வணக்க மதிகார் மென்றிரண்டுஞ் சொல்லச்
சிறப்பென்னும் பாயிர மாம்"**

**என்று கூறும்.**

## உரைப் பாயிரம்

(விருத்தம்)

நன்னூலுட் கருத்துலகோ ரறியவுரை
　　செய்கவென நரேந்திர சிங்கம்
தென்னூற்று மலைமருதப் பன்புகலப்
　　பொருள்விளங்கச் செய்தான் பாரில்
எந்நூற்கு மெழுத்தொடுசொற் பொருளறிசங்
　　கரநமச்சி வாய னென்னும்
பன்னூற்செந் தமிழ்ப்புலவன் சைவசிகா
　　மணிநெல்லைப் பதியி னானே.

அகத்தியந்தொல் காப்பியமே முதலியமுன்
　　னூல்கள்பல வாய்ந்து முப்பால்
பகுத்ததிரு வள்ளுவரே முதன்ஞான
　　நூல்களெலாம் பகல்செய் வான்போல்
இகத்திலுரை செயவலசங் கரநமச்சி
　　வாயனெனு மியற்பேர்பெற்ற
தகைப்புலவ னன்னூலுக் குரைவகுத்த
　　தொருவியப்போ தமிழ்வல் லோரே.

முன்னூற்கு மலயமுனி தன்னூற்கும்
　　புவியிடத்து முதியோ ராற்சொல்
எந்நூற்குந் தமிழ்க்கடலு ளினியியற்று
　　நூற்கும்வகை யிதனாற் காட்டி
நன்னூற்கு விரித்துரைசெய் தான்றிகாந்
　　தத்தளவு நடத்துங் கீர்த்தித்
தென்னூற்று மலைமருதப் பன்சொலச்சங்
　　கரநமச்சி வாயன் றானே.

இம்மூன்றும் உரைப் பாயிரம்.

# பொதுப் பாயிரம்

## பாயிரத்தின் காரணப்பெயர்கள்

1. **முகவுரை பதிக மணிந்துரை நூன்முகம்**
**புறவுரை தந்துரை புனைந்துரை பாயிரம்.**

*எ-னின், பாயிரத்திற்கு வரூஉம் காரணக்குறிகள் உணர்த்துதல் நுதலிற்று.*

*இ-ள்: பாயிரத்தின் இலக்கணங்களை முன் உணர்ந்தல்லது, நூல்களைச் செய்தலும் அவற்றை ஈதலும் ஏற்றலும் முடியாமை கருதி முன் உரைத்தலின் முகவுரை என்றும்,*

*"பதிகக் கிளவி பல்வகைப் பொருளைத்*
*தொகுதி யாகச் சொல்லுத றானே" (வி. மே.)*

*என்ப ஆகலின் மேல் வகுக்கும் ஐந்து பொதுவும் (3) பதினொரு சிறப்பும் ஆகிய (47, 48) பல்வகைப் பொருளையும் தொகுத்துச் சொல்லுதலின் பதிகம் என்றும் நூலினது பெருமை முதலிய விளங்க அணிந்துரைத்தலின் அணிந்துரை என்றும் முகவுரை என்றதுபோல நூன்முகம் என்றும் நூல் நுதலிய பொருள் அல்லன-வற்றை உரைத்தலின் புறவுரை என்றும் நூற்கு உள்ள, நுதலிய பொருள் அல்லன-வற்றை அதற்குத் தந்துரைத்தலின் தந்துரை என்றும் அணிந்துரை என்றாற்போலப் புனைந்துரை என்றும் பாயிரத்துக்குப் பெயராம் என்றவாறு.*

*பாயிரம் என்பது வரலாறு. பாயிரம் கூறப் புகுந்தார் நிகண்டுபோல அதன் பெயர் விகற்பங்களைக் கூறியது என்னை எனின் இப்பாயிரம் பதிகமாகிய புறவுரையாய்த் தந்துரைக்கப்படுவதேனும் நூற்கு இன்றியமையாத அணியாய் முன் உரைக்கப்படுவது என்பது இக்காரணக்குறிகளான் விளங்குதலின் என்க.* (1)

## பாயிரத்தின் வகை

2. **பாயிரம் பொதுச்சிறப் பெனவிரு பாற்றே.**

*எ-னின், மேற், "பாயிரம்" (நூ. 1) என்றதனை வகுத்து உணர்த்துதல் நுதலிற்று.*

*இ-ள்: மேற் பாயிரம் என்றது பொதுப் பாயிரமும் சிறப்புப் பாயிரமும் என இருவகையினை உடைத்து எ-று.* (2)

## பொதுப் பாயிரத்தின் இலக்கணம்

{3} **நூலே நுவல்வோ னுவலுந் திறனே**
**கொள்வோன் கோடற் கூற்றா மைந்தும்**
**எல்லா நூற்கு மிவைபொதுப் பாயிரம்.**

எ-னின், இருவகைப் பாயிரத்துள் பொதுப் பாயிரத்தை விரித்து உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: நூலினது வரலாறும் ஆசிரியனது வரலாறும் அவ்வாசிரியன் நூலை மாணாக்கற்குச் சொல்லுதலின் வரலாறும் மாணாக்கனது வரலாறும் அவன் கேட்டலின் வரலாறும் என்னும் ஐந்தும் எல்லா நூற்கும் ஆம் ஆதலின் இவ்வைந்து வரலாற்றையும் விளங்க உணர்த்துவது பொதுப் பாயிரமாம் எ-று.

திறன்- கூற்று. என்றது வரலாற்றை ஆதலின் அதனை ஏனையவற்றுள்ளும் பிரித்து உரைத்தாம். 'ஆம்' என்பதனை எல்லா நூற்கும் ஆம் எனக் கூட்டுக.

"ஈவோன் றன்மை யீத லியற்கை
கொள்வோன் றன்மை கோடன் மரபென
ஈரிரண் டென்ப பொதுவின் றொகையே" (தொல். சிற. பாயி. இளம்.)

என்பாரும்[16] உளராலோ எனின் பாயிரம் கூறுதல் நூல்கட்கு அன்றிப் பிறவற்றிற்கு அன்றே? அங்ஙனம் ஆதலின் நூல்களின் வரலாறு ஒன்றுமே கூற வேண்டும். அதனோடு ஆசிரியன் வரலாறு முதலிய நான்கினையும் உடன் கூறுதல் வரலாற்று முறைமையின் வாராதார் நூல்களைக் கற்பிக்கவும் கற்கவும் புகின்,

"பொய்படு மொன்றோ புனைபூணுங் கையறியாப்
பேதை வினைமேற் கொளின்" *(குறள். 836)*

என்றவாறேயாய் நூல்கள் அருமையும் பெருமையும் கெட்டுப் பயன்படாவாம் என்பது கருதி என்க.

**அங்ஙனம் ஆயின் நூல்முகத்து உரைக்கப்படும் பாயிர உறுப்பினுள் நூலைக் கூறுவது பொருந்தாது எனின் இவ்விலக்கணத்தான் அமைபவன் ஆசிரியன் என்றாற்போல இவ்விலக்கணத்தான் அமைவது நூல் என்றதன்றிப் பாயிரத்துள் நூலைக் கூறியது அன்றாம். ஆதலின் ஆசிரியர் தொல்காப்பியர் நூலின் இயல்பை ஒத்துறுப்பாகிய மரபியலுள் கூறினாற்போல இவ்வாசிரியர் பாயிர உறுப்பினுள் கூறினார் என்க.** (3)

[16] **என்பார் என்பது களவியல் உரையாசிரியர் (இறை. 1), இளம்பூரணர், நச்சினார்க்கினியர் (தொல். சிற. பாயி.), நேமிநாத உரையாசிரியர் (நேமி. பாயி.), வைத்தியநாத தேசிகர் (இல. விள. பொது. பாயி.) முதலியோரைக் குறிக்கலாம்.**

நூலின் வரலாறு

4. **நூலி னியல்பே நுவலி னோரிரு**
**பாயிரந் தோற்றி மும்மையி னொன்றாய்**
**நாற்பொருட் பயத்தோ டெழுமதந் தழுவி**
**ஐயிரு குற்றமு மகற்றியம் மாட்சியோ**
**டெண்ணான் குத்தியி னோத்துப் படலம்**
**என்னு முறுப்பினிற் சூத்திரங் காண்டிகை**
**விருத்தி யாகும் விகற்பநடை பெறுமே.**

எ-னின், மேற் கூறிய ஐந்தனுள் (3) நூலினது வரலாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: மேற் கூறிய ஐந்தனுள் நூலினது வரலாற்றைச் சொல்லின் இருவகைப் பாயிரத்தையும் முன் உடைத்து ஆதல் முதலாக இங்ஙனம் விகற்பித்த பதினொரு விகற்பநடைகளைப்[17] பெற்று வரும் எ-று. (4)

நூல்களின் வகை

5. **முதல்வழி சார்பென நூன்மூன் றாகும்.**

எ-னின்[18] நூலினது வரலாற்றைத் தொகுத்துக் (4) கூறினார்; அவற்றுள் ஓரிரு பாயிரத்திற்கு வகை போந்து கிடந்தமையின் (2) அதனை ஒழித்து, ஏனையவற்றை வகுத்துக் கூறுவான் தொடங்கி, "மும்மையி னொன்றாய்" (நூ. 4) என்றதனை வகுத்து உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: முதல்நூல், வழிநூல், சார்புநூல் என மூன்று கூற்றதாம் நூல் எ-று. (5)

முதல்நூல்

6. **அவற்றுள்,**
**வினையி னீங்கி விளங்கிய வறிவின்**
**முனைவன் கண்டது முதனூ லாகும்.**

---

[17]"பதின்மூன்று விகற்பநடைகளைப் பெற்று வரும்." என்பது ஆறுமுக நாவலர் பாடம்.

[18]பாயிர நூற்பாக்களில் பலவற்றை (நூ. 5, 7, 8, 10, 11, 12, 13, 17, 20, 37, 39, 40, 41, 44, 45, 46, 47, 48, 52, 54) இறையனார் அகப்பொருள் உரை (நூ. 1) யாப்பருங்கல விருத்தி (பாயி., நூ. 95), வீரசோழிய உரை (நூ. 178), இளம்பூரணர் உரை (தொல். சிற. பாயி.) முதலியவற்றிலும் காணலாம். சில நூற்பாக்களில் சிறு வேறுபாடுகள் உண்டு; ஒருசில உரைநடையிலும் அமைந்துள்ளன.

எ-னின்[19] நூல் மூன்றனுள் முதல்நூல் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: வினையின் நீக்கி விளக்கப்படும் அறிவினை உடைய உயிர்கட்கு வினையின் நீங்கி விளங்கிய அறிவினை உடைய முதல்வன் ஆதிக்கண்ணே செய்தது யாது, அது முதல்நூல் ஆம் எ-று. (6)

வழிநூல்

7. **முன்னோர் நூலின் முடிபொருங் கொத்துப்
பின்னோன் வேண்டும் விகற்பங் கூறி
அழியா மரபினது வழிநூ லாகும்.**

எ-னின், வழிநூல் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: தொல்லாசிரியர் நூல்களின் பொருள்முடிபு முழுவதும் ஒத்து, வழிநூல் செய்வோன் முதல்நூல் உளதாகவும் தான் வழிநூல் செய்தற்குக் காரணமாக வேண்டிய விகற்பங்களையும் உடன் கூறி, அவ்விகற்பங்கள் உணர்வுடையோர் பலர்க்கும் ஒப்ப முடிந்தமையின் அழியாது உலகத்து நின்று நிலவும் மரபினை உடையது வழிநூல் ஆம் எ-று.

'பின்னோன் வேண்டும் விகற்பம்' கூறலாவது, "பழையன கழிதலும் புதியன புகுதலும், வழுவல" (நூ. 462) என்றவற்றை, "இறந்தது விலக்க லெதிரது போற்றல்" (நூ. 14) என்னும் உத்திகளான் விலக்கியும் போற்றியும் கூறுதல் முதலியன.

"முனைவன் கண்டது முதனூ லாகும்" (நூ. 6) என ஒருமையாற் கூறினார் ஈண்டு, 'முன்னோர் நூல்' எனப் பன்மையாற் கூறியது இறைவன் நூலையும் அவன் அருள் வழிப்பட்டுத் தத்தம் மரபின் வரும் குரவர் பலர் நூலையும் தழீஇக்கோடற்கு என்க. எனவே முதல்நூல் மாத்திரையாய் நிற்பது இறைவன் நூலும் வழிநூல் மாத்திரையாய் நிற்பது இறுதிநூலும் அன்றி இடை நிற்கும் நூல்கள் எல்லாம் ஒருவற்கு மைந்தன் ஆயினான் மற்றொருவற்குத் தந்தை ஆயினாற்போல முதல்நூலாயும் வழிநூலாயும் நிற்கும் என்பது பெற்றாம். (7)

சார்புநூல்

8. **இருவர் நூற்கு மொருசிறை தொடங்கித்
திரிபுவே றுடையது புடைநூ லாகும்.**

[19] இது தொல்காப்பிய (மரபு. 96) நூற்பா.

எ-னின், சார்புநூல் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: முதல்நூல், வழிநூல் என்னும் இருதிறத்து நூல்கட்கும் பொருள்முடிபு ஒருபுடை ஒத்து, ஒழிந்தன எல்லாம் ஒவ்வாமையை உடையது சார்புநூல் ஆம் எ-று.

எனவே முதல்நூற்கு, வழிநூலும் சார்புநூலும் ஒருவற்கு மைந்தனும் மருமானும் போலும் என்க.

ஒரு நூல் தனக்கு வழிநூலை நோக்கின் முதல்நூலாகவும் முதல்நூலை நோக்கின் வழிநூலாகவும் அயல்நூலை நோக்கின் சார்புநூலாகவும் நிற்கும் ஆயினும் இம்முத்திறத்தினுள் ஒரு திறத்தின்கண் மற்றொரு திறம் இன்மையின், "மும்மையி னொன்றாய்" (நூ. 4) என்றார். (8)

வழிநூல் சார்புநூல்களுக்குச் சிறப்புவிதி

**{9} முன்னோர் மொழிபொருளே யன்றி யவர்மொழியும்**
**பொன்னேபோற் போற்றுவ மென்பதற்கும் - முன்னோரின்**
**வேறுநூல் செய்துமெனு மேற்கோளி லென்பதற்குங்**
**கூறுபழஞ் சூத்திரத்தின் கோள்.**

எ-னின்[20] வழிநூற்கும் சார்புநூற்கும் எய்தியதன்மேல் சிறப்புவிதி உணர்த்துதல் நுதலிற்று முன்னோர் நூலின் பொருள்முடிபு முழுவதும் ஒப்பவும் ஒருபுடை ஒப்பவும் கூறுவதன்றியும், அந்நூற் சூத்திரங்களையும் ஒரோவழி எடுத்துக் கூறுக என்றலின்.

இ-ள்: முன்னோர் மொழிந்த பொருளையே அன்றி அவர் மொழியினையும் பொன்போலப் போற்றிக்கொள்வம் என்பதற்கு இலச்சினையாகவும் முன்னோர் நூலையே கூறாது, அந்நூலினின்றும் வழிநூல், சார்புநூல் செய்தோம் ஆயினும் ஆசிரிய வசனங்களை ஒரோவழி எடுத்து உடன் கூறுதல் வழிநூற்கும் சார்புநூற்கும் இலக்கணம் ஆதலின் இந்நூலகத்து ஆசிரிய வசனம் இல்லை எனக் குற்றம் கூறுவார் ஆதலின் அக்குற்றம் ஒழிதற்காகவும் பழஞ்சூத்திரத்தின் கோளைக் கூறு எ-று.

ஆசிரிய வசனம் எனினும் மேற்கோள் எனினும் பழஞ்சூத்திரத்தின் கோள் எனினும் ஒக்கும்.

முன், 'போற்றுவம்' 'செய்தும்' என உளப்பாட்டுத் தன்மைப்பன்மை முற்றாகவும் (332) பின்னர்க், 'கூறு' என முன்னிலை ஏவலொருமையாகவும் (335) கூறினமையின்

---

[20] **இவ்வெண்பா மயிலைநாதர் உரையில் (நன். 8) மேற்கோள் பாடலாகக் காட்டப்பட்டுள்ளது.**

வழிநூலும் சார்புநூலும் செய்வோர் பலர் குழீஇ, ஒருவர்க்கு ஒருவர் கூறும் கூற்றாக இச்சூத்திரம் செய்யப்பட்டது என்க. (9)

நூற்பயன்

{10} **அறம்பொரு ளின்பம்வீ டடைதனூற் பயனே.**

எ-னின், நாற்பொருட் **பயன்** என்றதனை *(4)* வகுத்து உணர்த்துதல் நுதலிற்று.

**இ-ள்: அறமும் பொருளும் இன்பமும் வீடு அடைதலும் ஆகிய இந்நான்கும் நூல் தழுவப்படும் பயனாம் எ-று.**

**வீடு என வாளா கூறாது, 'வீடடைதல்' என்றார் வீடு என்பது பேரின்பமாகிய சாத்தியம் ஆகலின். நான்கும் என்னும் செவ்வெண்ணின் *(428)* தொகையோடு முற்றும்மை[21] விகாரத்தால் தொக்கன.** (10)

மதம் ஏழு

11. **எழுவகை மதமே யுடன்படன் மறுத்தல்**
**பிறர்தம் மதமேற் கொண்டு களைவே**
**தாஅ னாட்டித் தனாது நிறுப்பே**
**இருவர் மாறுகோ ளொருதலை துணிவே**
**பிறர்நூற் குற்றங் காட்ட லேனைப்**
**பிறிதொடு படாஅன் றன்மதங் கொளலே.**

எ-னின், "எழுமதம்" *(நூ. 4)* என்றதனை வகுத்து உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: மேல் எழுவகை மதம் என்று சொல்லப்பட்டன இங்ஙனம் பிறர் மதத்தை உடன்படல் முதலியவாக விதந்தனவாம் எ-று.

நூல் தழுவிய மதங்கள் பல ஆயினும் தலைமை பற்றிய மதம் ஏழு என்பது நூல் வழக்காம் என்க.

குற்றம் பத்து, அழகு பத்து, உத்தி முப்பத்திரண்டு என்பனவும் அன்ன.

இவ்வெழு வகை மதங்கட்கும் பதப்பொருளோடு உதாரணம் விளங்க இந்நூலுள் வந்துழி வந்துழிக்[22] காட்டுதும்; ஆங்காங்கு உணர்க. (11)

குற்றம் பத்து

{12} **குன்றக் கூறன் மிகைபடக் கூறல்**

[21] **"உம்மை விகாரத்தால் தொக்கன." என்பது ஆறுமுக நாவலர் பாடம்.**
[22] **காட்டிய இடங்கள்: *நூ. 58, 91, 94, 95, 106, 128, 145.***

கூறியது கூறன் மாறுகொளக் கூறல்
வழூஉச்சொற் புணர்த்தன் மயங்க வைத்தல்
வெற்றெனத் தொடுத்தன் மற்றொன்று விரித்தல்
சென்றுதேய்ந் திறுத னின்றுபய னின்மை
என்றிவை யீரைங் குற்ற நூற்கே.

எ-னின், "ஐயிரு குற்றம்" (நூ. 4) என்றதனை[23] வகுத்து உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: நூற்குப் பத்துக் குற்றங்களாவன குன்றக் கூறல் முதலிய இவைகளாம் எ-று.

நூல்கள் இக்குற்றங்கள்[24] சாராது வருதல் காண்க. (12)

அழகு பத்து

13. சுருங்கச் சொல்லல் விளங்க வைத்தல்
நவின்றோர்க் கினிமை நன்மொழி புணர்த்தல்
ஓசை யுடைமை யாழமுடைத் தாதல்
முறையின் வைப்பே யுலகமலை யாமை
விழுமியது பயத்தல் விளங்குதா ரணத்த
தாகுத னூலிற் கழகெனும் பத்தே.

எ-னின், பத்து அழகு என்றதனை (4) வகுத்து உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: நூலிற்கு அழகு என்று சொல்லப்படும் பத்தாவன சுருங்கச் சொல்லல் முதலியவாம் எ-று.

நூல்கள் இப்பத்து அழகோடும்[25] கூடி வருதல் காண்க. (13)

உத்தி முப்பத்திரண்டு

{14} நுதலிப் புகுத லோத்துமுறை வைப்பே
தொகுத்துச் சுட்டல் வகுத்துக் காட்டல்
முடித்துக் காட்டன் முடிவிடங் கூறல்
தானெடுத்து மொழிதல் பிறன்கோட் கூறல்
சொற்பொருள் விரித்த றொடர்ச்சொற் புணர்த்தல்
இரட்டுற மொழித லேதுவின் முடித்தல்

[23] "பத்துக் குற்றம் என்றதனை" என்பது ஆறுமுக நாவலர் பாடம்.
[24] நூ. 121, 137, 265, 286, 293, 295, 348, 360, 378, 406, 412, 449, 460 முதலியவற்றின் உரைகளில் இவற்றுள் சிலவற்றைக் காண்க.
[25] இவற்றுள் சில நூ. 116, 137, 406, 460 முதலியவற்றின் உரைகளில் பேசப்படுகின்றன.

**ஒப்பின் முடித்தன் மாட்டெறிந் தொழுகல்**
**இறந்தது விலக்க லெதிரது போற்றல்**
**முன்மொழிந்து கோடல் பின்னது நிறுத்தல்**
**விகற்பத்தின் முடித்தன் முடிந்தது முடித்தல்**
**உரைத்து மென்ற லுரைத்தா மென்றல்**
**ஒருதலை துணித லெடுத்துக் காட்டல்**
**எடுத்த மொழியி னெய்த வைத்தல்**
**இன்ன தல்ல திதுவென மொழிதல்**
**எஞ்சிய சொல்லி னெய்தக் கூறல்**
**பிறநூன் முடிந்தது தானுடன் படுதல்**
**தன்குறி வழக்க மிகவெடுத் துரைத்தல்**
**சொல்லின் முடிவி னப்பொருண் முடித்தல்**
**ஒன்றின முடித்த றன்னின முடித்தல்**
**உய்த்துணர வைப்பென வுத்தியெண் ணான்கே.**

எ-னின்[26] **"எண்ணான் குத்தி"** (நூ. 4) என்றதனை[27] வகுத்து உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: முப்பத்திரண்டு உத்தியாவன நுதலிப் புகுதல் முதலியவாம் எ-று.

இவற்றுள், 'ஒன்றின முடித்த றன்னின முடித்தல்' என்பது ஓர் உத்தி. 'உய்த்துணர வைப்பு' என்பதனை உத்திக்கு அடை ஆக்கி, உய்த்துணர வைப்பெனு முத்தியெண் ணான்கே எனப் பாடம் ஓதி, அதனை இரண்டு உத்தி ஆக்கினும் அமையும்.

இவ்வுத்திகட்குப் பதப்பொருளோடு உதாரணம் விளங்க இந்நூலுள் வந்துழி வந்துழிக்[28] காட்டுதும்; ஆங்காங்கு உணர்க.

மதத்தினுள்ளும் அழகினுள்ளும் வருவன சிலவற்றை உத்தியுள்ளும் கூறியது என்னை எனின் கொள்கை வகையான் மதம் என்றும் சிறப்பு வகையான் அழகு என்றும் இம்மதம், அழகு முதலிய எல்லாம் புத்திநுட்பத்து அமையும் வகையான் உத்தி என்றும் கூறப்படும் என்க. அங்ஙனம் ஆயின் மதம், அழகு எல்லாவற்றையும் உத்தியின்பாற்

---

[26] **பாடலனார் உரை என்று யாப்பருங்கல விருத்தி (நூ. 95) எடுத்துக்காட்டும் நூற்பா ஒன்று இந்நூற்பாவுடன் பேரளவில் ஒத்துள்ளது.**

[27] **"முப்பத்திரண்டு உத்தி என்றதனை" என்பது ஆறுமுக நாவலர் பாடம்.**

[28] **காட்டிய இடங்கள்: நூ. *56, 57, 58, 62, 67, 72, 90, 91, 94, 96, 97, 99, 100, 101, 102, 109, 124, 126, 132, 133, 135, 136, 137, 138, 140, 145, 158, 170, 171, 176, 188, 197, 209, 242, 243, 245, 248, 253, 281, 291, 315, 318, 334, 382, 399, 402* முதலியன.**

படுத்துக் கூறாது, சிலவற்றைக் கூறியது என்னை எனின் வரம்பின்றி வரும் உத்தியுள் தலைமைபற்றிக் கூறும் முப்பத்திரண்டில்[29] வந்தன கூறினார் என்க. (14)

உத்தியின் இலக்கணம்

15. நூற்பொருள் வழக்கொடு வாய்ப்பக் காட்டி
ஏற்புழி யறிந்திதற் கிவ்வகை யாமெனத்
தகும்வகை செலுத்துத றந்திர வுத்தி.

எ-னின், மேல் தொகுத்தும் (4) வகுத்தும் (14) கூறிய உத்திக்கு இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: ஓர் இலக்கண நூலால் உணர்த்தப்படும் பொருளை நூல் வழக்கோடும் உலக வழக்கோடும் பொருந்த உணர்த்தி, அப்பொருளை மற்றோர் இலக்கிய நூற்கண்ணும் ஏற்கும் இடம் அறிந்து, இவ்விடத்திற்கு இஃது ஆம் எனக் கருதித், தக்க வகையாகச் செலுத்துவது தந்திர உத்தியாம் எ-று.

தந்திரம் என்பது நூல். உத்தியான் அமைக்கும் பொருளை உத்தி என்றது ஆகுபெயர். (15)

ஒத்து

16. நேரின மணியை நிரல்பட வைத்தாங்
கோரினப் பொருளை யொருவழி வைப்ப
தோத்தென மொழிப வுயர்மொழிப் புலவர்.

எ-னின்[30] இருவகை உறுப்பினுள் (4) ஓத்துறுப்பு ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: ஒரு சாதியாய் உள்ள மணிகளை முறையே பதித்தாற்போல ஒரு சாதியாய் உள்ள பொருள்களை ஒரு வழிப்படக் கூறுவது ஓத்துறுப்பாம் எனச் சொல்லுவர் உயிர்க்கு உறுதி பயக்கும் மெய்ம்மொழிகளை உடைய புலவர் எ-று.

நேர்தல்- ஒன்றுபடுதல்.

இவ்வாறு வருதல் இந்நூல் உறுப்பினுள் காண்க. (16)

[29] தொல்காப்பியம் (மரபு. 112), மாறனலங்காரம் (நூ. 25) முதலிய நூல்கள் வேறு சில உத்திகளைக் கூறும்.

[30] இது தொல்காப்பிய (செய். 163) நூற்பா.

### படலம்

17. **ஒருநெறி யின்றி விரவிய பொருளாற்**
**பொதுமொழி தொடரி னதுபடல மாகும்.**

எ-னின்[31] படல உறுப்பு ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: ஒரு வழிப்படாது விராய பொருளோடு பொருந்திப், பல பொருளை உணர்த்தும் பொதுச்சொற்கள் ஒரோவழியின்றித் தொடர்ந்து வரின் அது படல உறுப்பு ஆம் எ-று.

படல உறுப்பினை உடைய காப்பியங்களுள் பாட்டுடைத் தலைவனது சரிதையே அன்றி மலை, கடல், நாடு முதலிய பல பொருள் திறங்களும் விரவி வருதலும் பல பொருளை உணர்த்தும் பொதுச்சொற்கள் ஒரோவழியன்றித் தொடர்ந்து வருதலும் காண்க. (17)

### சூத்திரம்

{18} **சில்வகை யெழுத்திற் பல்வகைப் பொருளைச்**
**செவ்வ னாடியிற் செறித்தினிது விளக்கித்**
**திட்ப நுட்பஞ் சிறந்தன சூத்திரம்.**

எ-னின், சூத்திரம் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: சிறிய கண்ணாடியில் பெரிய **சரீரம்** முதலியவற்றின் சாயை செவ்வாகச் செறிந்து இனிதாக விளங்கினாற்போலச் செவ்வாகச் செறிந்து இனிதாக விளங்கச், சில்வகை எழுத்துக்களான் இயன்ற யாப்பின்கண் **பல்வகைப்பட்ட** பொருள்களைச் செவ்வாகச் செறித்து இனிதாக விளக்கி, அப் பல பொருள் திண்மையும் நுண்மையும் சிறந்து வருவன சூத்திரங்களாம் எ-று.

திட்பம்- குற்றம் இன்மையின் அலைவற நிற்றல்.

இவ்வாறு வருதல் இச்சூத்திரத்துள்ளும் காண்க. (18)

### சூத்திரநிலை

19. **ஆற்றொழுக் கரிமா நோக்கந் தவளைப்**
**பாய்த்துப் பருந்தின்வீழ் வன்னசூத் திரநிலை.**

---

[31] இது தொல்காப்பிய (செய். 164) நூற்பா.

எ-னின், இதுவும் அது.

இ-ள்: மேற் கூறிய சூத்திரங்கள் ஒன்றோடு ஒன்று தொடர்ந்து நிற்கும் நிலைகள் ஆற்றொழுக்கு முதலிய நான்கினையும் போலும் எ-று.

இவ்வாறு நிற்றல் இந்நூலுள் வந்துழி வந்துழிக்[32] காட்டுதும்; ஆங்காங்கு உணர்க. (19)

## சூத்திரவகை

20. **பிண்டந் தொகைவகை குறியே செய்கை**
**கொண்டியல் புறனடைக் கூற்றன சூத்திரம்.**

எ-னின், இதுவும் அது.

இ-ள்: பிண்டம் எனவும் தொகை எனவும் வகை எனவும் குறி எனவும் செய்கை எனவும் இவற்றை அலைவறக் கொண்டு, இவற்றின் புறத்து அடையாய் வரும் புறனடை எனவும் கூறும் கூற்றினை உடையவாம் மேற் கூறிய (18) சூத்திரங்கள் எ-று.

இவற்றுள் பிண்டமாவன, "பன் னிருபாற் றதுவே" (நூ. 57) என்றல் தொடக்கத்துத் தொகை போலாது, "நன் கியம்புவ னெழுத்தே" (நூ. 56) என்றல் தொடக்கத்துப் பொதுப்பட வருவன. தொகையும் வகையும் புறனடையும் வந்துழி வந்துழிக்[33] காட்டுதும்; ஆங்காங்கு உணர்க. விரி வகையின்பாற் படுதலின் கூறாராயினார். குறியாவன இவை உயிர் (63), இவை ஒற்று (63), இவை பெயர் (275), இவை வினை (320) என்றல் தொடக்கத்து அறிதல் மாத்திரையாய் வருவன. குறி என்பது அறிதலை உணர்த்திய முதனிலைத் தொழிற்பெயர். செய்கையாவன பதமுன் விகுதியும் பதமும் உருபும் புணரும் (243) புணர்ச்சிவிதி அறிந்து, அங்ஙனம் அறிதல் மாத்திரையாய் நில்லாது, அவ்வாறு வேண்டுழிப் புணர்த்தலைச் செய்தலும் பெயர், வினை முதலிய கொள்ளும் முடிபுவிதி அறிந்து, அங்ஙனம் அறிதல் மாத்திரையாய் நில்லாது, அவ்வாறு வேண்டுழி முடித்தலைச் செய்தலும் முதலியன. இப்பிண்டம் முதலிய ஆறு பெயரும் அப்பொருளை உணர்த்தும் சூத்திரங்கட்கு ஆகுபெயராய் வந்தன.

எல்லாச் சூத்திரங்களும் பிண்டம், தொகை, வகை, புறனடை என்னும் நான்கனுள் அடங்கும் அன்றே? அங்ஙனம் ஆகக் குறியினையும் செய்கையினையும் வேறு ஓதியது

---

[32] **காட்டிய இடங்கள்: நூ. 96, 101, 109 முதலியன.**

[33] **காட்டிய இடங்களில் சில: நூ. 57, 75, 127, 239, 257, 282, 283, 305, 322, 343, 444, 460, 462.**

எல்லா நூலுள்ளும் சொல்லப்படுவன அறிவதும் செய்வதும் அன்றி வேறு இன்மையின் பிண்டம் ஆக்கியும் தொகுத்தும் வகுத்தும் புறத்து அடை கொடுத்தும் கூறப்படுவன குறியும் செய்கையுமே என்பது தோன்றற்கு என்க. இங்ஙனம் கூறவே எல்லா நூலுள்ளும் வரும் எல்லாச் சூத்திரங்களும்[34] குறிச்சூத்திரம், செய்கைச்சூத்திரம் என இரண்டாய் அடங்கும் என்பது பெற்றாம்.

இவ்வாறன்றிக், 'குறி' என்பதற்குப் பெயர்களை உணர்த்தும் சூத்திரம் என்றும், 'செய்கை' என்பதற்கு எழுத்துப் புணர்ச்சியை உணர்த்தும் சூத்திரம் என்றும் பொருள் கூறுவாரும் உளர். அங்ஙனம் கூறின் ஏனை இலக்கணங்களைக் கூறும் சூத்திரங்களையும் விதந்து கூற வேண்டும். அவை இன்மையானும் பெயரும் புணர்ச்சியும் இவ்விலக்கண நூற்கு அன்றிப் பொதுப் பாயிரமாய் எல்லா நூற்கும் பொருந்தாமையானும் அது பொருள் அன்று என்க. (20)

உரையின் பொது இலக்கணம்

21. **பாடங் கருத்தே சொல்வகை சொற்பொருள்**
**தொகுத்துரை யுதாரணம் வினாவிடை விசேடம்**
**விரிவதி காரந் துணிவு பயனோ**
**டாசிரிய வசனமென் றீரே ழுரையே.**

எ-னின், மேல் (4) காண்டிகையுரை, விருத்தியுரை என்றார்; அவற்றை உணர்த்துவான் தொடங்கி, உரையினது பொது இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: இப்பதினான்கு வகையான்[35] உரைக்கப்படும் நூற்கு உரை எ-று.

இவற்றுள் விசேடமாவது: சூத்திரத்துட்பொருளன்றி ஆண்டைக்கு வேண்டுவன தந்துரைத்தல். விரிவாவது: வேற்றுமை முதலிய தொக்கு நின்றனவற்றை விரிக்க

[34] பெயர்ச்சூத்திரம், விதிச்சூத்திரம், விலக்கியற்சூத்திரம், நியமச்சூத்திரம், அதிகாரச்சூத்திரம், ஞாபகச்சூத்திரம் என்று யாப்பருங்கல விருத்தி (பாயி.) சூத்திரங்களை வகைப்படுத்தும்.

[35] யாப்பருங்கல விருத்தி,

"முத்திறத் தானு மூவிரு விகற்பினும்
பத்து விதத்தானும் பதின்மூன்று திறத்தானும்
எழுவகை யானு மிரண்டுகூற் றானும்
வழுவுநனி நீங்க மாண்பொடு மதத்தொடும்
யாப்புறுத் துரைப்பது சூத்திர உரையே"

என்னும் மேற்கோள் நூற்பாவைக் காட்டி (பாயி.) உரைப் பகுதிகள் பற்றிய வெவ்வேறு கோட்பாடுகளைக் குறிப்பிடும். வீரசோழிய உரை (நூ. 178) சுட்டும் உரைவகை பதினான்கிற்கும் பவணந்தி முனிவர் கூறும் பதினான்கு வகைக்கும் சிறிய வேறுபாடு உண்டு. இச்செய்திகளை எல்லாம் மயிலைநாதர் (நன். 20) தொகுத்துக் கூறுவார்.

வேண்டுழி விரித்து உரைத்தல். அதிகாரமாவது: எடுத்துக்கொண்ட அதிகாரம் இது ஆதலின் இச்சூத்திரத்து அதிகரித்த பொருள் இது என அவ்வதிகாரத்தோடு பொருந்த உரைக்க வேண்டுழி உரைத்தல். துணிவாவது: ஐயுறக் கிடந்துழி இதற்கு இதுவே பொருள் என உரைத்தல். ஏனைய[36] பொருள் விளங்கிக் கிடந்தன.

இப்பதினான்கும் இவ்வுரையுள் வந்துழி வந்துழிக்[37] காட்டுதும்; ஆங்காங்கு உணர்க. (21)

காண்டிகையுரை

22. **கருத்துப் பதப்பொருள் காட்டு மூன்றினும்**
**அவற்றொடு வினாவிடை யாக்க லானுஞ்**
**சூத்திரத் துட்பொரு டோற்றுவ காண்டிகை.**

*எ-னின், காண்டிகையுரை ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.*

*இ-ள்:* மேற் கூறிய பதினான்கினுள் *(21)* கருத்துரையும் பதப்பொருளும் உதாரண-மும் ஆகிய மூன்றனையும் உரைத்தலானும் அம்மூன்றனோடு வினா, விடை என்னும் இரண்டனையும் கூட்டி உரைத்தலானும் சூத்திரத்துட்பொருளை விளக்குவன காண்டிகையுரைகளாம் எ-று. (22)

விருத்தியுரை

23. **சூத்திரத் துட்பொரு ளன்றியு மாண்டைக்**
**கின்றி யமையா யாவையும் விளங்கத்**
**தன்னுரை யானும் பிறநூ லானும்**
**ஐய மகலவைங் காண்டிகை யுறுப்பொடு**
**மெய்யினை யெஞ்சா திசைப்பது விருத்தி.**

*எ-னின், விருத்தியுரை ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.*

*இ-ள்:* காண்டிகையுரைபோல் சூத்திரத்துட்பொருள் விளக்குதல் மாத்திரையின் நில்லாது, அவ்விடங்கட்கு இன்றியமையாத பொருள்கள் யாவையும் விளங்கத், தான் உரைக்கும் உரையானும் ஆசிரிய வசனங்களானும் மேற் கூறிய காண்டிகை உறுப்பு ஐந்தனானும் ஐயம் தீரச், சுருங்காது மெய்ம்மைப் பொருளை விரித்து உரைப்பது விருத்தியுரையாம் எ-று.

---

[36]'பாடம்' என்பது மூலபாடமும் பாடபேதமும் என்றும், 'சொற்பொருள்' என்பது பதவுரை என்றும், 'தொகுத்துரை' என்பது பொழிப்புரை என்றும் இராமாநுச கவிராயர் (நன். 21) கூறுவார்.

[37]காட்டிய இடங்களில் சில: நூ. 14, 110, 207, 344.

'சூத்திரத் துட்பொரு ளன்றியும்' என்றமையான் மேற் கூறிய *(21)* பதினான்கு உறுப்பும் கொண்டது[38] விருத்தியுரை என்பது பெற்றாம். (23)

## நூலின் பெயர்க்காரணம்

24. **பஞ்சிதன் சொல்லாப் பனுவ லிழையாகச்**
**செஞ்சொற் புலவனே சேயிழையா - வெஞ்சாத**
**கையேவா யாகக் கதிரே மதியாக**
**மையிலா நூன்முடியு மாறு.**

*எ-னின், நூல் என்னும் பெயர் வருமாறு[39] உணர்த்துதல் நுதலிற்று.*

*இ-ள்: இந்த நூல் முடியுமாறு இது ஆதலின் நூல் என்றது உவமவாகுபெயராம் எ-று.* (24)

## நூலின் மாண்பு

25. **உரத்தின் வளம்பெருக்கி யுள்ளிய தீமைப்**
**புரத்தின் வளமுருக்கிப் பொல்லா - மரத்தின்**
**கனக்கோட்டந் தீர்க்குநூ லஃதேபோன் மாந்தர்**
**மனக்கோட்டந் தீர்க்குநூன் மாண்பு.**

*எ-னின், இதுவும் அது.*

*இ-ள்: அந்நூல்போல் செப்பம் செய்தலானும் நூல் என்றது உவமவாகுபெயராம் எ-று.*

*புரத்தினது உரத்தின் வளம் பெருக்கி உள்ளிய தீமைவளம் முருக்கி எனக் கூட்டுக. புரம்- உடம்பு; உரம்- நெஞ்சு.*

*பின்பு தீமைவளம் என்றமையான் முன்பு நல்வளம் எனத் தந்துரைக்க. நல்வளம்- அறிவு; தீமைவளம்- அறியாமை.* (25)

---

**[38]இவ்வுரையை மறுத்து, "ஐங்காண்டிகை உறுப்போடு என்றதினால் ஐங்காண்டிகை உறுப்பின் மேற்பட்டு வருவன எல்லாம் விருத்தியுரை" என்று இராமாநுச கவிராயர் (நன். 23) விளக்குவார்.**

**[39]"நூல் போறலின் நூல் என்ப பாவை போல்வாளைப் பாவை என்றாற்போல." என்று இறையனார் அகப்பொருள் உரையும் (இறை. 1) யாப்பருங்கல விருத்தியும் (பாயி.) நூலின் பெயர்க்காரணத்தை விளக்கும்.**

ஆசிரியன் வரலாறு

26. **குலனரு டெய்வங் கொள்கை மேன்மை**
**கலைபயி றெளிவு கட்டுரை வன்மை**
**நிலமலை நிறைகோன் மலர்நிகர் மாட்சியும்**
**உலகிய லறிவோ டுயர்குண மினையவும்**
**அமைபவ னூலுரை யாசிரி யன்னே.**

*எ-னின், நிறுத்த முறையானே (3) ஆசிரியனது வரலாறு உணர்த்துதல் நுதலிற்று.*

*இ-ள்: இவ்வியல்பினை உடையார் கற்பிக்கும் ஆசிரியர் ஆவார் எ-று.* (26)

நிலத்தின் மாட்சி

27. **தெரிவரும் பெருமையுந் திண்மையும் பொறையும்**
**பருவ முயற்சி யளவிற் பயத்தலும்**
**மருவிய நன்னில மாண்பா கும்மே.**

*எ-னின், மேற் கூறிய உவமையை விரித்து உணர்த்துதல் நுதலிற்று.*

*இ-ள்: நிலத்தினது மாட்சிமை இது ஆதலின் இஃது உவமை ஆயிற்று எ-று.* (27)

மலையின் மாட்சி

28. **அளக்க லாகா வளவும் பொருளுந்**
**துளக்க லாகா நிலையுந் தோற்றமும்**
**வறப்பினும் வளந்தரும் வண்மையு மலைக்கே.**

*எ-னின், இதுவும் அது.*

*இ-ள்: மலையினது மாட்சிமை இது ஆதலின் இஃது உவமை ஆயிற்று எ-று.* (28)

நிறைகோலின் மாட்சி

29. **ஐயந் தீரப் பொருளை யுணர்த்தலும்**
**மெய்ந்நடு நிலையு மிகுநிறை கோற்கே.**

*எ-னின், இதுவும் அது.*

*இ-ள்: நிறைகோலினது மாட்சிமை இது ஆதலின் இஃது உவமை ஆயிற்று எ-று.* (29)

மலரின் மாட்சி

30. **மங்கல மாகி யின்றி யமையா**
**தியாவரு மகிழ்ந்து மேற்கொள மெல்கிப்**
**பொழுதின் முகமலர் வுடையது பூவே.**

எ-னின், இதுவும் அது.

இ-ள்: மலரினது மாட்சிமை இது ஆதலின் இஃது உவமை ஆயிற்று எ-று.

இவ்வுவமைகளினது மாட்சிமைபோலப் பொருளினது மாட்சிமையும் விரித்து உரைத்துக்கொள்க. (30)

ஆசிரியர் ஆகாதவர்

31. **மொழிகுண மின்மையு மிழிகுண வியல்பும்**
**அழுக்கா றவாவஞ்ச மச்ச மாடலுங்**
**கழற்குட மடற்பனை பருத்திக் குண்டிகை**
**முடத்தெங் கொப்பென முரண்கொள் சிந்தையும்**
**உடையோ ரிலரா சிரியரா குதலே.**

எ-னின், ஆசிரியர் ஆகார் இவர் என உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: இக்குற்றங்களை உடையோர் கற்பிக்கும் ஆசிரியர் ஆகார் எ-று. (31)

கழற்குடத்தின் தன்மை

32. **பெய்தமுறை யன்றிப் பிறழ வுடன்றருஞ்**
**செய்தி கழற்பெய் குடத்தின் சீரே.**

எ-னின், மேற் கூறிய உவமையை விரித்து உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: கழற் பெய்த குடத்தின் குற்றம் இது ஆதலின் இஃது உவமை ஆயிற்று எ-று. (32)

மடற்பனையின் தன்மை

33. **தானே தரக்கொளி னன்றித் தன்பால்**
**மேவிக் கொளக்கொடா விடத்தது மடற்பனை.**

எ-னின், இதுவும் அது.

இ-ள்: மடற்பனையின் குற்றம் இது ஆதலின் இஃது உவமை ஆயிற்று எ-று. (33)

பருத்திக்குண்டிகையின் தன்மை

34. **அரிதிற் பெயக்கொண் டப்பொரு டான்பிறர்க்**
**கெளிதீ வில்லது பருத்திக் குண்டிகை.**

எ-னின், இதுவும் அது.

இ-ள்: பருத்தி பெய்த குண்டிகையின் குற்றம் இது ஆதலின் இஃது உவமை ஆயிற்று எ-று. (34)

முடத்தெங்கின் தன்மை

35. **பல்வகை யுதவி வழிபடு பண்பின்**
**அல்லோர்க் களிக்கு மதுமுடத் தெங்கே.**

எ-னின், இதுவும் அது.

இ-ள்: முடத்தெங்கினது குற்றம் இது ஆதலின் இஃது உவமை ஆயிற்று எ-று.

இவ்வுவமைகளின் குற்றம்போலப் பொருளின் குற்றமும் விரித்து உரைத்துக்கொள்க. (35)

கற்பித்தலின் வரலாறு

36. **ஈத லியல்பே யியம்புங் காலைக்**
**காலமு மிடனும் வாலிதி னோக்கிச்**
**சிறந்துழி யிருந்துதன் றெய்வம் வாழ்த்தி**
**உரைக்கப் படும்பொரு ளுள்ளத் தமைத்து**
**விரையான் வெகுளான் விரும்பி முகமலர்ந்து**
**கொள்வோன் கொள்வகை யறிந்தவ னுளங்கொளக்**
**கோட்டமின் மனத்தினூல் கொடுத்த லென்ப.**

எ-னின், நிறுத்த முறையானே (3) ஆசிரியன் கற்பிக்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: கற்பிக்குமாறு இவ்வாறு எனச் சொல்லுவர் புலவர் எ-று. (36)

மாணாக்கன் வரலாறு

37. **தன்மக னாசான் மகனே மன்மகன்**
**பொருணனி கொடுப்போன் வழிபடு வோனே**
**உரைகோ ளாளற் குரைப்பது நூலே.**

எ-னின், நிறுத்த முறையானே (3) மாணாக்கனது வரலாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: இவ்வறுவர்க்கும் சொல்லப்படுவது நூல் எ-று. (37)

### மாணாக்கர் வகை

38. **அன்ன மாவே மண்ணொடு கிளியே**
**இல்லிக் குடமா டெருமை நெய்யரி**
**அன்னர் தலையிடை கடைமா ணாக்கர்.**

எ-னின், இதுவும் அது.

இ-ள்: மேற் கூறிய அறுவருள் அன்னமும் பசுவும் போல்வார் தலைமாணாக்கர்; மண்ணும் கிளியும் போல்வார் இடைமாணாக்கர்; இல்லிக்குடமும் ஆடும் எருமையும் நெய்யரியும் போல்வார் கடைமாணாக்கர் எ-று.

இவ்வுவமைத் திறமும் பொருள் திறமும் விரித்து உரைத்துக்கொள்க. (38)

### மாணாக்கர் ஆகாதவர்

39. **களிமடி மானி காமி கள்வன்**
**பிணிய னேழை பிணக்கன் சினத்தன்**
**துயில்வோன் மந்தன் றொன்னூற் கஞ்சித்**
**தடுமா றுளத்தன் றறுகணன் பாவி**
**படிறனின் னோர்க்குப் பகரார் நூலே.**

எ-னின், மாணாக்கர் ஆகார் இவர் என உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: இக்குற்றங்களை உடையார்க்கு நூலைச் சொல்லார் ஆசிரியர் எ-று. (39)

### கற்றலின் வரலாறு

40. **கோடன் மரபே கூறுங் காலைப்**
**பொழுதொடு சென்று வழிபடன் முனியான்**
**குணத்தொடு பழகி யவன்குறிப் பிற்சார்ந்**
**திருவென விருந்து சொல்லெனச் சொல்லிப்**
**பருகுவ னன்ன வார்வத்த னாகிச்**
**சித்திரப் பாவையி னத்தக வடங்கிச்**
**செவிவா யாக நெஞ்சுகள னாகக்**
**கேட்டவை கேட்டவை விடாதுளத் தமைத்துப்**
**போவெனப் போத லென்மனார் புலவர்.**

எ-னின், நிறுத்த முறையானே (3) மாணாக்கன் நூலைக் கற்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: கற்குமாறு இவ்வாறு எனச் சொல்லுவர் புலவர் எ-று. (40)

பயிற்சி முறை

41. **நூல்பயி லியல்பே நுவலின் வழக்கறிதல்**
**பாடம் போற்றல் கேட்டவை நினைத்தல்**
**ஆசாற் சார்ந்தவை யமைவரக் கேட்டல்**
**அம்மாண் புடையோர் தம்மொடு பயிறல்**
**வினாதல் வினாயவை விடுத்த லென்றிவை**
**கடனாக் கொளினே மடநனி யிகக்கும்.**

எ-னின், இதுவும் அது.

இ-ள்: இவ்வாறு நூலைப் பயின்றவர்க்கு அறியாமை மிகுதியும் போம் எ-று. (41)

இருமுறை கேட்டலின் பயன்

42. **ஒருகுறி கேட்போ னிருகாற் கேட்பிற்**
**பெருக நூலிற் பிழைபா டிலனே.**

எ-னின், இதுவும் அது.

இ-ள்: ஒரு கால் கேட்ட துணையானே அமையாது, இருகால் கேட்பான் ஆயின் அந்நூலின்கண் பிழைபாடு மிகுதியும் இலன் எ-று. (42)

மும்முறை கேட்டலின் பயன்

43. **முக்காற் கேட்பின் முறையறிந் துரைக்கும்.**

எ-னின், இதுவும் அது.

இ-ள்: முக்காற் கேட்டான் ஆயின் ஆசிரியன் கற்பித்த முறை அறிந்து உரைப்பன் எ-று. (43)

மாணாக்கன் புலமை பெறுமாறு

44. **ஆசா னுரைத்த தமைவரக் கொளினும்**
**காற்கூ றல்லது பற்றல னாகும்.**

எ-னின்[40] இதுவும் அது.

இ-ள்: ஆசிரியன் கற்பித்தனவற்றைத் தன் அறிவின்கண் அமையக் கற்றான் ஆயினும் புலமைத் திறத்தில் காற்கூறல்லது பற்றான் எ-று. (44)

[40] **கூழங்கைத் தம்பிரான் இந்நூற்பாவோடு இதற்கு அடுத்த நூற்பாவையும் சேர்த்து ஒரு நூற்பாவாகக் கொள்வார்.**

### புலமை நிறைதல்

**45. அவ்வினை யாளரொடு பயில்வகை யொருகாற்**
**செவ்விதி னுரைப்ப வவ்விரு காலும்**
**மையறு புலமை மாண்புடைத் தாகும்.**

எ-னின், இதுவும் அது.

இ-ள்: தன் போலியரோடு பயிலும் வகையால் காற்கூறும் அக்கல்வியைத் தன் மாணாக்கர்க்கும் அவைக்களத்தோர்க்கும் உணர விரித்து உரைத்தலான் அரைக்கூறுமாகக் குற்றமற்ற புலமை நிரம்பும் எ-று. (45)

### வழிபாடு

**46. அழலி னீங்கா னணுகா னஞ்சி**
**நிழலி னீங்கா னிறைந்த நெஞ்சமோ**
**டெத்திறத் தாசா னுவக்கு மத்திறம்**
**அறத்திற் றிரியாப் படர்ச்சி வழிபாடே.**

எ-னின், இதுவும் அது.

இ-ள்: இவ்வாறு ஒழுகுதல் வழிபாடாம் எ-று. (46)

### சிறப்புப் பாயிரத்தின் இலக்கணம்

**47. ஆக்கியோன் பெயரே வழியே யெல்லை**
**நூற்பெயர் யாப்பே நுதலிய பொருளே**
**கேட்போர் பயனோ டாயெண் பொருளும்**
**வாய்ப்பக் காட்டல் பாயிரத் தியல்பே.**

எ-னின், "பாயிரம் பொதுச்சிறப்பு" (நூ. 2) என மேல் நிறுத்த முறையானே, "மலர்தலை யுலகின்" (நன். சிற. பாயி. 1) என்றல் தொடக்கத்தனவாய் எல்லா நூற்கண்ணும் வரும் சிறப்புப் பாயிரங்களினது பொது இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இதனையும் பொதுப் பாயிரத்துள் கூறினார் பொது ஐந்தனுள் (3) நூன்முகத்தினது இலக்கணம் ஆதலின் என்க.

இ-ள்: இவ்வெட்டுப் பொருளையும் விளங்க உணர்த்துவது சிறப்புப் பாயிரத்து இலக்கணமாம் எ-று.

'ஆக்கியோன் பெயரே' என்றல் தொடக்கத்தனவற்றுள் சிறப்பு என்பது தோன்றினமையின் பாயிரம் என வாளா கூறினார் என்க. (47)

48. காலங் களனே காரண மென்றிம்
மூவகை யேற்றி மொழிநரு முளரே.

எ-னின், இதுவும் அது.

இ-ள்: அவ்வெட்டனோடு (47) இம்மூன்றனையும் கூட்டிப் பதினொன்றாகக் கூறுவாரும் உளர் எ-று. (48)

நூற்பெயர்

{{49}} முதனூல் கருத்த னளவு மிகுதி
பொருள்செய் வித்தோன் றன்மைமுத னிமித்தினும்
இடுகுறி யானுநூற் கெய்தும் பெயரே.

எ-னின், மேற் கூறிய (47, 48) பதினொன்றனுள் நூற்பெயர்க்குச் சிறப்புவிதி உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: முதல்நூல் முதல் தன்மை ஈறாகக் கூறிய ஏழும் பிறவும் ஆகிய காரணங்களானும் இடுகுறியானும் நூற்குப் பெயர் வரும் எ-று.

வ-று: முதல்நூலால் பெயர் பெற்றன ஆரியப்படலம், பாரதம் முதலாயின. கருத்தனால் பெயர் பெற்றன அகத்தியம், தொல்காப்பியம்[41] முதலாயின. அளவினால் பெயர் பெற்றன பன்னிருபடலம், நாலடி நானூறு முதலாயின. மிகுதியால் பெயர் பெற்றன களவியல் முதலாயின. பொருளால் பெயர் பெற்றன அகப்பொருள் முதலாயின. செய்வித்தோனால் பெயர் பெற்றன சாதவாகனம் முதலாயின. தன்மையால் பெயர் பெற்றன சிந்தாமணி, நன்னூல் முதலாயின. இடுகுறியால் பெயர் பெற்றன நிகண்டு, கலைக்கோட்டுத் தண்டு முதலாயின. பிறவும் அன்ன. (49)

நூல்யாப்பு

{50} தொகுத்தல் விரித்த றொகைவிரி மொழிபெயர்ப்
பெனத்தகு நூல்யாப் பீரிரண் டென்ப.

எ-னின், வாய்ப்பக் காட்டல் (15) என்பதனால் போந்த சிறப்பு இல்லனவற்றுள் வழியின் வகை இத்துணையாம் என உணர்த்துதல்[42] நுதலிற்று.

இ-ள்: நூல் யாக்கப்படும் யாப்பு தொகுத்து யாக்கப்படுவதூஉம் விரித்து யாக்கப்படுவதூஉம் தொகுத்தும் விரித்தும் யாக்கப்படுவதூஉம் மொழி-

[41] இறையனார் அகப்பொருள் உரை (இறை. 1) செய்தான், செய்வித்தான், இடுகுறி, அளவு, சிறப்பு என்னும் ஐந்து காரணங்களால் நூற்பெயர் அமையும் என்று கூறும்.

[42] இந்நூற்பாவின் உரைக்குச் சிவஞான முனிவர் செய்த திருத்தம் ஆறுமுக நாவலர் பதிப்புகளில் வேறு வகையாகக் காணப்படுகிறது.

**பெயர்த்து யாக்கப்படுவதூஉம் என்று சொல்லத் தகும் இந்நான்கு** கூற்றதாம் என்று சொல்லுவர் புலவர் எ-று.

**மேற் கூறிய (47, 48) பதினொன்றனுள் ஒன்றாகிய யாப்பினோடும்** வெண்பா முதலிய[43] யாப்பினோடும் இவற்றினுக்கு வேற்றுமை தோன்ற, **'எனத்தகு நூல்-யாப்பு'** என்றார்.

**சிறப்பு இல்லனவற்றுள் வழியின் வகை ஒன்றனையும் எடுத்து ஓதியது என்னை எனின் இந்நூல் தொகைவிரிப்பட யாத்தமை தோன்றற்கு என்க. இவ்வாறே ஆசிரியர் தொல்காப்பியரும்,**

**"வழியின் நெறியே நால்வகைத் தாகும்"** *(தொல். மரபு. 98)*

**"தொகுத்தல் விரித்தல் தொகைவிரி மொழிபெயர்த்**
**ததற்பட யாத்தலோ டனைமர பினவே"** *(தொல். மரபு. 99)*

**என எடுத்து ஓதுமாறும் காண்க.** (50)

சிறப்புப் பாயிரம் செய்தற்கு உரியார்

51. **தன்னா சிரியன் றன்னொடு கற்றோன்**
**தன்மா ணாக்கன் றகுமுரை காரனென்**
**றின்னோர் பாயிர மியம்புதல் கடனே.**

எ-னின், இவ்விலக்கணங்களை *(47, 48)* உடைய சிறப்புப் பாயிரம் கூறுதற்கு உரியார் இவர் என உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: ஒருவன் கூறிய நூற்கு இந்நால்வருள் ஒருவர் சிறப்புப் பாயிரம் கூறுதல் முறைமையாம் எ-று. (51)

சிறப்புப் பாயிரம் பிறர் செய்தற்குக் காரணம்

52. **தோன்றா தோற்றித் துறைபல முடிப்பினுந்**
**தான்றற் புகழ்த றகுதி யன்றே.**

எ-னின்[44] சிறப்புப் பாயிரம் பிறர் கூறுதற்குக் காரணம் உணர்த்துதல் நுதலிற்று.

---

**[43] வெண்பா, ஆசிரியப்பா, வஞ்சிப்பா, கலிப்பா என்று பா நான்கு வகைப்படும்.**

**[44] இந்நூற்பாவையும் இதற்கு அடுத்த நூற்பாவையும் பனம்பாரம் என்று மயிலைநாதர் (நன். 52) கூறுவார்.**

இ-ள்: தோன்றாத நுட்பங்களை எல்லாம் தோற்றிப், பல துறைப்பட்டு விரிந்த நூலைச் செய்து முடித்தான் ஆயினும் தன்னைத் தான் புகழ்தல் தகுதி அன்றாம். ஆதலின் நூல் செய்தானது புகழாகிய சிறப்புப் பாயிரத்தைப் பிறர் கூற வேண்டும் எ-று. (52)

### தற்புகழ்ச்சி குற்றம் ஆகாத இடங்கள்

53. **மன்னுடை மன்றத் தோலைத் தூக்கினுந்**
**தன்னுடை யாற்ற லுணரா ரிடையினும்**
**மன்னிய வவையிடை வெல்லுறு பொழுதினுந்**
**தன்னை மறுதலை பழித்த காலையுந்**
**தன்னைப் புகழ்தலுந் தகும்புல* வோற்கே.**

எ-னின்[45] தற்புகழ்ச்சியும் ஒரோவழிக் குற்றம் அன்று என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: இவ்விடங்கள் ஆயின் தன்னைப் புகழ்தலும் தகுதியாம் புலவோற்கு எ-று.

'புகழ்தலும்' என்ற உம்மையான் இவ்விடங்களினும் தன்னைப் புகழாமையே தகுதி என்பது பெற்றாம். (53)

### பாயிரத்தின் இன்றியமையாமை

54. **ஆயிர முகத்தா னகன்ற தாயினும்**
**பாயிர மில்லது பனுவ லன்றே.**

எ-னின், இருவகைப் பாயிரங்களும் (2) நூற்கு இன்றியமையாதன என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: ஆயிரம் உறுப்புக்களான் விரிந்த நூல் ஆயினும் பாயிரம் இல்லாதது நூல் அன்று எ-று. (54)

### பாயிரம் இல்லாமல் நூல் நிரம்பாமை

55. **மாடக்குச் சித்திரமு மாநகர்க்குக் கோபுரமும்**
**ஆடமைத்தோ ணல்லார்க் கணியும்போல் - நாடிமுன்**
**ஐதுரையா நின்ற வணிந்துரையை யெந்நூற்கும்**
**பெய்துரையா வைத்தார் பெரிது.**

---

[45] "தகும்புல வோர்க்கே" என்பது சங்கர நமச்சிவாயர் பாடம்.

எ-னின், மேல், "பாயிர மில்லது பனுவ லன்று" (நூ. 54) என்றார்; அஃது அன்று ஆதற்குக் காரணம் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: அறிவுடையோர் மாடம் முதலிய மூன்றற்கும் சித்திரம் முதலிய மூன்றும் போலக் கருதி, அழகிதாகிய பொருளை உணர்த்தாநின்ற இருவகைப் பாயிரங்களையும் உரைத்து, எவ்வகைப்பட்ட பெரிய நூல்கட்கும் முன்னர்ப் பெய்துவைத்தார் பெரும்பாலும். ஆதலின், "பாயிர மில்லது பனுவல்" (நூ. 54) அன்றாம் எ-று. (55)

பொதுப் பாயிரம் முற்றிற்று

முதலாவது

## எழுத்ததிகாரம்

### {00}அதிகாரத் தோற்றுவாய்

<எழுத்ததிகாரம்[46] என்பது எழுத்தினது அதிகாரத்தை உடையது என அன்மொழித்தொகையாய் அப்படலத்திற்குக் காரணக்குறி ஆயிற்று.

எழுத்து என்றது, "அகரமுத னகர விறுவாய்"க் (தொல். நூன். 1) கிடந்த முதலெழுத்து முப்பதும் உயிர்மெய் முதலிய சார்பெழுத்துப் பத்தும் ஆம். அவற்றிற்கு எழுத்து என்னும் குறி, "மொழிமுதற் காரணம்" (நூ. 58) என்னும் சூத்திரத்தால் ஓதுப ஆகலின் ஈண்டு எதிரது போற்றி ஆளப்பட்டது.

அதிகாரம்- அதிகரித்தல். அஃது இருவகைப்படும். அவற்றுள் ஒன்று, வேந்தன் இருந்துழி இருந்து தன் நிலம் முழுவதும் தன் ஆணையின் நடப்பச் செய்வதுபோல ஒரு சொல் நின்றுழி நின்று பல சூத்திரங்களும் பல ஓத்துக்களும் தன் பொருளே நுதலி வரச் செய்வது. ஒன்று, சென்று நடாத்தும் தண்டத் தலைவர்போல ஓர் இடத்து நின்ற சொல் பல சூத்திரங்களோடும் சென்று இயைந்து, தன் பொருளைப் பயப்பிப்பது. இவற்றிற்கு முறையே வடநூலார் யதோத்தேச பக்கம் எனவும் காரியகால பக்கம் எனவும் கூறுப. இது சேனாவரையர் உரையானும் (தொல். கிளவி. 1) உணர்க. அவற்றுள் ஈண்டு அதிகாரம் என்றது முன்னையது. அதனை உடையது எனவே எழுத்தை நுதலி வரும் பல ஓத்தினது தொகுதி எழுத்ததிகாரம் என்றவாறு ஆயிற்று.

எழுத்தினது அதிகாரத்தை உடையது என்புழி ஆறாவது வினைமுதற் பொருண்மையின்கண் வந்த காரகம்.

இப்படலத்துள் விதிக்கப்படுவன எல்லாம் கருவியும் செய்கையும் என இருவகைப்படும். அவற்றுள் கருவி எழுத்தியல், பதவியல் என்னும் இரண்டு

[46] தொல்காப்பியச் சூத்திர விருத்தி (பக். 31-32).

ஓத்தானும் செய்கை உயிரீற்றுப் புணரியல் முதலிய மூன்று ஓத்தானும் கூறப்படும். கருவி பொதுவும் சிறப்பும் என[47] இருவகைத்து.> முதல் இரண்டு ஓத்தினும் கூறப்படுவன பொதுக்கருவி. உயிரீற்றுப் புணரியல் முதற்கண் புணர்ச்சி இன்னது எனக் கூறப்படுவனவும் (151-154) உருபு புணரியலின் இறுதிக் கண் சாரியைத் தோற்றம் கூறப்படுவனவும் (253) செய்கை ஒன்றற்கே உரிய கருவி ஆகலின் சிறப்புக்கருவி.

[47] எழுத்ததிகாரத்தில் சொல்லப்படுவன எல்லாம் கருவியும் செய்கையும் என இருவகைப்படும் என்றும் அவை முறையே புறப்புறக்கருவி, புறக்கருவி, அகப்புறக்கருவி, அகக்கருவி எனவும் புறப்புறச்செய்கை, புறச்செய்கை, அகப்புறச்செய்கை, அகச்செய்கை எனவும் நந்நான்கு வகைப்படும் என்றும் இளம்பூரணர் (தொல். எ. தோற்றுவாய்) பாகுபாடு செய்வார். இதனை நச்சினார்க்கினியரும் (தொல். நூன். 1) வைத்தியநாத தேசிகரும் (இல. விள. 158) தழுவிக்கொள்வர்.

சிவஞான முனிவர் இப்பாகுபாட்டின் முற்பகுதியை மட்டுமே ஏற்றுக்கொள்வார்; இதன் பிற்பகுதியை மறுத்துவிட்டு, வேறு பாகுபாட்டை ஈண்டுக் கூறுகிறார். இக்கருத்தைத் தொல்காப்பியச் சூத்திர விருத்தியிலும் (பக். 32) இலக்கண விளக்கச் சூறாவளியிலும் (பக். 109) காணலாம்.

பவணந்தி முனிவர் கூறிய எழுத்திலக்கணத்தின் பன்னிரு பகுதிகளையும் (நன். 57) சங்கர நமச்சிவாயர் (நன். 58) எழுத்தின் அகத்திலக்கணம், புறத்திலக்கணம் என்று இருவகையாகப் பாகுபாடு செய்வார்.

முதலாவது

## எழுத்தியல்

### கடவுள் வணக்கமும் அதிகாரமும்

{56} **பூமலி யசோகின் புனைநிழ லமர்ந்த**
**நான்முகற் றொழுதுநன் கியம்புவ னெழுத்தே.**

எ-னின், கடவுள் வணக்கமும் அதிகாரமும்[48] உணர்த்துதல்[49] நுதலிற்று.

இ-ள்: பூக்கள் மலிந்த அசோகமரத்தினது அலங்கரிக்கும் நிழலின்கண் எழுந்தருளி-யிருந்த, நான்கு திருமுகங்களை உடைய கடவுளை வணங்கி, நன்றாகச் சொல்லுவன் எழுத்திலக்கணத்தை எ-று.

எல்லா நூலும் மங்கலமொழி முதல் வகுத்துக்[50] கூற வேண்டுதலின், 'பூமலி' என்றும் எல்லாச் சமயத்தோராலும் வணங்கப்படும் படைப்பு முதலிய ஐந்தொழிற்கும் உரிய எல்லாக் கடவுளாகியும் நின்றான் ஒருவனே என்பார் அருகனை, 'நான்முகன்' என்றும் கூறினார். இவ்வாறு வள்ளுவ நாயனாரும் ஒரு தெய்வத்தைக் குறியாமல்,

"மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்" (குறள். 3)

என வரையாது கூறுதல் காண்க.

எழுத்து என்பது ஆகுபெயர். ஏகாரம் ஈற்றசை.

எல்லாம் வல்ல கடவுளை வணங்கலான் இனிது முடியும் என்பது கருதி, 'நன் கியம்புவன்' என்று புகுந்தமையின் இது நுதலிப் புகுதல் என்னும் உத்தி. (1)

[48]அதிகாரம், ஓத்து, சூத்திரம் என்பவை நுதலும் பொருள்களை மயிலைநாதர் (நன். 55) இப்பகுதியில் சற்று விரித்துக் கூறுவார். இவ்வாறே இயல்களுக்கு இடையே உள்ள இயைபையும் அவ்வவற்றின் தொடக்கத்தில் அவர் விளக்கிச் செல்வார்.

[49]இந்நூற்பாவின் உரைக்குச் சிவஞான முனிவர் செய்த திருத்தம் ஆறுமுக நாவலர் பதிப்பு உட்படப் பல பதிப்புகளில் இல்லை.

[50]யாப்பருங்கல விருத்தி (பாயி.),

"வழிபடு தெய்வ வணக்கஞ் செய்து
மங்கல மொழிமுதல் வகுத்து..."

என்னும் மேற்கோள் நூற்பாவைக் காட்டும்.

## எழுத்திலக்கணத்தின் தொகை

**57. எண்பெயர் முறைபிறப் புருவ மாத்திரை
முதலீ றிடைநிலை போலி யென்றா
பதம்புணர் பெனப்பன் னிருபாற் றதுவே.**

*எ-னின், அவ்வெழுத்திலக்கணம் இத்துணைத்து என்பது உணர்த்துதல் நுதலிற்று.*

*இ-ள்: இப் பன்னிரு பகுதியினையும் உடைத்து அவ்வெழுத்திலக்கணம் எ-று.*

*'என்றா' என்பது[51] எண்ணிடைச்சொல் (428).*

*இச்சூத்திரம் தொகுத்துச் சுட்டல் என்னும் உத்தி. மேல் வருவன எல்லாம் வகுத்துக் காட்டல்.* (2)

## எழுத்தும் அதன் வகையும்

**58. மொழிமுதற் காரண மாமணுத் திரளொலி
எழுத்தது முதல்சார் பெனவிரு வகைத்தே.**

*எ-னின், "பன் னிருபாற் றதுவே" (நூ. 57) என்றவற்றுள் எழுத்தினது அகத்திலக்கணமாகிய பத்தையும் ஓர் இயலாகவும் அதன் புறத்திலக்கணமாகிய பதம், புணர்பு என்னும் இரண்டனுள் அவ்வெழுத்தான் ஆகும் பதத்தை ஓர் இயலாகவும் அப்பதம் புணரும் புணர்ப்பை மூன்று இயலாகவும் ஓத்து முறை வைப்பு என்னும் உத்தியான் வைக்கப் புகுந்து, முதற்கண் வைத்த எழுத்தியலின் எழுத்தினது எண்ணினை நிறுத்த முறையான் (57) உணர்த்துவான் தொடங்கி, எழுத்து இன்னது என்பதூஉம் அதன் வகையும் உணர்த்துதல் நுதலிற்று.*

*இ-ள்: மொழிக்கு முதற்காரணமாய் அணுத்திரளின் காரியமாய் வரும் ஒலியாவது எழுத்து. அது முதலெழுத்து என்றும் சார்பெழுத்து என்றும் இருவகையினை உடைத்து எ-று.*

*எனவே மொழிக்கு முதற்காரணம் எழுத்து ஆனாற்போல எழுத்திற்கு முதற்காரணம் அணுத்திரள் என்பது பெற்றாம். 'ஆம்' என்னும் பெயரெச்சம், 'ஒலி' என்னும் பெயரோடு முடிந்தது.*

---

[51] **எண் முதல் போலி வரையில் உள்ள பத்தும் எழுத்தின் அகத்திலக்கணம்; பதமும் புணர்ச்சியும் ஆகிய இரண்டும் அதன் புறத்திலக்கணம் என்று சங்கர நமச்சிவாயர் (நன். 58) பாகுபடுத்துவார். என்றா என்னும் இடைச்சொல்லால் அப்பாகுபாடு ஈண்டே பிரித்துக் காட்டப்பட்டுள்ளது என்று இராமாநுச கவிராயர் (நன். 57) கூறுவார்.**

முற்கு, வீளை முதலியவற்றிற்கு முதற்காரணமாய், அணுத்திரளின் காரியமாய் வரும் ஒலி எழுத்து ஆகாமையின் மொழி முதற்காரணம் ஆம் ஒலி என்றார். சிதலது நீர்வாய்ச் சிறுதுகளால் பெரும்புற்றுரு அமைந்த பெற்றியதென்ன ஐம்புலப் பேருரு ஐந்தும் ஐந்து அணுவால் இம்பரிற் சமைவது யாவரும் அறிதலின் அநாதிகாரணமாகிய மாயையினை ஈண்டுக் கூறாது, ஆதிகாரணமாகிய செவிப்புலன் ஆம் அணுத்திரளை எழுத்திற்கு முதற்காரணம் என்றார். இவ்வாசிரியர்க்கு மாயை உடன்பாடு அன்று; அணுத்திரள் ஒன்றுமே துணிவு எனின் பிறிதொடு படாஅன் தன் மதம் கொளல் என்னும் மதம்படக் கூறினார் என்று உணர்க. ஈண்டு அணு என்றது ஒலியினது நுட்பத்தை. (3)

முதலெழுத்தின் விரி

59. **உயிரு முடம்புமா முப்பது முதலே.**

எ-னின், முதலெழுத்தின் விரி[52] உணர்த்துதல் நுதலிற்று.

*இ-ள்:* உயிரும் உடம்பும் ஆகும் முப்பது எழுத்தும் முதலெழுத்தாம் எ-று. (4)

சார்பெழுத்தின் தொகை

{60} **உயிர்மெய் யாய்த முயிரள பொற்றள**
**பஃகிய இஉ ஐஒள மஃகான்**
**தனிநிலை பத்துஞ் சார்பெழுத் தாகும்.**

எ-னின், சார்பெழுத்தின் விரி உணர்த்துதல் நுதலிற்று.

*இ-ள்:* இப்பத்தும் சார்பெழுத்து ஆம் எ-று.

அஃகுதல்-சுருங்குதல். தனிநிலை-ஆய்தம். உயிர்களோடும் மெய்களோடும் கூடியும் கூடாதும் அலிபோலத் தனி நிற்றலின் தனிநிலை எனப்படும்.

உயிர்மெய் உயிரும் மெய்யும் கூடிப் பிறத்தலானும் ஆய்தம் உயிர்போல,

"அற்றா லளவறிந் துண்க வஃதுடம்பு
பெற்றா னெடிதுய்க்கு மாறு" (குறள். 943)

என அலகு பெற்றும் மெய்போலத்,

---

[52] மயிலைநாதர் (நன். 58), "முதலெழுத்து எனத் தொகையான் ஒன்றும் உயிரெழுத்து, உடம்பெழுத்து என வகையான் இரண்டும் உயிர் பன்னிரண்டும் உடம்பு பதினெட்டும் என்று வகுத்துக் கூட்ட, விரியான் முப்பதும் ஆம்." என்று விரித்துக் கூறுவார். இவ்வாறே சார்பெழுத்துக்களின் விரியையும் அவர் (நன். 60) விளக்கிக் கூறுவார்.

"தோன்றிற் புகழொடு தோன்றுக வஃதிலார்
தோன்றலிற் றோன்றாமை நன்று" (குறள். 236)

என அலகு பெறாதும் ஒருபுடை ஒத்து, அவற்றின் இடையே சார்ந்து வருதலானும் ஏனைய தத்தம் முதலெழுத்தின் திரிபு விகாரத்தால் பிறத்தலானும் சார்பெழுத்து ஆயின எனக் கொள்க.

அவ்வாறன்றி, உயிர்மெய் ஒழிந்தன அகரம் முதலியனபோல் தனித்தானும் ககரம் முதலியனபோல அகரமொடு சிவணியானும் இயங்கும் இயல்பின்றி, ஒரு மொழியைச் சார்ந்து வருதலே தமக்கு இலக்கணமாக உடைமையின் சார்பெழுத்து ஆயின[53] எனக் கோடலும் ஆம் என்க.

இனி ஆசிரியர் தொல்காப்பியர் செய்கை ஒன்றனையும் நோக்கிச் சார்பெழுத்து மூன்று எனக் கருவி செய்தார் ஆகலின் இவ்வாசிரியர் செய்கையும் செய்யுளியலும் நோக்கிச் சார்பெழுத்துப் பத்து எனக் கருவி செய்தார்[54] என்பதும் உய்த்துணர்க. (5)

சார்பெழுத்தின் வகை

61. உயிர்மெய் யிரட்டுநூற் றெட்டுய ராய்தம்
எட்டுயி ரளபெழு மூன்றொற் றளபெடை
ஆறே ழஃகு மிம்முப் பானேழ்
உகர மாறா றைகான் மூன்றே
ஔகா னொன்றே மஃகான் மூன்றே
ஆய்த மிரண்டொடு சார்பெழுத் துறுவிரி
ஒன்றொழி முந்நூற் றெழுபா னென்ப.

எ-னின், இதுவும் அது.

இ-ள்: உயிர்மெய் இருநூற்றுப் பதினாறு; குறுகாத ஆய்தம் எட்டு; உயிரளபெடை இருபத்தொன்று; ஒற்றளபெடை நாற்பத்திரண்டு; குற்றியலிகரம் முப்பத்தேழு; குற்றியலுகரம் முப்பத்தாறு; ஐகாரக் குறுக்கம் மூன்று; ஔகாரக் குறுக்கம் ஒன்று; மகரக் குறுக்கம் மூன்று; ஆய்தக் குறுக்கம் இரண்டுடனே சார்பெழுத்தினது மிகுந்த விரி முந்நூற்று அறுபத்தொன்பதாம் என்று சொல்லுவர் புலவர் எ-று.

---

[53] "தாமே தமித்து நிற்கையின் முதலெழுத்து என்று ஆயின. அவையே தம்மொடு தாம் சார்ந்தும் இடம் சார்ந்தும் இடமும் பற்றுக்கோடும் சார்ந்தும் விகாரத்தால் வருதலிற் சார்பெழுத்து என்று ஆயின." என மயிலைநாதர் (நன். 60) விளக்குவார்.

[54] தொல்காப்பியர் சார்பெழுத்தை மூன்றாகவும் பவணந்தி முனிவர் பத்தாகவும் கொள்வதற்கு மயிலைநாதர் (நன். 59) கூறும் காரணங்களும் அறியத் தக்கன.

இவை இத்துணைய ஆதல் (89-97) பிறப்பதிகாரத்தினுள் (74-97) காண்க. இவ்வாறு உயிர்மெய் ஒழிந்தனவற்றையும் விரித்தல்[55] தொன்னெறி என்பார், 'என்ப' என்றார். (6)

## பெயரின் பொது இலக்கணம்

### 62. இடுகுறி காரணப் பெயர்பொதுச் சிறப்பின.

எ-னின், நிறுத்த முறையானே (57) எழுத்தின் பெயர் ஆமாறு உணர்த்துவான் தொடங்கிப், பெயர்க்கு எல்லாம் பொது இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: இடுகுறிப்பெயரும் காரணப்பெயரும் ஆகிய இரண்டும் பல பொருட்குப் பொதுப்பெயராயும் ஒரு பொருட்குச் சிறப்புப்பெயராயும் வருவனவாம் எ-று.

ஒரு பொருளைக் குறித்தற்குக் கடவுளானும் அறிவுடையோரானும் இட்ட குறியாகிய பெயர் இடுகுறிப்பெயர். காரணத்தான் வரும் பெயர் காரணப்பெயர்.

உ-ம்: மரம் என்பது இடுகுறிப் பொதுப்பெயர். பனை என்பது இடுகுறிச் சிறப்புப்பெயர். அணி என்பது காரணப் பொதுப்பெயர். முடி என்பது காரணச் சிறப்புப்பெயர்.

இனி இரட்டுற மொழிதல் என்னும் உத்தியான் இச்சூத்திரத்திற்கு இடுகுறி என்றும் காரணம் என்றும் சொல்லப்படும் இலக்கணங்களை உடைய பெயர்கள் இடுகுறி, காரணம் என்னும் இரண்டற்கும் பொதுவாயும் இடுகுறிக்கே சிறப்பாயும் காரணத்திற்கே சிறப்பாயும் வருவனவாம் என்றும் பொருள் உரைத்துக்கொள்க.

உ-ம்: பரம் என்பது இடுகுறிப்பெயர். பரமன் என்பது காரணப்பெயர். முக்கணன், அந்தணன், மறவன், முள்ளி, கறங்கு, மொழி, சொல் என்பன காரண இடுகுறிப்பெயர்.

இவை காரண இடுகுறி ஆயது என்னை எனின் இவற்றுள் முக்கணன் என்னும் பெயர் யானைமுகக் கடவுள் முதலியோர்க்கும் மூன்று கண் உள ஆகலின் காரணம் கருதிய வழி மூன்று கண்ணினை உடையோர் பலர்க்கும் சேறலானும் காரணம் கருதாத வழி இடுகுறி மாத்திரையேயாய்ப் பரமனுக்கே சேறலானும் காரண இடுகுறி ஆயிற்று. ஏனைப் பெயர்கட்கும் இவ்வாறே காண்க.

இவ்வாறே வடநூலார் இடுகுறியை ரூடி என்றும் காரணத்தை யோகம் என்றும் காரண இடுகுறியை யோகரூடி என்றும் வழங்குப. இவ்விலக்கணத்தான் எழுத்தினது பெயரும் பிற பெயரும் வருமாறு காண்க. (7)

[55] எழுத்தைத் தொகுத்தும் வகுத்தும் விரித்தும் வழங்கும் முறையை மயிலைநாதர் (நன். 60) எடுத்துக்காட்டுவார்.

எழுத்தின் பெயர்

{63} **அம்முத லீரா றாவி கம்முதன்**
**மெய்ம்மூ வாறென விளம்பினர் புலவர்.**

எ-னின், ஒருசார் எழுத்தினது பெயர் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: அகரம் முதல் ஔகாரம் ஈறாகக் கிடந்த பன்னிரண்டினையும் ஆவி என்றும் **ககரம் முதல் னகரம் ஈறாகக்** கிடந்த பதினெட்டினையும் மெய் என்றும் நூல்களால் சொன்னார் அறிவுடையோர் எ-று.

கடவுளால் ஆவி, மெய் என்று அமைத்த பெயர்க் காரணம் உயிர்களான் முற்றும் உணர்தற்கு அருமையும் கடவுள் நூல் உணர்ந்தோர் வழிச் செல்லும் தமது பெருமையும் தோன்ற, 'விளம்பினர் புலவர்' என்றார்.

ஆவியும் மெய்யும் போறலின் இவ்விரு வகை எழுத்திற்கும் ஆவி, மெய் என்பன உவமவாகுபெயராய்க் காரணப் பொதுப்பெயர் ஆயின. ஏனையவும் இவ்வாறே காண்க. (8)

குற்றெழுத்து

64. **அவற்றுள்,**
**அஇ உஎ ஒக்குறி லைந்தே.**

எ-னின், இதுவும் அது.

இ-ள்: ஆவி, மெய் என்றவற்றுள் இவ்வைந்தும் குற்றெழுத்தாம் எ-று. (9)

நெட்டெழுத்து

65. **ஆஈ ஊஏ ஐஓ ஔநெடில்.**

எ-னின், இதுவும் அது.

இ-ள்: இவ்வேழும் நெட்டெழுத்தாம் எ-று. (10)

சுட்டெழுத்து

66. **அஇ உம்முதற் றனிவரிற் சுட்டே.**

எ-னின், இதுவும்[56] அது.

---

[56] **இந்நூற்பாவுக்கு வைத்தியநாத தேசிகர் (இல. விள. 6) எழுப்பும் தடையும் அதற்குச் சாமிநாத தேசிகரும் (இல. கொ. 8) சிவஞான முனிவரும் (இல. சூறா. பக். 91) கூறும் மறுப்புரைகளும் அறியத் தக்கன.**

இ-ள்: இம்மூன்று எழுத்தும் மொழிக்குப் புறத்தும் அகத்தும் முதற்கண் தனித்துச், சுட்டுப்பொருள் உணர்த்த வரின் சுட்டெழுத்தாம் எ-று.

'முதல்' எனப் பொதுப்படக் கூறினமையின் புறத்தும் அகத்தும்[57] என்பது பெற்றாம்.

உ-ம்: அக்கொற்றன், இக்கொற்றன், உக்கொற்றன் எனவும் அவன், இவன், உவன் எனவும் வரும்.

அவன் என்பதன்கண் அகரம் அறம் என்பதன்கண் அகரம்போலப் பின்னெழுத்துக்களோடு தொடர்ந்து நின்று ஒரு பொருளை உணர்த்தாது, மலையன் என்பதன்கண் பகுதிபோல வேறு நின்று சுட்டுப்பொருள் உணர்த்தலின் அகத்து வரும் இதனையும், 'தனிவரின்' என்றார். இவ்வுரை வினாவிற்கும் கொள்க. (11)

## வினாவெழுத்து

**67. எயா முதலும் ஆஓ வீற்றும்**
**ஏயிரு வழியும் வினாவா கும்மே.**

எ-னின், இதுவும் அது.

இ-ள்: புறத்தும் அகத்தும் மொழிமுதற்கண் எகரமும் யாவும் ஈற்றின்கண் ஆகாரமும் ஓகாரமும் இவ்விரண்டு இடத்தினும் ஏகாரமும் தனித்து வினாப்பொருள் உணர்த்த வரின் வினாவெழுத்து ஆம் எ-று.

மேல், "தனிவரின்" (நூ. 66) என்றதனை ஈண்டும் கூட்டுக. இவை புறத்தும் அகத்தும் வருதல் ஏற்றபெற்றி கொள்க.

ஒன்றின முடித்தல் தன்னின முடித்தல் என்னும் உத்தியான் யா வினாவையும் உடன் கூறினார்.

உ-ம்: எக்கொற்றன் எனவும் எவன் எனவும் யாவன் எனவும் முதற்கண் வந்தன. கொற்றனா, கொற்றனோ என ஈற்றின்கண் வந்தன. ஏவன், கொற்றனே என ஈரிடத்தும் வந்தது. ஏனைப் பெயர்வினைகளோடும் ஏற்றபெற்றி ஒட்டிக்கொள்க. (12)

## வல்லினம்

**68. வல்லினங் கசடத பறவென வாறே.**

எ-னின், இதுவும் அது.

---

[57] மயிலைநாதர் (நன். 65) இவ்வாறு கொள்ளாமல் மொழிமுதற்கண் தனித்து நிற்பின் என்று உரை கூறிப் புறச்சுட்டுக்கு மட்டுமே உதாரணம் காட்டுவார்.

இ-ள்: இவ் ஆறும் வல்லினமாம் எ-று. (13)

மெல்லினம்

69. **மெல்லினம் ஙஞணந மனவென வாறே.**

எ-னின், இதுவும் அது.

இ-ள்: இவ் ஆறும் மெல்லினமாம் எ-று. (14)

இடையினம்

70. **இடையினம் யரலவ ழளவென வாறே.**

எ-னின், இதுவும் அது.

இ-ள்: இவ் ஆறும் இடையினமாம். (15)

இனவெழுத்து

{71} **ஐஔ இஉச் செறிய முதலெழுத்**
**திவ்விரண் டோரின மாய்வரன் முறையே.**

எ-னின், **இதுவும் அது.**

இ-ள்: இனம் இல்லாத ஐகார ஔகாரங்கள் ஈகார ஊகாரங்கட்கு இனமாகிய இகர உகரங்களைத் தமக்கும் இனமாகப் பொருந்த, முதலெழுத்துக்கள் இவ்விரண்டு ஓர் இனமாய் வருதல் முறை. ஆதலால் அவை இனவெழுத்து என்றும் **பெயரவாம்** எ-று. (16)

இனத்திற்குக் காரணம்

72. **தான முயற்சி யளவு பொருள்வடி**
**வானவொன் றாதியோர் புடையொப் பினமே.**

எ-னின், மேல் இனம் என்றதற்குக் காரணம் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: தானம் முதலியவாய இவற்றுள் ஒன்று முதலாக ஒருபுடை ஒத்தலால் இனமாம் எ-று.

தானம் உரம் முதலியன. முயற்சி இதழ்முயற்சி முதலியன. அளவு மாத்திரை. பொருள் பாலன் விருத்தன் ஆனாற்போலக் குறிலினது விகாரமே நெடில் ஆதலின் இரண்டற்கும் பொருள் ஒன்று என்று முதல்நூலான் நியமிக்கப்பட்ட பொருள்.

வடிவு ஒலிவடிவு, வரிவடிவு. இவற்றுள் ஒன்றும் பலவும் ஒத்து இனமாய் வருதல்[58] கண்டுகொள்க.

சார்பெழுத்திற்குப் பெயர் கூறாது ஒழிந்தார் ஆய்தம் தனிநிலை ஆதலானும் ஏனைச் சார்பெழுத்திற்குச் சுட்டு, வினா என்று விதந்து ஓதினவை ஒழிந்த முதலெழுத்தின் பெயரே பெயராய் அடங்குதலானும் என்க.

இச்சூத்திரம் ஏதுவின் முடித்தல் என்னும் உத்தி. (17)

## எழுத்துக்களின் முறைவைப்பு

{73} **சிறப்பினு மினத்தினுஞ் செறிந்தீண் டம்முதல்**
**நடத்த றானே முறையா கும்மே.**

எ-னின், நிறுத்த முறையானே (57) முறை ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: சிறப்பினானும் இனத்தினானும் பொருந்தி, இவ்வுலகத்து அகரம் முதலாக வழங்குதல்தானே எழுத்தினது முறை ஆம் எ-று.

குறிலினது விகாரமே நெடில் ஆதலான் குறில் முன் நிற்றலின், 'சிறப்பின்' என்றும் நெடில் இனமாய்ப் பின் நிற்றலின், 'இனத்தின்' என்றும் நாதமாத்திரையாய்[59] எல்லா எழுத்திற்கும் காரணமாய் முன் நிற்றலின், 'அம்முதல்' என்றும் எல்லா எழுத்திற்கும் வைத்த முறைக்காரணம் உயிர்களான் முற்றும் உணர்தல் ஆகாமையின், 'நடத்த றானே' என்றும் கூறினார்.

<**அங்ஙனம்**[60] **ஆயினும் நெடுங்கணக்கினுள், "அகரமுத னகர விறுவாய்"க்** (தொல். நூன். 1) **கிடக்கைமுறை ஆதற்குக் காரணமும் ஒருவாறு காட்டுதும்.**>

<**அகரம்**[61] **முதலிய பன்னீர் உயிரும் தனித்து இயங்கும் ஆற்றல் உடைமை-யானும் ககரம் முதலிய பதினெட்டு மெய்யும் அகரத்தோடு கூடியல்லது இயங்கும் ஆற்றல் இன்மையானும் அச்சிறப்பும் சிறப்பின்மையும் நோக்கி, உயிர் முன்னும் மெய் பின்னுமாக வைக்கப்பட்டன.**

**இனி உயிர்களுள் அ, இ, உ என்பன முறையே அங்காந்து கூறும் முயற்சி-**

---

[58] எழுத்துக்கள் ஒன்றும் பலவும் ஒத்து இனமாய் வருதலை மயிலைநாதர் (நன். 71) சிறிது விளக்கமாகக் கூறுவார்.

[59] "அகரத்திற்குத் தலைமை விகாரத்தான் அன்றி நாதமாத்திரையாகிய இயல்பாற் பிறத்தலானும்" என்னும் பரிமேலழகர் உரையோடு (குறள். 1) இவ்வுரையை ஒப்பிடுக.

[60] தொல்காப்பியச் சூத்திர விருத்தி (பக். 40).

[61] தொல்காப்பியச் சூத்திர விருத்தி (பக். 42-43).

யானும் அவ்வங்காப்போடு அண்பல் அடிநா விளிம்பு உறக் கூறும் முயற்சி-யானும் அவ்வங்காப்போடு இதழ் குவித்துக் கூறும் முயற்சியானும் பிறத்தலான் அப்பிறப்பிடத்து முறையே முறையாக வைக்கப்பட்டன. ஆகார ஈகார ஊகாரங்-கள் அகரம் முதலியவற்றிற்கு இனம் ஆதலின் அவற்றைச் சார வைக்கப்-பட்டன.> <இனி எகரமாவது[62] அகரக்கூறும் இகரக்கூறும் தம்முள் ஒத்து இசைத்து, நரமடங்கல்போல் நிற்பதொன்று ஆகலானும் ஒகரமாவது அகரக்-கூறும் உகரக்கூறும் தம்முள் ஒத்து இசைத்து, அவ்வாறு நிற்பதொன்று ஆகலானும் அவை அவற்றின் பின் முறையே வைக்கப்பட்டன. ஏகார ஓகாரங்-கள் இனம் ஆதலின் அவற்றின் பின் முறையே வைக்கப்பட்டன. அகரமும் யகரமும் இகரமும் தம்முள் ஒத்து இசைத்து நிற்பதொன்று ஆகலின் எகர ஏகாரங்களின் பின்னர் ஐகாரமும், அகரமும் வகரமும் உகரமும் தம்முள் ஒத்து இசைத்து நிற்பதொன்று ஆகலின் ஒகர ஓகாரங்களின் பின்னர் ஔகாரமும் வைக்கப்பட்டன. இவ்வாறு ஆதல்பற்றி ஏ, ஓ, ஐ, ஔ என்னும் நான்கனை-யும் வடநூலார் சந்தியக்கரம் என்பர். கையடனார்[63] நரமடங்கல்போல என்று உவமையும் கூறினார்.>

இக்கருத்தே பற்றி ஆசிரியர்,

"அம்மு னிகரம் யகர மென்றிவை
எய்தி னையொத் திசைக்கு மவ்வோ
டுவ்வும் வவ்வு மௌவோ ரன்ன" *(நன். 125)*

என்றார். இவ்வாறே <ஆசிரியர்[64] தொல்காப்பியரும்,

"அகர விகர மைகார மாகும்" *(தொல். மொழி. 21)*

"அகர வுகர மௌகார மாகும்" *(தொல். மொழி. 22)*

எனக் கூறி, ஐ என்னும் நெட்டெழுத்தின் வடிவு புலப்படுத்தற்கு அகர இகரங்-களே அன்றி அவற்றிடையே யகரமும் ஒத்து இசைக்கும் என்பார்,

"அகரத் திம்பர் யகரப் புள்ளியும்
ஐயெ னெடுஞ்சினை மெய்பெறத் தோன்றும்" *(தொல். மொழி. 23)*

---

[62] தொல்காப்பியச் சூத்திர விருத்தி (பக். 45).

[63] பதின்மூன்றாம் நூற்றாண்டினராகக் கருதப்படும் இவ்வாசிரியர், பதஞ்சலியார் வரைந்த மாபாடியத்துக்கு உரைவிளக்கம் எழுதினார் என்பர்.

[64] தொல்காப்பியச் சூத்திர விருத்தி (பக். 45-46).

என்றும், 'மெய்பெற' (தொல். மொழி. 23) என்ற இலேசானே ஔ என்னும் நெட்டெழுத்தின் வடிவு புலப்படுத்தற்கு அகர உகரங்களே அன்றி அவற்றிடையே வகரமும் ஒத்து இசைக்கும் என்றும் இம்பர், உம்பர் என்றாற் போல்வன காலவகை இடவகைகளான் மயங்கும் ஆகலின் இவற்றின் முதற்கண் நிற்பது யாதோ இறுதிக்கண் நிற்பது யாதோ என்னும் ஐயம் நீக்குதற்கு, "இகரமும் யகரமு மிறுதி விரவும்" (தொல். மொழி. 25*) என்றும் கூறினார். மொழிந்த பொருளோடு ஒன்ற அவ்வயின் மொழியாததனையும் முட்டின்று முடித்தல் என்னும் உத்தியான் எகர ஏகாரங்கள், ஒகர ஓகாரங்கள் அவ்வாறு ஆதலும் கொள்ள வைத்தார். மாபாடியத்துள் ஊகாரத்தின் பின் நின்ற வடவெழுத்து நான்கு உயிர்க்கும் இடையே ரகர லகரக்கூறுகள் ஒத்து நிற்கும் என்ற ஆசிரியர் பதஞ்சலியார்க்கு[65] ஐ, ஔ என்புழியும் இடையே யகர வகரக்கூறுகள் விரவி நிற்கும் என்பது உடன்பாடு ஆதல் பெற்றாம். எகரம் முதலியவற்றுள் அகரக்கூறு குறைவும் இகர உகரக்கூறுகள் மிகுதியும் ஆம் எனவும் உணர்க. இதுவும் மாபாடியத்தில் கண்டது.> <ஈண்டுக்[66] கூறியவாற்றானே அகரம் உயிரெழுத்துக்களினும் கலந்து நிற்குமாறு அறிக.>

இனி மெய்களுள் <வலியாரை[67] முன் வைத்து மெலியாரைப் பின் வைத்தல் மரபு ஆகலின் அச்சிறப்பு நோக்கி, வல்லெழுத்துக்கள் முன்னும் அவ்வவற்றிற்கு இனம் ஒத்த மெல்லெழுத்துக்கள் அவ்வவற்றின் பின்னுமாக வைக்கப்பட்டன. அவ்விரண்டும் நோக்கியல்லது இடை நிகரனவாய் ஒலித்தல் அறியப்படாமையின் அதுபற்றி இடையெழுத்துக்கள் அவ்விரு கூற்றிற்கும் பின் வைக்கப்பட்டன.>

<ஒருவாற்றான்[68] ஒத்தலும் ஒருவாற்றான் வேறாதலும் உடைமைபற்றி அன்றே இனம் என்று வழங்கப்படுவது. அவற்றுள் இடையெழுத்து ஆறும் இடப்பிறப்பான் ஒத்தலும் முயற்சிப்பிறப்பான் வேறாதலும் உடைமையின் இடைக்கணம் என ஓர் இனம் ஆயின. உயிர்க்கணம், வன்கணம், மென்கணம் என்பவற்றிற்கும் இஃது ஒக்கும்.>

---

[65] கி. மு. முதல் நூற்றாண்டினராகக் கருதப்படும் இவ்வாசிரியர் பாணினீயத்துக்கு மாபாடியம் என்னும் பேருரை வரைந்தார் என்பர்.

[66] தொல்காப்பியச் சூத்திர விருத்தி (பக். 47). இப்பகுதி ஆறுமுக நாவலரின் முதல் பதிப்பில் (1851. பக். 34) வேறு வகையாகக் காணப்படுகிறது.

[67] தொல்காப்பியச் சூத்திர விருத்தி (பக். 42).

[68] தொல்காப்பியச் சூத்திர விருத்தி (பக். 40-41).

<இனிக் க ஙக்களும்[69] ச ஞக்களும் ட ணக்களும் த நக்களும் ப மக்களும் அடிநாவண்ணம், இடைநாவண்ணம், நுனிநாவண்ணம், அண்பல் அடி, இதழ் என்னும் இவற்றின் முயற்சியால் பிறத்தலான் அப்பிறப்பிடத்து முறையே முறையாக வைக்கப்பட்டன.> <ய ர ல வக்கள்[70] நான்கும் முறையே அடியண்ணமும் இடையண்ணமும் அண்பல் முதலும் இதழும் என்னும் இவற்றின் முயற்சியால் பிறத்தலான் அப்பிறப்பிடத்து முறையே முறையாக வைக்கப்பட்டன. ழகார றகார னகாரங்கள் மூன்றும் தமிழெழுத்து என்பது அறிவித்தற்கு இறுதிக்கண் வைக்கப்பட்டன. அவற்றுள்ளும் ழகாரம் இடையெழுத்து ஆகலின் அதுபற்றி இடையெழுத்தோடு சார்த்தி அவற்று இறுதிக்கண் வைக்கப்பட்டது. வடமொழியின் லகரம் ளகரமாகவும் உச்சரிக்கப்படுவதன்றித் தனியே ஓர் எழுத்து அன்மையின் அச்சிறப்பின்மைபற்றி இடையெழுத்தாகிய ளகரம் ழகரத்திற்கும் பின் வைக்கப்பட்டது.>

இவ்வாறே உயிருள்ளும் <எகர ஒகரங்கள்[71] ஒருவாற்றான் சிறப்பெழுத்து ஆயினும் பிராகிருதமொழியில் பயின்று வருதலானும் சாமவேதம் உடையாருள் ஒருசாரார் இசைபற்றிக் குழூஉக்குறிபோலக் கொண்டு ஓதுப ஆகலானும் இறுதிக்கண் வையாது, முறைபற்றி ஏகார ஓகாரங்களின் முன் வைக்கப்பட்டன.> ஆகையால் முறை ஆமாறு[72] இவை என உய்த்துணர்ந்து கொள்க.

<இவ்வாறு[73] உலகத்தும் பிறப்பு ஒத்தல்பற்றியே இனம் என்று வழங்குப ஆகலின்> ஈண்டு, 'இனத்தினும்' என்றதற்குப் பிற காரணங்களும் உளவேனும் பெரும்பான்மையும் பிறப்பு ஒத்தலே இனம் என்று கொள்க. (18)

### எழுத்துக்களின் பிறப்புக்குப் பொதுவிதி

{74} நிறையுயிர் முயற்சியி னுள்வளி துரப்ப
எழுமணுத் திரளுரங் கண்ட முச்சி
மூக்குற் றிதழ்நாப் பல்லணத் தொழிலின்
வெவ்வே றெழுத்தொலி யாய்வரல் பிறப்பே.

---

[69] தொல்காப்பியச் சூத்திர விருத்தி (பக். 42).

[70] தொல்காப்பியச் சூத்திர விருத்தி (பக். 40).

[71] தொல்காப்பியச் சூத்திர விருத்தி (பக். 47).

[72] எழுத்துக்களின் கிடக்கைமுறைக்கு மயிலைநாதர் (நன். 72), நச்சினார்க்கினியர் (தொல். நூன். 1, 8, 21; மொழி. 13), வைத்தியநாத தேசிகர் (இல. விள. 8) முதலியோர் கூறும் காரணங்களையும் ஒப்பிடுக.

[73] தொல்காப்பியச் சூத்திர விருத்தி (பக். 41).

எ-னின், நிறுத்த முறையானே *(57)* பிறப்பு ஆமாறு உணர்த்துவான் தொடங்கி, அதன் பொதுவிதி உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: ஒலியெழுத்தாகிய காரியத்திற்கு வேண்டும் காரணங்களில் ஒருவாற்றானும் குறைவின்றி நிறைந்த உயிரினது முயற்சியால் உள் நின்ற வளி எழுப்ப எழும், செவிப்புலன் ஆம் **அணுத்திரள்** உரம் முதலிய நான்கு இடத்தையும் பொருந்தி, இதழ் முதலிய நான்கின் தொழில்களால் வெவ்வேறு எழுத்தாகிய ஒலிகளாய்த் தோன்றுதல் அவற்றின் பிறப்பாம் எ-று. (19)

முதலெழுத்துக்கள் பிறக்கும் இடம்

{75} **அவ்வழி,**
**ஆவி யிடைமை யிடமிட றாகும்**
**மேவு மென்மைமூக் குரம்பெறும் வன்மை.**

எ-னின், முதலெழுத்துக்கட்கு *(59)* இடம் **வகுத்து உணர்த்துதல்** நுதலிற்று.

இ-ள்: மேற் கூறிய நெறியான் பிறக்குங்கால் ஆவி, இடையினம் என்னும் இருவகை எழுத்தினது இடம் மிடறு ஆகும்; மெல்லினம் மூக்கை இடமாகப் பொருந்தும்; வல்லினம் நெஞ்சை இடமாகப் பெறும் எ-று. (20)

முதலெழுத்துக்களின் முயற்சிவகைப் பிறப்பு

76. **அவற்றுள்,**
**முயற்சியுள் அஆ வங்காப் புடைய.**

எ-னின், முதலெழுத்துள் சிலவற்றிற்கு முயற்சி வகையால் பிறப்பு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: மேல் இடம் வகுக்கப்பட்ட முதலெழுத்துக்களுள் அகர ஆகாரங்கள் நால்வகை முயற்சியுள் *(74)* அண்ணத்தின் தொழிலாகிய அங்காத்தலை உடையவாய்ப் பிறக்கும் எ-று. (21)

77. **இஈ எஏ ஐஅங் காப்போ**
**டண்பன் முதனா விளிம்புற வருமே.**

எ-னின், இதுவும் அது.

இ-ள்: இவ்வைந்து எழுத்தும் அங்காப்புடனே அண்பல்லை அடிநா விளிம்பு பொருந்தப் பிறக்கும் எ-று. (22)

78. **உ ஊ ஒஓ ஔவிதழ் குவிவே.**

எ-னின், இதுவும் அது.

இ-ள்: இவ்வைந்து எழுத்தும் பிறத்தற்கு ஏதுவாகிய முயற்சி இதழ்குவிவாம் எ-று. (23)

79. **கஙவுஞ் சஞவும் டணவு முதலிடை**
**நுனிநா வண்ண முறமுறை வருமே.**

எ-னின், இதுவும் அது.

இ-ள்: கவ்வும் ஙவ்வும் முதல்நா முதலண்ணத்தையும் சவ்வும் ஞவ்வும் இடைநா இடையண்ணத்தையும் டவ்வும் ணவ்வும் நுனிநா நுனியண்ணத்தையும் பொருந்த இம்முறையே பிறக்கும் எ-று. (24)

80. **அண்பல் லடிநா முடியுறத் தநவரும்.**

எ-னின், இதுவும் அது.

இ-ள்: அண்பல் அடியை நா நுனி பொருந்தத் தவ்வும் நவ்வும் பிறக்கும் எ-று. (25)

81. **மீகீ ழிதழுறப் பம்மப் பிறக்கும்.**

எ-னின், இதுவும் அது.

இ-ள்: மேலிதழும் கீழிதழும் பொருந்தப் பவ்வும் மவ்வும் பிறக்கும் எ-று. (26)

82. **அடிநா வடியண முறயத் தோன்றும்.**

எ-னின், இதுவும் அது.

இ-ள்: அடிநா அடியண்ணத்தைப் பொருந்த யகரம் பிறக்கும் எ-று. (27)

83. **அண்ண நுனிநா வருட ரழவரும்.**

எ-னின், இதுவும் அது.

இ-ள்: அண்ணத்தை நுனிநாத் தடவ ரவ்வும் ழவ்வும் பிறக்கும் எ-று. (28)

84. **அண்பன் முதலு மண்ணமு முறையின்**
**நாவிளிம்பு வீங்கி யொற்றவும் வருடவும்**
**லகார ளகாரமா யிரண்டும் பிறக்கும்.**

எ-னின், இதுவும் அது.

இ-ள்: அண்பல் முதலை நாவிளிம்பு வீங்கி ஒற்ற லகாரம் ஆகியும் அண்ணத்தை நாவிளிம்பு வீங்கி வருட ளகாரம் ஆகியும் இவ்விரண்டு எழுத்தும் பிறக்கும் எ-று. (29)

85. **மேற்பல் லிதழுற மேவிடும் வவ்வே.**

எ-னின், இதுவும் அது.

இ-ள்: மேற்பல் கீழிதழைப் பொருந்த[74] வகாரம் பிறக்கும் எ-று. (30)

86. **அண்ண நுனிநா நனியுறிற் றனவரும்.**

எ-னின், இதுவும் அது.

இ-ள்: அண்ணத்தை நுனிநா மிகப் பொருந்தின் றவ்வும் னவ்வும் பிறக்கும் எ-று. (31)

சார்பெழுத்துக்களுக்கு இடமும் முயற்சியும்

87. **ஆய்தக் கிடந்தலை யங்கா முயற்சி
சார்பெழுத் தேனவுந் தம்முத லனைய.**

எ-னின், சார்பெழுத்துக்கட்கு (60) இடமுயற்சி வகையால் பிறப்பு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: ஆய்தம் பிறத்தற்கு இடம் தலை; முயற்சி அங்காத்தலாம். ஒழிந்த சார்பெழுத்துக்களும் இடமுயற்சிகள் தம் முதலெழுத்துக்களோடு ஒப்பனவாய்ப் பிறக்கும் எ-று.

சார்பின் சார்பாகிய ஆய்தக் குறுக்கமும் தன் முதல்போற் பிறக்கும் என்பார் எதிரது தழீஇ, 'ஏனவும்' என்றார். (32)

பிறப்பிற்குப் புறனடை

{88} **எடுத்தல் படுத்த லலித லுழப்பிற்
றிரிபுந் தத்தமிற் சிறிதுள் வாகும்.**

[74] "மேல்வாய்ப் பல்லைக் கீழுதடு பொருந்த" என்று உரை கூறி, உற என்னும் வினைக்குக் கீழிதழ் வினைமுதல் என்றும் மேற்பல் செயப்படுபொருள் என்றும் இராமாநுச கவிராயர் (நன். 85) விளக்கம் கூறுவார். ஆறுமுக நாவலரின் பிந்திய பதிப்பிலும் (1933) இவ்வுரை காணப்படுகிறது.

எ-னின், மேற் கூறிய (74-87) பிறப்பிற்கு ஓர் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: பல **எழுத்திற்குப்** பிறப்பு ஒன்றாகச் சொல்லப்பட்டனவேனும் எடுத்தல், படுத்தல், நலிதல்[75] என்னும் எழுத்திற்கு உரிய ஒலிமுயற்சியான் ஒன்றற்கு ஒன்று பிறப்பு வேறுபாடுகளும் அவ்வவற்றின்கண் **சிறிது சிறிது** உளவாம் எ-று. (33)

உயிர்மெய்

{89} **புள்ளிவிட் டவ்வொடு முன்னுரு வாகியும்**
**ஏனை யுயிரோ டுருவு திரிந்தும்**
**உயிரள வாயதன் வடிவொழித் திருவயிற்**
**பெயரொடு மொற்றுமுன் னாய்வரு முயிர்மெய்.**

எ-னின், மேல் (87) பிறப்பு உணர்த்திய சார்பெழுத்திற்குச் சார்ந்து வருமாறும் ஓர் பிறப்பு ஆதலின் பிறப்பதிகாரத்துள் (74-97) அடக்கி உணர்த்துவான் தொடங்கி, அவற்றுள் உயிர்மெய் வருமாறு உணர்த்துதல்[76] நுதலிற்று.

இ-ள்: மெய் புள்ளியை விட்டு அகரத்தோடு கூடியவழி விட்ட உருவே உருவாகியும் ஒழிந்த உயிர்களோடு கூடியவழி உருவு வேறுபட்டும் தன் மாத்திரை தோன்றாது, உயிர்மாத்திரையே மாத்திரையாய், அதன்[77] வரிவடிவினது விகாரவடிவே வடிவாய், உயிர்வடிவை ஒழித்து மெய், உயிர் என்னும் பெயராகிய இரண்டு இடத்தும் பிறந்த உயிர்மெய் என்னும் பெயருடனே ஒற்றொலி முன்னும் உயிரொலி பின்னுமாகி வரும் உயிர்மெய் எழுத்து எ-று.

**<உருவு திரிதல்[78] புள்ளி பெறுவன புள்ளி பெற்றும் மேலும் கீழும் விலங்கு பெறுவன விலங்கு பெற்றும் கோடு பெறுவன கோடு பெற்றும் புள்ளியும் கோடும் உடன் பெறுவன உடன் பெற்றும் வருவனவாம். அருகே பெற்ற புள்ளியை இக்காலத்தார் காலாக எழுதுவர்.>**

'ஒழித்து' என்றும், 'ஒற்றுமுன் னாய்' என்றும் வந்த சினைவினைகள், 'இருவயிற் பெயரொடும்... வரும்' என்னும் முதல்வினையோடு முடிந்தன.

---

[75] இவற்றோடு உரப்பலைக் கூட்டி நான்கு என்றும் (வீர. 4) விலங்கலைக் கூட்டி நான்கு என்றும் (தொல். பிற. 6 நச்.; இல. விள. 14; இல. கொ. 127) கூறப்படும்.

[76] இந்நூற்பாவின் உரைக்குச் சிவஞான முனிவர் செய்த திருத்தம் ஆறுமுக நாவலர் பதிப்புகளில் இடம் மாறியுள்ளது.

[77] "மாத்திரையாய்த் தன் வரிவடிவினது" என்பது ஆறுமுக நாவலர் பாடம்.

[78] இளம்பூரணர், நச்சினார்க்கினியர் (தொல். நூன். 17) உரை.

பூதி முதலியவற்றில் தீட்டிய வரிவடிவும் ஒலிவடிவுபோலப் பயன் தரும் ஒற்றுமை குறித்து ஈண்டு அவ்விரு திறனும் விரவிக் கூறினார்.

இவ்விலக்கணத்தான் ஒவ்வொரு மெய்யில் பன்னீர் உயிரும் கூடப் பன்னிரு பதினெட்டு இருநூற்று ஒருபத்தாறாய் வருமாறு வழங்கும் வரிவடிவுள்ளும் ஒலி-வடிவுள்ளும் காண்க. (34)

முற்றாய்தம்

**90. குறியதன் முன்ன ராய்தப் புள்ளி**
**உயிரொடு புணர்ந்தவல் லாறன் மிசைத்தே.**

எ-னின்[79] முற்றாய்தம் வருமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: புள்ளி வடிவினதாய ஆய்தம் குற்றெழுத்தின் முன்னதாய், உயிரோடு கூடிய வல்லெழுத்து ஆறன் மேலதாய் வரும் எ-று.

உயிர்வருக்கத்து இறுதிக்கண் தந்த ஆய்தவடிவைப் பிற்காலத்து வேறுபட வரைந்து வழங்குவர் ஆதலின் தொல்லை வடிவு[80] தோன்ற, 'ஆய்தப் புள்ளி' என்றார்.

உ-ம்: எஃகு, கஃசு, இருபஃது, அஃகடிய, அஃகான், மஃகான் எனவும் தனிக்குறில் என்று வரைந்து ஓதாமையின்,

"விலஃஃகி வீங்கிரு ளோட்டுமே மாதர்
இலஃஃகு முத்தி னினம்" (நன். 89 மயிலை.)

எனவும் வரும். பிறவும் அன்ன.

இச்சூத்திரம் மேற்கோள் (தொல். மொழி. 5.) ஆதலால் தான் எடுத்து மொழிதல் என்னும் உத்தி.

வல்லின வகையான் இயல்பாக வந்த ஆய்தம் ஆறனோடு புணர்ச்சி விகாரத்தான் வரும் ஆய்தமும் (235) செய்யுள் விகாரத்தான் வரும் ஆய்தமும்[81] கூடி எட்டாய் வருமாறு காண்க. (35)

---

[79] இது தொல்காப்பிய (மொழி. 5) நூற்பா.
[80] இளம்பூரணரைத் தழுவி, 'ஆய்தப் புள்ளி' என்பதனை மயிலைநாதர் (நன். 89) இருபெயரொட்டாகக் கொண்டு விளக்குவார்.
[81] அஃகான், மஃகான், செய்வஃது போல்வன செய்யுள் விகாரத்தால் வரும் ஆய்தம்.

## உயிரளபெடை

{91} **இசைகெடின் மொழிமுத லிடைகடை நிலைநெடில்**
**அளபெழு மவற்றவற் றினக்குறில் குறியே.**

எ-னின், உயிரளபெடை வருமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: செய்யுட்கண் இசை குன்றின் மொழி முதலினும் இடையினும் கடையினும் நின்ற நெட்டெழுத்து ஏழும் அவ் இசை நிறைக்கத் **தத்தம்** மாத்திரையின் மிக்கு ஒலிக்கும். அவ்வாறு **அளபெடுத்தன** அறிதற்கு, அவற்றின் பின் அவற்றிற்கு இனமாகிய குற்றெழுத்துக்கள் வரிவடிவின்கண் அறிகுறியாய் வரும் எ-று.

உ-ம்:

"ஆஅ வளிய வலவன்றன் பார்ப்பினோ
டீஇ ரிரையுங்கொண் டீரளைப் பள்ளியுட்
டூஉந் திரையலைப்பத் துஞ்சா திறைவன்றோள்
மேஎ வலைப்பட்ட நம்போ னறுநுதால்
ஓஒ வுழக்குந் துயர்" (யா. வி. 41)

எனவும்,

"உறாஅர்க் குறுநோ யுரைப்பாய் கடலைச்
செறாஅஅய் வாழிய நெஞ்சு" (குறள். 1200)

எனவும்,

"அனிச்சப்பூக் கால்களையாள் பெய்தா ணுசுப்பிற்கு
நல்ல படாஅ பறை" (குறள். 1115)

எனவும் வரும். "செறாஅஅய் வாழிய" (குறள். 1200) என்புழி நான்கு மாத்திரையாயும் ஏனைய மூன்று மாத்திரையாயும் அலகு பெற்றுச், செய்யுளிசை நிறைத்து மூவிடத்தும் வந்தவாறு காண்க. பிறவும் அன்ன.

இனி, 'இசைகெடின்' என்று பொதுப்படக் கூறினமையால்,

"கெடுப்பதூஉங் கெட்டார்க்குச் சார்வாய்மற் றாங்கே
எடுப்பதூஉ மெல்லா மழை" (குறள். 15)

எனக் குறில் நெடிலாய் அளபெழுந்து, அலகு பெற்றும் பெறாதும் இன்னிசை நிறைப்ப வருவனவும்,

"உரனசைஇ யுள்ளந் துணையாகச் சென்றார்
வரனசைஇ யின்னு முளேன்" (குறள். 1263)

என அளபெழுந்து, அலகு பெற்றும் பெறாதும் சொல்லிசை நிறைப்ப வருவனவும்,

"வீழப் படுவார் கெழீஇயிலர் தாம்வீழ்வார்
வீழப் படாஅ ரெனின்" (குறள். 1194)

என்பதனுள், "கெழீஇயிலர்" (குறள். 1194) என அளபெழுந்து, அலகு பெறாது சொல்லிசை நிறைப்ப வருவனவும் கொள்க.

எழுத்துப் பல ஆயின ஒலிவேற்றுமையான் அன்றே? அங்ஙனம் ஆதலின் நெடிலது விகாரமாய் ஓர் ஒலியாய்ப் **பிறப்பதே அளபெடை என்பார், 'நெடில் அளபெழும்' என்றும், 'அவற்றவற் றினக்குறில் குறியே' என்றும்**[82] **கூறினார். ஆசிரியர் தொல்காப்பியரும் நீரும் நீரும் சேர்ந்தாற்போல நெட்டெழுத்தோடு குற்றெழுத்து ஒத்து நின்று நீண்டு இசைப்பதே அளபெடை என்பார்,**

**"குன்றிசை மொழிவயி னின்றிசை நிறைக்கும்
நெட்டெழுத் திம்ப ரொத்தகுற் றெழுத்தே"** (தொல். மொழி. 8)

**என்றார். இங்ஙனம் ஒலிபற்றிக் கூறும் வகையால் இருவர்க்கும் கருத்து ஒன்றே ஆயினும்,** 'குறியே' என்றது இவ்விரண்டு மேற்கோளில் ஒன்று துணிதலான் ஒருதலை துணிதல் என்னும் உத்தியும் அம்மதமும் பட வந்தது என்க.

**<இப்பெற்றி**[83] **அறியாதார் நெடிலும் குறிலும் விரலும் விரலும் சேர நின்றாற்போல இணைந்து நின்று அளபெடுக்கும் எனத் தமக்கு வேண்டியவாறே**[84] **கூறுப. நெடிலும் குறிலும் அவ்வாறு நின்று அளபெடுக்கும் என்றல் பொருந்தாமைக்கு எழுத்தெடை என்னாது அளபெடை என்னும் குறியீடே சான்று ஆதல் அறிக. அற்றேல் ஓர் எழுத்தினையே இரண்டு மாத்திரையும் ஒரு மாத்திரையுமாகப் பிரித்து அசைத்து, அதனாற் சீர்செய்து தளையறுத்தல் பொருந்தாது எனின்**[85] **அற்று அன்று. எழுத்து வகையான் என்னாது,**

---

[82] தொல்காப்பியச் சூத்திர விருத்தியோடு (பக். 43) ஒப்பிடுக.

[83] தொல்காப்பியச் சூத்திர விருத்தி (பக். 43-44).

[84] இளம்பூரணரும் நச்சினார்க்கினியரும் (தொல். நூன். 6) இவ்வாறு கூறுவர்.

[85] இவ்வாறு சீர்செய்து தளையறுத்தல் பொருந்தாது என்பது வைத்தியநாத தேசிகர் (இல. விள. 19) கருத்து.

"மாத்திரை வகையாற் றளைதம கெடாநிலை
யாப்பழி யாமையென் றளபெடை வேண்டும்" (யா. வி. 2*)

எனக் கூறுப ஆகலின் எழுத்திற்கு மாத்திரை கோடலும் அசைத்தலும் சீர்-செய்தலும் தளையறுத்தலும் ஓசைபற்றியல்லது எழுத்துப்பற்றி அல்ல என்க.>

இதனுள் செப்பலோசை முதலிய ஓசை குன்றாது நெட்டெழுத்து ஏழும் மொழி முதல் இடை கடைகளின் நின்று அளபெடுக்குங்கால் ஔகாரம் மொழி இடை கடைகளின் வரப்பெறாமையின் அவ்விடங்களின் அஃது ஒழிய நின்று அளபெடுக்கும் அளபெடை பத்தொன்பதோடு இன்னிசை நிறைப்பவும் சொல்-லிசை நிறைப்பவும் அளபெடுக்கும் அளபெடை இரண்டும் கூடி, உயிரளபெடை எழுமூன்றாய் வருமாறு காண்க. (36)

## ஒற்றளபெடை

92. ஙஞண நமன வயலள வாய்தம்
அளபாங் குறிலிணை குறிற்கீ ழிடைகடை
மிகலே யவற்றின் குறியாம் வேறே.

எ-னின், ஒற்றளபெடை வருமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: செய்யுட்கண் இசை குன்றின் குறிலிணைக்கீழும் குறிற்கீழுமாய் மொழி இடையினும் ஈற்றினும் நின்ற இப்பத்து ஒற்றும் ஆய்தமும் அவ்வோசை நிறைக்கத் தம் மாத்திரையின் மிக்கு ஒலிக்கும். இவ்வாறு அளபெடுத்தன அறிதற்கு, அவற்றின் பின் அவ்வெழுத்துக்களே வரிவடிவின்கண் வேறு அறிகுறியாய் வரும் எ-று.

"ஒருமொழி யொழிதன் னினங்கொளற் குரித்தே" (நூ. 358) என்பதனான் மேல், "இசைகெடின்" (நூ. 91) என்பதனை இவ்வளபெடைக்கும் வருவித்துக்கொள்க. மாத்திரை நிறைத்தற்கு அன்றி அறிகுறி மாத்திரையாய் வரும் என்று கோடற்கு, 'வேறே' என்றார்.

உ-ம்:

"இலங்ங்கு வெண்பிறைசூ டீசனடி யார்க்குக்
கலங்ங்கு நெஞ்சமிலை காண்" (வி. மே.)

எனவும்,

"எங்ங் கிறைவனுள னென்பாய் மனனேயான்
எங்ங் கெனத்திரிவா ரின்" (வி. மே.)

எனவும்,

"கலங்ங்கொண்ட கவின்மார்பர்" (நன். 91* மயிலை.)

"மடங்ங் கலந்த மனனே களத்து
விடங்ங் கலந்தானை வேண்டு" (வி. மே.)

எனவும்,

"அங்ங் கனிந்த வருளிடத்தார்க் கன்புசெய்து
நங்ங் களங்கறுப்பா நாம்" (வி. மே.)

எனவும் ஙகரம் குறிலிணைக்கீழும் குறிற்கீழும் மொழிக்கு இடையினும் கடையினும் முறையே அளபெழுந்தது.

"கண்ண் கருவிளை கார்முல்லை கூரெயிறு
பொன்ன் பொறிசுணங்கு போழ்வா யிலவம்பூ
மின்ன் னுழைமருங்குன் மேதகு சாயலாள்
என்ன் பிறமகளா மாறு" (யா. வி. 3*)

என ணகரமும் னகரமும் குறிற்கீழ் மொழியீற்றின் அளபெழுந்தன.

"எஃஃ கிலங்கிய கையரா யின்னுயிர்
வெஃஃகு வார்க்கில்லை வீடு" (யா. வி. 3)

என ஆய்தம் குறிற்கீழ் மொழிக்கு இடையின் அளபெழுந்தது. பிறவும் அன்ன. ஆய்தம் ஒற்றொடும் ஒருபுடை ஒத்து வருதலின் ஈண்டுத் தந்துரைத்தார்.

ஙகரம் விதியீறாய் வருதலின் அதனை விலக்காது, ஆய்தம் ஒருமொழிக்-கண்ணும் தொடர்மொழிக்கண்ணும் விதித்த முதலெழுத்துக்கள் இருமருங்கும் நின்று எழுப்ப, இருசிறகு எழுப்ப எழும் உடல் அதுபோல் இடை எழுந்து ஒலிப்ப-தன்றி, ஒருவாற்றானும் ஈறாய் வரும் தன்மையது அன்று ஆகலின் அஃகடிய முதலிய-வற்றின்கண் திரிந்த ஆய்தம் அஃகான் முதலியவற்றின்கண் தோன்றிய ஆய்தம்-போலத் தொடர்மொழிக்கண் இடைநிலை ஆயதன்றி, விதியீறு அன்று என்று அதன் உண்மை துணிந்து, அதனை இறுதிக்கண் விலக்கி, ஒற்றளபெடை நாற்பத்திரண்டு என்று மேல் (61) உரைத்தவாறு இங்ஙனம் வருதல் காண்க. (37)

குற்றியலிகரம்

93. **யகரம் வரக்குற ளுத்திரி யிகரமும்**
**அசைச்சொன் மியாவி னிகரமுங் குறிய.**

எ-னின், குற்றியலிகரம் வருமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: யகரம் வருமொழிக்கு முதலாகி வர, நிலைமொழிக்கு ஈறாகி நின்ற குற்றிய-லுகரம் திரிந்த இகரமும் (164) மியா என்னும் அசைச்சொல்லின்கண் இகரமும் குற்றியலிகரங்களாம் எ-று.

எனவே இங்ஙனம் வரும் ஆயின் இவ்வெழுத்தின் தொடர்பால் குறுகும் என்பது பெற்றாம்.

உ-ம்: நாகியாது, எஃகியாது, வரகியாது, கொக்கியாது, குரங்கியாது, அல்கியாது எனவும் கேண்மியா, சென்மியா எனவும் வரும். பிறவும் அன்ன.

பொதுப்படக் கூறிய குற்றியலுகரம் முப்பத்தாறானும் அசைச்சொல் மியாவினானும் குற்றியலிகரம் முப்பத்தேழாய் வருமாறு காண்க. (38)

குற்றியலுகரம்

{94} **நெடிலோ* டாய்த முயிர்வலி மெலியிடைத்**
**தொடர்மொழி யிறுதி வன்மையூ ருகரம்**
**அஃகும் பிறமேற் றொடரவும் பெறுமே.**

எ-னின்[86] **இடமும் பற்றுக்கோடும் சார்ந்து** குற்றியலுகரம் வருமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: தனிநெடில் **ஏழுடனே ஆய்தம் ஒன்றும் மொழி இடை ஈறுகளின் வரப்பெறாத ஔகாரம் ஒழித்து, ஒழிந்த உயிர் பதினொன்றும் வல்லெழுத்து ஆறும் மெல்லெழுத்து ஆறும் வல்லெழுத்துக்களோடு தொடராத வகரம் ஒழித்து, ஒழிந்த இடையெழுத்து ஐந்தும் ஆகிய முப்பத்தாறு எழுத்தினுள் யாதானும் ஒன்று ஈற்றுக்கு அயலெழுத்தாய்த் தொடரப்பட்டு, மொழியிறுதிக்-கண் வல்லெழுத்துக்களுள் யாதானும் ஒன்று பற்றுக்கோடாக, அதனை ஊர்ந்து வரின் அவ்வுகரம்** தன் மாத்திரையில் குறுகும். அது தன் மாத்திரையில் குறுகுதற்கும் மொழி நிரம்புதற்கும் காரணம் இவ் ஓர் எழுத்துத் தொடர் தன்

[86] **"நெடிலொ டாய்த முயிர்வலி மெலியிடை" என்பது சங்கர நமச்சிவாயர் பாடம்.**

மாத்திரையின் அமையாது, பிற எழுத்துக்களுள் ஒன்றும் பலவும் மேலே தொடரவும் பெறும் எ-று.

நெடிலை ஒடுக் கொடுத்துப் பிரித்தார் தனிநெடில் ஆதலின். 'உயிர்' என்றது குற்றுயிர், நெட்டுயிர் இரண்டினையும். 'தொடர்' என்னும் வினைத்தொகை, 'வன்மையூ ருகரம்' என்னும் செயப்படுபொருளோடு முடிந்தது.

'பிற' என்றது, "பகாப்பத மேழும் பகுபத மொன்பதும்" (நூ. 130) என்று வரையறுத்தவற்றின் இங்ஙனம் ஈற்றயலும் ஈறுமாகக் கூறிய இரண்டும் ஒழித்து, ஒழிந்த **ஏழும் ஐந்தும்** ஆய எழுத்துக்களை. 'தொடரவும்' என்ற உம்மை இறந்தது தழீஇ நின்றது. 'பெறுமே' என்றது தனிநெடில் ஒழிந்த **ஐந்து தொடரும்** வன்மை ஊர் உகரம் குறுகுதற்கும் மொழி நிரம்புதற்கும் மேல் தொடர்தலும் இன்றியமையாமையின்.

உ-ம்: நாகு, எஃகு, வரகு, பலாசு, கொக்கு, குரங்கு, அல்கு என வரும். பிறவும் அன்ன.

**இனி இங்ஙனம், 'பிறமேற் றொடரவும் பெறுமே' எனக் கூறாது ஒழியின் இவ் ஐவகை எழுத்தும் ஈற்றெழுத்தும் கூடியே ஒரு மொழியாய் நிற்கும் எனவும் பட்டு அது, இது என்றல் தொடக்கத்தனவும் குற்றியலுகரம் ஆவான் செல்லும் எனவும் ஆய்தமும் தனிமெய்யும் மொழிக்கு முதலாம் எனவும் தனிநெடிலை ஒடுக் கொடுத்து விதக்க வேண்டா எனவும்** ஆசிரியர் தொல்காப்பியர்,

> "நெட்டெழுத் திம்பருந் தொடர்மொழி யீற்றும்
> குற்றிய லுகரம் வல்லா றூர்ந்தே" (தொல். மொழி. 3)

எனத் தொகுத்துக் கூறியவாறே கூறாது, எல்லா எழுத்தையும் கூறுவார் அவற்றையே ஆய்தம் முதல் ஐந்தாக வகுத்துத், தனிநெடிலோடு ஆறாகக் **குற்றுகரத்தை அறு-வகையான் வழங்குதற்கு இலக்கணம் தோன்றக் கூறினமையின் அவ்வாறு எடுத்தாளுதற்பொருட்டு எல்லா எழுத்தையும் குறியீடாக விதந்த ஆய்தம் முதலிய ஐந்தனுள் ஒன்று ஈற்றயலின் நின்று, இறுதி வன்மை ஊர் உகரத்தைத் தொடர்தலே அன்றிப் பிற மேல் தொடர்தலும் குறுகுதற்கு ஏது அன்று எனவும் பொருள்படுமாறு அறிக.**

**இச்சூத்திரப் பொருள்** முன் மொழிந்து கோடல் என்னும் உத்தி.

**இனி இவ்வாறன் பகுதித் தொடரும் இடம் ஆதலின் இவ் இடவேற்றுமை-யால் குற்றியலுகரம் முப்பத்தாறு என்று மேற் கூறியவாறே (61) வருமாறு காண்க.**

இவ்வாறு <கொள்ளாது,[87] ஆசிரியர் ஈற்றயலில் நின்ற எழுத்தை இடமாகக் கொண்டாற்போல ஈற்றயலில் நின்ற அசையை இடமாகக் கொண்டு அவற்றுள் அது, இது முதலிய முற்றுகரத்தை நீக்குதற்குக் குற்றெழுத்துத் தனியே வரும் அசை ஒன்றனையும் ஒழித்து, ஏனை ஏழு அசையினையும்,

"நெடிலே குறிலிணை குறினெடி லென்றிவை
ஒற்றொடு வருதலொடு குற்றொற் றிறுதியென்
றேழ்குற் றுகரக் கிடனென மொழிப" *(யா. வி. 2)*

எனக் கூறினாரும் உளராலோ எனின் அவ்வாறு[88] ஏழ் இடம் எனக் கோடும் என்பார்க்குப் பிண்ணாக்கு, சுண்ணாம்பு, பட்டாங்கு, விளையாட்டு, இறும்பூது முதலியனவும் ஆய்தம் தொடர்ந்தனவும் நெட்டொற்றிறுதி, நெடிலிறுதிக் குற்றுகரம் முதலியனவும் குற்றொற்றிறுதிக் குற்றுகரமுமாய் அடங்குமேனும் போவது, வருவது, ஒன்பது முதலியன அடங்காமை அறிக. நெடில் முதலாயின ஈற்றயலில் நிற்றல் வேண்டும் என யாப்புறவு இன்மையின் முதற்கண் நிற்பினும் ஈற்று உகரம் அவற்று இறுதியாதல் அமையும் எனக் கொண்டு, போவது முதலியனவும் நெடிலிறுதி முதலியனவாய் அடங்கும் என்பார்க்கும் அங்ஙனம் பாகுபடுத்துக் கருவி செய்ததனால் போந்த பயன்[89] இன்று என்பதாம்.> இது பிறர் நூல் குற்றம் காட்டல் என்னும் மதம்.

இனி மொழிந்த பொருளோடு ஒன்ற அவ்வயின் மொழியாததனையும் முட்டின்று முடித்தல் என்னும் உத்தியான் நுந்தை என்னும், "முறைப்பெயர் மருங்கி, னொற்றிய நகரமிசை" (தொல். மொழி. 34) உகரம் ஊர்ந்து மொழிமுதற்கண் நிற்பினும் குற்றியலுகரம் ஆம் எனவும் அவ்வுகரம் செக்குக்கணை, சுக்குக் கொடு எனப் புணர்மொழி இடைப்படினும் தன் அரை மாத்திரையில் குறுகும் எனவும் கொள்க. (39)

ஐகாரக் குறுக்கமும் ஔகாரக் குறுக்கமும்

{95} **தற்சுட்* டளபொழி யைம்மூ வழியும்
நையு மௌவு முதலற் றாகும்.**

---

[87] தொல்காப்பியச் சூத்திர விருத்தி (பக். 53-54).
[88] மயிலைநாதர் உரையோடு (நூ. 93) ஒப்பிடுக.
[89] "போதப் பயன்", "போதப் பயின்று" என்பன பிற விருத்தியுரைப் பதிப்புகளில் உள்ள பிழைப் பாடங்கள்.

எ-னின்[90] ஐகார ஔகாரக் குறுக்கங்கள் வருமாறு உணர்த்துதல்[91] நுதலிற்று.

இ-ள்: ஐகாரம் தன்னைக் கருதித் தன் பெயர் கூறும் அளவில் குறுகாது, ஒழிந்த மொழி முதல், **இடை, கடை** என்னும் மூன்று இடத்தும் முன்னும் பின்னும் இருமருங்கும் ஆய எழுத்தின் தொடர்பால் தன் மாத்திரையில் குறுகும். ஔகாரமும் தன் பெயர் கூறும் அளவில் குறுகாது, ஒழிந்த மொழிமுதற்கண் பின் வரும் எழுத்தின் தொடர்பால் தன் மாத்திரையில் குறுகும் எ-று.

**'சுட்டளபு'** என்பது வினைத்தொகை.

**'அளபு'** என்றார் எழுத்தின் சாரியை தொடரினும் குறுகும் என்பது கருதி. எனவே ஓர் எழுத்து ஒரு மொழியாய் நிலைமொழி வருமொழியாய்த் **தொடராது,** தனித்து **ஒரோவிடங்களின்** வரின் தன் மாத்திரை குறுகாது என்பதூஉம் பெற்றாம்.

உ-ம்: ஐப்பசி, மைப்புறம் எனவும் வலையன் எனவும் குவளை எனவும் மௌவல் எனவும் வரும்.

இனி,

> **"அளபெடை தனியிரண் டல்வழி யையௌ**
> **உளதா மொன்றரை தனிமையு மாகும்"** (அவி.)

**எனக் கூறினாரும் உளராலோ எனின்** தன் இயல்பாய இரண்டு மாத்திரையினின்றும் குறுகுதல் இல்லனவற்றை ஒழிப்பார் விகாரத்தான் மூன்று மாத்திரையும் நான்கு மாத்திரையுமாய் மிக்கு ஒலிக்கும் அளபெடையை ஒழிக்க வேண்டாமையின் அது பொருந்தாது என்க. **இது மறுத்தல் என்னும் மதம். ஏனைய உடன்படல்.**

இடவகையான் ஐகாரக் **குறுக்கம்** மூன்றும் ஔகாரக் குறுக்கம் ஒன்றும் வருமாறு காண்க.

**இனி ஐகாரக் குறுக்கம் மொழிமுதற்கண் ஒன்றரை மாத்திரையாயும் ஏனை இடங்களின் ஒரு மாத்திரையாயும் ஔகாரக் குறுக்கம் மொழிமுதற்கண்**

---

[90] **"தற்சுட் டளவொழி" என்பது** சங்கர நமச்சிவாயர் பாடம்.

[91] **இந்நூற்பாவுக்கு** மயிலைநாதர் (நன். 94), **வைத்தியநாத** தேசிகர் (இல. விள. 21) **கூறும் உரையும் அதற்குச் சிவஞான முனிவர் தரும்** மறுப்பும் **(இல. சூறா. பக். 94) ஆராயத் தக்கன.**

ஒன்றரை மாத்திரையாயும் குறுகும் என்பது[92] உய்த்துணர்ந்து கொள்க. அவ்வாறு உய்த்துணர்ந்து கொள்ளாக்கால்,

"வைகலும் வைகல் வரக்கண்டு மஃதுணரார்
வைகலும் வைகலை வைகுமென் றின்புறுவர்
வைகலும் வைகற்றம் வாழ்நாண்மேல் வைகுதல்
வைகலை வைத்துணரா தார்" *(நாலடி. 39)*

எனவும்,

"கைவேல் களிற்றொடு போக்கி வருபவன்
மெய்வேல் பறியா நகும்" *(குறள். 774)*

எனவும்,

"ஔவிய நெஞ்சத்தா னாக்கமுஞ் செவ்வியான்
கேடு நினைக்கப் படும்" *(குறள். 169*)*

எனவும் வரும் இலக்கியங்கட்கு இலக்கணம் இன்றாய்[93] முடியும் என்க. (40)

மகரக் குறுக்கம்

96. **ணனமுன்னும் வஃகான் மிசையுமக் குறுகும்.**

எ-னின், மகரக் குறுக்கம் வருமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: ணகார னகாரங்களில் ஒன்று நின்று தொடர்ந்திட, அதன் முன் வரினும் வகாரம் வந்து தொடர்ந்திட, அதன்மேல் நிற்பினும் மகரம் தன் அரை மாத்திரையிற் *(99)* குறுகும் எ-று.

உ-ம்:

"பகுப்போல்வார் முற்பட்டாற் பாற்பட்ட சான்றோர்
முகுப்போல முள்காந் திருப்பர் - பசுத்தான்

[92] மொழிமுதற்கண் ஐகாரம் குறுகாது என்றும் ஔகாரக் குறுக்கம் என்று ஒன்று இல்லை என்றும் சிவஞான முனிவர் (தொல். விரு. பக். 56-57) மறுப்பார்.

[93] செய்யுளில் வரும் ஐகார ஔகாரங்களை ஈரெழுத்தாகக் கொள்ளாக்கால் செய்யுளியலுள் கொண்ட எதுகை மோனைகளோடு மாறுபடும் என்று சுப்பிரமணிய தீக்கிதரும் (பி. வி. 5) சாமிநாத தேசிகரும் (இல. கொ. 91) கூறுவர்.

வெருளினு மெல்லாம் வெருளுமஃ தன்றி
மருளினு மெல்லா மருண்ம்" (நன். 95* மயிலை.)

எனவும், "திசையறி மீகானும் போன்ம்" (பரி. 10:55*) எனவும், "தரும் வளவன்" (வி. மே.) எனவும் வரும்.

இனி ணகர னகரங்களின் முன் வந்த மகரம் செய்யும் என்னும் வாய்பாட்டு முற்று ஈற்றது (341, 348) என்பதூஉம் அவ்வீற்றயல் உகரம் கெட, அவ்வுகரம் ஊர்ந்த ளகர லகரங்கள் ஈற்று மகரத்தோடு மயங்காமையின் (117) மயங்குதற்கு உரிய ணகர னகர-மாய்த் திரிந்தன ஈண்டு நின்ற ணகர னகரம் (117, 227) என்பதூஉம் இவற்றுள் ஒன்றுடன் ஈரொற்றாய் மயங்கின் மகரம் குறுகும் (120) என்பதூஉம் இவற்றின் முன் குறுகுதல் செய்யுட் கண்ணது (120) என்பதூஉம் காணும், கூனும் என இயல்பாக நின்ற ணகர னகரங்கள் முன் இவ்வாறு வந்து மகரம் குறுகாது என்பதூஉம் பிறவும் மேல் வரும் சூத்திரங்கள் எல்லாவற்றையும் வேண்டிப் பருந்தின் வீழ்வாய் நின்ற இச்சூத்திரத்து உய்த்துணர்ந்து கொள்க. இஃது உய்த்துணர வைப்பு என்னும் உத்தி. (41)

ஆய்தக் குறுக்கம்

97. **லளவீற் றியைபினா மாய்த மஃகும்.**

எ-னின், ஆய்தக் குறுக்கம் வருமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: லகார ளகார ஈற்றுப் புணர்ச்சியினால் வரும்,

"குறில்வழி லளத்தவ் வணையி னாய்தம்
ஆகவும் பெறூஉம்" (நூ. 228)

என்ற ஆய்தம் இருமருங்கும் ஆய எழுத்தின் தொடர்பால் தன் அரை மாத்திரையில் குறுகும் எ-று.

உ-ம்: கஃறீது, முஃடீது என வரும்.

இது முடிவிடம் கூறல் என்னும் உத்தி. இவ்வாய்தம் குறுகாது எனக் காண்டல் விரோதம் கூறுவாரும்[94] உளர். (42)

[94]காண்டல் விரோதம் கூறுபவர் வைத்தியநாத தேசிகர் (இல. விள. 5).

### எழுத்துக்களின் உருவம்

{98} **தொல்லை வடிவின வெல்லா வெழுத்துமாண்**
**டெய்து மெகர வொகரமெய்* புள்ளி.**

எ-னின்[95] நிறுத்த முறையானே (57) உருவம் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: எல்லா எழுத்தும் பல வேறு வகைப்பட வரைந்து வழங்கும் பழைய வடிவினை உடையவாம். அவ்வடிவினவாய் வழங்குமிடத்துத் தனித்தும் உடம்பு ஊர்ந்தும் வரும் **எகர ஒகரங்களும்** தனிமெய்களும் இயல்பாய புள்ளியைப் பிற்காலத்து ஒழித்து வரைந்து, ஏகார ஓகாரங்களோடும் உயிர்மெய்களோடும் ஐயப்பட வழங்கும் வழக்கினை உடையவன்றித், துணியப்படும் தொல்லை வடிவினது உறுப்பாய புள்ளியைப் பெறும் எ-று.

வ-று: எ் எ; ஒ், ஒ; கெ், கெ; கொ், கொ; க் க என வரும். **பிறவும் அன்ன.** (43)

### எழுத்துக்களின் மாத்திரை

{99} **மூன்றுயி ரளபிரண் டாநெடி லொன்றே**
**குறிலோ டையௌக் குறுக்க மொற்றள**
**பரையொற் றிஉக் குறுக்க மாய்தங்**
**கால்குறண் மஃகா னாய்த மாத்திரை.**

எ-னின், நிறுத்த முறையானே (57) மாத்திரை ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: உயிரளபெடைக்கு மாத்திரை மூன்று ஆம். நெடிலுக்கு மாத்திரை இரண்டு ஆம்.[96] குறிலுக்கும் ஐகாரக் குறுக்கத்திற்கும் ஔகாரக் குறுக்கத்திற்கும் ஒற்றளபெடைக்கும் தனித்தனி மாத்திரை ஒன்று ஆம். ஒற்றிற்கும் குற்றியலிகரத்திற்கும் குற்றியலுகரத்திற்கும் ஆய்தத்திற்கும் தனித்தனி மாத்திரை அரை ஆம். மகரக் குறுக்கத்திற்கும் ஆய்தக் குறுக்கத்திற்கும் தனித்தனி மாத்திரை கால் ஆம் எ-று.

உயிர்மெய்க்கு அளவு கூறாது ஒழிந்தார் மேல் (89) உயிர் அளவாய் என்று உரைத்தலின். இஃது உரைத்தாம் என்னும் உத்தி.

---

[95] "மெகர மொகரமெய்" என்பது சங்கர நமச்சிவாயர் பாடம். இராமாநுச கவிராயர், "ஏகார மோகாரமெய்" என்று (நன். 98) மூலபாடத்தைத் திருத்திக்கொண்டார்.

[96] "ஆம் என்பதனை எல்லாவற்றோடும் கூட்டி மத்திம தீபமாகப் பொருள் உரைத்துக்கொள்க." என்னும் குணசாகரர் உரை (யா. கா. 7) இவண் ஒப்புநோக்கத் தக்கது.

உயிரளபெடை நான்கு மாத்திரைய **ஆதலும்** ஐகார ஒளகாரக் குறுக்கங்கள் ஒன்றரை மாத்திரைய **ஆதலும்** ஆரிடத்துள்ளும் அவை போல்வனவற்றுள்ளும் அருகி வந்து, செய்யுள் வழுவமைதியாய் முடிதலின் அவற்றை ஒழித்து, எல்லார்க்கும் ஒப்ப முடிந்து பயின்று வருவன மூன்று மாத்திரையும் ஒரு மாத்திரையுமே ஆகலின், 'மூன்றுயி ரளபு' என்றும், 'ஒன்றே குறிலோ டையௌக் குறுக்கம்' என்றும் கூறினார்.

**குற்றியலுகரம் புணர்மொழி இடைப்படின் குறுகிக், கால் மாத்திரை[97] பெறுதல் உரையிற் கோடல் என்பதனாற் கொள்க.** (44)

மாத்திரையின் அளவு

100. **இயல்பெழு மாந்த ரிமைநொடி மாத்திரை.**

எ-னின், எழுத்தொலி எழுச்சி பலவற்றையும் அளந்து கோடற்குக் கூறிய ஒரு மாத்திரை என்னும் காலசங்கையினை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: மாந்தருடைய, இயல்பாக எழும் இமைப்பொழுதும் நொடிப்பொழுதும்[98] ஒரு மாத்திரை என்னும் வரையறைப் பொழுதாம் எ-று.

'இமை' என்றது இமைத்தலை. 'நொடி' என்றது நொடித்தலை. இவை இரண்டும் ஆகுபெயராய்க் காலத்தை உணர்த்தி நின்றன. 'இயல்பெழும்' என்னும் பெயரெச்சம், 'இமைநொடி' என்னும் பெயர்களோடு முடிந்தது.

எழுத்தொலி முதலியவற்றை இயல்பு கெடுத்து, ஒருவன் வேண்டியவாறே எழுப்பினும் அவ்வாறு எழாநிற்கும். இமையும் நொடியும் இயல்பு கெடுத்து எழுப்ப வேண்டினும் அவ்வாறு எழாது, இயல்பாகவே எழாநிற்கும். ஆதலின், 'இயல்பெழும்'

---

[97] கால், அரை போன்ற மாத்திரையின் கூறுகளை,

"உன்னல் காலே ஊன்றல் அரையே
முறுக்கல் முக்கால் விடுத்தல் ஒன்றே"

என்னும் மேற்கோள் நூற்பாவால் குணசாகரர் (யா. கா. 4) விளக்குவார்.

[98] "கட்புலனாகிய இமைக்காலமும் செவிப்புலனாகிய நொடிக்காலமும் கருதி" இமையும் நொடியும் மாத்திரைக்கு அளவாகக் கூறப்பட்டன என்று மயிலைநாதரும் (நன். 99), "தன் குறிப்பின்றி நிகழ்தலின் இமை முன் கூறப்பட்டது." என்று இளம்பூரணரும் (தொல். நூன். 7) உள்ளத்தால் நினைத்து நிகழ்த்தப்படாமையால் நொடியிலும் இமை சிறந்தது என்று நச்சினார்க்கினியரும் (தொல். நூன். 7) சிறப்புரை கூறுவர்.

எனவும் மேலைச் சூத்திரத்து எழுத்தொலிகளை வேண்டியவாறே எழுப்பாது, இவ் அளவான் அளந்து எழுப்புக எனவும் கூறினார்.

பின்னது நிறுத்தல் என்னும் உத்தியான் இவ் அளவுகருவி பிற் கூறப்பட்டது. (45)

மாத்திரைக்குப் புறனடை

101. **ஆவியு மொற்று மளவிறந் திசைத்தலும்**
**மேவு மிசைவிளி பண்டமாற் றாதியின்.**

எ-னின், தவளைப்பாய்த்தாய் ஒன்று இடையிட்டு நின்ற மேலதற்கு *(99)* ஓர் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: முதல், சார்பு அனைத்தும் ஆய ஆவியும் ஒற்றும் மேற் கூறிய (99) அளவிறந்து மிக்கு ஒலித்தலையும் பொருந்தும் இசை, விளி, பண்டமாற்று முதலியவற்றின்கண் எ-று.

'ஆதி' என்றமையான் நாவல், குறிப்பிசை, முறையீடு, புலம்பலும் கொள்க.

இசையின் அளவிறந்து இசைக்குங்கால் ஆவி பன்னிரண்டு மாத்திரை ஈறாகவும் ஒற்று பதினொரு மாத்திரை ஈறாகவும் இசைக்கும்[99] என்றார் இசைநூலார். இது பிற நூல் முடிந்தது தான் உடன்படுதல் என்னும் உத்தி. ஏனையவற்றின் அளவிறந்து இசைக்குங்கால் உலகநடை பிறழாது இசைப்பதே வரையறை என்க.

நாவல் என்பது[100] நெற்போர் தெழிக்கும் பகட்டினங்களைத் துரப்பதோர் சொல்.

"காவ லுழவர் கடுங்களத்துப் போரேறி
நாவலோஒஒ வென்றிசைக்கு நாளோதை - மாவலவன்
கொல்யானை மேலிருந்து கூற்றிசைத்தாற் போலுமே
நல்யானைக் கோக்கிள்ளி நாடு" (முத்.*)

என்பதனால் அறிக.

"கஃஃஃ றென்னுங் கல்லத ரத்தம்" (நன். 100 மயிலை.)

---

[99] **உயிரும் ஒற்றும் இவ்வாறு நீண்டு ஒலிக்கும் எனக் கந்தருவ நூலுடையார் கூறுவதாக மயிலைநாதர் (நன். 100) குறிப்பிடுவார்.**

[100] **நாவல் என்னும் சொல்லுக்குப் போர்க்கு அழைத்தல் என்று மயிலைநாதரும் (நன். 100) உழவர் நெல்லரி தொழுவரை விளித்தல் என்று வைத்தியநாத தேசிகரும் (இல. விள. 25) பொருள் கூறுவர்.**

"சுஃஃஃ றென்னுந் தண்டோட்டுப் பெண்ணை" (தொல். செய். 11 பேர்.)

என்பன குறிப்பிசை. ஏனைய பொருள் தோன்றிக் கிடத்தலின் அளவிறந்து இசைத்தல் வந்தவழிக் காண்க. (46)

## முதனிலைப் பொதுவிதி

102. **பன்னீ ருயிருங் கசதந பமவய**
**ஞஙவீ ரைந்துயிர் மெய்யு மொழிமுதல்.**

எ-னின், நிறுத்த முறையானே (57) மொழிக்கு முதல் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: பன்னிரண்டு உயிரும் உயிர் ஊர்ந்த இப்பத்து மெய்யும் மொழிக்கு முதலாம் எ-று.

உ-ம்: அடை, ஆடை, இடை, ஈடு, உடை, ஊடல், எடு, ஏடு, ஐயம், ஒதி, ஓதி, ஔவியம் எனவும் களி, சவடி, தளிர், நலம், படை, மலை, வளம், யவனர், ஞமலி, அங்ஙனம் எனவும் வரும். பிறவும் அன்ன.

உயிர்போல் தனித்து முதலாம் தன்மைய அல்ல ஆதலின், 'உயிர் மெய்' என்றார். இஃது இன்னதல்லது இது என மொழிதல் என்னும் உத்தி. (47)

## முதனிலைச் சிறப்புவிதி

103. **உஊ ஒஓ வலவொடு வம்முதல்.**

எ-னின், பொதுவிதியுள் சிறப்புவிதி உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: இந்நான்கும் அல்லாத எட்டு உயிரோடும் வகரம் மொழிக்கு முதலாம் எ-று.

உ-ம்: வளி, வாளி, விளி, வீளி, வெளி, வேளை, வைகல், வௌவு என வரும். (48)

104. **அஆ உஊ ஓஔ யம்முதல்.**

எ-னின், இதுவும் அது.

இ-ள்: இவ் ஆறு உயிரோடும் யகரம் மொழிக்கு முதலாம் எ-று.

உ-ம்: யவனர், யாணை, யுகம், யூகி, யோகம், யௌவனம் என வரும்.

மேலை, "ஒடு"வை (நூ. 103) வருவித்துக்கொள்க. (49)

**{105} அஆஎ ஒவ்வொ டாகு ஞம்முதல்.**

எ-னின், இதுவும் அது.

இ-ள்: **இந்நான்கு** உயிரோடும் ஞகரம் மொழிக்கு **முதலாம்** எ-று.

உ-ம்: ஞமலி, ஞாலம், ஞெகிழி, ஞொள்கிற்று என வரும். (50)

**{106} சுட்டியா வெகர வினாவழி யவ்வை**
**ஒட்டி ஙவ்வு முதலா கும்மே.**

எ-னின், இதுவும் அது.

இ-ள்: மூன்று சுட்டும் யா வினாவும் எகர வினாவும் ஆய இடைச்சொற்களின் பின் அகரத்தை ஒட்டி, ஙவ்வும் மொழிக்கு[101] முதலாம் எ-று.

உ-ம்: அங்ஙனம், இங்ஙனம், உங்ஙனம், யாங்ஙனம், எங்ஙனம் என வரும்.

இவற்றை அங்கு, எங்கு என்றாற்போல ஒருமொழிகள் என்றால் என்னை எனின் அஞ்ஞான்று, **எஞ்ஞான்று** என்பனபோலப் பிளவுபட்டு, இடையே மெல்லொற்று மிக்கு வருதலின் தொடர்மொழிகளேயாம் என்க.

ஙனம் என்பது இடத்தினையும் தன்மையினையும் உணர்த்தும் பல பொருள் ஒரு சொல்லாய் வரினும் தனித்து வரும் தன்மையதன்றி, முடவன் கோல் ஊன்றி வந்தாற்போலச் சுட்டு வினாவாகிய இடைச்சொற்களை முன்னிட்டு வருதலான், 'வழி' என்றும் ஏனைய மெய்கள்போல முதலாகாமையின் அவ்வோடு என்னாது, 'ஒட்டி' என்றும் ஒருவாற்றான் முதலாதலின் இழிவுசிறப்பாக, 'ஙவ்வும்' என்றும் கூறினார். இங்ஙனம் கூறலான் ஙகரம் மொழிக்கு முதலாகாது என்பார்க்கு[102] உடன்படலும் மறுத்தலுமாய்ப் பிறர்தம் மதம் மேற்கொண்டு களைவே என்னும் மதம்படக் கூறினார் என்று உணர்க.

---

**[101] இவ்வாறு அகரத்தைச் சார்ந்து ஙகரம் மொழிக்கு முதலாகும் என்பது, "பயனில் கூற்று" என்று வைத்தியநாத தேசிகர் (இல. விள. 27) பவணந்தி முனிவரை மறுப்பார்.**

**[102] தொல்காப்பியர் (மொழி. 28-32), புத்தமித்திரனார் (வீர. 7), குணவீர பண்டிதர் (நேமி. 7) ஆகியோர் ஙகரம் மொழிக்கு முதலாகாது என்பர்.**

இனி முதலாம் என்ற (102) பத்து உயிர்மெய்யுள் வகரம் முதலிய நான்கினையும் விதந்து கூறவே ஒழிந்த ஆறு மெய்யும் பன்னிரண்டு உயிரோடும் முதலாம் என்பது அருத்தாபத்தியால்[103] பெற்றாம்.

இனி,

**"சகரக் கிளவியு மவற்றோ ரற்றே**
**அஐஔ வெனு மூன்றலங் கடையே"** (தொல். மொழி. 29)

**என்பது முதலாக இன்னோரன்ன சில எழுத்துக்களை மொழிக்கு முதலாகா என ஆசிரியர் தொல்காப்பியர் விலக்கினாராலோ எனின் இவ்வடமொழிகளும் திசைச்சொற்களும் அக்காலத்து இவ்வாறு தமிழின்கண் பயின்று வாராமைபற்றி என்க.** (51)

இறுதிநிலை

107. **ஆவி ஞணநம னயரல வழளமெய்**
**சாயு முகர நாலாறு மீறே.**

எ-னின், நிறுத்த முறையானே (57) மொழிக்கு ஈறு ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: தனித்தும் ஒற்றோடும் வரும் ஆவி முதலாக இங்ஙனம் கூறிய இருபத்துநான்கு எழுத்தும் மொழிக்கு ஈறாம் எ-று.

உ-ம்: ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ எனவும் சுட்டும் வினாவும் உவமவுருபு அடியும் ஆய ஓர் எழுத்து ஒரு மொழி ஆம் இடைச்சொல்லாகிய அ, இ, உ, எ, ஒ எனவும் விள, பலா, கரி, குரீஇ, கடு, மரூஉ, சே, தை, கோ எனவும் உரிஞ், மண், பொருந், மரம், பொன், வேய், வேர் வேல், தெவ், வீழ், வாள், அஃகு எனவும் வரும். காட்டாது ஒழிந்தன வரும் சூத்திரத்தால் காண்க.

குற்றுகரமும் உயிராய் அடங்குமேனும்[104] புணர்ச்சி வேறுபாடு தோன்ற வேறு எடுத்து ஓதினார் என்க. (52)

---

**[103]காட்சி, கருதல், உரை, இன்மை, பொருள், ஒப்பு என்னும் அறுவகை அளவைகளுள் (சிவ. சுப. அள. 1) அருத்தாபத்தி ஒன்று. இது தமிழில் பொருள் என்றும் பொருட்பேறு என்றும் சொல்லப்படும். இப்பொருள் அளவையை மேல் வரும் நூற்பாக்களின் (109, 121, 132, 167, 171, 192, 196, 219, 316) உரைகளிலும் இவர் குறிப்பிடுவார்.**

**தொல்காப்பியம் கூறும், "இனஞ் செப்பல்" (கிளவி. 61) என்பதும் இதுவே என்பர். இதனை, "அருத்தாபத்தி என்னும் உத்தி" என்று இராமாநுச கவிராயர் (நன். 61) கூறுவார்.**

**[104]குற்றியலுகரம் உயிராய் அடங்கும் என்பது சங்கர நமச்சிவாயர் உள்ளிட்ட உரையாசிரியர் பலர்க்கும் (இளம்பூரணர், நச்சினார்க்கினியர் தொல். நூன். 2; மயிலைநாதர் நன். 106; வைத்தியநாத தேசிகர் இல. விள. 28) ஒப்ப முடிந்த கருத்து. இதற்கு**

## சில எழுத்துக்களுக்குச் சிறப்புவிதி

108. **குற்றுயி ரளபி னீறா மெகர
மெய்யொ டேலா தொந்நவ்வொ டாமௌக்
ககர வகரமோ டாகு* மென்ப.**

எ-னின்[105] குற்றுயிர்க்கு எய்தியதன்மேல் சிறப்புவிதியும் எகரத்திற்கு எய்தியது ஒரு மருங்கு விலக்கலும் ஒகரத்திற்கும் ஔகாரத்திற்கும் எய்தியவற்றுள் சிறப்புவிதியும் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: குற்றுயிர்[106] அளபெடையின்கண் வரிவடிவின் அறிகுறியாய்த் தனித்து ஈறாம்; எகரம் மெய்யோடு ஈறாகாது; ஒகரம் நகரம் ஒன்றுடன் ஈறாம்; ஔகாரம் ககர வகரங்கள் இரண்டுடனும் ஈறாம் என்று சொல்லுவர் புலவர் எ-று.

உ-ம்: "ஆஅ வளிய வலவன்" (யா. வி. 41) எனவும் நொ எனவும் கௌ, வௌ எனவும் வரும்.

நெடில் அளபெடுப்புழி[107] வரிவடிவில் அறிகுறியாய் வரும் குற்றுயிர் நெடிலொடு தொடர்ந்து உடம்படுமெய்யுடன் ஈறாம் தன்மையதன்றித் தனித்து நிற்றலின், 'குற்றுயி ரளபி னீறாம்' என்றார்.

தானே ஈறாதலன்றிக் குற்றுயிர் அளபினும் ஈறாம் என உம்மை கொடாது ஒழிந்தார் உயிர் கழிந்த உடம்பைப், "படுமகன் கிடக்கை காணூஉ" (புறம். 278:8) என்றாற்போல. அறிகுறி மாத்திரையாய் நின்றதனை இங்ஙனம் குற்றுயிர் என்றதன்றி, அஃது ஓர் எழுத்து அன்று ஆகலின் எகர ஒகர ஔகாரங்களை விதந்து ஓதவே ஏனை உயிர்கள் தமக்கு ஏற்ற மெய்களோடு ஈறாம் என்பது பெற்றாம்.

முதலும் சார்புமாய் வகுத்து விரித்துக்கொண்ட எல்லா எழுத்தும் உயிரும் மெய்யும் ஆய்தமுமாய் அடங்கலின் முதலும் ஈறும் ஆகாத ஆய்தத்தை ஒழித்து, ஒழிந்த உயிரும்

---

**மாறாகக் குற்றுகரம் உயிருள் அடங்காது என்று சிவஞான முனிவர் கூறுவது (இல. சூறா. பக். 98) ஆராயத் தக்கது.**

[105]"வகரமொ டாகு" என்பது சங்கர நமச்சிவாயர் பாடம்.

[106]"குற்றுயிர் அளபெடையின்கண் ஒலிவடிவின் ஈறாம்." என்பது ஆறுமுக நாவலர் பாடம்.

[107]இப்பகுதிக்கு ஆறுமுக நாவலர் பாடம் வேறு. சுவடியிலும் சந்திரசேகர கவிராஜ பண்டிதர் (1855), தெய்வசிகாமணி முதலியார் (1889), சாமிநாதையர் (1925) ஆகியோர் பதிப்புகளிலும் உள்ள பாடமே ஈண்டுக் கொள்ளப்பட்டுள்ளது. இந்நூற்பாவுக்குத் தண்டபாணி தேசிகர் கொடுத்துள்ள அடிக்குறிப்பு தெளிவாக அமையவில்லை.

மெய்யும் ஆய இரண்டினையும் உயிர்முதல், மெய்ம்முதல், உயிரீறு, மெய்யீறு என வகுத்துக்கொண்டார் மேல் வரும் புணர்ச்சிவிதி அடங்குதற்பொருட்டு எனக் கொள்க. (53)

## எழுத்துக்களின் முதலும் ஈறும்

109. **நின்ற நெறியே யுயிர்மெய் முதலீறே.**

*எ-னின், எழுத்தினது முதலும் ஈறும் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.*

*இ-ள்: உயிர்மெய்யினது முதல் யாது; அதன் ஈறு யாது எனின் ஒற்று முன்னும் உயிர் பின்னுமாய் ஒலித்து நின்ற நெறியே மெய் அதன் முதலாம்; உயிர் அதன் ஈறாம் எ-று.*

எனவே உயிரும் ஒற்றும் ஆய்தம் முதலிய ஒன்பது சார்பெழுத்துக்களும் ஓர் எழுத்து ஆகலின் அவற்றிற்கு முதலும் ஈறும் அவையேயாம் என்பது அருத்தாபத்தியால் கூறினார். இஃது எஞ்சிய சொல்லின் எய்தக் கூறல் என்னும் உத்தி. இத்தொடக்கத்தன அல்லன சொல்லின் முடிவின் அப்பொருள் முடித்தல் என்னும் உத்தி.

முன்னர் மொழிக்கு முதல், ஈறு என்றவற்றுள்ளும் பின்னர் இடைநிலை, போலி, பதம், புணர்பு என்பவற்றுள்ளும் உயிர்மெய்யைப் பிரித்துத், தனிமெய்யும் தனியுயிரும் போல வைத்து இலக்கணம் கூறலின் மொழிக்கு முதலும் ஈறும் கூறுதலன்றி, எழுத்திற்கு முதலும் ஈறும் கூறினார் என்று உணர்க. இச்சூத்திரம் சிங்கநோக்கம். அற்றன்றி ஆற்றொழுக்காய் முன் நின்ற மொழி முதல், ஈறு உரைக்கும் சூத்திரங்களையே (102-108) தொடர்ந்து வந்தது என்பாரும்[108] உளர். பின், "நம்முன் கவ்வாம்" (நூ. 111) என்றும், "இயல்பினும் விதியினு நின்ற வுயிர்முன் கசதப மிகும்" (நூ. 165) என்றும் உயிர்மெய்யின் உயிரையும் மெய்யையும் வேறு பிரித்து ஓதுவது இலக்கணம் அன்றாய் முடியும் ஆதலின் அது பொருந்தாது என்க.

எண்ணதிகாரத்துள் (58-61) உயிர்மெய்யை ஓர் எழுத்தாக (60) எண்ணினார் ஈண்டு இரண்டாக வைத்து இலக்கணம் கூறுவது என்னை எனின் அப்பொடு பெய்த உப்பே போல[109] உயிரொடு புணர்த்திய மெய் தன் அளவு தோன்றாது ஒன்றாய் நிற்றலின் ஒன்றுமாய், ஒற்று முன்னும் உயிர் பின்னுமாய் ஒலித்து நின்ற நெறியான் இரண்டுமாய் நிற்றலின் என்று உணர்க. இவ்வாற்றான் உயிர்மெய் என்னும் சொல் மாத்திரை

---

**[108] மயிலைநாதர் இந்நூற்பாவின் (நன். 108) உரை இறுதியில், இக்கருத்துத் தோன்ற, "ஈறு முற்றும்." என்று கூறுவார்.**

**[109] இதனை நச்சினார்க்கினியர் உரையோடு (தொல். நூன். 18) ஒப்பிடுக.**

வகையான் உம்மைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகையாகவும்[110] ஒலி வகையான் உம்மைத்தொகையாகவும் கொள்ளப்படும். (54)

இடைநிலை மயக்கம்

{110} **கசதப வொழித்த வீரேழன் கூட்டம்**
**மெய்ம்மயக் குடனிலை ரழவொழித் தீரெட்**
**டாகுமிவ் விருபான் மயக்கு மொழியிடை**
**மேவு முயிர்மெய் மயக்கள வின்றே.**

*எ-னின், நிறுத்த முறையானே (57) மொழிக்கு இடைநிலை ஆமாறு உணர்த்துங்கால் உயிருடன் உயிர் மயங்கலும் மெய்யுடன் மெய் மயங்கலும் இவ்விரண்டும் மாறி மயங்கலும் என மூன்றாக வகுக்கப்படும். இவற்றுள் உயிருடன் உயிர் மயங்கும் தன்மை இன்மையின் அதனை ஒழித்து, ஏனை இரண்டினையும் உணர்த்துதல் நுதலிற்று.*

*இ-ள்: மெய் பதினெட்டனுள் க, ச, த, ப என்னும் நான்கையும் ஒழித்த பதினான்கு மெய்யும் பிற மெய்களோடு கூடும் கூட்டம் வேற்றுநிலை மெய்ம்மயக்கமாம்; ரகார, ழகாரம் என்னும் இரண்டினையும் ஒழித்து, ஒழிந்த பதினாறு மெய்யும் தம்மொடு கூடும் கூட்டம் உடனிலை மெய்ம்மயக்கமாம். இவ்விரண்டு பகுதி மயக்கமும் மொழிக்கு இடையே வரும். இவ்வாறு மெய்யுடன் மெய் மயங்குதலன்றி உயிருடன் மெய்யும் மெய்யுடன் உயிரும் மாறி, உயிரும் மெய்யும் மயங்கும் மயக்கத்திற்கு வரையறை இன்று; வேண்டியவாறே மயங்கும் எ-று.*

*கூட்டம் எனினும் மயக்கம் எனினும் ஒக்கும். 'உடனிலை' என்பதனால் பிற மெய் என்பது பெற்றாம். 'மொழி' என்றது ஒருமொழி, தொடர்மொழி என்னும் இரண்டினையும். உயிரும் மெய்யும் மயங்குதற்கு இடம் விதந்து கூறாது, பொதுப்படக் கூறினார் மொழியினும்* ***உயிர்மெய் என்னும்*** *ஓர் எழுத்தினும் வருதலின்.*

*இச்சூத்திரத்தான் மெய்யுடன் மெய் மயங்குங்கால் க, ச, த, ப என்னும் நான்கும் தம்மொடு தாமே மயங்கும் எனவும் ர, ழ என்னும் இரண்டும் தம்மொடு பிறவே மயங்கும் எனவும் ஒழிந்த பன்னிரண்டு மெய்யும் தம்மொடு தாமும் பிறவும் மயங்கும் எனவும் பெற்றாம்.*

*உயிரும் மெய்யும் மயங்குதற்கு உதாரணம்: அல், வில் எனவும் கா எனவும் மொழிக்-கண் மயங்கின; க என எழுத்தின்கண் மயங்கின. மெய்யுடன் மெய் மயங்குதற்கு உதாரணம் மேல் வரும் சிறப்புச் சூத்திரங்களில் (111-120) காண்க.*

---

[110] **இதனை இளம்பூரணர் உரையோடு (தொல். நூன். 17) ஒப்பிடுக.**

இவ் இடைநிலையை ஒருமொழி, தொடர்மொழி **என்னும்** இரண்டினும் கொள்ளாது ஒருமொழிக்கே எனக் கொள்வாரும்[111] உளர். எவ்விடத்து வரினும் இரண்டு எழுத்து இணங்கிப் பொருந்தும் பொருத்துவாயை இடைநிலை என்று ஓதலானும் இணங்காதன வரின் விகாரப்படுதலானும் அது நூற்கருத்து அன்று என்க.

இனி, 'உயிர்மெய் மயக்கள **வின்று'** என்பதற்கு உயிர்மெய் முன் உயிர்மெய் மயங்குதல் வரையறை இன்று எனப் பொருள் கூறுவாரும்[112] உளர். இங்ஙனம் உயிர்மெய்யை இரண்டு எழுத்தாகப் பிரித்து மயக்கவிதி கூறுவார் அதனையே ஒன்றாக வைத்து மயக்கவிதி கூறார் ஆதலானும் கூறினும் இடைநிலை மயக்கம் முழுவதும் இச்சூத்திரத்து அடங்காமையானும் அது பொருந்தாது என்க. (55)

வேற்றுநிலை மெய்ம்மயக்கம்

111. **ஙம்முன் கவ்வாம் வம்முன் யவ்வே.**

எ-னின், வேற்றுநிலை மெய்ம்மயக்கத்துள் விதந்து சிறப்புவிதி உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: ஙகர முன்னர்க் ககரமும் வகர முன்னர் யகரமும் மயங்கும் எ-று.

உ-ம்: கங்கன், தெவ் யாது என வரும். (56)

112. **ஞநமுன் றம்மினம் யகரமொ டாகும்.**

எ-னின், இதுவும் அது.

இ-ள்: இவ்விரண்டு மெய் முன்னரும் தமக்கு இனமாகிய சகர தகரங்களும் யகரமும் மயங்கும் எ-று.

உ-ம்: கஞ்சன், உரிஞ் யாது; கந்தன், பொருந் யாது என வரும். (57)

113. **டறமுன் கசப மெய்யுடன் மயங்கும்.**

எ-னின், இதுவும் அது.

---

[111] **நச்சினார்க்கினியர் (தொல். நூன். 24, 27) இடைநிலை மயக்கத்தை ஒரு மொழிக்கே எனக் கொள்வார். "உயிர்மெய்ம்மயக்கமும் உயிர்மயக்கமும் தொடர்மொழிக்கண் அன்றி" என்ற வைத்தியநாத தேசிகரின் உரை வாசகமும் (இல. விள. 31) இக்கருத்தைப் புலப்படுத்துகிறது.**

[112] **மயிலைநாதரும் (நன். 109) வைத்தியநாத தேசிகரும் (இல. விள. 31) இவ்வாறு பொருள் கூறுவர்.**

இ-ள்: இவ்விரண்டு மெய் முன்னரும் க, ச, ப என்னும் மூன்று மெய்யும் இணங்கி மயங்கும் எ-று.

உ-ம்: கட்கம், கட்சி, நுட்பம்; கற்க, கற்சிறார், கற்ப என வரும். (58)

114. **ணனமுன் னினங்கச ஞபமய வவ்வரும்.**

எ-னின், இதுவும் அது.

இ-ள்: இவ்விரண்டு மெய் முன்னரும் தமக்கு இனமாகிய டறக்களும் க, ச, ஞ, ப, ம, ய, வ என்னும் ஏழு மெய்யும் மயங்கும் எ-று.

உ-ம்: விண்டு, வெண்கலம், வெண்சோறு, வெண்ஞமலி, வெண்பல், வெண்மலர், மண் யாது, மண் வலிது எனவும் புன்றலை, புன்கண், புன்செய், புன்ஞமலி, புன்பயிர், புன்மலர், பொன் யாது, பொன் வலிது எனவும் வரும். (59)

115. **மம்முன் பயவ மயங்கு மென்ப.**

எ-னின், இதுவும் அது.

இ-ள்: மகரமெய் முன்னர்ப் பகர யகர வகரங்கள் மயங்கும் என்று சொல்லுவர் புலவர் எ-று.

உ-ம்: கம்பன், கலம் யாது, கலம் வலிது என வரும். (60)

116. **யரழ முன்னர் மொழிமுதன் மெய்வரும்.**

எ-னின், இதுவும் அது.

இ-ள்: இம்மூன்று மெய் முன்னரும் மொழிமுதற்கு விதந்துகொண்ட பத்து மெய்யும் (102) மயங்கும் எ-று.

உ-ம்: வேய், வேர், வீழ்: கடிது, சிறிது, தீது, பெரிது, நீண்டது, மாண்டது, ஞான்றது, யாது, வலிது எனவும் வேய்ங்குழல், ஆர்ங்கோடு, பாழ்ங்கிணறு எனவும் வரும்.

சுருங்கச் சொல்லல் என்னும் வனப்பு வகையான், 'மொழிமுதன் மெய்' எனக் கூறலின் யகரத்தின் முன் யகரம் மயங்கும் உடனிலை ஈண்டுக் கொள்ளாது ஒழிக. (61)

117. **லளமுன் கசப வயவொன் றும்மே.**

எ-னின், இதுவும் அது.

இ-ள்: இவ்விரண்டு மெய் முன்னரும் க, ச, ப, வ, ய என்னும் ஐந்து மெய்யும் மயங்கும் எ-று.

உ-ம்: வேல், வாள்: கடிது, சிறிது, பெரிது, வலிது, யாது என வரும். (62)

உடனிலை மெய்ம்மயக்கம்

118. **ரழவல்லன தம்முற் றாமுட னிலையும்.**

எ-னின், உடனிலை மெய்ம்மயக்கத்தின் சிறப்புவிதி உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: ரகார, ழகாரம் அல்லனவாகிய வேற்றுநிலை மெய்ம்மயக்கத்துள் கூறிய (111-117) பன்னிரண்டு மெய்யும்[113] உடனிலைக்கே உரிய க, ச, த, ப நான்கும் (110) தம்முன் தாம் உடன் நின்று மயங்கும் எ-று.

உ-ம்: அங்ஙனம், அவ்வை, அஞ்ஞானம், அந்நீர், அட்டு, அற்றம், அண்ணம், அன்னை, அம்மை, அய்யம், அல்லி, அள்ளல் எனவும் அக்கு, அச்சு, அத்து, அப்பு எனவும் வரும். (63)

119. **யரழவொற் றின்முன் கசதப ஙஞநம**
**ஈரொற் றாம்ரழத் தனிக்குறி லணையா.**

எ-னின், தனிமெய்யுடன் தனிமெய்யாயும் மயங்குவன இனைய என்பதூஉம் மொழிக்கு உறுப்பாக மயங்காதன இனைய என்பதூஉம் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: ய, ர, ழ என்னும் மூன்று ஒற்றும் இவற்றின் முன் மயங்கும் என விதித்த (116) பத்து ஒற்றுள் இங்ஙனம் கூறிய எட்டு ஒற்றும் தனிமெய்யும் உயிர் ஊர்ந்த மெய்யுமாய் மயங்குவனவன்றி ஈரொற்றாயும் மயங்குவனவாம். ரகார ழகார ஒற்றும் தனிக்குறிலும் மயங்கும் தன்மைய ஆயினும் மொழிக்கு உறுப்பாக வருவதும் நிற்பதுமாய் மயங்கா எ-று.

ஈரொற்றுமாம் என்னும் உம்மையும் மொழிக்கு உறுப்பாக என்னும் சொற்களும் எஞ்சி நின்றன.

உ-ம்: வேய்க்குறை, வேர்க்குறை, வீழ்க்குறை; சிறை, தலை, புறம் எனவும் வேய்ங்குழல், ஆர்ங்கோடு, பாழ்ங்கிணறு எனவும் காய்ந்தனம், நேர்ந்தனம், வாழ்ந்தனம் எனவும் வரும். ஏனைய வந்துழிக் காண்க.

---

[113] ங, வ, ஞ, ந, ட, ற, ண, ன, ம, ய, ல, ள என்னும் பன்னிரண்டு மெய்கள்.

'அணையா' என்ற ஆகாதனவற்றிற்கு உதாரணம் காட்டல் ஆகாமை உணர்க. (64)

ஈரொற்று உடன் நிற்குமாறு

120. **ளளமெய் திரிந்த னணமுன் மகாரம்**
**நைந்தீ ரொற்றாஞ் செய்யு ளுள்ளே.**

எ-னின், செய்யுட்கு உரியவாய் ஈரொற்று உடன் நிற்பன இனைய என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: லகார ளகார ஒற்றுத் திரிந்த னகார ணகாரங்கள் முன் வரும் மகரவொற்று முன்னர்க் (96) கூறியவாறே குறுகி, அவற்றுடன் ஈரொற்று உடனிலை ஆம் செய்யுளகத்து எ-று.

உ-ம்: "திசையறி மீகானும் போன்ம்" (பரி. 10:55*) எனவும், "மயிலியன் மாதர் மருண்ம்" (நன். 119 மயிலை.) எனவும் வரும்.

'மகாரம் நைந்து' என அனுவதித்தார்[114] மகரம் குறுகுதற்குத் தொடரும் னகர ணகரங்கள் லகர ளகரம் திரிந்தன என்பதூஉம் அக்குறுக்கம் செய்யுட் கண்ணது என்பதூஉம் உய்த்துணர்தற்கு என்க. (65)

புறனடை

121. **தம்பெயர் மொழியின் முதலு மயக்கமும்**
**இம்முறை மாறியு மியலு மென்ப.**

எ-னின், மொழி முதல் ஈறு இடைநிலைகட்கு ஆவதோர் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: எழுத்துக்கள் தம் பெயர்களை மொழிந்து, நிலைமொழி வருமொழியாகப் புணர்க்குமிடத்து எல்லா மொழிமுதற்கும் இங்ஙனம் விதித்தனவும் விலக்கியனவும் ஆகிய எல்லா எழுத்தும் முதலாம்; மயக்கத்திற்கு இங்ஙனம் விதித்தனவும் விலக்கியனவும் ஆகிய எல்லா எழுத்தும் மயங்கும் என்று சொல்லுவர் புலவர் எ-று.

இங்ஙனம் எல்லா எழுத்தும் தனித்தனி அதற்கு அதுவே முதலாக வரும் எனவே ஈற்றிற்கு விதித்தனவும் விலக்கியனவும் ஆகிய எல்லா எழுத்தும் தனித்தனி அதற்கு

---

[114] அனுவாதம் என்பது, "யாதானும் ஒரு நிமித்தத்தால் ஒன்றனை முன் கூறி வேறு ஒரு நிமித்தத்தால் அதனையே பின்னும் கூறல்" என்று சாமிநாத தேசிகர் (இல. கொ. 7 உரை) விளக்குவார்.

அதுவே ஈறாக வரும் எனச் சொல்லாதே அருத்தாபத்தியான் அமைதலின் ஈறும் என மிகைபடக் கூறாது ஒழிந்தார்.

உ-ம்:

"அவற்றுள்,
லளஃகான் முன்னர் யவவுந் தோன்றும்" (தொல். நூன். 24)

என்புழி லகரம் முதலாகியும் கூனிறுதி ளகரவொற்றோடு மயங்கியும் நின்றது. கெப் பெரிது என்புழி எகரம் மெய்யோடு ஈறாய் நின்றது. பிறவும் வரையறையின்றி வருதல் காண்க.

ஆய்தத்திற்குப் பிறப்பதிகாரத்துள் (74-97) வருவாய் கூறியவழி (90, 97) மயக்கவிதி அமைந்து கிடந்தமையானும் தன் பெயர் மொழிய வாராமையானும் கூறாது ஒழிந்தார். (66)

## இறுதிப்போலி

122. **மகர விறுதி யஃறிணைப் பெயரின்
னகரமோ டுறழா நடப்பன வுளவே.**

எ-னின், நிறுத்த முறையானே (57) போலி ஆமாறு உணர்த்துவான் தொடங்கி, மொழி இறுதிப்போலி உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: பால் பகா அஃறிணைப் பெயர்களினிடத்து (281) இறுதிமகரம், னகரத்தோடு ஒத்து நடப்பன உளவாம் எ-று.

'மகர விறுதி' என்றதனால் பால் பகா அஃறிணைப்பெயர் என்பது பெற்றாம். மகரம் னகரத்தோடு ஒத்தலாவது பெயர் இறுதிக்கண் மகரம் நின்ற நிலைக்களத்து னகரம் நிற்பினும் வேற்றுமையின்றி ஒத்தல்.

உ-ம்:

"அகனமர்ந்து செய்யா ளுறையு முகனமர்ந்து
நல்விருந் தோம்புவா னில்" (குறள். 84)

இதனுள் அகம்- அகன், முகம்- முகன் எனவும் தலம்- தலன், நிலம்- நிலன், கலம்- கலன், நலம்- நலன், வலம்- வலன் எனவும் வரும். பிறவும் அன்ன.

'உறழா நடப்பன வுள' என்னும் சொல்லாற்றலான் உறழாதன பெரும்பால என்க. அவை வட்டம், குட்டம், மாடம், கூடம் முதலாயின.

பால் பகா அஃறிணைப் பெயர்களிடத்து இயல்பாய மகர இறுதிநிலையின் னகரம் போலியாய் வரும் எனவே அகன், முகன் முதலிய சொற்களைப் பால் பகுத்த ஆடூஉ அறிசொல் எனக் கொள்ளற்க என்பதூஉம் எகின், பயின், குயின், வயின் முதலிய னகரவீற்றுப் பெயர்க்கு இவ்வையப்பாடு இல்லை என்பதூஉம் பெற்றாம்.

இனி இவ்விறுதிப்போலியை முற் கூறிய அதனால் சுரும்பு- சுரும்பர், அரும்பு- அரும்பர், சாம்பல்- சாம்பர், பந்தல்- பந்தர் முதலியனவும் கொள்க. (67)

## முதற்போலியும் இடைப்போலியும்

123. **அஐ முதலிடை யொக்குஞ் சஞயமுன்.**

எ-னின், மொழி முதற்போலியும் மொழி இடைப்போலியும் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: மொழி முதலினும் இடையினும் அகர ஐகாரங்கள் வேற்றுமையின்றி ஒத்து நடப்பனவாம் சகர ஞகர யகரங்கட்கு முன்னர் வரும் ஆயின் எ-று.

ஈண்டு, 'முன்' என்றது காலமுன் எனக் கொள்க.

உ-ம்: பசல்- பைசல், மஞ்சு- மைஞ்சு, மயல்- மையல் எனவும் அமச்சு- அமைச்சு, இலஞ்சி- இலைஞ்சி, அரயர்- அரையர் எனவும் வரும். பிறவும் அன்ன. (68)

## இடைப்போலி

124. **ஐகான் யவ்வழி நவ்வொடு சில்வழி**
**ஞஃகா னுறழு மென்மரு முளரே.**

எ-னின், இதுவும் மொழி இடைப்போலி உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: மொழி இடைக்கண் சில இடத்து ஐகாரத்தின் பின்னும் யகரவொற்றின் பின்னும் இயல்பாய் வரும் நகரத்தோடு ஞகரம் உறழும் என்று சொல்லுவாரும் உளர் எ-று.

இப்போலி அருகி வருதலின், 'சில்வழி' என்றும் எல்லார்க்கும் ஒப்ப முடிந்தது அன்று ஆகலின், 'என்மரும்' என்றும் கூறினார்.

உ-ம்:

"செய்ஞ்ஞின்ற நீல மலர்கின்ற
தில்லைச்சிற் றம்பலவன்

மைஞ்ஞின்ற வொண்கண் மலைமகள்
கண்டு மகிழ்ந்துநிற்க
நெய்ஞ்ஞின் றெரியும் விளக்கொத்த
நீல மணிமிடற்றான்
கைஞ்ஞின்ற வாடல்கண்டாற் பின்னைக்
கண்கொண்டு காண்பதென்னே" (தே. கோயில் திருவிருத்தம் 5)

எனவும் ஐஞ்ஞூறு எனவும் வரும். இச்சூத்திரம் பிறன்கோட் கூறல் என்னும் உத்தி.

"மண்யாத்த கோட்ட மழகளிறு தோன்றுமே" (தொல். தொகை. 4 நச்.)

மண்ஞாத்த கோட்ட மழகளிறு தோன்றுமே

எனவும்,

"பொன்யாத்த தார்ப்புரவி பரிக்குமே" (தொல். தொகை. 4 நச்.)

பொன்ஞாத்த தார்ப்புரவி பரிக்குமே

எனவும் வருமொழி வினைக்கு முன்னர் யா நின்ற நிலைக்களத்து ஞா நிற்பினும் ஒக்கும் போலிக்கு ஆசிரியர் தொல்காப்பியர்,

"ணனவென் புள்ளிமுன் யாவும் ஞாவும்
வினையோ ரனைய வென்மனார் புலவர்" (தொல். தொகை. 4)

எனச் சூத்திரம் செய்தவாறு இவ்வாசிரியரும் சூத்திரம் செய்யாது ஒழிதல் இறந்தது விலக்கல் என்னும் உத்தி. பிறவும் அன்ன.

இம்மூன்று சூத்திரத்தானும் (122, 123, 124) கூறிய போலிகளை இடைநிலை மயக்கத்தின்பாற் படுத்துப் பொருள் கூறுவாரும்[115] உளர். இங்ஙனம் கூறிய எழுத்துக்கள் மொழிக்கு உறுப்பாகி ஒன்று நின்ற நிலைக்களத்து மற்றொன்று அதுபோல மொழி நிரப்ப நிற்பதன்றி ஒன்றோடு ஒன்று மயங்கி, இரண்டு எழுத்தும் உடன் நிற்பது இன்மையானும் முதல் ஈறு இடைநிலைகட்குப் புறனடையும் கூறிக் குறைவறுத்தமையானும், "உறழா நடப்பன" (நூ. 122) என்றும், "ஒக்கும்" (நூ. 123)

---

[115] **மயிலைநாதர் இந்நூற்பாவின் (நன். 123) உரை இறுதியில், இக்கருத்துத் தோன்ற, "இடைநிலை முற்றும்." என்று கூறுவார்.**

என்றும் 'உறழும்' என்றும் உவமவுருபு கொடுத்து இம்மூன்று சூத்திரத்தும் கூறுதலானும் அது பொருந்தாது என்க. (69)

சந்தியக்கரம்

{125} **அம்மு னிகரம் யகர மென்றிவை**
**எய்தி னையொத் திசைக்கு மவ்வோ**
**டுவ்வும் வவ்வு மௌவோ ரன்ன.**

எ-னின், வடநூலார் சந்தியக்கரம் என்பவற்றுள் ஐ, ஔ என்னும் நெட்டெழுத்துக்களின் வடிவு புலப்படுத்தல் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: அகரத்தின் முன்னர் இகரமும் யகரமும் தம்முள் ஒத்து எய்தின் ஐ என்னும் நெட்டெழுத்து ஒலிக்கும்; அகரத்தோடு உகரமும் வகரமும் தம்முள் ஒத்து ஒரு தன்மையவாக எய்தின் ஔ என்னும் நெட்டெழுத்து ஒலிக்கும் எ-று.

மொழிந்த பொருளோடு ஒன்ற அவ்வயின் மொழியாததனையும் முட்டின்று முடித்தல் என்னும் உத்தியான்[116] அகரக்கூறும் இகரக்கூறும் தம்முள் ஒத்து எகரம் ஒலிக்கும்; அகரக்கூறும் உகரக்கூறும் தம்முள் ஒத்து ஒகரம் ஒலிக்கும் எனக் கொள்க.

இனி இச்சூத்திரத்திற்கு இவ்வாறு பொருள் கொள்ளாது தமிழ்நூற் பயிற்சி ஒன்றுமே உடையார் எழுத்துப்போலி உணர்த்திற்று என்று பொருள் கொண்டு அஇ ஐ; அய் ஐ; கஇ கை; கய் கை; அஉ ஔ; அவ் ஔ; கஉ கௌ; கவ் கௌ என உதாரணம்[117] காட்டுவர். அவ்வாறு பொருள் கொண்டு உதாரணம் காட்டுமாற்றால் பெரும்பயன் இன்மையானும் வடநூலோடு மாறுபடும் ஆதலானும் அது பொருந்தாது என்க. (70)

எழுத்துச் சாரியைகள்

126. **மெய்க ளகரமு நெட்டுயிர் காரமும்**
**ஐஔக் கானு மிருமைக் குறிலிவ்**
**விரண்டொடு கரமுமாஞ் சாரியை பெறும்பிற.**

எ-னின், மேல் எழுத்திலக்கணம் கூறிய முகத்தாற் போந்த எழுத்தின் சாரியைகளைத் தொகுத்து இனம் அடைத்தல் நுதலிற்று.

---

[116] இப்பகுதியைத் தொல்காப்பியச் சூத்திர விருத்தியோடு (பக். 45) ஒப்பிடுக.

[117] இந்நூற்பா எழுத்துப்போலி உணர்த்திற்று என்று சங்கர நமச்சிவாயர் பொருள் கூறி, இவ்வுதாரணங்களைக் காட்டுவார். ஆகவே சிவஞான முனிவரின் இந்த மறுப்புரை சங்கர நமச்சிவாயரை மட்டுமே கருதியதாகக் கொள்வது சிறப்பு.

இ-ள்: மெய்கள் அகரச்சாரியையும் நெட்டுயிர்கள் காரச்சாரியையும் அவற்றுள் ஐகார ஔகாரங்கள் காரச்சாரியையுடனே கான்சாரியையும், உயிர்க்குறிலும் உயிர்-மெய்க் குறிலும் காரம், கான் என்னும் இவ்விரண்டுடனே கரச்சாரியையும் பெறும் எ-று.

மெய்களை முற் கூறினார் அவற்றிற்கு அகரச்சாரியை[118] இன்றியமையாமையின். மெய்கள் அவ்வும் என்னாது, 'அகரமும்' என்றார் அங்ஙனம் கரம் காரம் கான்கள் வரின் சாரியை அகரத்தினது சாரியை என்று கோடற்கு. 'ஆஞ் சாரியை' என்றார் காரம் முதலிய சாரியைகளை ஏற்றபெற்றி கோடற்கு.

உ-ம்: க, ங எனவும் ஆகாரம், ஐகாரம், ஔகாரம் எனவும் ஐகான், ஔகான் எனவும் அகாரம், அஃகான், அகரம்; மகாரம், மஃகான், மகரம் எனவும் வரும். பிறவும் அன்ன.

'பிற' என்றமையால் குறிலோடு கான் புணருங்கால் இடையே ஆய்தத் தோற்றமும் வழங்கும் பிற சாரியைகளும்[119] கொள்க. உயிர்மெய் நெடிலும் ஆய்தமும் கூறாது ஒழிந்தார் உயிர்மெய் நெடில் இங்ஙனம் கூறிய மூன்று சாரியையும் ஏலாமையானும் ஆய்தம் பிற வழி வாராமையின் மொழியிடைப் படுத்து, அம்மொழி இறுதிக்கண் பிற சாரியை தந்து உயிர்வருக்கத்து இறுதிக்கண்ணே வழங்குதலானும் என்க.

விகற்பத்தின் முடித்தல் என்னும் உத்தியான் மேல் விரிந்து முடிந்து கிடந்தனவற்றைப் புலப்பட வேண்டி ஈண்டுத் தொகுத்து முடித்தலான் இச்சூத்திரம் முடிந்தது முடித்தல் என்னும் உத்தி. (71)

## எழுத்தியலுக்குப் புறனடை

### 127. மொழியாய்த் தொடரினு முன்னனைத் தெழுத்தே.

எ-னின், இவ்வியலுக்கு ஆவதோர் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: இவ்வெழுத்துக்கள் பதம் ஆயினும் அப்பதம் தம்மோடும் உருபோடும்

---

[118]"ஒருவன் தனி மெய்களை நாவாற் கருத்துப் பொருளாகிய உருவாக இயக்கும் இயக்கமும் கையாற் காட்சிப் பொருளாகிய வடிவாக இயக்கும் இயக்கமும் அகரத்-தோடு பொருந்தி நடக்கும்." என்று நச்சினார்க்கினியர் (தொல். மொழி. 13) கூறுவது இவண் ஒப்புநோக்கத் தக்கது.

[119]மயிலைநாதர் (நன். 125) ஆன, ஏன என்பவற்றைப் பிற சாரியைகளாகக் காட்டுவார்.

புணரினும் அவற்றால் பிறழாது, முன்னர்க் கூறிய அப்பத்து[120] இலக்கணத்தையும் உடையவாம் எ-று.

எழுத்து சுண்ணத்தின்கண் அரிசனம் முதலிய போலாது மாலையின்கண் மலர்-போல் அவற்றில் நிற்றலின், 'முன்னனைத்து என்றார்.

'எழுத்து' என்பது சாதியொருமை[121] ஆதலின், 'அனைத்து' என்னும் ஒருமையோடு முடிந்தது.

முன் அனைத்து ஆதல் பதவியல் முதலிய நான்கு இயலுள்ளும் காண்க. (72)

எழுத்தியல் முற்றிற்று.

[120]எழுத்திலக்கணத்தின் பன்னிரு பகுதியில் (57) பதமும் புணர்பும் தவிர்ந்த எண் முதல் போலி ஈறான எழுத்தின் அகத்திலக்கணப் பகுதிகளாகிய பத்து.

[121]சாதியொருமையாவது, "ஒரு சொல் ஒருமை ஈறு தோன்ற நின்றும் தோன்றாது நின்றும் பின் ஒருமைப் பன்மை வினை ஈறாக மேல் வந்து முடிக்கும் சொற்களும் இன்றித் தானே பன்மைப் பொருள் உணர்த்துவது." என்று சுப்பிரமணிய தீக்கிதர் (நூ. 50) விளக்கி, ஈறு தோன்றிய சாதியொருமை, ஈறு தோன்றாத சாதியொருமை என இரண்டாகப் பிரிப்பார். சாமிநாத தேசிகர் (நூ. 130) இதனை வேறு வகையாகப் பாகுபாடு செய்வார்.

## இரண்டாவது

## பதவியல்

### பதமும் அதன் வகையும்

{128} **எழுத்தே தனித்துந் தொடர்ந்தும் பொருடரிற்**
**பதமா மதுபகாப் பதம்பகு பதமென**
**இருபா லாகி யியலு மென்ப.**

எ-னின், நிறுத்த முறையானே (57) பதத்தினது இலக்கணம் உணர்த்துவான் தொடங்கி, எழுத்தாற் பதம் ஆதலும் அஃது இத்துணைய என்பதூஉம் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: எழுத்துக்கள் தாமே ஒவ்வொன்று தனித்தும் இரண்டு முதலாகத் தொடர்ந்தும் பிற பொருளைத் தரும் ஆயின் அது பதம் ஆம்; அப்பதம் பகாப்பதம் எனவும் பகுபதம் எனவும் இரண்டு பகுதியவாகி நடக்கும் என்று சொல்லுவர் புலவர் எ-று.

எழுத்தான் ஆய பதம் அரிசனம் முதலியவற்றால் சமைத்த சுண்ணம் போலாது மலரால் சமைத்த மாலைபோல் நிற்றலின், 'எழுத்தே' என்றும் ஓர் எழுத்தேனும் பிற பொருள் தருதலின் பதம் ஆம் என்பார், 'தனித்து' என்றும் ஒன்று, இரண்டு, பல என்பன வடநூல் வழக்கு; ஒன்று அல்லன எல்லாம் பல என்பது தமிழ்நடை[122] ஆகலின் வடநூல் வழக்குப்பற்றி ஆசிரியர் தொல்காப்பியர்,

"ஓரெழுத் தொருமொழி யீரெழுத் தொருமொழி
இரண்டிறந் திசைக்குந் தொடர்மொழி யுளப்பட
மூன்றே மொழிநிலை தோன்றிய நெறியே" (தொல். மொழி. 12)

---

[122] குணசாகரர்,

"ஒன்றல் லவைபல தமிழ்நடை வடநூல்
இரண்டல் லவைபல வென்றிசி னோரே"

என்னும் மேற்கோள் நூற்பாவைக் காட்டி, "ஒன்று அல்லன எல்லாம் பல என்பது தமிழ்நடை." என்று (யா. கா. 26) விளக்குவார். "பலபெயர்" என அமையாதே, "இருபெயர்" என வேண்டியது என்னை? இரண்டையும் பல என்பவால் எனின் அற்று அன்று. இரண்டனையும் பன்மை என்று வேண்டான் இவ்வாசிரியன் என்பது." என்று இளம்பூரணரும் (தொல். எச்ச. 21), "வடமொழிக்கு இரண்டு அல்லாத எல்லாம் பல என்றும் தமிழுக்கு ஒன்று அல்லாத எல்லாம் பல என்றும் அறிக." என்று மயிலைநாதரும் (நன். 396), "ஓர் எழுத்து ஒரு மொழியும் தொடர்மொழியும் என்னாது ஈர் எழுத்து ஒரு மொழியும் ஓதினார் சில பல என்னும் தமிழ் வழக்கு நோக்கி." என்று நச்சினார்க்கினியரும் (தொல். மொழி. 12) கூறுவார்கள்.

எனக் கூறினாரேனும் கல், வில் என்றல் தொடக்கத்து ஈர் எழுத்து ஒரு மொழிகளும் ஒன்றோடு ஒன்று தொடர்ந்து நின்றே பிற பொருள் உணர்த்தலின் இவற்றைத் தொடர்ந்தன அல்ல எனக் கூறினார் அல்லர் என்பதற்குத் தொடர்-மொழி என வாளா கூறாது, "இரண்டிறந் திசைக்குந் தொடர்மொழி" (தொல். மொழி. 12) என அடை கொடுத்து ஓதியதே சான்று ஆகலால் தமிழ்நடைபற்றி,

"ஓரெழுத் தொருமொழி யீரெழுத் தொருமொழி
இரண்டிறந் திசைக்குந் தொடர்மொழி யுளப்பட
மூன்றே மொழிநிலை தோன்றிய நெறியே" (தொல். மொழி. 12)

என்றார்க்கு இரண்டு எழுத்துத் தொடர்ந்தன அல்ல எனின் அது மொழியும் அன்று என்பார் தனிநிலை ஒழிந்தனவற்றைத், 'தொடர்ந்து' என்றும் இறிஞி, மிறிஞி எனின் தொடருமேனும் தன்னை உணர்த்துமன்றிப் பிற பொருள் தாராமையின் பதம் ஆகாது என்பார், 'பொருடரின்' என்றும்,

"தன்னை யுணர்த்தி னெழுத்தாம் பிறபொருளைச்
சுட்டுதற் கண்ணேயாஞ் சொல்" (அவி.)

என்ப ஆகலின், 'பொருள்' என்றது பிற பொருள் என்பார் உணர்த்தின் என்னாது, 'தரின்' என்றும் அணு என்னும் ஒலி நுட்பத்தான் எழுத்து ஆனாற்போல் எழுத்து என்னும் ஒலி நுட்பத்தான் மொழி ஆம் என்பார், 'பதமாம்' என்றும் இப்பதவியலுக்கு மேற்கோள் ஆரியம் என்பார் மொழி என்னாது, 'பதம்' என்றும் கூறினார்.

இச்சூத்திரத்துள், 'தொடர்ந்தும்' என்றது பிறர் நூல் குற்றம் காட்டல் என்னும் மதம். (1)

ஓர் எழுத்து ஒரு மொழி

129. **உயிர்மவி லாறுந் தபநவி லைந்துங்
கவ்சவி னாலும் யவ்வி லொன்றும்
ஆகு நெடினொது வாங்குறி லிரண்டோ
டோரெழுத் தியல்பத மாறேழ் சிறப்பின.**

எ-னின், மேல் எழுத்துத் தனித்தும் தொடர்ந்தும் ஒரு மொழி ஆம் என்றார். அவற்றுள் ஓர் எழுத்து ஒரு மொழி இவை என்பதூஉம் இத்துணைய என்பதூஉம் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: உயிர்வருக்கத்தும் மவ்வருக்கத்தும் அவ்வாறும் தவ்வருக்கத்தும் பவ்-வருக்கத்தும் நவ்வருக்கத்தும் ஐவைந்தும் கவ்வருக்கத்தும் வவ்வருக்கத்தும் சவ்-

வருக்கத்தும் நந்நான்கும் யவ்வருக்கத்து ஒன்றும் ஆகும் நெட்டெழுத்தான் ஆகிய மொழி நாற்பதும், நொவ்வும் துவ்வும் ஆகும் குற்றெழுத்தான் ஆகிய மொழி இரண்டுடனே ஓர் எழுத்தான் ஆகிய மொழி இந்நாற்பத்திரண்டும் சிறப்பினவாம் எ-று.

உ-ம்: ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ எனவும் மா, மீ, மூ, மே, மை, மோ எனவும் தா, தீ, தூ, தே, தை எனவும் பா, பூ, பே, பை, போ எனவும் நா, நீ, நே, நை, நோ எனவும் கா, கூ, கை, கோ எனவும் வா, வீ, வை, வௌ எனவும் சா, சீ, சே, சோ எனவும் யா எனவும் நொ, து எனவும் வரும்.

இவற்றுள் ஊ- இறைச்சி; ஓ- மதகுநீர் தாங்கும் பலகை; பே- நுரை; நே- அன்பு; சோ- அரண். நொ, து என்னும் குறில் இரண்டும் துன்பி, புசி என்னும் ஏவல்.

இவை, 'சிறப்பின' எனவே வகரவீற்றுச் சுட்டுப்பெயர்ப் பொருளை ஒப்புமையான் உணர்த்தி நிற்றலான் ஔ என்னும் ஓர் எழுத்து ஒரு மொழியும் சுட்டு, வினா, உவமைப்பொருளைத் தரும் இடைச்சொல் ஆதலால் குற்றுயிர் ஐந்தான் ஆய ஓர் எழுத்து ஒரு மொழிகளும் கௌ என்னும் உயிர்மெய்யான் ஆய ஓர் எழுத்து ஒரு மொழியும் இவை போல்வன பிறவும் சிறப்பு இல்லன எனக் கொள்க. (2)

### தொடரெழுத்து ஒரு மொழி

130. **பகாப்பத மேழும் பகுபத மொன்பதும்**
**எழுத்தீ றாகத் தொடரு மென்ப.**

எ-னின், தொடரெழுத்து ஒரு மொழி ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: பகாப்பதம் இரண்டு எழுத்து முதல் ஏழு எழுத்து ஈறாகவும் பகுபதம் இரண்டு எழுத்து முதல் ஒன்பது எழுத்து ஈறாகவும் தொடரும் என்று சொல்லுவர் புலவர் எ-று.

உ-ம்: அணி, அறம், அகலம், அருப்பம், தருப்பணம், உத்திரட்டாதி எனவும் கூனி, கூனன், குழையன், பொருப்பன், அம்பலவன், அரங்கத்தான், உத்திராடத்தான், உத்திரட்டாதியான் எனவும் வரும்.

எழுந்திருக்கின்றார், நடத்துவிப்பிக்கிறார், நடத்துவிப்பிக்கின்றார், நடத்துவிப்பிக்கிறார்கள், நடத்துவிப்பிக்கின்றார்கள், நடத்துவிப்பிக்கின்றவர்கள் எனப் பகுதி முதலிய உறுப்பு வேறுபட்டு வருவனவற்றிற்கு இவ்வரையறை இல்லை[123] என்க. (3)

[123]பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி போன்ற ஒட்டுப்பெயர்க்கு இவ்வரையறை இல்லை என்று மயிலைநாதர் (நன். 129) கூறுவார்.

### பகாப்பதமும் அதன் வகையும்

131. **பகுப்பாற் பயனற் றிடுகுறி யாகி**
**முன்னே யொன்றாய் முடிந்தியல் கின்ற**
**பெயர்வினை யிடையுரி நான்கும் பகாப்பதம்.**

எ-னின், மேல் (128) பதம் பகாப்பதம், பகுபதம் என இரண்டு பகுதியவாய் நடக்கும் என்றார். அவற்றுள் பகாப்பதம் இனைய என்பதூஉம் இத்துணைய என்பதூஉம் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: பகுபதம்போல் இதனைப் பகுத்துப் பார்க்கின் அப்பகுப்பால் பகுதி, விகுதி முதலிய உறுப்பின் பயன் விளைவதின்றிக், காரணத்தான் வரும் அப்பதம் போலாது இடுகுறியாய்ப் பகுதி, விகுதி முதலிய ஆறு உறுப்பானும் பின்பு (133) முடிக்கப்படும் அப்பதம் போலாது, படைப்புக் காலம் தொட்டு ஒன்றாய் முடிந்து நடக்கின்ற பெயர்ச்சொல், வினைச்சொல், இடைச்சொல், உரிச்சொல் என்னும் நான்கும் பகாப்பதமாம் எ-று.

பகுபதத்திற்கு மறுதலைப்பட்டது என்பார் இவ்வாறு கூறினார்.

உ-ம்: நிலம், நீர் எனவும் நட, வா எனவும் மன், கொல் எனவும் உறு, கழி எனவும் வரும். பிறவும் அன்ன. (4)

### பகுபதமும் அதன் வகையும்

{132} **பொருளிடங் காலஞ் சினைகுணந் தொழிலின்**
**வருபெயர் பொழுதுகொள் வினைபகு பதமே.**

எ-னின், பகுபதம் இனைய என்பதூஉம் இத்துணைய என்பதூஉம் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: இங்ஙனம் கூறிய பொருளாதி ஆறும்[124] காரணமாக வரும் பெயர்ச்சொற்களும் தெரிநிலையாயும் குறிப்பாயும் காலத்தைக் கொள்ளும் வினைச்சொற்களும் ஆகிய இரண்டும் பகுபதமாம் எ-று.

'பொழுதுகொள் வினைபகு பதம்' எனவே அவ்விரு வகை வினையால் அணையும் பெயரும் பகுபதமாம் என்பது அருத்தாபத்தியால் கூறினார் என்க.

---

[124] **பொருள், இடம், காலம் என்னும் மூன்றும் முதல்; சினை, குணம், தொழில் என்னும் மூன்றும் சினை. இதனை அறிவித்தற்கு இவை இம்முறையில் வைக்கப்பட்டன என்று மயிலைநாதர் (நன். 131) கூறும் காரணம் நுட்பமானது.**

உ-ம்: பொன்னன், அகத்தன், ஆதிரையான், கண்ணன், கரியன், ஊணன் எனப் பெயர்ப் பகுபதம் வந்தன. நடந்தான், நடக்கின்றான், நடப்பான் எனவும் நடந்த, நடக்கின்ற, நடக்கும் எனவும் நடந்து, நடக்க, நடக்கின் எனவும் நடவான் எனவும் நடவாத எனவும் நடவாமல் எனவும் தெரிநிலை உடன்பாட்டு வினைமுற்றும் எச்சமும் எதிர்மறை வினைமுற்றும் எச்சமும் ஆய வினைப் பகுபதங்கள் முறையே வந்தன. பொன்னன், அகத்தன், ஆதிரையான், கண்ணன், கரியன், ஊணன் எனவும் கரிய, பெரிய எனவும் அன்றி, இன்றி எனவும் குறிப்பு வினைமுற்றும் எச்சமும் ஆய வினைப் பகுபதங்கள் வந்தன. நடந்தான், நடந்தவன் எனத் தெரிநிலை வினையால் அணையும் பெயர்ப் பகுபதம் வந்தன. பொன்னன், ஊணன் எனக் குறிப்பு வினை-யால் அணையும் பெயர்ப் பகுபதம் வந்தன. பிறவும் அன்ன.

**இனி இங்ஙனம் பொருளாதி ஆறும் அடியாகத் தோன்றிய அவ்வினைக்-குறிப்புப் பெயர்க்கும் வினைக்குறிப்பிற்கும் வேற்றுமை யாதோ எனின்[125] <வினைக்குறிப்புச் சொல் எல்லாம் தெரிநிலைவினைபோல முதனிலையில் பொருள் சிறந்து நிற்கும்; வினைக்குறிப்புப் பெயர்ச்சொல் அவ்வாறன்றி விகுதியில் பொருள் சிறந்து நிற்கும்> என அறிக. எனவே பொருளாதி ஆறும் காரணமாக வரும் பெயர்ச்சொற்கள் முதனிலை விகுதியாகிய அவ்விரண்டினும் பொருள் சிறந்து நிற்கும் என உய்த்துணர்ந்து கொள்க. <எல்லாச் சொற்-களையும் கூறுங்கால்[126] பொருள் சிறக்கும் இடத்து எழுத்தினை எடுத்தும் அயலெழுத்தினை நலிந்தும் ஏனை எழுத்துக்களைப் படுத்தும் கூறுக.>**

அவன், இவன், உவன் என்னும் சுட்டுப்பெயரும் எவன், யாவன் என்னும் வினாப்-பெயரும் தமர், நமர், நுமர் என்னும் கிளைப்பெயரும் தந்தை, எந்தை, நுந்தை என்னும் முறைப்பெயரும் இவை போல்வன பிறவும் சுட்டுப்பொருளும் வினாப்-பொருளும் கிளைப்பொருளும் முறைப்பொருளும் காரணமாகப் பிற பொருட்கு வரும் பெயராய்ப் பகுதி, விகுதி முதலிய உறுப்பும் உறுப்பின் பொருளும் தந்து, வெள்ளிடைக் கிடக்கும் பகுபதமாய்ப் பகுக்கப்படுதலால் இவற்றைப் பகுபதம் என்னாது பகாப்பதம் எனக் கூறின்[127] அது பொருந்தாது என்க.

---

[125] தொல்காப்பியச் சூத்திர விருத்தி (பக். 101-102).

[126] சொற்களை எடுத்தும் படுத்தும் உச்சரித்தல் குறித்து உரையாசிரியர்கள் ஒருவருக்கு ஒருவர் மாறுபடுவர். அதனை அவரவர் (இளம்பூரணர் தொல். வினை. 21; சேனா-வரையர் தொல். வேற். 9; நச்சினார்க்கினியர் தொல். வேற். 9, வினை. 22, 26, 27, 38, எச்ச. 54; சுப்பிரமணிய தீக்கிதர் பி. வி. 40; வைத்தியநாத தேசிகர் இல. விள. 44, 235, 353; சாமிநாத தேசிகர் இல. கொ. 126.) உரை நோக்கி அறிக.

[127] மயிலைநாதரும் (நன். 130) வைத்தியநாத தேசிகரும் (இல. விள. 40) இவற்றைப் பகாப்பதம் என்று கூறுவர்.

இனிப் பகுதி, விகுதி முதலிய உறுப்பும் உறுப்பின் பொருளும் தரும் ஒரு சொல்லைப் பகுபதம் என்றமையின் சொன்மை, பொருண்மை, **இன்மை,** செம்மை, சிறுமை, நடத்தல், வருதல் முதலிய சொற்கள் பகுதி விகுதியாகப் பகுக்கப்படு-தலானும் விகுதிக்கு வேறு பொருளின்றிப் பகுதிப்பொருள் விகுதியாய் நிற்றலானும் சொல்நிலையால் பகுபதம் என்றும் பொருள்நிலையால் பகாப்பதம் என்றும் கொள்ளப்படும் என்க.

மேல் சொல்லதிகாரத்துள் திணை, பால், இடம் முதலிய இலக்கணங்களான் (261-264, 266) விதந்து, "கிளையெண் குழூஉமுதற் பல்பொருள்" (நூ. 276) என்னும் சூத்திரம் முதலியவற்றான் நான்கு இயலுள்ளும் **உணர்த்த,** ஆண்டு உணர வரும் பெயர் வினை இடை உரிகள் ஈண்டு உணர வாராவேனும் உரைத்தும் என்னும் உத்தியான் அவற்றைப் பகாப்பதம், பகுபதம் என்றார். (5)

பகுபத உறுப்புக்கள்

{133} **பகுதி விகுதி யிடைநிலை சாரியை**
**சந்தி விகார மாறினு மேற்பவை**
**முன்னிப் புணர்ப்ப முடியுமெப் பதங்களும்.**

எ-னின், பகுபத உறுப்பு இத்துணைய என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: இங்ஙனம் கூறிய பகுதி முதலிய ஆறு உறுப்பினுள்ளும் இப்பதப்பொருள் அமைதிக்கு ஏற்பனவற்றைக் கருதி, அறிவுடையோரால் கூட்டி முடிப்ப, எவ்வகைப்-பட்ட பகுபதங்களும் முடியும் எ-று.

பிரகிருதி, விகிருதி என்னும் ஆரியமொழிகள் பகுதி, விகுதி எனத் திரிந்து நின்றன.

**இக்கருவிகள் ஆறும் முறையே**[128] தன் இயல்பில் நிற்றலின் பகுதி என்றும் தன் இயல்பில் நிற்கும் ஒருவன் உள்ளத்தை ஆடை, அணி முதலியவற்றோடு ஒருத்தி முன் நின்று தன்னிடத்து அவாவ விகாரப்படுத்தல்போலத் தன் இயல்பில் நிற்கும் பகுதிப்பொருளை இடைநிலை முதலியவற்றோடு **விகுதி** முன் நின்று தன்னிடத்து அவாவ விகாரப்படுத்தலின் விகுதி என்றும் முதனிலைப் பகுதிக்கும் இறுதிநிலை விகுதிக்கும் இடை நிற்றலின் இடைநிலை என்றும் இவ்விகுதி முதலிய புணர்ப்பைச் சார்ந்து ஆண்டைக்கு இயைந்து நிற்றலின் சாரியை[129] என்றும் நால்வகைச் சொல்லும்

---

[128] **இப்பகுதியில் சிவஞான முனிவர் செய்த திருத்தம் ஆறுமுக நாவலரின் முதல் பதிப்பில் முழுமையாக இடம் பெறவில்லை.**

[129] **"அன், ஆன் முதலாக எடுத்து ஓதப்பட்டு, எல்லாப் புணர்ச்சிக்கும் பொதுவாய்ப் பெரும்பாலும் இன்னொலியே பயனாக வருவன." என்று மயிலைநாதர் (நன். 132) சாரியைக்கு வரையறை கூறுவார்.**

ஒன்றோடு ஒன்று சந்தித்தலான் வரும் தோன்றல் திரிதல் கெடுதல்களைச் சந்தி என்றும் செய்யுள் தொடை முதலியவற்றான் வலித்தல், மெலித்தல் முதலாக விகாரப்படுதலின் விகாரம் என்றும் பெயர் பெற்றன.

அல்வழி வேற்றுமைப் புணர்ச்சிக்கு விதித்த (154) தோன்றல், திரிதல், கெடுதலையும் செய்யுட்கு விதித்த (155, 156) ஒன்பது விகாரத்தையும் இப்பதம் பெறும் என மாட்டு-தலின் இது மாட்டெறிந்தொழுகல் என்னும் உத்தி. (6)

பகுதி

{{134}} **தத்தம்,**
**பகாப்ப தங்களே* பகுதி யாகும்.**

எ-னின்[130] பகுபத உறுப்பு ஆறனுள் (133) பின்னைய மூன்றும்[131] புணரியலுள் உணர்த்தப்படுதலின் அவை ஒழித்து, முன்னைய மூன்றனுள் பகுதி இனைய என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: பெயர்ப் பகுபதங்களுள்ளும் வினைப் பகுபதங்களுள்ளும் தத்தம் முதனிலை-யாய பகாப்பதங்களே அவற்றின் பகுதி ஆம் எ-று.

பகுபதத்துள் பகுதி, விகுதி முதலிய உறுப்பு எல்லாம் பகாப்பதம் ஆயினும் விகுதி முதலியவற்றை மேல் (140-145) விதந்து கூறலின் ஈண்டுத், 'தத்தம் பகாப்ப தங்கள்' என்றது முதனிலைகளையே என்பது பாரிசேடத்தால்[132] பெற்றாம்.

பகுபத உறுப்பு ஆம் முதனிலை இறுதிநிலை இடைநிலைகளாய பகாப்பதங்களி-னின்றும் முதனிலைப் பகாப்பதம் ஒன்றனையுமே பிரித்துத் தந்தமையின், 'பகாப்ப தங்களே' என்னும் ஏகாரம் பிரிநிலைக்கண் வந்தது. (7)

---

130"பகாஅப் பதங்களே" என்பது சங்கர நமச்சிவாயர் பாடம்.

131பின்னைய மூன்று: சாரியை (நன். 243-244), சந்தி (நன். 151-153), விகாரம் (நன். 154-157) என்பன.

132காட்சி முதலிய ஆறோடு ஒழிபு, உண்மை, ஐதிகம், இயல்பு என்ற நான்கையும் கூட்டிக் கூறப்படும் பத்து அளவைகளுள் (சிவ. சுப. அள. 1) பாரிசேடம் ஒன்று. இது ஒழிபு என்றும் மீட்சி என்றும் தமிழில் சொல்லப்படும்.

இதனை, "ஒழிந்து நின்றதினால் உணரப்படுவதோர் உத்தி" என்று இராமாநுச கவிராயர் (நன். 134) கூறுவார்.

## பண்புப்பகுதிக்குச் சிறப்புவிதி

135. **செம்மை சிறுமை சேய்மை தீமை**
**வெம்மை புதுமை மென்மை மேன்மை**
**திண்மை யுண்மை நுண்மை யிவற்றெதிர்**
**இன்னவும் பண்பிற் பகாநிலைப் பதமே.**

எ-னின், பண்புப்பகுதிக்கு எய்தியதன்மேல் சிறப்புவிதி உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: இங்ஙனம் கூறிய பதினொன்றும் இவற்றிற்கு எதிரான வெண்மை கருமை பொன்மை பசுமைகளும் பெருமை அணிமை நன்மை தண்மை பழமை வன்மை கீழ்மை நொய்மை இன்மை பருமைகளும் இவை போல்வன பிறவும்[133] பகுதியாய பண்புப்பொருளினின்றும் வேறு பொருள் பகுக்கப்படாத நிலைப்பதமாம் எ-று.

இங்ஙனம் கூறிய வாய்பாடு முதலிய எல்லாம் சொல்நிலையால் பகுபதம் ஆயினும் மைவிகுதிக்குப் பகுதிப்பொருளன்றி வேறு பொருள் இன்மையின் பொருள்நிலையால் பகுக்கப்படாது என்பார், 'பண்பிற் பகா' என்றும், "மெய்யி னியக்க மகரமொடு சிவணும்" (தொல். மொழி. 13) என்றாற்போல, இங்ஙனம் கூறிய வாய்பாட்டுப் பண்புகள் மைவிகுதியின்றி இயங்காமையின் இவ்விகுதியினையும் பகுதியாக நிறீஇ, மேல் வரும் விகுதியோடு புணர்க்கப்படும் என்பார், 'நிலைப் பதம்' என்றும் கூறினார்.

பண்புப் பகாப்பதம் என்னாது, 'பண்பிற் பகாநிலைப் பதம்' என்றல் சொற்பொருள் விரித்தல் என்னும் உத்தி. செம்மை, சிறுமை முதலிய வாய்பாடுகள் எடுத்துக்காட்டல் என்னும் உத்தி. (8)

## பண்பு வாய்பாட்டு விகற்பங்கள்

{136} **ஈறு போத லிடையுகர மிய்யாதல்**
**ஆதி நீட லடியகர மையாதல்**
**தன்னொற் றிரட்டன் முன்னின்ற மெய்திரிதல்**
**இனமிக லினையவும் பண்பிற் கியல்பே.**

எ-னின், இதுவும் அது.

இ-ள்: மேல் செம்மை, சிறுமை முதலாகத் தெரித்த வாய்பாடுகளின் இறுதிவிகுதி போதலும் இடையில் நின்ற உகரம் இகரம் ஆதலும் முதல் நின்ற குறில் நெடில் ஆதலும்

---

[133] **ஆண்டிப் புலவர் இயற்றிய உரையறி நன்னூல் என்னும் உரையில் இவை போல்வன சில எடுத்துக்காட்டப்பட்டுள்ளன.**

முதல் நின்ற அகரம் ஐகாரம் ஆதலும் இடையே தன் ஒற்று மிகுதலும் முன்பு நின்ற மெய் திரிதலும் வரும் எழுத்திற்கு இனவெழுத்து மிகுதலும் இவை போல்வன பிறவும் அப்பண்பினுக்கு இயல்பாம் எ-று.

"மெய்யி னியக்க மகரமொடு சிவணும்" (தொல். மொழி. 13) என்ற அகரம் பன்னீர் உயிரும் மெய்யொடு புணர வருங்காலத்து நீங்கினாற்போல விகுதி முதலிய புணர வருங்காலத்துப் பண்படி நிற்க, அப்பகுதிப்பொருள் விகுதி நீங்கும் என்பார் ஈறு கெடுதல் என்னாது, 'ஈறு போதல்' என்றும் விதந்து கூறா விகாரங்களும் உள; அவை **வந்துழிக்** காண்க என்பார், 'இனைய' என்றும் இவ்விகாரம் ஒருதலை அன்று; சிவப்பன், கறுப்பன் என்னும் பிற வாய்பாடுகள்போலச் செம்மையன், **கருமையன்** எனவும் முடியும் என்பார் எதிர்மறையும்மை கொடுத்து, 'இனையவும்' என்றும் பெயர்விகுதியோடும் வினைவிகுதியோடும் பதங்களோடும் புணரினும் ஒரு வழி இவ் விகாரப்படும் என்பார் பகுதிக்கு என்னாது பொதுமையின், 'பண்பிற் கியல்பே' என்றும் கூறினார்.

பதப் புணர்ச்சிக்கும் ஈண்டுக் கூறல் ஒப்பின் முடித்தல் என்னும் உத்தி.

உ-ம்: நல்லன், வல்லன் என்பன ஈற்றுவிகுதி போயின. கரியன், பெரியன் என்பன ஈற்றுவிகுதி போய், **இடையுகரம்** இகரம் ஆயின. பாசி, பாசடை என்பன ஈற்றுவிகுதி போய் ஆதி நீண்டன. பைங்கண், பைந்தார் என்பன ஈற்றுவிகுதி போய், இடையுகரம் சகரத்தோடு கெட்டு, வரும் எழுத்திற்கு இனம் மிகுந்து, அடியகரம் ஐகாரம் ஆயின. வெற்றிலை, நெட்டணை என்பன ஈற்றுவிகுதி போய்த் தன் ஒற்று இரட்டின. சேதா, சேதாம்பல் என்பன ஈற்றுவிகுதி போய், ஆதி நீண்டு, முன் நின்ற மகரவொற்றுத் தகரவொற்றாய்த் திரிந்தன.

"செம்மை சிறுமை" (நூ. 135) முதலாக விதந்தும், "இன்னவும்" (நூ. 135) என அடக்கியும் கூறிய பல்வேறு வகைப்பட்ட பண்பு வாய்பாட்டு விகற்பங்கள் எல்லாம் பொதுவிதியானும் (158, 162, 165), 'ஈறு போதல்' முதலாக விதந்தும், 'இனையவும்' என அடக்கியும் கூறிய சிறப்புவிதியானும் விகுதி பதங்களோடு புணர்ந்து, அமைந்து கிடந்தமை **உய்த்துணர்ந்து** கொள்க.

இங்ஙனம் விதந்து கூறிய விகாரங்கள் அன்பன், அழகன் முதலிய வாய்பாடு-கட்கு எய்தாமையானும் செம்மை, சிறுமை முதலாக எடுத்துக்காட்டும் மொழி-கட்கு எய்தினமையானும் இஃது எடுத்த மொழியின் எய்த. வைத்தல் என்னும் உத்தி.

### தெரிநிலை வினைப்பகுதிக்குச் சிறப்புவிதி

{137} **நடவா மடிசீ விடுகூ வேவை**
**நொப்போ வெளவுரி ஞுண்பொருந் திருந்தின்**
**தேய்பார் செல்வவ் வாழ்கே ளஃகென்**
**றெய்திய விருபான் மூன்றா மீற்றவுஞ்**
**செய்யெ னேவல்* வினைப்பகாப் பதமே.**

எ-னின்[134] தெரிநிலை வினைப்பகுதிக்கு எய்தியதன்மேல் சிறப்புவிதி உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: நட, வா, மடி, சீ, விடு, கூ, ஏ, வை, நொ, போ, வெள, உரிஞ், உண், பொருந், திரும், தின், தேய், பார், செல், வவ், வாழ், கேள், அஃகு என்று முதனிலையாய் எய்திக் கிடந்த, இவ்விருபத்துமூன்று ஆகும் உயிரும் ஒற்றும் குற்றுகரமும் ஆகிய ஈற்றினை உடைய இத்தொடக்கத்து வாய்பாடுகள் எல்லாம் செய் என்னும் **ஏவலினது பகாப்பதமாகிய பகுதியும் ஏனை வினையினது** பகாப்பதமாகிய பகுதியும் ஆம் எ-று.

இத்தொடக்கத்து வாய்பாடுகள் என்பார் அஃகாம் என்னாது, 'அஃகென்று' எனவும், 'ஈற்றவும்' எனவும் எகர உயிர் வினா இடைச்சொற்கண்ணும் தன் பெயர்க்கண்ணும் அன்றிப் பிற வழி ஈறாகாமையின் அஃது ஒழிந்தவை ஈண்டைக்கு ஆம் என்பார், 'ஆமீற்ற' எனவும் விகற்பத்தின் முடித்தல் என்னும் உத்தியான் இருபத்துமூன்று ஈற்றவாக விகற்பித்து எடுத்துக்காட்டும் வாய்பாடுகள் முதலிய எல்லாம் இப்பொது வாய்பாட்டின் அடங்கும் என்பார் முடிந்தது முடித்தல் என்னும் உத்தியால், 'செய்' எனவும் கூறினார்.

இரட்டுற மொழிதல் என்னும் உத்தியான் எடுத்துக்கொண்ட **முன்னிலை ஒன்றற்கே உரிய ஏவலினது பகுதிப்பொருளும் ஏனை வினையினது பகுதிப்பொருளும்** தந்து நிற்கும் நட, வா முதலிய வாய்பாடுகளை எண்ணித் தொகுத்த, 'இருபான் மூன்றா மீற்ற' என்னும் தொகை செய்யென் ஏவற் **பகாப்பதம்** என்னும் பயனிலையோடும் செய்யென் வினைப் பகாப்பதம் என்னும் பயனிலையோடும் தனித்தனி முடிந்தன.

**செய்யென் வினைப் பகாப்பதம் என்ற துணையானே செய்யென் ஏவற் பகாப்பதமும் அடங்காதோ? வேறு கூற வேண்டியது என்னை எனின்[135] நட, வா, உண், தின் என்றல் தொடக்கத்து முதனிலைகளே விகுதியோடு புணராது**

---

[134] "செய்யென் னேவல்" என்பது சங்கர நமச்சிவாயர் பாடம்.

[135] தொல்காப்பியச் சூத்திர விருத்தியோடு (பக். 58-59) இப்பகுதியை ஒப்பிடுக.

தனித்து நின்று, ஓசை வேறுபாட்டான் முன்னிலை ஏவலொருமை எதிர்கால வினைமுற்றுப் பொருண்மை உணர்த்தினவோ விகுதியோடு புணர்ந்து நின்றே அப்பொருண்மை உணர்த்தினவோ என்று ஐயுறுவார்க்கு ஐயம் அறுத்தற்குக் கூறியது என உணர்க.

ஏவற்பகுதிக்கு உதாரணம்: நடவாய், வாராய், உண்ணாய், தின்னாய், அஃகாய் எனவும் நடமின், 'வம்மின், உண்மின், தின்மின், அஃகுமின் எனவும் வரும். இனி ஆசிரியர் தொல்காப்பியர்,

"செய்யா வென்னு முன்னிலை வினைச்சொற்
செய்யென் கிளவி யாகிட னுடைத்தே" (தொல். எச்ச. 54)

எனக் கூறியவாற்றான் ஆய் என்னும் விகுதி குன்றி நட, வா, உண், தின், அஃகு எனவும் நிற்கும் என உணர்க. நிற்பினும் விகுதியோடு புணர்ந்தனவே-யாம். அஃது அச்சூத்திரத்தில் சேனாவரையர் கடா விடைகளான் விளங்கக் கூறியவாற்றானும் (தொல். எச்ச. 54) அறிக. இனி இவ்வாறு ஏவற்பொருள் உணர்த்தாது முதனிலைத் தனிவினைப்பொருள் உணர்த்தி நிற்பின் பகாப்-பதம் என்று கொள்ளப்படும். இதுபற்றி அன்றே முன்னரே[136] வினைப் பகாப்-பதத்திற்கு உதாரணம் காட்டியதூஉம் என்க. இன்னும் அச்சூத்திரத்து மொழிந்த பொருளோடு ஒன்ற அவ்வயின் மொழியாததனை முட்டின்று முடித்தல் என்னும் உத்தியான் விகுதி புணர்ந்து கெட்டு நிற்கும் சொற்கள் பல உள. அவை எல்லாம் பதம் முடிப்புழிக் (145) காண்க.

ஏனை வினைப்பகுதிக்கு உதாரணம் நடந்தான், வந்தான், மடித்தான், சீத்தான், விட்டான், கூவினான், ஏவினான், வைத்தான், நொந்தான், போயினான், வெளவினான், உரிஞினான், உண்டான், பொருநினான், திருமினான், தின்றான், தேய்த்தான், பார்த்தான், சென்றான், வவ்வினான், வாழ்ந்தான், கேட்டான், அஃகினான் எனவும் கிடந்தான், கண்டான் எனவும் ஏகினான், குறுகினான், கட்டினான், பொருந்தினான், எய்தினான் எனவும் வரும். பிறவும் அன்ன.

இவற்றுள் பகுதி முதனிலையாய் எய்திக் கிடந்தமை காண்க.

இனி இச்சூத்திரத்தில், 'செய்யெ னேவல் வினைப்பகாப் பதம்' என்பதற்கு இவ்வாறு பொருள் கூறாது ஆற்றொழுக்காகச் செய்யென் ஏவல் வினைப் பகாப்பதமே வினை, வினைப்பெயர்கட்கு எல்லாம் முதனிலை எனப் பொருள்

[136] "முன்னர் ஏவல் வினைப் பகாப்பதத்திற்கு" என்பது ஆறுமுக நாவலரின் முதல் பதிப்பில் (பக். 67) உள்ள பாடம்.

கூறுவாரும்[137] உளர்.

"அடியேனுன்
அடியார் நடுவு ளிருக்குமரு
ளைப்புரி யாய்" (திரு. 376:2-3),

"எந்தா யினித்தா னிரங்காயே" (திரு. 381:4),

"மருங்கே சார்ந்து வரவெங்கள்
வாழ்வே வாவென் றருளாயே" (திரு. 382:4),

"நரிப்பாய் நாயே னிருப்பேனோ
நம்பி யினித்தா னல்காயே" (திரு. 384:4),

"கீத மினிய குயிலே... ...
அந்தமி லான்வரக் கூவாய்" (திரு. 346)

என்றல் தொடக்கத்தனவாய திணை, பால், இடம், காலம் காட்டும் விகுதி உறுப்போடு கூடி முற்றி நிற்கும் முன்னிலை ஏவலொருமை எதிர்கால வினை-முற்றுப் பகுபதங்களைப் பகாப்பதம் என்றல் கூடாமையே அன்றித்,

"தத்தம்,
பகாப்ப தங்களே பகுதி யாகும்" (நூ. 134)

என்னும் பொதுச் சூத்திரத்தோடு மாறுகொளக் கூறலாம் ஆதலின் அது பொருள் அன்று என மறுக்க.

இங்ஙனம் முதனிலை புடைபெயர்தலே வினை ஆதலின் எல்லா வினைச்-சொற்களும் பிறத்தற்கு மூலமாகிய பொது முதனிலைத் தனிவினைப்பெயர் என்றே கொள்க. அதனைப் படுத்தல் ஓசையால் கூறிக் காண்க. எல்லா வினைச்சொற்களாவன திணை, பால், இடம், காலம், விதி, மறை, பொதுச், சிறப்பு ஆதியோடும் கூடிய முற்றெச்சங்களும் தொழிற்பெயர்களும் என்க.

கையறியா மாக்கட்கு அன்றி, நூல் இயற்றும் அறிவினை உடைய மக்கட்குப் பல்கலைக் குரிசில் பவணந்தி என்னும் புலவர் பெருமான் புகழ்போல விளங்கி

[137] மயிலைநாதர் (நன். 136) ஆற்றொழுக்காகப் பொருள் கூறுவார்.

நிற்றலான் உலகமலையாமை உள்ளிட்ட பத்து அழகோடும் (13) பிறந்து நின்றது இச்சூத்திரம் என்று உணர்க.

வடநூல் மேற்கோளாக ஒருமொழிகளை விதந்து, பகாப்பதம், பகுபதம் எனக் காரணக்குறி தாமே தந்து, அவற்றை நல்விருந்தென்ன நாவலர் பயில, "எழுத்தே தனித்தும்" (நூ. 128) என்னும் சூத்திரம் முதல் இச்சூத்திரம் ஈறாகப் பகாப்பதம், பகுபதம் எனப் பல காற் கூறுதல் தன் குறி வழக்கம் மிக எடுத்து உரைத்தல் என்னும் உத்தி. (10)

ஏவற்பகுதிக்குச் சிறப்புவிதி

{138} **செய்யென் வினைவழி விப்பி தனிவரிற்**
**செய்வியென் னேவ லிணையினீ ரேவல்.**

எ-னின், மேல் இரட்டுற மொழிந்தவற்றுள் (137) **ஏவற்பகுதிக்கு** எய்தியதன்மேல் சிறப்புவிதி உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: மேற் கூறிய செய் என்னும் வாய்பாட்டு **முதனிலைத் தனிவினையின்** பின் வி, பி என்னும் **இவ்விரண்டு** விகுதியினுள் ஒன்று வரும் ஆயின் செய் என்னும் ஏவன்மேல் ஓர் ஏவலாய்ச் செய்வி என்னும் வாய்பாட்டு **ஏவற்பகுதியாம்;** அவற்றின் பின் இவ்விகுதிகள் தன்னோடும் பிறிதோடும் இணைந்து வரும் ஆயின் செய்விப்பி என்னும் வாய்பாட்டு **ஏவற்பகுதியாம்** எ-று.

விதந்த ஏவற் சிறப்பு வாய்பாட்டை எல்லாம் (137) செய் என்னும் ஏவற் பொது வாய்பாட்டுள் அடக்கி மேற் கூறலின் நட, வா முதலிய வினைவழி என்பார், 'செய்யென் வினைவழி' என்றும் இவை பெருவழக்கு அல்ல என்பார், 'தனிவரின்' என்றும், 'இணையின்' என்றும் இவ்விகுதி ஒன்றும் இரண்டும் ஏற்றபெற்றி வரும் என்பார் செய்பி என்னாது, 'செய்வி' என்றும் கூறினார்.

**உ-ம்: நடப்பியாய், நடப்பிப்பியாய், வருவியாய், வருவிப்பியாய் எனவும் ஆய்விகுதி குன்றி நடப்பி, நடப்பிப்பி, வருவி, வருவிப்பி எனவும்**[138] வரும்.

நட, வா முதலிய ஏவற் சிறப்பு வாய்பாட்டிற்கு இலக்கணம் கூறிய முகத்தே (137) ஏவற் பொது வாய்பாட்டிற்கும் செய், செய்வி, செய்விப்பி எனக் கூறாக் கூற்றாய் இலக்கணம் அமைந்து கிடந்தமையின் இக்கூற்று இரட்டுற மொழிதல் என்னும் உத்திக்கு இனம். இவை போல்வன பிறவும் **அன்ன.** (11)

---

[138] **வினையியல் நூற்பாவின் (335) உரையோடும் அடிக்குறிப்போடும் ஒப்பிடுக.**

### வினைப்பகுதிக்குப் புறனடை

{139} **விளம்பிய பகுதிவே றாதலும் விதியே.**

எ-னின், வினைப்பகுதிக்கு ஆவதோர் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: **ஏவற்பகுதி** வேறாதல்போல **அதன் பின்னே** விளம்பிய வினைப்பகுதி வேறாதலும் விதியாம்; விலக்கு அன்று எ-று.

உ-ம்: நடத்தினான், நடப்பித்தான், நடப்பிப்பித்தான், நடத்துவித்தான், நடத்துவிப்பித்தான் என வரும். பிறவும் அன்ன.

ஈண்டும் விப்பிகள் ஏற்றபெற்றி கொள்க.

இவற்றுள் நட என்னும் தன்வினைப் பகுதி பிறவினைப் பகுதியாய் வேறுபட்டு நின்றவாறு காண்க.

வேறுபடாதது பிரகிருதி ஆமன்றி, வேறுபட்டது பிரகிருதி ஆகாதேனும் தந்தையைக் குறிக்க மகன் எனப்பட்டான் ஒருவன் தன் மகனைக் குறிக்கத் தந்தை ஆனாற்போலப் பிறவினைப்படுத்த வரும் இவ்விகுதிகளும் மேல் வரும் அன், ஆன் முதலிய விகுதிகளைக் (140) குறிக்கப் பகுதியாம் ஆதலின், 'விதியே' எனப் புறனடை தந்தார். **முன்னர்** (137-138) **ஏவற்பகுதி வேறுபட்டமையும் அன்ன.**

இச்சூத்திரத்திற்கு வா என் பகுதி முதலியன வந்தான், வருகின்றான் என விகாரப்படுதலைப் பொருளாகக் கூறுவாரும்[139] உளர். இவ்விகாரங்கள் பகுபத உறுப்பாக மாட்டெறிந்து கொண்ட மூன்று சந்தியுள்ளும் (154) ஒன்பது விகாரத்துள்ளும் (155, 156) அமைந்து கிடத்தலின் அது பொருந்தாது என்க. (12)

### விகுதி

{140} **அன்ஆன் அள்ஆள் அர்ஆர் பம்மார்**
**அஆ குடுதுறு என்ஏன் அல்அன்**
**அம்ஆம் எம்ஏம் ஓமொ* டும்மூர்**
**கடதற ஐஆய் இம்மின் இர்ஈர்**
**ஈயர் கயவு மென்பவும் பிறவும்**
**வினையின் விகுதி பெயரினுஞ் சிலவே.**

---

[139] மயிலைநாதர் இச்சூத்திரத்திற்கு (நன். 138) வா, கொள், கொல், செல், வெல் முதலிய பகுதிகள் விகாரப்படுதலைப் பொருளாகக் கூறுவார். ஆகவே இந்த மறுப்புரை அவரை மட்டுமே குறித்ததாகக் கொள்வது சிறப்பு.

எ-னின்[140] விகுதி இனைய என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: இங்ஙனம் அன், ஆன் முதல் முப்பத்தேழாகச் சொல்லப்படுவனவும் இவை போல்வன பிறவும்[141] தெரிநிலைவினையின் விகுதிகளாம்; பெயரிடத்தும் இவற்றுள் சில விகுதிகளாம் எ-று.

இரட்டுற மொழிதல் என்னும் உத்தியால் தன்மை ஒருமைக்கும் அஃறிணைப் படர்க்கை ஒருமைக்கும் பொதுவாக, 'டுதுறு' என்றும் **முன்னிலை ஒருமைக்கும் முன்னிலை ஏவலொருமைக்கும் பொதுவாக, 'ஆய்' என்றும்** அன் என்னும் தன்மை ஒருமை விகுதி தொன்றுதொட்டதன்றி இலக்கியம் கண்டமையின் எதிரது போற்றல் என்னும் உத்தியால் தழீஇக்கொண்டது ஆதலின் அதனை வலியுறுத்திப் பின்னும், 'அன்' என விதந்தும் இன்னும் இவற்றுள் இரட்டுற மொழிதலான் அடங்குவன அடங்க, அடங்காவாய பெயரெச்சம், வினையெச்சம், நடத்து, நடப்பி முதலிய பிறவினை என்பவற்றுள்ளும் பிறவற்றுள்ளும் பகுதியை விகுதிப்படுத்தி வருவன யாவை, அவை எல்லாம் விகுதி என்று கருதிக்கோடற்குப், 'பிறவும்' என்றும் கூறினார்.

'பெயரினுஞ் சில' என்ற மாத்திரையின் குறிப்புவினையினும் சில என்பது கூறாதே அமைதலின் இங்ஙனம் வினை என்றது அவ்விரண்டும் ஒழிந்த தெரிநிலைவினை என்பது பெற்றாம்.

உ-ம்: நடந்தனன், நடந்தான்: இவை ஆண்பாற்படர்க்கை. நடந்தனள், நடந்தாள்: இவை பெண்பாற்படர்க்கை. நடந்தனர், நடந்தார், நடப்ப, நடமார்: இவை பல்லோர்-படர்க்கை. நடந்தன, நடவா: இவை பலவின்படர்க்கை. நடக்கு, உண்டு, நடந்து, சேறு, நடந்தனென், நடந்தேன், நடப்பல், நடப்பன்: இவை ஒருமைத்தன்மை. நடந்தது, கூயிற்று, குண்டுகட்டு: இவை ஒன்றன்படர்க்கை. நடப்பம், நடப்பாம், நடப்பெம், நடப்பேம், நடப்போம், நடக்கும், உண்டும், நடந்தும், சேறும்: இவை தன்மைப்பன்மை. நடந்தனை, நடந்தாய், நடத்தி: இவை ஒருமைமுன்னிலை. நடமின், நடந்தனிர், நடந்தீர்: இவை பன்மைமுன்னிலை. நிலீயர், நடக்க, வாழிய: இவை வியங்கோள். நடக்கும்: இது செய்யும் என்னும் முற்று. பிறவும் அன்ன.

இவை திணை பால் இடங்களை உணர்த்தி, வினையின் இறுதிநிலையாய் முழுவதும் வந்தன. வில்லன், வில்லான், வளையள், வளையாள், ஊரர், ஊரார், வில்லி, வாளி, அரசி, செட்டிச்சி, காதறை, மூக்கறை: இவை பெயர்க்கண் சில வந்தன. பிறவும் அன்ன. (13)

140 "ஓமோ டும்மூர்" என்பது சங்கர நமச்சிவாயர் பாடம்.

141 பவணந்தி முனிவர் கூறாத விகுதிகள் பலவற்றை எடுத்துக்காட்டி இந்நூற்பாவுக்குச் சாமிநாத தேசிகர் தரும் விளக்கம் (இல. கொ. 117) பயனுள்ளது.

## பெயர் இடைநிலை

141. **இலக்கியங் கண்டதற் கிலக்கண மியம்பலிற்**
**பகுதி விகுதி பகுத்திடை நின்றதை**
**வினைப்பெய ரல்பெயர்க் கிடைநிலை யெனலே.**

*எ-னின், இடைநிலை ஆமாறு உணர்த்துவான் தொடங்கிப், பெயர்க்கு இடைநிலை உணர்த்துதல் நுதலிற்று.*

*இ-ள்: அறிவுடையோரால் நியமிக்கப்படும் இலக்கியம் கண்டு, அதனுக்கு அவ்விலக்கியத்தின் அமைதியே இலக்கணமாகக் கூறலின் மேற் கூறிய பகுதியையும் (134) விகுதியையும் (140) பகுத்து இடையே நின்றது யாது, அதனை வினையால் அணையும் பெயர் அல்லாத பெயர்கட்கு இடைநிலை என்று சொல்லுக எ-று.*

*குறிக்கப்படும் இலக்கணத்தை உடையன எல்லாம் இலக்கியம் ஆயினும் ஈண்டு, 'இலக்கியம்' என்றது பெயர்ப் பகுபதத்தை. 'இலக்கணம்' என்றது அதனகத்துப் பகுதி முதலிய உறுப்புக்களை.*

*மா, பலா முதலியன பராரை முதலிய சினையோடு நின்றன எனக் கண்டது கூறுவார்போலப் பகுபதம் பகுதி முதலிய உறுப்பொடு நின்றது எனக் கண்டது கூறி, அப்பதம் தந்த தோலா நாவின் மேலோர் ஆணையின் நிற்றலின், 'கண்டதற்கு' என்றும் சாரியை (243, 244) சந்தி (154) விகாரங்களும் (155, 156) இடை நிற்குமேனும் அவை மேல் விதக்கப்படுதலின் அவை ஒழிந்தனவற்றை, 'இடை நின்றதை' என்றும் மேல் (142-144) வினைக்கு விதந்து கூறும் இடைநிலை வினையால் அணையும் பெயர்க்கும் அமைதலின், 'வினைப்பெய ரல்பெயர்க்கு' என்றும் இப் பெயர் இடை-நிலை வரையறுக்கப்பட்டது அன்று; ஆங்காங்கு உணர்ந்து உரைக்க[142] என்பார், 'எனலே' என்றும் கூறினார்.*

*உ-ம்: அறிஞன் என்பது ஞகர இடைநிலை பெற்றது. ஓதுவான், பாடுவான் என்பன வகர இடைநிலை பெற்றன. வலைச்சி, புலைச்சி என்பன சகர இடைநிலை பெற்றன. வண்ணாத்தி, பாணத்தி, மலையாட்டி, வெள்ளாட்டி, தந்தை, எந்தை, நுந்தை என்பன தகர இடைநிலை பெற்றன. பிறவும் அன்ன.* (14)

---

[142] **"சந்தி வகையானும் பொதுச் சாரியை வகையானும் முடியா வழி இவ்வாறு வருவன இடைநிலை." என்று மயிலைநாதர் (நன். 140) விளக்கி, அகர இடைநிலை, மகர இடை-நிலை போன்ற வேறு சில இடைநிலைகளையும் எடுத்துக்காட்டுவார்.**

## இறந்தகால இடைநிலை

{142} **தடறவொற் றின்னே யைம்பான் மூவிடத்**
**திறந்த காலந் தருந்தொழி லிடைநிலை.**

எ-னின், இறந்தகால வினைக்கு இடைநிலை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: தகர டகர றகர மெய்களும் இன் என்னும் குற்றொற்றும் ஐம்பால் மூவிடத்தும் இறந்தகாலத்தைத் தரும் வினைப்பகுபத இடைநிலைகளாம் எ-று.

உ-ம்: நடந்தான், நடந்தாள், நடந்தார், நடந்தது, நடந்தன, நடந்தேன், நடந்தேம், நடந்தாய், நடந்தீர் எனவும் உண்டான் எனவும் சென்றான் எனவும் உறங்கினான் எனவும் வரும்.

**இன்னிடைநிலை[143] எஞ்சியது எனக் கடைக் குறைந்தும் போனது என முதல் குறைந்தும்[144] வரும்.** பிறவும் அன்ன. (15)

## நிகழ்கால இடைநிலை

143. **ஆநின்று கின்று கிறுமூ விடத்தின்**
**ஐம்பா னிகழ்பொழு தறைவினை யிடைநிலை.**

எ-னின், நிகழ்கால வினைக்கு இடைநிலை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: ஆநின்று என்பதூஉம் கின்று என்பதூஉம் கிறு என்பதூஉம் ஐம்பால் மூவிடத்தும் நிகழ்காலத்தைத் தரும் வினைப்பகுபத இடைநிலைகளாம் எ-று.

தருவினையை, 'அறைவினை' என்றது இலக்கணை.[145] மேலைச் சூத்திரத்தில் (144) வருவதூஉம் அது.

உ-ம்: நடவாநின்றான், நடக்கின்றான், நடக்கிறான் என வரும்.

---

[143] இப்பகுதியில் சிவஞான முனிவர் செய்த திருத்தம் ஆறுமுக நாவலர் பதிப்புகளில் முழுமையாக இடம் பெறவில்லை.

[144] சிவஞான முனிவர் தரும் இந்த உரை விளக்கத்தைச் சேனாவரையர் (தொல். வினை. 20), மயிலைநாதர் (நன். 256), வைத்தியநாத தேசிகர் (இல. விள. 47, 234) உரைகளோடு ஒப்பிடுக.

[145] சுப்பிரமணிய தீக்கிதரைத் (பி. வி. 47) தழுவி, இலக்கணை என்பதனையும் அதன் வகையையும் சங்கர நமச்சிவாயர் தக்க உதாரணங்களோடு பின்னர் (நன். 269) விளக்கு-வார். வேறு சில நூற்பாக்களின் (145, 151, 264, 321, 365, 412, 420) உரைகளிலும் அதனை அவர் குறிப்பிடுவார்.

ஏனைப் பால் இடங்களினும் ஒட்டிக்கொள்க. (16)

## எதிர்கால இடைநிலை

**144. பவ்வ மூவிடத் தைம்பா லெதிர்பொழு
திசைவினை யிடைநிலை யாமிவை சிலவில.**

எ-னின், எதிர்கால வினைக்கு இடைநிலையும் முக்கால இடைநிலைகட்கும் ஆவதோர் புறனடையும் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: பகரவொற்றும் வகரவொற்றும் ஐம்பால் மூவிடத்தும் எதிர்காலத்தைத் தரும் வினைப்பகுபத இடைநிலைகளாம். இம்முக்காலமும் முறையே காட்டும் தகர-வொற்று முதல் வகரவொற்று ஈறாய இடைநிலைகள் சில முற்றுவினை எச்சவினை-கட்கு இலவாம் எ-று.

உ-ம்: நடப்பான், வருவான் என வரும்.

ஏனைப் பால் இடங்களினும் ஒட்டிக்கொள்க.

இனி, 'இவை சிலவில' எனவே காலத்தை இறுதிநிலை தரும் என்பதூஉம் முதனிலை தரும் என்பதூஉம் பிற இடைநிலை தரும் என்பதூஉம் பெற்றாம். இவ்விகற்பம் எல்லாம் வரும் சூத்திரத்தால் கூறுப. (17)

## காலம் காட்டும் இறுதிநிலை

**{145} றவ்வொ டுகர வும்மைநிகழ் பல்லவுந்
தவ்வொ டிறப்பு மெதிர்வும் டவ்வொடு
கழிவுங் கவ்வோ டெதிர்வுமின் னேவல்
வியங்கோ ளிம்மா ரெதிர்வும் பாந்தஞ்
செலவொடு வரவுஞ் செய்யுநிகழ் பெதிர்வும்
எதிர்மறை மும்மையு மேற்கு மீங்கே.**

எ-னின், மேலைச் சூத்திரத்து, "இவை சிலவில" (நூ. 144) என்றார்; அவை இவை என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: றகரத்தோடு கூடிய உகரவீறும் உம்மீறும் இறந்தகாலமும் எதிர்காலமும்[146] தகரத்தோடு கூடிய அவ்விரண்டு ஈறும் அவ்விரு காலமும் டகரத்தோடு கூடிய

---

[146] இவ்வாறு பொதுவாக விதி கூறினாலும், "சென்று என்புழி இறந்தகாலமும் சேறு என்புழி எதிர்காலமும் பொருந்தும்." என்று புறனடை நூற்பாவின் (254) உரையில் கூறுவார்.

அவ்விரண்டு ஈறும் இறந்தகாலமும் ககரத்தோடு கூடிய அவ்விரண்டு ஈறும் எதிர்-காலமும் மின்னீறும் ஏனை ஏவலின் வரும் அனைத்து ஈறும் வியங்கோளீறும் இகர-வீறும் மாரீறும் எதிர்காலமும் பகரவீறு இறந்தகாலமும் எதிர்காலமும் செய்யும் என்னும் வாய்பாட்டு **முற்றீறு** நிகழ்காலமும் எதிர்காலமும் முற்றுவிகுதி எச்ச-விகுதிகளோடு புணர்தற்கு உரிய எதிர்மறை ஆகாரவீறு மூன்று காலமும் ஏற்கும் மேலைச் சூத்திரத்து, "இவை சிலவில" (நூ. 144) என்றவற்றுள் எ-று.

அந்தம் என்பதனை எல்லாவற்றினும் ஒட்டிக்கொள்க.

றவ்வொடு உகர உம்மீறும் தவ்வொடு உகர உம்மீறும் பாந்தமும் இறந்தகாலமும் எதிர்காலமும் ஏற்கும் எனத் தொகுத்துக் கூறாது, விகற்பத்தின் முடித்தல் என்னும் உத்தியான் வகுத்துக் கூறினார் புலப்பட வேண்டி என்க.

இகரவீறு தனித்து இயலாமையின் யாதானும் ஓர் மெய்யினை ஊர்ந்து வரும் என்பதூஉம் அது காலம் காட்டாது என்பதூஉம் அது காலம் காட்டியதேல் இவ்வீறு காலம் காட்டாது என்பதூஉம் செய்யும் என்னும் வாய்பாட்டு எச்சமும் இடை-நிலையின்றி ஈறு காலம் காட்டுமேனும் அஃது எதிர்காலம் காட்டும் என மேல் (340) விதத்தலின் இங்ஙனம் செய்யும் என எடுத்து ஓதியது முற்று என்பதூஉம் பெற்றாம். மூன்று காலமும் அவைபற்றிப் புடைபெயரும் வினையும் இல்லனவற்றை எதிர்மறை வினை மூன்று காலமும் ஏற்கும் என்று கூறுதல் இலக்கணை ஆதலின் பிற் கூறினார்.

உ-ம்: சென்று, சென்றும், சேறு, சேறும்; வந்து, வந்தும், வருது, வருதும்; உண்டு, உண்டும்; உண்கு, உண்கும்; உண்மின், **உண்ணாய், உண், உண்க**, வாழிய, வாழியர், சேறி, உண்மார்; உண்ப; உண்ணும்; உண்ணான் என வரும்.

'மும்மையும்' என்னும் முற்றும்மையை, "முற்றும்மை யொரோவழி யெச்சமு மாகும்" (நூ. 426) என்பதனான் எச்சவும்மை ஆக்கி நடந்திலன், நடவாநின்றிலன் என எதிர்மறை ஒரு காலம் ஏற்று வருதலும் கொள்க.

சென்றி, செல்லாநின்றி என வரும் ஆயின் இடைநிலை காலம் காட்டிய இகர-வீற்றவாம்.

"இவை சிலவில" (நூ. 144) என்றவற்றுள் இறுதிநிலை காலம் காட்டுவனவற்றை விதந்து ஓதி, முதனிலையும் பிற இடைநிலையும் காலம் காட்டுவனவற்றை ஓதாமையின் அவை சிறுபான்மைய; வந்தவழிக் காண்க என்றாராயிற்று.

அவை வருமாறு: தொட்டான், விட்டான், உற்றான், பெற்றான், புக்கான், நக்கான் என்பனவற்றுள் இடைநிலையின்றி முதனிலை விகாரமாய் இறந்தகாலம் காட்டின.

என்மனார், என்றிசினோர், என்மர் என்பவற்றுள்[147] எடுத்து ஓதாப் பிற இடை-நிலைகள் நின்று, முன்னைய இரண்டும் இறந்தகாலமும் பின்னையது ஒன்றும் எதிர்காலமும் காட்டின. பிறவும்[148] அன்ன.

'ஈங்கே' என்ற மிகையானே,

"வருதி பெயர்தி வருந்துதி துஞ்சாய்
பொருதி புலம்புதி நீயும்" (நன். 354 மயிலை.)

என இகரவீறு நிகழ்காலம் காட்டலும் ஏனைய கூறிய காலத்தில் பிறழ்ந்து வருவன உளவேல் அவையும் பெயரெச்ச வினையெச்சங்களின் இடைநிலையின்றி இறுதிநிலை காலம் காட்டுவனவும் கொள்க.

இனிப் பகுதி முதலிய உறுப்புக்களால் **பகுபதம்** முடியுமாறு. அவன் என்னும் சுட்டுப்பொருள் பெயர்ப் பகுபதம் அ என்னும் பகுதியும் அன் என்னும் விகுதியும் பெற்று, "எகர வினாமுச் சுட்டின் முன்னர்" (நூ. 163) என்னும் சூத்திரத்தால் வகரம் தோன்றி, "உடன்மே லுயிர்வந் தொன்றுவ தியல்பே" (நூ. 204) என்பதனால் வகரத்தின்மேல் விகுதியுயிர் ஏறி முடிந்தது.

தமன் என்னும் கிளைப்பொருள் பெயர்ப் பகுபதம் தாம் என்னும் பகுதியும் அன் என்னும் விகுதியும் பெற்றுத், "தான்தாம் நாம்முதல் குறுகும்" (நூ. 247) என்பதனால் பகுதி முதல் குறுகி, உடன்மேல் உயிர் ஏறி முடிந்தது.

குறிஞ்சியான் என்னும் இடப்பெயர்ப் பகுபதம் குறிஞ்சி என்னும் பகுதியும் ஆன் என்னும் விகுதியும் பெற்று, யகர உடம்படுமெய் தோன்றி, உயிர் ஏறி முடிந்தது.

---

[147] **என்மனார், என்றிசினோர் என்பவற்றின் சொல்முடிபுபற்றித் தொல்காப்பிய உரை-யாசிரியர்களுக்குள் கருத்து மாறுபாடு உண்டு. அதனை அவரவர் (தொல். கிளவி. 1) உரை நோக்கி அறிக.**

[148] **"என்மனார், என்றிசினோர், என்மர் என்பவற்றுள் எடுத்து ஓதாப் பிற இடைநிலைகள் நின்று, முன்னைய இரண்டும் இறந்தகாலமும் பின்னையது ஒன்றும் எதிர்காலமும் காட்டின. பிறவும் அன்ன." என்பதே ஏட்டுப் பாடம். ஆறுமுக நாவலர் (1851), சந்திரசேகர கவிராஜ பண்டிதர் (1855), தெய்வசிகாமணி முதலியார் (1889) பதிப்புகளிலும் இப்பாடமே காணப்படுகிறது. ஆறுமுக நாவலரின் பிந்திய பதிப்புக்களிலும் கழகப் பதிப்பிலும் (1964) இப்பகுதிக்கு வேறு பாடம் காணப்படுகிறது.**

பிரபவன் என்னும் காலப்பெயர்ப் பகுபதம் பிரபவ என்னும் பகுதியும் அன் என்னும் விகுதியும் பெற்று, "ஒருமொழி மூவழிக் குறைதலு மனைத்தே" (நூ. 156) என்பதனால் பகுதி கடைக்குறையாய் வகரவொற்றின்மேல் விகுதி அகர உயிர் ஏறி முடிந்தது.

திணிதோளன் என்னும் சினைப்பெயர்ப் பகுபதம் திணிதோள் என்னும் பகுதியும் அன் என்னும் விகுதியும் பெற்று, உடன்மேல் உயிர் ஏறி முடிந்தது.

பெரியன் என்னும் குணப்பெயர்ப் பகுபதம் பெருமை என்னும் பகுதியும் அன் என்னும் விகுதியும் பெற்றுப், பகுதியீறு போய், இடையுகரம் இகரமாய் யகர உடம்படுமெய் தோன்றி, உயிர் ஏறி முடிந்தது.

ஓதுவான் என்னும் தொழிற்பெயர்ப் பகுபதம் ஓது என்னும் பகுதியும் ஆன் என்னும் விகுதியும் வகர இடைநிலையும் பெற்று, உயிர் ஏறி முடிந்தது.

நன்மை என்னும் பகுபதம் நல் என்னும் பகுதியும் மை என்னும் விகுதியும் பெற்று, "மெலி, மேவி னணவும்" (நூ. 227) என்பதனான் லகரம் ணகரமாய்த் திரிந்து முடிந்தது.

வருதல் என்னும் பகுபதம் வா என்னும் பகுதியும் தல் என்னும் விகுதியும் பெற்று, "வலித்தன் மெலித்தல்" (நூ. 155) என்பதனால் பகுதி முதல் குறுகி, ரகரவுகரம் விரிந்து முடிந்தது.

நடந்தனன் என்னும் இறந்தகால வினைப்பகுபதம் நட என்னும் பகுதியும் அன் என்னும் விகுதியும் இறந்தகாலம் தரும் தகர இடைநிலையும் அன்சாரியையும் பெற்றுப், பகுபத **உறுப்புக்களுள் பகுதி ஒழிந்தன** இடைச்சொல் ஆதலின், "இடையுரி வடசொலி னியம்பிய கொளாதவும்" (நூ. 239) என்பதனால் பகுதி ஈற்றில் நின்ற உயிர்முன் வந்த தகர இடைநிலை மிகாது, அதற்கு இனம் மிகுந்து, இடைநிலைத் தகரவொற்றின்மேல் சாரியை அகர உயிர் ஏறிச், சாரியையீற்று னகரவொற்றின்மேல் விகுதி அகர உயிர் ஏறி[149] முடிந்தது.

நடவாநின்றான் என்னும் நிகழ்கால வினைப்பகுபதம் நட என்னும் பகுதியும் ஆன் என்னும் விகுதியும் ஆநின்று என்னும் இடைநிலையும் பெற்று, உடம்படுமெய் தோன்றி, **இடைநிலை ஈற்றுக்** குற்றுகரம் கெட்டு, உயிர் ஏறி முடிந்தது.

நடப்பான் என்னும் எதிர்கால வினைப்பகுபதம் நட என்னும் பகுதியும் ஆன் என்னும் விகுதியும் பகர இடைநிலையும் பெற்று,

---

[149] **நடந்தான் என்னும் வினைப் பகுபதத்தின் சொல்முடிபை மயிலைநாதரும் (நன். 144) விளக்கமாகக் கூறுவார்.**

"இயல்பினும் விதியினு நின்ற வுயிர்முன்
கசதப மிகும்" (நூ. 165)

என்பதனால் பகரம் மிகுந்து, உடன்மேல் உயிர் ஏறி முடிந்தது.

நடந்தது என்னும் அஃறிணை ஒருமைப்படர்க்கை இறந்தகால வினைப்பகுபதம் நட என்னும் பகுதியும் து என்னும் விகுதியும் தகர இடைநிலையும் துவ்விகுதிக்கும் தகர இடைநிலைக்கும் இடையே அகரச்சாரியையும் பெற்று முடிந்தது.

நடவாய் என்னும் முன்னிலை ஏவலொருமை எதிர்கால வினைமுற்றுப் பகுபதம் நட என்னும் பகுதியும் ஆய் என்னும் விகுதியும் பெற்று, வகர உடம்படுமெய் தோன்றி, விகுதி ஆகார உயிர் ஏறி முடிந்தது.

நடப்பியாய் என்னும் ஏவற் பிறவினைப்பகுபதம் நட என்னும் பகுதியும் பி என்னும் விகுதியும் பெற்றுப், பகரம் மிகுந்து, இரண்டும் ஓர் பகுதியாய் நின்று, மேல் வரும் ஆய் விகுதியோடு புணர்ந்து, யகர உடம்படுமெய் தோன்றி, விகுதி ஆகார உயிர் ஏறி முடிந்தது.

நடப்பிப்பியாய் என்னும் அவ்வினைப் பகுபதம் நடப்பி என்னும் பகுதியும் பி என்னும் விகுதியும் பெற்றுப், பகரம் மிகுந்து, அனைத்தும் ஓர் பகுதியாய் நின்று, மேல் வரும் ஆய் விகுதியோடு புணர்ந்து, யகர உடம்படுமெய் தோன்றி, விகுதி ஆகார உயிர் ஏறி முடிந்தது.

விளம்பிய பகுதி வேறானவையும் இவ்வாறே முடிந்து, அனைத்தும் ஓர் பகுதியாய் நின்று, மேல் வரும் அன், ஆன் முதலிய விகுதியோடு புணர்ந்தமை காண்க.

நடவான் என்னும் எதிர்மறை வினைப்பகுபதம் நட என்னும் பகுதி எதிர்மறை ஆகார விகுதியோடு புணர்ந்து, இரண்டும் ஓர் பகுதியாய் நின்று, மேல் வரும் ஆன் விகுதியோடு புணர்ந்து, "ஒருமொழி மூவழிக் குறைதலு மனைத்தே" (நூ. 156) என்பதனான் விகுதியினது ஆகாரம் குறைந்து முடிந்தது.

நடவா என்னும் அஃறிணைப் பன்மைப்பகுபதம், "ஆவே யெதிர்மறைக் கண்ண தாகும்" (நூ. 329) என்ப ஆகலின் பால் காட்டும் ஆகார விகுதியன்றி எதிர்மறை ஆகாரம் வேண்டாது முடிந்தது.

நடந்திலன், நடவாநின்றிலன் என்பவற்றுள் கால இடைநிலையும் அவற்றை மறுத்த இல் என்னும் எதிர்மறை இடைநிலையும் தந்து, அவற்றை ஓர் பகுதி ஆக்கி முடிக்க.

இவ்வாறே பெயரெச்ச வினையெச்சங்களும் பிறவும் பகுதி, விகுதி முதலிய உறுப்புக்களோடு ஏற்றவாறு அமைந்து கிடந்தமை காண்க.

<எழுதப்படுவது[150] என்னும் பொருட்கண் எழுது என்னும் முதனிலை முன்னர்ச் செயப்படுபொருண்மை உணர்த்தும் ஐகாரவிகுதி புணர்ந்து கெட்டுக், கெட்டவழித் தகரம் இரட்டித்து, எழுத்து[151] என முடிந்தது.>

<ஊண்,[152] தீன், கோள் என்றாற் போல்வனவும் செயப்படுபொருண்மை உணர்த்தும் ஐகாரவிகுதி புணர்ந்து கெட்டு, முதல் நீண்டு நின்றன.

திரை, நுரை, அலை, தளிர், பூ, காய், கனி என்றாற் போல்வன வினைமுதற் பொருண்மை உணர்த்தும் இகரவிகுதி புணர்ந்து கெட்டு நின்றன.

"கெடுவாக வையா துலகம்" (குறள். 117) என்புழிக் கெடு என்பது புடை- பெயர்ச்சியை உணர்த்தும் தல்விகுதி கெட்டு நின்றது. கேடு என்பது அவ்வாறாய் முதல் நீண்டு நின்றது எனக் கொள்க.

ஏனையவும் இவ்வாறே ஏற்றபெற்றி அறிந்து முடித்துக்கொள்க.

திரை, நுரை, அலை, தளிர் என்றாற் போல்வன விகுதி குன்றி, முதனிலை மாத்திரையாய் நிற்றல்பற்றி இவற்றை முதனிலை வினைப்பெயர் என வழங்குப.

ஐகாரவிகுதி செயப்படுபொருண்மை உணர்த்துதல் நடவை, சேக்கை, உடுக்கை, தொடை, விடை என்றாற் போல்வனவற்றுள்ளும் இகரவிகுதி வினைமுதற் பொருண்மை உணர்த்துதல், "சேர்ந்தாரைக் கொல்லி" (குறள். 306), நூற்றுவரைக் கொல்லி, நாளோதி, நூலோதி என்றாற் போல்வனவற்றுள்ளும் காண்க. இவ்விகுதிகள் சிறுபான்மை பிற பொருள் உணர்த்தியும் வரும். வடநூலாரும் வினைப்பெயர் விகுதிகள் கூறிய நியமம் தப்பிப் பிற பொருள் உணர்த்தியும் வரும் எனக் கொள்வர்.

---

[150] தொல்காப்பியச் சூத்திர விருத்தி (பக். 58).

[151] எழுத்து என்னும் தொழிற்பெயருக்குச் சாமிநாத தேசிகர் கூறும் விளக்கம் (இல. கொ. 86) ஈண்டு ஒப்பிடத் தக்கது.

[152] தொல்காப்பியச் சூத்திர விருத்தி (பக். 61-62).

**உடுக்கை என்பது உடுக்கப்படும் பொருளை உணர்த்துங்கால் ஐகாரவிகுதித்து என்றும் உடுத்தல் எனப் புடைபெயர்ச்சியை உணர்த்துங்கால் கைவிகுதித்து என்றும் தெரிந்து உணர்ந்துகொள்க.>**

"பகுதி விகுதி" (நூ. 133) என்னும் சூத்திரம் முதல் இச்சூத்திரம் ஈறாகப் பகுபதங்களை மேலோர் முடித்தவாறு முடித்துக் காட்டினமையின் இது முடித்துக் காட்டல் என்னும் உத்தி.

முன்னைத் தமிழ்நூல்களுள் இல்லனவற்றை இவ்வாசிரியர் தாமே பகாப்பதம், பகுபதம் என முன்னர் (128) நாட்டி, இச்சூத்திரங்காறும் அவற்றிற்கு இலக்கணம் தந்து நிறுத்தமையின் தாஅன் நாட்டித் தனாது நிறுப்பு என்னும் மதம். (18)

### வடமொழியாக்கத்திற்குப் பொதுவிதி

146. **இடையி னான்கு மீற்றி லிரண்டும்**
**அல்லா வச்சை வருக்க முதலீறி**
**யவ்வாதி நான்மை ளவ்வாகு மையைம்**
**பொதுவெழுத் தொழிந்தநா லேழுந் திரியும்.**

எ-னின், இவ்வியல் மொழியாக்கம் ஆதலின் ஆரியமொழி திரிந்து வடமொழி ஆமாறு உணர்த்துவான் தொடங்கி, அவற்றின் பொதுவிதி உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: ஆரியமொழியுள் அச்சு என்று வழங்கும் உயிர் பதினாறனுள்ளும் இடையில் நின்ற ஏழாம் உயிர் முதல் நான்கும் ஈற்றில் நின்ற இரண்டும் ஆன ஆறும் ஒழிந்து நின்ற அ, ஆ, இ, ஈ, உ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ என்னும் பத்தும் அல் என வழங்கும் முப்பத்தேழு மெய்யுள்ளும் க, ச, ட, த, ப என்னும் ஐந்து வருக்கத்தின் இடையில் உரப்பியும் எடுத்தும் கனைத்தும் சொல்லப்பட்டு நிற்கும் மூன்றும் ஒழிந்த க, ங, ச, ஞ, ட, ண, த, ந, ப, ம என்னும் பத்தும் ய, ர, ல, வ என்னும் நான்கும் ளவ்வும் ஆகும் இருபத்தைந்தும் தமிழிற்கும் ஆரியத்திற்கும் பொதுவெழுத்தாம். இவையன்றி மேல் உயிருள் ஒழிந்த ஆறும் ஐந்து வருக்கங்களினும் இடைகளின் ஒழிந்த பதினைந்தும் முப்பதாம் மெய் முதலான எட்டனுள் ளகரம் ஒழிந்த ஏழும் ஆன இருபத்தெட்டும் ஆரியத்திற்குச் சிறப்பெழுத்தாய்த் தமக்கு ஏற்ற பொதுவெழுத்தாகத் திரிந்து வடமொழி ஆம் எ-று.

மேல், "ஏழாமுயிர்" (நூ. 147) என விதப்பார் ஆதலின், 'இடையி னான்கு' என விதவாது கூறினார்.

'பொதுவெழுத்து' எனவே சிறப்பெழுத்து என்பது பெற்றாம். தமிழை நோக்கிச் சிறப்பு ஆயின.

சிறப்பெழுத்துத் திரியும் என வரையறை கூறவே பொதுவெழுத்து இயல்பாயும் தமக்கு ஏற்ற விகாரமாயும் வரும் என்பதூஉம் கூறினாராயிற்று. (19)

ஆரியச் சிறப்பெழுத்துக்கள் திரியுமாறு

147. **அவற்றுள்,**
**ஏழாமுயி ரிய்யு மிருவுமை வருக்கத்**
**திடையின் மூன்று மவ்வம் முதலும்**
**எட்டே யவ்வு முப்பது சயவும்**
**மேலொன்று சடவு மிரண்டு சதவும்**
**மூன்றே யகவு மைந்திரு கவ்வும்**
**ஆவீ றையு மீயீ றிகரமும்.**

எ-னின், மேலதற்குச் சிறப்புவிதி உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: மேல், "திரியும்" (நூ. 146) என்றவற்றுள் சிறப்பெழுத்தாகிய ஏழாம் உயிர் இகரமும் இருவும் ஆம்; ஐந்து வருக்கங்களினும் இடையில் நின்ற மூன்றும் அவ்வவ் வருக்கங்களின் முதலெழுத்து ஆம்; எட்டாம் மெய்யான சவ்வருக்கத்துள் எடுத்துச் சொல்லும் மெய் ஒரோவிடத்து யகரமும் ஆம்; முப்பதாம் மெய் மொழிமுதற்கண் சகரமும் இடைக்கண் யகரமும் ஆம்; முப்பத்தொன்றாம் மெய் மொழிமுதற்கண் சகரமும் இடைக்கண் டகரமும் ஆம்; முப்பத்திரண்டாம் மெய் மொழிமுதற்கண் சகரமும் இடைக்கண் தகரமும் ஆம்; முப்பத்துமூன்றாம் மெய் மொழிமுதற்கண் அகரமும் இடைக்கண் ககரமும் ஆம்; முப்பத்தைந்தாம் மெய் இரண்டு ககரம் ஆம்; பொதுவெழுத்துள் மொழியிறுதி ஆகாரம் ஐகாரம் ஆம்; மொழியிறுதி ஈகாரம் இகரம் ஆம் எ-று.

மேல், "திரியும்" (நூ. 146) எனப் பொதுவிதி போந்தவற்றுள் பயின்று வருவன-வற்றிற்குத் திரிபு கூறி, ஏனைய வந்தவழிக் காண்க என்பார் இகரமும் ஆகும் எனப் பயனிலை கொடுத்து முடியாது, 'இகரமும்' என அவாய்நிலையாக முடித்தார்.

வ-று: இடபம், விடபம், திட்டி எனவும் இருடி, மிருகம், விருத்தி எனவும் ஏழாம் உயிர் இகரமும் இருவும் ஆயிற்று. நகம், நாகம், மேகம் எனவும் சலவாதி, விசயம், சருச்சரை எனவும் பீடம், பீடை, திடம் எனவும் தலம், தினம், தரை எனவும் பலம், பந்தம், பாரம் எனவும் ஐந்து வருக்கத்தினும் உரப்பியும் எடுத்தும் கனைத்தும்

சொல்லும் மூன்றும் அவ்வம் முதலாயின. அயம், பங்கயம் என எட்டாம் மெய் யகரமும் ஆயிற்று. சாலை, சூலை எனவும் மயானம் எனவும் முப்பதாம் மெய் சகரமும் யகரமும் ஆயிற்று. சட்டி எனவும் இடபம் எனவும் முப்பத்தொன்றாம் மெய் சகரமும் டகரமும் ஆயிற்று. சித்தி, சூத்திரம், சேனை எனவும் ஆதனம், வாதனை எனவும் முப்பத்திரண்டாம் மெய் சகரமும் தகரமும் ஆயிற்று. அரன், அரி எனவும் சிங்கம், மோகம் எனவும் முப்பத்துமூன்றாம் மெய் அகரமும் ககரமும் ஆயிற்று. பக்கம், தக்கிணம் என முப்பத்தைந்தாம் மெய் இரண்டு ககரம் ஆயிற்று. வேலை, சாலை, மாலை, உவமை, வனிதை என ஆகாரவீறு ஐகாரவீறு ஆயிற்று. புரி, மேதிநி, குமாரி என ஈகாரவீறு இகரவீறு ஆயிற்று. (20)

### ஆரியத்தின் ரகர லகர யகரங்கள் திரியுமாறு

148. **ரவ்விற் கம்முத லாமுக் குறிலும்**
**லவ்விற் கிம்முத லிரண்டும் யவ்விற்**
**கிய்யு மொழிமுத லாகிமுன் வருமே.**

எ-னின், இதுவும் அது.

இ-ள்: ரகர லகர யகரங்களை முதலாக உடைய ஆரியமொழிகள் வடமொழி ஆங்கால் அகரம், இகரம், உகரம் என்னும் இம்மூன்று குற்றுயிரும் இங்ஙனம் சொன்னவாறே அவ்வடமொழிகட்கு முதலாய், அம்மூன்று எழுத்திற்கு முன்னர் வரும் எ-று.

வ-று: அரங்கம், இராமன், உரோமம் எனவும் இலாபம், உலோபம் எனவும் இயக்கன் எனவும் வரும். (21)

### ஆரியத்தின் இணையெழுத்துக்கள் திரியுமாறு

149. **இணைந்தியல் காலை யரலக் கிகரமும்**
**மவ்வக் குகரமு நகரக் ககரமும்**
**மிசைவரும் ரவ்வழி யுவ்வு மாம்பிற.**

எ-னின், இதுவும் அது.

இ-ள்: ஆரியமொழியுள் இரண்டு எழுத்து இணைந்து ஓர் எழுத்து நீர்மையாய் நடக்குங்கால் பின் நிற்கும் ய ர லக்கள்மீதே இகரமும் மகர வகரங்கள்மீதே உகரமும் நகரமீதே அகரமும் வந்து வடமொழி ஆம்; இணைந்து முன் நிற்கும் ரகரத்திற்குப் பின்னர் உகரமும் வரும் எ-று.

வ-று: வாக்கியம், வாச்சியம், நாட்டியம் எனவும் வக்கிரம், வச்சிரம், சத்திரம், அப்பிரம் எனவும் சுக்கிலம், ஆமிலம் எனவும் பதுமம் எனவும் பக்குவம் எனவும் அரதனம் எனவும் அருக்கன், அருத்தம், கருப்பம், சருக்கம், தருமம் எனவும் வரும்.

'பிற' என்றமையானே[153] சத்தி, கட்சி, காப்பியம், பருப்பதம் என்றல் தொடக்கத்துத் திரிபும் தூலம், அத்தம், ஆதித்தன், அநத்தம் என்றல் தொடக்கத்துக் கேடும் மற்றும் விகாரத்தால் வருவனவும் கொள்க. (22)

## தமிழுக்குச் சிறப்பெழுத்தும் பொதுவெழுத்தும்

150. **றனழஎ ஒவ்வு முயிர்மெய்யு முயிரள
பல்லாச் சார்புந் தமிழ்பிற பொதுவே.**

எ-னின், வடமொழியாக்கம் கூற வேண்டி ஆரியத்திற்குப் பொதுவெழுத்துச் சிறப்பெழுத்து என விதந்தமையின் (146) இவ்விதப்புத் தமிழிற்கு உண்டோ இன்றோ என்று ஐயுறுவார்க்கு ஐயம் அறுத்தல்[154] நுதலிற்று.

இ-ள்: முதலும் சார்பும் ஆன நாற்பது எழுத்துள்ளும் றகர னகர ழகர எகர ஒகரமான முதலெழுத்து ஐந்தும் உயிர்மெய்யும் உயிரளபெடையும் அல்லாத சார்பெழுத்து எட்டும் தமிழிற்கே சிறப்பெழுத்தாம்; ஒழிந்த இருபத்தேழும் தமிழிற்கும் ஆரியத்திற்கும் பொதுவெழுத்தாம் எ-று.

மெய்யை முற் கூறினார் எகர ஒகரங்கள் பிராகிருதத்திற்கும் உரிய ஆதலின் என்க. (23)

பதவியல் முற்றிற்று.

---

[153] இப்பகுதி மயிலைநாதர் (நன். 148) உரை.

[154] "பதவியலில் எழுத்து விதி கூறின் மயங்கக் கூறலாம் பிற எனின்" என்று மயிலைநாதர் (நன். 149) தடை எழுப்பி, அதற்கு விடையாக இக்கருத்தைக் கூறுவார்.

மூன்றாவது

## உயிரீற்றுப் புணரியல்

### புணர்ச்சி

151. **மெய்யுயிர் முதலீ றாமிரு பதங்களுந்**
**தன்னொடும் பிறிதொடு மல்வழி வேற்றுமைப்**
**பொருளிற் பொருந்துழி நிலைவரு மொழிகள்**
**இயல்பொடு விகாரத் தியைவது புணர்ப்பே.**

எ-னின், நிறுத்த முறையானே (57) மேலை இயலுள் கூறிய பதங்கள் ஒன்றோடு ஒன்று புணருமாறு உணர்த்துவான் தொடங்கிப், புணர்ச்சி இன்னது என்பதூஉம் (151-153) பொதுப் புணர்ச்சியும் (158-161) முறையே தலைப்பெய்து, உயிரீற்றுப் பதம் புணரும் சிறப்புப் புணர்ச்சி கூறுவார் கமுகந்தோட்டம் என்றாற்போல மிகுதி பற்றிய குறியாய் இவ்வியற்கு உயிரீற்றுப் புணரியல் எனப் பெயர் தந்தமையின்[155] இவ்வியலின் வைத்த முறையே புணர்ச்சி இன்னது என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: மெய்யையும் உயிரையும் முதலும் ஈறுமாக உடைய பகாப்பதம், பகுபதம் என்னும் இரண்டு பதங்களும் தன்னொடு தானும் பிறிதொடு பிறிதுமாய் அல்வழிப் பொருளினானாதல் வேற்றுமைப் பொருளினானாதல்[156] பொருந்துமிடத்து நிலை-மொழியும் வருமொழியும் இயல்போடும் விகாரத்தோடும் பொருந்துவது மேற் கூறிய (57) புணர்ச்சியாம் எ-று.

உயிர்மெய் முதல் ஈறாம் எனின் உயிர்மெய் என்னும் ஓர் எழுத்தாகப் பொருள்படும் ஆதலின், 'மெய்யுயிர் முதலீ றாம்' என மெய்யை முற் கூறினார். திசைச்சொல்லும் வடசொல்லும் பெயர், வினை, இடை, உரியாய் அடங்கும் ஆதலின் அவற்றுள் அடக்கி, 'இரு பதங்களும்' என்றார்.

வேற்றுமை அல்லாத வழி அல்வழி ஆதலின் வேற்றுமை அல்வழி எனக் கூறல் வேண்டும். அங்ஙனம் கூறின் வேற்றுமைப் பொருள், அல்வழிப் பொருள் என இரு பொருள்படாது வேற்றுமை என்பது அல்வழியை விசேடித்ததாய் அல்வழிப் பொருள் ஒன்றினும் பொருந்துழி எனப் பொருள்படும் ஆதலின், 'அல்வழி வேற்றுமை' என அல்வழியை முற் கூறினார்.

---

[155] **பல பொருள்களின் தொகுதிக்குப் பெயர் அமையும் வழக்குபற்றி இளம்பூரணர், சேனாவரையர், நச்சினார்க்கினியர் கூறுவது (தொல். கிளவி. 49) இங்கு ஒப்பிடத் தக்கது.**

[156] **சாமிநாத தேசிகர் (இல. கொ. 118) சந்தி நான்கு வகைப்படும் என்பார்.**

இயல்பு எனினும் தன்மை எனினும் இயற்கை எனினும் ஒக்கும். விகாரம் எனினும் செயல் எனினும் செயற்கை எனினும் விதி எனினும் ஒக்கும். இவ்விரண்டனுள்,

"நின்ற சொல்முன் னியல்பா கும்மே" (தொல். தொகை. 2)

என இயற்கையைச் செயற்கையாகவும்,

"இசையா வொருபொரு ளில்லென்றல் யார்க்கும்
வசையன்று வையத் தியற்கை" (நாலடி. 111:1-2)

எனச் செயற்கையை இயற்கையாகவும் கூறுதல் இலக்கணை.

புணரியல் மூன்றனுள்ளும், 'மெய்யுயிர் முதலீ றாமிரு பதங்களும்' இவ்வாறு புணர்ந்து வருதல் காண்க. (1)

அல்வழி வேற்றுமைப் புணர்ச்சிகள்

{152} **வேற்றுமை யைம்முத லாறா மல்வழி
தொழில்பண் புவமை யும்மை யன்மொழி
எழுவாய் விளியீ ரெச்சமுற் றிடையுரி
தழுவு தொடரடுக் கெனவீ ரேழே.**

எ-னின், மேல், "அல்வழி வேற்றுமை" (நூ. 151) என்றார்; அவை இவை என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: வேற்றுமைப் புணர்ச்சி, "பெயரே ஐஆல்" (நூ. 292) என்னும் சூத்திரத்து ஐ முதலிய ஆறு உருபும் தொக்கும் விரிந்தும் வரப், பதங்கள் பொருந்தும் தொடர்ச்சியாம். அல்வழிப் புணர்ச்சி வினைத்தொகை முதலிய ஐந்து தொகைநிலையும் (362) எழுவாய் முதல் ஒன்பது தொகாநிலையும் (374) எனப் பதங்கள் பொருந்தும் தொடர்ச்சி பதினான்காம் எ-று.

வேற்றுமைத் தொகைநிலை, தொகாநிலை என விதவாமையின் அவ்விரண்டும் வேற்றுமைப் புணர்ச்சி என்பதூஉம் முற்றெச்சங்களை விதந்தமையின், 'தொழில்' என்றது வினைத்தொகையை என்பதூஉம் வினைத்தொகை முதல் ஐந்தும் விரிந்தவழி[157] வினைத்தொகை பெயரெச்சமாயும் **பண்பை விளக்கும் மொழி**

---

[157]**"வேற்றுமைத்தொகையும் வினைத்தொகையும் விரிந்தவழி" என்று தொடங்கும் உரைப் பகுதியில் (நூ. 374) இவர் இக்கருத்தை மீண்டும் விளக்குவார்.**

**இடைச்சொல் ஆதலின்** பண்புத்தொகை இரண்டும் **இடைச்சொற் சந்தியாயும்** உவமைத்தொகை இரண்டாம் வேற்றுமையோடு பயனிலையாயும் உம்மைத்தொகை இடைச்சொற் சந்தியாயும் அன்மொழித்தொகை பொற்றொடி என்பது பொன்னால் ஆய தொடியினை உடையாள் எனச் சொற்களும் சந்திகளும் பலவாயும் முடிதலா-னும் வேற்றுமைத்தொகையன்றி இத்தொகைகள் தொகாநிலையும் ஆம் என மேல் சூத்திரம் செய்யாமையானும் இவ்வைந்து தொடரும் தொகைநிலை என்பதூஉம் பெற்றாம்.

இரண்டு என்பதனை, 'முற்று' என்பதனோடும், 'தழுவு தொடர்' என்பதனை எல்லாவற்றோடும் ஒட்டுக.

அடுக்கும் தழுவுதொடர் ஆயினும் ஒரு சொல் அடுக்கி வருதலின் ஏனையபோல் தழுவுதொடர் அன்று என்பார் விதந்து பிற் கூறினார்.

உ-ம்: பொன்னுடையான், பொன்னை உடையான்; கல் எறிந்தான், கல்லால் எறிந்தான்; கொற்றன்மகன், கொற்றனுக்கு மகன்; மலைவீழருவி, மலையின் வீழருவி; மலையுச்சி, மலையினது உச்சி; மலைமுழை, மலைக்கண் முழை என வேற்றுமைப் புணர்ச்சி வந்தன. கொல்யானை, கருங்குதிரை, ஆயன்சாத்தன், பொற்சுணங்கு, இராப்பகல், பொற்றொடி, கொற்றன் கொடுத்தான், கொற்றா கொள், உண்ட சாத்தன், உண்டு வந்தான், உண்டான் சாத்தன், குண்டுகட்டெருமை, "அணங்குகொ லாய்மயில் கொல்லோ கனங்குழை" (குறள். 1081), "நனிபே தையே" (புறம். 227:1), "படைபடை யென்றஞ்சி" (நன். 151 மயிலை.) என அல்வழிப் புணர்ச்சி வந்தன.

தழுவுதொடர் ஆறும் பதினான்கும் எனக் கூறவே தழுவாத் தொடரும் சில உள அவ்விரு வழியும் என்றாராயிற்று. அவை வருமாறு: கைக்களிறு, பொற்குடம், ஆடகப்பூண் என்பன. தழுவுதொடராகிய உருபும் பயனும் உடன் தொக்கமையின் களிறு, குடம், பூண் என்பனவற்றோடு நிலைமொழிகள் தழுவாது தொடர்ந்து, மூன்று விகாரமும் (154) ஏற்ற வேற்றுமைப் புணர்ச்சி.

> "இரும்புதிரித் தன்ன மாயிரு மருப்பிற்
> பரலவ லடைய விரலை தெறிப்ப" (அகம். 4:3-4)

என்பதனுள் மருப்பின் இரலை எனக் கொண்டுகூட்டாக வந்து, இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்கு, மருப்பு என்பது இரலை என்பத-னோடு புணராது, மருப்பிற் பரல் எனப் புணர்ந்து திரிந்தது. இத்தொடக்கத்தன

எல்லாம் தழாத்தொடராய வேற்றுமைப் புணர்ச்சியாம் என்க. "சுரையாழ வம்மி மிதப்ப" (யா. வி. 59) என்பதனுள் மொழிமாற்றாய்ச் சுரை மிதப்ப எனத் தழுவு-தொடராக வருவழி இயல்பாக முடியும் எழுவாய்ப் புணர்ச்சி, "சுரையாழ" (யா. வி. 59) எனத் தழாத்தொடராய் உடம்படுமெய் தோன்றி முடிந்தது. இத்தொடக்கத்தன எல்லாம் தழாத்தொடராய அல்வழிப் புணர்ச்சியாம் என்க.

மாடத்தைக் கட்டினான் என வேற்றுமை உருபும் சாரியையும் விரிந்து நின்ற இருமொழி ஒரு சந்தியாகிய வேற்றுமைச் சந்தியை வேற்றுமை நயம் கருதி, நான்கு சொல் மூன்று சந்தி ஆக்கி, உருபும் சாரியையும் இடைச்சொல் ஆதலின் அல்வழியுள் இடைச்சொற் சந்தி என்று கோடலும் ஒன்று.

"எட்டே வேற்றுமை" (நூ. 291) என மேற் கூறுவார் எழுவாயும் விளியும் ஒழித்து, 'வேற்றுமை யைம்முத லாறு' என்றது என்னை எனின் பெயர்ப்பொருளை வேற்றுமை செய்தலான் வேற்றுமை எட்டு என்பார் எழுவாய்க்கும் விளிக்கும் உருபு பெயரும் பெயரது விகாரமும் அன்றி வேறு உருபு இன்மையின் அவ்விரண்டினையும் ஒழித்துத், தமக்கு என உருபு உடையன இடை நின்ற ஆறு வேற்றுமையுமே ஆதலின் அவற்றின் உருபு ஆறும் தொக்கும் விரிந்தும் இடை நிற்க, அவ்வாறோடும் பதங்கள் பொருந்தும் புணர்ச்சியை வேற்றுமைப் புணர்ச்சி என்றார் என்க.

வினைத்தொகை, பண்புத்தொகை, அன்மொழித்தொகை என்னும் அல்வழிப் புணர்ச்சியவாய தொகைநிலைத் தொடர்மொழிகளை ஒருமொழிகள் என்பாரும்[158] உளர். அவர் கூற்றுத் தாய் மலடி என்றாற் போலும். (2)

## இயல்பு புணர்ச்சி

153. **விகார மனைத்து மேவல தியல்பே.**

எ-னின், மேல், "இயல்பொடு விகாரத் தியைவது" (நூ. 151) என்றார்; அவற்றுள் இயல்பாவது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: மேல் வரும் விகார வகை அனைத்தும் மேவாதது இயல்பு புணர்ச்சியாம் எ-று.

---

[158] இளம்பூரணரும் (தொல். புணர். 8) நச்சினார்க்கினியரும் (தொல். நூன். 24; புணர். 8) வினைத்தொகை, பண்புத்தொகை, அன்மொழித்தொகை என்பவற்றை ஒருமொழிகள் என்று கூறுவர்.

வ-று: பொன்மலை, புகழழகிது, ஒளிமணி என வரும்.

இயல்புக்கு விதி கூற வேண்டுவது என்னை எனின் மலர்க்கணை தொடுத்தான் என விகாரமாயவழி மலராகிய கணையைத் தொடுத்தான் எனவும் மலர்கணை தொடுத்தான் என இயல்பாயவழி மலரையும் கணையையும் தொடுத்தான் எனவும் பொருள் வேறுபடுதலின் கூற வேண்டும் என்க. (3)

## விகாரப் புணர்ச்சி

154. **தோன்ற றிரிதல் கெடுதல் விகாரம்**
**மூன்று மொழிமூ விடத்து மாகும்.**

எ-னின், விகாரம் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: மெய்யேனும் உயிரேனும் உயிர்மெய்யேனும் சாரியையேனும் ஒன்றும் பலவும் தோன்றுதலும் திரிதலும் கெடுதலும் மேற் சொன்ன விகாரமாம். இம் மூவகை விகாரமும்[159] நிலைமொழி வருமொழிகளின் முதல், இடை, கடை என்னும் மூன்று இடத்தும் ஏற்றபெற்றி வரும் எ-று.

உ-ம்: பூக்கொடி, பூங்கொடி: வருமொழிக்கு முதலில் மெய் தோன்றின. பஃறலை: வருமொழி முதலினும் நிலைமொழி ஈற்றினும் மெய் திரிந்தன. நிலவலயம்: நிலைமொழி ஈற்றின் மெய் கெட்டது. அறுபது: நிலைமொழி முதலுயிர் திரிந்து, வருமொழி இடையொற்றுக் கெட்டது. பல்பொருள்: நிலைமொழி ஈற்றுயிர் கெட்டது. நாடுரி: நிலைமொழி ஈற்று உயிர்மெய் கெட்டு டகரம் தோன்றிற்று. தமிழப்பிள்ளை, பனங்காய்: நிலைமொழி ஈற்றில் சாரியை தோன்றின. காட்டாது ஒழிந்தன வந்தவழிக் காண்க.

இவ்விகாரங்கள் நிலைமொழி வருமொழிகளுள் ஒரு மொழியைச் சார்ந்து வந்தன.

ஒருமொழி, தொடர்மொழி என விதவாது பொதுப்பட, 'மொழிமூ விடத்து மாகும்' என்றமையின் இருமொழியைச் சார்ந்து வருவனவும் உள எனக் கொள்க. அவை வருமாறு. ஆவழகிது: வகர உடம்படுமெய் தோன்றிற்று. உரியநெய்: யகர உயிர்மெய் தோன்றிற்று. புளியங்காய்: அம்முச்சாரியை தோன்றிற்று. இத்தோன்றல் விகாரங்கள் நிலைமொழி வருமொழிகளுள் ஒரு மொழிக்கே உரியவன்றி இருமொழியையும் சார்ந்து வந்தமை காண்க. (4)

[159] இவற்றோடு நிலை மாறுதலைக் கூட்டி விகாரம் நால்வகை என்றும் (பி. வி. 26; இல. கொ. 113) சொல்லப்படும்.

## செய்யுள் விகாரம்

155. **வலித்தன் மெலித்த னீட்டல் குறுக்கல்**
**விரித்த றொகுத்தலும் வருஞ்செய்யுள் வேண்டுழி.**

*எ-னின், செய்யுள் விகாரம் உணர்த்துதல் நுதலிற்று.*

*இ-ள்:* அல்வழி வேற்றுமையான் வரும் மேற் கூறிய மூன்று விகாரமுமே அன்றி, ஆறாக இங்ஙனம் கூறிய விகாரங்களும் வருவனவாம் செய்யுளகத்து அடி, தொடை முதலிய நோக்கி அமைக்க வேண்டுமிடத்து எ-று.

இவ்வதிகாரத்துள் கூறும் செய்யுள் முடிபும் பிறவும் அடங்குதற்கு இன்னது நோக்கி என வரைந்து கூறாராயினார்.

வ-று:

"குறுத்தாட் பூதஞ் சுமந்த
அறக்கதி ராழியெம் மண்ணலைத் தொழினே" *(யா. வி. 95)*

இது குறுந்தாள் எனற்பாலது, "குறுத்தாள்" என வலித்தவாறு.

"தண்டையி னினக்கிளி கடிவோள்
பண்டைய ளல்லண் மானோக் கினளே" *(யா. வி. 95*)*

இது தட்டை எனற்பாலது, "தண்டை" என மெலித்தவாறு.

"தீத்தொழிலே கன்றித் திரிதந் தெருவைபோற்
போத்தறார் புல்லறிவி னார்" *(நாலடி. 351:3-4)*

இது பொத்தறார் எனற்பாலது, "போத்தறார்" என நீட்டியவாறு.

"யானை
எருத்தத் திருந்த விலங்கிலைவேற் றென்னன்
திருத்தார்நன் றென்றேன் றியேன்" *(யா. வி. 62)*

இது தீயேன் எனற்பாலது, "தியேன்" எனக் குறுக்கியவாறு.

"சிறியிலை வெதிரி னெல்விளை யும்மே" (புறம். 109:4)

இது விளையுமே எனற்பாலது, "விளையும்மே" என ஒற்று இல்வழி ஒற்றை விரித்தவாறு. இதனுள் சிறியவிலை எனற்பாலது, "சிறியிலை" எனத் தொகுத்தவாறு.

"தொட்டனைத் தூறு மணற்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத் தூறு மறிவு" (குறள். 396)

இதுவும் தொட்டது, கற்றது எனற்பாலது, "தொட்டு", "கற்று" எனத் தொகுத்தவாறு. பிறவும் அன்ன. (5)

## செய்யுள் விகாரம் வரும் இடம்

**156. ஒருமொழி மூவழிக் குறைதலு மனைத்தே.**

எ-னின், இதுவும் அது.

இ-ள்: அடி, தொடை முதலிய நோக்கித், "தொகுக்கும்வழித் தொகுத்த"லன்றி (தொல். எச்ச. 7), வழக்கின்கண் மரூஉப்போலச் செய்யுட்கண் மரூஉவாய், அடிப்பாடாக ஒரு மொழி முதல், இடை, கடை என்னும் மூன்று இடத்தும் குறைந்து வருதலும் செய்யுள் விகாரமாம் எ-று.

வ-று: "மரையிதழ் புரையு மஞ்செஞ் சீறடி" (யா. வி. 95) எனவும், "வேதின வெரிநி னோதி முதுபோத்து" (குறுந். 140:1) எனவும், "நீலுண் டுகிலிகை கடுப்ப" (யா. வி. 95) எனவும் முறையே தாமரை, ஓந்தி, நீலம் எனற்பாலன குறைந்தவாறு காண்க.

செய்யுட்கே உரிய விகாரங்களை ஈண்டுக் கூறியது என்னை எனின்[160] செய்யுளகத்து அல்வழி வேற்றுமையான் வரும் மூன்று விகாரமும் இவ்வொன்பது விகாரமும் வருதலின் வேறுபாடு அறிதற்கு என்க. (6)

## புணர்ச்சிக்கண் விகாரத்தின் எண்ணிக்கை

**157. ஒருபுணர்க் கிரண்டு மூன்று முறப்பெறும்.**

எ-னின், அல்வழி வேற்றுமைப் புணர்ச்சி விகாரத்தின் வருவதோர் ஐயம் அறுத்தல் நுதலிற்று.

---

[160] **செய்யுட்கே உரிய விகாரங்களை ஈண்டு வைத்ததற்கு மயிலைநாதர் (நன். 155) நான்கு காரணங்களைக் காட்டி விளக்குவார்.**

இ-ள்: ஒரு புணர்ச்சிக்கண் தோன்றல், திரிதல், கெடுதல் என்ற விகாரம் எத்துணை வரும் என்று ஐயுறற்க; ஒன்றே அன்றி இரண்டும் மூன்றும் வரப்பெறும் எ-று.

"விகாரத் தியைவது புணர்ப்பு" (நூ. 151) எனவே ஒன்று வருதல் கூறாதே அமைதலின், 'இரண்டு மூன்றும்' என்றார்.

வ-று: யானைக்கோடு, நிலப்பனை, பனங்காய் என முறையே காண்க. (7)

பொதுப் புணர்ச்சி

{158} **எண்மூ வெழுத்தீற் றெவ்வகை மொழிக்கும்**
**முன்வரு ஞநமய வக்க ளியல்புங்**
**குறில்வழி யத்தனி யைந்நொது முன்மெலி**
**மிகலுமாம் ணளனல வழிநத் திரியும்.**

எ-னின், பொதுப் புணர்ச்சி உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: இயல்பாகவும் விதியாகவும் இருபத்துநான்கு எழுத்தையும் (107) ஈறாக உடைய பெயர்ச்சொல், வினைச்சொல், இடைச்சொல், உரிச்சொல், திசைச்சொல், வடசொல் என்பன நிலைமொழியாக நிற்க, இவற்றிற்கு முன்னர் வரும் ஞகார நகார மகார யகார வகாரங்கள் அல்வழி வேற்றுமையாய இருவழியும் இயல்பாதலும் குற்றெழுத்தின் பின் வரும் யகரவொற்றே ஓர் எழுத்து ஒரு மொழியான உயிர், உயிர்மெய் என்னும் ஐகாரமே நொவ்வே துவ்வே என்பனவற்றிற்கு முன்னர் வரும் ஞகார நகார மகாரங்கள் பிற சொற்கள்முன் இயல்பாதலன்றி மிக்கு முடிதலும் ஆம்; ணகார ளகார னகார லகாரங் கட்கு முன் வரும் நகாரம் **பிற ஈற்றின்** முன் இயல்பாதலன்றித் திரியும் எ-று.

'எவ்வகை மொழிக்கும்' என்றமையான் விதியீறும் பெற்றாம்.

நகரம் இவ்வாறு திரியும் என ஈண்டுக் கூறிக் குறைவறாமையின் மேலவற்றோடு ஒருங்கு எண்ணாது விதந்தார்.

புணரியலிடத்து யாண்டும் அல்வழி, வேற்றுமை எனக் குறிப்பாயேனும் வெளிப்-படையாயேனும் விதவார் ஆயின் இருவழியும் கொள்க.

உ-ம்: விள, பலா, புளி, தீ, கடு, பூ, சே, பனை, கோ, கௌ; உரிஞ், மண், பொருந், மரம், பொன், **வேய்,** வேர், வேல், தெவ், யாழ், வாள், எஃகு என நிறுத்தி ஞான்றது, நீண்டது, மாண்டது, யாது, வலிது எனவும் ஞாற்சி, நீட்சி, மாட்சி, யாப்பு, வலிமை

எனவும் விளவை நாட்டினான், மண்ணை வைத்தான் எனவும் வருவித்து இருவழியும் வருமொழிக்கு முதலாய மென்கணமும் இடைக்கணமும் இயல்பாயவாறு காண்க. ஒழிந்த உயர்திணைப்பெயர் முதலிய அறுவகைச் சொற்களினும் இவ்வாறே ஒட்டுக. மெய், கை: ஞான்றது, நீண்டது, மாண்டது எனவும் ஞாற்சி, நீட்சி, மாட்சி எனவும் இருவழியும் மிக்கன. நொ, து: ஞெள்ளா, நாகா, மாடா என இவை வினை ஆகலின் அல்வழியில் மிக்கன.

தொழிற்பெயர் இறுதிமெய் உகரம் பெறுதலும் (207) நகரத்திரிபும் (208) மேல் வரும் சிறப்புச் சூத்திரத்துள் காண்க.

'மெலி மிகலுமாம்' என எண்ணின்கண் நிற்கும் எச்சவும்மையானே நொ, து என்னும் இரண்டு சொல் முன்னும் இடையினம் மிகலும் ஆம் எனக் கூறினாராயிற்று.

அவை வருமாறு: நொய் யவனா, நொவ் வளவா, துய் யவனா, துவ் வளவா என வரும். இடையினம் மிகுதல் குறில்வழி யவ்விற்கும் தனி ஐக்கும் பொருந்தாமையின் உம்மையால் தழீஇயினார். இவ்வாறு இடையினம் மிகுதலை ஆசிரியர் தொல்காப்பியரும்,

"அவற்றுள்,
மெல்லெழுத் தியற்கை யுறழினும் வரையார்" (தொல். தொகை. 3)

என உம்மையால் தழீஇயினார். அச்சூத்திரத்திற்கு அவ்வாசிரியர் கருத்தன்றி வேறு உரை செய்வாரும்[161] உளர். நொ, து என்னும் இவ்விரண்டு சொல் முன்னும் மெல்லினமும் இடையினமும் மிகாவேல் புணர்ச்சியின்றி விட்டிசை போலும். அற்றேல் வாழைபழம், கீரைகறி என்றாற் போலும்.

எகரவீற்றிற்கு உதாரணம் காட்டிற்றிலம். அது வினா இடைச்சொற்கண் அன்றி ஈறாகாமையானும் அவ்வினாவிற்கு எய்தியது விலக்கிப் பிறிதுவிதி மேல் (163) கூறுதலானும் என்க.

இச்சூத்திரம் முதலியன தொடர்ச்சொற் புணர்த்தல் என்னும் உத்தி. (8)

159. **பொதுப்பெய ருயர்திணைப் பெயர்க ளீற்றுமெய்**
**வலிவரி னியல்பா மாவி யரமுன்**
**வன்மை மிகாசில விகாரமா முயர்திணை.**

[161] இளம்பூரணரும் நச்சினார்க்கினியரும் அச்சூத்திரத்திற்கு (தொல். தொகை. 3) வேறு உரை கூறுவர்.

எ-னின், இதுவும் அது.

இ-ள்: இருதிணைப் பொதுவான பெயர்க்கும் உயர்திணைப்பெயர்க்கும் ஈறான மெய்கள் வல்லின முதன்மொழி வந்தால் இயல்பாம். உயிரே யகரமே ரகரமே என்னும் இவ்வீற்று அவ்விரு பெயர்கள் முன்னரும் வரும் க ச த பக்கள் மிகாவாம். மெய், உயிர் ஈற்று உயர்திணைப்பெயர்கள் நாற்கணங்களோடும் புணருமிடத்து நிலைமொழி வருமொழிகள் விகாரப்படுவனவும் சில உளவாம் எ-று.

வல்லினத்துள் மயங்காதன மயங்கின் ஈற்றுமெய் விகாரப்படுவனவும் உள ஆதலின் பொதுப்பட, 'வலிவரின்' என்றும் வல்லினம் மிகுதற்கு உரிய ழகரம் அஃறிணைக்கு அன்றி இவ்விரு பெயர்க்கும் ஈறாகாமையின் அதனை ஒழித்து, 'யரமுன்' என்றும் வன்கணமே அன்றி ஏனைக் கணங்கள் புணரினும் விகாரப்படும் ஆதலின் இறந்தது தழீஇய எச்சவும்மை கொடுத்து விகாரமுமாம் என்னாது, 'விகாரமாம்' என்றும் அவ்விகாரம் நிலைமொழி, வருமொழி இரண்டினும் ஏற்றபெற்றியாக வருதலின் உயர்திணை ஈறு என்னாது, 'உயர்திணை' என்றும் கூறினார். உயர்திணைப்-பெயரைப் பின் வைத்தார் பின்பும் எடுத்து விதத்தற்கு என்க.

உ-ம்: சாத்தன், கொற்றன், ஆண்: குறிது, சிறிது, தீது, பெரிது; குறியன், சிறியன், தீயன், பெரியன் எனவும் கை, செவி, தலை, புறம் எனவும் பொதுப்பெயர் இறுதி னகர ணகரங்கள் வன்மை வர இருவழியும் இயல்பாயின. ஊரன், அவன்: குறியன், சிறியன், தீயன், பெரியன் எனவும் கை, செவி, தலை, புறம் எனவும் உயர்திணைப்பெயர்கள் ஈற்று னகரம் வன்மை வர இருவழியும் இயல்பாயிற்று. பிறவும் அன்ன.

சாத்தி, கொற்றி, தாய்: குறிது, சிறிது, தீது, பெரிது; குறியள், சிறியள், தீயள், பெரியள் எனவும் கை, செவி, தலை, புறம் எனவும் பொதுப்பெயர் ஈற்று இகர யகரங்கள் முன் வந்த வல்லினம் இருவழியும் மிகாவாயின. நம்பி, விடலை: குறியன், சிறியன், தீயன், பெரியன் எனவும் கை, செவி, தலை, புறம் எனவும்[162] சேய்: குறியன், சிறியன், தீயன், பெரியன் எனவும் கை, செவி, தலை, புறம் எனவும் அவர், ஒருவர்: குறியர், சிறியர், தீயர், பெரியர் எனவும் கை, செவி, தலை, புறம் எனவும் உயர்திணை இகர ஐகார யகர ரகரங்கள் முன் வந்த வல்லினம் இருவழியும் மிகாவாயின. பிறவும் அன்ன.

கபிலபரணர், வடுகநாகன், அரசவள்ளல் எனவும் ஆசீவகப்பள்ளி, குமரகோட்டம்,

---

[162] ஆறுமுக நாவலர் பதிப்புகளில் இவ்வுதாரணங்கள் இல்லை. சாமிநாதையர் பதிப்புகளில் இவை வேறு வகையில் அமைந்துள்ளன.

குமரக்கோட்டம் எனவும் இருவழியும் உயர்திணையுள் சில தமக்கு ஏற்ற விகாரமாயின. பிறவும் அன்ன. (9)

## 160. ஈற்றியா வினாவிளிப் பெயர்முன்வலி யியல்பே.

எ-னின், இதுவும் அது.

இ-ள்: மூன்று ஈற்று வினா (67) முன்னும் யா என்னும் வினாப்பெயர் (67) முன்னும் உயிரீறு ஒற்றீறாய விளிப்பெயர்கள் (304) முன்னும் வரும் வல்லினம் இயல்பாம் எ-று.

உ-ம்: நம்பியா கொண்டான், சென்றான், தந்தான், போயினான்; உண்கா கொற்றா, சாத்தா, தேவா, பூதா எனவும் யா குறிய, சிறிய, தீய, பெரிய எனவும் வினாமுன் வல்லினம் இயல்பாயின. நம்பி, நம்பீ; விடலை, விடலாய்; கிள்ளை, கிள்ளாய்; சாத்தி, சாத்தீ; தாய், தாயே: கொள், செல், தா, போ என உயர்திணைப்பெயர், அஃறிணைப்-பெயர், பொதுப்பெயரின் (305-306) அண்மை விளி முன்னும் சேய்மை விளி (313) முன்னும் வரும் வல்லினம் இயல்பாயின. பிறவும் அன்ன.

இறுதி ஏகார, ஓகார வினாமுன் வரும் வல்லினம் இயல்பாதற்கு உதாரணம் காட்டிற்றிலம் அவ்விரண்டற்கும் மேல் சிறப்புவிதி, "இடைச்சொல் லேயோ" (நூ. 201) என்னும் சூத்திரத்துள் அடக்கிக் கூறுதலின். (10)

## 161. ஆவி யரழ விறுதிமுன் னிலைவினை
## ஏவன்முன் வல்லின மியல்பொடு விகற்பே.

எ-னின், இதுவும் அது.

இ-ள்: உயிரையும் ய, ர, ழ என்னும் மூன்று ஒற்றையும் இறுதியாக உடைய விகுதியுருபினவாய முன்னிலைவினை முன்னும் ஏவல் முன்னும் வரும் வல்லினம் இயல்புடனே விகற்பமாம் எ-று.

உ-ம்: உண்டி, தின்றி, உண்டனை, தின்றனை, உண்டாய், தின்றாய், உண்டனிர், தின்றனிர்: கொற்றா, சாத்தா, தேவா, பூதா; கொற்றரே, சாத்தரே, தேவரே, பூதரே என முன்னிலைவினைமுன் இயல்பாயின. கொணா, எறி, விடு, ஆய், சேர், தாழ்: கொற்றா, சாத்தா, தேவா, பூதா என ஏவல் முன் இயல்பாயின. விகற்பம் வந்தவழிக் கண்டுகொள்க. நட கொற்றா நடக் கொற்றா, எய் கொற்றா எய்க் கொற்றா, ஈர் கொற்றா ஈர்க் கொற்றா, தாழ் கொற்றா தாழ்க் கொற்றா என ஏவல் முன் விகற்பித்தன என்று கோடலும் ஒன்று. இவ்வாறு அருகி வருதலின், 'இயல்பொடு விகற்பே' என விகற்பத்தைப் பிரித்துக்

கூறினார்.

மூகரவீறு முன்னிலைவினை ஏலாமையின் உதாரணம் காட்டிற்றிலம்.

'முன் னிலைவினை' என்றார், 'ஏவல்' என விதந்தது என்னை எனின் முன்னிலை-வினை என்பது தன்மைவினை படர்க்கைவினைகட்கு இனமாகிய முன்னிலைவினையை உணர்த்துமல்லது இனமின்றி முன்னிலை ஒன்றற்கே உரிய ஏவல்வினையை உணர்த்தாமையின் என்க. (11)

உயிரீற்றுச் சிறப்புப் புணர்ச்சி

162. **இஈ ஐவழி யவ்வு மேனை**
**உயிர்வழி வவ்வு மேமுனிவ் விருமையும்**
**உயிர்வரி னுடம்படு மெய்யென் றாகும்.**

எ-னின், உயிரீற்றுப் பதம் புணரும் சிறப்புப் புணர்ச்சி கூறுவான் தொடங்கி, உயிரீற்றின் முன் உயிர்முதல் வந்து புணருமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: இகர ஈகார ஐகாரங்களின் வழியே யகரமும் அ, ஆ, உ, ஊ, ஒ, ஓ, ஔ என்னும் இவ்வேழு உயிர்களின் வழியே வகரமும் ஏகாரத்தின் வழியே யகரமும் வகரமும் உயிர் முதன்மொழி வந்தால் உடம்படுமெய் என்று வரும் எ-று.

இருமை என்பது,

"ஒருமைச் செயலாற்றும் பேதை யெழுமையுந்
தான்புக் கழுந்து மளறு" (குறள். 835)

என்றாற்போலக் குணியைக் குணமாகக் கூறுவதோர் மரபு வழுவமைதி.

உ-ம்: மணியழகிது, தீயெழுந்தது, அவையெளவியம் எனவும் விளவழகிது, பலா-வழகிது, கடுவழகிது, பூவழகிது, நொவ்வழகிது, சோவழகிது, கௌவழகிது எனவும், "ஏயே யிவளொருத்தி பேடியோ வென்றார்" (சீவக. 652:4), சேவழகிது எனவும் அல்வழிக்கண் கூறிய முறையே உடம்படுமெய் பெற்றன. மணியொளி, விளவடி, மணியையளித்தான் என வேற்றுமைக்கண் வந்தன. பிறவும் அன்ன.

"மாயிரு ஞாலம்" (மணி. 14:32) என உரிச்சொல் ஆகாரவீற்றின் வழி யகர உடம்படுமெய் வந்தது என்னை எனின் அஃது, "இடையுரி வடசொலி னியம்பிய கொளாதவும்" (நூ. 239) என்னும் சூத்திரத்தான் அமையும் என்க.

"விண்வத்துக் கொட்கும்" (தொல். புணர். 38 நச்.) என மெய்யீற்றின் வழியும் உயிர் வரின் உடம்படுமெய் பெறும் என்பாரும்[163] உளராலோ எனின் உயிரீற்றின் முன் உயிர்முதல் வரின் உயிரோடு உயிர்க்கு மயக்கம் இன்மையின் புணர்ச்சியின்றி விட்டிசைத்து நிற்கும். ஆதலின் உடம்படாத அவ்விரண்டும் உடம்படுதற்பொருட்டு இடையே வரும் மெய்யை உடம்படுமெய் என்ப ஆகலின் வரும் உயிர் ஏறி ஒற்றுமைப்பட்டுப் புணர்தற்கு உரிய மெய்யீற்றின் வழித் தோன்றும் மெய்யை உடம்படுமெய் என்பது பொருந்தாது. அவ்வகரமெய் தோன்றுதற்கு விதி வரும் சூத்திரத்துள் (163) கூறுப.

உடன்படல் என்பது உடம்படல் என மரீஇயிற்று. "உடம்பா டிலாதவர் வாழ்க்கை" (குறள். 890) என வருதல் காண்க. உயிரோடு உயிர்க்கு மயக்கம் இன்மையின் வரும் உயிர்க்கு உடம்பாக அடுக்கும் மெய் உடம்படுமெய் எனப் பொருள் கூறுதலும் ஒன்று.

இவ்வுடம்படுமெய்களின் தோற்றம் ஏனைத் தோன்றல் விகாரம் போலாது மயங்காதன மயங்குதற்கு ஆசுபோல வந்தமையின் இப்புணர்ச்சியை இயல்பு புணர்ச்சி என்று கூறுவார் கூற்றும் அமையும் என்பார் உடம்படுமெய் தோன்றும் என்னாது, 'உடம்படு மெய்யென் றாகும்' என்றார்.

ஈண்டும் எகரவீறு ஒழியக் கொள்க. (12)

வினா சுட்டுக்களின் முன் நாற்கணமும் வருமாறு

{163} **எகர வினாமுச் சுட்டின் முன்னர்**
**உயிரும் யகரமு மெய்தின் வவ்வும்**
**பிறவரி னவையுந் தூக்கிற் சுட்டு**
**நீளின் யகரமுந் தோன்றுத னெறியே.**

எ-னின், "இஈ ஐவழி" (நூ. 162) என்னும் சூத்திரத்தானும், "எண்மூ வெழுத்தீற்று" (நூ. 158) என்னும் சூத்திரத்தானும் எய்திய விதி விலக்கிப் பிறிதுவிதி வகுத்தல் நுதலிற்று.

இ-ள்: எ என்னும் வினா இடைச்சொல் முன்னும் அ, இ, உ என்னும் மூன்று சுட்டு இடைச்சொல் முன்னும் உயிரும் யகரமும் வந்தால் வகரமும் ஒழிந்த மெய்கள் வந்தால் அம்மெய்களும் செய்யுட்கண் சுட்டு நீண்டு இசைத்தவழி யகரமும் மிகுதல் **முறையாம்** எ-று.

[163] **நச்சினார்க்கினியரும் (தொல். புணர். 38) வைத்தியநாத தேசிகரும் (இல. விள. 68) மெய்யீற்றின் வழியும் உடம்படுமெய் வரும் என்பர்.**

உ-ம்: எவ்வணி, எவ்யானை; அவ்வணி, அவ்யானை; இவ்வணி, இவ்யானை; உவ்வணி, உவ்யானை எனவும் அ, இ, உ: குதிரை, சேனை, தண்டு, படை, ஞாலம், நாடு, **மலை,** வளை எனவும் எங்ஙனம், அங்ஙனம், இங்ஙனம், உங்ஙனம் எனவும், "ஆயிடைத், தமிழ்கூறு நல்லுலகத்து" (தொல். சிற. பாயி. 2-3) எனவும் வகரமும் வந்த மெய்களும் யகரமும் முறையே தோன்றியவாறு காண்க. பிறவும் அன்ன.

'யகரமு மெய்தின் வவ்வும்' என்றமையின் இங்ஙனம் தோன்றிய வகர யகரங்கள் உடம்படுமெய் அல்ல என்பதூஉம், 'சுட்டு நீளின்' எனவே நீடல் உடன்பாடு என்பதூஉம் நீடல் ஒருதலை அன்று என்பதூஉம் யகரம் தோன்றும் எனவே இந்நீட்சி அடி, தொடை நோக்கி, "நீட்டும்வழி நீட்டல்" (தொல். எச்ச. 7) அன்று என்பதூஉம், 'யகரமும்' என எண்ணின்கண் நின்ற இழிவு சிறப்பும்மையான் **யகரத் தோற்றம்** உயிர் வருவழியன்றிப் பிற வழித் தோன்றாது என்பதூஉம், 'நெறி' என்றமையின் இவ்வாறு நெறிப்பட வருவன எல்லாம் கோடல் வேண்டும் என்பதூஉம் பெற்றாம்.

"ஆவயி னான" (தொல். புள்ளி. 1) எனச் சுட்டு நீண்டு, பிற வழி யகரம் தோன்றா-தாயிற்று.

இவ்வாறு நெறிப்பட வருவன வருமாறு: யாங்ஙனம் என யா வினா முன் வருமொழி ஙகரம் மிகுந்தது. ஆங்ஙனம், ஈங்ஙனம், ஊங்ஙனம் எனச் சுட்டு நீண்டவழியும் வருமொழி ஙகரம் மிகுந்தது. ஈது எனவும் ஆங்கு, ஈங்கு, ஊங்கு எனவும் ஆண்டு, ஈண்டு எனவும் சுட்டுப்பெயர்ச்சொல் நீண்டன. "விண்வத்துக் கொட்கும்" (தொல். புணர். 38 நச்.) எனவும், "செல்வுழிச் செல்க" (புறம். 93:10) எனவும், "சார்வுழிச் சார்ந்த தகையள்" (வி. மே.) எனவும் மெய்யீற்று முன் உயிர் வருங்கால் இங்ஙனம் உடம்படுமெய் அன்று எனக் கூறும் வகரம் தோன்றின. பிறவும் அன்ன. (13)

### குற்றுகர முற்றுகரங்களுக்குத் தனிவிதி

{164} **உயிர்வரி னுக்குறண் மெய்விட் டோடும்**
**யவ்வரி னிய்யா முற்றுமற் றொரோவழி.**

எ-னின், குற்றியலுகரத்திற்கு, "இஈ ஐவழி" (நூ. 162) என்னும் சூத்திரத்தான் எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தலும் முற்றியலுகரத்திற்கு அச்சூத்திரத்தான் எய்தியதன்மேல் சிறப்புவிதி வகுத்தலும் நுதலிற்று.

இ-ள்: குற்றியலுகரம் உயிர் முதன்மொழி வந்தால் தனக்கு ஆதாரமான மெய் நிற்கத், தான் கெடும்; யகர முதன்மொழி வந்தால் இகரமாகத் திரியும். முற்றியலுகரமும் அவ்விரு விதியும் பெறும் ஒரோவி**டங்களில்** எ-று.

உ-ம்: நாகரிது, நாகியாது எனவும் நாகின் வளர்ச்சி, நாகியமன் கொள்ளான், தனாதடி எனவும் கதவு, செலவு: அழகிது, யாது எனவும் அதனை, இதனை எனவும் இருவழியும் வந்தன. பிறவும் அன்ன.

கெடும் என்னாது, 'ஓடும்' என்றமையால் **குற்றியலுகரம்** ஒரோவழி, "இஈ ஐவழி" (நூ. 162) என்னும் பொதுவிதி பெறுதலும் கொள்க.

வ-று:

"தன்முக மாகத் தானழைப் பதுவே" (நன். 303),

"ஆற னொருமைக் கதுவு மாதுவும்" (நன். 300)

என வரும்.

ஆசிரியர் தொல்காப்பியர்,

"அவற்றுள்,
மெய்யீ றெல்லாம் புள்ளியொடு நிலையல்" (தொல். புணர். 2)

எனவும்,

"குற்றிய லுகரமு மற்றென மொழிப" (தொல். புணர். 3)

எனவும் கூறிய சூத்திரங்களுள், "அற்று" (தொல். புணர். 3) என்னும் மாட்டேற்றிற்கு மெய்யீறுபோலக் குற்றியலுகர ஈறும் புள்ளியொடு நிற்கும் எனப் பொருள் கொள்ளாது இம்மூன்றாம் சூத்திரத்தைப்,

"புள்ளி யீற்றுமுன் னுயிர்தனித் தியலாது
மெய்யொடுஞ் சிவணு மவ்வியல் கெடுத்தே" (தொல். புணர். 36)

என்னும் முப்பத்தாறாம் சூத்திரத்தோடு மாட்டெறிந்ததாகக் குற்றியலுகரமும் புள்ளி-யீறுபோல உயிர் ஏற இடம் கொடுத்துக் கெடாது, இரண்டு உயிரும் ஒருங்கு நிற்கும் எனக் கூறிச் சாதிப்பாரும்[164] உளர். அவ்வாறு கூறல் மாட்டேற்று இலக்கணம் அன்றாம். அன்றியும் மெய், உயிர் என்பன உவமவாகுபெயராய் வந்த காரணக்குறி அல்லவாக வேண்டும். அதனால் அஃது அந்நூலாசிரியர் கருத்து அன்றாம். இவ்வாறு அந்நூலோடு பொருந்தா உரைக்கோள் பல உள. அவற்றை அந்நூல் கருத்தாகத் துணிந்து அந்நூலோடு இந்நூல் மறுதலைப்பட்டது என்று கோடற்க. (14)

[164] **இளம்பூரணரும் நச்சினார்க்கினியரும் உம்மையால் குற்றியலுகரத்தின் முன்னும் இவ்விதி கொள்க என்று (தொல். புணர். 36) மாட்டெறிந்து பொருள் கூறுவர்.**

## உயிரீற்றின் முன்னர் வல்லினம்

{165} **இயல்பினும் விதியினு நின்ற வுயிர்முன்**
**கசதப மிகும்வித வாதன மன்னே.**

*எ-னின், உயிரீற்றின் முன் வல்லினம் புணருமாறு உணர்த்துவான் தொடங்கி, உயர்திணைப்பெயர் பொதுப்பெயர்க்கு, "**ஆவி யரமுன், வன்மை மிகா**" (நூ. 159)* **என** *எய்தியதன்மேல் சிறப்புவிதியும் அஃறிணைப்பெயர்க்கும் வினை முதலியவற்றிற்கும் எய்தாதது எய்துவித்தலும் நுதலிற்று.*

*இ-ள்: இயல்பினானும் விதியினானும் இறுதியாக நின்ற உயிர்களின் முன்னர் வரும் க ச த பக்கள் பெரும்பாலும் மிகும் விதந்து சொல்லாதன எ-று.*

*விதியீறாவன முன்னைய உயிரீறும் மெய்யீறும் ஒழிய, உயிரீறாய் நிற்பனவும் யாதானும் ஓர் உயிர்* **பின்னர்** *இறுதிக்கண் தோன்றி நிற்பனவும் ஆம். விதப்பாவன சிறப்புவிதி.*

*உ-ம்: ஆடூஉக் குறியன், சிறியன், தீயன், பெரியன்; நம்பிக் கொற்றன் எனவும் சாத்திப் பெண் எனவும் தாராக் கடிது எனவும் ஒற்றைக்கை, வட்டக்கல், தாழக்கோல் எனவும் மூவகைப் பெயர்ப்பதமுன் அல்வழியில் மிக்கன. இவற்றுள் ஒற்றை, வட்ட, தாழ என்பன விதியீறு. ஆடூஉக் கை, செவி, தலை, புறம்; எட்டிப்பூ, காவிதிப்பூ, நம்பிப்பூ எனவும் விளக்கோடு, கடுக்காய், ஆட்டுக்கால் எனவும் உயர்திணை அஃறிணைப் பெயர்ப்பதமுன் வேற்றுமைக்கண் மிக்கன. ஆடிக் கொண்டான், ஆடாக் கொண்டான், ஆடூஉக் கொண்டான், ஆடெனக் கொண்டான், ஆடக் கொண்டான், உண்பாக்குச் சென்றான், பூத்துக் காய்த்தது, பொள்ளெனப் பரந்தது, சாலப் பகைத்தது எனவும் இருளின்றிக் கண்டார், பொருளன்றிக் காணார் எனவும் பல வகைத் தெரிநிலை குறிப்பாய வினையெச்சங்கள்முன் மிக்கன. மற்றைச்சாதி எனவும் கடிக்கமலம் எனவும் சொன்றிக்குழிசி எனவும் கங்கைச்சடை எனவும் இடைச்சொல், உரிச்சொல், திசைச்சொல், வடசொல்முன் மிக்கன. பிறவும் அன்ன.*

*விதவாதன பெரும்பாலும் மிகும் எனவே விதந்தன சிறுபான்மை மிகும் எனவும் விதவாதன சிறுபான்மை மிகா எனவும் கூறினாராயிற்று. அவை வருமாறு: நொக் கொற்றா, துக் கொற்றா, சாத்தா, தேவா, பூதா என்பன, "ஏவன்முன் வல்லின மியல்பொடு விகற்பே" (நூ. 161) என்று முற் கூறிய விதப்புவிதி பெறாது மிகுந்தன. எனவே நொ, து முன் மூவினமும் மிகும் என்றாராயிற்று. ஏரிகரை, குழந்தைகை, குழவிகை, "பழமுதிர் சோலை மலைகிழ வோனே" (முருகு. 317) எனவும் கூப்புகரம்,*

ஈட்டுதனம், நாட்டுபுகழ் எனவும் இருவழியும் பின் விதவாதன மிகாவாயின. பிறவும் அன்ன. (15)

### மரப்பெயர்கள் முன்னர் வல்லினம்

**166. மரப்பெயர் முன்ன ரினமெல் லெழுத்து**
**வரப்பெறு னவுமுள வேற்றுமை வழியே.**

எ-னின், உயிரீற்றுச் சில மரப்பெயர் முன் வரும் வல்லெழுத்திற்கு எய்தியது ஒரு வழி விலக்கிப் பிறிதுவிதி உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: உயிரீற்று மரப்பெயர்கள் முன் மேலைப் பொதுவிதியான் (165) வல்லெழுத்து மிகாது, வரும் வல்லெழுத்திற்கு இனமான மெல்லெழுத்து மிகப்பெறுவனவும் சில உள வேற்றுமைக்கண் எ-று.

பெறுவன என்னும் சொல், 'பெறுன' எனத் தொகுத்தல் விகாரமாயிற்று.

உ-ம்: விளங்காய், களங்கனி, மாங்கொம்பு, செதிள், தோல், பழம் என வரும். பிறவும் அன்ன.

இனமெல் லெழுத்தும் என்னாமையின் பொதுவிதியை இக்காட்டு ஏலா என்க. (16)

### அகரவீற்றுச் சிறப்புவிதி

**{167} செய்யிய வென்னும் வினையெச்சம் பல்வகைப்**
**பெயரி னெச்சமுற் றாற னுருபே**
**அஃறிணைப் பன்மை யம்மமுன்* னியல்பே.**

எ-னின்[165] உயிரீறுகட்குத் தனித்தனி சிறப்புவிதி **கூறுவான்** தொடங்கி, **அகர வீற்றுச் சொல்லுள்** சிலவற்றிற்குக், **"கசதப மிகும்"** (நூ. 165) **என** எய்தியது விலக்கல் நுதலிற்று.

இ-ள்: இங்ஙனம் விதந்த அகரவீற்றுச் சொற்கள் ஆறன் முன்னும் வரும் வல்லினம் இயல்பாம் எ-று.

'பல்வகை' என்பதனை, 'முற்று' என்பதனோடும் ஒட்டுக.

'பெயரி னெச்சம்' என இன்சாரியை தவிர்வழி வந்தமையின் விரித்தல் விகாரம்.

---

[165] **"யம்மமு னியல்பே" என்பது சங்கர நமச்சிவாயர் பாடம்.**

இதன் முதலிறுதிகளின் அகரவீற்றுச் சொல் வைத்தமையான் இடையனவும் அகரவீற்ற என்பதூஉம், 'பல்வகை' என்றதனான்[166] வினையடி நான்கினும் பிறந்த பெயரெச்சம் முற்று என்பதூஉம், 'முற்று' என விதந்தமையின், 'அஃறிணைப் பன்மை' என்றது பெயர் என்பதூஉம் பெற்றாம்.

வினையடி[167] நான்காவன: இயல்பாகிய வினையடி ஒன்றும் ஏனைப் பெயர், இடை, உரியடியாகப் பிறந்த வினையடி மூன்றும் ஆம்.

உ-ம்: உண்ணிய கொண்டான், சென்றான், தந்தான், போயினான் எனச் செய்யிய என்னும் வினையெச்சமுன் இயல்பாயின. உண்ட, உண்ணாநின்ற, உண்ணாத எனவும் கடைக்கணித்த, சித்திரித்த, வெளுத்த, சினவிய, கறுவிய, அமரிய எனவும் திண்ணென்ற, பொன் போன்ற எனவும் சான்ற, உற்ற எனவும் குதிரை, செந்நாய், தகர், பன்றி எனவும் நால்வகைத் தெரிநிலைப் பெயரெச்ச முன்னும் இயல்பாயின. அமர்முகத்த, "கடுங்கண்ண" (புறம். 14:1), சிறிய, பெரிய, உள, இல, பல, சில எனவும் பொன் அன்ன எனவும் கடிய எனவும் குதிரை, செந்நாய், தகர், பன்றி எனவும் மூவகைப் பெயரெச்சக் குறிப்பின் **முன்னும்** இயல்பாயின. முற்றிற்கும் பொருள் வேறுபாடன்றிச் சொல் வேறுபாடு இன்மையின் இவையே காட்டாகக் கொள்க. வாழ்க, வாழிய: கொற்றா, சாத்தா, தேவா, பூதா என வியங்கோள் முற்றின் முன் இயல்பாயின.

முற்றுமுன் இயல்பாம் என்றமையின் அருத்தாபத்தியான் இவ்வினைமுற்று வினையெச்சமாயும் குறிப்புமுற்று ஈரெச்சமாயும் நின்றவழி வரும் வல்லினம் இயல்பாதலும் கொள்க.

வ-று: உண்ட கண்டன எனவும் அமர்முகத்த குதிரை எனவும் அமர்முகத்த கலக்கின எனவும் வரும். தன கைகள், செவிகள், தாள்கள், பதங்கள் என ஆறன் உருபின் முன் இயல்பாயின. பல குதிரை, செந்நாய், தகர், பன்றி எனவும் பல கொடுத்தான், செய்தான், தந்தான், படைத்தான் எனவும் இருவழியும் அஃறிணைப் பன்மைப்பெயர்முன் இயல்பாயின. பிற பெயர்களும் அன்ன. அம்ம கொற்றா, சாத்தா, தேவா, பூதா என

---

[166] 'பல்வகைப் பெயரி னெச்சம்' என்பதைத், "தொழிலும் ஒப்பும் பண்பு முதலானவும் எதிர்மறையில் வருவனவும் எல்லாம் தழுவுதற்கு" என்று மயிலைநாதர் (நன். 166) விளக்குவார்.

[167] இலக்கணக் கொத்து,

"பெயர்வினை யிடையுரி நான்கடி யானும்
பிறக்கும் வினையெனப் பேசுவர் புலவர்"

என்று (நூ. 68) கூறும்.

உரையசை இடைச்சொல் முன் இயல்பாயின.

ஒரு சொல்லையே பல இடத்தும் காட்டியது என்னை எனின் இங்ஙனம் காட்டியவற்றுள் பல என்னும் ஒரு சொல் பெயரெச்சக் குறிப்பாயும் குறிப்பு வினைமுற்றாயும் குறிப்புமுற்று ஈரெச்சம் ஆகும் பெயரெச்சக் குறிப்பாயும் வினையெச்சக் குறிப்பாயும் குறிப்பு வினையால் அணையும் அஃறிணைப் பன்மைப்பெயராயும் பொருளாதி ஆறனுள் (132) பண்பு காரணமாக வரும் அஃறிணைப் பன்மைப்பெயராயும் அறுவகைப்பட்டுப் பொருள் நோக்கம் முதலியவற்றான் இன்னது என்று துணியப்படும் ஆதலான் என்க. பிற சொற்களும் அன்ன. இவ்விகற்பம் எல்லாம் சொல்லதிகாரத்துள் காண்க. (17)

## வாழிய என்னும் வியங்கோள் முற்று

168. **வாழிய வென்பத னீற்றி னுயிர்மெய்**
**ஏகலு முரித்தஃ தேகினு மியல்பே.**

எ-னின், வியங்கோள் முற்றுச்சொற்கு எய்தாதது எய்துவித்தலும் எய்தியவழிப் புணரும் வல்லினத்திற்கு எய்தியது இகந்துபடாமைக் காத்தலும் நுதலிற்று.

இ-ள்: வாழிய என்னும் வியங்கோள் முற்றினது ஈற்று உயிர்மெய் குறைதலும்[168] உரித்து; குறைந்து இகரவீறாய் நின்றாலும் வல்லினம் பொதுவிதியான் (165) மிகாது, சிறப்புவிதியுள் (167) கூறிய இயல்பே ஆம் எ-று.

உ-ம்: ஆ வாழி, அந்தணர் வாழி, "படாதி வாழி" (குறள். 1210*) என ஈற்று உயிர்மெய் குறைந்து வந்தது. வாழி கொற்றா, சாத்தா, தேவா, பூதா எனக் குறைந்தவழியும் வல்லினம் இயல்பாயின.

'ஏகலு முரித்து' என முடித்துப் பின்பு, 'அஃது' எனச் சுட்டிப் புணர்ச்சிவிதி கூறுதலானும் செய்யுள் இறுதிக்கண் வாழி என முடிந்து நிற்றலானும் இது புணர்ச்சி விகாரம் அன்று; கடைக்குறை என்பதூஉம் இவ்வடிப்பாடாகக் குறைந்து இயலும் தன்மை செய்யிய என்னும் வாய்பாட்டு வாழிய என்னும் வினையெச்சத்திற்கு இன்மையின் வாழிய என்னும் வியங்கோள் முற்றிற்கே இவ்விகாரம் கூறினார் என்பதூஉம் பெற்றாம். (18)

---

[168] **உம்மைகள் எதிர்மறைப் பொருளன என்பதால் கெடாமையும் இயல்பு இகந்துபடாமையும் கொள்க என்று மயிலைநாதர் (நன். 167) கூறுவார்.**

### சாவ என்னும் வினையெச்ச இறுதி கெடுதல்

169. **சாவவென் மொழியீற் றுயிர்மெய் சாதலும்விதி.**

எ-னின், சாவ என்னும் நிலைமொழிக்கு எய்தாதது எய்துவித்தல் நுதலிற்று.

இ-ள்: சாவ என்னும் செயவென் எச்ச வினைச்சொல்லினது ஈற்று உயிர்மெய் கெட்டுப் புணர்தலும் விதியாம் எ-று.

உ-ம்: சாக் குத்தினான் என வரும்.

இப்புணர்ச்சி சாவக் குத்தினான் என்னும் புணர்ச்சிபோல் சிறந்தது அன்மையின், 'சாதலும்' என்றும் ஒரோவழி அருகி வருதலின், 'விதி' என்றும் கூறினார். (19)

### பல சில என்னும் சொற்கள் புணருமாறு

{170} **பலசில வெனுமிவை தம்முன் றாம்வரின்**
**இயல்பு மிகலு மகர மேக**
**லகரம் றகர மாகலும் பிறவரின்**
**அகரம் விகற்ப மாகலு முளபிற.**

எ-னின், வருமொழிக்குச், "**செய்யிய வென்னும்**" (நூ. 167) **என்ற சூத்திரத்தான்** எய்தியது இகந்துபடாமைக் காத்தலும் அதன்மேல் சிறப்புவிதியும் நிலைமொழிக்கு எய்தாதது எய்துவித்தலும்[169] நுதலிற்று.

**இதனுள்** மிகுதல், "செய்யிய" (நூ. 167) என்னும் சூத்திரத்தான் விலக்கி, ஈண்டு விதித்தமையின் சிறப்புவிதி ஆயிற்று.

இ-ள்: பல, சில என்னும் இவ்விரு சொல்லும் தம் முன்னர்த் தாம் வரும் ஆயின் இயல்பாகலும் மிகுதலும் அகரம் கெட, லகரம் றகரம் ஆகலும் இவற்றின் முன் பிற மொழிகளுள் யாதானும் ஒன்று வரின் அகரம் நிற்றலும் நீங்கலும் உளவாம் எ-று.

உ-ம்: பலபல, சிலசில என இயல்பாயின. பலப்பல, சிலச்சில என மிக்கன. இம்மிகுதி இயல்புபோல் பயின்று வாராமையின் வல்லினம் விகற்பமாகலும் என்னாது, 'இயல்பு மிகலும்' என்றார். பற்பல, சிற்சில என அகரம் ஏக, லகரம் றகரம் ஆயின.

---

[169] **இப்பகுதியில் சிவஞான முனிவர் செய்த திருத்தம் ஆறுமுக நாவலர் பதிப்புகளில் இடம் பெறவில்லை.**

பல கலை பல்கலை; பல சாலை பல்சாலை; பல தாழிசை பஃறாழிசை; பல படை பல்படை; பல ஞானம் பன்ஞானம்; பல நாள் பன்னாள்; பல மணி பன்மணி; பல வளை பல்வளை; பல யானை பல்யானை; பல அணி பல்லணி; பல ஆயம் பல்லாயம் எனப் பிற வரின் அகரம் விகற்பமாயின. சில என்பதற்கும் இவ்வாறே கொள்க.

'பிற' என்ற மிகையானே பல்பல, சில்சில என அகரம் ஏக, லகரம் றகரம் ஆகாது அருகி வருதலும் பிற வல்லின மொழி வரின் லகரம் றகரத்தோடு உறழும்வழி உறழாது இயல்பாதலும் அகரவீற்றுப் புணர்ச்சியுள் அமையாது ஒழிந்தன உளவேல் அவையும் கொள்க.

அகரம் நீங்க நின்ற பல்லாயம் முதலியன நன்மை, வன்மை, மென்மை, அன்மை, இன்மை என்பனபோல லகர மெய்யீற்றுப் பண்படியாய் நின்று வருமொழியோடு புணர்ந்தன அன்றோ? அவற்றை அகரவீற்றினவாக வைத்துப் புணர்த்தது என்னை எனின் அப்பண்படி பன்மை, சின்மை எனப் பகுதிப்பொருள் விகுதியோடேனும் பலர், பல, சிலர், சில என விகுதிப்பொருள் விகுதியோடேனும் அன்றித் தனித்து நில்லா ஒற்றுமை நயம்பற்றி என்க.

இஃது ஒன்றின முடித்தல் தன்னின முடித்தல் என்னும் உத்திக்கு இனம்.

அகரம் விகற்பமாம் என்ற துணையானே பல், சில் எனப் பண்படி தோன்றினமையின் இவ்விதி அல்வழிக்கே என்பது கூறாதே அமையும் என்க. (20)

## ஆகாரவீற்றுச் சிறப்புவிதி

### {171} அல்வழி யாமா மியாமுற்று முன்மிகா.

எ-னின், ஆகாரவீற்றுச் சொல்லுள் சிலவற்றிற்குக், **"கசதப மிகும்"** (நூ. 165) **என**[170] எய்தியது ஒரு மருங்கு விலக்குதல் நுதலிற்று.

இ-ள்: அல்வழிக்கண் ஆவும் மாவும் ஆகிய இருபெயரும் மியா என்னும் முன்னிலையசை இடைச்சொல்லும் ஆகாரவீற்று அஃறிணைப்பன்மை எதிர்மறை முற்றுவினையும் நிற்க, இவற்றின் முன் வரும் வல்லினம் மிகா எ-று.

உ-ம்: ஆ குறிது, மா குறிது, சிறிது, தீது, பெரிது எனவும் கேண்மியா கொற்றா, சாத்தா, தேவா, பூதா எனவும் உண்ணா குதிரைகள், தின்னா குதிரைகள், செந்நாய்கள்,

[170] **இப்பகுதியில் சிவஞான முனிவர் செய்த திருத்தம் ஆறுமுக நாவலர் பதிப்புகளில் இடம் பெறவில்லை.**

தகர்கள், பன்றிகள் எனவும் வரும்.

'ஆமா' என்ற துணையானே காட்டு ஆ எனவும் பொருள் தர இரட்டுற மொழிந்தமையான் ஆமா குறிது, சிறிது, தீது, பெரிது என மிகாமையும், 'முற்று முன்மிகா' என்றமையான் அருத்தாபத்தியான் அவ்வினையால் அணையும் பெயர் முன் உண்ணா குதிரைகள், தின்னா குதிரைகள், செந்நாய்கள், தகர்கள், பன்றிகள் என மிகாமையும் அவ்வினைமுற்று வினையெச்சம் ஆயவற்றின் முன் உண்ணா கிடந்தன, தின்னா கிடந்தன, சென்றன, தந்தன, போயின என மிகாமையும் கொள்க. உண்ணாக் குதிரைகள், உண்ணாக் கிடந்தன எனப் பொதுவிதியான் (165) மிகுமேல் எதிர்மறைப் பெயரெச்சமும் செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சமும் ஆம் என்க. (21)

172. **குறியதன் கீழாக் குறுகலு மதனோ**
**டுகர மேற்றலு மியல்புமாந் தூக்கின்.**

எ-னின், ஆகாரவீற்றுள் சில சொல்லினது இறுதிக்கு எய்தாதன எய்துவித்தலும் அவ்வழி வருவதோர் ஐயம் அறுத்தலும் நுதலிற்று.

இ-ள்: குற்றெழுத்தின் கீழ் நின்ற ஆகாரம் குறுகலும் அக்குறுகலுடனே உகரம் பெறுதலும் அவ்விரண்டும் இன்றித் தன் இயல்பில் நிற்றலும் ஆகிய மூன்று விதியும் பெறும் செய்யுட்கண் எ-று.

உ-ம்: "சுறமறிவன துறையெல்லாம்" (யா. வி. 12), "நிலவிரி கானல்வாய்" (நன். 171 மயிலை.) எனவும், "இறவுப்புறத் தன்ன" (நற். 19:1), "சுறவுக்கோட் டன்ன" (நற். 19:2), "மருவினென் செய்யுமோ நிலவு" (வி. மே.) எனவும், "நிலாவணங்கு வெண்மணன் மேனின்று" (யா. வி. 22*), "நெடிய கழியு மிரா" (குறள். 1169) எனவும் முறையே காண்க.

ஈண்டு, 'இயல்பு' ஐயம் அறுத்தற்கு உரைத்தார் என்க.

இம்மூன்றும் ஆம் தூக்கின் எனவே வழக்கில் இரண்டும் ஒன்றும் ஆம் என்றா-ராயிற்று.

வ-று: உதித்தது நிலவு, நிலா; கண்டேன் கனவு, கனா எனக் குறுகுதலோடு உகரம் ஏற்றலும் தன் இயல்பும் ஆகிய இரண்டும் வந்தன. தரா, மிடா எனத் தன் இயல்பு ஒன்றுமாய் நின்றன.

இவ்விகாரங்கள் அல்வழி வேற்றுமைப் புணர்ச்சியான் வந்தன அல்ல என்று ஐயம் அறுத்தற்குக் கூறப்பட்டன என்க. இவ்வாறு வருவன எல்லாம் அன்ன. (22)

## இகரவீற்றுச் சிறப்புவிதி

{173} **அன்றி யின்றியென் வினையெஞ் சிகரந்**
**தொடர்பினு ளுகர மாய்வரி னியல்பே.**

எ-னின், இகரவீற்றுச் சொற்களுள் அன்றி, இன்றி என்னும் வினையெச்சக் குறிப்பிற்கு எய்தாதது எய்துவித்தலும் எய்தியவழிப் புணரும் வல்லினத்திற்குக், **"கசதப மிகும்"** (நூ. 165) **என**[171] எய்தியது விலக்கலும் நுதலிற்று.

இ-ள்: அன்றி, இன்றி என்னும் வினையெச்சக் **குறிப்புச்சொற்களினது** ஈற்று இகரம் செய்யுட்கண் உகரமாய் வரும் ஆயின் க ச த பக்கள் பொதுவிதியான் (165) மிகாது இயல்பாம் எ-று.

என் என்னும் வினைத்தொகையும் எஞ்சு என்னும் வினைத்தொகையும்[172] சொல் என்னும் முதற்பெயரோடு முடியாது, அதனகத்து இகரம் என்னும் சினைப்பெயரோடு முடிந்தன.

இவ்வாறு உடம்பொடு புணர்த்திக் கூறினமையின் இதற்கு இதுவே விதி என்பதூஉம், 'உகர மாய்வரின்' எனவே உகரம் ஆதல் உடன்பாடு என்பதூஉம் அஃது ஒருதலை அன்று என்பதூஉம் பெற்றாம்.

உ-ம்:

"நாளன்று போகிப் புள்ளிடை தட்பப்
பதனன்று புக்குத் திறனன்று மொழியினும்
வறிது பெயர்குந ரல்லர் நெறிகொளப்
பாடான் றிரங்கு மருவிப்
பீடுகெழு மலையற் பாடி யோரே" (புறம். 124)

எனவும்,

---

[171] **இப்பகுதியில் சிவஞான முனிவர் செய்த திருத்தம் ஆறுமுக நாவலர் பதிப்புகளில் இடம் பெறவில்லை.**

[172] **வைத்தியநாத தேசிகர் (இல. விள. 91) என் என்பதை எனவென் எச்சமாகவும் எஞ்சு என்பதை முதனிலைத் தொழிற்பெயராகவும் விரித்துப் பொருள் கூறுவதை மறுத்து, அவை இரண்டும் வினைத்தொகை என்று சங்கர நமச்சிவாயர் இப்பகுதியில் விளக்குகிறார்.**

"உப்பின்று
புற்கை உண்கமா கொற்கை யோனே" (தொல். உயிர். 35 இளம்.)

எனவும் வரும். பிறவும் அன்ன. (23)

{174} **உரிவரி னாழியி னீற்றுயிர் மெய்கெட
மருவும் டகர முரியின் வழியே
யகரவுயிர் மெய்யா மேற்பன வரினே.**

எ-னின், **"இஈ ஐவழி"** (நூ. 162) **என்னும் சூத்திரத்தானும், "இயல்பினும் விதியினும்"** (நூ. 165) **என்னும் சூத்திரத்தானும், "எண்மூ வெழுத்தீற்று"** (நூ. 158) **என்னும் சூத்திரத்தானும்**[173] எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தல் நுதலிற்று.

இ-ள்: உரி என்னும் அளவுப்பெயர் வரின் நாழி என்னும் அளவுப்பெயரினது ஈற்று உயிர்மெய் கெட, அவ்வழி டகரவொற்று வரும். உரி என்னும் அளவுப்பெயரின் பின் யகர உயிர்மெய் வரும் அவ்வுயிர்மெய் வருதற்கு ஏற்ற வருமொழிகள் வரும் ஆயின் எ-று.

உ-ம்: நாடுரி எனவும் உரியவுப்பு, உரியபயறு, உரியமிளகு, உரியவரகு எனவும் வரும்.

'ஏற்பன வரின்' எனவே ஏலாதன வரின் உரியரிசி, உரியாழாக்கு, உரியெண்ணெய் என இச்சிறப்புவிதி பெறாது பொதுவிதியே (162) பெறுதல் கொள்க. நாடுரி என்பது நாவுரி என இக்காலத்து மரீஇயிற்று. பொதுவிதியான் (162) வரும் உடம்படுமெய்யை இச்சிறப்புவிதி விலக்கினமையின் நாழியுரி என்பது இலக்கணம் அன்று[174] என்க. (24)

{175} **சுவைப்புளி முன்னின மென்மையுந் தோன்றும்.**

எ-னின், **"இயல்பினும் விதியினும்" (நூ. 165) என்னும் சூத்திரத்தான்**[175] எய்தியதன்மேல் சிறப்புவிதி உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: புளி என்னும் மரமும் பழமும் அன்றி அறுசுவையுள் ஒன்றை உணர்த்தும்

---

[173] இப்பகுதியில் சிவஞான முனிவர் செய்த திருத்தம் ஆறுமுக நாவலர் பதிப்புகளில் இடம் பெறவில்லை.
[174] "நாழியுரி என்னும் முடிபும் கொள்க." என்ற மயிலைநாதர் (நன். 173) உரையை மறுப்பது இப்பகுதி.
[175] இப்பகுதியில் சிவஞான முனிவர் செய்த திருத்தம் ஆறுமுக நாவலர் பதிப்புகளில் இடம் பெறவில்லை.

பெயர் முன் வரும் வல்லினம் மிகுதலே அன்றி, அவற்றிற்கு இனமாய மெல்லினமும் ஒரோவழி மிகும் எ-று.

உ-ம்: புளிங்கறி, சோறு, தயிர், பாளிதம் என வரும்.

பல சுவையும் உடைத்தேனும் (454) மிகுதிபற்றிப் புளிப்பாகிய கறி எனவும் புளிப்பை உடைய கறி எனவும் விரிதலின் இருவழிக்கும் இவையே காட்டாம் என்க.

'மென்மையும்' என்ற இறந்தது தழீஇய இழிவு சிறப்பும்மையால் புளிக்கறி எனப் பொதுவிதியான் (165) வரும் வல்லெழுத்துப்பேறே சிறப்பு உடைத்து என்க. (25)

## இகர ஐகார ஈற்றுச் சிறப்புவிதி

{176} **அல்வழி இஐம் முன்ன ராயின்**
**இயல்பு மிகலும் விகற்பமு மாகும்.**

எ-னின், இகர ஐகார ஈற்று அஃறிணைப்பெயர் முன் வரும் வல்லினத்திற்கு, **"இயல்பினும் விதியினும்"** (நூ. 165) **என்னும் சூத்திரத்தான்**[176] எய்தியது ஒரு **வழி** விலக்கலும் எய்தியது இகந்துபடாமைக் காத்தலும் எய்தியது விலக்கலுடன் விலக்காமையும் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: இகர ஐகார ஈற்று அஃறிணைப்பெயர் முன் வல்லினம் அல்வழிக்கண் வரும் ஆயின் இயல்பாயும்[177] பொதுவிதியான் (165) மிகுந்தும் ஒன்றற்கே ஒரு கால் மிகாதும் ஒரு கால் மிகுந்தும் புணரும் எ-று.

இவ்வீற்று உயர்திணைப்பெயர் **பொதுப்பெயர்கட்கு, "ஆவி யரமுன், வன்மை மிகா"** (நூ. 159) **என்றும், "கசதப மிகும்"** (நூ. 165) **என்றும் வினைகட்கு, "இயல்-பொடு விகற்பே"** (நூ. 161) **என்றும், "கசதப மிகும்"** (நூ. 165) **என்றும்** பொதுச் சூத்திரங்களான் இம்மூன்று விதியும் அமைந்து கிடந்தமையின் இச்சூத்திரத்தாற் கூறுதல் மிகுதி ஒன்றுமே அமைந்து கிடந்த அஃறிணைப்பெயர்க்கு என்பது பெற்றாம்.

ஒப்பின் முடித்தலான் ஐகாரவீறும் உடன் கூறினார்.

---

**[176]இப்பகுதியில் சிவஞான முனிவர் செய்த திருத்தம் ஆறுமுக நாவலர் பதிப்புகளில் இடம் பெறவில்லை.**

**[177]இவ்வாறு பொதுவாக விதி கூறினாலும் பருத்தி குறிது என எழுவாய்த்தொடரில் இயல்பும் ஆடித்திங்கள் எனப் பண்புத்தொகையில் மிகலும் கொள்க என்று புறனடை நூற்பாவின் (254) உரையில் கூறுவார்.**

உ-ம்: பருத்தி, ஒதி, யானை, குதிரை: குறிது, சிறிது, தீது, பெரிது என இயல்பாயின. கிளி குறிது, கிளிக் குறிது; தினை குறிது, தினைக் குறிது என விகற்பித்தன. பிறவும் அன்ன.

மிகுதி, எய்தியது இகந்துபடாமைக் கூறினமையின் காட்டிற்றிலம். (26)

ஈகாரவீற்றுச் சிறப்புவிதி

{177} **ஆமுன் பகரவீ யனைத்தும்வரக் குறுகும்**
**மேலன வல்வழி யியல்பா கும்மே.**

எ-னின், தொடர்மொழியுள் பின் நின்ற இடக்கர்ச்சொல்லினது ஈற்று ஈகாரத்திற்கு எய்தாதது எய்துவித்தலும் எய்தியவழி அதன் முன் வரும் வல்லினத்திற்கு மேலைச் சூத்திரத்தான் எய்தியது இகந்துபடாமைக் காத்தலும் நுதலிற்று.

இ-ள்: ஆ என்னும் பெயர்முன் நின்ற பகர ஈகாரம் இருவழியும் நாற்கணங்களும் வரின் குறுகும்; குறுகி, விதியிகர ஈறாக நின்ற அதன்மேல் வரும் வல்லினம் அல்வழிக்கண் மேலைச் சூத்திரத்துள் கூறிய விதி மூன்றனுள்[178] இயல்பைப் பெறும் எ-று.

குறுகுதற்குக் காரணம் அனைத்தும் வருதலே அன்றி, மேல் நின்ற ஆவும் ஆம் என்பார், 'ஆமுன்' என்றார்.

'பகரவீ' என்றது இடக்கர் அடக்கல் (267). வரும் சூத்திரத்துள், "பவ்வீ"யும் (நூ. 178) அது.

ஆ என்னும் சொல்லும் நாற்கணத்துள் ஒன்றும் முன்னும் பின்னும் தொடராதேல் குறுகாது என்பார், 'வரக் குறுகும்' என்றார். இருமொழியை நிலைமொழியாக நிறீஇப் புணர்த்தமையான் வரும் ஈறு விதியிகர ஈறு ஆதலின் எய்தியது இகந்துபடாமை, 'இயல்பா கும்' என்றார்.

'ஆகும்மே' என்றது விரித்தல் விகாரம்.

உ-ம்: ஆப்பி அரிது, ஆப்பி குளிரும், ஆப்பி நன்று, ஆப்பி வலிது எனவும் ஆப்பி அருமை, ஆப்பிக் குளிர்ச்சி, ஆப்பி நன்மை, ஆப்பி வன்மை எனவும் இருவழியும் ஈகாரம் குறுகுதலும் அல்வழிக்கண் வல்லின இயல்பு இகந்துபடாமையும் காண்க. (27)

---

[178] மேலைச் சூத்திரத்தில் (176) இயல்பு, மிகல், விகற்பம் என்று கூறிய மூன்று விதிகள்.

{178} **பவ்வீ நீமீ முன்ன ரல்வழி**
**இயல்பாம் வலிமெலி மிகலுமா மீக்கே.**

எ-னின், ஈகாரவீற்று இடக்கர்ப்பெயர்க்கும் நீ என்னும் பெயர்க்கும் மீ என்னும் பெயர்க்கும் முன்னர் வரும் வல்லினத்திற்கு ஒரு வழி, **"இயல்பினும் விதியினும்"** (நூ. 165) **என்னும் சூத்திரத்தான்** எய்தியது விலக்கலும் இவற்றுள் மீ என்பதன் முன் வரும் வல்லினத்திற்கு **அச்சூத்திரத்தான்** எய்தியது இகந்துபடாமைக் காத்தலும் எய்தியது விலக்கிப் **பிறிதுவிதியும் உணர்த்துதல்** நுதலிற்று.

இ-ள்: பகரவொற்றை ஊர்ந்து நின்ற ஈகாரவீற்று இடக்கர்ப்பெயரும் நீ என்னும் முன்னிலை ஒருமைப் பொதுப்பெயரும் மீ என்னும் மேலாய பண்பையும் அப்பண்பாகுபெயராய் மேலாய இடம் முதலியவற்றையும் உணர்த்தி நிற்கும் பல பொருள் ஒரு சொல்லும் நிற்க, இவற்றின் முன் வரும் வல்லினம் அல்வழிக்கண் இயல்பாம். இங்ஙனம் புணரும் மீ என்னும் சொற்கு முன் அல்வழிக்கண் வல்லெழுத்து மிகலும் ஆம்; மெல்லெழுத்து மிகலும் ஆம் எ-று.

உ-ம்: பீ குறிது, சிறிது, தீது, பெரிது எனவும் நீ குறியை, சிறியை, தீயை, பெரியை எனவும் மீகண் எனவும் இயல்பாயின. மீக்கூற்று, மீக்கோள் என எய்தியது இகந்துபடாமை மிக்கது. மீந்தோல் என மெலி மிகுந்தது. பிறவும் ஏற்றபெற்றி வருவன உளவேல் கொள்க.

மீகண் என்பது கண்ணினது மேலிடம் எனப் பொருள் தந்து நிற்குமேனும் ஆறன் உருபின் பயனிலை ஆகும் மீ என்னும் வருமொழி நிலைமொழியாய் நின்று வல்லெழுத்து மிகாது புணர்ந்தமையின் இலக்கணப்போலியாய் அல்வழி ஆயிற்று.

மீக்கூற்று என்பது புகழ். அது மேலாய சொல்லாற் பிறந்த புகழ் என்னும் மேம்பாடு எனப் பொருள் தந்து நிற்றலின் பண்புத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை.

மீக்கோள் என்பது மேற்போர்வை. அது யாக்கையின்மேல் கொள்ளுதலை உடைய போர்வை எனப் பொருள் தந்து நிற்றலின் ஏழாம் வேற்றுமைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. ஈண்டு மீ என்றது இடப்பொருளோடு ஏழாம் வேற்றுமை உருபின் பொருள்பட நின்றதேனும் கண்ணாதி உருபு வேண்டாமையின் வேற்றுமைத்தொகை ஆயிற்று.

மீந்தோல் என்பது மேற்றோல். அது மேலாய தோல் எனப் பொருள் தந்து நிற்றலின் பண்புத்தொகை. இஃது இக்காலத்துப் பீந்தோல் என மரீஇயிற்று.

நீ என்பதன் முன் வல்லினம் இயல்பாதல், "பொதுப்பெய ருயர்திணைப் பெயர்க ளீற்றுமெய்" (நூ. 159) என்னும் சூத்திரத்தான் அமையாதோ[179] எனின் விகாரமொழியன்றி, அல்வழிக்கண்ணும் வேற்றுமைக்கண்ணும் ஆவி ய ரக்களின் ஓர் ஈற்றதாய் நின்று புணரும் பொதுப்பெயர்க்கே, "வன்மை மிகா" (நூ. 159) என இருவழிக்கும் கூறியது அமையுமன்றி, அல்வழிக்கண் நீ என உயிரீறாயும் வேற்றுமைக்கண் நின் என நெடில் (218, 247) குறுகி, னகர ஒற்றீறாயும் விகாரப்பட்டு நிற்கும் இப்பொதுப்பெயர்க்கு அவ்விதி அமையாது என்க. (28)

முற்றுகர ஈற்றுச் சிறப்புவிதி

{179} **மூன்றா றுருபெண் வினைத்தொகை சுட்டீ**
**றாகு முகர முன்ன ரியல்பாம்.**

எ-னின்[180] முற்றுகர ஈற்றுள் சிலவற்றின் முன் வரும் வல்லினத்திற்கு, "**இயல்பினும் விதியினும்**" (நூ. 165) **என்னும் சூத்திரத்தான்** எய்தியது விலக்கல் நுதலிற்று.

இ-ள்: முற்றுகர ஈற்று மூன்றாம் உருபே ஆறாம் உருபே[181] இயல்பாயும் விகாரமாயும் வரும் எண்ணே வினைத்தொகையே சுட்டுப்பெயரே என்னும் இவற்றின் முன் வரும் வல்லினம் இயல்பாம் எ-று.

'மூன்றா றுருபு' என்புழி ஆம் என்னும் சாரியை தொக்கது.

உ-ம்: சாத்தனொடு கொண்டான், சென்றான், தந்தான், போயினான் எனவும் சாத்தனது கை, செவி, தலை, புறம் எனவும் ஏழு, ஒரு, இரு, அறு: கை, செவி, தலை, புறம் எனவும் அடுகளிறு, சேனை, தானை, படை எனவும் அது, இது, உது: குறிது, சிறிது, தீது, பெரிது எனவும் கண்டான், செகுத்தான், தந்தான், படைத்தான் எனவும் வரும்.

உது காண், உதுக் காண் என இயல்பாயும் விகாரமாயும் வரப்பெறுமாலோ எனின் அஃது, "இயல்பின் விகாரமும்" (நூ. 255) என்னும் சூத்திரத்து, "அன்ன பிறவும்" (நூ. 255) என்பதனான் அமையும் என்க. (29)

---

179"நீ என்பது விரவுப்பெயர் ஆதலின், "பொதுப்பெய ருயர்திணைப் பெயர்க ளீற்றுமெய்" (இல. விள. 71) என்பதனான் முடியும்." என்ற வைத்தியநாத தேசிகர் (இல. விள. 93) உரையை மறுப்பது போலும் இப்பகுதி.

180கூழங்கைத் தம்பிரான் மயிலைநாதர் உரையைத் தழுவி, இந்நூற்பாவோடு இதற்கு அடுத்த நூற்பாவையும் இணைத்து ஒரு நூற்பாவாகக் கொள்வார்.

181மயிலைநாதர் (நன். 178) மூன்றும் ஆறும் ஆன உருபு என்று பொருள் கூறுவார்.

### அன்று செய்யுட்கண் ஆன்று எனத் திரிதல்

180. **அதுமுன் வருமன் றான்றாந் தூக்கின்.**

எ-னின், அது என்னும் சுட்டுப்பெயர் முன் வரும் அன்று என்னும் சொற்கு எய்தாதது எய்துவித்தல் நுதலிற்று.

இ-ள்: அது என்னும் சுட்டுப்பெயர் முன் வரும் அன்று என்னும் வினைக்குறிப்புச் சொல் முதல் நீளும் செய்யுளகத்து எ-று.

உ-ம்: அதான்று என வரும்.

ஆன்றேயாம் என இயல்பை விலக்காமையின் அதுவன்று, அதன்று என வருவனவும் கொள்க. 'அதுமுன் வருமன் றான்றாம்' என விதந்தமையான் ஏனை இது, உது முன் வரும் அன்று ஆன்று ஆகாது என்பது பெற்றாம். (30)

### குற்றுகர ஈற்றுச் சிறப்புவிதி

{181} **வன்றொட ரல்லன முன்மிகா வல்வழி.**

எ-னின், குற்றுகர ஈற்றுள் சிலவற்றிற்கு, **"இயல்பினும் விதியினும்"** (நூ. 165) **என்னும் சூத்திரத்தான்** எய்தியது ஒரு வழி விலக்கல் நுதலிற்று.

இ-ள்: வன்றொடர் ஒழிந்த ஐந்து[182] **தொடர்க்** குற்றுகர ஈற்றின் முன்னும் வரும் வல்லினம் மிகா அல்வழிக்கண் எ-று.

உ-ம்: நாகு, எஃகு, வரகு, குரங்கு, தெள்கு: கடிது, சிறிது, தீது, பெரிது எனவும் ஏகுகால், அஃகுபிணி, பொருது சென்றான், அறிந்து தந்தான், எய்து கொன்றான் எனவும் வரும். பிறவும் அன்ன. (31)

{182} **இடைத்தொட ராய்தத் தொடரொற் றிடையின்**
**மிகாநெடி லுயிர்த்தொடர் முன்மிகா வேற்றுமை.**

எ-னின், இதுவும் அது.

இ-ள்: இடைத்தொடர் முன்னும் ஆய்தத்தொடர் முன்னும் ஒற்று இடையே மிகாத நெடிற்றொடர் முன்னும் உயிர்த்தொடர் முன்னும் வரும் வல்லினம் மிகா வேற்றுமைக்கண் எ-று.

---

[182] **நெடில், ஆய்தம், உயிர், மெலி, இடை என்பன (94) வன்றொடர் ஒழிந்த ஏனைய ஐந்து தொடர்க் குற்றுகரங்கள்.**

உ-ம்: தெள்குகால், சிறை, தலை, புறம் எனவும் எஃகுகடுமை, சிறுமை, தீமை, பெருமை எனவும் நாகுகால், செவி, தலை, புறம் எனவும் வரகுகதிர், சோறு, தாள், பதர் எனவும் வரும்.

'ஒற் றிடையின் மிகா' என்பதனை, 'உயிர்த்தொடர்' என்பதனோடும் கூட்டுக.

ஒற்று இடையின் மிகும் அவ்விரு குற்றுகரங்களும் வரும் சூத்திரத்தால் கூறுப. அவற்றிற்கு முன் வரும் வல்லினம் மிகும் என்று உணர்க.

"ஈரெழுத்து மொழியு முயிர்த்தொடர் மொழியும்
வேற்றுமை யாயி னொற்றிடை[183] யினமிகத்
தோற்றம் வேண்டும் வல்லெழுத்து மிகுதி" *(தொல். குற்றிய. 6*)*

"ஒற்றிடை[184] யினமிகா மொழியுமா ருளவே
அத்திறத் தில்லை வல்லெழுத்து மிகலே" *(தொல். குற்றிய. 7*)*

"இடையொற்றுத் தொடரு மாய்தத் தொடரும்
நடையா யியல வென்மனார் புலவர்" *(தொல். குற்றிய. 8)*

என்றார் ஆசிரியர் தொல்காப்பியரும் என்க. (32)

{183} நெடிலோ டுயிர்த்தொடர்க் குற்றுக ரங்களுட்
டறவொற் றிரட்டும் வேற்றுமை மிகவே.

எ-னின், மேலை நிலைமொழிக்கு ஓர் புறனடையாய் எய்தாதது எய்துவித்தலும் வருமொழிக்கு முதல் உயிரேல் இந்நிலைமொழிக்கு, "உயிர்வரி னுக்குறள்" (நூ. 164) என்னும் சூத்திரத்தான் எய்தியதன்மேல் சிறப்புவிதியும் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: நெடிற்றொடர்க் குற்றுகர ஈற்று மொழிகளுள்ளும் உயிர்த்தொடர்க் குற்றுகர ஈற்று மொழிகளுள்ளும் அவ்வுகரப் பற்றுக்கோடாகிய வல்லெழுத்து ஆறனுள் டகார, றகாரமான இரண்டு ஒற்றும் பெரும்பாலும் வேற்றுமைக்கண் இரட்டும் எ-று.

'குற்றுகரங்கள்' என்னும் எழுத்துக்குறிப்பு அம்மொழிகளை உணர்த்தி நின்றது.

[183] "யின்மிகத்" என்பது பிற பதிப்புகளில் உள்ள பாடம்.
[184] "யின்மிகா" என்பது பிற பதிப்புகளில் உள்ள பாடம்.

வருமொழி வரையாமையின் நாற்கணமும் கொள்க.

உ-ம்: ஆட்டுக்கால், பாற்றுக்கால், முருட்டுக்கால், முயிற்றுக்கால், செவி, தலை, புறம், ஞாற்சி, நிறம், மயிர், யாப்பு, வன்மை, அடி என வரும்.

இவ்விரண்டு ஒற்றும் பெரும்பாலும் வேற்றுமைக்கண் இரட்டும் எனவே சிறு-பான்மை வேற்றுமைக்கண் இரட்டாமையும் சிறுபான்மை அல்வழிக்கண் இரட்டு-தலும் சிறுபான்மை இருவழியிலும் பிற ஒற்று இரட்டுதலும் கொள்க.

வ-று: "காவிரி புரக்கு நாடுகிழ வோனே" (பொருந. 248), "காடக மிறந்தார்க்கே, யோடுமென் மனனேகாண்" (யா. வி. 91), "கறைமிட றணியலு மணிந்தன் றக்கறை" (புறம். 1:5) என வேற்றுமைக்கண் இரட்டாவாயின. காட்டரண், களிற்றுயானை என அல்வழிக்கண் இரட்டின. "வெருக்குக்கண் வெங்கருனை" (நாலடி. 210:2), எருத்துக்கால் எனவும் எருத்துமாடு எனவும் இருவழியும் பிற ஒற்று இரட்டின. (33)

{184} **மென்றொடர் மொழியுட் சிலவேற் றுமையிற்**
**றம்மின வன்றொட ராகா மன்னே.**

எ-னின், மென்றொடர்க் குற்றுகரமொழிகளுள் சில நிலைமொழிக்கு **மூவினமும் வரின்** எதிர்மறை முகத்தான் எய்தாதது எய்துவித்தலும் **உயிர் வரின் அவ்வெதிர்-மறை முகத்தான்** எய்தியதன்மேல் சிறப்புவிதியும் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: மென்றொடர்க் குற்றுகரமொழிகளுள் சில, வேற்றுமைக்கண் தமக்கு இனமான வன்றொடர் ஆதலை ஒழிந்தன பெரும்பால எ-று.

'சில' என்னும் எழுவாய், 'ஆகா' என்னும் எதிர்மறை வினையால் அணையும் பெயரகத்து முதனிலையோடு முடிந்தது.

வருமொழி வரையாமையின் நாற்கணமும் கொள்க.

உ-ம்: மருத்துப்பை, சுருப்புநாண், கருப்புவில், கற்றா என வரும்.

இவ்வாறு சில வருதலையும் எதிர்மறை முகத்தாற் கூறினமையின் வழக்கின்கண்ணும் சான்றோர் செய்யுட்கண்ணும் ஏற்றபெற்றி கொள்க. வண்டுக்கால், பந்துத்திரட்சி முதலியன எல்லாம் வன்றொடர் ஆகாதன என்க.

சில வன்றொடர் ஆம் எனவே ஆகாதன பல என்பது தாமே போதரவும், 'மன்னே'

என்ற மிகையானே எற்புடம்பு, அற்புத்தளை, குரக்குமனம் என அல்வழிக்கண் அருகி வன்றொடர் ஆதலும் கொள்க. (34)

## ஐகாரவீற்றுக் குற்றுகரமொழிகள்

{185} **ஐயீற் றுடைக்குற் றுகரமு முளவே.**

எ-னின், இதுவும் மேலை நிலைமொழிக்கு **மூவினமும் வரின்** எய்தாதது எய்துவித்தலும் **உயிர் வரின்**[185] எய்தியதன்மேல் சிறப்புவிதியும் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: ஐகாரச்சாரியையை இறுதியிலே பெற்று வரும் மென்றொடர்க் குற்றுகரமொழிகளும் சில உள எ-று.

மேலைச் சூத்திரத்தைச் சார வைத்தமையான் இதுவும் மென்றொடர் என்பது பெற்றாம். வருமொழி வரையாமையின் நாற்கணமும் கொள்க.

உ-ம்: பண்டைக் காலம், இற்றை நாள் எனவும் அற்றைக் கூலி, இற்றை நலம் எனவும் வரும். பிறவும் அன்ன.

மேலைச் சூத்திரத்தைச் சார வைத்தாரேனும், 'ஐயீற் றுடைக்குற் றுகரம்' எனப் பொதுப்படக் கூறினமையின் நேற்றைப் பொழுது எனப் பிற தொடர்கள் ஐகாரம் பெறுதலும், 'ஐயீற் றுடைக்குற் றுகரம்' என உடைமையாக்கிக் கூறினமையின் வருமொழிப் புணர்ச்சியான் அன்றி ஒற்றை, இரட்டை, வேட்டை என ஒரு மொழியாய் நின்று ஐகாரம் பெறுதலும் ஈராட்டை, மூவாட்டை எனத் தொடர்மொழியாய் நின்று ஐகாரம் பெறுதலும் கொள்க. (35)

## குற்றுகர ஈற்றுத் திசைப்பெயர்கள்

{186} **திசையொடு திசையும் பிறவுஞ் சேரின்**
**நிலையீற் றுயிர்மெய் கவ்வொற்று நீங்கலும்**
**றகரம் னலவாத் திரிதலு மாம்பிற.**

எ-னின், குற்றுகர ஈற்றுத் திசைப்பெயர்க்கு எய்தாதது எய்துவித்தல் நுதலிற்று.

இ-ள்: திசைச்சொல்லோடு திசைச்சொல்லும் பிற சொற்களும் புணருமிடத்து நிலைமொழி ஈற்றில் நின்ற உயிர்மெய்யும் அதன்மேல் நின்ற ககரவொற்றும் கெடுதலும்

---

[185] **இப்பகுதியில் சிவஞான முனிவர் செய்த திருத்தம் ஆறுமுக நாவலர் பதிப்புகளில் இடம் பெறவில்லை.**

அங்ஙனம் நின்ற றகரவொற்று னகரவொற்றாயும் லகரவொற்றாயும் திரிதலும் ஆம் எ-று.

உ-ம்: வடகிழக்கு, வடமேற்கு, வடதிசை, வடமலை, வடவேங்கடம்; தென்கிழக்கு, தென்மேற்கு, தென்குமரி, தென்வீதி, தென்மலை; மேல்பால், மேனாடு; குடதிசை, குடநாடு; குணகடல், குணபால் என வரும்.

'பிற' **என்றமையானே** மேற்றிசை, **மேலைத்திசை,** கீழ்த்திசை, **கீழைத்திசை,** கீழ்மேற்றென்வடல் எனவும் கிழக்கு மேற்குத் தெற்கு வடக்கு, வடக்கூர், தெற்கூர், வடக்குமலை, தெற்குமலை என இங்ஙனம் காட்டிய விகாரமின்றியும் வரும் எனவும் இவ்விதி எல்லாம் ஏற்றபெற்றி கோடல் வேண்டும் எனவும் கொள்க.

வடகிழக்கு என்பது வடக்கும் கிழக்கும் ஆயதோர் கோணம் என உம்மைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. வடதிசை என்பது வடக்காய திசை எனப் பண்புத்தொகை. வடமலை என்பது வடக்கின்கண் மலை என ஏழாம் வேற்றுமைத்தொகை. கீழ்மேற்றென்வடல் என்பது கிழக்கு மேற்கு தெற்கு வடக்கு என உம்மைத்தொகை. பிறவும் அன்ன. (36)

தெங்கும் காயும் புணருமாறு

187. **தெங்குநீண் டீற்றுயிர் மெய்கெடுங் காய்வரின்.**

எ-னின், தெங்கு என்னும் பெயர்க்கு எய்தாதது எய்துவித்தல் நுதலிற்று.

இ-ள்: காய் என்னும் சொல் வரும் ஆயின் தெங்கு என்னும் நிலைமொழி முதல் நீண்டு ஈற்று உயிர்மெய் கெடும் எ-று.

ஈறு கெடும் என்றமையான் முதல் நீளும் என்பது பெற்றாம்.

உ-ம்: தேங்காய் என வரும்.

தெங்கு நீண்டு ஈற்று உயிர்மெய் கெட்டே புணரும் என இயல்பை விலக்காமையின், "தெங்கங்காய்" (யா. வி. 95) என வரும் முடிபும் கொள்க. (37)

எண்ணுப்பெயர்கட்குச் சிறப்புவிதி

188. **எண்ணிறை யளவும் பிறவு மெய்தின்**
**ஒன்று முதலெட் டீறா மெண்ணுண்**
**முதலீ ரெண்முத னீளு மூன்றா**

**றேழ்குறு கும்மா றேழல் லவற்றின்**
**ஈற்றுயிர் மெய்யு மேழ னுயிரும்**
**ஏகு மேற்புழி யென்மனார் புலவர்.**

*எ-னின், ஒன்று முதல் எட்டு ஈறாம் எண்ணுப்பெயர்க்கு உயிர் வரின் எய்தியதன்மேல் சிறப்புவிதியும் மெய் வரின் எய்தாதது எய்துவித்தலும் நுதலிற்று.*

*இ-ள்: எண்ணுப்பெயரும் நிறைப்பெயரும் அளவுப்பெயரும் பிற பெயரும் வரின் நிலைமொழியாக நின்ற ஒன்று முதல் எட்டு ஈறாம் எண்களுள் முதற் கண்ணவாய ஒன்று, இரண்டு என்னும் இரண்டு எண்ணும் முதல் நீளும்; மூன்றும் ஆறும் ஏழும் முதல் குறுகும்; ஆறும் ஏழும் அல்லாத ஆறு எண்களின் ஈற்று உயிர்மெய்யும் ஏழு என்னும் எண்ணின் ஈற்று உயிரும் கெடும் ஏற்கும் இடங்களில் என்று சொல்லுவர் புலவர் எ-று.*

*இச்சூத்திரத்துள் கூறிய விகாரமும் இப்புணர்ச்சி முற்ற முடித்தற்குப் பின் ஐந்து[186] சூத்திரத்தால் (189-193) கூறும் விகாரமும் உயிர் வரின் உகரம் மெய் விட்டு ஓடுதலையும் ஒழிந்த கணங்கள் வரின் தன் இயல்பின் நிற்றலையும் விலக்கிய அல்ல. இவ்விகாரம் அனைத்தும் ஒருங்கு வேண்டும் என்னும் நியதிய அல்ல.*

*இவ்விகாரம் பண்புத்தொகைக்கே உரிய என்பார், 'ஏற்புழி' என்றும் ஏழ் என்பதனை உயிரீற்று மொழியாகக் கொள்வார் சிலர்; ஒற்றீற்று மொழியாகக் கொள்வார்[187] சிலர். யாம் ஒருதலை துணிந்தாம் என்பார், 'என்மனார் புலவர்' என்றும் ஒற்றீறும் விலக்கப்-படுவது அன்று என்பார் உடம்பொடு புணர்த்தி ஒற்றீறாக, 'ஏழ்குறு கும்' என்றும் கூறினார்.*

*ஏழு என்பது முற்றுகர ஈற்றதேனும் ஒன்றின முடித்தல் தன்னின முடித்தல் என்னும் உத்தியான் ஈண்டுக் கூறப்பட்டது என்க.*

*உ-ம்: அறுபது, எழுபது: கழஞ்சு, நாழி, மீன் எனவும் ஏழ்கடல் எனவும் வரும். ஏனையவற்றிற்கு உதாரணம் பின்னர்க் காட்டுதும். இரண்டாயிரம், ஏழாயிரம் என*

---

[186] ***"இதனுள், 'எண்ணிறை யளவும் பிறவு மெய்தின்' என்பதனை மேல் வரும் ஐந்து சூத்திரத்தோடு கூட்டியும், 'ஏற்புழி' என்பதனை இப்பொருண்மை அதிகாரம் முற்றும் அளவு உய்த்தும் உரைக்க." என்று மயிலைநாதர் (நன். 187) கூறுவது ஈண்டு ஒப்புநோக்கத் தக்கது.***

[187] ***தொல்காப்பியர் (புள்ளி. 93) ஏழ் என ஒற்றீற்று மொழியாகக் கொள்வார்; நன்னூலார் தவிர, அதனை உயிரீற்று மொழியாகக் கொள்பவர் யார் என்று தெளிவாகக் கூற முடியவில்லை.***

உயிர் வரின் குற்றுகரமும் முற்றுகரமும் கெட்டுப் புணர்ந்தன. இரண்டு கழஞ்சு, மூன்று படி, நான்கு பொருள், ஏழு கடல் எனத் தன் இயல்பின் நின்று புணர்ந்தன. பிறவும் அன்ன. (38)

## ஒன்றிற்கும் இரண்டிற்கும் சிறப்புவிதி

189. **ஒன்றன் புள்ளி ரகர மாக**
**இரண்ட னொற்றுயி ரேகவுவ் வருமே.**

எ-னின், இதுவும் அது.

இ-ள்: மேற் கூறிய நால்வகைப் பெயரும் (188) வருமிடத்து ஈற்று உயிர்மெய் ஏகும் என்றமையான் இறுதி உயிர்மெய் கெட, நின்ற ஒன்று என்னும் எண்ணினது னகர-வொற்று ரகரவொற்று ஆக, இரண்டு என்னும் எண்ணினது ணகரவொற்றும் ரகர-வொற்றை ஊர்ந்து நின்ற அகர உயிரும் கெட, அவ்விரண்டு ரகரத்தின்மேலும் உகரம் வரும் எ-று.

உ-ம்: ஓராயிரம், இராயிரம், ஒருபது, இருபது; ஒருகழஞ்சு, இருகழஞ்சு, ஒருநாழி, இருநாழி, ஒருவகை, இருவகை என வரும். ஓராயிரம், இராயிரம் என்புழி உகரக்கேடு, "முற்றுமற் றொரோவழி" (நூ. 164) என்பதனாற் கொள்க. பிறவும் அன்ன. (39)

## மூன்று என்னும் எண்ணுக்குச் சிறப்புவிதி

190. **மூன்றனுறுப் பழிவும் வந்தது மாகும்.**

எ-னின், இதுவும் அது.

இ-ள்: நால்வகைப் பெயரும் (188) வருமிடத்து இறுதி உயிர்மெய் கெட, நின்ற மூன்று என்னும் எண்ணினது னகரவொற்றுக் கெடுதலும் வரும் ஒற்றாகத் திரிதலும் ஆம் எ-று.

உ-ம்: மூவொன்று, மூவெடை, மூவுழக்கு, மூவுலகு எனவும் முப்பது, முக்கழஞ்சு, முந்நாழி, மும்மொழி எனவும் வரும். (40)

## நான்கு என்னும் எண்ணுக்குச் சிறப்புவிதி

191. **நான்கன் மெய்யே லறவா கும்மே.**

எ-னின், இதுவும் அது.

இ-ள்: நால்வகைப் பெயரும் (188) வருமிடத்து இறுதி உயிர்மெய் கெட, நின்ற நான்கு என்னும் எண்ணினது னகரவொற்று லகரவொற்றாயும் றகரவொற்றாயும் திரியும் எ-று.

உ-ம்: நாலொன்று, நாலெடை, நானாழி, நான்மணி எனவும் நாற்பது, நாற்கழஞ்சு, நாற்கலம், நாற்கவி எனவும் வரும். (41)

ஐந்து என்னும் எண்ணுக்குச் சிறப்புவிதி

192. **ஐந்தனொற் றடைவது மினமுங் கேடும்.**

எ-னின், இதுவும் அது.

இ-ள்: நால்வகைப் பெயரும் (188) வருமிடத்து இறுதி உயிர்மெய் கெட, நின்ற ஐந்து என்னும் எண்ணினது நகரவொற்று வரும் ஒற்று ஆகியும் அதற்கு இனம் ஆகியும் கெட்டும் முடிவதாம் எ-று.

உ-ம்: ஐம்மூன்று, ஐம்மஞ்சாடி, ஐவ்வட்டி, ஐவ்வண்ணம் எனவும் ஐம்பது, ஐங்கழஞ்சு, ஐங்கலம், ஐம்பொறி எனவும் ஐயொன்று, ஐயெடை, ஐயாழாக்கு, ஐயம்பு எனவும் வரும்.

'அடைவது மினமும்' என்றமையின் அருத்தாபத்தியான் ஐந்நூறு, ஐந்தூணி என்புழி ஒற்றுத் தன் இயல்பின் நிற்றலும் கொள்க. (42)

எட்டு என்னும் எண்ணுக்குச் சிறப்புவிதி

193. **எட்ட னுடம்பு ணவ்வாகு மென்ப.**

எ-னின், இதுவும் அது.

இ-ள்: நால்வகைப் பெயரும் (188) வருமிடத்து இறுதி உயிர்மெய் கெட, நின்ற எட்டு என்னும் எண்ணினது டகரவொற்று ணகரவொற்று ஆகும் என்று சொல்லுவர் புலவர் எ-று.

உ-ம்: எண்பது, எண்கழஞ்சு, எண்கலம், எண்குணம் என வரும்.

"எண்ணிறை யளவும்" (நூ. 188) என்னும் சூத்திரத்துள் கூறிய புணர்ச்சிக்கு வேண்டும் விகாரம் இதுகாறும் என்பது தோன்ற, அச்சூத்திரத்துள் கூறிய, "புலவர்" (நூ. 188) என்னும் எழுவாயைச் சுட்டி, அதன் பயனிலையாக இச்சூத்திரத்து இறுதிக்கண், 'என்ப' என்றார். (43)

தொண்ணூறும் தொள்ளாயிரமும் அமையுமாறு

{194} **ஒன்பா னொடுபத்து நூறு மொன்றின்**
**முன்னதி னேனைய முரணி யொவ்வொடு**
**தகர நிறீஇப்பஃ தகற்றி னவ்வை**
**நிரலே ணளவாத் திரிப்பது நெறியே.**

எ-னின், ஒன்பது என்னும் எண்ணுப்பெயர்க்கு எய்தாதது எய்துவித்தலும் அதனோடு புணரும் பத்து, நூறு என்னும் வருமொழிகட்கு, **"இயல்பினும் விதியினும்"** *(நூ. 165)* **என்னும் சூத்திரத்தானும், "எண்மூ வெழுத்தீற்று"** *(நூ. 158)* **என்னும் சூத்திரத்தானும்** எய்தியது விலக்கிப் பிறிதுவிதியும் உணர்த்துதல் நுதலிற்று.

*இ-ள்:* ஒன்பஃதுடனே பத்து என்பதும் நூறு என்பதும் வந்து புணரும் ஆயின் **அந்நிலைமொழி வருமொழிகளுள் முன்னர்த்தாகிய நிலைமொழியினின்றும் ஏனை வருமொழியாகிய பத்தையும் நூற்றையும் நிரனிறை வகையானே** நூறு எனவும் ஆயிரம் எனவும் திரித்து, நிலைமொழிக்கு முதற்கண் ஒகர உயிரோடு தகரமெய்யை அதற்கு ஆதாரமாக நிறுத்தி, அந்நிலைமொழி இறுதிக்கண் பஃதைக் கெடுத்து, அம்மொழிமுதற்கு அயல் நின்ற னகரவொற்றை **முறையே** ணகரவொற்றாயும் ளகரவொற்றாயும் திரிப்பது முறைமையாம் எ-று.

**'முன்னதின்' என்னும் இன்னுருபு நீங்கற் பொருட்டாய், 'ஏனைய' என்னும் இடைச்சொல் அடியாகத் தோன்றிய வினைக்குறிப்புப் பெயர் கொண்டது.**

**நிலைமொழித் திரிபுபோல வருமொழித் திரிபும் வகைபடக் கூறாது பொதுப்பட, 'முரணி' என்றாரேனும்,**

**"ஒன்பா னொகரமிசைத் தகர மொற்றும்**
**முந்தை யொற்றே ணகார மிரட்டும்**
**பஃதென் கிளவி யாய்தபக ரங்கெட**
**நிற்றல் வேண்டு மூகாரக் கிளவி**
**ஒற்றிய தகரம் றகர மாகும்"** *(தொல். குற்றிய. 39*)*

**எனவும்,**

**"ஒன்பான் முதனிலை முந்துகிளந் தற்றே**
**முந்தை யொற்றே ளகார மிரட்டும்**

நூறென் கிளவி நகார மெய்கெட
ஊஆ வாகு மியற்கைத் தென்ப
ஆயிடை வருத லிகார ரகாரம்
ஈறுமெய் கெடுத்து மகர மொற்றும்" (தொல். குற்றிய. 57*)

எனவும் ஆசிரியர் தொல்காப்பியர் கூறியவாற்றால் அவற்றின் திரிபு அறிந்து திரித்துக்கொள்க.

'நெறியே' என்ற இலேசானே தனிக்குறில் முன் ஒற்று இரட்டித்தலும் கொள்க.

உ-ம்: தொண்ணூறு எனவும் தொள்ளாயிரம் எனவும் வரும். தொளாயிரம் என இக்காலத்து மரீஇயிற்று.

ஒன்பஃது நின்று புணரினும் ஒன்பது நின்று புணரினும் இம்முடிபேயாம் என்பார், 'பஃ தகற்றி' என்பதனோடு பொருந்த ஒன்பஃதொடு என்னாது, 'ஒன்பா னொடு' என்றும் தகரவொற்றை ஒகர உயிர்க்கு உடம்பாக நிறுத்துக என்பார், 'ஒவ்வொடு' என்றும் இப்புணர்மொழிகள் ஒகர உயிர் ஒன்று ஒழிய, விகாரப்பட்டுக் கிடந்தமையின் குறிப்பின்றி முடியும் மரூஉமுடிபு என்று கொள்ளற்க என்பார் திரிவது என்னாது, 'திரிப்பது' என்றும் இவற்றை இலக்கண முடிபாகத் தொல்லாசிரியர் முடித்தவாறே முடித்தாம் என்பார், 'நெறியே' என்றும் கூறினார்.

இச்சூத்திரத்து, 'முன்னதி னேனைய முரணி' என்பதற்கு இவ்வாறு பொருள் கொள்ளாது ஒன்பஃதினானே பத்தையும் நூற்றையும் பெருக்கி எனப் பொருள் கொள்வாரும்[188] உளர். முரணி என்னும் சொற்கு அது பொருள் அன்று ஆத-லானும் அது பொருள் ஆமேனும் அதனால் வருமொழி இவ்வாறு திரிந்த எனத் தோன்றாமையானும் தோன்றின் நிலைமொழிக்கு விகாரம் கூற வேண்டாமையானும் அது பொருந்தாது என்க.

இன்னும், 'முன்னதி னேனைய முரணி' என்பதற்கு நிலைமொழியாய எட்டின்-மேல் ஒன்று ஒன்பஃது எனப் பஃது என்னும் இறுதியாய்த் திரிந்து நின்றாற்போல வருமொழியாய எண்பதின்மேல் பத்தை நூறு எனவும் எண்ணூற்றின்மேல் நூற்றை ஆயிரம் எனவும்[189] திரித்துப் பொருள் கோடலும் ஒன்று. (44)

[188] மயிலைநாதர் (நன். 193) பத்தையும் நூற்றையும் பெருக்கி எனப் பொருள் கொள்வார்.
[189] சங்கர நமச்சிவாயர் இந்நூற்பாவுக்குக் கூறிய பொழிப்புரையின் ஒரு பகுதி இது.

முதல் எட்டு எண்ணின் முன் பத்து வருமாறு

{195} **முதலிரு நான்கா மெண்முனர்ப் பத்தின்**
**இடையொற் றேக லாய்த மாகல்**
**எனவிரு விதியு மேற்கு மென்ப.**

எ-னின், ஒன்று **முதலாகிய** எட்டு **எண்களின்**[190] முன் வரும் பத்து என்னும் எண்ணிற்கு, **"இயல்பினும் விதியினும்"** (நூ. 165) **என்னும் சூத்திரத்தான்** எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தல் நுதலிற்று.

இ-ள்: ஒன்று முதலாகிய எட்டு எண்களின் முன்னும் வரும் பத்து என்னும் எண்ணிடை நின்ற தகரவொற்று ஒரு கால் கெடுதலும் ஒரு கால் இடையே தகரம் நின்ற நிலைக்களத்து அது கெட, ஆய்தம் வருதலும் என்னும் இவ்விரண்டு விதியையும் ஏற்கும் என்று சொல்லுவர் புலவர் எ-று.

'இடை' என்பதனைப் பின்னும் கூட்டுக.

இடையே ஆய்தம் ஆகல் என்றமையின் அவ்வழித் தகரக்கேடு கூறாதே அமையும் என்க.

உ-ம்: ஒருபது, இருபது, முப்பது, நாற்பது, ஐம்பது, அறுபது, எழுபது, எண்பது எனவும் ஒருபஃது, இருபஃது, முப்பஃது, நாற்பஃது, ஐம்பஃது, அறுபஃது, எழுபஃது, எண்பஃது எனவும் வரும். (45)

ஒருபஃது முதலியவற்றுக்குச் சிறப்புவிதி

{196} **ஒருபஃ தாதிமுன் னொன்றுமுத லொன்பான்**
**எண்ணு மவையூர் பிறவு மெய்தின்**
**ஆய்த மழியவாண் டாகுந் தவ்வே.**

எ-னின், மேலைச் சூத்திரத்தான் எய்திய ஒருபஃது ஆதியாய நிலைமொழிக்கு **உயிர் வரின், "உயிர்வரி னுக்குறள்"** (நூ. 164) **என்னும் சூத்திரத்தான்** எய்தியதன்மேல் சிறப்புவிதியும் **மெய் வரின்** எய்தாதது எய்துவித்தலும் நுதலிற்று.

இ-ள்: ஒருபஃது ஆதியாய எட்டு எண்களின் முன்னும் ஒன்றாதி ஒன்பது எண்ணும் அவை ஊர்ந்த பிறவும் வந்து புணரும் ஆயின் ஆய்தம் கெட, அந்நிலைக்களத்து இயல்பாய தகரம் வரும் எ-று.

---

[190] **"ஒன்று முதல் எட்டு எண்களின்" என்பது ஆறுமுக நாவலர் பதிப்புகளில் உள்ள பாடம்.**

ஐயம் அறுத்தற்கு, 'அவையூர் பிறவும்' என்றார்.

உ-ம்: ஒருபத்தொன்று, இருபத்தொன்றே காலேயரைக்கால், முப்பத்தொரு கழஞ்சு, எழுபத்தொன்பதின் கலனேதூணி, எண்பத்தொன்பதி யாண்டு என வரும். பிறவும் அன்ன.

'ஆய்த மழியவாண் டாகுந் தவ்வே' என்றமையான் ஆய்தம் அழிந்தவற்றிற்கும் ஒருபது முதலிய முற்றுகர ஈற்று எண்ணுப்பெயர்கட்கும் வேற்றுமை இன்மையின் அருத்தாபத்தியான் அவற்றோடு இவ்வருமொழிகள் புணரினும், 'ஆண் டாகுந் தவ்வே' என்றாராயிற்று. இவற்றிற்கும் காட்டு அவையேயாம் என்க. (46)

பத்து ஒன்பதுகளின் முன் எண்ணாதிப் பெயர்

{197} **ஒன்றுமுத லீரைந் தாயிரங் கோடி**
**எண்ணிறை யளவும் பிறவரிற் பத்தின்**
**ஈற்றுயிர் மெய்கெடுத் தின்னு மிற்றும்**
**ஏற்ப தேற்கு மொன்பது மினைத்தே.**

எ-னின், பத்து என்னும் நிலைமொழிக்கு **உயிர் வரின், "உயிர்வரி னுக்குறள்"** (நூ. 164) **என்னும் சூத்திரத்தான்** எய்தியது விலக்கிப் பிறிதுவிதியும் **மெய் வரின்** எய்தாதது எய்துவித்தலும் ஒன்பது என்னும் நிலைமொழிக்கு **உயிர் வரின், "உயிர்வரி னுக்குறள்"** (நூ. 164) **என்னும் சூத்திரத்தான்** எய்தியதன்மேல் சிறப்புவிதியும் **மெய் வரின்** எய்தாதது எய்துவித்தலும் **உணர்த்துதல்** நுதலிற்று.

இ-ள்: ஒன்று முதலாகிய பத்தும் ஆயிரமும் கோடியும் என்னும் எண்ணுப்-பெயரும் நிறைப்பெயரும் அளவுப்பெயரும் பிற பெயரும் வந்து புணரும் ஆயின் நிலைமொழியாகிய பத்து என்னும் எண்ணினது ஈற்று உயிர்மெய்யைக் கெடுத்து, அந்நிலைக்களத்து இன்சாரியையேனும் இற்றுச்சாரியையேனும் ஆண்டைக்கு ஏற்பது ஏற்று நிற்கும். ஒன்பது என்னும் நிலைமொழியும் இங்ஙனம் விதந்த எண்ணாதிப் பெயர் வந்து புணரும் ஆயின் இன்னேனும் இற்றேனும் ஆண்டைக்கு ஏற்பது ஏற்று நிற்கப்பெறும் எ-று.

உ-ம்: பதினொன்று, பதின்மூன்று, பதினாயிரம், பதின் கழஞ்சு, பதின் கலம், பதின் மடங்கு எனவும் பதிற்றொன்று, பதிற்றிரண்டு, பதிற்றுமூன்று, பதிற்றுக்கோடி, பதிற்றுத் தூணி எனவும் ஒன்பதினாயிரம், ஒன்பதின் கழஞ்சு, ஒன்பதின் கலம், ஒன்பதின் மடங்கு

எனவும் ஒன்பதிற்றொன்று, ஒன்பதிற்றிரண்டு, ஒன்பதிற்றுக் குறுணி எனவும் வரும். பிறவும் அன்ன.

பதினொன்று என்பது உம்மைத்தொகை. பதிற்றொன்று என்பது பண்புத்தொகை. பிறவும் கண்டுகொள்க.

பத்துக்கோடி, ஒன்பதுகோடி என இந்நிலைமொழிகள் தம் இயல்பின் நிற்றலே அன்றி வழக்கின்கண்ணும் சான்றோர் செய்யுட்கண்ணும் இவ்வாறு அமைந்து கிடந்தனவும் கொள்க என்பார், 'ஏற்ப தேற்கும்' என்றும்[191] ஒன்பதன் ஈற்று உயிர்-மெய்யைக் கெடாது குற்றுகர ஈற்றுப் பொதுவிதியான் (164) உயிர் ஒன்றுமே கெட, இன்னும் இற்றும் ஏற்பது ஏற்று நிற்றலின் ஒன்பதும் இற்றே எனத் தன்மையணி ஆக்காது உவமையணி[192] ஆக்கி, 'இனைத்தே' என்றும் கூறினார். ஒன்பது என்பதன் இறுதி பத்து என்பதுபோல முரணி நிற்றலின் அதனோடு **இதனை** மாட்டெறியப்பட்டது[193] **எனினும் அமையும்.** (47)

பத்தின் முன் இரண்டு புணருமாறு

{198} **இரண்டு முன்வரிற் பத்தினீற் றுயிர்மெய்**
**கரந்திட வொற்றுனவ் வாகு மென்ப.**

எ-னின், இதுவும் பத்து என்னும் நிலைமொழிக்கு, **"உயிர்வரி னுக்குறள்"** (நூ. 164) **என்னும் சூத்திரத்தான்** எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தல் நுதலிற்று.

---

[191]'ஏற்ப தேற்கும்' என்பதனால், "பத்தின் முன் இரண்டும் ஒன்பதும் பத்தும் வருவழி இன்னும் ஆயிரம் வருவழி இற்றும் ஒன்பதன் முன் ஒன்று முதல் பத்து எண்ணும் வருவழி இன்னும் வாரா எனக் கொள்க." என்று மயிலைநாதர் (நன். 196) கூறும் வழக்குப் பயிற்சி அறியத் தக்கது.

[192]பொருளின் இயல்பை உள்ளது உள்ளபடி விளங்கக் கூறுவது (வீர. 150; தண்டி. 29; மாறன். 88) தன்மையணி.

பொருளோடு பொருளை இயைத்து ஒப்புமை தோன்றக் கூறுவது (வீர. 150; தண்டி. 31; மாறன். 92) உவமையணி.

[193]பதிற்றிரண்டு என முரணிப் பண்புத்தொகையாகப் பத்து நிற்பதுபோல ஒன்பதன் இறுதியும் ஒன்பதிற்றிரண்டு எனப் பண்புத்தொகையாகப், பெருக்கல் பொருளில் நிற்பதால் அதனோடு இது மாட்டெறியப்பட்டது என்று கூறினும் அமையும் என்பது கருத்து.

பத்து என்பதன் ஈற்று உயிர்மெய் கெடுவதுபோல ஒன்பது என்பதன் ஈற்று உயிர்-மெய் முழுதும் கெடாமல், உயிர் மட்டுமே கெடுவதால் இம்மாட்டேறு (தொல். புணர். 3 நச்.) ஒருபுடைச் சேறல். இதனை வைத்தியநாத தேசிகர் (இல. விள. 115) ஒருபுடைச் சேறல் என்னும் உத்தி என்பார்.

*இ-ள்:* இரண்டு என்பது வரின் பத்து என்னும் நிலைமொழியினது ஈற்று உயிர்மெய் கெடத், தகரவொற்று னகரவொற்றாகத் திரியும் என்று சொல்லுவர் புலவர் எ-று.

*உ-ம்:* பன்னிரண்டு என வரும்.

உம்மைத்தொகைக்கண்ணும் பண்புத்தொகைக்கண்ணும் இரண்டு என்னும் எண் வருமொழியாய் வருமேனும், 'முன்வரின்' என வருதலைச் சிறப்பித்தமையான் ஒரு சொல் நீர்மையாய்ச் சிறந்த உம்மைத்தொகைக்கு இவ்விதி கூறினார் என்க. (48)

ஒன்பது ஒழிந்த ஒன்பது எண்களும் இரட்டித்தல்

{199} **ஒன்ப தொழித்தவெண் ணொன்பது மிரட்டின்**
**முன்னதின் முன்னல வோட வுயிர் வரின்**
**வவ்வு மெய்வரின் வந்தது மிகனெறி.**

எ-னின், ஒன்பது ஒழித்த ஒன்பது எண்களாய நிலைமொழிகளுள் மூன்று, ஆறு, ஏழற்கு, **"எண்ணிறை யளவும் பிறவு மெய்தின்"** (நூ. 188) **என்னும் சூத்திரத்துள், "மூன்றா, றேழ்குறு கும்"** (நன். 188) **என** எய்தியதன்மேல் சிறப்புவிதியும் எல்லா-வற்றிற்கும் உயிர் வரின் எய்தியது விலக்கிப் பிறிதுவிதியும் மெய் வரின் எய்தாதது எய்துவித்தலும் நுதலிற்று.

*இ-ள்:* ஒன்பது என்னும் எண் ஒன்றனையும் ஒழித்து, நின்ற ஒன்றாதி பத்து ஈறான எண் ஒன்பதனையும் இரட்டித்துக் கூறின் நிலைமொழி முதலெழுத்து ஒன்று நிற்க, அல்லன எல்லாம் கெட, உயிர் முதலான எண் வரின் வகரவொற்றும் மெய் முதலான எண் வரின் வந்த ஒற்றும் மிகுதல் முறைமையாம் எ-று.

*உ-ம்:* ஒவ்வொன்று, இவ்விரண்டு, மும்மூன்று, நந்நான்கு, ஐவைந்து, அவ்வாறு, எவ்வேழு, எவ்வெட்டு, பப்பத்து என வரும்.

'நெறி' என்றமையானே[194] நான்கிற்குக் குறுக்கமும் ஐவைந்து என்புழி ஐகாரக் குறுக்கத்தின் முன் ஒற்று இரட்டாமையும் ஒரோவொன்று, ஒன்றொன்று, கழக்கழஞ்சு, கலக்கலம் என இரட்டித்து வருவனவும் குற்றுகரப் புணர்ச்சிவிதியுள் கூறாது ஒழிந்து நெறிப்பட வருவன உளவேல் அவையும் கொள்க.

---

[194]**'நெறி' என்னும் மிகையால் பத்துப்பத்து, பதிற்றுப்பத்து என்னும் விகற்பத்தையும் ஒன்று முதல் பத்து என்பன எண்ணாதி நான்கோடும் இயல்பாதலையும் மயிலைநாதர் (நன். 198) கொள்வார்.**

ஒவ்வொன்று[195] கொடு என்றால் இம்முறையே பலவற்றையும் கொடு எனப் பொருள் தந்து நிற்றலின் இஃது அடுக்கு அன்று. வேற்றுமை அல்லன எல்லாம் அல்வழி ஆதலின் தழாத்தொடராய அல்வழியுள் ஒன்றாம் என்க. (49)

ஊகாரவீற்றுச் சிறப்புவிதி

**{200} பூப்பெயர் முன்னின மென்மையுந் தோன்றும்.**

எ-னின், ஊகாரவீற்றுப் பூ என்னும் பல பொருள் ஒரு சொல் முன் வரும் வல்லினத்திற்கு, **"இயல்பினும் விதியினும்"** (நூ. 165) **என்னும் சூத்திரத்தான்** எய்தியதன்மேல் சிறப்புவிதி உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: பூ என்னும் பல பொருட் பெயர்ச்சொல் முன் வல்லினம் வரின் பொதுவிதியால் (165) க, ச, த, ப மிகுதலே அன்றி, அவற்றிற்கு இனமாகிய மெல்லொற்றுக்களும் மிகும் எ-று.

இப்பொருட்டாய பூப்பெயர் என விதவாமையின் பல பொருள் ஒரு சொல் என்பது பெற்றாம்.

உ-ம்: பூங்கொடி, பூஞ்சோலை, பூந்தடம், பூம்பணை என வரும். இவற்றுள் பூ என்பது மலரேல் இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்க தொகையாகவும் பொலிவேல் பண்புத்தொகையாகவும் பூங்கணை என்பது மலர் என்னும் ஒரு பொருட்டாய் மூன்றாம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்க தொகையாகவும் பண்புத்தொகையாகவும் பூங்கரும்பு என்பது பொலிவு என்னும் ஒரு பொருட்டாய்ப் பண்புத்தொகையாகவும் வருவன காண்க.

உறழ்ந்து வரும் என உறுதி கூறாது பூக்கொடி என வல்லினம் மிகுதலை உம்மையால் தழீஇக்கொண்டமையின் இவ்விரு வகைத் தோன்றலும் ஏற்றபெற்றி கொள்க. (50)

ஏகார ஓகார ஈற்றுச் சிறப்புவிதி

**{201} இடைச்சொல் லேயோ முன்வரி னியல்பே.**

[195] "ஒவ்வொன்று, அவ்வாறு என்றாற் போல்வனவற்று வகரம் உடம்படுமெய் அன்மை இவ்விரண்டு என்பதனால் அறிக." என்று வைத்தியநாத தேசிகர் (இல. விள. 117) தரும் குறிப்பு அறியத் தக்கது.

எ-னின், ஏகார, ஓகார இடைச்சொற்கள் முன் வரும் வல்லினத்திற்கு, **"இயல்பினும் விதியினும்"** (நூ. 165) **என்னும் சூத்திரத்தான்** எய்தியது விலக்கல் நுதலிற்று.

இ-ள்: இடைச்சொல்லாய[196] ஆறு ஏகாரத்தின் முன்னும் (422) எட்டு ஓகாரத்தின் முன்னும் (423) வல்லினம் வரும் ஆயின் பொதுவிதியான் (165) மிகாது இயல்பாம் எ-று.

உ-ம்: அவனே கொண்டான் என்பது பிரிநிலையும் வினாவும் ஈற்றசையும் தேற்றமும் ஆம். அறமே பொருளே காமமே துறவே என்பன எண். "ஏஎதனை யென்றோ ரிருடி வினவ" (நன். 200 மயிலை.) என்பது இசைநிறை. அவனோ கொண்டான் என்பது ஒழியிசை முதலிய எட்டும் ஆம். இவற்றுள் வல்லினம் இயல்பாதல் காண்க. **இவ்விடைச்சொல் ஒன்று** பல பொருள் தருமாறு இடைச்சொல்லியலுள் (422-425; 431-433; 435, 437, 438) காட்டுதும். (51)

ஐகாரவீற்றுச் சிறப்புவிதி

202. **வேற்றுமை யாயி னைகா னிறுமொழி**
**ஈற்றழி வோடுமம் மேற்பவு முளவே.**

எ-னின், ஐகாரவீற்று நிலைமொழிக்கு எய்தாதது எய்துவித்தல் நுதலிற்று.

இ-ள்: ஐகாரவீற்றுச் சொல் வேற்றுமைக்கண் வரும் ஆயின் இறுதி ஐகாரம் கெடாது, அம்முச்சாரியை பெற்று முடிவனவும் ஐகாரம் கெட்டு, அம்முச்சாரியை பெற்று முடிவனவும் சில உளவாம் எ-று.

உம்மைகள் இரண்டில் முன்னையது எதிர்மறைக்கண்ணும் பின்னையது எதிர்-மறையோடு இழிவுசிறப்பின்கண்ணும் வந்தன.

உ-ம்: "புன்னையங் கானல்" (அகம். 80:13), "கொல்லையஞ் சாரல்" (சிலப். 17. 21:1), "கொன்றையந் தீங்குழல்" (சிலப். 17. 19:3), "முல்லையம் புறவம்" (அகம். 384:5*) எனவும் வழுதுணங்காய், ஆவிரம்பூ, வேர் எனவும் வரும்.

தகுதி ஆக்காது, ஏற்பன என்றமையான் முல்லைப்புறவம் என வரினும் கொள்க. அம்மும் என்னாமையின் உம்மையான் வல்லினம் தழீஇயது அன்று என்க. வருமொழி வரையாமையின் நாற்கணத்துள் ஏற்பன கொள்க. (52)

---

[196] **தொல்காப்பியரைத் (தொல். உயிர். 71; இடை. 13) தழுவி, "இடைச்சொல் என்றன தேற்றமும் சிறப்பும் ஒழிந்தவற்றினை." என்று வைத்தியநாத தேசிகர் (இல. விள. 99) உரை கூறுவார்.**

பனை என்னும் நிலைமொழிக்குப் பிறிதுவிதி

{203} **பனைமுன் கொடிவரின் மிகலும் வலிவரின்
ஐபோ யம்முந் திரள்வரி னுறழ்வும்
அட்டுறி னைகெட்டந் நீள்வுமாம் வேற்றுமை.**

எ-னின், பனை என்னும் நிலைமொழிக்கும் அதனோடு புணரும் சில வருமொழி-கட்கும், **"இயல்பினும் விதியினும்"**.(நூ. 165) **என்னும் சூத்திரத்தானும் மேலைச் சூத்திரத்தானும்** எய்தியவற்றை இகந்துபடாமற் காத்தலும், **"இஈ ஐவழி"** (நூ. 162) **என்னும் சூத்திரத்தான் எய்தியது** விலக்கிப் பிறிதுவிதி வகுத்தலும் நுதலிற்று.

இ-ள்: பனை என்னும் பெயர் முன் கொடி[197] என்னும் பெயர் வரும் ஆயின் வந்தது மிகுதலும் க ச த பக்கள் வரின் நிலைமொழி ஈற்று ஐகாரம் கெட்டு, அம்முப் பெறுதலும் திரள் என்னும் பெயர் வரும் ஆயின் வந்தது மிகுந்தும் ஐ போய் அம்முப் பெற்றும் தம்முள் உறழ்தலும் அட்டு என்னும் பெயர் வரும் ஆயின் ஐகாரம் கெட, வருமொழி அகரம் ஆகாரம் ஆதலும் ஆம் வேற்றுமைக்கண் எ-று.

'கெட்டு' என்பது செயவென் எச்சம் திரிந்து நின்றது.

உ-ம்: பனைக்கொடி எனவும் பனங்காய், செறும்பு, தூண், பழம் எனவும் பனைத்-திரள், பனந்திரள் எனவும் பனாட்டு எனவும் வரும்.

பனைக்கொடி என்பது பனையை எழுதிய கொடி. பனாட்டு என்பது பனையினது தீங்கட்டி. (53)

உயிரீற்றுப் புணரியல் முற்றிற்று.

---

[197] **கொடி என்பதற்குச் சேரன் அணியும் கொடி என்று கூழங்கைத் தம்பிரான் (நன். 202) விளக்கம் கூறுவார்.**

நான்காவது

# மெய்யீற்றுப் புணரியல்

## மெய்யீற்றின் முன் உயிர்

**204. உடன்மே லுயிர்வந் தொன்றுவ தியல்பே.**

எ-னின், மெய்யீற்றுப்பதம் புணரும் சிறப்புப் புணர்ச்சி இவ்வியலால் கூறப்படுதலின் மெய்யீற்றின் முன் உயிர்முதல் வந்து புணருமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: நிலைமொழி ஈற்றில் நின்ற மெய்யின்மேல் வருமொழி முதலுயிர் வந்து ஒன்றுபட்டு, இணங்கி நிற்பது இயல்பு புணர்ச்சியேயாம் எ-று.

உ-ம்: தோன்றலழகன், உரிஞுழகிது, புகழழகிது எனவும் வேலெறிந்தான் எனவும் இருவழியும் காண்க. பிறவும் அன்ன.

இவ்வாறு மெய்யும் உயிரும் கூடி உயிர்மெய்யாய், மெய்யினது புள்ளியும் உயிர்வடிவமும் கெட்டு நிற்றலின் விகாரமாம் என்பாரை விலக்கிச், சிறந்த ஒலிவடிவின் யாக்கையும் உயிரும் போல் மெய்யினது மாத்திரை உள்ளடங்க ஒன்றுபட்டு, இரட்டை இலைபோல் ஒற்றொலி முன்னும் உயிரொலி பின்னுமாய் இணங்கி நிற்றலானும் ஒன்றாத, "தனிக்குறின் முன்னொற்று" (நூ. 205) முதலியன விகாரப்படுதலானும், 'ஒன்றுவ தியல்பே' என்றார்.

ஏகாரம் பிரிநிலைக்கண் வந்தது. (1)

## உயிர் வரின் தனிக்குறில் ஒற்று இரட்டித்தல்

**205. தனிக்குறின் முன்னொற் றுயிர்வரி னிரட்டும்.**

எ-னின், எய்தியதன்மேல் சிறப்புவிதி உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: தனிக்குறில் முன் ஒற்று, உயிர் வரின் இரட்டித்து நிற்கும் எ-று.

உ-ம்: மண்ணரிது, பொன்னரிது எனவும் மண்ணகம், பொன்னொளி எனவும் வரும். பிறவும் அன்ன. (2)

மெய்யீற்றின் முன் மெய்

206. **தன்னொழி மெய்ம்முன் யவ்வரி னிகரந்**
**துன்னு மென்று துணிநரு முளரே.**

எ-னின், யகரம் ஒழிந்த பத்து மெய் முன்னும் வரும் யகரத்திற்கு, "எண்மூ வெழுத்-தீற்று" (நூ. 158) என்னும் சூத்திரத்தான் எய்தியதன்மேல் சிறப்புவிதி உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: யகரம் தன்னை ஒழிந்த ஞ, ண, ந, ம, ன, ர, ல, வ, ழ, ள என்னும் பத்து மெய் (107) முன்னும் வந்தால் தன் முன் இகரச்சாரியையைப் பொருந்தும் என்று அரிதிற் கொள்வாரும் சிலர் உளர் எ-று.

உ-ம்: வேளியாவன், மண்ணியாது எனவும் வேளியானை, மண்ணியானை எனவும் வரும். பிறவும் அன்ன.

எதிர்மறையாய இழிவு சிறப்பும்மையான் இகரம் துன்னாது பொதுச் சூத்திரத்தான் (158) இயல்பாம் என்பார் பலர் என்க. (3)

தொழிற்பெயரும் ஏவலும் சாரியை பெறுதல்

{207} **ஞணநம லவளன வொற்றிறு தொழிற்பெயர்**
**ஏவல் வினைநனி யவ்வன் மெய்வரின்**
**உவ்வுறு மேவ லுறாசில சில்வழி.**

எ-னின், முதனிலைத் **தொழிற்கும் ஏவற்கும்** பொதுவாய சில நிலைமொழிகட்கு எய்தாதது எய்துவித்தல் நுதலிற்று.

இ-ள்: ய ர ழக்களை ஒழிந்த எட்டு ஒற்றும் இறுதி ஆகும் முதனிலைத் தொழிற்-பெயரும் ஏவல்வினையும் மேல் விதந்த யகரம் ஒழிந்த மெய் வரும் ஆயின் பெரும்-பாலும் உகரச்சாரியையை இறுதிக்கண் பொருந்தும்; சில ஏவல்வினை அவ்வுகரச்-சாரியையைப் பொருந்தா சில இடங்களில் எ-று.

ஏவல்வினையோடு எண்ணினமையின் முதனிலைத் தொழிற்பெயர் என்பது பெற்றாம்.

உ-ம்: உரிஞுக் கடிது, உண்ணுக் கடிது, பொருநுக் கடிது, திருமுக் கடிது, தின்னுக் கடிது, நீண்டது, வலிது எனவும் கடுமை, நீட்சி, வன்மை எனவும் தொழிற்பெயர்கள் இருவழியும் உகரம் பெற்றன. பிறவும் அன்ன.

உரினு கொற்றா, உண்ணு கொற்றா, பொருநு கொற்றா, திருமு கொற்றா, தின்னு கொற்றா, நாகா, வளவா என ஏவல்வினை உகரம் பெற்றன. பிறவும் அன்ன.

உரினு, உண்ணு என வருமொழியின்றி உகரம் பெறுதலும் மணலை வாரு, சருகை வாரு எனச் சிறுபான்மை விலக்கிய ஈறு உகரம் பெறுதலும் உள என்பார், 'நனி' என்றும் யகரம் வருமொழிக்கு இகரம் விதித்தலின் (206) அதனோடு புணரும் இந்நிலைமொழி இறுதி உகரம் பெறாது என்பார், 'யவ்வன் மெய்' என்றும் உண்ணு கொற்றா, உண் கொற்றா என உகரம் பெற்றும் பெறாதும் வருவனவும் உரினு கொற்றா என உகரம் பெற்றே வருவனவும் உள என்பார் சில ஏவல் உறா சில்வழி என்றும் கூறினார்.

'ஏவ லுறா' என்னாது, 'ஏவற் குறா' எனப் பாடம் ஓதுவாரும்[198] உளராலோ எனின், 'உறும்' என்னும் வினைக்குத் தொழிற்பெயர்களையும் ஏவல்வினைகளையும் வினைமுதல் ஆக்கிக் கூறுதலானும் அதனை மறுத்த, 'உறா' என்னும் பன்மைவினைக்கு ஒருமை உகரம் வினைமுதல் ஆகாமையானும் அது பாடம் அன்று என்க. (4)

நகரவீற்றுத் தொழிற்பெயர்க்குச் சிறப்புவிதி

208. **நவ்விறு தொழிற்பெயர்க் கவ்வுமாம் வேற்றுமை.**

எ-னின், நகரவீற்றுத் தொழிற்பெயர்க்கு எய்தியதன்மேல் சிறப்புவிதி உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: நகரம் இறுதி ஆகும் முதனிலைத் தொழிற்பெயர்க்கு உகரச்சாரியையே (207) அன்றி, அகரச்சாரியையும் ஆம் வேற்றுமைக்கண் எ-று.

உ-ம்: பொருநக்கடுமை, நன்மை, வன்மை என வரும். பிறவும் அன்ன.

பொருநுதல் ஒருவர் மற்றொருவர்போல வேடம் கொள்ளும் பொருநரது தொழில் ஆதலின் ஒத்தல் என்னும் பொருட்டு. (5)

ணகர னகர ஈறுகள்

209. **ணனவல் லினம்வரட் டறவும் பிறவரின்**
**இயல்பு மாகும் வேற்றுமைக் கல்வழிக்**
**கனைத்துமெய் வரினு மியல்பா கும்மே.**

[198] மயிலைநாதர் (நன். 206), "ஏவற் குறா" எனப் பாடம் ஓதுவார்.

எ-னின், மேலைச் சூத்திரங்காறும் மெய்யீற்றுப் பொதுப் புணர்ச்சி (204-208) கூறி, அவற்றிற்கே உரிய ஞகர நகரங்களை ஒழித்து, ஏனையவற்றிற்கு முறையே தனித்தனி சிறப்புவிதி கூறுவான் தொடங்கி, ணகர னகர ஈறு புணருமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: ணகார னகாரங்கள் வேற்றுமைக்கண் வல்லினம் வந்தால்[199] முறையே டகாரமும் றகாரமும் ஆம்; மெல்லினமும் இடையினமும் வந்தால் இயல்பாம்; அல்வழிக்கண் மூவினமும் வந்தாலும் இயல்பே ஆம் எ-று.

உ-ம்: சிறுகட்களிறு, பேரமர்க்கட்பேதை எனவும் பொற்றட்டு, பொற்றகடு எனவும் வேற்றுமைக்கண் வல்லினம் வரத் திரிந்தன. மண், பொன்: ஞாற்சி, நீட்சி, மாட்சி, யாப்பு, வன்மை என வேற்றுமைக்கண் மெல்லினமும் இடையினமும் வர இயல்பாயின. மண், பொன்: கடிது, சிறிது, தீது, பெரிது, ஞான்றது, நீண்டது, மாண்டது, யாது, வலிது எனவும் உண்டான் கொற்றன், ஞெள்ளன், வளவன் எனவும் அல்வழிக்கண் மூவினமும் வர இயல்பாயின. பிறவும் அன்ன.

ஒப்பின் முடித்தலான் னகரமும் உடன் கூறினார். இவ்வாறு பின் வருவனவும் (224, 227-230; 237) அன்ன. (6)

குறிலைச் சாராத ணகர னகர ஈறுகள்

210. **குறிலணை வில்லா ணனக்கள் வந்த**
**நகரந் திரிந்துழி நண்ணுங் கேடே.**

எ-னின், ணகார னகார ஈற்றுள் ஒருசாரனவற்றிற்கு எய்தியது (209) விலக்கிப் பிறிதுவிதி வகுத்தல் நுதலிற்று.

இ-ள்: தனிக்குறில் ஒன்றனையும் ஒழிந்து ஒருமொழி தொடர்மொழிகளைச் சார்ந்த ணகார னகாரங்கள், வருமொழிக்கு முதலாக வந்த நகரம் மயக்கவிதி இன்மையின் திரிந்தவிடத்து இயல்பாகாது கெடுதலைப் பொருந்தும் எ-று.

உ-ம்: பாணன்று, தூணன்று, பசுமணன்று எனவும் நன்மை எனவும் அரசனல்லன், செம்பொனன்று எனவும் நன்மை எனவும் இருவழியும் கெட்டன. (7)

சில ணகரவீற்றுப் பெயர்களுக்குச் சிறப்புவிதி

{211} **சாதி குழூஉப்பரண் கவண்பெய ரிறுதி**

[199] வல்லினம் வரட் டறவும் என்று மூலபாடத்தில் டகரம் மிகுதற்கு, "டகரமும் வல்லினம் ஆதலின் மிகுந்தது" என்று சங்கர நமச்சிவாயர் எழுத்ததிகாரப் புறனடை நூற்பாவின் உரையில் (நன். 257) அமைதி கூறுவார்.

**இயல்பாம் வேற்றுமைக் குணவெண் சாண்பிற**
**டவ்வா கலுமா மல்வழி யும்மே.**

*எ-னின், ணகரவீற்றுள் சிலவற்றிற்கு* **வேற்றுமைக்கண்** *எய்தியது (209) விலக்கலும் சிலவற்றிற்கு* **அல்வழிக்கண்** *எய்தியதன்மேல் (209)* **சிறப்புவிதியும் உணர்த்துதல்** *நுதலிற்று.*

*இ-ள்: சாதிபற்றியும் திரள்பற்றியும் வரும் பெயர்களும் பரண், கவண் என்னும் பெயர்களும் ஆனவற்றின் இறுதிணகரம் வேற்றுமைக்கண்ணும் வல்லினம் வந்தால் இயல்பாம்; எண்ணல் அளவையன்றி உணவுக்கு உரிய எள்ளின் திரிசொல்லாய எண் என்னும் பெயரும் சாண் என்னும் நீட்டல் அளவைப்பெயரும் வல்லெழுத்துக்கள் வரின் திரிந்து, டகரம் ஆதலும் பொருந்தும் அல்வழிக்கண்ணும் எ-று.*

*அல்வழிக்கண் இறந்தது தழீஇய எச்சவும்மையை வேற்றுமைக்கண்ணும் கூட்டுக.*

*உ-ம்: பாண், உமண்: குடி, சேரி, தோட்டம், பாடி எனவும் அமண்: குடி, சேரி, தோட்டம், பாடி எனவும் பரண்கால், கவண்கால் எனவும் வேற்றுமைக்கண்ணும் இயல்பாயின. எட் கடிது, சிறிது, தீது, பெரிது எனவும் சாட்கோல் எனவும் அல்வழிக்கண்ணும் திரிந்தன.*

*'டவ்வா கலுமாம்' என்னும் இறந்தது தழீஇய எச்ச இழிவு சிறப்பும்மையான் எண் கடிது, சாண்கோல் என இயல்பாதலே வலி உடைத்து என்க.*

*'பிற' என்ற மிகையானே வேற்றுமைக்கண் பாணக்குடி என அகரச்சாரியை பெறுதலும் அட்டுண்டுழனி என்னும் இயல்பும் மண்குடம், மட்குடம் என்னும் உறழ்வும் இருவழிக்கண்ணும் இன்னும் ணகரவீற்றுள் அமையாதன உளவேல் அவையும் கொள்க.*

*சாதியும் குழுவும் ஆகுபெயராய் அவற்றை உடையராய உயர்திணைப்பொருளை உணர்த்தி நின்றனவேனும் தெய்வம் (தொல். கிளவி. 58) என்றாற்போலச் சொல்லான் அஃறிணை ஆதலின்,*

> *"பொதுப்பெய ருயர்திணைப் பெயர்க ளீற்றுமெய்*
> *வலிவரி னியல்பாம்" (நூ. 159)*

*என்பதனான் அமையாவாயின. மேல் வரும் ணஃகான் கிளைப்பெயரும் அது.* (8)

வேற்றுமைக்கண் ணகரவீற்றுச் சாதிப்பெயர்

{212} **ணஃகான் கிளைப்பெய ரியல்பு மஃகான்**
**அடைவு மாகும் வேற்றுமைப் பொருட்கே.**

எ-னின், னகரவீற்றுச் சாதிப்பெயர்க்கு **வேற்றுமைக்கண்** எய்தியது (209) விலக்கலும் பிறிதுவிதி வகுத்தலும் நுதலிற்று.

இ-ள்: னகரவீற்றுச் சாதிப்பெயர் வல்லினம் வர, ஈறு திரியாது இயல்பாதலும் அகரச்சாரியை பெறுதலும் ஆம் வேற்றுமைப் பொருட் புணர்ச்சிக்கண் எ-று.

உ-ம்: எயின்குடி, எயினக்குடி, சேரி, தோட்டம், பாடி என வரும்.

'பொருட்கே' என்ற மிகையானே எயினமரபு, எயினவாழ்வு, எயினவணி என ஏனைக் கணம் வரின் அகரச்சாரியை பெறுதலும் எயினக்கன்னி, எயினப்பிள்ளை, எயினமன்னன் என அல்வழிக்கண் அகரச்சாரியை பெறுதலும் கொள்க.

கிளை என்னும் பல பொருள் ஒரு சொல் ஈண்டுச் சாதிமேல் நின்றது. (9)

மீன்மொழியின் னகரம் உறழ்தல்

{213} **மீன்றவ் வொடுபொரூஉம் வேற்றுமை வழியே.**

எ-னின், மீன் என்னும் சொற்கு **வேற்றுமைக்கண்** எய்தியது (209) ஒருவாற்றான் விலக்கல் நுதலிற்று.

இ-ள்: மீன் என்னும் மொழியிறுதி னகரம் வேற்றுமைக்கண் வல்லெழுத்து வரின் றகரத்தோடு உறழ்ந்து வரும் எ-று.

உ-ம்: மீன்கண், மீற்கண், செவி, தலை, புறம் என வரும்.

றகரம் ஆதல் இக்காலத்துப் பயின்று வாராதேனும் தொன்னெறி ஆதலின் ஆணை வழி நிற்க என்பார், 'வழியே' என்றார். (10)

தேன்மொழிக்குச் சிறப்புவிதி

{214} **தேன்மொழி மெய்வரி னியல்பு மென்மை**
**மேவி னிறுதி யழிவும் வலிவரின்**
**ஈறுபோய் வலிமெலி மிகலுமா மிருவழி.**

எ-னின், தேன் என்னும் சொற்கு, **"ணனவல் லினம்வரட் டறவும்"** (நூ. 209) என எய்தியது விலக்கலும்,

**"பிறவரின்**
**இயல்பு மாகும் வேற்றுமைக் கல்வழிக்**
**கனைத்துமெய் வரினு மியல்பா கும்மே"** (நூ. 209)

**என** எய்தியது இகந்துபடாமற் காத்தலும் **இச்சூத்திரத்து, 'இயல்பும்' என** எய்தியதன்மேல் சிறப்புவிதியும் வரும் வல்லினத்திற்கு, **"இயல்பினும் விதியினும்"** (நூ. 165) **என்னும் சூத்திரத்தான்** எய்தியதன்மேல் சிறப்புவிதியும் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: தேன் என்னும் சொல் மூவின மெய்யும் வரின் இறுதினகரம் இயல்பாதலும் மெல்லினம் வரின் அவ்விறுதி இயல்பாதலே அன்றிக் கெடுதலும் வல்லினம் வரின் இறுதி இயல்பாதலே அன்றிக் கெட, வந்த வல்லினமாதல் அதற்கு இனமாதல் மிகுதலும் ஆம் இருவழிக்கண்ணும் எ-று.

"குறிலணை வில்லா ணனக்கள் வந்த
நகரந் திரிந்துழி நண்ணுங் கேடே" (நூ. 210)

என்றமையின் இயல்பிற்கு நகரம் ஒழிந்த எட்டு மெய்யும்[200] வருவித்துக் காண்க.

உ-ம்: தேன் கடிது, தேன் ஞான்றது, தேன் யாது எனவும் தேன்மொழி, தேமொழி எனவும் தேன்குழம்பு, தேக்குழம்பு, தேங்குழம்பு எனவும் அல்வழிக்கண் வந்தன. தேன்கடுமை, தேன்மலிவு, தேன்யாப்பு எனவும் தேன்மலர், தேமலர் எனவும் தேன்குடம், தேக்குடம், தேங்குடம் எனவும் வேற்றுமைக்கண் வந்தன. பிறவும் அன்ன.

தேன் என்பது பல பொருள் ஒரு சொல் ஆதலின் மணங் கமழ்சோலை என்னும் பொருட்டாய்த் தேங்கமழ்சோலை என இவ்விகாரங்கள் ஏற்று வருவனவும் கொள்க. (11)

எகின்மொழிக்குச் சிறப்புவிதி

{215} **மரமல் லெகின்மொழி யியல்பு மகரம்**
**மருவ வலிமெலி மிகலு மாகும்.**

எ-னின், எகின் என்னும் சொற்கு **வேற்றுமைக்கண், "ணனவல் லினம்வரட் டறவும்"** (நூ. 209) **என** எய்தியது விலக்கலும், **'அகரம் மருவ' என்றமையின் அச்சூத்திரத்தால் இருவழிக்கண்ணும்** எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தலும் வரும் வல்லினத்திற்கு, **"இயல்பினும் விதியினும்"** (நூ. 165) **என்னும் சூத்திரத்தான்** எய்தியதன்மேல் சிறப்புவிதியும் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: மரமன்றிப் பறவையாய அன்னத்தை உணர்த்தும் எகின் என்னும் சொல்

---

**[200] சுட்டுக்களின் பின்னும் எகர யகர வினாக்களின் பின்னும் வரும் (106) நகரத்தையும் நகரத்தோடு நீக்க, எஞ்சி நிற்கும் க, ச, த, ப, ம, வ, ய, ஞ என்னும் மொழி முதல் எழுத்துக்கள் (102) இவண் நகரம் ஒழிந்த எட்டு மெய் என்று குறிக்கப்பட்டன.**

வேற்றுமைக்கண்ணும் வல்லினம் வர, இறுதி இயல்பாதலும் இருவழியும் அகரச்-சாரியையைப் பொருந்த, வரும் வல்லெழுத்தாதல் அவற்றிற்கு இனமாதல் மிகுதலும் ஆம் எ-று.

உ-ம்: எகின் கால், சிறை, தலை, புறம் என வேற்றுமைக்கண்ணும் இயல்பாயிற்று. எகினப்புள், எகினம்புள் எனவும் எகினக்கால், எகினங்கால் எனவும் இருவழியும் அகரம் மருவ வலிமெலி மிகுந்தன.

அகரம் மருவுதற்கு வருமொழி வரையாமையின் நாற்கணமும் கொள்க. எகின மாட்சி, **வாழ்க்கை, அழகு** என வரும். பிறவும் அன்ன. (12)

குயின் ஊன் என்பன வலி வரின் இயல்பாதல்

{216} **குயினூன் வேற்றுமைக் கண்ணு மியல்பே.**

எ-னின், குயின், ஊன் என்னும் சொற்கட்கு, **"ணனவல் லினம்வரட் டறவும்"** (நூ. 209) **என** எய்தியது விலக்கல் நுதலிற்று.

இ-ள்: குயின் என்னும் பெயரும் ஊன் என்னும் பெயரும் வல்லினம் வரின் அல்வழிக்கண் இயல்பாதலே அன்றி, வேற்றுமைக்கண்ணும் இயல்பாம் எ-று.

உ-ம்: குயின் கடுமை, ஊன் கடுமை, சிறுமை, தீமை, பெருமை என வரும்.

குயின்- மேகம். (13)

மின் முதலிய நான்கிற்கும் சிறப்புவிதி

{217} **மின்பின் பன்கன் றொழிற்பெய ரனைய**
**கன்னவ் வேற்று மென்மையோ டுறழும்.**

எ-னின், மின், பின், பன், கன் என்னும் நான்கு சொற்கும், **"ணனவல் லினம்வரட் டறவும்"** (நூ. 209) **என்னும் சூத்திரத்தான்** எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தலும் ஈண்டு அகரச்சாரியை முன் வரும் வல்லினத்திற்கு, **"இயல்பினும் விதியினும்"** (நூ. 165) **என்னும் சூத்திரத்தான்** எய்தியதன்மேல் சிறப்புவிதியும் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: இந்நான்கு சொல்லும் தொழிற்பெயர்போல, "யவ்வன் மெய்வரின்" (நூ. 207) உகரச்சாரியையைப் பொருந்தும்; இவற்றுள் கன் என்னும் சொல் உகரச்சாரியையே அன்றி அகரச்சாரியையும் பெற்று, வல்லினம் வந்தால் வரும் எழுத்தாதல் அதற்கு இனமாதல் மிகப்பெறும் எ-று.

அவ்வும் என்னும் உம்மையும் பெறும் என்னும் முற்றும் விகாரத்தால் தொக்கன.

உ-ம்: மின்னுக் கடிது, பின்னுக் கடிது, பன்னுக் கடிது, கன்னுக் கடிது; நன்று, வலிது எனவும் கடுமை, நன்மை, வன்மை எனவும் கன்னத்தட்டு, கன்னந்தட்டு எனவும் கன்னத்தூக்கு, கன்னந்தூக்கு எனவும் அல்வழி வேற்றுமைக்கண் முறையே வந்தன. பிறவும் அன்ன.

கன் என்பது சிறு தராசுத்தட்டு. முன் என்னும் சொல்லை முன்னம் என்றாற்போல இதனைக் கன்னம் என்றும் கூறுப. (14)

தன் முதலிய விகாரமொழிகளுக்குச் சிறப்புவிதி

{218} **தன்னென் னென்பவற் றீற்றுனவ் வன்மையோ**
**டுறழு நின்னீ றியல்பா முறவே.**

எ-னின், தன் என்றும் என் என்றும் வரும் விகாரமொழிகட்கு, **"ணனவல் லினம்-வரட் டறவும்"** (நூ. 209) **என** எய்தியது ஒருவாற்றான் விலக்கலும் நின் என்று வரும் விகாரமொழிக்கு எய்தியது விலக்கலும் நுதலிற்று.

இ-ள்: தான் என்பது தன் என்றும் யான் என்பது என் என்றும் (247) வரும் விகாரமொழிகளின் ஈற்று னகரம் வல்லினம் வரின் பொதுவிதியானே (209) றகரமாய்த் திரிதலும் அவ்விதி ஏலாது இயல்பாதலும் ஆம்; நீ என்பது நின் என நின்ற (247) விகாரமொழி ஈற்று னகரம் வல்லினம் வரின் திரியாது இயல்பே ஆம் எ-று.

'வன்மை' என்றது னகரத்திற்கு இனமாய றகரத்தை.

உ-ம்: தன்பகை, தற்பகை, என்பகை, எற்பகை எனவும் நின்பகை எனவும் வரும்.

'உறவே' என்ற மிகையானே மின், பின் முதலியன மின் கடிது, மின்கடுமை என இருவழியும் சாரியைப்பேறும் திரிபும் இன்றி வருதலும் மான்குளம்பு, அழன்கை என வேற்றுமைக்கண் விதவாதன இயல்பாதலும் வரிற் கொள்ளும் எனச் செயின் என்னும் வாய்பாட்டு வினையெச்சம் பொதுச் சூத்திரத்தான் (209) இயல்பாகாது திரிதலும் இன்னும் னகரவீற்றுள் அமையாதன உளவேல் அவையும் கொள்க.

நின் என்பது விகாரமொழி ஆதலின்,

"பொதுப்பெய ருயர்திணைப் பெயர்க ளீற்றுமெய்
வலிவரி னியல்பாம்" (நூ. 159)

என்பதனுள் அடங்காதாயிற்று. (15)

மகரவீற்றுப் பொதுவிதி

219. **மவ்வீ றொற்றழிந் துயிரீ றொப்பவும்**
**வன்மைக் கினமாத் திரிபவு மாகும்.**

எ-னின், மகரவீறு புணருமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: மகரவீற்றுச் சொற்கள் இறுதிமகரம் கெட, விதி உயிரீறாய் நின்று, இயல்பு உயிரீறுபோல உயிர் வரின் உடம்படுமெய் தோன்றவும் வல்லினம் வரின் அவை மிகவும் மெல்லினமும் இடையினமும் வரின் இயல்பாகவும் புணர்வனவும் வல்லினம் வரின் கெடாது அவற்றிற்கு இனமாய்த் திரிவனவும் ஆம் எ-று.

உ-ம்: வட்டவாழி, கடல், நேமி, வாரி எனவும் மரவடி, மரக்கால், நார், வேர் எனவும் நாங் கடியம், அடுங் களிறு எனவும் நங்கை எனவும் முறையே இருவழியும் வந்தன. பிறவும் அன்ன.

வன்மைக்கு இனமாத் திரியும் என்றமையின் அருத்தாபத்தியால்[201] நாம் பெரியம் எனப் பகரம் வரும்வழித் திரியாது என்பது பெற்றாம். (16)

சில மகரவீற்றுக்குச் சிறப்புவிதி

{220} **வேற்றுமை மப்போய் வலிமெலி யுறழ்வும்**
**அல்வழி யுயிரிடை வரினியல் பும்முள.**

எ-னின், சில மகரவீற்றிற்கு **மேலைச் சூத்திரத்தான்** எய்தியது இகந்துபடாமற் காத்தலும் விலக்கலும் வரும் வல்லினத்திற்கு, "**இயல்பினும் விதியினும்**" (நூ. 165) **என்னும் சூத்திரத்தான்** எய்தியதன்மேல் சிறப்புவிதியும் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: வேற்றுமைக்கண் மகரவிறுதி கெட, அவற்றின் முன் வரும் வல்லினமாதல் அவற்றிற்கு இனமாதல் மிகுதலும் அல்வழிக்கண் உயிரும் இடையினமும் வரின் கெடாது இயல்பாதலும் உளவாம் எ-று.

உ-ம்: குளக்கரை, குளங்கரை எனவும் குளம் அழகிது, குளம் யாது எனவும் அருளும் அரசன், கொல்லும் யானை எனவும் வரும். பிறவும் அன்ன. (17)

நும் முதலிய விகாரமொழிகள் திரிதல்

{221} **நுந்தம்,**
**எம்நம் மீறா மவ்வரு ஞநவே.**

---

[201] **பகரம் வரும்வழி மகரம் திரியாமையை மயிலைநாதர் (நன். 218) உம்மையால் கொள்வார்.**

எ-னின், சில பொதுப்பெயர்க்கு, **"மவ்வீ றொற்றழிந்து"** (நூ. 219) **என** எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தல் நுதலிற்று.

இ-ள்: இந்நான்கு விகாரமொழிகள் ஈற்று மகரம், மேல் வரும் ஞ நக்களாகத் திரியும் எ-று.

உ-ம்: நுஞ்ஞாண், நுந்நூல்; தஞ்ஞாண், தந்நூல்; எஞ்ஞாண், எந்நூல்; நஞ்ஞாண், நந்நூல் என வரும்.

ஞ, ந வரின் அவையாய்த் திரியும் எனவே ஒழிந்த மகரம் வரின் நும்மணி என இயல்பாம் என்பது பெற்றாம். (18)

அகம் என்னும் இடப்பெயர் முன் சினைப்பெயர்

{222} **அகமுனர்ச் செவிகை வரினிடை யனகெடும்.**

எ-னின், அகம் என்னும் சொற்கு, **"வன்மைக் கினமாத் திரிபவும்"** (நூ. 219) **என** எய்தியதன்மேல் சிறப்புவிதி உணர்த்தல் நுதலிற்று.

இ-ள்: அகம் என்னும் இடப்பெயர் முன்னர்ச் செவி, கை என்னும் சினைப்பெயர் வரின் நிலைமொழி இறுதிமகரம் வன்மைக்கு இனமாத் திரிதலே (219) அன்றி, அதன் இடை நின்ற ககரவொற்றும் அதனை ஊர்ந்த அகர உயிரும் கெடும் எ-று.

உ-ம்: "அஞ்செவி நிறைய மந்திர மோதி" (தொல். குற்றிய. 77* இளம்.), "அங்கையு ணெல்லி யதன்பயன்" (பு. வெ. 34:1*) என வரும்.

செவி எனச் சகரத்தை முற் கூறினார், "அஞ்சிறைத் தும்பி" (குறுந். 2:1) எனவும் வருதலின் என்க.

இடையன கெட்டே வரும் என நியதி கூறாமையின் அகஞ்செவி, அகங்கை, அகஞ்சிறை என வருதல் விலக்கப்பட்டன அல்ல என்க.

நகர்ப்புறம் என்பதனைப் புறநகர் என்றாற்போலச் செவியகம், கையகம் என்னும் இட உறுப்புத் தற்கிழமைப் பெயரோடு முடிந்த ஆறாம் வேற்றுமைத் தொகைச்-சொல்லை முன்பின்னாக வழங்கலின் இவ்விரண்டும் இலக்கணப்போலியாய்த் தழாத்-தொடராய அல்வழியுள் ஒன்றாம் என்க.

அகஞ்சிறை என்பது ஏனையவற்றின் சிறைபோலப் புறத்தின் கண்ணவன்றி அகத்தின் கண்ண ஆகலின் ஏழாம் வேற்றுமைத்தொகை. (19)

ஈம் முதலிய மூன்றும் சாரியை பெறுதல்

{223} **ஈமுங்,**
**கம்மு முருமுந் தொழிற்பெயர் மானும்**
**முதலன வேற்றுமைக் கவ்வும் பெறுமே.**

எ-னின், இம்மூன்று சொற்கும், **"மவ்வீ றொற்றழிந்து"** (நூ. 219) **என்னும் சூத்திரத்-தான்** எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தல் நுதலிற்று.

இ-ள்: இம்மூன்று சொல்லும் இருவழியும் முதனிலைத் தொழிற்பெயர்போல, "யவ்வன் மெய்வரின்" (நூ. 207) உகரச்சாரியை பெற்று முடியும்; இவற்றுள் முதற்கண் நின்ற ஈமும் கம்மும் வேற்றுமைக்கண் உகரச்சாரியையன்றி அகரச்சாரியையும் பெறும் எ-று.

இவற்றுள் கம் என்பது பல பொருள் ஒரு சொல் ஆதலின் எப்பொருளை உணர்த்தி நிற்பினும் இவ்விதி கொள்க.

உ-ம்: ஈமுக் கடிது, கம்முக் கடிது, உருமுக் கடிது, நீண்டது, வலிது எனவும் கடுமை, நீட்சி, வன்மை எனவும் ஈமக்குடம் கம்மக்குடம் எனவும் முறையே காண்க. பிறவும் அன்ன.

கம் என்பது கம்மியரது தொழில். அத்தொழிலால் சமைந்த குடம் என்க. இது முதனிலைத் தொழில் அன்று ஆதலின், 'மானும்' என்றார். (20)

ய ர ழ முன்னர் வல்லினம் புணருமாறு

224. **யரழ முன்னர்க் கசதப வல்வழி**
**இயல்பு மிகலு மாகும் வேற்றுமை**
**மிகலு மினத்தோ டுறழ்தலும் விதிமேல்.**

எ-னின், ய, ர, ழ மெய்யீற்றுமுன் க ச த பக்கள் புணருமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: இம்மூன்று ஈற்றின் முன்னும் க ச த பக்கள் வரின் அல்வழிக்கண் இயல்பாதலும் மிகுதலும் வேற்றுமைக்கண் மிகுதலும் வல்லினமாதல் மெல்லின-மாதல் மிகுதலும் விதியாம் எ-று.

உ-ம்: வேய் கடிது, வேர் கடிது, வீழ் கடிது எனவும் மெய்க்கீர்த்தி, போய்க் கொண்டான், கார்ப்பருவம், பூழ்ப்பறவை எனவும் நாய்க்கால், தேர்க்கால், பூழ்க்கால்,

எனவும் வேய்க்குழல், வேய்ங்குழல், ஆர்க்கோடு, ஆர்ங்கோடு எனவும் முறையே வந்தன. பிறவும் அன்ன.

'மேல்' என்ற மிகையானே, "வாய்புகு வதனினுங் கால்பெரிது கெடுக்கும்" (புறம். 184:4) என வேற்றுமைக்கண் இயல்பாதலும் பாழ்க்கிணறு, பாழ்ங்கிணறு எனப் பண்புத்தொகைக்கண் உறழ்தலும் இன்னும் அமையாதன உளவேல்[202] அவையும் கொள்க. (21)

தமிழ் தாழ் என்பன சாரியை பெறுதல்

**225. தமிழவ் வுறவும் பெறும்வேற் றுமைக்கே**
**தாழுங் கோல்வந் துறுமே லற்றே.**

எ-னின், இவ்விரு சொற்கும் எய்தாதது எய்துவித்தல் நுதலிற்று.

இ-ள்: தமிழ் என்னும் சொல் நாற்கணமும் வரின் வேற்றுமைக்கண் அகரச்சாரியையைப் பொருந்தவும் பெறும்; தாழ் என்னும் சொல்லும் கோல் என்னும் சொல் வந்து பொருந்தும் ஆயின் அவ் அகரச்சாரியையைப் பெறும் எ-று.

தமிழிற்கு வருமொழி வரையாமையின் நாற்கணமும் என்றாம்.

உ-ம்: தமிழப்பல்லவதரையர், தமிழநாகன், தமிழவளவன், தமிழவரசன் எனவும் தாழக்கோல் எனவும் வரும். பிறவும் அன்ன.

'அவ் வுறவும்' என்னும் எதிரது தழீஇய எச்சவும்மையானே[203] தமிழின் சுவை என இன்சாரியை பெறுதலும் கொள்க.

தமிழை உடைய பல்லவதரையர், தாழைத் திறக்கும் கோல் என விரியும். தாழக்கோல் எனினும் திறவுகோல் எனினும் அமையும். தாழாய கோல் என ஒரு பொருட்கு இருபெயரொட்டு ஆக்கலும் ஒன்று. (22)

கீழின் முன் வல்லினம் உறழ்தல்

**{226} கீழின்முன் வன்மை விகற்பமு மாகும்.**

எ-னின், கீழ் என்னும் சொல்முன் வரும் வல்லினத்திற்கு, "யரழ முன்னர்" (நூ. 224)

---

[202] அமையாத வேறு பலவற்றை வைத்தியநாத தேசிகர் (இல. விள. 133) எடுத்துக்காட்டி இவ்விதியால் அமைத்துக்கொள்வார்.

[203] உம்மையால் தமிழ்க்கூத்து, தாழ்க்கோல் என அகரச்சாரியை பெறாமல் வலி மிகுதலையும் மயிலைநாதர் (நன். 224) கொள்வார்.

**என்னும் சூத்திரத்தான்** எய்தியது பெரும்பாலும் விலக்கல் நுதலிற்று.

இ-ள்: கீழ் என்னும் சொல்முன் வரும் வல்லினம் ஒரு கால் **இயல்பாகியும்** ஒரு கால் **மிக்கும்** வரும் விகற்பத்தையும் பொருந்தும் எ-று.

உ-ம்: கீழ்குலம், கீழ்க்குலம்; கீழ்சாதி, கீழ்ச்சாதி என வரும். பிறவும் அன்ன.

இழிவு சிறப்பும்மையான் இவற்றுள் இயல்பே சிறப்பு உடைத்து என்க.

கீழ்மை என்னும் பண்பொடு புணர்தல் பதவியலுள் (136) முடித்துப் போந்தமையின்,

"கீழிருந்துங்
கீழல்லார் கீழல் லவர்" (குறள். 973)

என்றாற்போலக் கீழ் என்பது பண்பாகுபெயராய், இத்தொடர் இருபெயரொட்டுப் பண்புத்தொகையாம் என்க. (23)

லகர ளகர ஈறுகளுக்குப் பொதுவிதி

227. **லளவேற் றுமையிற் றடவு மல்வழி
அவற்றோ டுறழ்வும் வலிவரி னாமெலி
மேவி னணவு மிடைவரி னியல்பும்
ஆகு மிருவழி யானு மென்ப.**

எ-னின், ல ள ஈறு புணருமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: லகார, ளகாரமான இரண்டு ஈறும் வல்லினம் வரின் வேற்றுமைக்கண் முறையே றகார டகாரங்கள் ஆம்; அல்வழிக்கண்ணே றகார, டகாரங்களுடனே உறழ்வனவாம்; இருவழிக்கண்ணும் மெல்லினம் வரின் னகார, ணகாரங்கள் ஆம்; இடையினம் வரின் இயல்பாம் என்று சொல்லுவர் புலவர் எ-று.

உ-ம்: கற்குறை, முட்குறை எனவும் கல் குறிது, கற் குறிது, முள் குறிது, முட் குறிது எனவும் கன் ஞெரிந்தது, முண் ஞெரிந்தது எனவும் கன்ஞெரி, முண்ஞெரி எனவும் கல் யாது, முள் யாது எனவும் கல்யாப்பு, முள்யாப்பு எனவும் முறையே வந்தன. பிறவும் அன்ன.

'அல்வழி, அவற்றோ டுறழ்வும்' என்றாரேனும் இவற்றோடு மயங்காது என விலக்கிய (117) தகரம் வரின் ஏற்புழிக் கோடலான் உறழ்ச்சியுள் இயல்பு ஒழித்துத் திரிபு ஒன்றுமே பெறுதல் கொள்க. கற்றீது, முட்டீது என வரும். (24)

### லகர ளகர ஈறுகளுக்குச் சிறப்புவிதி

{228} **குறில்வழி லளத்தவ் வணையி னாய்தம்**
**ஆகவும் பெறூஉ மல்வழி யானே.**

எ-னின், இவ்விரண்டு ஈற்றிற்கும் மேலைச் **சூத்திரத்தான்** எய்தியதன்மேல் சிறப்பு-விதி உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: தனிக்குறிலின் பின் நின்ற லகர ளகரங்கள் அல்வழிக்கண்ணே தகரம் வரும் ஆயின் றகர டகரங்களாகத் திரிதலே அன்றி, ஆய்தமாகத் திரிதலையும் பொருந்தும் எ-று.

உ-ம்: கஃறீது, முஃடீது என வரும். (25)

### தனிக்குறிலைச் சாராத லகர ளகர ஈறுகள்

{229} **குறில்செறி யாலள வல்வழி வந்த**
**தகரந் திரிந்தபிற் கேடுமீ ரிடத்தும்**
**வருநத் திரிந்தபின் மாய்வும் வலிவரின்**
**இயல்புந் திரிபு மாவன வுளபிற.**

எ-னின், **"லளவேற் றுமையிற் றடவும்"** (நூ. 227) **என்னும் சூத்திரத்தான்** எய்தி-யது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தல் நுதலிற்று.

இ-ள்: தனிக்குறில் ஒன்றனையும் சாராது வரும் லகார ளகாரங்கள் அல்வழிக்கண் வந்த தகரம் திரியுமிடத்துக் கெடுதலும் இருவழிக்கண்ணும் வந்த நகரம் திரியுமிடத்துக் கெடுதலும் வல்லினம் வரின் அல்வழிக்கண் உறழாது இயல்பாதலும் திரிதலும் வேற்றுமைக்கண் திரியாது இயல்பாதலும் பொருந்துவன உள எ-று.

திரியும் முன் கெடுவனவற்றைத் திரிந்த பின் கேடும் மாய்வும் **என்றமையின்** கால வழுவமைதி (384).

உ-ம்: தோன்றறீயன், வேடீயன் எனவும் தோன்றனல்லன், வேணல்லன் எனவும் தோன்றனன்மை, வேணன்மை எனவும் கால் கடிது, மரங்கள் கடிய எனவும் வேற்படைக் குமரன், வாட்படைக் கையன் எனவும், "கால்குதித் தோடிக் கடல்புக மண்டி" (திரு. 2:135*), "வாள்போழ்ந் திட்ட" (புறம். 246:4), "நீள்கழன் மறவர்" (புறம். 93:10) எனவும் முறையே காண்க.

'பிற' என்ற மிகையானே தோன்றறீமை, வேடீமை என வேற்றுமைக்கண்ணும் தகரம் திரியுமிடத்துக் கெடுதலும் காற்றுணை, தாட்டுணை எனக் கெடாமையும் விற்படை என உறழாது திரிதலும் கொல்களிறு, கொள்பொருள் என வினைத்தொகை இயல்பாதலும் இன்னும் இவ்விரண்டு ஈற்றுள் அமையாதன பிறவும் கொள்க. இங்ஙனம் உயர்திணைச்சொல்லின்கண் காட்டிய விகாரங்கள் மயக்கவிதி இன்மையிற் படுவன ஆதலின், "சில விகாரமா முயர்திணை" (நூ. 159) என்பதனுள் அடங்கா என்க. (26)

லகர ளகர ஈற்றுத் தொழிற்பெயர்கள்

{230} **லளவிறு தொழிற்பெய ரீரிடத்து முவ்வுறா**
**வலிவரி னல்வழி யியல்புமா வனவுள.**

எ-னின், விகுதி பெற்ற தொழிற்பெயர்க்கும் முதனிலை திரிந்த தொழிற்பெயர்க்கும் வருவதோர் ஐயம் அறுத்தலும் **ஒருவாற்றால், "அல்வழி, அவற்றோ டுறழ்வும்"** (நூ. 227) **என** எய்தியது விலக்கலும் நுதலிற்று.

இ-ள்: லகாரத்தை இறுதியாக உடைய விகுதி பெற்ற தொழிற்பெயரும் ளகாரத்தை இறுதியாக உடைய முதனிலை திரிந்த தொழிற்பெயரும் முதனிலைத் தொழிற்பெயர்-போல, "யவ்வன் மெய்வரின்" (நூ. 207) உகரம் பெறுமோ பெறாவோ என்று ஐயுறற்க; இருவழியும் உகரம் பெறாவாம்; வல்லினம் வரின் அல்வழிக்கண் உறழாது இயல்பாவனவும் சில உள எ-று.

உ-ம்: ஆடல் சிறந்தது, ஆடற் சிறந்தது; ஆடனன்று, ஆடல் வலிது எனவும் ஆடற்சிறப்பு, ஆடனன்மை, ஆடல்வலிமை எனவும் கோள் கடிது, கோட் கடிது, கோணன்று, கோள் வலிது எனவும் கோட்கடுமை, கோணன்மை, கோள்வலிமை எனவும் இருவழியும் உகரம் பெறாது பொதுவிதியான் (227) முடிந்தன. நடத்தல் கடிது, நடப்பித்தல் கடிது எனச் சில உறழாது அல்வழிக்கண் இயல்பாயின.

இறந்தது தழீஇய எச்ச இழிவு சிறப்பும்மையானே பின்னல் கடிது, பின்னற் கடிது, உன்னல் கடிது, உன்னற் கடிது எனப் பொதுவிதியான் (227) உறழ்தலே பெரும்பால என்க. (27)

வல் என்னும் சொல் சாரியை பெறுதல்

{231} **வல்லே தொழிற்பெய ரற்றிரு வழியும்**
**பலகைநாய் வரினும் வேற்றுமைக் கவ்வுமாம்.**

எ-னின், "**லளவேற் றுமையிற் றடவும்**" (நூ. 227) **என்னும் சூத்திரத்தான்** எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தல் நுதலிற்று.

இ-ள்: வல் என்னும் சூதாடுகருவிப் பெயர், "யவ்வன் மெய்வரின்" (நூ. 207) தொழிற்பெயரே போல இருவழியும் உகரச்சாரியை பெறும்; பலகை, நாய் என்னும் இருபெயர் வரினும் பிற பெயர் வரினும் வேற்றுமைக்கண் அகரச்சாரியையும் உகரச்சாரியையும் பெறும் எ-று.

'வரினும்' என்னும் எதிரது தழீஇய எச்சவும்மையான் பிற பெயர் என்பதூஉம், 'அவ்வும்' என்னும் இறந்தது தழீஇய எச்சவும்மையான் உகரச்சாரியை என்பதூஉம் பெற்றாம்.

உ-ம்: வல்லுக் கடிது, நன்று, வலிது எனவும் வல்லுக் கடுமை, நன்மை, வன்மை எனவும் வல்லப்பலகை, வல்லநாய், வல்லப்புலி, வல்லக்குதிரை எனவும் வல்லுப்பலகை, வல்லுநாய், வல்லுப்புலி, வல்லுக்குதிரை எனவும் முறையே காண்க.

வல்லினது அறை வரைந்த பலகை, வல்லினுள் நாய் என விரியும். '**வேற்றுமைக்கு**' என்றமையின் வல்லாய நாய் என இருபெயரொட்டு ஆயவழி அகரச்சாரியை பெறாது என்க. (28)

நெல் முதலிய நான்கும் வலி வரின் திரிதல்

232. **நெல்லுஞ் செல்லுங் கொல்லுஞ் சொல்லும்**
**அல்வழி யானும் றகர மாகும்.**

எ-னின்[204] இதுவும் அது.

இ-ள்: இந்நான்கு சொல்லும் வல்லினம் வரின் பொதுவிதியான் (227) உறழாது அல்வழிக்கண்ணும் வேற்றுமைபோல றகரமாய்த் திரிந்து முடியும் எ-று.

உ-ம்: நெற் கடிது, செற் கடிது, கொற் கடிது, சொற் கடிது, சிறிது, தீது, பெரிது என வரும்.

செல் என்பது மேகம். கொல் என்பது, "சூருயிர்க் குடித்த" (வி. மே.) என்றாற்போலக் கொல்லன் என்னும் உயர்திணைப்பொருளை உணர்த்தி நின்றதோர் அஃறிணைச்சொல். (29)

[204] **இது தொல்காப்பிய (புள்ளி. 76) நூற்பாவின் திரிபு.**

### இல் என்னும் பண்புப்பெயர் புணருமாறு

{233} **இல்லெ னின்மைச் சொற்கை யடைய**
**வன்மை விகற்பமு மாகா ரத்தொடு**
**வன்மை யாகலு மியல்பு மாகும்.**

எ-னின், இல் என்னும் பண்புச்சொற்கு, **"லளவேற் றுமையிற் றடவு மல்வழி, அவற்றோ டுறழ்வும்"** (நூ. 227) **என** எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தலும் அவற்றின் முன் வரும் வல்லினத்திற்கு, **"அல்வழி இஐம் முன்ன ராயின்"** (நூ. 176) **என்னும் சூத்திரத்தானும், "இயல்பினும் விதியினும்"** (நூ. 165) **என்னும் சூத்திரத்தானும்** எய்தியது இகந்துபடாமற் காத்தலும் நுதலிற்று.

இ-ள்: இல்லிடத்தை உணர்த்தாது, இன்மைப் பண்பை உணர்த்தி நிற்கும் இல் என்னும் சொற்கு ஐகாரச்சாரியை பொருந்த, அவ்வழி வரும் வல்லினம் விகற்பித்தலும் ஆகாரச்சாரியை பொருந்த, அவ்வழி வரும் வல்லினம் மிகுதலும் இவ்விரு விதியும் பெறாது இயல்பாதலும் பொருந்தும் எ-று.

சாரியைப்பேற்றிற்கு வருமொழி வரையாமையின் நாற்கணமும் கொள்க.

உ-ம்: இல்லைப்பொருள், இல்லைபொருள், இல்லாப்பொருள், இல்பொருள், ஞானம், வன்மை, அணி என வரும்.

இல் என்னும் பண்படி நின்று வருமொழியோடு புணர்வழி வரும் சாரியை ஆதலின் இவ்விரு சாரியை தோன்றியவழியும் இல்பொருள் என்னும் இயல்பு புணர்ச்சிபோல் பண்புத்தொகையேயாம் என்க.

இது மெய்யீற்றுப் புணரியல் ஆதலானும் லகரவீற்றிற்குப் பொதுவிதி (227) கூறிச் சிறப்புவிதி கூறும்வழி இன்மைப் பொருளைத் தரும் இல் என்னும் சொற்கு[205] என விதந்தமையானும் விகுதி அடைதல் பதவியலுள் அன்றி ஈண்டுக் கூற வேண்டாமையானும், 'ஆகா ரத்தொடு வன்மை யாகலும்' என வல்லினப் பேற்றோடு ஆகாரத்தையும் உடனிகழ்த்திக் கூறுதலானும், 'இயல்பு மாகும்' என்றமையானும் மறைப் பொருளை

---

[205] **உறையுளை உணர்த்தும் லகரவீற்று இடப்பெயரையும் ஒரு பொருளின் இல்லாமையை உணர்த்தும் ஐகாரவீற்று வினைக்குறிப்பு முற்றுச்சொல்லையும் நீக்கு-தற்கு, 'இல்லெ னின்மைச் சொல்' என விதந்தார் என்று வைத்தியநாத தேசிகர் (இல. விள. 142) சிறப்புரை கூறுவார்.**

இல் என்னும் பகுதியன்றி ஆகாரம் தர வேண்டாமையானும் தருமேல் இன்மைக்கு மறையாய உண்மைப் பொருளைத் தர வேண்டும் ஆதலானும் ஆகார மறைவிகுதி தெரிநிலைக்கு அன்றிக் குறிப்பிற்கு வாராமையானும் ஈண்டுப் பெறும் ஐகார ஆகாரங்கள் சாரியையே அன்றிக் குறிப்புமுற்று விகுதியும் எச்சத்தின்கண் வந்த மறைவிகுதியும்[206] அல்ல என்க.

இல்லைபொருள், இல்லைப்பொருள் என்பன இங்ஙனம் கூறியவாறே பண்புத்தொகையாகவும் ஐகாரவீற்றுக் குறிப்புமுற்றுப் பயனிலையோடு முடிந்த தொகாநிலையாகவும் கொள்ளப்படும் ஆதலின் தம்முள் வேற்றுமை யாதோ எனின் தொகைநிலை ஒருமொழிபோல் நடத்தலும் தொகாநிலை விட்டிசைத்து நடத்தலும் தம்முள் வேற்றுமை என்க. இல்லாப் பொருள் என்பது இங்ஙனம் கூறியவாறே பண்புத்தொகையாகவும் இல்லாத என்னும் பெயரெச்சக் குறிப்பினது இறுதி கெட்டுப், பயனிலையோடு முடிந்த தொகாநிலையாகவும் கொள்ளப்படும். இவற்றிற்கும் தம்முள் வேற்றுமை அதுவாம்[207] என்க.

இவ்வாறே ஆசிரியர் தொல்காப்பியரும்,

"இல்லென் கிளவி யின்மை செப்பின்
வல்லெழுத்து மிகுதலு மையிடை வருதலும்
இயற்கை யாதலு மாகாரம் வருதலும்
கொளத்தகு மரபி னாகிட னுடைத்தே" (தொல். புள்ளி. 77)

என்றார். (30)

புள் வள் என்பன சாரியை பெறுதல்

{234} **புள்ளும் வள்ளுந் தொழிற்பெயரு மானும்.**

---

[206] **இல்லைக்கல், இல்லைகல் என்னும் ஐகாரவீற்றுச் சொல்முடிபு, இல்லாக்கல் என்னும் எதிர்மறைப் பெயரெச்ச ஆகாரவீற்றுச் சொல்முடிபு, இல்கல் என்னும் பண்புத்தொகை முடிபு ஆகியவற்றோடு இம்முடிபுகள் எழுத்து ஒப்புமையன்றி, இவை ஓசை வேற்றுமை உடைய என்பது போலும் கருத்து என்ற இளம்பூரணர் (தொல். புள்ளி. 77) உரையை இவண் கருதுக.**

[207] **"பிற் கூறிய இரண்டும் இல் என்னும் வினைக்குறிப்பு முதனிலை அடியாகத் தோன்றிய பெயரெச்ச மறை தொக்கும் விரிந்தும் நின்றன." என்ற நச்சினார்க்கினியர் (தொல். புள்ளி. 77) உரையைக் கருதி இவ்விளக்கம் எழுதப்பட்டிருக்கலாம்.**

எ-னின் "லளவேற் றுமையிற் றடவும்" (நூ. 227) என்னும் சூத்திரத்தான் எய்தியதன்மேல் சிறப்புவிதி உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: இவ்விரு சொற்களும் இருவழியும், "யவ்வன் மெய்வரின்" (நூ. 207) பொதுவிதியான் (227) முடிதலே அன்றித் தொழிற்பெயர்போல உகரச்சாரியை பெற்றும் புணரும் எ-று.

உ-ம்: புள்ளுக் கடிது, வள்ளுக் கடிது, நன்று, வலிது எனவும் கடுமை, நன்மை, வன்மை எனவும் வரும். (31)

வகரவீற்றுச் சுட்டுப்பெயர்கள் புணருமாறு

235. **சுட்டு வகரமூ வினமுற முறையே**
**ஆய்தமு மென்மையு மியல்பு மாகும்.**

எ-னின், வகரவீற்றுச் சுட்டுப்பெயர் மூவினத்தோடும் புணருமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: அவ், இவ், உவ் என்னும் அஃறிணைப் பன்மைச் சுட்டுப்பெயர் ஈற்று வகரம் வல்லினமும் மெல்லினமும் இடையினமும் வர, முறையானே ஆய்தமும் வரும் மெல்லினமும் இயல்பும் ஆம் எ-று.

உ-ம்: அஃகடிய, இஃகடிய, உஃகடிய எனவும் அஞ் ஞானம், இஞ் ஞானம், உஞ் ஞானம் எனவும் அவ் யாவை, இவ் யாவை, உவ் யாவை எனவும் வரும்.

வேற்றுமைப் புணர்ச்சிக்கு அற்றுச்சாரியை பெறும் என மேல் (250) விதத்தலின் இவ்விதி அல்வழிக்கு[208] என்க. (32)

தெவ் என்னும் சொல் இருவழியும் புணருமாறு

236. **தெவ்வென் மொழியே தொழிற்பெய ரற்றே**
**மவ்வரின் வஃகான் மவ்வு மாகும்.**

எ-னின், தெவ் என்னும் சொல் யவ்வன் மெய்யோடு புணருமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: தெவ் என்னும் சொல் யவ்வன் மெய்யோடு புணருமிடத்துத் தொழிற்-

---

[208] இக்கருத்தை விளக்குதற்கு வைத்தியநாத தேசிகர், "அல்வழி" என்ற சொல்லைக் கூட்டி (இல. விள. 144), நன்னூல் மூலத்தைத் திருத்திக்கொண்டதைக் கருதியது இவ்விளக்கம்.

பெயர்போல உகரச்சாரியை பெற்று (207) முடியும்; அவற்றுள் மகரம் வருங்கால் உகரச்சாரியை பெறுதலே அன்றி, ஒரோவழி ஈற்று வகரம் மகரமாகத் திரியவும் பெறும் எ-று.

உ-ம்: தெவ்வுக் கடிது, மாண்டது, வந்தது எனவும் தெவ்வுக்கடுமை, மாட்சி, வலிமை எனவும் தெவ்வுமன்னர், தெம்மன்னர் எனவும் தெவ்வுமுனை, தெம்முனை எனவும் இருவழியினும் முறையே காண்க.

இப் பகை என்னும் பண்புப்பெயர் பண்பியாய்ப் பகைப்பொருளை உணர்த்தி, ஆகுபெயராய் நின்றவழியும் இவையே காட்டு என்க. (33)

## வருமொழித் தகர நகரத் திரிபு

237. **னலமுன் றனவும் ணளமுன் டணவும்**
**ஆகுந் தநக்க ளாயுங் காலே.**

எ-னின், முன்னர்ப் புணர்த்திய வருமொழிக்கு முதலாய மெய்களுள் திரிதற் பாலன இவை என விதந்து உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: னகர லகரங்கள் முன்னர் வரும் தகரம் றகரம் ஆம்; அவற்றின் முன்னர் வரும் நகரம் னகரம் ஆம்; ணகர ளகரங்களின் முன்னர் வரும் தகரம் டகரம் ஆம்; அவற்றின் முன்னர் வரும் நகரம் ணகரம் ஆம் ஆராயுங்காலத்து எ-று.

உ-ம்: பொன்றீது, கற்றீது, பொன்னன்று, கன்னன்று, மண்டீது, முட்டீது, மண்ணன்று, முண்ணன்று என வரும். தீமை, நன்மை என வருவித்து வேற்றுமைக்-கண்ணும் திரியுமாறு காண்க.

'ஆயுங் காலே' என்றதனான் அல்வழி வேற்றுமைப் பொருள் நோக்கத்தான் அன்றி மயக்கவிதி இன்மையின் இங்ஙனம் புணரும் முதல், ஈறு இரண்டனுள் ஒன்றேனும் இரண்டுமேனும் விகாரப்பட்டு மயங்குதற்கு உரியனவாகி நின்று புணரும் என்பதூஉம் மயக்கவிதி உள்ளனவற்றிற்கு வரும் விகாரம் அல்வழி வேற்றுமைப் பொருள் நோக்கத்தான் வரும் என்பதூஉம் பெற்றாம். (34)

## வேற்றுமைப் பொருட் புணர்ச்சிக்குச் சிறப்புவிதி

{238} **உருபின் முடிபவை யொக்குமப் பொருளினும்.**

எ-னின், உயிரீற்றுப் புணரியற்கண்ணும் இவ்வியற்கண்ணும் முடிந்த வேற்றுமைப் பொருட் புணர்ச்சிக்கு எய்தியதன்மேல் சிறப்புவிதி உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: மேல் உருபு புணர்ச்சிக்கண் முடியும் முடிபுகள் அப்பொருட் புணர்ச்சிக்கண்ணும் ஒக்கும் எ-று.

உ-ம்: எல்லாவற்றதும், எல்லாவற்றுக்கோடும் என அஃறிணைக்கண் அற்றும் உருபின்மேல் உம்மும் பெற்றாற்போலப் (245) பொருட் புணர்ச்சிக்கும் பெற்றன.

எல்லாநமதும், எல்லாநங்கையும் என உயர்திணைக்கண் நம்மும் உருபின்மேல் உம்மும் பெற்றாற்போலப் (245) பொருட் புணர்ச்சிக்கும் பெற்றன.

எல்லார்தமதும், எல்லார்தங்கையும்; எல்லீர்நுமதும், எல்லீர்நுங்கையும்; தனது, தன்கை; தமது, தங்கை; நமது, நங்கை; எனது, என்கை; எமது, எங்கை; நினது, நின்கை; நுமது, நுங்கை என உருபு புணர்ச்சிபோல் (246, 247) பொருட் புணர்ச்சியும் முடிந்தவாறு காண்க. **பிறவும்[209] அன்ன.** (35)

புணரியல்களுக்குப் புறனடை

239. **இடையுரி வடசொலி னியம்பிய கொளாதவும்**
**போலியு மரூஉவும் பொருந்திய வாற்றிற்**
**கியையப் புணர்த்தல் யாவர்க்கு நெறியே.**

எ-னின், இப்புணரியல்கட்கு ஆவதோர் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: இடைச்சொல்லினும் உரிச்சொல்லினும் வடசொல்லினும் உயிரீறும் ஒற்றீறும் ஆன புணரியலில் தோன்றல், திரிதல், கெடுதல், இயல்பு என ஓதிய (154) புணர்ச்சி இலக்கணங்கள் பொருந்தாது வேறுபட்டு வருவனவும் இலக்கணப்போலி மொழிகளும் (267) மரூஉ மொழிகளும் (267) இருவகை வழக்கினும் (267) நடக்கும் முறைமை அறிந்து, அதற்குப் பொருந்துமாறு புணர்க்கை அறிவுடையோர் எல்லார்க்கும் முறைமை எ-று.

ஆன் கன்று, வண்டின் கால் என வேற்றுமைப் புணர்ச்சிக்கண் சாரியை இடைச்சொல் திரியாது இயல்பாயின. மழகளிறு, தடந்தோள் என அகரவீற்று உரிச்சொல்முன் வல்லெழுத்து மிகாது இயல்பாயும் மெல்லெழுத்து மிகுந்தும் வந்தன. அளி குலம், தன தடம் என இயல்பீறும் விதியீறும் ஆன உயிரீற்று வடசொல்முன் வல்லெழுத்து மிகாது இயல்பாயின. இல்முன் முன்றில், பொதுவில் பொதியில் என இலக்கணப்போலி மொழிகளும் அருமருந்தன்ன பிள்ளை அருமந்தபிள்ளை, குணக்கு

---

[209] **உருபு புணர்ச்சிக்கண் முடிந்ததுபோல வேற்றுமைப் பொருட் புணர்ச்சிக்கண்ணும் முடியும் வேறு சில முடிபுகளை வைத்தியநாத தேசிகர் (இல. விள. 146) எடுத்துக்காட்டுவார்.**

உள்ளது குணாது, தெற்கு உள்ளது தெனாது, வடக்கு உள்ளது வடாது, சோழநாடு சோணாடு, பாண்டியநாடு பாண்டிநாடு, மலையமானாடு மலாடு, தஞ்சாவூர் தஞ்சை, ஆற்றூர் ஆறை, ஆதன்றந்தை ஆந்தை, பூதன்றந்தை பூந்தை, வடுகன்றந்தை வடுகந்தை என மரூஉ மொழிகளும் நிலைமொழி வருமொழிகளுள் ஏற்கும் செய்கை அறிந்து முடிக்க. பிறவும் அன்ன. (36)

மெய்யீற்றுப் புணரியல் முற்றிற்று

ஐந்தாவது

## உருபு புணரியல்

### உருபுகளின் தொகை

240. **ஒருவ னொருத்தி பலரொன்று பலவென**
**வருபெய ரைந்தொடு பெயர்முத லிருநான்**
**குருபு முறழ்தர நாற்பதா முருபே.**

எ-னின், வேற்றுமை உருபுகள் நிலைமொழியோடும் வருமொழியோடும் புணருமாறு இவ்வியலால் கூறுவான் தொடங்கி, அவ்வெட்டு உருபுகளும் (292) சாரும் இடவகையான் இத்துணைத்து என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: இப் பாற் பொருளின என்று கருத வரும் ஐந்து பெயருடனே எழுவாய் வேற்றுமையான பெயர் முதலாக விளி ஈறாக நின்ற எட்டு உருபினையும் உறழ, வேற்றுமை உருபுகள் நாற்பது ஆம் எ-று.

சொல்மேல் வைத்து ஓதின் இப்பெயர்களோடு அன்றிப் பொதுப்பெயர்களோடு உருபு வாரா எனப் பொருள்படும் ஆதலின் எல்லாப் பெயரும் அடங்குதற்குப் பொருள்மேல் வைத்து, 'என வருபெயர்' என்றார்.

வ-று: நம்பி, சாத்தி, மக்கள், மரம், மரங்கள் என்னும் இவற்றுள் நம்பி, நம்பியை, நம்பியால், நம்பிக்கு, நம்பியின், நம்பியது, நம்பிகண், நம்பீ என ஒருவன் என்னும் வாய்பாட்டு உயர்திணை ஆண்பாற் பெயரோடு எட்டு உருபுகளும் வந்தன. ஏனை நான்கு பெயரோடும் இவ்வாறே ஒட்டுக. (1)

### உருபுகளின் தோற்றமும் இடமும்

241. **பெயர்வழித் தம்பொரு டரவரு முருபே.**

எ-னின், வேற்றுமை உருபுகள் வருதற்குக் காரணமும் வரும் இடமும் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: வேற்றுமை உருபுகள் தம் பொருளைத் தரப் பெயர்க்குப் பின் வரும் எ-று.

வ-று: நம்பி பெற்றான், நம்பியைப் பெற்றான், நம்பியாற் பெற்றான் என வரும். பிறவும் அன்ன.

தம் பொருள் தர வருவன எழுவாய் முதலிய எட்டு உருபும்; வழி வருவன பெயர் முழுவதூஉம் உருபாய எழுவாய் ஒழிந்த ஏழு உருபும் எனக் கொள்க. (2)

உருபுகளின் புணர்ச்சி

**242. ஒற்றுயிர் முதலீற் றுருபுகள் புணர்ச்சியின்
ஒக்குமன் னப்பெயர் வேற்றுமைப் புணர்ப்பே.**

*எ-னின்,* ஐ முதலிய ஆறு உருபும் நிலைமொழி வருமொழியோடு புணருமாறு உணர்த்துதல் நுதலிற்று.

*இ-ள்:* தொகாநிலையாய வேற்றுமைப் புணர்ச்சிக்கண் இடையே நின்று, நிலை-மொழியோடும் வருமொழியோடும் புணரும் ஒற்றுயிர்களை முதலும் ஈறுமாக உடைய ஐ முதலிய வேற்றுமை உருபு ஆறும் (152) இடைச்சொல்லேனும் இயல்பொடு விகாரத்து இயையும் புணர்ச்சி வகையால் (151) பெரும்பாலும் ஒக்கும்[210] போன இரண்டு இயலுள்ளும் வேற்றுமைப் புணர்ச்சிக்கண் இயல்பொடு விகாரத்து இயைந்த ஒற்றுயிர் முதலீற்றுப் பெயர்களை எ-று.

'மன்' என்றமையான் சிறுபான்மை ஒவ்வா என்பதாம்.

*உ-ம்:* நம்பிகண் வாழ்வு என்புழி, "ஆவி யரமுன், வன்மை மிகா" (நூ. 159) என்றும், "ணனவல் லினம்வரட் டறவும் பிறவரின், இயல்பு மாகும் வேற்றுமைக்கு" (நூ. 209) என்றும் கூறியவாறே கண்ணுருபின் முதலும் ஈறும் இயல்பாயின. உறிக்கட் டயிர் என்புழி, "இயல்பினும் விதியினு நின்ற வுயிர்முன், கசதப மிகும்" (நூ. 165) என்றும், "ணனவல் லினம்வரட் டறவும்" (நூ. 209) என்றும் கூறியவாறே கண்ணுருபின் முதலும் ஈறும் விகாரமாயின. பழிக்கஞ்சி என்புழி, "இயல்பினும் விதியினு நின்ற வுயிர்முன், கசதப மிகும்" (நூ. 165) என்றும், "முற்றுமற் றொரோவழி" (நூ. 164) என்றும் கூறியவாறே குவ்வுருபின் முதலும் ஈறும் விகாரமாயின. நம்பிக்குப் பிள்ளை என்புழி, "ஆவி யரமுன், வன்மை மிகா" (நூ. 159) என்ற விதி ஒவ்வாது குவ்வுருபின் முதல் வல்லொற்று மிக்கது. பிறவும் அன்ன. இவ்வுருபு சாத்திக்கு, கிளிக்கு எனப் பொதுப்பெயர் அஃறிணைப்பெயர்க்கண்ணும் மிகுதலின், "சில விகாரமா முயர்திணை" (நூ. 159) என்னும் விதி அன்று.

'ஒற்றுயிர் முதலீற் றுருபுகள்' என்றமையின், "நாற்பதா முருபே" (நூ. 240) எனத் தொகை கொடுத்துக் கொணர்ந்தவற்றுள் எழுவாயும் விளியும் ஒழித்துத் தமக்கு என உருபு முதலீறும் உடைய ஐ முதலிய ஆறு உருபிற்கும் (152) இவ்விதி கூறுகின்றார் என்பதூஉம் இவ்வுருபுகளின் முதல் ஈறுகட்கு மாட்டேற்றான் இவ்விதி கூறவே உருபின் இருமருங்கும் புணரும் நிலைமொழி ஈறும் வருமொழி முதலும் படும்

[210] **இவ்வாறு பொதுவாக விதி கூறினாலும், "நம்பிகண் எனக் கண்ணுருபு மிகா என்றும் நம்பிக்கு எனக் குவ்வுருபு மிகும் என்றும் கொள்க." எனப் புறனடை நூற்பாவின் (254) உரையில் கூறுவார்.**

பாகுபாட்டிற்கு விதி போன இரண்டு இயலுள்ளும் வேற்றுமைப் புணர்ச்சிக்கு என விதித்தவற்றுள் அடங்கும். ஆதலின் அவையும் இம்மாட்டேற்றான் அமைத்தார் அல்லர் என்பதூஉம் அங்ஙனம் அடங்குதற்கு, "மூன்றா றுருபெண்" (நூ. 179) என்னும் சூத்திரமே கரி என்பதூஉம், "தான்தாம் நாம்முதல் குறுகும்" (நூ. 247) என்றல் தொடக்கத்து உருபோடு புணரும் நிலைமொழிகளின் விகாரங்கள் தொகைநிலைக்-கண்ணும் நாற்கணத்தின் முன்னும் வருதலின் அவ்விகாரம் எழுத்துப் புணர்ச்சியான் வந்தன அல்ல; வேற்றுமைப் பொருள் நோக்கத்தானே வந்தன. அதனால் இவ்வியலுள் கூறப்படும் என்பதூஉம், 'ஒக்குமன் னப்பெயர்' என்றமையின் வினை இறுதி வேற்றுமைப் புணர்ச்சிக்கு வாராமையின் அதனை ஒழித்துப் பெயரை உவமித்தார் என்பதூஉம், 'வேற்றுமைப் புணர்ப்பே' என்றமையின் வேற்றுமை உருபின் புணர்ச்சி ஆதலின் அதற்கு அல்வழிப் புணர்ச்சி ஒவ்வா என்பதூஉம் பெற்றாம். (3)

சாரியை வருமாறு

243. **பதமுன் விகுதியும் பதமு முருபும்**
**புணர்வழி யொன்றும் பலவுஞ் சாரியை**
**வருதலுந் தவிர்தலும் விகற்பமு மாகும்.**

எ-னின், உருபு புணர்ச்சிக்கு எய்தியதன்மேல் சிறப்புவிதியாகச் சாரியை மேல் விதிப்பான் தொடங்கி, அவை வருமாறு இவ்வாறு என உணர்த்தும்வழி ஒப்பின் முடித்தலான் விகுதிப் புணர்ச்சிக்கும் பதப் புணர்ச்சிக்கும் உடன் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: பதத்தின் முன் விகுதியேனும் பதமேனும் உருபேனும் புணருமிடத்துச் சாரியை ஒன்றேனும் பலவேனும் வருதலும் வாராது ஒழிதலும்[211] இவ்விரண்டும் ஆகிய விகற்பமும் ஆம் எ-று.

புணர்ந்த வழி, புணரும் வழி என்னாது, 'புணர்வழி' எனப் பொதுமையிற் கூறவே இம் மூவகைப் புணர்ச்சியுள் சாரியை விதித்தனவற்றுள்ளும் விதிப்பனவற்றுள்ளும் ஒழிந்தனவற்றுள்ளும் அவை வருமாறு இவ்வாறு என உய்த்துணர்க என்றாராயிற்று.

வ-று: நடந்தனன் எனவும் நடந்தான் எனவும் நடந்தன, நடந்த எனவும் விகுதிப் புணர்ச்சியுள் சாரியை வேண்டியும் வேண்டாதும் விகற்பித்தும் வந்தன. புளியமரம்,

[211] **இவ்வாறு பொதுவாக விதி கூறினாலும், "நாட்டின்கண் இருந்தான் எனக் கண்ணுருபிற்கு இன்சாரியை வரும் என்றும் நாட்டின் நீங்கினான் என இன்னுருபிற்கு இன்சாரியை வாராது என்றும் கொள்க." என்று புறனடை நூற்பாவின் (254) உரையில் கூறுவார்.**

புளியங்காய், உரினுக் கடிது, உரினுக்கடுமை எனவும் புளிக்கறி, புளிங்கறி எனவும் நெல்லின் குப்பை, நெற்குப்பை எனவும் பதப் புணர்ச்சியுள் சாரியை அவ்வாறு ஆயின. அவற்றை, அவற்றினை; மரத்தை, மரத்தினை எனவும் தன்னை, என்னை எனவும் ஆனை, ஆவை எனவும் உருபு புணர்ச்சியுள் சாரியை அவ்வாறு ஆயின. பிறவும் அன்ன.

மாடத்துக்கு, மாடக்கு என்றல் தொடக்கத்தன வேண்டிய வழி சாரியை இன்மையின் செய்யுள் விகாரமாம் என்க. (4)

## பொதுச் சாரியைகள்

244. **அன்ஆன் இன்அல் அற்றிற் றத்தம்**
**தம்நம் நும்ஏ அஉ ஐகுன**
**இன்ன பிறவும் பொதுச்சா ரியையே.**

எ-னின், மேல் (133) சாரியை என்றார்; அவை இவை என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: அன்னும் ஆனும் இன்னும்[212] அல்லும் அற்றும் இற்றும் அத்தும் அம்மும் தம்மும் நம்மும் நும்மும் ஏயும் அவ்வும் உவ்வும் ஐயும் குவ்வும் னவ்வும் இவை போல்வன பிறவும் விகுதி, பதம், உருபு என்னும் மூன்று புணர்ச்சிக்கண்ணும் (243, 253) தனிமொழிக்கண்ணும் வருதலின் பொதுச் சாரியை என்னும் பெயரவாம் எ-று.

வ-று: "ஒன்றன் கூட்டம்" (நன். 300), ஒரு பாற்கு, வண்டின் கால், தொடையல், பலவற்றை, பதிற்றுப்பத்து, மரத்திலை, மன்றம், எல்லார்தம்மையும், எல்லார்நம்மையும், எல்வீர்நும்மையும், கலனே தூணி, நடந்தது, சாத்தனுக்கு, "கேழ லட்ட பேழ்வா யேற்றை" (அகம். 8:6), "துறுகன் மறையினு முய்குவை போலாய்" (புறம். 300:2), ஆன் என முறையே காண்க.

'இன்ன பிற' என்றதனானே அவன்றனை என்புழித் தன் என்னும் சாரியையும் அவன்றான், அவர்தாம் என்புழித் தான், தாம் என்னும் சாரியையும் புற்றாஞ்சோறு என்புழி ஆம்சாரியையும் இல்லாப்பொருள் என்னும் பண்புத்தொகைக்கண் ஆகாரச்-சாரியையும் (233) வந்தன. இன்னும் வருவனவும் காண்க. (5)

---

[212] "ஆனுருபிற்கும் ஆன்சாரியைக்கும் இன்னுருபிற்கும் இன்சாரியைக்கும் வேற்றுமை யாது எனின் அவை சாரியை ஆன இடத்து யாதானும் ஒரு உருபு ஏற்று முடியும்; உருபாயின இடத்து வேறு ஓர் உருபினை ஏலா." என்று நச்சினார்க்கினியர் (தொல். புணர். 17) கூறும் வேறுபாடு அறியத் தக்கது.

### உருபு புணர்ச்சிக்குச் சிறப்புவிதி

{245} **எல்லா மென்ப திழிதிணை யாயின்**
**அற்றோ டுருபின் மேலும் முறுமே**
**அன்றே னம்மிடை யடைந்தற் றாகும்.**

எ-னின், ஒருசார் நிலைமொழியோடு உருபு புணர்தற்கு, **"ஒற்றுயிர் முதலீற் றுருபுகள்"** (நூ. 242) **என்னும் சூத்திரத்தான்** எய்தியதன்மேல் சிறப்புவிதி உணர்த்து-தல் நுதலிற்று.

இ-ள்: எல்லாம் என்னும் பொதுப்பெயர் அஃறிணைக்கண் ஆனகாலை அதனோடு ஆறு உருபும் புணரின் இடையே அற்றுச்சாரியையும் உருபின்மேல் முற்றும்மையும் பெறும்; உயர்திணைக்கண் ஆனகாலை இடையே நம்முச்சாரியையும் உருபின்மேல் முற்றும்மையும் பெறும் எ-று.

உ-ம்: எல்லாவற்றையும், எல்லாவற்றாலும் எனவும் எல்லாநம்மையும், எல்லா-நம்மாலும் எனவும் வரும்.

இனி இரட்டுற மொழிதல் **என்னும் உத்தியான்,** 'எல்லா மென்ப திழிதிணை யாய்' எனவும், 'இன் அற்றோடு' எனவும் பிரித்து, அஃறிணைக்கண் ஆகி, இன்சாரியை அற்றுச்சாரியையோடு எனப் பொருள் தந்து, எல்லாவற்றினையும் என வருதலும் கொள்க. ஏனையவற்றோடும் இவ்வாறே ஒட்டுக.

இச்சொற்கு இருதிணைக்கண்ணும் அற்றுச்சாரியையும் நம்முச்சாரியையும் உருபு புணர்ச்சிக்கண், "பதமுன் விகுதியும்" (நூ. 243) என்னும் சூத்திரத்தில் கூறியவாறே வேண்டியே வருதல் தோன்ற, இன்றியமையா முற்றும்மையோடு உடனிகழ்ச்சிப்-பொருளவாய், 'அற்றோடு' என்றும், 'அடைந்தற் றாகும்' என்றும் கூறினார்.

தாம், நாம், நீர் என்னும் மூவிடப்பெயர் வேற்றுமைப் புணர்ச்சிக்கண் வந்தமை-யானே தம், நம், நும் என விகாரப்பட்டுத் (247) தமக்கு இனமான மூவிடப்பெயர்-களை முறையே சார்ந்து சிறப்புப்பொருள் தாராமையின் ஒரு பொருட் பன்மொழி அல்லவாய் வருதலின் இம்மூன்றும் சாரியை இடைச்சொல் எனப்படும். ஆதலின் தம் என்பதைப் படர்க்கைப்பெயர்க்கும் நும் என்பதை முன்னிலைப்பெயர்க்கும் வரும் சூத்திரத்து அமைத்தாற்போல நம் என்பதனை ஈண்டுத் தன்மைப்பெயர்க்கு அமைத்தார் என்பதூஉம் தன்மை ஆயினும் திணைப்பொதுமையின் நில்லாது பாணரேம் என்றாற்போல எல்லாநம்மையும் என்ற துணையானே உயர்திணைத் தன்மையை உணர்த்தும் என்பதூஉம் பெற்றாம். (6)

எல்லாரும் எல்லீரும் என்பன புணருமாறு

246. **எல்லாரு மெல்லீரு மென்பவற் றும்மை**
**தள்ளி நிரலே தம்நும் சாரப்**
**புல்லு முருபின் பின்ன ரும்மே.**

எ-னின், இதுவும் அது.

இ-ள்: எல்லாரும் என்னும் உயர்திணைப் படர்க்கைப்பெயரோடும் எல்லீரும் என்னும் முன்னிலைப் பொதுப்பெயரோடும் ஆறு உருபும் (242) புணருமிடத்து அவ்விரு பெயரின் இறுதிகளில் நின்ற முற்றும்மைகளைத் தள்ளி, அந்நிலைக்களங்களிற் படர்க்கைப்பெயர்க்குத் தம்முச்சாரியையும் முன்னிலைப்பெயர்க்கு நும்முச்சாரியையும் பொருந்த, அவற்றால் தள்ளுண்ட[213] முற்றும்மைகள் உருபின் பின்னே வந்து பொருந்தும் எ-று.

உ-ம்: எல்லார்தம்மையும், எல்லாரையும் எனவும் எல்லீர்நும்மையும், எல்லீரையும் எனவும் விகற்பித்து வந்தன. ஏனையவற்றோடும் இவ்வாறே ஒட்டுக.

நந்தம்மை, நுந்தம்மை எனப் படர்க்கைக்கு உரிய தம்முச்சாரியை தன்மை முன்னிலைகளின் வருதல், "ஓரிடம் பிறவிடந் தழுவலு முளவே" (நூ. 380) என்னும் வழுவமைதி என்க. (7)

மூவிடப் பொதுப்பெயர்களோடு உருபுகள் புணர்தல்

{{247}} **தான்தாம் நாம்முதல் குறுகும் யான்யாம்**
**நீநீர் என்எம் நின்நு மாம்பிற**
**குவ்வி னவ்வரு நான்கா றிரட்டல.**

எ-னின், இதுவும் அது.

இ-ள்: இங்ஙனம் கூறிய இருதிணைப் பொதுவாய மூவிடப்பெயர் ஏழோடும் ஆறு உருபும் (242) புணருமிடத்துத் தான், தாம், நாம் என்னும் மூன்று பெயரும் நெடின்முதல் குறுகி, முறையே தன்னை, தம்மை, நம்மை என வரும்; யான், யாம், நீ, நீர் என்னும் நான்கு பெயரும் முறையே என்னை, எம்மை, நின்னை, நும்மை என வரும். இவ்வேழு பெயரோடும் குவ்வுருபு புணருமிடத்து இடையே தனக்கு என அகரச்சாரியை வரும். குவ்வுருபின் அகரச்சாரியை வரினும் ஆறாம் உருபுயிர்கள் வரினும் இவ்வேழு விகாரமொழிகளின் இறுதியவாய தனிக்குறில் முன் ஒற்றுக்கள் இரட்டாவாம் எ-று.

[213] **தள்ளப்பட்ட, தள்ளுபட்ட என்ற பாட வேறுபாடுகளும் உண்டு.**

ஒழிந்த உருபுகளோடும் இவ்வாறே ஒட்டுக.

'பிற' என்ற மிகையானே நீ என்பது உன்னை என்றும் நீர் என்பது உம்மை என்றும் வருதல் கொள்க. முன்னும் பின்னும் சாரியைப்பேறு கூறுவார் சாரியை பெறாது விகாரப்படுமொழிகளை இச்சூத்திரத்தால் தோன்ற, இடையே கூறியது இப்பொதுப்பெயர்களே இங்ஙனம் தம், நம், நும் எனக் கூறிய சாரியை இடைச்-சொல்லும் ஆயின என உய்த்துணர்தற்கு என்க. (8)

## ஆ மா கோ என்பன உருபுகளோடு புணர்தல்

248. **ஆமா கோனவ் வணையவும் பெறுமே.**

எ-னின், இதுவும் அது.

இ-ள்: ஆ என்னும் பெயரும் மா என்னும் விலங்கின் பொதுப்பெயரும் கோ என்னும் இறைவனை உணர்த்தி நிற்கும் பெயரும் உருபுகள் புணருமிடத்து னகரச்-சாரியை பொருந்தவும் பெறும் எ-று.

உ-ம்: ஆனை, ஆவை; மானை, மாவை; கோனை, கோவை என விகற்பித்து வருதல் காண்க. பிறவற்றோடும் இவ்வாறே ஒட்டுக.

எதிரது தழீஇய எச்சவும்மையானே குவ்வுருபிற்கு னகரச்சாரியை ஒன்றுமே அமை-யாது ஆனுக்கு, மானுக்கு, கோனுக்கு என உகரச்சாரியை உடன் பெறுதலும் ஆவுக்கு, மாவுக்கு, கோவுக்கு என உகரச்சாரியை ஒன்றுமே பெறுதலும் ஆவினுக்கு, மாவினுக்கு, கோவினுக்கு என இன்சாரியையும் உகரச்சாரியையும் உடன் பெறுதலும் ஆவினை, மாவினை, கோவினை என, "இன்னென வரூஉம் வேற்றுமை யுருபு" (தொல். புணர். 29) ஒழிந்தவற்றிற்கு இன்சாரியை பெறுதலும் கொள்க.

இனி இரட்டுற மொழிதலான் ஆமா என ஒரு சொல்லாய்க் காட்டு ஆவினை உணர்த்தி நின்று இவ்விதிகள் பெறுதலும், 'அணையவும்' என்று ஒழியாது, 'பெறுமே' என்ற மிகையானே ஆன், மான், கோன், ஆமான் என னகரச்சாரியை தனிமொழிக்-கண்ணும் வருதலும் கொள்க.

ஆ என்பதனோடு கோ என்பதனைச் சார வையாது மா என்பதனைச் சார வைத்தமையானே கோ என்பது இறைவனை உணர்த்தியது என்பதூஉம் மா என்பது விலங்குமா என்பதூஉம் பெற்றாம். (9)

எண் ஊர்ந்த பத்தும் ஒன்பதும் உருபுகளோடு புணர்தல்

249. **ஒன்று முதலெட் டீறா மெண்ணூர்**
**பத்தின்முன் னான்வரிற் பவ்வொற் றொழியமேல்**
**எல்லா மோடு மொன்பது மிற்றே.**

எ-னின், இதுவும் அது.

இ-ள்: ஒன்று முதல் எட்டு ஈறாம் எண்களோடு புணர்ந்த பத்து என்னும் எண் முன்னர் உருபுகள் புணருமிடத்து இடையே ஆன்சாரியை வரின் அப்பத்து என்னும் எண்ணினது பகரவொற்று ஒன்றுமே நிற்க, மேல் நின்ற எல்லா எழுத்தும் கெடும். ஒன்பது என்னும் எண் முன்னரும் உருபுகள் புணருமிடத்து ஆன்சாரியை வரின் அதன் பகரவொற்று நிற்க, மேல் நின்ற எல்லா எழுத்தும் கெடும் எ-று.

உ-ம்: ஒருபானை, ஒருபதை, ஒருபஃதை; இருபானை, இருபதை, இருபஃதை எனவும் ஒன்பானை, ஒன்பதை, ஒன்பஃதை எனவும் விகற்பித்து வரும். பிறவற்றோடும் இவ்வாறே ஒட்டுக.

ஒருபது ஒருபஃது என விகாரப்பட்டு வரும் பத்து (195) என்பார், 'எண்ணூர் பத்து' என்றார்.

'வரின்' என்றமையான் வருதற்கும் இதுவே விதி என்பதூஉம் இவ்வாறு ஆன் வருதலைப் பராமுகமாகக் கூறினமையின் உகரச்சாரியை இன்சாரியைகளும் வேண்டுழி வரும் என்பதூஉம் கொள்க. (10)

வகரவீற்றுச் சுட்டுப்பெயர்க்குச் சிறப்புவிதி

250. **வவ்விறு சுட்டிற் கற்றுறல் வழியே.**

எ-னின், இதுவும் அது.

இ-ள்: அஃறிணைப் பன்மையவாய வகரவீற்று மூன்று சுட்டுப்பெயர்க்கும் உருபுகள் புணருமிடத்து அற்றுச்சாரியை பொருந்தல் முறைமையாம் எ-று.

உ-ம்: அவற்றை, இவற்றை, உவற்றை என அற்றுச்சாரியை வேண்டியே வருதல் காண்க.

'வழியே' என்ற மிகையானே அவற்றினை, இவற்றினை, உவற்றினை என இன்சாரியை வருதலும், "தனிக்குறின் முன்னொற் றுயிர்வரின்" (நூ. 205) இரட்டாமையும் கொள்க. பிறவற்றோடும் இவ்வாறே ஒட்டுக. (11)

### சுட்டுப்பெயர்களோடு உருபுகள் புணருமாறு

251. **சுட்டின்மு னாய்த மன்வரிற் கெடுமே.**

எ-னின், இதுவும் அது.

இ-ள்: அஃது, இஃது, உஃது என வரும் மூன்று சுட்டுப்பெயர்களோடு உருபுகள் புணருமிடத்து இடையே அன்சாரியை வரின் மொழிமுதற் சுட்டெழுத்துக்கள் மூன்றின் முன் நின்ற ஆய்தம் கெடும் எ-று.

உ-ம்: அதனை, அஃதை; இதனை, இஃதை; உதனை, உஃதை எனச் சாரியை விகற்பித்து வருதலும் வந்தவழி ஆய்தம் கெடுதலும் காண்க.

அன்சாரியை வருதல் நோக்கி ஆய்தம் கெட்டவழி அது, இது, உது என ஆய்தம் இல்லாச் சுட்டுப்பெயர்களாய்ப் பின்னர் அன்சாரியை பெறுதலின் அவற்றிற்கும் இதுவே விதி[214] எனக் கொள்க.

வ-று: அதனை, அதை; இதனை, இதை; உதனை, உதை என விகற்பித்து வருதல் காண்க.

அன் வருதலைப் பராமுகமாகக் கூறினமையின் குவ்வுருபு புணர்வழி அதற்கு என அன்சாரியை தனித்து வருதலே அன்றி அதனுக்கு என உகரச்சாரியை உடன் வருதலும் கொள்க. (12)

### அத்துச்சாரியையின் அகரம் கெடுதல்

{252} **அத்தி னகர மகரமுனை யில்லை.**

எ-னின்[215] அத்துச்சாரியைக்கு, "இஈ ஐவழி" (நூ. 162) என்னும் சூத்திரத்தான் எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தல் நுதலிற்று.

இ-ள்: அத்துச்சாரியையின் அகர உயிர், "இயல்பினும் விதியினு நின்ற" (நூ. 165) அகர உயிரீற்றின் முன் வரின் வகர உடம்படுமெய் பெறாது கெடும் எ-று.

உ-ம்: மகத்துக்கை, மரத்துக்குறை என இரண்டு[216] அகரவீற்றின் முன்னும் கெட்டது. (13)

---

[214] அது, இது, உது என்னும் முற்றுகரவீற்றுச் சுட்டுப்பெயர்கள் அன் பெற்றே முடியும் என்று வைத்தியநாத தேசிகர் (இல. விள. 157) கூறுவார்.

[215] இது தொல்காப்பிய (புணர். 23) நூற்பா.

[216] மக என்னும் இயல்பு அகரவீறும் மர என்னும் விதி அகரவீறும் ஆகிய இரண்டு.

சாரியைக்குப் புறனடை

253. **இதற்கிது சாரியை யெனினள வின்மையின்**
**விகுதியும் பதமு முருபும் பகுத்திடை**
**நின்ற வெழுத்தும் பதமு மியற்கையும்**
**ஒன்ற வுணர்த்த லுரவோர் நெறியே.**

*எ-னின், சாரியைக்கு ஆவதோர் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.*

*இ-ள்: விகுதி முதலிய புணர்ச்சிக்கண் இதற்கு இது சாரியை என்று வரையறுத்து, விதித்தனவற்றுள்ளும் ஒழிந்தனவற்றுள்ளும் தனித்தனி சொல்லப் புகின் வரையறைப்படாமையின் விகுதிப் புணர்ச்சியினையும் பதப் புணர்ச்சியினையும் உருபு புணர்ச்சியினையும் கண்டுழிப் பகுத்து, இடையே நின்ற ஏகாரம், அகரம் முதலிய எழுத்துச் சாரியையினையும் (126) அன், ஆன் முதலிய பதச் சாரியையினையும் (244) இவ்விரண்டு சாரியையும் தோன்றா இயல்பினையும் தெரிய அறிவித்தல் பெரியோரது நெறியாம் எ-று.*

*உ-ம்: "ஆனமணி யியம்புங் கானத் தான" (நன். 252 மயிலை.) எனவும், "ஆனநெய் தெளித்து நான நீவி" (தொல். உயிர். 30 இளம்.) எனவும் விதித்த பொருட் புணர்ச்சிக்கண், "உருபின் முடிபவை யொக்குமப் பொருளினும்" (நூ. 238) என்ற மாட்டேற்றான் அமைந்த னகரச்சாரியையன்றி (248) அகரச்சாரியையும் உடன் வந்தன.*

*இனி விதியாது ஒழிந்தனவற்றின்கண் பாட்டின் பொருள் எனக் குற்றியலுகரத்து இன்சாரியையும் மரத்திலை என மஃகான் புள்ளிக்கு அத்துச்சாரியையும் வந்தன. தன் கை, என் கை எனச் சாரியையின்றி இயல்பாய் வந்தன. இவ்வாறே மூவகைப் புணர்ச்சியும் பகுத்து உணர்ந்துகொள்க.*

*எல்லாச் சாரியையும் இடைப்பதமேனும் எழுத்துச் சாரியை, பதச் சாரியை எனப் பகுத்தல் வேறு அறிதற்கு இட்ட இலச்சினையாம் என்க.* (14)

நான்கு புணர்ச்சிக்கும் புறனடை

254. **விகுதி பதஞ்சா ரியையுரு பனைத்தினும்**
**உரைத்த விதியினோர்ந் தொப்பன கொளலே.**

*எ-னின், இங்ஙனம் கூறிய நான்கின் புணர்ச்சிக்கும் ஆவதோர் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.*

*இ-ள்: விகுதியே பதமே சாரியையே உருபே என்னும் நான்கின் புணர்ச்சிக்-*

கண்ணும் விதிகள் பொதுப்படக் கூறப்பட்டனவேனும் அவ்விதிகளுள் இவ்விதி இதற்குப் பொருந்தும்; இவ்விதி இதற்குப் பொருந்தாது என உய்த்துணர்ந்து, எவ்விதி எதற்குப் பொருந்துமோ அவ்விதியை அதற்குக் கொள்க எ-று.

விகுதிப் புணர்ச்சியுள்,

"றவ்வொ டுகர வும்மைநிகழ் பல்லவும்" (நூ. 145)

எனப் பொதுப்பட விதித்தாரேனும் விதி உளது என்று கருதி, இவ்விகுதி வந்துழி எல்லாம் இவ்விரு காலமும் பொருந்தும் என்று கொள்ளற்க. சென்று என்புழி இறந்த-காலமும் சேறு என்புழி எதிர்காலமும் பொருந்தும் என்று கொள்க.

பதப் புணர்ச்சியுள்,

"அல்வழி இஐம் முன்ன ராயின்
இயல்பு மிகலும் விகற்பமு மாகும்" (நூ. 176)

எனப் பொதுப்பட விதித்தாரேனும் விதி உளது என்று கருதி, ஆடிதிங்கள் என இயல்பாம் என்றும் பருத்திக் குறிது என மிகும் என்றும் கொள்ளற்க. பருத்தி குறிது என எழுவாய்க்கண் இயல்பாம் எனவும், "ஆடித் திங்கள்" (சிலப். 23:133) எனப் பண்புத்தொகைக்கண் மிகும் எனவும் கொள்க.

சாரியைப் புணர்ச்சியுள்,

"பதமுன் விகுதியும் பதமு முருபும்
புணர்வழி யொன்றும் பலவுஞ் சாரியை
வருதலுந் தவிர்தலும் விகற்பமு மாகும்" (நூ. 243)

எனப் பொதுப்பட விதித்தாரேனும் விதி உளது என்று கருதி, நாட்டினின் நீங்கினான் என, "இன்னென வரூஉம் வேற்றுமை யுருபிற்கு" (தொல். புணர். 29) இன்சாரியை வரும் என்றும் நாட்டுக்கண் இருந்தான் எனக் கண்ணுருபிற்கு இன்சாரியை வாராது என்றும் கொள்ளற்க. நாட்டின்கண் இருந்தான் எனக் கண்ணுருபிற்கு இன்சாரியை வரும் என்றும் நாட்டின் நீங்கினான் என இன்னுருபிற்கு இன்சாரியை வாராது என்றும் கொள்க.

உருபு புணர்ச்சியுள்,

"ஒற்றுயிர் முதலீற் றுருபுகள் புணர்ச்சியின்
ஒக்குமன் னப்பெயர் வேற்றுமைப் புணர்ப்பே" (நூ. 242)

எனப் பொதுப்பட விதித்தாரேனும் விதி உளது என்று கருதி, நம்பிகு என உயிரீற்று உயர்திணைப்பெயர் முன் வந்த குவ்வுருபு மிகா என்றும் நம்பிக்கண் என, "மன்" (நூ. 242) என்றமையாற் கண்ணுருபு மிகும் என்றும் கொள்ளற்க. நம்பிகண் எனக் கண்ணுருபு மிகா என்றும் நம்பிக்கு எனக் குவ்வுருபு, "மன்" (நூ. 242) என்றமையான் மிகும் என்றும் கொள்க. பிறவும் அன்ன.

சாரியைப் புணர்ச்சி ஏனை மூவகைப் புணர்ச்சியினையும் சார்ந்து, இடையே தோன்றல் விகாரமாய் வந்து புணர்தலின், 'விகுதி பதஞ்சா ரியையுருபு' என உருபிற்கு முற் கூறினார்.

இச்சூத்திரத்திற்கு இவ்வாறு பொருள் கொள்ளாது இந் நால்வகைப் புணர்ச்சியுள் ஒன்றற்குச் சொன்ன விதி மற்றொன்றற்கும் கொள்க எனப் பொருள் கொள்வாரும்[217] உளர். அப்பொருட்கு அமைந்த சொல் இச்சூத்திரத்து இன்மையானும்,

"சாரியை
சந்தி விகார மாறினு மேற்பவை
முன்னிப் புணர்ப்ப முடியுமெப் பதங்களும்" (நூ. 133)

என்றும், "ஈறு போதல்" (நூ. 136) என்னும் சூத்திரத்து அவ்விகாரம் விகுதிப் புணர்ச்சிக்கண் அன்றிப் பதப் புணர்ச்சிக்கண்ணும் வரும் என்பது தோன்றப், "பண்பிற் கியல்பே" (நூ. 136) என்றும் புணரியல்விதி பெயர், வினை, இடை, உரி நான்கிற்கும் பொருந்தும் என்பது தோன்ற, "மெய்யுயிர் முதலீ றாமிரு பதங்களும்" (நூ. 151) என்றும் விதந்து உரைத்த சிறப்புவிதிகளுள், "உருபின் முடிபவை யொக்குமப் பொருளினும்" (நூ. 238) என்றும்,

"ஒற்றுயிர் முதலீற் றுருபுகள் புணர்ச்சியின்
ஒக்குமன் னப்பெயர் வேற்றுமைப் புணர்ப்பே" (நூ. 242)

என்றும் கூறியவாற்றான் அப்பொருள் அமைந்து கிடத்தலானும் அது பொருந்தாது என்க. (15)

இரண்டாம் வேற்றுமைப் புணர்ச்சிக்குப் புறனடை

255. **இயல்பின் விகாரமும் விகாரத் தியல்பும்**
**உயர்திணை யிடத்து விரிந்துந் தொக்கும்**
**விரவுப் பெயரின் விரிந்து நின்றும்**
**அன்ன பிறவு மாகுமை யுருபே.**

[217] மயிலைநாதர் (நன். 253) இவ்வாறு பொருள் கூறுவார்.

எ-னின், வேற்றுமைப் புணர்ச்சிக்கு ஆவதோர் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: வேற்றுமைப் புணர்ச்சிக்கு விதித்த பொதுவிதியோடு (151, 165, 242) தானும் ஒருங்கு முடிதலே அன்றி, அங்ஙனம் விதித்த இயல்பின்கண் விகாரமாயும் விகாரத்தின்கண் இயல்பாயும் உயர்திணைக்கண் விரிந்தும் தொக்கும் விரவுப்பெயர்க்கண் விரிந்தும் விரிதல் ஒழிந்தும் இவை போல்வன பிற வேறுபாடாயும் வரும் இரண்டாம் வேற்றுமைப் புணர்ச்சி எ-று.

உயிரே ஒற்றே சாரியையே என்று இவை தோன்றல், திரிதல், கெடுதல், உறழ்ச்சி விகற்பங்களை எல்லாம் உள்ளடக்கி, 'இயல்பின் விகாரமும் விகாரத் தியல்பும்' என்றும் எல்லா வேற்றுமையும் விரிந்தும் தொக்கும் வருதல் போலாது இவ்வேற்றுமை உயர்திணைப்பெயர்க்கண்ணும் விரவுப்பெயர்க்கண்ணும் விரிதலே தகுதியாய்த் தொகுதல் தகுதியாயும் வலிந்து கோடலாயும் வரும் என்பது தோன்ற, விரிந்தும் தொக்கும் விரிந்தும் விரிதல் நின்றும் என்றும் நெருநலளவும் வருத்திய பிணி இன்று நின்றது என்பதுபோல ஒழிதற்பொருள் தோன்ற, 'நின்று' என்றும் கூறினார்.

மேலைச் சூத்திரத்து, "ஒப்பன கொளலே" (நூ. 254) என்றமையான் இவ்விதிகளை இரண்டாம் வேற்றுமைப் புணர்ச்சி வந்துழி எல்லாம் கூட்டாது வேற்றுமைப் பொதுப் புணர்ச்சியோடு ஒருங்கு ஒத்து முடிவன இவை; இப்புறனடைச் சிறப்புவிதியான் முடிவன இவை என உய்த்துணர்ந்து, ஏற்பனவற்றோடு கூட்டுக.

வ-று: "வழிபடு தெய்வ நிற்புறங் காப்ப" (தொல். செய். 106) என இயல்பின் விகாரமாயிற்று. மண் கொணர்ந்தான் என விகாரத்து இயல்பாயிற்று. நம்பியைக் கொணர்ந்தான் என உயர்திணைக்கண் விரிந்தது.

"ஆடூஉ வறிசொல் மகடூஉ வறிசொல்
பல்லோ ரறியுஞ் சொல்" (தொல். கிளவி. 2),

"நான்முகற் றொழுது" (நன். 56)

என அதன்கண் தொக்கது. கொற்றனைக் கொணர்ந்தான் என விரவுப்பெயர்க்கண் விரிந்தது. ஆண் பெற்றாள், பெண் பெற்றாள்,

"தற் கொண்டான்
வளத்தக்காள் வாழ்க்கைத் துணை" (குறள். 51),

"வழிபடு தெய்வ நிற்புறங் காப்ப" (தொல். செய். 106)

என அதன்கண் தொக்கது. இவ்விரண்டு இடத்துத் தொகையுள் சில தகுதியாயும் சில வலிந்து கோடலாயும் வருதல் காண்க.

'அன்ன பிறவும்' என்றமையானே, "தற் கொண்டான்" (குறள். 51), "எற்பணி யாளாய்" (இருபாவிருபஃது 18:11) என உறழப்படுவன திரிந்தே வருதலும் இன்னும் வருவன உளவேல் அவையும் கொள்க.

இங்ஙனம் எண்ணின்கண் நின்ற இறந்தது தழீஇய இழிவு சிறப்பும்மைகளானே வேற்றுமைக்கு என விதித்த பொதுவிதியோடு ஒருங்கு ஒத்து, வரகு கட்டினான் என இயல்பின்கண் இயல்பாயும் விளக் குறைத்தான், பலாக் குறைத்தான், கடுக் குறைத்தான் என விகாரத்தின்கண் விகாரமாயும் வருதலே பெரும்பால என்க.

இனி விரவுப்பெயர்க்கண், 'விரிந்து நின்றும்' என்பதற்கு இவ்வாறன்றி, எழுந்திருந்து என்பதற்கு இருந்து என்பதனை அசைநிலை ஆக்கி, எழுந்து என ஒரு பொருள் கோடல்போல நின்று என்பதனை அசைநிலை ஆக்கி, விரிந்து என ஒரு பொருள் கொள்ளின்[218] வழக்கின்கண்ணும் செய்யுட்கண்ணும் தொக்கு வரும் இலக்கியங்கட்கு இலக்கணம் இன்றாம் என்க. (16)

### மூன்றாம் வேற்றுமைப் புணர்ச்சிக்குப் புறனடை

**256. புள்ளியு முயிரு மாயிறு சொன்முன்**
**தம்மி னாகிய தொழின்மொழி வரினே**
**வல்லினம் விகற்பமு மியல்பு மாகும்.**

எ-னின், இதுவும் அது.

இ-ள்: மூன்றாம் வேற்றுமைப் புணர்ச்சியுள் ஒற்றும் உயிரும்[219] இறுதியாய் நின்ற சொல் முன்னர்க், "கருவி கருத்தா வுடனிகழ் வதன்பொருள்" (நூ. 297) என்பவற்றுள் கருத்தாவாகிய நிலைமொழிப் பொருள் தம்மால் ஆகிய தொழிற்சொல் வரின் அங்ஙனம் வரும் வல்லினம் வேற்றுமைப் பொதுமுடிபு (165) ஏலாது விகற்பமும் இயல்பும் ஆம் எ-று.

---

[218] மயிலைநாதர் (நன். 254) விரிந்து என ஒரு பொருள் கொள்வார்.

[219] வைத்தியநாத தேசிகர், "புள்ளியும் உயிரும்" என்ற முறையல் கூற்றினானே பேஎய் கோட்பட்டான், பேஎய்க் கோட்பட்டான் என்னும் உறழ்ச்சியுள் எகரப்பேறும் பாம்பு கோட்பட்டான், பாம்புக் கோட்பட்டான், பாப்புக் கோட்பட்டான் என்னும் உறழ்ச்சியுள் நிலைமொழி ஒற்றுத் திரிதலும் திரியாமையும் கொள்க." என்று இளம்பூரணர், நச்சினார்க்கினியர் (தொல். தொகை. 14) உரைகளைத் தழுவிக் கூறும் விளக்கம் (இல. விள. 76) எண்ணத் தக்கது.

இவ்விதியும், "ஒப்பன" (நூ. 254) கொள்க.

வ-று: பேய் கோட்பட்டான், பேய்க் கோட்பட்டான்; சூர் கோட்பட்டான், சூர்க் கோட்பட்டான்; புலி கோட்பட்டான், புலிக் கோட்பட்டான் எனவும் பேய் பிடிக்கப்பட்டான், புலி கடிக்கப்பட்டான் எனவும் வரும்.

உம்மையால் சுறாப் பாயப்பட்டான், அராத் தீண்டப்பட்டான் என வேற்றுமைப் பொதுவிதியான் (165) மிக்கு முடிவனவே பெரும்பால என்க. இவற்றுள் தம்மின் ஆகிய தொழில் பட்டான் என்பதாம்; கோள் என்பது முதலியவாய் இடைப் பிற வருவன தம் தொழிலாம்.

இங்ஙனம் ஆயினும் இவ்விரண்டினையும் ஒரு சொல் ஆக்கித், 'தம்மி னாகிய தொழின்மொழி' என்றார் பட்டான் என்புழி இது பட்டான் என்னும் பொருள் தோன்றக் கோள் என்பது முதலியன அதனை விசேடித்து நிற்கும் ஒற்றுமை நயம் கருதி என்க. வேற்றுமை நயம் கருதின் கோட்பட்டான் என்பது ஒழிந்தன எழுவாய்ப் பயனிலையாகிய வினையெச்சம் முற்றுவினை கொண்டதாம்.

எழுவாய்க்கண்ணும் மூன்றாம் வேற்றுமைக்கண்ணும் கருத்தா உள ஆகலின் தம் தொழிலையே ஈண்டுத், 'தம்மி னாகிய தொழில்' என்றார் எனின் பேய் பிடித்தது என்னும் எழுவாய்க்கண் பேயாற் பிடித்தது என மூன்றாம் உருபும் விரித்தற்கு அமையும். அங்ஙனம் விரித்தல் கூடாமையின் தம் தொழிலும் தம்மின் ஆகிய தொழிலும் எழுவாய்க்கண் கருத்தாவும் மூன்றாம் வேற்றுமைக்கண் கருத்தாவும் தம்முள் வேறுபாடு உடையவாம். அவ்வேறுபாடு அவ்விலக்கணம் கூறும்வழிக் (297) காட்டுதும். (17)

எழுத்ததிகாரத்துக்குப் புறனடை

257. **இதற்கிது முடிபென் றெஞ்சா தியாவும்**
**விதிப்பள வின்மையின் விதித்தவற் றியலான்**
**வகுத்துரை யாதவும் வகுத்தனர் கொளலே.**

எ-னின், இவ்வதிகாரத்திற்கு ஆவதோர் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: இதற்கு இது முடிபு என்று இவ்வதிகாரத்துள் விதிக்கத் தகுவனவற்றை எல்லாம் தனித்தனி வரையறுத்து விதிக்கப் புகின் அதற்கு ஓர் வரையறை இன்மையின் வகுத்து விதித்தனவற்றின் இலக்கணங்களை[220] ஏதுவாகக் கொண்டு, வகுத்து விதி

[220] **'விதித்தவற் றியலான்' என்பதற்கு, "எடுத்தோத்தானும் இலேசானும் உரையானும் விதித்துப் போந்தவற்றின் இயல்பைப் பற்றி அதனானே" என்று வைத்தியநாத தேசிகர் (இல. விள. 158) விளக்குவார்.**

உரையாதனவற்றையும் கருதல் அளவையான்[221] வகுத்து, விதி உரைத்துக்கொள்க எ-று.

வ-று: எழுத்தியலுள்,

"மொழிமுதற் காரண மாமணுத் திரளொலி
எழுத்து" (நூ. 58)

என உரைத்தமையானே,

"கட்புல னில்லாக் கடவுளைக் காட்டும்
சட்டகம் போலச் செவிப்புல வொலியை
உட்கொளற் கிடுமுரு பாம்வடி வெழுத்தே" (நன். 256* மயிலை.),

எனப் பிறர் கூறியவாறு இவ்வொலிவடிவைக் காட்டுதற்கு ஒரு கருவியாக வரைந்து கொள்ளப்பட்டது வரிவடிவெழுத்து[222] எனவும் பதவியலுள், "அன்ஆன் அள்ஆள்" (நூ. 140) என்னும் சூத்திரத்து முறையே அன், ஆன் விகுதி ஆண்பாற்கு என உரைத்தமையானே பெருமாள் என்னும் பதம் பெருமையை உடையான் என்னும் பொருள் தோன்ற நின்ற பெருமான் என்னும் பதத்தினது இறுதி ஆன்விகுதி ஆள்-விகுதியாய் ஒரோவிடங்களில் திரிந்து, ஆண்பாலையே உணர்த்தி நின்றது எனவும் உயிரீற்றுப் புணரியலுள்,

"இயல்பினும் விதியினு நின்ற வுயிர்முன்
கசதப மிகும்" (நூ. 165)

என உரைத்தமையானே, "ணனவல் லினம்வரட் டறவும்" (நூ. 209) என்புழி டகரமும் வல்லினம் ஆதலின் மிகுந்தது எனவும் மெய்யீற்றுப் புணரியலுள்,

"நுந்தம்,
எம்நம் மீறா மவ்வரு ஞநவே" (நூ. 221)

என உரைத்தமையானே அம் என்னும் சொல்லிறுதி மகரமும் குற்றொற்று ஆதலின் தன்னொடு மயங்காத மெல்லினம் வரின் அதுவாய்த் திரிந்து அந்நலம் என அழகினது

---

[221]காட்சி, கருதல், உரை, இன்மை, பொருள், ஒப்பு என்னும் அறுவகை அளவைகளுள் (சிவ. சுப. அள. 1) கருதல் அளவை ஒன்று. இது வடமொழியில் அநுமானப் பிரமாணம் என்று சொல்லப்படும். இதனைக் கருத்து வகை என்றும் இவர் (261) குறிப்பிடுவார்.

[222]இப்பகுதிக்கு மயிலைநாதர் (நன். 256) விரிவாக உரை கூறுவார்.

நலம் என்னும் பொருட்டாய் வரும் எனவும் உருபு புணரியலுள், "வவ்விறு சுட்டிற் கற்றுறல் வழியே" (நூ. 250) என உரைத்தமையானே அது போலும் வினாவும் எவற்றை என அற்றுச்சாரியை பெறும் எனவும் இரண்டாம் வேற்றுமைக்கும் மூன்றாம் வேற்றுமைக்கும் புறனடை (255, 256) உரைத்தமையானே ஏழாம் வேற்றுமையும், "மண்புகுந்தும் விண்பறந்து மாலுமய னுங்காணா வொருபொருள்" (வி. மே.) என வேற்றுமைப் பொதுவிதி ஏலாது சிறுபான்மை வரும் எனவும் கொள்க.

இன்னும் இவ்வைந்து இயலுள்ளும் வகுத்து உரையாதனவற்றை எல்லாம் இடர்ப்படாது இதுவே நிலனாக வகுத்து உரைத்துக்கொள்க. (18)

உருபு புணரியல் முற்றிற்று.

எழுத்ததிகாரம் முற்றுப்பெற்றது.

## எழுத்ததிகார நூற்பாக்களின் தொகையும் பொருளடைவும்

எழுபா னிரண்டெழுத்தி னேற்றபதத் தைஞ்ஞூன்
கொடுமூன் றுயிரீறைம் பான்மூன் - றருமெய்யீ
றாறா றுருபியன்மூ வாறா மெழுத்துரைநூற்
பாவிருநூற் றோரிரண்டாப்[223] பார்.

அடையெண் பெயர்முறை தோற்றம் வடிவள வாதியந்தம்
இடைநிலை போலியென் றீரைந் தெழுத்து மிருபதமும்
படுபுணர் மூன்றி னியல்பும் விகாரமுஞ் சாரியையும்
உடனுணர் வாரை யெழுத்தறி வாரென்ப ருத்தமரே.

---

[223] பாயிரப் பகுதியில் உள்ள நூற்பாக்கள் பவணந்தி முனிவர் இயற்றியன அல்ல என்பது இப்பாடலால் அறியப்படும் என்று எஸ். கலியாண சுந்தரையர் (நன்னூல் மூலமும் மயிலைநாதர் உரையும், சென்னை, 1946. பக். iv) கூறுவார்.

இரண்டாவது

## சொல்லதிகாரம்

### {000}அதிகாரத் தோற்றுவாய்

சொல்லதிகாரம் என்பது சொல்லினது அதிகாரத்தை உடையது என அன்மொழித்தொகையாய் அப்படலத்திற்குக் காரணக்குறி ஆயிற்று.

<சொல் என்றது[224] எழுத்தினான் ஆக்கப்பட்டு இருதிணைப் பொருள் தன்மையும் ஒருவன் உணர்தற்குக் கருவி ஆம் ஓசையாகிய> பெயர், வினை, இடை, உரி என்னும் நால்வகைச் சொல்லும் பிறவும் ஆம். அவை, "இயற்சொற் றிரிசொல்" (நூ. 270) என்னும் சூத்திரத்தான் பிற் கூறுப ஆகலின் ஈண்டு எதிரது போற்றி ஆளப்பட்டது.

அதிகாரம்- அதிகரித்தல். அதனை மேலை அதிகார முகத்து உரைத்தாங்கு உரைத்துக்கொள்க. எனவே சொல்லை நுதலி வரும் பல ஓத்தினது தொகுதி சொல்லதிகாரம் என்றாராயிற்று.

எழுத்தினான் ஆக்கப்படுதல் மேலை அதிகாரத்தில் போந்த பதவியலுள் காண்க. இருதிணைப் பொருள் முதலியன பின் வரும் சூத்திரங்களான் உணர்க.

<இனிப் பொருள் தன்மையாவது[225] ஒரு பொருட்குக் கேடு பிறந்தாலும் தனக்குக் கேடின்றித் தான் ஒன்றேயாய்ப் பல வகைப்பட்ட பொருள்தோறும் நிற்கும் என்று உணர்க.>

---

[224] நச்சினார்க்கினியர் (தொல். கிளவி. 1) உரை.

[225] நச்சினார்க்கினியர் (தொல். கிளவி. 1) உரை.

முதலாவது

# பெயரியல்

## கடவுள் வணக்கமும் அதிகாரமும்

258. **முச்சக நிழற்று முழுமதி முக்குடை**
**அச்சுத னடிதொழு தறைகுவன் சொல்லே.**

*எ-னின், கடவுள் வணக்கமும் அதிகாரமும் உணர்த்துதல்[226] நுதலிற்று.*

*இ-ள்: மூன்று உலகத்திற்கும் நிழலைச் செய்யும், நிறைந்த மதி போலும் மூன்று குடையை உடைய அழியாதவன் அடிகளை வணங்கிச் சொல்லுவன்[227] மேலை அதிகாரத்துக் கூறிய எழுத்தினான் ஆய சொல்லிலக்கணத்தை எ-று.*

*தோன்றி அழியும் மாலைய என்பார், 'சகம்' என்றும் உலகமே உருவம் ஆயினான் உயிர் இன்புறுவதே தான் இன்புறுவது என்பார் அக்கடவுள் முடிமேல் நிழற்றும் குடையை முச்சகத்திற்கும், 'நிழற்றும்' என்றும் நிறைந்த தண்ணளியை உடையன் என்பார் அதனை உவமை முகத்தால் குடைமேல் வைத்து, 'முழுமதி முக்குடை' என்றும் சுதந்திரமின்றித் தோன்றி அழியும் உயிரும் பிறவும் ஆகிய சகத்திற்கு அவ்வாறு தோன்றி அழியான் தலைவனாக வேண்டும் என்பார், 'அச்சுதன்' என்றும் நம் செயல் அன்று என்பார், 'அடிதொழு தறைகுவன்' என்றும் வரையறைப்படாத பெருமையை உடையது என்பார் அவ்வாற்றல் தோன்றச், 'சொல்' என்றும் கூறினார்.*

*ஈண்டுக் காப்பது கருதி, 'அச்சுதன்' என்றது மேலை அதிகாரத்துப் படைப்பது கருதி, "நான்முகன்" (நூ. 56) என்றது போலும்.*

*சொல் என்பது ஆகுபெயர். ஏகாரம் ஈற்றசை.* (1)

## சொல்லின் பொது இலக்கணம்

259. **ஒருமொழி தொடர்மொழி பொதுமொழி யென்றா**
**இருதிணை யைம்பாற் பொருளையுந் தன்னையும்**
**மூவகை யிடத்தும் வழக்கொடு செய்யுளின்**

---

[226] **அதிகாரம், ஓத்து, சூத்திரம் ஆகிய மூன்றும் நுதலிய பொருள்களை மயிலைநாதர் எழுத்ததிகாரத்தில் (நன். 55) உரைத்ததுபோல் ஈண்டும் விரித்துக் கூறுவார்.**

[227] **அதிகாரந்தோறும் இறைவணக்கம் கூறுதற்கு மயிலைநாதர் (நன். 257) நான்கு காரணங்கள் காட்டி அமைதி கூறுவார்.**

**வெளிப்படை குறிப்பின் விரிப்பது சொல்லே.**

எ-னின், மேல் சொல் என்றது இஃது என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: ஒருமொழியும் தொடர்மொழியும் பொதுமொழியும் என மூன்று[228] கூற்றினதாய், இருதிணையாகிய ஐம்பாற் பொருளினையும் அப்பொருளை அன்றித் தன்னையும் மூன்று இடத்தினும் வழக்கின்கண்ணும் செய்யுட்கண்ணும் வெளிப்படையானும் குறிப்பினானும் விளக்குவது சொல்லாம் எ-று.

எனவே எல்லாச் சொல்லும் பொருளும் ஒருமொழி, தொடர்மொழி, பொதுமொழி என்னும் மூன்றாயும் இருதிணை ஐம்பாலாயும் அடங்கும் என்பதூஉம் இருதிணை முதலிய காரணத்தான் உயர்திணைச்சொல், அஃறிணைச்சொல், ஆண்பாற்சொல், பெண்பாற்சொல், பலர்பாற்சொல், ஒன்றறிசொல், பலவறிசொல், தன்மைச்சொல், முன்னிலைச்சொல், படர்க்கைச்சொல், வழக்குச்சொல், செய்யுட்சொல், வெளிப்படைச்சொல், குறிப்புச்சொல் எனவும் உயர்திணைப்பொருள், அஃறிணைப்பொருள், ஆண்பாற்பொருள், பெண்பாற்பொருள், பலர்பாற்பொருள், ஒரு பொருள், பல பொருள், தன்மைப்பொருள், முன்னிலைப்பொருள், படர்க்கைப்பொருள், வழக்குப்பொருள், செய்யுட்பொருள், வெளிப்படைப்பொருள், குறிப்புப்பொருள் எனவும் வழங்கப்படும் என்பதூஉம் உயிர்க்கு அறிவு கருவியாய் நின்று தன்னையும் பொருளையும் உணர்த்துமாறுபோல ஒருவர்க்குச் சொல் கருவியாய் நின்று தன்னையும் உள்பொருள், இல்பொருள், மெய்ப்பொருள், பொய்ப்பொருள், சித்துப்பொருள், சடப்பொருள், நித்தியப்பொருள், அநித்தியப்பொருள், உருவப்பொருள், அருவப்பொருள், காட்சிப்பொருள், கருத்துப்பொருள், இயற்கைப்பொருள், செயற்கைப்பொருள், முதற்பொருள், சினைப்பொருள், இயங்கியற்பொருள், நிலையியற்பொருள் எனப் பலவாற்றானும் பகுத்துக் கூறப்படும் இருதிணை ஐம்பாற் பொருளையும் உணர்த்தும் என்பதூஉம் பெற்றாம். (2)

மூவகை மொழி

{260} **ஒருமொழி யொருபொரு ளனவாந் தொடர்மொழி**
**பலபொரு ளனபொது விருமையு மேற்பன.**

எ-னின், மேலைச் சூத்திரத்து நிறுத்த முறையானே *(259)* மூவகை மொழிகள் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: ஒருமொழிகளாவன பகாப்பதமேனும் பகுபதமேனும் ஒன்று நின்று தத்தம்

[228] அடுத்த நூற்பாவின் உரையையும் அடிக்குறிப்பையும் காண்க.

ஒரு பொருளைத் தருவனவாம். தொடர்மொழிகளாவன அவ்விரு வகைப் பதங்களும் தன்னோடும் பிறிதோடும் அல்வழி, வேற்றுமைப் பொருள் நோக்கத்தான் இரண்டு முதலியவாகத் தொடர்ந்து நின்று, இரண்டு முதலிய பல பொருளைத் தருவனவாம். பொதுமொழிகளாவன ஒன்றாய் நின்று ஒரு பொருள் தந்தும் அதுவே தொடர்ந்து நின்று பல பொருள் தந்தும் இவ்விரண்டற்கும் பொதுவாய் நிற்பனவாம் எ-று.

வ-று: நிலம், நிலத்தன்; நட, நடந்தான்; தில், மன்; தவ, நனி என்றல் தொடக்கத்தன ஒருமொழி. நிலம் வலிது, அதுகொல், சாலப் பகை, நிலம் கடந்தான், நிலத்தைக் கடந்தான், நிலம் கடந்த நெடுமால் என்றல் தொடக்கத்தன தொடர்மொழி. எட்டு, கொட்டு, தாமரை, வேங்கை, எழுந்திருந்தான், வாராநின்றான், உரைத்திட்டான் என்றல் தொடக்கத்தன பொதுமொழி. இவை ஒருமொழிகளாய் ஒரு பொருள் தருவதன்றி எள்ளைத் து, கொள்ளைத் து, தாவுகின்ற மரை, வேகின்ற கை, எழுந்து பின் இருந்தான், வந்து நின்றான், உரைத்துப் பின் இட்டான் எனத் தொடர்மொழிகளாய்ப் பல பொருள் தருதலும் காண்க.

மொழிகள் தொடராது யாங்கணும் தனித்து நில்லாவேனும் இப்பொருட்கு இச்சொல் என இறைவனாலும் அறிவுடையோராலும் படைக்கும் படைப்புக் காலத்தும் தொடர்மொழிக்கண் நின்ற இரண்டு முதலிய சொற்களுள் ஒன்று நின்று மற்றைய எஞ்சியவழியும் தனித்து நிற்றலின், 'ஒருமொழி' என்றார். எஞ்சியவழித் தனித்து நிற்றல் வருமாறு: ஒருவனுழை ஒருவன் வந்துழி வா என்றல் உலகியல். அவ்வழி, வருதற்கு வினைமுதலாகிய நீ என்னும் சொல் எஞ்சி, வா என்னும் சொல் தனித்து ஒருமொழியாய் நின்றது. இத்தொடக்கத்தன எல்லாம் கொள்க.

சேனை, குழாம் என்றல் தொடக்கத்தன ஒருமொழி பல பொருள் தந்தது என்னை எனின் ஈண்டுத், 'தொடர்மொழி பலபொரு ளன' என்றது பல சொல்லில் பல பொருளை அன்றி, இப்பொருளை அன்று என்க. இப்பொருளைப் பல பொருளான் இயைந்த ஒரு பொருள் என ஆசிரியர் அகத்தியனார்,

"பலவி னியைந்தவு மொன்றெனப் படுமே
அடிசில் பொத்தகஞ் சேனை யமைந்த
கதவ மாலை கம்பல மனைய"

எனக் கூறுமாறு காண்க.

**இனி இவ்வொருமொழியைத் தனிமொழி எனவும் தனிமொழியாவது சமய ஆற்றலால் பொருள் விளக்குவது எனவும் அது பெயர்ச்சொல் முதலாக நான்கு**

வகைப்படும் எனவும் கூறித், தொடர்மொழியாவது இருமொழித் தொடரும் பன்மொழித் தொடரும் என இருவகைப்படும் எனவும் அவை தொடருங்கால் பயனிலை வகையானும் தொகைநிலை வகையானும் எண்ணுநிலை வகையானும் தொடரும் எனவும் அவ்வாறன்றி வடநூலார் கூறியவாறே அவாய்நிலையானும் அண்மையானும் தகுதியானும் தொடரும் எனவும் அவற்றிற்கு உதாரணம் முறையே சாத்தன் வந்தான், யானைக்கோடு, தீ, நீர் எனவும் ஆவைக் கொணா, ஆற்றங்கரைக்கண் ஐந்து கனிகள் உளவாகின்றன, நீரால் நனை எனவும் அறம் வேண்டி அரசன் உலகம் புரந்தான் எனவும்[229] கூறுப. அவை எல்லாம் இரு-வகைப் பதத்துள்ளும் அல்வழி, வேற்றுமைப் பொருள்களுள்ளும் அடங்கு-மாறு உய்த்துணர்க. (3)

திணை இரண்டு

{261} மக்க டேவர் நரக ருயர்திணை
மற்றுயி ருள்ளவு மில்லவு மஃறிணை.

*எ-னின், நிறுத்த முறையானே (259) இருதிணை ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.*

[229] பவணந்தி முனிவர் ஒருமொழி, தொடர்மொழி, பொதுமொழி எனச் சொல் மூன்று வகைப்படும் (நன். 259) என்பார். தொல்காப்பியர் இம்மூன்றையும் நிறுத்த சொல், குறித்து வருகிளவி (தொல். புணர். 8) என்னும் இரண்டனுள் அடக்குவார்.

தனிமொழி, தொடர்மொழி எனச் சொல் இருவகைப்படும் என்றும் பெயர், வினை, இடை, உரி எனத் தனிமொழி நான்கு வகைப்படும் என்றும் அது சமய ஆற்றலால் பொருள் விளக்கும் என்றும் இருமொழித் தொடரும் பன்மொழித் தொடரும் எனத் தொடர்மொழி இருவகைப்படும் என்றும் அது அவாய்நிலை தகுதி அண்மை-நிலைகளால் இயைந்து, பொருள் விளக்கும் தனிமொழி ஈட்டம் என்றும் சேனாவரையர் (தொல். கிளவி. 1) கூறுவார்.

தனிமொழி, தொடர்மொழி எனச் சொல் இருவகைப்படும் என்றும் தனிமொழி பொருள் உணர்த்துவது, "நிலந்தீ நீர்வளி" என்னும் (தொல். மரபு. 91) நூற்பாவால் விளங்கும் என்றும் இருமொழித் தொடரும் பன்மொழித் தொடரும் எனத் தொடர்-மொழி இருவகைப்படும் என்றும் அவை தொடரும் போது பயனிலை வகை தொகை-நிலை வகை எண்ணுநிலை வகைகளால் தொடரும் என்றும் நச்சினார்க்கினியர் (தொல். கிளவி. 1) விளக்கிக் கூறி, அவாய்நிலை தகுதி அண்மைநிலைகளை உம்மையால் தழுவிக்-கொள்வார்.

தொடர்மொழிகள் அவாய்நிலை தகுதி அண்மைநிலைகளால் பொருள் விளக்கும் என்பது வடமொழி மரபு. சேனாவரையர், சுப்பிரமணிய தீக்கிதர் (பி. வி. 19), சாமிநாத தேசிகர் (இல. கொ. 105) முதலியோர் இக்கருத்தைத் தழுவுவர். அவை பயனிலை வகை தொகைநிலை வகை எண்ணுநிலை வகைகளால் பொருள் உணர்த்தும் என்பது தமிழ்-மரபு. இளம்பூரணர், நச்சினார்க்கினியர், கல்லாடர் (தொல். கிளவி. 1) முதலியோர் இக்கருத்தினை உடையோர்.

மயிலைநாதரும் (நன். 259) தெய்வச்சிலையாரும் (தொல். கிளவி. 1) வைத்தியநாத தேசிகரும் (இல. விள. 161) இவற்றிலிருந்து சற்றே மாறுபடுவர். அதனை அவரவர் உரை நோக்கி உணர்க.

இ-ள்: மக்களும் தேவரும் நரகரும் உயர்திணையாம். அவரை ஒழிந்த விலங்கு முதலிய உயிர் உள்ளனவும் நிலம், நீர் முதலிய உயிர் இல்லனவும் அஃறிணையாம் எ-று.

மக்கள், தேவர், நரகர் எனப்படுதல் அவ்வவ் யாக்கையும் உயிரும் கூடி நின்றவழி ஆதலின் அவை பிரிந்தவழியும் வேறு கருதியவழியும் அவர் உயிரையும் உடம்பையும் உயிர் இல்லனவாகிய அஃறிணையாகக் கொள்ளப்படும் என்க. விலங்கு முதலியவற்றின் உயிர் உடம்புகளும் அன்ன.

மக்களாகப் பிறந்து, புண்ணிய பாவம் இயற்றிப், புண்ணிய மிகுதியால் தேவராயும் பாவ மிகுதியால் நரகராயும் பிறத்தலின், 'மக்க டேவர் நரகர்' எனச் சாதன சாத்திய முறையே வைத்தார்[230] என்க.

அன்றியும் ஆசிரியர் தொல்காப்பியர், "உயர்திணை யென்மனார் மக்கட் சுட்டே" (தொல். கிளவி. 1) என முன்னர்க் கூறிப், பின்னர், "இவ்வென வறியுமந் தந்தமக் கில"வாகிய (தொல். கிளவி. 4), "தெய்வஞ் சுட்டிய பெயர்" (தொல். கிளவி. 4) முதலியனவும், "உயர்திணை மருங்கிற் பால்பிரிந் திசைக்கும்" (தொல். கிளவி. 4) எனக் கூறலின் உயர்திணைப்பாற் படுத்து, 'மக்க டேவர் நரக ருயர்திணை' என முறை தெரித்து ஓதினார் எனக் கோடலும் ஆம் என்க.

"திணைநிலங் குலனொழுக்கம்" (சூ. நிக. 11 ணகர. 5) என்ப ஆகலின் திணை என்னும் பல பொருள் ஒரு சொல் ஈண்டுக் குலத்தினை உணர்த்தி நின்றது. உயர்திணை அல்லாத திணை அஃறிணை எனப்பட்டது. இவ்விரண்டும் பண்புத்தொகை. உயர்வாகிய குலம், அஃது அன்மையாய குலம் என விரியும். அடை அடுத்த இவ்விரண்டு சாதிப்பண்புகளும் ஆகுபெயராய்ப் பண்பிகளை உணர்த்தி நின்றன. திணை என்பது ஒழுக்கம். அஃது ஆகுபெயராய் ஒழுக்கத்தை உடைய பொருள்களை உணர்த்தி நின்றது[231] எனவும் உயர்திணை என்பது வினைத்தொகை[232] எனவும் கூறுவாரும் உளர். சாதிவேற்றுமை கருதி உலகப்பொருள்களை எல்லாம் உயர்திணை, அஃறிணை என இரண்டு சாதியாக வகுத்து, அவ்வேற்றுமை கருதி அவற்றை

[230] இம்முறைவைப்பிற்கு மயிலைநாதர் (நன். 260) கூறும் காரணங்களையும் ஈண்டு ஒப்பிடுக.

[231] நச்சினார்க்கினியர் (தொல். கிளவி. 1) இவ்வாறு கூறுவார்.

[232] உயர்திணை என்பது வினைத்தொகை என்று இளம்பூரணர், நச்சினார்க்கினியர் (தொல். கிளவி. 1), மயிலைநாதர் (நன். 260) முதலியோர் கூறுவர்.

ஐம்பாலாகப் பகுத்தலே எல்லா ஆசிரியர்க்கும் கருத்து ஆவதன்றி ஈண்டு ஒழுக்கம் கருத வேண்டுவது இன்மையானும் அவ்வொழுக்கமும் உயிர் இல்லனவற்றிற்குப் பொருந்தாமையானும் ஈண்டுத் திணை என்பதற்கு அது பொருள் அன்று எனவும் உயர்திணையை உயர்ந்த திணை என இறந்தகால வினைத்தொகையாக விரிக்கின் மரம் நாள்தோறும் உயர்ந்தமை கருதி உயர்மரம் எனவும் கல்வியறிவு நாள்தோறும் உயர்ந்தமை கருதி அதனை உடையார்மேல் ஏற்றி உயர்மக்கள் எனவும் கூறும் வினைத்தொகைபோல உயர்திணை என்பதற்கு உயரும் புடைபெயர்ச்சி வினை காட்சி வகையானும்[233] கருத்து வகையானும் இன்மையின் அது வினைத்தொகை அன்று எனவும் கொள்க. (4)

உயர்திணை முப்பால்

{262} **ஆண்பெண் பலரென முப்பாற் றுயர்திணை.**

*எ-னின், நிறுத்த முறையானே (259) ஐம்பாலுள் சில பாலும் அவற்றிற்கு உரிய திணையும் உணர்த்துதல் நுதலிற்று.*

*இ-ள்: ஆண், பெண், பலர் என்னும் இம்மூன்று பாலினையும் உடைத்து உயர்-திணை எ-று.*

*ஆடவர் என்றல் தொடக்கத்து ஆண்பன்மையும் பெண்டிர் என்றல் தொடக்கத்துப் பெண்பன்மையும் மக்கள் என்றல் தொடக்கத்து இருவர் பன்மையும்* **அடக்கிப்,** *'பலர்' எனப்பட்டது என்க. மேல், "பல" (நூ. 263) என்பதும் அது.* (5)

அஃறிணை இருபால்

263. **ஒன்றே பலவென் றிருபாற் றஃறிணை.**

*எ-னின், இதுவும் அது.*

*இ-ள்: ஒன்றும் பலவும் என்னும் இரண்டு பாலினையும் உடைத்து அஃறிணை எ-று.*

*அஃறிணைக்கண்ணும் சேவல் என்றல் தொடக்கத்து ஆண்பாலும் பெடை என்றல்*

**[233] காட்சி, கருதல், உரை, இன்மை, பொருள், ஒப்பு என்னும் அறுவகை அளவைகளுள் (சிவ. சுப. அள. 1) முதல் இரு அளவைகளையும் இவர் இவ்வாறு குறிப்பிடுகிறார். இவை வடமொழியில் பிரத்தியட்சம், அநுமானம் என்று சொல்லப்படும். காட்சி அளவையை இவர் மீண்டும் (நூ. 384) எடுத்தாளுவார்.**

தொடக்கத்துப் பெண்பாலும் உளவேனும் அவ்வாண்பாலும் பெண்பாலும் உயிர் உள்ளனவற்றுள் சிலவற்றிற்கும் உயிர் இல்லனவற்றிற்கும் இன்மையின் அப்பகுப்பு ஒழித்து, எல்லாவற்றிற்கும் பொருந்த, 'ஒன்று' எனப்பட்டது என்க. (6)

## திணைபால்களுக்குப் புறனடை

{264} **பெண்மைவிட் டாணவா வுவபே டாண்பால்**
**ஆண்மைவிட் டல்ல தவாவுவ பெண்பால்**
**இருமையு மஃறிணை யன்னவு மாகும்.**

எ-னின், திணைபால்கட்கு ஆவதோர் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: பெண் தன்மையினை விட்டு ஆண் தன்மையினை அவாவுவனவாகிய பேடுகள் உயர்திணை ஆண்பாலாம். ஆண் தன்மையினை விட்டுப் பெண் தன்மையினை அவாவுவனவாகிய பேடுகள் உயர்திணைப் பெண்பாலாம். இவ்விரு வகைப் பேடுகளும் உயர்திணை ஆமன்றி அஃறிணையை ஒப்பனவும் ஆம் எ-று.

ஆண் இலக்கணமும் பெண் இலக்கணமும் விரவி, ஒரு வகையேனும் நிரம்பாது நிற்கும் பேட்டினைப் பாற்பொதுமையின் நீக்கி, உயர்திணை ஆண்பாலோடும் பெண்பாலோடும் சேர்த்தமையின் அவ்விலக்கணங்களுள் விட்ட இலக்கணமும் அவாவும் இலக்கணமும் சிறந்தன என்பதூஉம் விடாத இலக்கணமும் அவாவாத இலக்கணமும் உள; அவை அத்துணைச் சிறப்பின அல்ல என்பதூஉம் விடுதலும் அவாவுதலும் இலக்கணை என்பதூஉம் பேட்டு இலக்கணங்களுள் சிறந்தது ஒன்றையே கருதாது சிறவாதனவற்றையும் உடன் கருதியவழி, இருவகைப் பேடும் ஆண், பெண் என்னும் இரண்டனுள் ஒன்றன்பாற் படுதல் கூடாமையின் அப்பாலின ஆம் உயர்திணையும் அன்றி, அஃறிணை இலக்கணம் இன்மையின் அஃறிணையும் அன்றி, உயிர் உள்ளனவற்றுள் ஆண், பெண் என்னும் பகுப்பு இலவாகி நின்ற அஃறிணையை ஒக்கும் என்பதூஉம் பெற்றாம். பேடு, அழிதூஉ, அலி, மகண்மா என்பன ஒரு பொருட் கிளவி. அலி, மகண்மா என்பனவற்றை வேறு கூறுவாரும்[234] உளர்.

> "பெண்ணவா யாணிழந்த பேடி யணியாளோ
> **கண்ணவாத் தக்க**[235] **கலம்**" *(நாலடி 251:2-3)*

எனப் பெண் இலக்கணம் சிறந்தமையின் பெண்பாற் பட்டது. ஆண்பாற் பட்டதற்கும் அஃறிணை ஒத்து நின்றதற்கும் இலக்கியம் வந்தவழிக் காண்க. (7)

---

[234] **வைத்தியநாத தேசிகர் (இல. விள. *165*) இவற்றை வேறாகக் கூறுவார்.**
[235] **இப்பாடலின் முதல் அடியை மட்டும் சங்கர நமச்சிவாயர் எடுத்துக்காட்டுவார். இறுதி அடி சிவஞான முனிவரால் சேர்க்கப்பட்டிருக்கக் கூடும்.**

## சொல் தன்னையும் பொருளையும் உணர்த்துமாறு

{265} **படர்க்கை வினைமுற்று நாமங் குறிப்பிற்**
**பெறப்படுந் திணைபா லனைத்து மேனை**
**இடத்தவற் றொருமைப்* பன்மைப் பாலே.**

எ-னின்[236] நிறுத்த முறையானே (259) மூன்று இடத்தும் சொல் தன்னையும் பொருளையும் உணர்த்துமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: வெளிப்படைச்சொல்லாயும் குறிப்புச்சொல்லாயும் வழக்கின்கண்ணும் செய்யுட்கண்ணும் நிற்கும் படர்க்கை வினைமுற்றுச் சொல்லையும் படர்க்கைப் பெயர்ச்சொல்லையும் முன் குறித்தால் பின் அவ்விரு வகைச் சொல்லும் கருவியாக இருதிணையும் ஐம்பாலும் பெறப்படும்; ஒழிந்த தன்மை, முன்னிலை வினைமுற்றுச் சொல்லையும் தன்மை, முன்னிலைப் பெயர்ச்சொல்லையும் முன் குறித்தால் பின் அந்நால் வகைச் சொல்லும் கருவியாக இருதிணை ஐம்பாலுள் ஒருமைப்பாலும் பன்மைப்பாலும் பெறப்படும் எ-று.

'வினைமுற்று நாமம்' என்பனவற்றையும், 'குறிப்பின்' என்னும் வினையெச்சத்தை-யும், 'பெறப்படும்' என்பதனையும் ஏனை இடத்தும் கூட்டுக.

வ-று: நடந்தான், நடந்தாள், நடந்தார், நடந்தது, நடந்தன எனவும் அவன், அவள், அவர், அது, அவை எனவும் படர்க்கை வினைமுற்றுச் சொல்லும் படர்க்கைப் பெயர்ச்சொல்லும் முன்பு தம்மை உணர்த்திப், பின்பு இருதிணையும் ஐம்பாலும் ஆகிய பொருள்களை உணர்த்தின. நடந்தேன், நடந்தேம் எனவும் யான், யாம் எனவும் நடந்தாய், நடந்தீர் எனவும் நீ, நீர் எனவும் தன்மை வினைமுற்றுச் சொல்லும் **தன்மைப் பெயர்ச்சொல்லும்** முன்னிலை வினைமுற்றுச் சொல்லும் **முன்னிலைப் பெயர்ச்சொல்லும் முன்பு தம்மை உணர்த்திப், பின்பு** இருதிணை ஐம்பாலுள் ஒருமைப்பாலும் பன்மைப்பாலும் உணர்த்தின. பிறவும் அன்ன.

வினைமுற்றை முற் கூறினமையான் அவை,

"இருதிணை மருங்கி னைம்பா லறிய
ஈற்றினின் றிசைக்கும்" (தொல். கிளவி. 10)

விகுதிகளோடு பயின்று வருதலின் இருதிணை ஐம்பாற் பொருள்களை உணர்த்தும் நெறியில் பெயர்களில் சிறந்தன என்பதூஉம், 'குறிப்பின்' என்றமையால் சொல்

[236] **"றொருமை பன்மைப்" என்பது சங்கர நமச்சிவாயர் பாடம்.**

தன்னை உணர்த்தும் என்பதூஉம் தன்னை முன் உணர்த்திப் பொருளைப் பின் உணர்த்தும் என்பதூஉம் ஒலியெழுத்தை உணர்தற்கு வரிவடிவு **ஓர் அறிகுறியாய்** நின்றாற்போலப் பொருளை உணர்தற்குச் சொல் ஒரு குறியாய் நின்றது என்பதூஉம் அக்குறியினைக் குறித்தால் அன்றி இருதிணை ஐம்பாலாகிய பொருட்பேறு இன்று என்பதூஉம், 'பெறப்படும்' என்றமையாற் செவிப்புலனாகிய சொல்லை ஒழிந்து, கட்பொறி மாத்திரையின் இருதிணை ஐம்பாற் பொருள்களை ஒருவன் உணரும் உணர்ச்சி விலங்குணர்ச்சி போலுமன்றி அது பொருட்பேறு ஆகாது என்பதூஉம், 'ஒருமைப் பன்மைப் பாலே' என்றமையால் தன்மை முன்னிலைகளின் ஆண், பெண், பலர், ஒன்று, பல என்னும் பால் விகற்பத்தோடு இருதிணையும் தோன்றா என்பதூஉம் மூவிடங்களின் ஒன்றற்கு உரிய வினைமுற்றும் பெயரும் தம்மையும் பொருளையும் உணர்த்துமாறு இவ்வாறு எனவே இவ்விடங்கட்குப் பொதுவாகிய வினைமுற்றுக்களும் பெயர்களும் பொதுமை நீங்கி, ஓர் இடத்திற்கு உரியவாகி இவ்வாறு தம்மையும் பொருளையும் உணர்த்தும் என்பதூஉம் பெயரெச்சமும் வினை-யெச்சமும் வினைத்தொகையும் பண்புத்தொகையும் குறைச்சொல் ஆதலின் **தம்** பயனிலையாகிய வருமொழியோடு புணர்ந்து பொருள் முற்றி, இம்மூவிட வினை-முற்றுள்ளும் பெயருள்ளும் அடங்குதலின் இவ்வாறு தம்மையும் பொருளையும் உணர்த்தும் என்பதூஉம் இடைச்சொல்லும் உரிச்சொல்லும் பெயர்வினையுள் அடங்குதலின் அவ்வாறு தம்மையும் பொருளையும் உணர்த்தும் என்பதூஉம் இவ்வாறு எல்லாச் சொல்லையும் வினைமுற்றுள்ளும் பெயருள்ளும் அடக்கி, மூவகை இடத்தும் நின்ற சொல், "இருதிணை ஐம்பாற் பொருளையும் தன்னையும்" (நூ. 259) உணர்த்தும் சிறப்புவிதி கூறினார் என்பதூஉம் பெற்றாம்.

"வயிர வூசியும் மயன்வினை யிரும்புஞ்
செயிரறு பொன்னைச் செம்மைசெய் யாணியுந்
தமக்கமை கருவியுந் தாமா மவைபோல்
உரைத்திற முணர்த்தலு முரையது தொழிலே"

என்றார் ஆசிரியர் அகத்தியனாரும் என்க.

இனி இச்சூத்திரத்திற்கு இவ்வாறன்றி, இருதிணை ஐம்பாலைப் பொருளகத்து அறிவித்ததன்றிச் சொல்லகத்து அறியுமாறு கூறினார் எனப் பொருள் கூறின்,[237]

"இருதிணை மருங்கி னைம்பா லறிய
ஈற்றினின் றிசைக்கும் பதினோ ரெழுத்துந்

[237] **வைத்தியநாத தேசிகர் (இல. விள. 167) இவ்வாறு பொருள் கூறுவார்.**

தோற்றந் தாமே வினையொடு வருமே" (தொல். கிளவி. 10)

என ஆசிரியர் தொல்காப்பியனார் கூறியவாறே படர்க்கை வினைமுற்று ஒன்றுமே கூறின் அமையும்; 'படர்க்கை நாமம்' என்றல் மிகைபடக் கூறலாம். 'ஏனை இடத்தவற் றொருமைப் பன்மைப் பாலே' என்றல் தன்மை முன்னிலைகள் ஒருமை, பன்மை மாத்திரையன்றி, இருதிணை ஐம்பாலை விளக்காமையின் மற்றொன்று விரித்தலாம். இவ்வாறன்றி மூவிடங்களின் ஒவ்வொன்றற்கு உரிய முற்றும் பெயருமே இருதிணை ஐம்பாற் பொருளினை விளக்கும்; ஒழிந்தன விளக்கா எனப் பொருள் கூறின் எல்லாச் சொல்லும் மூவகை இடத்தும் நின்று இருதிணை ஐம்பாற் பொருளை விளக்கும் எனக் கூறிய, "ஒருமொழி தொடர்மொழி" (நூ. 259) என்னும் பொதுச் சூத்திரத்தோடு மாறுகொளக் கூறலாம்.

இச்சூத்திரத்துள், 'குறிப்பின்' என்னும் சொல்லை வினையெச்சம் ஆக்காது, குறிப்பினாலும் இருதிணை ஐம்பாலும் விளங்கும் எனப் பொருள் கூறின்[238] வெளிப்-படையும் குறிப்பும் ஆம் சொற்கள் இருதிணை ஐம்பாற் பொருள்களை விளக்கும் நெறியன்றி மூவிடச்சொல்போலக் குறிப்புச்சொல் என வேறு ஒன்று இன்மையானும் ஒருவர் அறிவு தந்தார் என்றால்,

"நுண்ணறி வுடையோர் நூலொடு பழகினும்
பெண்ணறி வென்பது பெரும்பே தைமைத்தே" (இறை. 23 உரை)

என்ப ஆகலின் அறிவு பெண்பாலாற் பெறுதல் கூடாமையின் அதனை ஒழித்து, ஒருவர் என்னும் படர்க்கைப்பெயரும் அதன் பயனிலையாகிய தந்தார் என்னும் படர்க்கைமுற்றும் உயர்திணையினையும் ஆண்பாலினையும் குறிப்பான் விள்க்குதலின் இப்பெயர்வினைகளை ஒழித்துப், 'படர்க்கை வினைமுற்று நாமம்' என்றார் அல்லர் ஆதலானும் சொற்கள் வெளிப்படையானும் குறிப்பினானும் இருதிணை ஐம்பாற் பொருள்களை விளக்குதல் நிறுத்த முறையே, "ஒன்றொழி பொதுச்சொல்" (நூ. 269) என்னும் சூத்திரத்தாற் பிற் கூறுதலானும் ஈண்டும் கூறுதல் கூறியது கூறலாம் (12) ஆதலானும் அது பொருள் அன்று என்க. (8)

மூவிடம்

266. **தன்மை முன்னிலை படர்க்கைமூ விடனே.**

எ-னின், நிறுத்த முறையானே (259) மூவிடம் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

---

[238] **மயிலைநாதரும் (நன். 264) வைத்தியநாத தேசிகரும் (இல. விள. 167) 'குறிப்பின்' என்னும் சொல்லைக் குறிப்பினாலும் என மூன்றன் உருபு ஏற்ற பெயர்ச்சொல்லாக விரித்துப் பொருள் கூறுவர்.**

இ-ள்: மூவிடமாவன தன்மையும் முன்னிலையும் படர்க்கையும் ஆம் எ-று.

வ-று: யான், நீ, அவன் எனவும் வந்தேன், வந்தாய், வந்தான் எனவும் வரும்.

சொல்வானும் கேட்பானும் ஆகிய இருவர் கூட்டத்துப் பிறந்த சொல் அவ்விருவரிடத்து நில்லாது அயலானிடத்தில் படர்தலின் படர்க்கை எனப்பட்டது. (9)

வழக்கு

{267} **இலக்கண முடைய திலக்கணப் போலி**
**மரூஉவென் றாகு மூவகை யியல்பும்**
**இடக்க ரடக்கன் மங்கலங் குழூஉக்குறி**
**எனுமுத் தகுதியோ டாறாம் வழக்கியல்.**

எ-னின், நிறுத்த முறையானே (259) வழக்கு ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: இலக்கணம் உடையது என்றும் இலக்கணப்போலி என்றும் மரூஉ என்றும் வழங்கும் மூவகை இயல்பு வழக்கும் இடக்கர் அடக்கல் என்றும் மங்கலம் என்றும் குழூஉக்குறி என்றும் வழங்கும் மூன்று தகுதி வழக்குடனே கூட அறுவகைப்படும் வழக்கு இலக்கணம் எ-று.

வ-று: நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம், நன்னிலம், தண்ணீர் என்றல் தொடக்கத்தன இலக்கணம் உடையன. இல்முன் என்பதனை முன்றில் என்றும் நகர்ப்புறம் என்பதனைப் புறநகர் என்றும் புறவுலா என்பதனை உலாப்புறம் என்றும் கண்மீ என்பதனை மீகண் என்றும் கோவில் என்பதனைக் கோயில் என்றும் பொதுவில் என்பதனைப் பொதியில் என்றும் வழங்கும் இத்தொடக்கத்தன இலக்கணப்போலி. அருமருந்தன்ன பிள்ளை என்பதனை அருமந்தபிள்ளை என்றும் மலையமானாடு என்பதனை மலாடு என்றும் சோழனாடு என்பதனைச் சோணாடு என்றும் பாண்டியனாடு என்பதனைப் பாண்டிநாடு என்றும் இந்நாடு என்பதனை இந்த நாடு என்றும் ஆதன்றந்தை என்பதனை ஆந்தை என்றும் பூதன்றந்தை என்பதனைப் பூந்தை என்றும் மரவடி என்பதனை மராடி என்றும் குளவாம்பல் என்பதனைக் குளாம்பல் என்றும் யாவர் என்னும் பெயரை யார் என்றும் ஆர் என்றும் யார் என்னும் குறிப்புவினையை (349) ஆர் என்றும் எவன் என்னும் குறிப்புவினையை (350) என் என்றும் என்ன[239] என்றும் ஆற்றூர் என்பதனை ஆறை என்றும் வழங்கும் இத்தொடக்கத்தன மரூஉ.

---

[239] **வினையியல் நூற்பாவின் (நன். 350) உரையோடு ஒப்பிடும் போது, 'என்னை' என்ற பாடம் சிறக்கும்.**

கண் கழீஇ வருதும், கால் கழீஇ வருதும், வாய் பூசி வருதும், "ஆமுன் பகரவீ" (நன். 177), "பவ்வீ" (நன். 178), "புலிநின் றிறந்த நீரல் வீரத்து" (நற். 103:4), "கருமுக மந்தி செம்பி னேற்றை" (நன். 266 மயிலை.) என்றல் தொடக்கத்தன இடக்கர் அடக்கல். செத்தாரைத் துஞ்சினார் என்றும் ஓலையைத் திருமுகம் என்றும் காராட்டை வெள்ளாடு என்றும் இடுகாட்டை நன்காடு என்றும் வழங்கும் இத்தொடக்கத்தன மங்கலம். பொற்கொல்லர் பொன்னைப் பறி என்றும் யானைப்பாகர் ஆடையைக் காரை என்றும் வேடர் கள்ளைச் சொல்விளம்பி என்றும் வழங்கும் இத்தொடக்கத்தன குழூஉக்குறி.

இலக்கணநெறியால் வருவதனை இலக்கணம் உடையது என்றும் இலக்கணம் உடையதன்றிப் படைப்புக் காலத்து இலக்கணம் உடையதோடு ஒருங்கு படைக்கப்பட்டதுபோல வருவதனை இலக்கணப்போலி என்றும் தொன்றுதொட்டதன்றி இடையே இலக்கணம் சிதைந்து மரீஇயதனை மரூஉ என்றும் இம்மூன்றும் தகுதி வழக்குப் போலாது எப்பொருட்கு எச்சொல் அமைந்ததோ அப்பொருளை அச்சொல்லால் கூறுதலின் இயல்பு வழக்கு என்றும், "இடக்க ரென்பது மறைத்துமொழி கிளவி" (வி. மே.) என்ப ஆகலின் இடக்கர் தோன்றாது அதனை மறைத்ததை இடக்கர் அடக்கல் என்றும் இடக்கர்போல் கூறத் தகாதது அன்றேனும் மங்கலம் இல்லதை ஒழித்து, மங்கலமாகக் கூறுவதை மங்கலம் என்றும் ஒவ்வொரு குழுவின் உள்ளோர் யாதானும் ஒரு காரணத்தான் ஒரு பொருளினது சொற்குறியை ஒழித்து, வேறு ஓர் சொற்குறியால் கூறுவதைக் குழூஉக்குறி என்றும் இம்மூன்றும் இப்பொருளை அறிதற்கு அமைந்து கிடந்த இச்சொல்லால் கூறுதல் தகுதி அன்று; வேறு ஓர் சொல்லால் கூறுதல் தகுதி எனக் கருதிக் கூறுதலின் தகுதி வழக்கு என்றும் பெயர் பெற்றன. இலக்கணப்போலியினையும் மரூஉவினையும் வேறு அறிதற்கு சான்றோர் ஆட்சியே காரணம் என்க. அன்றி நிலைமொழி வருமொழிகள் முன் பின்னாக மாறி நிற்பன இலக்கணப்போலி; ஒழிந்த சிதைவு எல்லாம் மரூஉ என்று கோடலும் ஒன்று.

இவ்வறு வகை வழக்கும் திரிசொற்கண்ணும் வருதலின் இயற்சொல்லாகிய உலக வழக்கையும் திரிசொல், திசைச்சொல், வடசொல்லாகிய செய்யுள் வழக்கையும் தொகுத்து, இச்சூத்திரத்தான் வழக்கு எனப்பட்டது என்க. அங்ஙனம் ஆயின் செய்யுள் என வேறு கூறுவது யாது கருதி எனின் இவ் உலக வழக்கும் செய்யுள் வழக்கும் வழக்காய் நில்லாது தொடைப்பட்டமை கருதி என்க. வழக்கு என்பது சொல்நடை

**இனி ஆசிரியர் தொல்காப்பியர் இடக்கர் என்பதனை, "அவையல் கிளவி** (தொல். எச்ச. 46) **எனவும் <அவையல்கிளவியாவது[240] இழிந்தோர் சொல்லும் இழிந்த சொல் ஆதலான் அதனை நன்மக்களிடை மறைத்துக் கூறுக> என்பார், "அவையல் கிளவி மறைத்தனர் கிளத்தல்"** (தொல். எச்ச. 46) **எனவும் மறைத்துக் கூறுங்கால் மேற்றொட்டு மரீஇ வழங்கியதனை மறைத்தலை நீக்குக என்பார், "மறைக்குங் காலை மரீஇய தொரால்"** (தொல். எச்ச. 47) **எனவும் கூறுவர்.**

**<மேற்றொட்டு[241] மரீஇ வழங்கியது, "ஆப்பிநீ ரெங்கும் தெளித்துச் சிறு-காலை"** (தொல். எச்ச. 47 நச்.), **யானையிலண்டம், யாட்டுப்பிழுக்கை என வரும். தம் பொருள்மேல் நில்லாது அணி குறித்து நின்ற, "பகல்கான் றெழுதரும் பல்கதிர்ப் பருதி"** (பெரும்பாண். 2*) **என்றாற் போல்வன தம் பொருளை உணர்த்துங்கால் மறைத்துக் கூறப்படுமாறும் உணர்க.>** (10)

செய்யுள்

268. **பல்வகைத் தாதுவி னுயிர்க்குடல் போற்பல**
**சொல்லாற் பொருட்கிட னாக வுணர்வினின்**
**வல்லோ ரணிபெறச் செய்வன செய்யுள்.**

எ-னின், நிறுத்த முறையானே (259) செய்யுள் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: தோல், இரத்தம், இறைச்சி, மேதை, எலும்பு, மச்சை, சுவேதநீர் என்னும் எழுவகைத் தாதுக்களினாலும் உயிர்க்கு இடனாக இயற்றப்பட்ட உடம்புபோல இயற்-சொல், திரிசொல், திசைச்சொல், வடசொல் என்னும் நால்வகைச்[242] சொற்களால் பொருட்கு இடனாகக் கல்வியறிவினால் செய்யுள் இயற்ற வல்லோர் அலங்காரம் பெற இயற்றுவன செய்யுளாம் எ-று.

ஈண்டுப் பொருள் என்றது அகமும் புறமும் ஆகிய பொருள்களை. இங்ஙனம் கூறவே எழுத்தால் இயன்றது சொல் ஆதலின் எழுத்து, சொல், பொருள், அணி என்னும் நான்கினும் நடப்பது யாப்பு என்பதாயிற்று.

"வருங்குன்ற மொன்றுரித் தோன்றில்லை யம்பல வன்மலயத்
திருங்குன்ற வாண ரிளங்கொடி யேயிட ரெய்தலெம்மூர்ப்

---

[240] நச்சினார்க்கினியர் (தொல். எச்ச. 46) உரை.

[241] நச்சினார்க்கினியர் (தொல். எச்ச. 47) உரை.

[242] 'பல சொல்' என்பதற்கு மயிலைநாதர் (நன். 267) நயம்பட உரை கூறுவார்.

பருங்குன்ற மாளிகை நுண்கள பத்தொளி பாயநும்மூர்க்
கருங்குன்றம் வெண்ணிறக் கஞ்சுக மேய்க்குங் கனங்குழையே" (திருக். 15*),

என்னும் இக்கட்டளைக் கலித்துறை இடம் அணித்து என்னும் பொருட்கு இடனாகித் தன்மை உவமை உருவக அணிகளும்[243] பிறவும் உடைத்தாய் வருதல் காண்க. பிறவும் அன்ன. (11)

குறிப்பும் வெளிப்படையும்

{{269}} **ஒன்றொழி பொதுச்சொல் விகாரந் தகுதி**
**ஆகு பெயரன் மொழிவினைக் குறிப்பே**
**முதறொகை குறிப்போ டின்ன பிறவுங்**
**குறிப்பிற் றருமொழி யல்லன வெளிப்படை.**

எ-னின், நிறுத்த முறையானே (259) வெளிப்படையும் குறிப்பும் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: இருதிணை ஆண், பெணுள் ஒன்றனை ஒழிக்கும் பொதுச்சொல்லும் வலித்தல் முதலிய ஒன்பது விகாரச்சொல்லும் மூவகைத் தகுதி வழக்குச் சொல்லும் ஆகுபெயர்ச் சொல்லும் அன்மொழித்தொகைச் சொல்லும் வினைக்குறிப்புச் சொல்லும் முதற்குறிப்புச் சொல்லும் தொகைக்குறிப்புச் சொல்லும் இம் முதல், தொகை அல்லாத பலவாற்றானும் வரும் குறிப்புச்சொல்லும் இவை போல்வன பிறவும் குறிப்பினான் இருதிணை ஐம்பாற் பொருளைத் தரும் சொற்களாம்; இவை அல்லன எல்லாம் வெளிப்படையான் அப்பொருள்களைத் தரும் சொற்களாம் எ-று.

வெளிப்படை அல்லன எல்லாம் குறிப்புச்சொல் ஆயினும் அக்குறிப்புச்சொல்லுள்ளும் வேற்றுமை தோன்றற்கு ஏகாரம் இடையிட்டுக் கூறினார் என்க.

வ-று: ஆயிரம் மக்கள் பொருதார், பெருந்தேவி பொறை உயிர்த்த கட்டிற்கீழ் நால்வர் மக்கள் இருந்தார் என்புழி மக்கள் என்னும் பொதுப்பெயரும் பொருதார், இருந்தார் என்னும் பொதுவினைகளும் உயர்திணை ஆண்பால், பெண்பாலுள் ஒன்றனை ஒழித்து ஒன்றனைக் குறிப்பான் உணர்த்தின. இப்பெற்றம் உழவு ஒழிந்தன, இப்பெற்றம் அறத்திற்கே கறக்கும் என்புழிப் பெற்றம் என்னும் பொதுப்பெயரும் ஒழிந்தன, கறக்கும் என்னும் பொதுவினைகளும் அஃறிணை ஆண்பால், பெண்பாலுள் ஒன்றனை ஒழித்து ஒன்றனைக் குறிப்பான் உணர்த்தின. இவற்றுள் பொருதார், கறக்கும்

[243] **உவமைக்கும் பொருளுக்கும் ஒற்றுமை தோன்றக் கூறுவது (வீர. 150; தண்டி. 36; மாறன். 114) உருவக அணி. மற்ற அணிகள் இரண்டும் மேலே (நூ. 197) விளக்கப்பட்டன.**

என்னும் வினைகள் விகுதி மாத்திரையின் பொதுவினை ஆயின. "குறுத்தாட் பூதம்" (யா. வி. 95), "மரைமலர் குலிகமொ டிகலிய வங்கை" (நன். 268 மயிலை.) என்புழி இவ்விகாரச் சொற்கள் குறுந்தாள், தாமரை, இங்குலிகம் என்பனவற்றைக் குறிப்பான் உணர்த்தின. கால் கழீஇ வருதும், நன்காடு, பறி என்புழி இத்தகுதிகள் தத்தம் பொருள்களைக் குறிப்பால் உணர்த்தின. புளித் தின்றான், கடுத் தின்றான் என்புழி இவ்வாகுபெயர்கள் அவற்றின் பழத்தினைக் குறிப்பால் உணர்த்தின. "பொற்றொடி தந்த புனைமடல்" (நன். 268 மயிலை.), "அறற்கூந்தற் கில்லை யருள்" (நன். 268 மயிலை.) என்புழி இவ் அன்மொழித்தொகைகள் அவற்றை உடைய மகளிரைக் குறிப்பால் உணர்த்தின.

> "சொலல்வல்லன் சோர்வில னஞ்சா னவனை
> இகல்வெல்லல் யார்க்கு மரிது" (குறள். 647)

என்புழி வல்லன், இலன் என்னும் சொற்கள் பெயர்ப்பொருளை ஒழித்து வினைக்குறிப்புப் பொருளைக் குறிப்பால் உணர்த்தின. "அறத்தா றிதுவென வெள்ளைக் கிழிபு" (யா. கா. 15) என்புழி இம்முதற்குறிப்புச் சொற்கள்,

> "அறத்தா றிதுவென வேண்டா சிவிகை
> பொறுத்தானோ டூர்ந்தா னிடை" (குறள். 37)

என்னும் பாட்டைக் குறிப்பால் உணர்த்தின.

> "அலங்குளைப் புரவி யைவரொடு சினைஇ
> நிலந்தலைக் கொண்ட" (புறம். 2:13-14)

என்புழி ஐவர் என்னும் தொகைக்குறிப்புச் சொல் பாண்டவரைக் குறிப்பால் உணர்த்திற்று.

> "ஒன்றி லிரண்டாய்ந்து மூன்றடக்கி நான்கினால்
> வென்று களங்கொண்ட வேல்வேந்தே - சென்றுலாம்
> ஆழ்கடல்சூழ் வையகத்து ளைந்துவென் றாறகற்றி
> ஏழ்கடிந் தின்புற் றிரு" (பு. வெ. 225*)

என்பதும் அது.

இனிப் பலவாற்றானும் வரும் குறிப்புச்சொற்கள் பொருள்களைக் குறிப்பால் உணர்த்துமாறு: கற் கறித்து நன்கு அட்டாய், நீயிர் பெரிதும் அறிதிர், பறவாக் குளவி, பாயா வேங்கை,

"உவர்க்கட லன்ன செல்வரு முளரே
கிணற்றூற் றன்ன நீயுமா ருளையே
செல்வர்தம் பெருந்திரு வுறுக பல்பகல்
நீவா ழியரோ நெடிதே யீயாச்
சிறுவிலைக் காலத் தாயினும்
உறுபொரு டந்தெஞ் சொற்கொள் வோயே" (நன். 268* மயிலை.),

"பல்சான் றீரே பல்சான் றீரே
கயன்முள் ளன்ன நரைமுதிர் திரைகவுட்
பயனின் மூப்பிற் பல்சான் றீரே" (புறம். 195:1-3),

"அறனோ மற்றிது விறன்மாண் குடுமி
இன்னா வாகப் பிறர்தம் மண்கொண்
டினிய செய்திநின் னார்வலர் முகத்தே" (புறம். 12:3-5*),

"நீயுந் தவறிலை நின்னைப் புறங்கடைப்
போதர விட்ட நுமருந் தவறிலர்
நிறையழி கொல்யானை நீர்க்குவிட் டாங்குப்
பறையறைந் தல்லது செல்லற்க வென்னா
இறையே தவறுடை யான்" (கலி. 56:30-34),

"மையார் தடங்கண் மயிலன்னாய் தீத்தீண்டு
கையார் பிரிவித்தல் காண்" (திணை. நூற். 5:3-4),

"சோலையை யோரெழுத்தா லென்சொல்லுந் தொக்கதன்மேல்
நீலப்பே ரெவ்வெழுத்தி னானிரம்பும் - மாலைக்
குடைவேந்தன் சென்னி குலநதியின் பேரைக்
கடைசேர்ந்த வோரெழுத்தாற் காண்" (நன். 268 மயிலை.)

கா, காவி, காவிரி என்பது பொருள். இஃது எழுத்துப் பெருக்கம்.

"ஆற்றின்பே ரீற்றி னெழுத்தொழிய வின்பம்சேர்
நாற்கால தாமீற் றுயிர்நடப்ப - ஏற்புடைய
உண்பயனா மாங்கதனி னீறொழிந்தா லோதுநருக்
கின்பஞ்சேர் செய்யுளா மின்று" (நன். 268* மயிலை.)

பாலாறு, பாலா, பால், பா என்பது பொருள். இஃது எழுத்துச் சுருக்கம்.

"வாம மணிமே கலையார் மயிர்குறுகின்
ஆமவர் பெய்யு மணிகுழை - ஏம
மயிர்நிறுவி மற்றதற்கோர் புள்ளி கொடுப்பின்
செயிர்தீர் மரமாகுஞ் சென்று" (நன். 268 மயிலை.)

கூழை, குழை, ஓதி, ஒதி என்பது பொருள். இது மாத்திரைச் சுருக்கம்.

"பூமேலா ளாரென்பார் பூம்போர்வை யென்செய்யும்
தீமேற் படிற்கொடுத்தாற் கொள்வதெவன் - ஆமே
நலந்திகழுஞ் செங்கை நயதீர னெங்கோன்
சிலம்பன் றிருவேங் கடன்" (நன். 268* மயிலை.)

இது வினா உத்தரம்.

"நீத்தொழிந்த வாறைந் தடக்கிபின் னிச்சயமே
வாய்த்தமைந்த வாயில்பெண் ணானையும் - கூத்தற்கு
வாளேறோ டோசை விளைநில மிவ்வல்லாற்
கேளா யுடன்வருவ தில்" (நன். 268 மயிலை.)

நிலையாமை கடைப்பிடி, சிவபுண்ணியம் செய் என்பது பொருள். இத்தொடக்கத்தன எல்லாம் குறிப்பினால் தத்தம் பொருள்களை உணர்த்தின.

'இன்ன பிறவும்' என்றமையானே தெரிநிலைவினை, குறிப்பு வினையால் அணையும் பெயரும் வினைமுற்றானும் குறிப்புமுற்றானும் வரும் எச்சங்களும் செய்யும் என்னும் முற்றும் அன்று, இன்று என்னும் வினையெச்சக் குறிப்பும்,

"கேட்குந போலவுங் கிளக்குந போலவும்
இயங்குந போலவு மியற்றுந போலவும்
அஃறிணை மருங்கினு மறையப் படு"தல் (நன். 409)

முதலிய இலக்கணைகளும் இவை போல்வன பிறவும் கொள்க.

இவ்வாறன்றி நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம் என்றல் தொடக்கத்தன எல்லாம் வெளிப்படையில் பொருள் உணர்த்தின.

வடநூலார் சொற்பொருளை வாச்சியம், வியங்கியம், இலக்கணை என மூன்று எனவும் இலக்கணையை வியங்கியத்துள் அடக்கி இரண்டு எனவும் கூறுப. இவற்றுள் வாச்சியம் என்பது வெளிப்படை; வியங்கியம் என்பது குறிப்பு; இலக்கணை[244] என்பது ஒரு பொருளினது இலக்கணத்தை மற்றொரு பொருட்குத் தந்துரைப்பது. அது விட்ட இலக்கணை, விடாத இலக்கணை, விட்டும் விடாத இலக்கணை என மூவகைப்படும். அவை வருமாறு:

"சென்றதுகொல் போந்ததுகொல் செவ்வி பெறுந்துணையும்
நின்றதுகொ னேர்மருங்கிற் கையூன்றி - முன்றின்
முழங்குங் கடாயானை மொய்ம்மலர்த்தார் மாறற்
குழந்துபின் சென்றவென் னெஞ்சு" (வி. மே.)

என்புழி மருங்கும் கையும் ஊன்றுதலும் முதலிய இலக்கணங்கள் நெஞ்சிற்கு இன்மையின் விட்ட இலக்கணை. கங்கையின்கண் இடைச்சேரி, புளித் தின்றான் என்புழி இடைச்சேரி கங்கைக்கரைக்கண் இருத்தலும் புளியினது பழத்தைத் தின்றலும் உண்மையின் விடாத இலக்கணை.

"பாயிருள் பருகிப்
பகல்கான் றெழுதரும் பல்கதிர்ப் பருதி" (பெரும்பாண். 1-2*)

என்புழி இருளைப் பருகுதலும் பகலைக் காலுதலும் பருதிக்கு இன்மையானும் இருளைப் போக்குதலும் பகலைத் தருதலும் அதற்கு உண்மையானும் விட்டும் விடாத இலக்கணை. இவையும் குறிப்பினுள் அடங்கும் ஆதலின், "வெளிப்படை குறிப்பின் விரிப்பது சொல்லே" (நூ. 259) எனத் தொகுத்தும் இவ்வாறு வகுத்தும் கூறினார் என்க. (12)

### சொல்லின் வகை

{270} **அதுவே,**
**இயற்சொற் றிரிசொ லியல்பிற் பெயர்வினை**
**எனவிரண் டாகு மிடையுரி யடுத்து**
**நான்குமாந் திசைவட சொலணு* காவழி.**

---

[244] "இலக்கணையாவது பெயராக வினையாக நிற்கும் சொற்கள் தத்தம் பொருளை உணர்த்தாது, பொருளின் சம்பந்தப் பொருளையும் தாற்பரியப் பொருளையும் அறிவித்தல். சக்கிய சம்பந்தத்தால் இலக்கணை என்றார்." என்று சுப்பிரமணிய தீக்கிதர் (பி. வி. 47) இதனை விளக்குவார்.

எ-னின்[245] மேலைச் சூத்திரங்காறும் (259-269) சொல்லாவது இஃது எனக் காட்டக் கண்ட சொல் இத்துணையாம் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: மேற் காட்டிய சொல் இயற்சொல், திரிசொல் என்னும் இயல்பினை உடைய பெயர்ச்சொல்லும் வினைச்சொல்லும் என இரண்டு ஆம். இவற்றுடன் இடைச்சொல்லும் உரிச்சொல்லும் அடுத்து நான்கும் ஆம் இவற்றுடன் திசைச்-சொல்லும் வடசொல்லும் அணுகாவிடத்து எ-று.

"செய்யுட் குரியன வுரிச்சொல்" (நூ. 442) எனக் கூறுதலானும் வரும் சூத்திரம், "செந்தமி ழாகி" (நூ. 271) எனக் கூறுதலானும், 'இயற்சொல்' என்றதைப் பெயர், வினை, இடையினும், 'திரிசொல்' என்றதை எல்லாவற்றினும் பிரித்து உரைத்துக்-கொள்க. எனவே, 'அதுவே' எனச் சுட்டிய சொல் பெயர் இயற்சொல், பெயர்த் திரிசொல், வினை இயற்சொல், வினைத் திரிசொல், இடை இயற்சொல், இடைத் திரிசொல், உரித் திரிசொல் என எழுவகைப்படும் என்பதூஉம் திசைச்சொல்லும் வடசொல்லும் அணுகியவழி ஒன்பது வகைப்படும் என்பதூஉம் பெற்றாம். உரி இயற்சொல்[246] இன்றாகவும் உரித் திரிசொல் என்றது இயற்சொல், திரிசொல் என்னும் பொது இலக்கணம் நோக்கி என்க.

இச்சொற்களை ஒருங்கு ஓதாது, முறை தெரித்து ஓதியது என்னை எனின் ஒருவன், ஒருத்தி என்ற மாத்திரையின் அவர் கை, கால் முதலிய அகத்துறுப்பும் ஆடை, அணி முதலிய புறத்துறுப்பும் அடங்குதல்போலப் பெயர், வினை என்ற மாத்திரையின் அவற்றின் அகத்துறுப்பாகிய விகுதி, உருபு முதலிய இடைச்சொற்-களும் புறத்துறுப்பாகிய வேற்றுமை உருபு முதலிய இடைச்சொற்களும் அடங்கு-தலானும் உரிச்சொல், "பல்வகைப் பண்பும் பகர்பெய ராகி" (நூ. 442) என்ப ஆகலின் பெயருள் அடங்குதலானும் திசைச்சொல்லும் வடசொல்லும் இவற்றுள் யாதானும் ஒன்றாய் அடங்குதலானும் இவற்றை அடக்கி நின்ற தலைமையும் சிறப்பும் தோன்றப், 'பெயர்வினை எனவிரண் டாகும்' என வரையறுத்தும் பெயர்வினைகளுள் அடங்கி நின்றவற்றையே வேறுபாடு அறிதற்கு வேறுபடுத்துத் தொகை கோடலின் இடை, உரிக்கு அத்தலைமையும் சிறப்பும் இன்று என்பது தோன்ற, 'அடுத்து

---

[245] "சொல்லணு காவழி" என்பது சங்கர நமச்சிவாயர் பாடம்.

[246] உரி இயற்சொல் இல்லை என்னும் சங்கர நமச்சிவாயர் கருத்துக்கு மாறாக மயிலை-நாதரும் (நன். 269) வைத்தியநாத தேசிகரும் (இல. விள. 171) உரி இயற்சொல் உண்டு என்றனர்.

நான்குமாம்' என்றும் கொடுந்தமிழ் முதலிய சொல் செந்தமிழோடு விராயவழி அவற்றைத் திசைச்சொல் என்றும் ஆரியச்சொல் தமிழ்நடை பெற்றுச் செந்தமிழோடு விராயவழி அதனை வடசொல் என்றும் தமிழோடு தழுவப்படும் ஆயினும் செந்தமிழ்ச் சொல்லோடு தொகை கோடல் ஒருதலை அன்று என்பது தோன்ற, 'அணுகாவழி' என்றும் முறை தெரித்து ஓதினார் என்க.

வடக்கும் ஒரு திசை அன்றோ? திசைச்சொல்லன்றி வடசொல் என வேறு கூறுவது என்னை எனின் தமிழ்நாட்டிற்கு வடதிசைக்கண் பதினெண் மொழிகளுள் ஆரியம் முதலிய பல மொழியும் உளவேனும் தென்றமிழ்க்கு எதிரியது கடவுட் சொல்லாகிய ஆரியம் ஒன்றுமே என்பது தோன்ற, அவற்றுள் தமிழ்நடை பெற்றதை வடசொல் என்றும் ஏனையவற்றுள் தமிழ்நடை பெற்றதைத் திசைச்சொல் என்றும் சான்றோரான் நியமிக்கப்பட்டன என்க. <**அன்றியும்[247] ஆரியச்சொல் எல்லாத் தேயத்திற்கும் விண்ணுலகம் முதலியவற்றிற்கும் பொது ஆகலான் அவ்வாரியச்சொல் தமிழ்நடை பெற்றதைத் திசைச்சொல் என்றல் கூடாது எனக் கோடலும் ஆம். அங்ஙனம் ஆயின் வடசொல் என்றது என்னை எனின் ஆண்டுப் பயிற்சி மிகுதிபற்றி எனக் கொள்க.**>

இச்சொற்களைப் பெயர் முதலியவாக வைத்தது என்னை எனின் பெயர்ச்சொல் பொருளை விளக்குதலானும் வினைச்சொல் பொருளது **புடைபெயர்ச்சியை** விளக்குதலானும் இடைச்சொல் <**பொருளையும்[248] பொருளது புடைபெயர்ச்சியையும் தம்மால் அன்றித் தத்தம் குறிப்பான் விளக்குதலின் பெயர்ச்சொல் வினைச்சொற்களும் ஆகாது அவற்றின் வேறும் ஆகாது இடை நிகரனவாய் நிற்றலானும்**> **உரிச்சொல் பொருட்பண்பாகிய இசை, குறிப்பு, பண்பு மூன்றனையும் விளக்கிப் பொருட்கு உரிமை பூண்டு நிற்றலானும்** திசைச்சொல் கொடுந்தமிழ் மொழியாயும் அன்னிய மொழியாயும் வருதலானும் வடசொல் அன்னிய மொழியேயாய் வருதலானும் இம்முறை வைக்கப்பட்டன என்க.

"சொல்லெனப் படுப பெயரே வினையென்
றாயிரண் டென்ப வறிந்திசி னோரே" (தொல். பெயர். 4)

"இடைச்சொற் கிளவியு முரிச்சொற் கிளவியும்
அவற்றுவழி மருங்கிற் றோன்று மென்ப" (தொல். பெயர். 5)

---

**[247] இப்பகுதி மயிலைநாதர் (நன். 273) உரையைத் தழுவியது.**

**[248] தொல்காப்பியச் சூத்திர விருத்தி (பக். 65).**

என்றார் ஆசிரியர் தொல்காப்பியனாரும் என்க. (13)

## இயற்சொல்

271. **செந்தமி ழாகித் திரியா தியார்க்குந்
தம்பொருள் விளக்குந் தன்மைய வியற்சொல்.**

*எ-னின்,* மேலைச் சூத்திரத்து நிறுத்த முறையானே (270) இயற்சொல் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

*இ-ள்:* செந்தமிழ் நிலத்து மொழியாகி அந்நிலத்து மொழியுள் மேற் கூறப்படும் திரிசொல் போலாது, கற்றார்க்கும் கல்லாதார்க்கும் ஒப்பத் தம் பொருளை விளக்கும் தன்மையினை உடைய உலக வழக்கு இயற்சொல்லாம் எ-று.

'யார்க்கும்' என்றதனால் உலக வழக்கு என்பது பெற்றாம்.

*வ-று:* மண், பொன் என்றல் தொடக்கத்தன பெயர் இயற்சொல். நடந்தான், வந்தான் என்றல் தொடக்கத்தன வினை இயற்சொல். அவனை, அவனால் என்றல் தொடக்கத்து வரும் வேற்றுமை உருபு முதலியன இடை இயற்சொல்.

செந்தமிழ் நிலமாவது யாது எனின்,

"சந்தனப் பொதியச் செந்தமிழ் முனியும்
சவுந்தர பாண்டிய னெனுந்தமிழ் நாடனும்
சங்கப் புலவருந் தழைத்தினி திருக்கும்
மங்கலப் பாண்டி வளநா டென்ப" (வி. மே.)

இவ்வாறன்றிச் செந்தமிழ் நிலம் வைகையாற்றின் வடக்கு எனக் கூறுவாரும்[249] உளர். கொடுந்தமிழ் நிலத்துப் புனல்நாடு எனப்படுவது சோணாடு ஆதலானும் பாண்டியனையே தமிழ்நாடன் எனச் சான்றோர் கூறுதலானும் அஃது உரை அன்று என்க. (14)

---

[249] **தெய்வச்சிலையார் தவிர்ந்த தொல்காப்பிய உரையாசிரியர்கள் (தொல். எச்ச. 2), குணசாகரர் (யா. கா. 57), மயிலைநாதர் (நன். 272), வைத்தியநாத தேசிகர் (இல. விள. 172) முதலியோர் செந்தமிழ் நிலம் வைகையாற்றின் வடக்கு என்று கூறுவர்.**

**தெய்வச்சிலையார், "வேங்கட மலையின் தெற்கும் குமரியின் வடக்கும் குணகடலின் மேற்கும் குடகடலின் கிழக்கும் ஆகிய நிலம் செந்தமிழ் நிலம் என்று உரைப்ப." என்னும் ஒருசார் ஆசிரியர் கருத்தை எடுத்துக்காட்டுவார்.**

## திரிசொல்

**272. ஒருபொருள் குறித்த பலசொல் லாகியும்
பலபொருள் குறித்த வொருசொல் லாகியும்
அரிதுணர் பொருளன திரிசொல் லாகும்.**

எ-னின், நிறுத்த முறையானே (270) திரிசொல் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: ஒரு பொருளைக் கருதிய பல சொல்லாகியும் பல பொருளைக் கருதிய ஒரு சொல்லாகியும் கற்றால் உணரும் பொருளவாய் வருவன திரிசொல் ஆம் எ-று.

'அரிதுணர் பொருளன' என்றமையான் ஒரு பொருள் குறித்த பல சொல்லுள்ளும் பல பொருள் குறித்த ஒரு சொல்லுள்ளும் வரும் இயற்சொல் ஒழியக் கொள்க.

வ-று: கிள்ளை, சுகம், தத்தை என்றல் தொடக்கத்தன ஒரு பொருள் குறித்த பல பெயர்த் திரிசொல். "யானையும் கோழியும் சங்கும் வாரணம்" (திவா. தொகுதி 11) என்றல் தொடக்கத்தன பல பொருள் குறித்த ஒரு பெயர்த் திரிசொல். படர்ந்தான், சென்றான் என்றல் தொடக்கத்தன ஒரு பொருள் குறித்த பல வினைத் திரிசொல். வரைந்தான், ஆர்த்தான் என்றல் தொடக்கத்தன பல பொருள் குறித்த ஒரு வினைத் திரிசொல். சேறும், வருதும் என்றல் தொடக்கத்து விகுதிகள் ஒரு பொருள் குறித்த பல இடைத் திரிசொல். "கொல்லே யைய மசைநிலைக் கூற்றே" (நன். 435) என்றல் தொடக்கத்தன பல பொருள் குறித்த ஓர் இடைத் திரிசொல். "சால வுறுதவ நனிகூர் கழிமிகல்" (நன். 456) என்றல் தொடக்கத்தன ஒரு பொருள் குறித்த பல உரித் திரிசொல். "கடியென் கிளவி காப்பே கூர்மை" (நன். 457) என்றல் தொடக்கத்தன பல பொருள் குறித்த ஓர் உரித் திரிசொல். திசைச்சொல்லும் வடசொல்லும் ஒரு பொருள், பல பொருள் என்னும் விகற்பத்தான் வந்தனவேல் காண்க.

ஈண்டு இயற்சொல், திரிசொல் என்றது அவற்றின் எழுத்துக்கள் திரியாமையும் திரிந்தமையும் கருதி[250] அன்று; வானரத்தின் முகம் தன் இயல்பாய் இருந்ததேனும் நரர்முகச் செவ்விக்கு மறுதலைப்பட்டமை கருதி வலிமுகம் எனப்பட்டதுபோலக் கல்வி ஏதுவான் அன்றி இயல்பாகத் தம் பொருளை உணர நிற்றலின் இயற்சொல் என்றும் அவ்வியல்பிற்கு மறுதலைப்பட்டுக் கல்வி ஏதுவால் தம் பொருளை உணர நிற்றலின் திரிசொல் என்றும் கூறப்பட்டன என்க. (15)

---

[250] **தொல்காப்பிய உரையாசிரியர்களும் (தொல். எச்ச. 3) மயிலைநாதரும் (நன். 271) வைத்தியநாத தேசிகரும் (இல. விள. 173) இவ்வாறு கருதுவர்.**

## திசைச்சொல்

**273. செந்தமிழ் நிலஞ்சேர் பன்னிரு நிலத்தினும்
ஒன்பதிற் றிரண்டினிற் றமிழொழி நிலத்தினுந்
தங்குறிப் பினவே திசைச்சொ லென்ப.**

எ-னின், நிறுத்த முறையானே (270) இயற்சொல், திரிசொல் என்றவற்றின் பின் நின்ற அவ்வியல்பினவாய பெயர் வினை இடை உரிகளை இவ்வியலுள், "இடுகுறி காரணம்" (நூ. 275) என்னும் சூத்திரம் தொட்டு இவ்வதிகாரத்து ஐந்து இயலானும் உணர்த்த நிறீஇ, ஒழிந்த திசை வடசொற்களுள் திசைச்சொல் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: செந்தமிழ் நிலத்தைச் சேர்ந்த பன்னிரண்டு கொடுந்தமிழ் நிலத்தின்கண்ணும் பதினெண் மொழியுள் தமிழும் மேற் கூறும் வடசொற்குக் காரணமாகிய ஆரிய மொழியும் ஒழிந்த பதினாறு மொழியும் வழங்கும் பதினாறு நிலத்தின்கண்ணும் உள்ளோர் தம் குறிப்பினவாய்ச் செந்தமிழோர் குறிப்பினவன்றி, அத்திசைகளினின்றும் செந்தமிழ் நிலத்து வந்து வழங்குவன திசைச்சொல் என்று கூறுவர் புலவர் எ-று.

'செந்தமிழ்' என்றமையால் கொடுந்தமிழ் என்பதூஉம் ஆரியத்தின் காரியமாய வடசொல்லை (146) வேறு கூறுதலின் தமிழ் ஒழி நிலம் பதினாறு[251] என்பதூஉம் கற்றோரையும் மற்றோரையும் தழீஇத், 'தங்குறிப்பின' எனப் பொதுமையின் கூறினமையின் இத்திசைச்சொற்கள் அந்நிலத்தோர்க்கு இயற்சொல்லாய்ச் செந்தமிழோர்க்கு அவ்வாறு குறிக்கப்படாத திரிசொல்லாய் நிற்கும் என்பதூஉம் பெற்றாம்.

கொடுந்தமிழ் நிலம் பன்னிரண்டாவன:

"தென்பாண்டி குட்டங் குடங்கற்கா வேண்பூழி
பன்றி யருவா வதன்வடக்கு - நன்றாய
சீத மலாடு புனனாடு செந்தமிழ்சேர்
ஏதமில் பன்னிருநாட் டெண்" (யா. கா. 57 உரை)

என்பனவாம். இவற்றுள் செந்தமிழ்ப் பாண்டிநாட்டின் தென்திசைக் கண்ணதாகிய தென்பாண்டிநாட்டார் ஆவினைப் பெற்றம் என்றும் சோற்றைச் சொன்றி என்றும் குட்டநாட்டார் தாயைத் தள்ளை என்றும் குடநாட்டார் தந்தையை அச்சன் என்றும்

[251] தமிழ் ஒழி நிலம் பதினாறு என்பது சங்கர நமச்சிவாயர் கருத்து. மயிலைநாதரும் (நன். 272) வைத்தியநாத தேசிகரும் (இல. விள. 174) பதினேழு என்று கூறுவர்.

கற்காநாட்டார் வஞ்சரைக் கையர் என்றும் வேணாட்டார் தோட்டத்தைக் கிழார் என்றும் பூழிநாட்டார் சிறுகுளத்தைப் பாழி என்றும் அருவாநாட்டார் செறுவைச் செய் என்றும் சிறுகுளத்தைக் கேணி என்றும் அருவா வடதலையார் புளியை எகின் என்றும் சீதநாட்டார் தோழனை எலுவன் என்றும் தோழியை இகுளை என்றும் வழங்குவர். இவை முதலியனவும் தமிழ் ஒழிந்த பதினாறு நிலத்து மொழிகளுள் ஏற்பனவும் செந்தமிழோடு விரவி வருதல் காண்க. (16)

### வடசொல்

274. **பொதுவெழுத் தானுஞ் சிறப்பெழுத் தானும்**
**ஈரெழுத் தானு மியைவன வடசொல்.**

எ-னின், வடசொல் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: ஆரியத்திற்கும் தமிழிற்கும் பொதுவெழுத்தானும் ஆரியத்திற்கே உரிய சிறப்பெழுத்துத் திரிந்த எழுத்தானும் இவ்விரண்டினானும் செந்தமிழ்ச் சொல்லை ஒப்பனவாகி வடதிசைக்கணின்றும் செந்தமிழ் நிலத்து வந்து வழங்குவன வட-சொல்லாம் எ-று.

பதவியலுள், "பொதுவெழுத் தொழிந்தநா லேழுந் திரியும்" (நூ. 146) எனக் கூறினமையின் சிறப்பெழுத்துத் திரிந்த எழுத்தானும் என்பது பெற்றாம்.

அவ்வடசொற்கு ஆரியச் சிறப்பெழுத்துத் திரிந்த எழுத்து ஆதிகாரணமாயும் அச்சிறப்பெழுத்து அநாதிகாரணமாயும் நிற்றலின், 'சிறப்பெழுத் தானும்' என்றார். அது பருத்தியான் இயன்ற படாம் என்றாற் போலும்.

ஆரியச்சொல் சிதைந்து வடசொல் ஆதலின் இவை சொல்லால் செந்தமிழ்ச் சொல்லை ஒவ்வாமை கருதி எழுத்தான் ஒக்கும் என்பார் எழுத்தான் இயைவன என்றார்.

வ-று: அமலம், உருவம், கமலம், காரணம், காரியம் என்றல் தொடக்கத்தன பொது-வெழுத்தான் இயைந்தன. சுகி, போகி, சுத்தி என்றல் தொடக்கத்தன சிறப்பெழுத்தான் இயைந்தன. அரன், அரி, கடினம், சலம் என்றல் தொடக்கத்தன ஈரெழுத்தானும் இயைந்தன.

அரன் என்புழித் தமிழின் சிறப்பாகிய னகரவீறு பதவியலுள், "உவ்வு மாம்பிற" (நூ. 149) என்றமையான் அமைந்தமையின் ஈண்டு விதந்து கூறாராயினார். பிறவும் அன்ன.

"வடசொற் கிளவி வடவெழுத் தொரீஇ
எழுத்தொடு புணர்ந்த சொல்லா கும்மே" *(தொல். எச்ச. 5)*

"சிதைந்தன வரினு மியைந்தன வரையார்" *(தொல். எச்ச. 6)*

என்றார் ஆசிரியர் தொல்காப்பியனாரும் என்க. (17)

## பெயரின் பொது இலக்கணம்

{275} **இடுகுறி காரண மரபோ டாக்கந்
தொடர்ந்து தொழிலல காலந் தோற்றா
வேற்றுமைக் கிடனாய்த் திணைபா லிடத்தொன்
றேற்பவும் பொதுவு மாவன பெயரே.**

எ-னின், இவ்வதிகாரத்து ஐந்து இயலானும் உணர்த்த நிறீஇய பெயர், வினை, இடை, உரி என்னும் நான்கனுள் பெயர் இலக்கணம் உணர்த்துவான் தொடங்கி, அதன் பொது இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: இடுகுறியும் காரணக்குறியும் மரபினையும் ஆக்கப்பாட்டினையும் தொடர்ந்து, வினையால் அணையும் காரணக்குறி ஒன்றும் காலம் தோற்ற, அல்லன காலம் தோற்றாவாய், எட்டு வேற்றுமையும் சார்தற்கு இடமாய், இருதிணை ஐம்பால் மூவிடத்துள் ஒன்றனை ஏற்பவும் பலவற்றினை ஏற்பவுமாய் வருவன பெயர்களாம் எ-று.

வ-று: ஆண், பெண், மரம், தெங்கு, கமுகு என்றல் தொடக்கத்தன இடுகுறி மரபு தொடர்ந்து வந்தன. அவன், அவள், காளை, காரிகை, விலங்கு, பறவை என்றல் தொடக்கத்தன காரணக்குறி மரபு தொடர்ந்து வந்தன.

**"பொன்போலுங் கள்ளிப் பொறிபறக்கும்[252] கானலிலே
என்பேதை செல்லற் கிசைந்தனளே - மின்போலும்**
மானவேன் முட்டைக்கு மாறாய தெவ்வர்போம்
கானவேன் முட்டைக்குங் காடு" *(த. சரி. 60)*

என்னும் பொய்யாமொழிப் புலவன் பாடலில் வேட்டுக்குமரன்தன் பெயர் முட்டை என்றல் தொடக்கத்தன இடுகுறி ஆக்கம் தொடர்ந்தன. பொன்னன், பூணன், "மலை-

---

[252] **இப்பாடலின் முன் இரண்டு அடிகள் சிவஞான முனிவரால் சேர்க்கப்பட்டிருக்கக் கூடும்.**

*மகண் மகனே மாற்றோர் கூற்றே" (முருகு. 257) என்றல் தொடக்கத்தன காரணக்குறி ஆக்கம் தொடர்ந்தன. நடந்தவனை, நடந்தானை என்றல் தொடக்கத்தன வினையால் அணையும் காரணக்குறி காலம் காட்டின. ஏனை இலக்கணங்கள் முன்னும் பின்னும் பெறப்படுதலின் ஈண்டுக் காட்டிற்றிலம்.*

*ஆண், பெண் முதலிய இடுகுறிப்பெயரும் அவன், அவள் முதலிய காரணப்-பெயரும் இடையே ஒருவரான் ஆக்கப்பட்டனவன்றி அவ்விலக்கணங்களோடு தோன்றிய பொருள்கட்கு எல்லாம் தொன்றுதொட்டு மரபுபற்றி வருதலானும் முட்டை என்றல் தொடக்கத்து இடுகுறிப்பெயரும் பொன்னன் என்றல் தொடக்-கத்துக் காரணப்பெயரும் மரபுபோலத் தொன்றுதொட்டனவன்றி அப்பொருள்கட்கு இடையே ஒருவரான் ஆக்கப்பட்டு வருதலானும் இடுகுறி, காரணம் இரண்டும் மரபையும் ஆக்கத்தையும் தொடர்ந்தும் என்றார். இதற்கு இவ்வாறன்றி இடுகுறிப்-பெயர், காரணப்பெயர் இரண்டும் ஒழிய* **இடையன், பாகன் என்னும்** *மரபுப்பெயர் தெங்கு, கடு என்னும் ஆகுபெயர் எனப் பொருள் கொள்வாரும்*[253] *உளர். எல்லாப் பெயரும் இடுகுறிப்பெயர், காரணப்பெயர் என்னும் இரண்டாய் அடங்குவதன்றி வேறு இன்மையானும், "இடுகுறி காரணப் பெயர்பொதுச் சிறப்பின" (நூ. 62) என வரையறை கூறிப் போந்தமையானும் அது பொருந்தாது என்க.* (18)

ஆண்பாற்பெயர்

{276} **அவற்றுள்,**
**கிளையெண் குழூஉமுதற் பல்பொரு டிணைதேம்**
**ஊர்வா னகம்புற முதல நிலன்யாண்**
**டிருது மதிநா ளாதிக் காலந்**
**தோள்குழன் மார்புகண் காது முதலுறுப்**
**பளவறி வொப்பு வடிவு நிறங்கதி**
**சாதி குடிசிறப் பாதிப் பல்குணம்**
**ஓத லீத லாதிப் பல்வினை**
**இவையடை சுட்டு வினாப்பிற மற்றோ**
**டுற்ற னவ்வீறு நம்பி யாடூஉ**
**விடலை கோவேள் குரிசி றோன்றல்**
**இன்னன வாண்பெய ராகு மென்ப.**

*எ-னின், மேல், "திணைபா லிடத்தொன், றேற்பவும்" (நூ. 275) என்றவற்றுள் உயர்-திணை ஆண்பாற்கு உரிய பெயர்கள் உணர்த்துதல் நுதலிற்று.*

[253] **மயிலைநாதரும் (நன். 274) வைத்தியநாத தேசிகரும் (இல. விள. 176) இவ்வாறு பொருள் கொள்வர்.**

இ-ள்: மேல், "பெயரே" (நூ. 275) என்றவற்றுள் இங்ஙனம் பகுத்துக் கூறிய பொருளாதி ஆறனோடும் இவற்றை அடையும் சுட்டினோடும் வினாவினோடும் பிற என்பதனோடும் மற்று என்பதனோடும் பொருந்திய னகரவீற்றுப் பெயர்களும் நம்பி முதலாக எடுத்து ஓதிய பெயர்களும் இவை போல்வன பிறவும் உயர்திணை ஆண்பாற்பெயர்கள் ஆம் என்று சொல்லுவர் புலவர் எ-று.

"தநநு எம்முதன் மகர மிடையிட்டு
னளரவா மீற்றன சுற்றப் பெயரே" (நன். 275* மயிலை.)

என்ப ஆகலின் கிளைப்பெயர் அறிக.

சுட்டு முதலிய நான்கு இடைச்சொற்கும் தமக்கு என ஓர் பொருளின்றிப் பொருளாதி ஆறனுள் யாதானும் ஒன்றைக் கூறுவான் குறிப்பின் வழி அடைந்து உணர்த்தலின், 'இவையடை சுட்டு வினாப்பிற மற்று' என்றார். "வினாச்சுட் டுடனும் வேறு மாம்" (நூ. 279) என்பதும் அது.

வ-று: தமன், நமன், நுமன், எமன் என்பன கிளையான் வருபெயர். ஒருவன் என்பது எண்ணான் வருபெயர். அவையத்தான், அத்திகோசத்தான் என்பன குழூஉவான் வருபெயர். பொருளன், பொன்னன், முடியன் என்றல் தொடக்கத்தன, 'முதல்' என்பவற்றான் வருபெயர். இவை பொருளான் வருபெயர்.

வெற்பன், பொருப்பன், சிலம்பன் எனவும் மறவன், எயினன் எனவும் இடையன், ஆயன் எனவும் ஊரன், மகிழ்நன் எனவும் சேர்ப்பன், துறைவன் எனவும் வருவன குறிஞ்சி முதலிய ஐந்திணையானும் வருபெயர். சோழியன், கொங்கன் என்பன தேயத்தான் வருபெயர். கருவூரான், மருவூரான் என்பன ஊரான் வருபெயர். வானத்தான், அகத்தான், புறத்தான் என்பன வான் முதலிய மூன்றானும் வருபெயர். மண்ணகத்தான், பாதலத்தான் என்றல் தொடக்கத்தன, 'முதல' என்பவற்றான் வருபெயர். இவை இடத்தான் வருபெயர்.

மூவாட்டையான், வேனிலான், தையான், ஆதிரையான் என்பன யாண்டு முதலிய நான்கானும் வருபெயர். நெருநலான், காலையான், மாலையான் என்றல் தொடக்கத்தன, 'ஆதி' என்பவற்றான் வருபெயர். இவை காலத்தான் வருபெயர்.

திணிதோளன், செங்குஞ்சியன், வரைமார்பன், செங்கண்ணன், குழைக்காதன் என்பன தோள் முதலிய ஐந்தானும் வருபெயர். குறுந்தாளன், நெடுங்கையன் என்றல்

தொடக்கத்தன, 'முதல்' என்பவற்றான் வருபெயர். இவை சினையான் வருபெயர்.

பெரியன், புலவன், பொன்னொப்பான், கூனன், கரியன், மானுடவன், பார்ப்பான், சேரன், ஆசிரியன் என்பன அளவு முதலிய ஒன்பதானும் வருபெயர். நல்லன், தீயன் என்றல் தொடக்கத்தன, 'ஆதி' என்பவற்றான் வருபெயர். இவை குணத்தான் வருபெயர்.

ஓதுவான், ஈவான் என்பன அவ்விரண்டானும் வருபெயர். கணக்கன், பிணக்கன் என்றல் தொடக்கத்தன, 'ஆதி' என்பவற்றான் வருபெயர். இவை தொழிலான் வருபெயர்.

அவன், **இவன், உவன்,** எவன், யாவன், ஏவன், பிறன், மற்றையான் என்பன சுட்டு முதலிய நான்கானும் வருபெயர். நம்பி முதலிய பெயர்கள் ஏழும் உரைக்கிடையிற் காண்க.

'இன்னன' என்றமையான் வில்லி, வாளி, சென்னி, கிள்ளி என்றல் தொடக்கத்து உயர்திணை ஆண்பாற்பொருள் குறித்து வருவன எல்லாம் கொள்க.

'இவையடை சுட்டு வினாப்பிற மற்றோ, டுற்ற னவ்வீறு' என்பவற்றிற்கு அப்பொருளன், இப்பொருளன், உப்பொருளன், எப்பொருளன், பிறபொருளன், மற்றப்பொருளன் என உதாரணம் காட்டுவாரும்[254] உளர். சுட்டு முதலிய நான்கனோடும் னகரவீறு உறுதல் இன்மையான் அவற்றிற்கு அவை காட்டு ஆகா என்க. (19)

பெண்பாற்பெயர்

277. **கிளைமுத லாகக் கிளந்த பொருள்களுள்**
**ளவ்வொற் றிகரக் கேற்ற வீற்றவுந்**
**தோழி செவிலி மகடூஉ நங்கை**
**தையலோ டின்னன பெண்பாற் பெயரே.**

எ-னின், உயர்திணைப் பெண்பாற்கு உரிய பெயர் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: மேலைச் சூத்திரத்துக் கிளை முதலாகப் பகுத்துக் கூறிய அறுவகைப் பொருள்களுள் ளகரவொற்றும் இகர உயிரும் உறுதற்கு ஏற்ற அவ்விரண்டு ஈற்றவாய் வரும் பெயர்களும் தோழி முதலாக எடுத்து ஓதிய பெயர்களும் இவற்றுடனே இவை போல்வன பிறவும் உயர்திணைப் பெண்பாற்பெயர்களாம் எ-று.

வ-று: தமள், நமள், நுமள், எமள், அவையத்தாள், அத்திகோசத்தாள், பொருளாள்,

[254] **மயிலைநாதர் (நன். 275) இத்தகைய உதாரணங்களைக் காட்டுவார்.**

பொன்னாள் எனவும் ஒருத்தி, அவையத்தி, அத்திகோசத்தி, பொன்னி எனவும் பொருளாதி ஆறனுள்ளும் ளகரவொற்றிற்கும் இகர உயிர்க்கும் ஏற்பன அறிந்து ஒட்டிக்கொள்க.

'ஏற்ற வீற்ற' என்றமையால் கிளைப்பெயர் இகரவீறு ஏலாமையும் எண்ணுப்பெயர் ளகர ஒற்றீறு ஏலாமையும் காண்க. பிறவும் அன்ன. தோழி முதலிய ஐந்து பெயரும் உரைக்கிடையிற் காண்க.

'இன்னன' என்றமையான் இகுளை, மாது, அங்கனை என்றல் தொடக்கத்து உயர்திணைப் பெண்பால் குறித்து வருவன எல்லாம் கொள்க. (20)

### பலர்பாற்பெயர்

{{278}} **கிளந்த கிளைமுத லுற்றரவ் வீற்றவுங்**
**கள்ளெ னீற்றி னேற்பவும் பிறவும்**
**பல்லோர் பெயரின் பகுதி யாகும்.**

எ-னின், பலர்பாற்கு உரிய பெயர் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: மேற் கூறப்பட்ட கிளை முதலிய அறுவகைப் பொருளையும் (276) பொருந்திய ரகர ஒற்றீற்றுப் பெயர்களும் கள் என்னும் விகுதியை ஈறாக உடைய பெயர்களுள் ஈண்டைக்குப் பொருந்தி வருவனவும் இவை போல்வன பிறவும் பலர்பாலின் பெயர்கள் ஆம் எ-று.

கள்ளீறு பகுதிப்பொருள் விகுதியாயும் விகுதிமேல் விகுதியாயும் வருதலின் உம்மை இடையிட்டு வேறு ஓதினார்.

'கள்ளெ னீற்றி னேற்பவும்' என்றார் அஃறிணைக்கண்ணும் கள்ளீற்றுப் பெயர் வருதலின்.

பல்லோர் பகுதியின் பெயர் ஆம் எனக் கூட்டுக. பகுதி என்பது பால். தொகுப்புத் தொகுதி என நின்றாற்போலப் பகுப்புப் பகுதி என நின்றது. பகுப்புப் பல்லோர் பெயரின் பகுப்பு ஆகும் எனினும் அமையும்.

வ-று: தமர், நமர், நுமர், எமர், இருவர், மூவர் எனப் பொருளாதி ஆறனோடும் (276) ஒட்டுக. கோக்கள், மனுக்கள் என்றல் தொடக்கத்தன பகுதிப்பொருள் விகுதியீற்றுப் பெயர்கள். தமர்கள், நமர்கள், அரசர்கள், மறவர்கள் என்றல் தொடக்கத்தன விகுதிமேல்

விகுதியீற்றுப் பெயர்கள். இவ்விகுதிமேல் விகுதி இடைச்சொல் ஆதலின், "ஒருபொருட் பன்மொழி சிறப்பி னின்வழா" (நூ. 398) என்னும் சூத்திரத்தால் கூறும் வழூவமைதியாய் வந்தன.

'பிறவும்' என்றமையான் மாந்தர், மக்கள் என்றல் தொடக்கத்துப் பலர்பால் குறித்து வருவன எல்லாம் கொள்க. (21)

ஒன்றன்பாற்பெயர்

279. **வினாச்சுட் டுடனும் வேறு மாம்பொருள்**
**ஆதி யுறுதுச் சுட்டணை யாய்தம்**
**ஒன்றெனெண்* ணின்னன வொன்றன் பெயரே.**

எ-னின்[255]*அஃறிணை ஒருமைப்பாற்கு உரிய பெயர் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: வினாவின்கண்ணும் சுட்டின்கண்ணும் கரந்து, அவற்றின் உடனாயும் வினாவவும் சுட்டவும் படாது வேறாயும் வரும் பொருளாதி ஆறனையும் (276) பொருந்திய துவ்விகுதியீற்றுப் பெயரும் சுட்டோடு கூடிய ஆய்தத்தைப் பொருந்திய துவ்விகுதியீற்றுப் பெயரும் ஒன்று என்னும் எண்ணாகுபெயரும் இவை போல்வன பிறவும் அஃறிணை ஒருமைப்பெயராம் எ-று.

வ-று: எது, யாது, ஏது எனவும் அது, இது, உது எனவும் குழையது, நிலத்தது, மூலத்தது, கோட்டது, குறியது, ஆடலது எனவும் அஃது, இஃது, உஃது எனவும் ஒன்று எனவும் வரும்.

'இன்னன' என்றமையால் பிறிது, மற்றையது என்றல் தொடக்கத்து அஃறிணை ஒருமைப்பொருள் குறித்து வருவன எல்லாம் கொள்க.

சுட்டணை ஆய்தம் இப்பகுதி விகுதிப் புணர்ச்சிக்கண் சந்தி வகையான் வந்தது அன்மையின் இச்சுட்டுப்பெயர்கள் வேறு ஓதப்பட்டன என்பதூஉம் இவைபோல் எடுத்து ஓதாமையின் ஆய்தம் அணையாச் சுட்டுப்பெயர்களே, 'வினாச் சுட்டுடனும்' என்றவற்றுள் அமைந்து கிடந்தன என்பதூஉம், 'வினாச் சுட்டுடனும்' என்பதற்கு எக்குழையது, அக்குழையது என உதாரணம் காட்டுவது[256] பொருந்தாது என்பதூஉம் பெற்றாம். (22)

[255] "ஒன்றனெண்" என்பது சங்கர நமச்சிவாயர் பாடம்.

[256] மயிலைநாதர் (நன். 278) இத்தகைய உதாரணங்களைக் காட்டுவார்.

பலவின்பாற்பெயர்

280. **முன்ன ரவ்வொடு வருவை யவ்வுஞ்**
**சுட்டிறு வவ்வுங் கள்ளிறு மொழியும்**
**ஒன்ற லெண்ணு முள்ள வில்ல**
**பல்ல சில்ல வுளவில பலசில**
**இன்னவும் பலவின் பெயரா கும்மே.**

எ-னின், அஃறிணைப் பன்மைப்பாற்கு உரிய பெயர் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: முன்னர்க் கூறிய, "வினாச்சுட் டுடனும் வேறு மாம்பொருள், ஆதி" (நூ. 279) ஆறனோடும் ஏற்றபெற்றி வரும் வகர ஐகார ஈற்றுப் பெயர்களும் அகரவீற்றுப் பெயர்களும் வகர ஒற்றீற்றுச் சுட்டுப்பெயர்களும் கள் என்னும் பகுதிப்பொருள் விகுதி இறுதியாகிய பெயர்களும் ஒன்று அல்லாத இரண்டு முதலிய எண்ணாகுபெயர்களும் உள்ள என்பது முதலிய குறிப்பு வினையால் அணைந்த எட்டுப் பெயர்களும் இவை போல்வன பிறவும் அஃறிணைப் பன்மைப்பெயர்கள் ஆம் எ-று.

மேலைச் சூத்திரங்களுள் (276-279) கூறியவாறே உறுதி கூறாது, 'வருவை' என்றதனால் ஏற்றபெற்றி என்பதூஉம் உள்ள, இல்ல முதலிய பண்பொடு வரும் அகரவீற்றுப் பெயர்கள், 'முன்ன ரவ்வொடு வருவை யவ்வும்' என்பவற்றுள் அடங்குதலின் பின்னர்க் கூறிய உள்ள, இல்ல முதலிய எட்டும் குறிப்பு வினையால் அணையும் பெயர் என்பதூஉம் பெற்றாம்.

வ-று: எவை, யாவை எனவும் அவை, இவை, உவை எனவும் நெடியவை, கரியவை, நல்லவை, தீயவை, உள்ளவை, இல்லவை எனவும் பொருள, பொருளன, அகத்த, அகத்தன, மூலத்த, மூலத்தன, கோட்ட, கோட்டன, கரிய, கரியன, உள்ள, உள்ளன, இல்ல, இல்லன, ஓதுவ, ஓதுவன, ஈவ, ஈவன எனவும் அவ், இவ், உவ் எனவும் யானைகள், குதிரைகள் எனவும் இரண்டு, மூன்று, பத்து, நூறு, ஆயிரம் எனவும் வரும். உள்ள முதலிய எட்டும் உரைக்கிடையிற் காண்க.

'இன்னவும்' என்றமையான் யா, பிற, மற்றைய என்றல் தொடக்கத்து அஃறிணைப் பன்மைப்பொருள் குறித்து வருவன எல்லாம் கொள்க. (23)

அஃறிணைப் பொதுப்பெயர்

281. **பால்பகா வஃறிணைப் பெயர்கள்பாற் பொதுமைய.**

எ-னின், மேல், "பொதுவு மாவன பெயரே" (நூ. 275) என்றார்; அவற்றுள் அஃறிணை

இருபாற்கும் உரிய பொதுப்பெயர் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: அஃறிணைப்பெயர்களுள் இங்ஙனம் பால் பகுத்தலை ஒழிந்து நின்ற பெயர்கள் அனைத்தும் அத்திணை இருபாற்கும் உரிய பொதுப்பெயர்களாம் எ-று.

வ-று: யானை வந்தது, யானை வந்தன; குதிரை வந்தது, குதிரை வந்தன; மரம் வளர்ந்தது, மரம் வளர்ந்தன; கண் சிவந்தது, கண் சிவந்தன என வரும்.

இச்சூத்திரம் திணைப் பொதுப்பெயரின் (284) பிற் கூறாது ஈண்டுக் கூறியது என்னை எனின் விளங்குதற்பொருட்டு ஒன்றின முடித்தல் தன்னின முடித்தல் என்னும் உத்தியால் கூறப்பட்டது என்க. (24)

### இருதிணைப் பொதுப்பெயர்களின் தொகை

282. **முதற்பெயர் நான்குஞ் சினைப்பெயர் நான்குஞ்**
**சினைமுதற் பெயரொரு நான்குமுறை யிரண்டுந்**
**தன்மை நான்கு முன்னிலை யைந்தும்**
**எல்லாந் தாந்தா னின்னன பொதுப்பெயர்.**

எ-னின், இருதிணைக்கும் உரிய பொதுப்பெயர்களைத் தொகுத்து உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: முதற்பெயர் முதலான ஒன்பது கூற்றுப் பெயர்களும் இவை போல்வன பிறவும் இருதிணைக்கும் உரிய பொதுப்பெயர்களாம் எ-று.

'பெயர்' என்பதனை, 'முறை' முதலியவற்றினோடும் கூட்டுக.

'எல்லாம்' என்பது முதல், 'இன்னன' என்பது ஈறாக நின்ற செவ்வெண்ணின் (428) இறுதிக்கண் நான்கும் என்னும் தொகையோடு உம்மை தொக்கன.

எல்லாம், தாம், தான் என விதந்த மூன்று பெயரும் ஒழிய, 'இன்னன' என்றமையால் சூரியன் உதித்தான், சூரியன் உதித்தது என ஒரு பொருளையே உயர்திணைப்பொருள் ஆக்கியும் அஃறிணைப்பொருள் ஆக்கியும் கூறப்படும் பொதுப்பெயர் முதலியனவும் ஊமை வந்தான், ஊமை வந்தாள் என உயர்திணை இருபாலையும் உணர்த்தும்[257] பொதுப்பெயர் முதலியனவும் தன்மை முன்னிலை வினையால் அணையும் பெயரும் பிறவும் கொள்க.

---

[257] "உரைக்கும்" என்பதும் பாடம்.

முதற்பெயர் முதலாக முன்னிலைப்பெயர் ஈறாகக் கூறிய அறுவகைப் பெயர்கட்கும் உதாரணம் பின் வரும் தத்தம் வகைச் சூத்திரங்களுள் (283, 285) காண்க.

உயர்திணைக்குச் சிறந்த பெயர் அஃறிணைக்கண் விரவியும் அஃறிணைக்குச் சிறந்த பெயர் உயர்திணைக்கண் விரவியும் வருதலின் இவற்றை விரவுப்பெயர் என்றும் கூறுப. அங்ஙனம் வருதல் காட்டும் உதாரணங்களுள் காண்க. (25)

### இருதிணைப் பொதுப்பெயர்களின் வகை

283. **ஆண்மை பெண்மை யொருமை பன்மையின்**
**ஆமந் நான்மைக ளாண்பெண் முறைப்பெயர்.**

எ-னின், மேல் தொகுத்து உணர்த்தியவற்றுள் முதற்பெயர் முதல் முறைப்பெயர் ஈறாகக் கிடந்தவற்றை வகுத்து உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: ஆண்மை முதலிய இந்நான்கு பாலும் காரணமாக முற் கூறிய முதற்பெயர், சினைப்பெயர், சினைமுதற்பெயர் என்னும் மூன்றும் ஒவ்வொன்றும் நந்நான்கு ஆம்; ஆண்மை, பெண்மை என்னும் இருபாலும் காரணமாக முறைப்பெயர் இரண்டு ஆம் எ-று.

மேலைச் சூத்திரத்து, "இரண்டு" (நூ. 282) என்பதனையும் இச்சூத்திரத்து, 'ஆம்' என்பதனையும் கூட்டி முறைப்பெயர் இரண்டு ஆம் என உரைத்துக்கொள்க.

உயர்திணைக்கே உரிய பலர்பாலையும் அஃறிணைக்கே உரிய ஒன்று பல என்னும் இருபாலையும் ஒழித்து, இருதிணைக்கும் பொதுவாகிய ஆண்மை, பெண்மை, ஒருமை, பன்மை என்னும் நான்கு பாலினையும் இவற்றுள் முறை கூறுதற்கு உரிய ஆண்மை, பெண்மை என்னும் இருபாலினையும் காரணமாக இச்சூத்திரத்துள் கூறினார் இவற்றின் காரியங்களை, "இனைத்தென் றறிபொரு"ளாக (நூ. 399) மேலைச் சூத்திரத்துள் கூறியவாறு உய்த்துணர்தற்கு என்க. எனவே ஆண்மை முதற்பெயர், பெண்மை முதற்பெயர், ஒருமை முதற்பெயர், பன்மை முதற்பெயர் எனவும் ஆண்மைச் சினைப்பெயர், பெண்மைச் சினைப்பெயர், ஒருமைச் சினைப்பெயர், பன்மைச் சினைப்பெயர் எனவும் ஆண்மைச் சினைமுதற்பெயர், பெண்மைச் சினைமுதற்பெயர், ஒருமைச் சினைமுதற்பெயர், பன்மைச் சினைமுதற்பெயர் எனவும் ஆண்மை முறைப்பெயர், பெண்மை முறைப்பெயர் எனவும் பெயர் பெறும் என்பதாயிற்று.

வ-று: சாத்தன், சாத்தி, கோதை, கோதைகள்: இவை முதற்பெயர் நான்கு. முடவன், முடத்தி, செவியிலி, செவியிலிகள்: இவை சினைப்பெயர் நான்கு. முடக்கொற்றன், முடக்கொற்றி, கொடும்புறமருதி, கொடும்புறமருதிகள்: இவை சினைமுதற்பெயர் நான்கு. தந்தை, தாய்: இவை முறைப்பெயர் இரண்டு.

கள்விகுதி அஃறிணைப் பன்மைக்குச் சிறந்ததாய் உயர்திணைப் பன்மைக்கண்ணும் விரவி வருதலின் ஒருமைப் பொதுப்பெயரோடு கள்விகுதி புணர்ந்த துணையானே அவை பன்மைப் பொதுப்பெயர் ஆயின. (26)

## திணைப் பொதுப்பெயர் பாற்பொதுவாய் நிற்றல்

{284} **அவற்றுள்,**
**ஒன்றே யிருதிணைத் தன்பா லேற்கும்.**

எ-னின், திணைப்பொதுவாய் நின்ற பெயர்கள் பாற்பொதுவாய் நிற்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: முதற்பெயர் முதலவாகக் கூறப்படும் இருபத்தாறும் பிறவும் ஆகிய பொதுப்பெயர்களுள் (282) ஒவ்வொன்று இருதிணைக்கண்ணும் தன்தன் பால்களை ஏற்கும் எ-று.

எனவே ஆண்மைப் பொதுப்பெயர் உயர்திணை ஆண்பாலினையும் அஃறிணை ஆண்பாலினையும் பெண்மைப் பொதுப்பெயர் உயர்திணைப் பெண்பாலினையும் அஃறிணைப் பெண்பாலினையும் ஒருமைப் பொதுப்பெயர் உயர்திணை ஆணொருமை பெண்ணொருமையினையும் அஃறிணை ஒருமையினையும் பன்மைப் பொதுப்பெயர் உயர்திணைப் பன்மையினையும் அஃறிணைப் பன்மையினையும் ஏற்கும் என்பதாயிற்று.

வ-று: சாத்தன் இவன், சாத்தன் இவ்வெருது எனவும் சாத்தி இவள், சாத்தி இப்பசு எனவும் கோதை இவன், கோதை இவள், கோதை இது எனவும் கோதைகள் இவர், கோதைகள் இவை எனவும் தந்தை இவன், தந்தை இவ்வெருது எனவும் தாய் இவள், தாய் இப்பசு எனவும் யான் நம்பி, யான் நங்கை, யான் பூதம் எனவும் யாம் மக்கள், யாம் பூதங்கள் எனவும் நீ நம்பி, நீ நங்கை, நீ பூதம் எனவும் நீயிர் மக்கள், நீயிர் பூதங்கள் எனவும் அவர் எல்லாம், அவை எல்லாம் எனவும் அவர்தாம், அவைதாம் எனவும் அவன்தான், அவள்தான், அதுதான் எனவும் வரும். இவற்றுள் காட்டாது ஒழிந்தனவும் பிறவும் இவ்வாறே ஒட்டிக் காண்க.

ஆண்மைப் பொதுப்பெயர் பெண்மைப் பொதுப்பெயர்கட்கு ஆண்மக்கள், ஆண்விலங்கு, பெண்மக்கள், பெண்விலங்கு, காளை வந்தான், காளை வந்தது, மான் வந்தாள், மான் வந்தது என இக்காலத்துப் பயின்று வருவன காட்டலும் ஒன்று. பிறவும் அன்ன.

செஞ்ஞாயிறு என்றாற்போலத் தன்னோடு இயைபின்மை நீக்கிய விசேடணத்தான் விசேடிக்கப்பட்டனவன்றிச் செந்தாமரை என்றாற்போலப் பிறிதோடு இயைபு நீக்கிய விசேடணத்தான் விசேடிக்கப்பட்டனவாகி ஆண்மைப் பொதுப்பெயர் பெண்மைப் பொதுப்பெயர் என்றும் ஒருமைப் பொதுப்பெயர் பன்மைப் பொதுப்பெயர் என்றும் இனச்சுட்டு உளவாய் வருதலின், 'தன்பா லேற்கும்' எனக் கூறினார் **என்க.**

இனி ஆசிரியர் தொல்காப்பியர் **பன்மை சுட்டிய பெயர் என்றது பல பாலையும் சுட்டி நிற்றலின் பிறிதின் இயைபு நீக்கிய விசேடணம் அடுத்து நின்றது என்பார்,**

**"பன்மை சுட்டிய வெல்லாப் பெயரும்**
**ஒன்றே பலவே யொருவ ரென்னும்**
**என்றிப் பாற்கு மோரன் னவ்வே"** *(தொல். பெயர். 28)*

**எனக் கூறித், தன் பால் ஏற்றலை உம்மையால் தழீஇயினார். அவ்வாசிரியர் கருத்து அறியாது** பன்மைப் பொதுப்பெயருள் பன்மை என்பது பிறிதோடு இயைபு நீக்கிய விசேடணம் அன்று எனத் தோன்றியவாறே விசேடண இலக்கணம் சிதைத்து இடர்ப்பட்டு உரை கூறுவாரும்[258] உளர்; அதனைத் தோன்றக் கூறின் பெருகும். அவ்வாசிரியர் கூறியவாறே பன்மைப் பொதுப்பெயர்க்கு உதாரணம் யானை வந்தது, யானை வந்தன, யானை வந்தான், யானை வந்தாள் **என வருமாறும் இங்ஙனம்** யானை என்னும் பால் பகா அஃறிணைப்பெயர்க்குக் கள்விகுதி இன்மையின் அஃறிணை ஒருமைக்கே சிறந்ததாய் அதன் பன்மைக்கண்ணும் விரவி ஆகுபெயராய் உயர்திணை ஆணொருமை பெண்ணொருமையினும் **விரவி வருமாறும் காண்க.**

**<பல பாலையும்[259] சுட்டி நிற்றலின் பன்மை சுட்டிய பெயர் எனின் ஆண்மை சுட்டிய பெயர் முதலியனவும் பல பாலையும் சுட்டி நிற்றலின் அவற்றையும் பன்மை சுட்டிய பெயர் எனல் வேண்டுமால் எனின் அது பொருந்தாது. நான்கு பாலும் சுட்டி நிற்கும் தன்னை நோக்க ஏனை மூன்று பாலும் இரண்டு பாலும் சுட்டி நிற்கும் பெயர்கள் சின்மை சுட்டிய பெயர் எனப்படுவனவல்லது பன்மை சுட்டிய பெயர் எனப்படா ஆகலான் என்க.**

---

[258] **சேனாவரையரும் நச்சினார்க்கினியரும் (தொல். பெயர். 28) இவ்வாறு இடர்ப்பட்டு உரை கூறுவர்.**

[259] ***இலக்கண விளக்கச் சூறாவளி (பக். 116-117).***

அற்றேல் அவற்றைச் சின்மை சுட்டிய பெயர் எனவே அமையும் பிற எனின் அவற்றுள் ஆண்மை சுட்டுதல் முதலிய பகுப்பு உண்மையின் அவற்றைப் பகுத்துக் கூற வேண்டுதலான் அமையா என்க. இக்கருத்தே பற்றி அன்றே பஃறொடை வெண்பா என்றாற்போல ஏனையவற்றையும் பஃறொடை வெண்பா எனக் கூறாததூஉம் பகுப்பு உண்மையின் சிஃறொடை வெண்பா என்று ஒழியாததூஉம் பஃறாழிசைக் கொச்சகம் என்றதனை நோக்கி அதில் குறைந்ததனைப் பகுப்பு இன்மையால் சிஃறாழிசைக் கொச்சகம் என்றே போந்ததூஉம் என்க.

இனி இவ்வாறன்றி ஆணொருமை, பெண்ணொருமை, அஃறிணையொருமை என்ற மூன்றும் ஒருமைப்பால் என ஒன்றாய் அடங்குதலின் பல பால்களையும் சுட்டி நின்றன அல்ல ஆகலான் அம்மூன்று ஒருமையும் சுட்டிய பெயர்களை ஒருமை சுட்டிய பெயர் எனவும் இஃது ஒருமையும் பன்மையும் என்னும் இருபால் சுட்டி நிற்றலான் பன்மை சுட்டிய பெயர் எனவும் கொள்ளினும் இழுக்காது.> (27)

மூவிடப்பெயர்கள்

{285} **தன்மை யானான் யாநா முன்னிலை**
**எல்லீர் நீயிர் நீவிர் நீர்நீ**
**அல்லன படர்க்கை யெல்லா மெனல்பொது.**

எ-னின், "தன்மை நான்கு முன்னிலை யைந்து" (நூ. 282) என்றார்; அவை இவை என்பதூஉம், "இடத்தொன், றேற்பவும் பொதுவும்" (நூ. 275) என்றார்; அவை இவை என்பதூஉம் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: தன்மைப்பெயர் நான்காவன யான், நான், யாம், நாம் என்பனவாம். முன்னிலைப்பெயர் ஐந்தாவன எல்லீர், நீயிர், நீவிர், நீர், நீ என்பனவாம். திணைபாலுள் ஒன்றற்கு ஏற்பவும் பொதுவும் ஆகிய பெயர்களுள் (275) இவ்விரண்டு இடத்து ஒன்பது பெயரும் அல்லாத பெயர்கள் அனைத்தும் படர்க்கை இடத்திற்கு உரியவாம். அவற்றுள் எல்லாம் என்னும் பெயர் ஒன்றும் மூவிடத்திற்கும் உரித்தாம் எ-று.

எல்லாம் என்னும் பெயர் மூவிடத்தும் வருமாறு: யாம் எல்லாம், நீயிர் எல்லாம், அவர் எல்லாம், அவை எல்லாம் என வரும்.

இத்தன்மை முன்னிலைப் பெயர்களை உரைத்தலும் கேட்டலும் இல்லா அஃறிணைக்கண் இவ்வொன்பது பெயரும் விரவிப் பொதுப்பெயர் ஆமாறு என்னை

எனின் ஆசிரியர் தொல்காப்பியர்,

"அவ்வழி,
அவனிவ னுவனென வரூஉம் பெயரும்" (தொல். பெயர். 8),

என்னும் சூத்திரத்து, "யான்யாம் நாமென வரூஉம் பெயரும்" (தொல். பெயர். 8) உயர்திணைப்பெயர் எனக் கூறினாரேனும் மரபியலுள்,

"மக்க டாமே யாறறி வுயிரே
பிறவு முளவே யக்கிளைப் பிறப்பே" (தொல். மரபு. 33),

"ஒருசார் விலங்கு முளவென மொழிப" (தொல். மரபு. 34),

என்னும் சூத்திரங்களின் விலங்கினுள் ஒருசாரன கிளியும் குரங்கும் யானையும் முதலாயினவும் மனவுணர்வு உடையன ஆயின் அவையும் ஈண்டு ஆறறிவுயிராய் அடங்கும் எனக் கூறலின் அம்மரபுபற்றிப் பொதுப்பெயர் எனப்பட்டன என்க. மேல் வரும் தன்மை முன்னிலை வினைகளும் அவ்வினையால் அணையும் பெயர்களும் அன்ன. அங்ஙனம் ஆகவே,

"கேட்குந போலவுங் கிளக்குந போலவும்
இயங்குந போலவு மியற்றுந போலவும்
அஃறிணை மருங்கினு மறையப் படுமே" (நூ. 409),

என்பது புனைந்துரை வகையால் வழுவமைதியாகக் கூறப்பட்டனவேயாம். ஆதலின் அவைபற்றிப் பொதுப்பெயர் எனப்பட்டன எனக் கோடல்[260] பொருந்தாமையும் அறிக. (28)

## வினைப்பெயர் வினையால் அணையும் பெயர்களுக்கு இடம்

**286. வினையின் பெயரே படர்க்கை வினையால்
அணையும் பெயரே யாண்டு மாகும்.**

எ-னின், சில வினையின் பெயர்க்கு, "அல்லன படர்க்கை" (நூ. 285) என்பதனான் எய்திய இடம், 'யாண்டு மாகும்' என்பதனான் இகந்துபடாமல், 'படர்க்கை' என்பதனாற் காத்தலும் வினையால் அணையும் பெயர்க்கு அதனை விலக்கி இடம் வகுத்தலும் நுதலிற்று.

[260] தன்மைமுன்னிலைப் பெயர்கள் இவ்விதியால் (நன். 409) பொதுப்பெயர் ஆகும் என்று சங்கர நமச்சிவாயர் கொள்வார்.

இ-ள்: யான் உணல், நீ உணல், அவன் உணல் என மூவிடத்து வினை ஆயினும் அவ்வுணல், தினல் என்றல் தொடக்கத்து வினையின் பெயர் படர்க்கைக்கே உரியவாம். அவ்வினையால் அணையும் பெயர் அவ்வினையின் பெயர்போல் படர்க்கைக்கே உரிய ஆகாது உணடேனை, உண்டாயை, உண்டானை எனத் தனித்தனி மூவிடத்திற்கும் உரியவாம் எ-று.

யான் உண்டேன், நீ உண்டாய், அவன் உண்டான் என இடத்தான் ஒன்றுபட நின்ற நிலைமொழி வருமொழிபோல அம்மூவிட முற்றின்கண் தொழில் பயனிலையாகி யான் உணல், நீ உணல், அவன் உணல் என ஒன்றுபட நிற்பனவற்றிற்கு அன்றி எனது உணல், நினது உணல், அவனது உணல் என்றும் உணல் என்றும் வேறுபட்டு நிற்கும் வினையின் பெயர்கட்கு எய்திய இடம் இகந்துபடுதல் இன்று என உணர்க.

இவ்வாறன்றி, 'வினையின் பெயரே படர்க்கை' என்பதற்கு வினையின் பெயர் அனைத்தும் படர்க்கை எனப் பொருள் கொள்ளின்[261] கூறியது கூறலாம் *(12)*. அது பொருந்தாது என்க. (29)

சில பொதுப்பெயர்களுக்கு எண்

287. **தான்யா னானீ யொருமை பன்மைதாம்**
**யாநா மெலாமெலீர் நீயிர்நீர் நீவிர்.**

எ-னின், இப்பன்னிரண்டு பொதுப்பெயர்களும் இருதிணைக்கும் பொதுவாகிய ஆண்மை, பெண்மை, ஒருமை, பன்மை என்னும் நான்கு பொதுப்பால்களுள் இப்-பாலுள் அமைந்து கிடந்தன என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: தான், யான், நான், நீ என்னும் நான்கும் இருதிணை முக்கூற்று ஒருமைப்-பெயராம். தாம், யாம், நாம், எல்லாம், எல்லீர், நீயிர், நீர், நீவிர் என்னும் எட்டும் இருதிணை இருகூற்றுப் பன்மைப்பெயராம் எ-று.

இதனை,

"அவற்றுள்,
ஒன்றே யிருதிணைத் தன்பா லேற்கும்" *(நூ. 284)*

என்னும் சூத்திரத்தின் முற் கூறாது ஈண்டுக் கூறியது என்னை எனின் தன்மை-முன்னிலைப் பெயர்களின் வகை உணர்ந்தன்றி ஒருமை, பன்மை தோன்றாமையின்

---

[261] **மயிலைநாதரும் (நன். *285*) வைத்தியநாத தேசிகரும் (இல. விள. *188*) இவ்வாறு பொருள் கொள்வர்.**

ஈண்டுக் கூறி, அவற்றின் பின் நின்ற ஆகலின் எல்லாம், தாம், தான் என்பனவற்றிற்கும் ஈண்டு ஒருமை, பன்மை உடன் கூறினார் என்க. (30)

எண்ணான் வரும் உயர்திணைப்பெயர்க்குப் புறனடை

288. **ஒருவ னொருத்திப் பெயர்மே லெண்ணில.**

*எ-னின், எண்ணான் வரும் உயர்திணைப்பெயர்க்கு ஆவதோர் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.*

*இ-ள்:* எண்ணான் உயர்திணை ஆண்பாற்பெயரும் பெண்பாற்பெயரும் வரும் காலத்து ஒன்று என்னும் எண்ணானே ஒருவன், ஒருத்தி என வருவனவன்றி, இவற்றின்மேல் இரண்டு முதலிய எண்களான் இப்பெயர்கள் வருவன இலவாம் எ-று.

இருவன், இருத்தி என்றல் தொடக்கத்தனவாகி வரின் பன்மைப்பகுதியோடு ஒருமைவிகுதி புணர்ந்து பால்வழு ஆம் *(378, 379)* ஆதலின், 'எண்ணில' என்றார். (31)

ஒருவர் என்னும் உயர்திணைப்பெயர் முடியுமாறு

289. **ஒருவ ரென்ப துயரிரு பாற்றாய்ப்**
**பன்மை வினைகொளும் பாங்கிற் றென்ப.**

*எ-னின், இதுவும் அது.*

*இ-ள்:* ஒருவர் என வழங்கும் சொல் உயர்திணை ஆண்பால், பெண்பால் இரண்டற்கும் பொதுவாய், அத்திணைப் பன்மை வாய்பாட்டு வினையைக் கொண்டு முடியும் பாங்கினை உடைத்து என்று சொல்லுவர் புலவர் எ-று.

*வ-று:* ஆடவருள் ஒருவர் அறத்தின் வழி நிற்பார், ஒருவர் நில்லார்; பெண்டிருள் ஒருவர் கொழுநன் வழி நிற்பார், ஒருவர் நில்லார் எனவும், "யாஅரொருவ ருலகத்தோர் சொல்லில்லார்" *(நாலடி. 119:1*)* எனவும் வரும்.

இவ் ஒருவர் என்னும் சொல் பொதுவியலுள் *(379)* கூறும் உவப்பு, உயர்வு முதலியவற்றான் வரும் ஒருவர் என்னும் சொல்லன்றித் தன் இயல்பாய் வந்தது ஆகலின் ஈண்டுக் கூறப்பட்டது என்று உணர்க. இச்சொல்லின்கண் பகுதிக்கு ஏற்ப, 'இரு பாற்றாய்' என்றும் விகுதிக்கு ஏற்பப், 'பன்மை வினைகொளும்' என்றும் உயர்திணை முப்பாலுள் பன்மையைப் பின் விதத்தலின் ஆண், பெண் என விதவாது, 'உயரிரு பாற்றாய்' என்றும், 'உயர்' என முன் விதத்தலின் உயர்திணைப் பன்மை என விதவாது, 'பன்மை' என்றும் ஒருவர் வந்தார், ஒருவர் அவர் என வினையும் பெயரும் கொள வருவது உவப்பு, உயர்வு முதலியவற்றான் வருவதாம். இங்ஙனம் தன் இயல்பாய் வரும்

ஒருவர் என்பது வினையும் வினைக்குறிப்புமே கொள்ளும் என்பார் பெயரை ஒழித்து, 'வினைகொளும்' என்றும் இச்சொல் ஒருமைப்பகுதியோடு பன்மைவிகுதி மயங்கிப் பால்வழுவாய் நின்றதேனும் தன் இயல்பாய் மயங்கி நின்றமையின் வழாநிலை போலும் என்பதூஉம், 'பன்மை வினை' என்றது சொல் மாத்திரையின் பன்மை-வினையன்றிப் பொருள் மாத்திரையின் ஒருமைவினையாம் ஆதலின் இப்பயனிலையை ஒருவர் என்னும் சொல் கொள்ளுதல் வழு அன்று என்பதூஉம் தோன்றப், 'பாங்கிற்று' என்றும் இங்ஙனம் ஆதல் சான்றோர்க்கு ஒப்ப முடிந்தது என்பார், 'என்ப' என்றும் கூறினார். (32)

## ஆகுபெயர்

{290} **பொருண்முத லாறோ டளவைசொற் றானி**
**கருவி காரியங் கருத்த னாதியுள்**
**ஒன்றன் பெயரா னதற்கியை பிறிதைத்**
**தொன்முறை யுரைப்பன வாகு பெயரே.**

எ-னின், மேற் கூறிய (275) ஒன்றற்கு ஏற்பவும் பொதுவும் ஆகிய பெயர்க்கண் வரும் காரணப்பெயர்களுள் ஆகுபெயர் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: பொருளே இடமே காலமே சினையே குணமே தொழிலே என்னும் ஆறுடனே (132) இவற்றின் பகுதியவாகிய நால்வகை அளவையே (368) சொல்லே தானியே கருவியே காரியமே கருத்தாவே என்னும் ஆறும் ஆதியாக வரும் பொருள்-களுள் ஒரு பொருளின் இயற்பெயரானே அப்பொருளினுக்கு இயைந்த பிறிது ஒரு பொருளைத் தொன்றுதொட்டு வரும் முறையே கூறிவருவன ஆகுபெயர்களாம் எ-று.

பொருளாதி ஆறன்றி வேறு பொருள் இன்றேனும் அவற்றுள் பயின்று வருவன-வற்றைப் பிரித்து, அளவை முதலாக விதந்தமையின், 'பொருண்முத லாறு' என்பன இவை ஒழிந்தனவற்றை என்பதூஉம், 'அதற்கியை பிறிதை' என்றமையான் இயை-யாதனவற்றிற்கு வருவன பல பொருள் ஒரு சொல்லன்றி ஆகுபெயர் ஆகா என்பதூஉம், 'தொன்முறை யுரைப்பன' என்றமையான் ஆகுபெயர் மேல் ஆகு-பெயராயும் அடை அடுத்தும் இருபெயரொட்டாயும் வழக்கின்கண்ணும் செய்யுட்-கண்ணும் பயின்று, பல பொருள் ஒரு சொல்போல வருவனவன்றி இடையே தோன்றியவாறு ஆக்கப்படுவன அல்ல என்பதூஉம் பெற்றாம்.

வ-று: "தாமரை புரையுங் காமர் சேவடி" (குறுந். கட. வாழ். 1), "ஆம்ப னாறுந் தேம்பொதி கிளவி" (குறுந். 300:2*) என முதற்பொருளின் பெயர் சினைப்பொருளுக்கு ஆயின. "அகனமர்ந்து செய்யா ளுறையும்" (குறள். 84), "புறங்கொடை யறியா மறந்-திகழ் வேலோன்" (வி. மே.) என இடப்பெயர் சித்தத்திற்கும் முதுகிற்கும் ஆயின. கார்

அறுத்தது, கார்த்திகை பூத்தது எனக் காலப்பெயர் பைங்கூழிற்கும் தோன்றிக்கும் ஆயின. இவற்றுள் கார் என்பது நிறத்திற்கு ஆய், நிறத்தின் பெயர் மேகத்திற்கு ஆய், மேகத்தின் பெயர் பருவத்திற்கு ஆய்ப், பருவத்தின்பெயர் பைங்கூழிற்கு ஆனமையின் மும்மடி ஆகுபெயர். "அறுபத முரலும்" (தே. திருவெழுக்கூற்றிருக்கை 25), மருக்கொழுந்து நட்டான், வெற்றிலை நட்டான், புளி முளைத்தது என அடை அடுத்தும் தனித்தும் வந்த சினைப்பெயர் முதலுக்கு ஆயின. இவற்றுள் புளி என்பது சுவைப்பெயர் பழத்திற்கு ஆய்ப், பழத்தின் பெயர் மரத்திற்கு ஆனமையின் இருமடி ஆகுபெயர். "நெறிநீ ரிருங்கழி நீலமுஞ் சூடாள்" (நன். 289 மயிலை.), "கார்நிகர் வண்கை" (நன். சிற. பாயி. 15), புளித் தின்றான் என நிறமும் சுவையும் ஆகிய குணப்பெயர்கள் குவளைக்கும் மேகத்திற்கும் பழத்திற்கும் ஆயின. **வற்றலோடு உண்டான் என வற்றல் என்னும் தொழிற்பெயர் அதனை உடைய உணவிற்கு ஆயிற்று.** ஒன்று, இரண்டு, அரை, கால் என எண்ணல் அளவைப்பெயர்[262] அஃறிணை ஒருமைக்கும் பன்மைக்கும் யாக்கையின்கண் உறுப்பிற்கும் ஆயின. துலாக்கோல், துலாபாரம் தூக்கினான், துலா இறைத்தான் என எடுத்தல் அளவைப்பெயர் நிறைகோலிற்கும் தராசிற்கும் கிணற்று இறைவைமரத்திற்கும் ஆயிற்று; இவற்றுள் துலாக்கோல் என்பது இருபெயரொட்டு முன்மொழி ஆகுபெயர். நாழி, உழக்கு, ஆழாக்கு என முகத்தல் அளவைப்பெயர் அளவுகருவிகட்கு ஆயின. கீழைத்தடி, மேலைத்தடி எனத் தடி என்னும் நீட்டல் அளவைப்பெயர் விளைநிலத்திற்கு ஆயிற்று. அவன் மொழி உணர்ந்தான், இந்நூற்கு உரை செய்தான் என மொழி, உரை என்னும் சொல்லின் பெயர் அதன் பொருட்கு ஆயின. விளக்கு முரிந்தது, நெஞ்சு நொந்தது என விளக்கும் ஒளியை உடைய பிழம்பும் உணர்வும் ஆகிய தானிகளின் பெயர் அவற்றிற்குத் தானமாகிய விளக்குத்தண்டினுக்கும் மார்பினுக்கும் ஆயின. திருவாசகம், திருவாய்மொழி என அடை அடுத்த வாசகம், மொழி என்னும் முதற்கருவியின் பெயர் அவற்றின் காரியமாகிய யாப்பிற்கு ஆயின. இந்நூல் அலங்காரம், இந்நூல் பாட்டியல் என இவ்விலக்கணங்களாகிய காரியத்தின் பெயர் இவற்றைத் தருதற்குக் கருவியாகிய நூல்கட்கு ஆயின. இந்நூல் திருவள்ளுவர் எனக் கருத்தாவின் பெயர் காரியத்திற்கு ஆயிற்று.

---

[262] எண்ணாகுபெயரைப் பற்றி உரையாசிரியர்கள் ஒருமித்த கருத்தினர் அல்லர். தொல்காப்பியர், "அளவும் நிறையும்" (வேற். மய. 34) என்னும் நூற்பாவில் எண்ணுப்பெயர் ஆகுபெயராக வரும் என்று குறிப்பிடவில்லை. அதனால் அந்நூற்பாவின் உரையில் சேனாவரையரும் நச்சினார்க்கினியரும் எண்ணுப்பெயர் ஆகுபெயராக வராது என்பர். வைத்தியநாத தேசிகரும் (இல. விள. 192) இக்கருத்தைத் தழுவிக்கொள்வார்.

பவணந்தி முனிவர் குறிப்பிடும், "அளவை" (நூ. 290) என்பதற்கு மயிலைநாதரும் சங்கர நமச்சிவாயரும் நால்வகை அளவை (நூ. 368) என்று பொருள் கூறி எண்ணுப்பெயர் ஆகுபெயராக வரும் என்பர். தொல்காப்பியச் சூத்திர விருத்தியில் (பக். 106) சிவஞான முனிவரும் இக்கருத்தை விளங்கக் கூறுவார்.

'ஆதி' என்றமையானே காளை வந்தான் என்றல் தொடக்கத்து உவமையான் வருவனவும் தேவர் முதலியோர் பெயரை மக்கட்கு இட்டு வழங்குவனவும் **பிறவும்** கொள்க.

அறுபதம் முதலியனவற்றைப் பொற்றொடி முதலியனபோல் அன்மொழித்தொகைப் பெயர் என்றால் என்னை எனின் அன்மொழித்தொகைப் பெயர் செய்யுள் இயற்று-வோன் ஒருவரை வியப்பு முதலியவற்றால் தன் கூற்றாயும் பிறர் கூற்றாயும் உரைப்புழி ஆங்காங்கு வருவதன்றி, இதுபோல நியதிப்பெயராய் வருவது அன்று என்க.

**அங்ஙனம் ஆயினும் <ஆகுபெயரும்[263] அன்மொழித்தொகையும் தம் பொருள் உணர்த்தாது பிறிதுபொருள் உணர்த்துதலான் ஒக்கும் ஆதலின் அவை தம்முள் வேற்றுமை யாதோ எனின் ஆகுபெயர் ஒன்றன் பெயரான் அதனோடு இயைபு பற்றிய பிறிதொன்றனை உணர்த்தி ஒருமொழிக் கண்ணதாம்; அன்மொழித்தொகை இயைபு வேண்டாது இருமொழியும் தொக்க தொகை-யாற்றலால் பிறிதுபொருள் உணர்த்தி இருமொழிக் கண்ணதாம். இவை தம்முள் வேற்றுமை என்க.**

**இருபெயரொட்டு ஆகுபெயர் இருமொழிக்கண் வந்ததன்றோ எனின் அன்று. என்னை? "வகரக் கிளவி"** (தொல். மொழி. 48), **"அதுவாகு கிளவி"** (தொல். வேற். 15), **"மக்கட் சுட்டு"** (தொல். கிளவி. 1) **என்னும் இருபெயரொட்டு ஆகுபெயருள் வகரமும் அதுவாகலும் மக்களும் ஆகிய அடைமொழிகள் கிளவி, சுட்டு என்னும் இயற்பெயர்ப் பொருளை விசேடித்து நில்லாது, எழுத்தும் சொற்பொருளும் பொருளும் ஆகிய ஆகுபெயர்ப் பொருளை விசேடித்து நிற்பக் கிளவி, சுட்டு என்பனவே ஆகுபெயர்ப் பொருளை உணர்த்த, இருபெயரும் ஒட்டி நிற்கும் ஆகலின். இனிப் பொற்றொடி என்னும் அன்மொழித்தொகையில் பொன் என்பது அவ்வாறு அன்மொழித்தொகைப் பொருளை விசேடித்து நில்லாது தொடியினையே விசேடித்து நிற்ப, அவ்விரண்டன் தொகையாற்றலான் அன்மொழித்தொகைப் பொருளை உணர்த்துமாறும் அறிக. இக்கருத்தே பற்றி மக்கட்சுட்டு முதலியவற்றைப் பின்மொழி ஆகுபெயர் என்பாரும்[264] உளர்> என அறிக.**

இப்பட்டுச் சீனம், இப்பொன் கழஞ்சு, இந்நெல் நாழி, இம்மனை ஐங்கோல், இப்புண் ஓர் அம்பு, இந்நெல் அவல், இவ்வாடை கோலிகன் என வருவனவற்றுள்

[263] தொல்காப்பியச் சூத்திர விருத்தி (பக். 81-82).

[264] சுப்பிரமணிய தீக்கிதரும் (பி. வி. 22 உரை) சாமிநாத தேசிகரும் (இல. கொ. 98 உரை) இவ்வாறு கூறுவர்.

சீனம், கழஞ்சு, நாழி, கோல், அம்பு, அவல், கோலிகன் என்பனவற்றை ஆகுபெயர் எனவும்[265] எழுத்துச், சொல், பொருள், யாப்பு, அலங்காரம் என ஐந்து அதிகாரங்கட்கும் வரும் காரியவாகுபெயரைச் சொல்லாகுபெயர் எனவும்[266] அகத்தியம், தொல்காப்பியம் என்பனவற்றை ஆகுபெயர்த் திரிபு எனவும்[267] கூறுவாரும் உளர். இப்பட்டுச் சீனத்து உள்ளது என்பார் இசையெச்சம் ஆக்கி இப்பட்டுச் சீனம் எனக் குறைத்துக் கூறலான் இப்பட்டு என்னும் எழுவாய்க்கு உள்ளது என்பது பயனிலையன்றிச் சீனம் என்பது பயனிலை அன்று ஆதலானும் சுட்டிக் கூறாது சீனம் என வாளா கூறின் அது பல பொருள் ஒரு சொல்போல் அவ்விடத்தினையும் பட்டினையும் உணர்த்தாமையானும் இத்தொடக்கத்தனவாகிய இசையெச்சங்களை ஆகுபெயர் என்பார்க்கு,

"திருவளர் தாமரை சீர்வளர்
காவிக ளீசர்தில்லைக்
குருவளர் பூங்குமிழ் கோங்குபைங்
காந்தள்கொண் டோங்குதெய்வ
மருவளர் மாலை... (திருக். 1:1-3*)

என வரும் உருவகங்களையும் ஆகுபெயர் எனக் கூறல் வேண்டும் ஆதலானும் இவை எல்லாம் ஆகுபெயர் இலக்கணத்தான் வந்தன அல்ல எனவும் சொல்லாகுபெயர்க்கு அவர் காட்டியவற்றுள் சொல்லினது பெயர் அவற்றிற்கு ஆனது இன்மையின் அவை சொல்லாகுபெயர் ஆகா எனவும் வெளிப்படைச்சொல், குறிப்புச்சொல் என்னும் இரண்டனுள் ஆகுபெயர் குறிப்புச்சொல் ஆதலானும் அகத்தியம், தொல்காப்பியம் என்பன கருத்தாவோ காரியமோ என ஐயமுற்று ஒன்றனைக் குறிப்பான் உணர வேண்டாது காரியமாகிய நூல்களை வெளிப்படையான் உணர்த்தலானும் கருத்தாவின்மேல் செல்லாமையானும் விகுதிச் சூத்திரத்துப், "பிற" (நூ. 140) என்பதனான் வரும் அம்விகுதியோடு பகுதி புணர்ந்து இந்திரனாற் செய்யப்பட்ட நூலுக்கு ஐந்திரம் என வந்த ஆரியச்சொல்போல வந்தனவன்றி ஈறு திரிந்தன அல்ல எனவும் உணர்க.

**இவற்றுள்[268] எழுத்துச், சொல், பொருள், யாப்பு, அலங்காரம் என்பன**

---

[265]மயிலைநாதர் (நன். 289), சேனாவரையர், நச்சினார்க்கினியர் (தொல். வேற். மய. 31), வைத்தியநாத தேசிகர் (இல. விள. 192) முதலியோர் இவ்வாறு கூறுவர்.

[266]எழுத்து, சொல் முதலியவற்றை மயிலைநாதர் (நன். 289) சொல்லாகுபெயர் என்பார்.

[267]இளம்பூரணர் (தொல். வேற். மய. 31), நச்சினார்க்கினியர், கல்லாடர் (தொல். வேற். மய. 35), நேமிநாத உரையாசிரியர் (நேமி. 47), வைத்தியநாத தேசிகர் (இல. விள. 192) முதலியோர் இவற்றை ஆகுபெயர்த் திரிபு என்று கூறுவர்.

[268]இவ்வுரைப் பகுதியை இலக்கண விளக்கச் சூறாவளியோடு (பக். 119-120) ஒப்பிடுக.

காரியவாகுபெயர் எனக் கோடலன்றி அப்பெயர்களான் அவ்விலக்கணங்களைக் கூறுதற்குத் தானமாகிய படலங்களைக் கூறினமையான் இவை தானியாகு-பெயர் எனக் கோடலும் ஆம் என்க. இனித் திருவாசகம், திருவாய்மொழி என்பன உண்மையான் நோக்குவார்க்கு அன்மொழித்தொகை ஆவனவன்றி ஆகுபெயர் ஆகாமையும் உணர்க.

இனி ஆகுபெயர்கள்தாம் தத்தம் பொருளை நீங்காது நின்று, தம் பொருளின் வேறு அல்லாத பொருளோடு புணர்தலும் பொருத்தம் இல்லாத கூற்றான் நின்று, பிறிதுபொருளை உணர்த்தலும் ஆகிய அவ்விரண்டு இலக்கணத்தை உடைய விடாத ஆகுபெயரும் விட்ட ஆகுபெயரும் என இருவகைய எனவும் அவற்றிற்கு உதாரணம் முறையே கடுத் தின்றான், குழிப்பாடி நேரிது எனவும்[269] கூறுவர். அவ்வாறு ஆகுபெயர்கள் வருமாறும் உய்த்துணர்ந்து கொள்க. (33)

### வேற்றுமையின் இயல்பும் தொகையும்

{291} **ஏற்கு மெவ்வகைப் பெயர்க்குமீ றாய்ப்பொருள்**
**வேற்றுமை செய்வன வெட்டே வேற்றுமை.**

*எ-னின், மேல், "வேற்றுமைக் கிடனாய்" (நூ. 275) என்றார்; அவ்வேற்றுமை இனைய எனவும் இத்துணைய எனவும் உணர்த்துதல் நுதலிற்று.*

*இ-ள்: தம்மை ஏற்றுக்கோடற்கு உரிய எவ்வகைப்பட்ட பெயர்கட்கும் இறுதியாய் அப்பெயர்ப்பொருளை வேற்றுமைப்படுத்துவனவான வேற்றுமைகள் எட்டேயாம் எ-று.*

வேற்றுமை செய்வன வேற்றுமை எட்டே எனக் கூட்டுக.

எல்லாப் பெயரும் எல்லா வேற்றுமையும் ஏலாது என்பார், 'ஏற்கும்' என்றும் வினைச்சொல் இடைச்சொல் உரிச்சொற்களுள் **பெயர்ப்பட** நின்றனவும் தழீஇக்-கோடற்கு, 'எவ்வகை' என்றும் வினை முதலிய மூன்றும் வேற்றுமை **கொள்ளாது** என்பார், 'பெயர்' என்றும், 'ஏற்கு மெவ்வகைப் பெயர்க்குமீ றாய்' என எய்தியதனை விலக்கி, "எழுவா யுருபு திரிபில் பெயரே" (நூ. 295) எனப் பிறிதுவிதி வகுத்தலின் பெயர் முழுவதூஉம் **உருபாம்** எழுவாயுருபினை ஒழித்து, விளியுருபிற்குப் பெயர் இறுதியாகிய அகப்பாட்டெல்லையினையும் ஏனை ஆறு உருபிற்கும் அதன் இறுதி-யாகிய புறப்பாட்டெல்லையினையும் தழீஇக்கோடற்குப் பொதுமையின், 'ஈறாய்' என்றும் பொருளையே அன்றிச் சொல்லையும் ஒரோவழி வேறுபடுப்பது ஐ முதலிய

[269] **இவ்விரு வகையையும் வைத்தியநாத தேசிகர் (இல. விள. 192) குறிப்பிடுவார்.**

ஏழு உருபிற்குமே அன்றி எழுவாய்க்கு ஒவ்வாமையானும் பொருள் ஒன்றனையும் வேறுபடுத்தல் எட்டு உருபிற்கும் ஒப்ப முடிந்தமையானும் சொல்லையும் உடன் கூறாது, 'பொருள்' என்றும் வேற்றுமை என்னும் காரியத்தைச் செய்யும் கருத்தாவாகிய எட்டு வேற்றுமை உருபிற்கும் வேற்றுமை எனவும் பெயர் போந்தது காரியவாகுபெயராகிய காரணக்குறி என்பார், 'வேற்றுமை செய்வன' 'வேற்றுமை' என்றும்

"ஏழியன் முறைய தெதிர்முக வேற்றுமை
வேறென விளம்பான் பெயரது விகாரமென்று
ஓதிய புலவனு முளனொரு வகையான்
இந்திர னெட்டாம் வேற்றுமை யென்றனன்"

என ஆசிரியர் அகத்தியனார் கூறுப ஆகலின் விளியுருபு படர்க்கைச் சொல்லையும் பொருளையும் முன்னிலைச் சொல்லும் பொருளுமாக வேற்றுமை செய்தலின் அதனை எழுவாயுள் அடக்காது வேறு கோடலே தம் துணிபு என்பார், 'எட்டே' என்றும் கூறினார். வேற்றுமை என்னும் பண்புப்பெயர் பண்பிக்கு ஆகாமையின் பண்பாகுபெயர் அன்றாயிற்று.

இனி இரட்டுற மொழிதலான் வேற்றுமை செய்வன வேற்றுமை எட்டே எனக் கொண்டுகூட்டாது ஆற்றொழுக்காக நிறீஇ, ஏகாரத்தைத் தேற்றம் ஆக்காது பிரிநிலை ஆக்கி, இங்ஙனம் வருவனவாகிய எட்டு உருபும் வேற்றுமை; அவையன்றி ஒருசாரார்[270] கூறும் உருபு அடைந்த பெயரும் உருபின் பயனிலையும் வேற்றுமை அல்ல எனவும் பொருள் உரைத்துக்கொள்க. (34)

வேற்றுமையின் பெயரும் முறையும்

{292} **பெயரே ஐஆல் குஇன் அதுகண்**
**விளியென் றாகு மவற்றின் பெயர்முறை.**

எ-னின், வேற்றுமைகள்தம் பெயரும் முறையும் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: மேல், "எட்டே வேற்றுமை" (நூ. 291) என்றவற்றின் பெயர் என்னை? கிடக்கைமுறை என்னை எனின் பெயர் முதலாக விளி ஈறாக இங்ஙனம் கூறிய பெயரும் முறையும் ஆம். எ-று.

[270] எது வேற்றுமை என்பதில் இலக்கண ஆசிரியர்களுக்குள் கருத்து வேறுபாடு உண்டு. உருபையும் உருபு ஏற்ற பெயரையும் வேற்றுமை என்பார் தொல்காப்பியர். பவணந்தி முனிவர் உருபுகளை வேற்றுமை என்பார். தொடரியலைக் கருதி, உருபு நோக்கிய பயனிலையும் வேற்றுமை என்பது வடமொழி மரபு. இம்மூன்று கொள்கைகளையும் முறையே உருபு, உருபு ஏற்றது, உருபு நோக்கி வந்தது என்று சாமிநாத தேசிகர் (இல. கொ. 20) குறிப்பிடுவார்.

ஏகாரம் எண். மேல், "எட்டே" (நூ. 291) என்ற தொகைக்கு வகை தோன்றப் பெயர் கூறினாரன்றி இவ்வேற்றுமைகளின் பெயர் விகற்பம் எல்லாம் கூறப் புகுந்தார் அல்லர் ஆதலின் அவை எல்லாம் வரும் சிறப்புச் சூத்திரங்களான் (295-303) உணர்க. இவை இம்முறை நிற்றற்குக் காரணமும் அங்ஙனம்[271] காட்டுதும்.

**அன்றியும்,**

**"நாரா யணன்பூ வோரா யிரத்தைக்**
**கரத்தாற் கொய்தோ ரரற்கே கொடுத்துச்**
**சக்கரச் சிறுமையி னீங்கி நற்சுவைப்**
**பாற்கடற் கண்ணே பள்ளிகொண் டான்"** (இல. கொ. 15:1-4)

**என்பதனானும்**[272] **அறிக.** (35)

எழுவாயுருபு பிற உருபுகளை ஏற்றல்

{293} **ஆற னுருபு மேற்குமவ் வுருபே.**

**எ-னின், மேற் கூறிய வேற்றுமை உருபு எட்டனுள் எழுவாயுருபே ஏனைய உருபுகளையும் ஏற்கும் என்பது உணர்த்துதல் நுதலிற்று.**

**இ-ள்: எழுவாய் வேற்றுமையாவது பெயர் மாத்திரையாய்த் தோன்றி நிற்கும் நிலை என்ப ஆகலின் அவ்வெழுவாயாய் நின்ற உருபே ஐ முதலிய ஆறு வேற்றுமைகளின் உருபும் ஏற்கும் எ-று.**

**எனவே விளியுருபாவது பெயரது விகாரமே ஆகலின் அவ்வெழுவாயுருபின் வேறு அல்ல எனவும் படும் என்பதுபற்றி, 'ஆற னுருபு மேற்குமவ் வுருபே' என்றார். இங்ஙனம், 'ஆற னுருபும்' என அன்சாரியை தவிர்வழி வந்தமையால் செய்யுள் விகாரம்.**

**இனி இச்சூத்திரத்திற்கு இவ்வாறு பொருள் கொள்ளாது பெயரே அன்றி ஆறாம் வேற்றுமை உருபும் அவ்வுருபுகளை ஏற்கும் எனப் பொருள் கொண்டு**[273] **சாத்தனது, சாத்தனதை, சாத்தனதால், சாத்தனதற்கு, சாத்தனதனின், சாத்த-**

---

[271] **அங்ஙனம் காட்டிய இடங்கள்: நூ. 295, 296, 297, 298, 299, 300, 301, 303.**

[272] **வேற்றுமைகள் வினை கொண்டு முடிவதை விளக்கும் உதாரணப் பாடல்களை வேறு சில நூல்களிலும் (வீர. 39; பி. வி. 10) காணலாம்.**

**இராமாநுச கவிராயரும் (நன். 292) ஒரு உதாரணப் பாடலை வழங்கியுள்ளார்.**

[273] **தொல்காப்பியச் சூத்திர விருத்தியோடு (பக். 83) ஒப்பிடுக.**

னதனது, சாத்தனதன்கண், சாத்தனதே என உதாரணம் காட்டுவாரும்[274] உளர். உருபு ஏற்றல் பெயர்க்கே உரிய இலக்கணமன்றி வினை முதலியவற்றிற்கு உரிய இலக்கணம் அன்றாம் ஆதலானும், "பெயர்வழித் தம்பொரு டரவரு முருபே" (நூ. 241) என்றும், "ஏற்கு மெவ்வகைப் பெயர்க்குமீ றாய்" (நூ. 291) என்றும் வரையறை கூறிப் போந்தமையானும் ஈண்டு இடைச்சொல் உருபு ஏற்கும் எனின் மாறுகொளக் கூறலாம் ஆதலானும் சாத்தனதை, சாத்தனதால் என்புழிச் சாத்தனது என்பது குழையது, கோட்டது என்றாற்போலத் துவ்விகுதியும் அகரச்சாரியையும் பெற்று உருபு ஏற்று நின்ற வினைக்குறிப்புப் பெயராம் ஆதலானும் அன்றியும் உருபு ஏற்புழிப் பெயர்போலத் தனித்து நின்று உருபு ஏற்றல் வேண்டும் ஆதலானும் அதனை, அதனால் என உருபு ஏற்கும் எனின் சுட்டுப்பெயர் உருபு ஏற்றதாமன்றி உருபு உருபு ஏற்றது அன்றாம் ஆதலானும் அது பொருந்தாது என்க. (36)

உருபு ஏற்காத பெயர்கள்

294. **நீயிர் நீவிர்நா னெழுவா யலபெறா.**

எ-னின், மேல், "ஏற்கு மெவ்வகைப் பெயர்க்கும்" (நூ. 291) என்றமையின் ஏலாப் பெயரும் உள என்றார் ஆதலின் அவற்றுள் இரண்டாவது முதலிய ஏழு உருபும் ஏலாதன இவை என உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: இம்மூன்று பெயரும் எழுவாய் வேற்றுமையினை அன்றி ஏனை ஏழு வேற்றுமையினையும் ஏலா எ-று.

எனவே நீர் என்னும் ஈர் எழுத்து ஒரு மொழி அதுபோல ஈர் எழுத்து ஒரு மொழியாகிய நும் எனவும் யான் என்னும் யகர முதன்மொழி யகரத்தோடு பிறப்பு ஒத்த எகர முதன்மொழியாகிய என் எனவும் திரிந்து, ஐ முதலிய ஆறு உருபும் ஏற்றாற்போல நீயிர், நீவிர், நான் என்னும் மூன்றும் அங்ஙனம் வாராமையின் நும், என் எனத் திரிதலும் அவ்வுருபுகளை ஏற்றலும் இல என்பதாயிற்று. (37)

முதல் வேற்றுமை

{295} **அவற்றுள்,**
**எழுவா யுருபு திரிபில் பெயரே**
**வினைபெயர் வினாக்கொள லதன்பய னிலையே.**

---

[274] மயிலைநாதர் (நன். 292), வைத்தியநாத தேசிகர் (இல. விள. 195), சங்கர நமச்சிவாயர் (நன். 293) ஆகியோர் இவ்வாறு பொருள் கூறி உதாரணம் காட்டுவர்.

எ-னின், நிறுத்த முறையானே (292) பெயர்வேற்றுமையது இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: மேற் கூறிப் போந்த (292) எட்டு வேற்றுமையுள் முதல் வேற்றுமையின் உருபாவது திரிபு இல்லாத பெயரேயாம்; **அதன் பொருள்நிலையாவது** வினையையும் பெயரையும் வினாவையும் **கொள வருதலாம்** எ-று.

**திரிபு இல்லாமையாவது உருபும் விளியும் ஏலாது முடிக்கும் சொல்லும் நோக்காது, ஆ என்றாற்போலத் தன் நிலையில் நிற்றலாம்.**

**பயனிலை என்றது ஈண்டு முடிக்கும் சொல் அன்று; பொருள்நிலை என உணர்க. பொருள்நிலை எனினும் பயனிலை எனினும் ஒக்கும்.**

**பொருள் என வாளா கூறாது பொருள்நிலை என்றது என்னை எனின் ஏனை வேற்றுமையின் பொருள்கட்கு எல்லாம் அப்பொருள் முதற்கண் நிலை-பெறுதலின் என்க. கொள வருதலாவது முடிக்கும் சொல் கொள வரும் தன்மை.**

**எனவே எழுவாய் வேற்றுமை உருபாவது தன் நிலையின் நிற்கும் பெயரே என்பதூஉம்,** 'பெயரே' என்றமையான் இதற்கு **இது** என வேறு உருபு இன்று என்பதூஉம் **அதன் பொருளாவது வினைமுதற் பொருண்மையாகத் தன்னைத் தானே வேற்றுமை செய்தல் என்பதூஉம் பெற்றாம்.**

தன்னைத் தானே வேற்றுமை செய்தல்,

"நன்னிலைக்கட் டன்னை நிறுப்பானுந் தன்னை
நிலைகலக்கிக் கீழிடு வானும் - நிலையினும்
மேன்மே லுயர்த்தி நிறுப்பானுந் தன்னைத்
தலையாகச் செய்வானுந் தான்" *(நாலடி. 248)*

என்பதனானும் உணர்க.

வினை எனப் பொதுப்படக் கூறினமையின் வினையும் வினைக்குறிப்பும் ஆகிய விகற்பம் எல்லாம் **கொள்க. இவ்வாறே ஆசிரியர் தொல்காப்பியரும்,**

**"எழுவாய் வேற்றுமை பெயர்தோன்று நிலையே"** *(தொல். வேற். 4)*

**எனவும்,**

"பொருண்மை சுட்டல் வியங்கொள வருதல்
வினைநிலை யுரைத்தல் வினாவிற் கேற்றல்

பண்புகொள வருதல் பெயர்கொள வருதலென்று
அன்றி யனைத்தும் பெயர்ப்பய னிலையே" (தொல். வேற். 5)

எனவும் கூறிய முறைமையும் பொருண்மை சுட்டல் முதலியவாகக் கூறிய ஆறும் இம்மூன்றுள் அடங்குமாறும் காண்க.

உ-ம்: ஆ உண்டு[275] என்பது ஒரு பொருளின் பண்பு முதலாயின சுட்டாது அப்பொருள் தன்மையது உண்மைத் தன்மையே சுட்டி நிற்க வருதலாம். ஆ செல்க என்பது தான் ஏவலைக் கொள்ள வருதலாம். ஆ கிடந்தது என்பது தனது தொழிலினைச் சொல்ல வருதலாம். ஆ கரிது என்பது தனது பண்பினைத் தான் கொள வருதலாம். வினைக்குறிப்பு ஆதல் ஒப்புமையான் ஆ இல்லை, ஆ அல்ல என்னும் தொடக்கத்துக் குணப்பொருள அல்லா வினைக்குறிப்புக் கொள வருதலும் கொள்க. இவை எல்லாம் வினைப்பாற் பட்டன. ஆ பல என்பது தான் பெயரைக் கொண்டு முடிய வருதலாம்; ஆ யாது, ஆ எவன் என்பன தான் வினாவுதற்குப் பொருந்தி வருதலாம் எனப் பகுத்துக் காண்க. அங்ஙனம் பகுத்துக் காண்புழி அவிகாரியாய் நின்ற பெயர் இம் முடிக்கும் சொற்களை அவாவிய காலத்து அவிகாரியினின்றும் விகாரியாகத் தன்னைத் தானே வேற்றுமை செய்து நின்றமையும் காண்க. இதனை முதல் வேற்றுமை என்றது என்னை எனின் பெயரேயாய் நிற்றலானும் வினைமுதற் பொருண்மையைத் தருதலானும் என்க.

இனிப் பயனிலை என்றது முடிக்கும் சொல் எனக் கூறுவாரும்[276] உளர். வினைபெயர் வினாக்கொளும் என முற்றுச்சொல்லால் கூறாது, 'வினைபெயர் வினாக்கொளல்' எனத் தொழிற்பண்புச் சொல்லால் கூறுதலானும் இரண்டாம் வேற்றுமை முதலியவற்றிற்கு உருபும் பொருளும் கூறுதலான் இம்முதல் வேற்றுமைக்கும் உருபும் பொருளும் கூற வேண்டும் ஆதலானும் இவ்வெட்டு வேற்றுமைக்கும் முடிக்கும் சொல்,

"எல்லை யின்னு மதுவும் பெயர்கொளும்
அல்ல வினைகொளும்" (நூ. 319)

என்னும் சூத்திரத்தால் பிற் கூறுதலானும் ஈண்டும் கூறின் கூறியது கூறலாம் ஆதலானும் அது பொருந்தாது என்க.

இன்னும் அவருள் சிலர், 'வினாக்கொளல்' என்பதற்குச் சாத்தனோ என வினா

[275]"பொருண்மை சுட்டல்" என்னும் (தொல். வேற். 5) நூற்பாவுக்குச் சேனாவரையர், நச்சினார்க்கினியர் வரைந்த உரைகளோடு இவ்வுரைப் பகுதியை ஒப்பிடுக.
[276]இந்நூற்பாவுக்குச் சங்கர நமச்சிவாயர் இவ்வாறு உரை கூறுவார்.

இடைச்சொற்களைக் கொள்ளும் என **உதாரணம்**[277] **காட்டுவர். அங்ஙனம் ஆயின்** தெரிநிலை, தேற்றம் முதலிய பொருள் தரும் இடைச்சொற்களையும் கொள்ளும் எனக் கூறல் வேண்டும் ஆதலானும் இஃது இடைச்சொற் சந்தியன்றி எழுவாய்ச் சந்தி அன்றாம் ஆதலானும் **அவர்க்கு அது கருத்து அன்று** என்க.

**<இவ்வினைமுதற் பொருள்,**[278]

**"பிறர்க்கின்னா முற்பகற் செய்யிற் றமக்கின்னா**
**பிற்பகற் றாமே வரும்"** *(குறள். 319)*

**"பெரியவர் கேண்மை பிறைபோல நாளும்**
**வரிசை வரிசையா நந்தும் - வரிசையா**
**வானூர் மதியம்போல் வைகலுந் தேயுமே**
**தானே சிறியார் தொடர்பு"** *(நாலடி. 125*)*

**என்பவற்றுள் இன்னா தாமே வரும், கேண்மை தானே நந்தும், தொடர்பு தானே தேயும் எனச் செயப்படுபொருட்கண்ணும் ஆதித்தன் கல் தீப் பிறப்பித்தான், காற்றுப் பழம் உதிர்த்தது என ஏதுவின்கண்ணும் சாத்தன் உண்டான் எனத் தன்வசம் என்பதன்கண்ணும் மாடம் செயப்பட்டது என வினைமுதல் என்று தெரியப்படாமல் வினைமுதலாயே நிற்பதாகிய தெரியாநிலைக்கண்ணும், "ஒத்த கிழவனுங் கிழத்தியுங் காண்ப"** *(தொல். களவு. 2)* **என ஓர் பொருளே ஒரு கால் வினைமுதலாயும் ஒரு கால் செயப்படுபொருளாயும் நிற்கும் தடுமாற்றத்தின்கண்ணும்,**

**"அறவினை யாதெனிற் கொல்லாமை கோறல்**
**பிறவினை யெல்லாந் தரும்"** *(குறள். 321)*

**என்பதனுள் கொல்லாமை அறவினை எல்லாம் தரும்; கோறல் பிற வினை எல்லாம் தரும் எனத் தொழிற்பெயர்க்கண்ணும் கண் காணும், செவி கேட்கும் எனக் கருவியின்கண்ணும் குன்று குவட்டைத் தாங்கும், தூண் போதிகையைத் தொட்டது என இடத்தின்கண்ணும், "இரப்பவ ரென்பெறினுங் கொள்வர்"** (வி. மே.) **எனக் கொள்பவன்கண்ணும் வரும் எனவும் தாய் மகவுக்கு ஊட்டினாள், ஆரியன் மாணாக்கனைப் படிப்பித்தான், தலைவன் தலைவியைப் புல்லினான் என, "இருவினை முதலா லொருவினை யும்முள"** (இல. கொ. 27) **எனவும் அரசன்**

[277] மயிலைநாதர் (நன். 294) இவ்வாறு உதாரணம் காட்டுவார்.
[278] இலக்கணக் கொத்து நூற்பாக்களும் (நூ. 27, 28) உரைப் பகுதிகளும் (நூ. 26, 27, 28).

தேர் செய்தான், தச்சன் தேர் செய்தான், சாத்தன் உறங்கினான் என,

"ஏவுத லியற்றுத லிவையின்வே றாதல்
எனவினை முதன்மூ வகையாம்" (இல. கொ. 28)

எனவும் கொள்க.> இவை எல்லாம் உரையிற் கோடல் என்னும் தந்திர உத்தி. இவ்வாறு பிற வருவனவும் அன்ன. (38)

## இரண்டாம் வேற்றுமை

{296} **இரண்டா வதனுரு பையே யதன்பொருள்
ஆக்க லழித்த லடைத லீத்தல்
ஒத்த லுடைமை யாதி யாகும்.**

எ-னின், இரண்டாம் வேற்றுமையது இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: இரண்டாம் வேற்றுமையினது உருபு மேற் கூறிய (292) ஐயுருபு ஒன்றுமே. அதன் பொருள்களாவன தன்னை ஏற்ற பெயர்ப்பொருளை ஆக்கப்படுபொருளாகவும் அழிக்கப்படுபொருளாகவும் அடையப்படுபொருளாகவும் துறக்கப்படுபொருளாகவும் ஒக்கப்படுபொருளாகவும் உடைமைப்பொருளாகவும் இவை போல்வன பிறவாகவும் வேற்றுமை செய்தலாம் எ-று.

ஈண்டுத் தந்துரைத்தன எல்லாம் மேற் போந்த, "ஏற்கு மெவ்வகை" (நூ. 291) என்னும் சூத்திரத்திற்கு இயைய வந்த இசையெச்சம். மேல் வருவனவும் (297-301; 304) அன்ன.

வ-று: குடத்தை வனைந்தான், உடைத்தான், அடைந்தான், துறந்தான், ஒத்தான், உடையான் என வரும். குடத்தை ஒத்தான் என்புழிச் சுதந்திரமின்றி ஒழுகினான் என்பது பொருள்.

'ஆதி' என்றமையான் இவ்வாறு செயப்படுபொருளாக வேற்றுமை செய்தல் எல்லாம் கொள்க.

ஒருவன் ஓர் வினை செய்ய, அதனால் தோன்றிய பொருள் யாது, அது செயப்படுபொருள் என்பதாம். ஒருவன் ஓர் வினை செய்யத், தொழிற்படுபொருள் யாது, அது செயப்படுபொருள் எனினும் அமையும். செயப்படுபொருள், செய்பொருள், கருமம், காரியம் என்பன ஒரு பொருட் கிளவி.

அழித்தல் முதலிய வினை செய்தவழித் தோன்றிய காரியங்கள் என்னை எனின் அழிபொருள் ஆதல் முதலியனவும் குறிப்புவினையுள் ஒன்றனை உடையன் ஆகிய காலத்து அஃது உடைமை ஆதலும் ஆம். பிறவும் அன்ன.

<இச்செயப்படுபொருள்,[279]

"கருத்துண் டாதல் கருத்தின் றாதல்
இருமையு மாத லீருரு பிணைதல்
கருத்தா வாத லகநிலை யாதல்
தெரிநிலை" (இல. கொ. 31:1-4)

என இவை முதலியன ஆகியும் வரும் எனக் கொள்க. இவற்றிற்கு உதாரணம்: சோற்றை உண்டான் எனவும் சோற்றைக் குழைத்தான் எனவும் எறும்பை மிதித்து வழியைச் சென்றான், பசும்புல்லை மிதித்துப் பல ஊரை அடைந்தான், தூளொடு கூழை உண்டான், நஞ்சினைக் கலந்த பாலைக் குடித்தான், கத்தரிக்காயையும் புழுவையும் கறித்தான், பதரையும் நெல்லையும் பணத்திற்குக் கொண்டான் எனவும் ஆரியனை ஐயுற்ற பொருளை வினாவினான் எனவும் பசுவினைப் பாலினைக் கறந்தான், யானையைக் கோட்டைக் குறைத்தான், பசுவினது, யானையது என்பனபோல ஆரியனது என வாராமைபற்றி இங்ஙனம் ஈருருபு இணைதல் இருவகைப்பட்டன எனவும் தன்னைப் புகழ்ந்தான், தன்னைக் குத்தினான், தன்னைப் பேணினான், தன்னைக் காதலித்தான் எனவும் வருதலைச் செய்தான் எனவும் மாடம் செயப்பட்டது எனவும் முறையே காண்க.

தெரிநிலையாவது வினைமுதல் உருபு ஏற்றும் செயப்படுபொருளே எனத் தெரிய நிற்றல். எயிலை இழைத்தான், பொருளைப் பெற்றான், கயிற்றை அறுத்தான் என முறையே இயற்றப்படுதலும் எய்தப்படுதலும் வேறுபடுக்கப்படுதலும் முதலியன அவற்றுள்ளே அடங்கும். முதலியன என்றதனால் ஆரியன் மாணாக்கனை ஊர்க்குப் போக்கினான், தாய் மகளை ஊர்க்குப் போக்கினாள் என்புழி மாணாக்கன், மகள் என்னும் இருவரும் போதலாலே வினைமுதலாயும் ஏவப்படுதலால் செயப்படுபொருளாயும் ஏவுவித்துக்கொள்ளுதலால் ஏவுதற் கருத்தாவாயும் ஏவப் போதலால் இயற்றுதற் கருத்தாவாயும் வந்தன.>

இவ்வேற்றுமை தன் பெயர்ப்பொருளை மேற் போந்த கருத்தனால் ஆகிய காரியம் ஆக்குதலின் இரண்டாம் வேற்றுமை எனப்பட்டது. (39)

### மூன்றாம் வேற்றுமை

{297} **மூன்றா வதனுரு பாலா னோடொடு
கருவி கருத்தா வுடனிகழ் வதன்பொருள்.**

எ-னின், மூன்றாம் வேற்றுமையது இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

---
[279] இலக்கணக் கொத்து நூற்பாவும் (நூ. 31) உரையும்.

இ-ள்: மூன்றாம் வேற்றுமையின் உருபு மேற் கூறிய (292) ஆலே அன்றி ஆனும் ஓடும் ஒடுவும்[280] ஆம். அவற்றின் பொருள்களாவன தம்மை ஏற்ற பெயர்ப்பொருளைக் கருவியாகவும் ஏதுப் பொருட்டாகிய கருத்தாவாகவும் உடனிகழ்வதாகவும் வேற்றுமை செய்தலாம் எ-று.

மூன்றாம் வேற்றுமைப் பொருள் ஆதலின் ஏதுப் பொருட்டாகிய கருத்தா என்றும், 'அதன்பொருள்' என்பது தொகுதியொருமை ஆதலின் அதற்கு அவற்றின் பொருள் என்றும் பொருள் கூறினாம்.

கருவி, காரணம், ஏது, நிமித்தம் என்பன வேறு பொருட் கிளவியாயும் ஒரு பொருட் கிளவியாயும் வருதலின் காரணம் மூன்றனுள் முதற்காரணம் துணைக்-காரணம் என்னும் இரண்டனையும் கருவி என்றும் ஏவுதற் கருத்தாவும் இயற்றுதற் கருத்தாவும் ஆகிய நிமித்தகாரணம் இரண்டனையும் கருத்தா என்றும் கூறினார். வனைந்தான் என்புழிக் குடமாகிய காரியத்திற்கு அது அதுவாகிய மண் முதற்காரணம்; குலாலனது அறிவும் அந்தக்கரணமும் முதலிய ஞாபகக்கருவியும் தண்டசக்கரம் முதலிய காரகக்கருவியும் அம்முதற்காரணத்துக்குத் துணையாய் நின்று காரியத்தைத் தருதலின் துணைக்காரணம். குலாலன் நிமித்தமாக அக்காரியம் தோன்றுதலின் அவன் நிமித்த-காரணம். ஞாபகக்கருவி என்பது அறிதற்கருவி. காரகக்கருவி என்பது செய்தற்கருவி. நடந்தான் என்புழிக் குடம் போல்வதோர் காரியம் இன்றேனும் நடத்தலைச் செய்தான் என்பது பொருள் ஆதலின் நடத்தல் காரியம். அவயவத்தால் பல வேறு வகைப்பட்ட குடம் முதலிய கலன்களில் பொதுமையில் நிற்கும் மண்போலப் பல வேறு வகைப்-பட்ட வினைகளில் பொதுமையின் நிற்கும் தொழில் நடத்தற்கு முதற்காரணம்; அறிவும் காலும் முதலியன துணைக்காரணம்; வினைமுதல் நிமித்தகாரணம். பிறவும் அன்ன.

வ-று: அறிவால் ஆக்கிய காட்சி, அறிவால் ஆகிய காட்சி என்புழி ஆலுருபு பெயர்ப்பொருளை ஞாபக முதற்கருவியாக வேற்றுமை செய்தது. கண்ணால் ஆக்கிய காட்சி, கண்ணால் ஆகிய காட்சி என்புழி ஞாபகத் துணைக்கருவியாக வேற்றுமை செய்தது. காட்சி என்றது காட்சியுணர்வை. மண்ணால் ஆக்கிய குடம், மண்ணால் ஆகிய குடம் என்புழிக் காரக முதற்கருவியாக வேற்றுமை செய்தது. திரிகையால் ஆக்கிய குடம், திரிகையால் ஆகிய குடம் என்புழிக் காரகத் துணைக்கருவியாக வேற்றுமை செய்தது. இங்ஙனம் ஆக்குதற்கு வினைமுதல் அறிவனும் குலாலனும் ஆம். ஆதற்கு வினைமுதல் காட்சியுணர்வும் குடமும் ஆம். இக்காட்சியுணர்வும்

---

[280] மூன்றாம் வேற்றுமைக்கு ஆலுருபு ஒன்றையும் மேலே (292) கூறிய ஆசிரியர் இந்-நூற்பாவில் நான்கு உருபுகளைக் கூறுவது முரணாகாது என்று மயிலைநாதர் (நன். 296) கூறும் அமைதி அறியத் தக்கது.

குடமும் வினைமுதல் ஆகிய காலத்து இக்கருவிகள் ஏதுப்பொருளவாய் நின்றன. அரசனால் ஆகிய தேவகுலம், தச்சனால் ஆகிய தேவகுலம் என்புழி முறையே ஏதுப்பொருளவாகிய ஏவுதற் கருத்தாவாகவும் இயற்றுதற் கருத்தாவாகவும் வேற்றுமை செய்தது. ஆக்கிய தேவகுலம் என வரின் மூன்றாம் உருபு ஏலாவாய் அரசனும் தச்சனும் எழுவாயாம். இஃது எழுவாய்க்கண் வரும் கருத்தாவிற்கும் இவ்வேற்றுமைக்கண் வரும் கருத்தாவிற்கும் தம்முள் வேற்றுமை என்க.

*"தூங்குகையா லோங்குநடைய*
*உறழ்மணியா லுயர்மருப்பின" (புறம். 22:1-2*),*

*"பண்டறியேன் கூற்றென் பதனை யினியறிந்தேன்*
*பெண்டகையாற் பேரமர்க் கட்டு" (குறள். 1083)*

என்புழி ஆலுருபு உடனிகழ்வதாக வேற்றுமை செய்தது. ஆனுருபையும் இவ்வாறே ஒட்டிக் காண்க.

*"நாவீற் றிருந்த கலைமாமக ளோடு நன்பொற்*
*பூவீற் றிருந்த திருமாமகள் புல்ல நாளும்" (சீவக. 30:1-2*)*

எனவும்,

*"மனத்தொடு வாய்மை மொழியிற் றவத்தொடு*
*தானஞ்செய் வாரிற் றலை" (குறள். 295)*

எனவும் முறையே ஓடும் ஒடுவும் உடனிகழ்வது ஆக்கின. ஏற்புழிக் கோடலான் இவ்விரண்டு உருபிற்கும் உடனிகழ்ச்சிப்பொருள் ஒன்றுமே கொள்க.

இங்ஙனம் வரும் கருத்தா ஏதுப் பொருட்டாய் வருதலின் விதந்து கூறாது கருவியின்பாற் படுத்தினும் அமையும் என்பது தோன்ற, இவ்வுருபிற்குச் சிறந்த கருவிப்பொருளை முற் கூறினார்.

**<இக்கருவிப்பொருள்[281] அகக்கருவி, புறக்கருவி, ஒற்றுமைக்கருவி என மூன்றாயும் வரும் எனக் கொள்க. அவையாவன: மனத்தான் நினைத்தான், வாளால் வெட்டினான், அறிவால் அறிந்தான் என முறையே காண்க.>**

இரண்டாம் வேற்றுமைப் பொருளாகிய காரியத்திற்கு வேண்டும் கருவிப்பொருளைத் தருதலின் இது மூன்றாம் வேற்றுமை எனப்பட்டது.

---

[281] **இலக்கணக் கொத்து (நூ. 33) உரை.**

"ஆலு மானு மோடு மொடுவுஞ்
சாலு மூன்றாம் வேற்றுமைத்[282] தனுவே
செய்வோன் காரணஞ் செயத்தகு கருவி
எய்திய தொழின்முத லியைபுட[283] னதன்பொருள்"

என்றார் ஆசிரியர் அகத்தியனாரும் என்க. முதற்காரணத்தைக் காரணம் என்றும் ஏவற் கருத்தாவைத் தொழின்முதல் என்றும் விதந்து கூறினார் ஆதலின் இங்ஙனம் பொருள் ஐந்து ஆயின. (40)

## நான்காம் வேற்றுமை

{298} **நான்கா வதற்குரு பாகுங் குவ்வே**
**கொடைபகை நேர்ச்சி தகவது வாதல்**
**பொருட்டுமுறை யாதியி னிதற்கிதெனல் பொருளே.**

எ-னின், நான்காம் வேற்றுமையது இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: நான்காம் வேற்றுமைக்கு உருபு மேற் கூறிய (292) கு ஒன்றுமே ஆம். அதன் பொருளாவது கொடையும் பகையும் நேர்ச்சியும் தகவும் அதுவாதலும் பொருட்டும் முறையும் முதலான பொருள் தோன்றப் புணரும் புணர்ச்சிக்கண், இதற்கு இது என அங்ஙனம் வருதற்கு உரிய எப்பொருளினையும் ஏற்றுக்கொள்ளும் பொருளாகத் தன்னை ஏற்ற பெயர்ப்பொருளை வேற்றுமை செய்தலாம் எ-று.

'இதற்கிது' என்றமையான் ஏற்றுக்கொள்ளும் பொருள் என்பது பெற்றாம்.

வ-று: "இரப்பார்க்கொன், றீவார்மே னிற்கும் புகழ்" (குறள். 232) என்பது கொடை. "பிணிக்கு மருந்து" (குறள். 1102) என்பது பகை. விளக்கிற்கு எண்ணெய் என்பது நேர்ச்சி. நட்பு என்பதும் இது. "அருங்கல முலகின் மிக்க அரசர்க்கே யுரிய" (சூளா. 1015:1) என்பது தகுதி. ஆடைக்கு நூல் என்பது அதுவாதல். கூழிற்குக் குற்றேவல் செய்யும் என்பது பொருட்டு. சாத்தற்கு மகன் என்பது முறை.

'ஆதி' என்றமையானே கைக்கு யாப்புடையது கடகம் என்னும் யாப்புடைமை முதலியவாய் இதற்கு இது என்பது பட வருவன எல்லாம் கொள்க. இவற்றுள் ஏற்றுக்கொள்ளும் பொருளாக வேற்றுமை செய்தல் காண்க.

---

[282] "வேற்றுமைக் கதுவே" என்பது ஆறுமுக நாவலர் பாடம்.
[283] "லியைபுடைத் ததன்பொருள்" என்பது மயிலைநாதர் (நன். 296) பாடம்.

<இவ்வேற்றுக்கோடற்பொருள்,[284]

"கேளா தேற்றல் கேட்டே யேற்றல்
ஏலா தேற்ற லீவோ னேற்றல்
உயர்ந்தோ னேற்ற லிழிந்தோ னேற்றல்
ஒப்போ னேற்ற லுணர்வின் றேற்றல்
விருப்பா யேற்றல் வெறுப்பா யேற்றல்" *(இல. கொ. 36:1-5)*

என இவை முதலாகப் பலவும் ஆம் எனக் கொள்க.

உ-ம்: ஆவிற்கு நீர் விட்டான் எனவும் வறியார்க்கு ஈந்தான் எனவும் மாணாக்கனுக்கு அறிவைக் கொடுத்தான் எனவும் தனக்குச் சோறு இட்டான், தனக்கு அரிசி கொடுத்தான்,

"அருமறை சோரு மறிவிலான் செய்யும்
பெருமிறை தானே தனக்கு" *(குறள். 847)*

எனவும் அரனுக்குக் கண்ணலர் கொடுத்தான் அரி எனவும் அரிக்குச் சக்கரம் கொடுத்தான் அரன் எனவும் சோழற்கு விருந்து கொடுத்தான் சேரன் எனவும் சோற்றிற்கு நெய் விட்டான், நீர்க்கு வாசம் ஊட்டினான், வாளிற்கு உறை வழங்கினான், தண்டிற்குத் தங்கம் கட்டினான், சுவர்க்குச் சித்திரம் எழுதினான் எனவும் மாணாக்கனுக்குக் கசையடி கொடுத்தான் ஆரியன் எனவும் கள்ளனுக்குக் கசையடி கொடுத்தான் அரசன் எனவும் முறையே காண்க.

முதல் என்றதனால், மருகனுக்கு மகள் கொடுத்தான் என்பது வழக்கு. மகனுக்கு அரசு கொடுத்தான் என்பது உரிமை. அரசர்க்குத் திறை கொடுத்தான் என்பது அச்சம். தந்தை தாய்க்குத் திதி கொடுத்தான் என்பது பாவனை எனவும் வரும்.>

ஒருவன் ஓர் காரியத்தை ஒரு கருவியால் செய்தல் அக்காரியம் தனக்கேனும் பிறர்க்கேனும் உதவுதற்பொருட்டன்றி, வீண்காரியம் செய்யான் ஆதலின் இஃது இம்முறையானே நான்காம் வேற்றுமை எனப்பட்டது. (41)

### ஐந்தாம் வேற்றுமை

{299} **ஐந்தா வதனுரு பில்லு மின்னும்
நீங்கலொப் பெல்லை யேதுப் பொருளே.**

எ-னின், ஐந்தாம் வேற்றுமையது இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

---

[284] இலக்கணக் கொத்து நூற்பாவும் (நூ. 36) உரையும்.

இ-ள்: ஐந்தாம் வேற்றுமையின் உருபாவன இல்லும் மேற் கூறிய (292) இன்னும் ஆம். அவற்றின் பொருளாவன நீங்கற்பொருளாகவும் உவமைப்பொருளாகவும் எல்லைப்பொருளாகவும் ஏதுப்பொருளாகவும் தம்மை ஏற்ற பெயர்ப்பொருளை வேற்றுமை செய்தலாம் எ-று.

ஏதுப்பொருள் மூன்றாம் வேற்றுமைக்கு அன்றி இதற்கு அத்துணைச் சிறப்பின்மையின் பிற் கூறப்பட்டது.

வ-று: தமரின் தீர்ந்தான் இவன், வரையின் வீழ் அருவி,

"தலையி னிழிந்த மயிரனையர் மாந்தர்
நிலையி னிழிந்தக் கடை" (குறள். 964)

எனவும் அரசரிற் பெரியர் அந்தணர், ஆவின் இழிந்தது மேதி எனவும் வருவழி இன்னுருபு நீங்குதற் பொருளவாக வேற்றுமை செய்தது. பாலின் வெளிது கொக்கு, காக்கையின் கரிது களம்பழம், "நாயிற் கடைப்பட்ட நம்மை" (திரு. 277:1) என்பனவும் ஒப்புமை கருதாது உயர்வும் தாழ்வும் கருதியவழி நீங்குதற் பொருளவாம்.

**இந்நீக்கப்பொருள்,[285] <"நிலைத்திணை யியங்கு திணைபண் பாதியின்"** (இல. கொ. 38:1) **வரும் எனவும் கொள்க. அவையாவன: மலையின் இழிந்தான் எனவும் யானையின் இழிந்தான் எனவும், "சிறுமையி னீங்கிய"** (குறள். 98*) **எனவும் வரும். "ஆதி"** (இல. கொ. 38:1) **என்றதனால், "குடிப்பிறந்து குற்றத்தி னீங்கி"** (குறள். 502), **"ஐயத்தி னீங்கி"** (குறள். 353) **என வரும்> எனவும் கொள்க. இவ்விலக்கணத்தான் முன்னர்க் காட்டிய உதாரணங்களையும் உய்த்துணர்ந்து கொள்க.**

"திறல்வே னுதியிற் பூத்த கேணி" (சிறுபாண். 172), "பொன்னிற் பிதிர்ந்த பொறிசுணங் கிளமுலை" (நன். 298 மயிலை.) என்புழி உவமைப்பொருளாக வேற்றுமை செய்தது. கருவூரின் கிழக்கு, மருவூரின் மேற்குச் சோணாடு என்புழி எல்லைப்பொருளாக வேற்றுமை செய்தது. "கோட்டிற் செய்த கொடிஞ்சி நெடுந்தேர்" (பொருந. 163*), அறிவிற் பெரியன் என்புழி ஏதுப்பொருளாக வேற்றுமை செய்தது. இல்லுருபினையும் இவ்வாறே ஒட்டிக் காண்க.

இங்ஙனம் கூறவே எல்லாப் பொருளையும், "இதனி னிற்றிது" (தொல். வேற். 16) என விகற்பித்து உணர்தற்கு வருவன இவ்வுருபு என்பதாயிற்று. ஆகவே நான்காம் வேற்றுமைப் பொருளாகிய கொள்வோனையும் கொடைப்பொருளினையும் இவ்வாறு

---

[285] **இலக்கணக் கொத்து நூற்பாவும் (நூ. 38) உரையும்.**

விகற்பித்து உணர்ந்தல்லது கொடுத்தல் கூடாமையின் இஃது ஐந்தாம் வேற்றுமை எனப்பட்டது. (42)

ஆறாம் வேற்றுமை

{300} **ஆற னொருமைக் கதுவு மாதுவும்**
**பன்மைக் கவ்வு முருபாம் பண்புறுப்**
**பொன்றன் கூட்டம் பலவி னீட்டந்**
**திரிபி னாக்க மாந்தற் கிழமையும்**
**பிறிதின் கிழமையும் பேணுதல் பொருளே.**

*எ-னின், ஆறாம் வேற்றுமையது இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.*

*இ-ள்: ஆறாம் வேற்றுமையினது ஒருமைப் பொருண்மைக்கு மேற் கூறிய (292) அது என்பதே அன்றி ஆது என்பதும் பன்மைப் பொருண்மைக்கு அகரமும் உருபாம். அவற்றின் பொருளாவன குணமும் தொழிலும் ஆகிய பண்பும் சினையும் ஒரு பொருட் கூட்டமும் பல பொருட் கூட்டமும் ஒன்று திரிந்து ஒன்று ஆனதும் ஆகிய ஐந்து தற்கிழமைப் பொருளினையும் பிறிதின்கிழமைப் பொருளினையும் உடையதாகத் தம்மை ஏற்ற பெயர்ப்பொருளை வேற்றுமை செய்தலாம் எ-று.*

*கிழமை என்பது ஆகுபெயர்.*

*வ-று:* **நிலத்தது அகலம்,** *சாத்தனது இயல்பு, சாத்தனது நன்மை, சாத்தனது இருக்கை, சாத்தனது நிலை,* **சாத்தனது வரவு,** *கபிலரது பாட்டு எனவும் சாத்தனது கை, சாத்தனது கால் எனவும் மாந்தரது தொகுதி, நெல்லது குப்பை எனவும் படையது தொகை, விலங்கினது ஈட்டம் எனவும் நெல்லினது பொரி, கோட்டது நூறு எனவும் ஐவகைத் தற்கிழமையும் முறையே வந்தன. ஒன்றன்கூட்டத் தற்கிழமை மாறிக் குப்பையது நெல் என வரின் உறுப்புத் தற்கிழமை. பலவின் ஈட்டம் மாறி நிற்பினும் அது. சாத்தனது ஆடை, சாத்தனது பிள்ளை எனப் பிறிதின்கிழமை வந்தன. பாட்டு என்பது வரிவடிவை நோக்கிய காலத்துப் பிறிதின்கிழமையாம். எனாது கை, தனாது தாள், எனாது நிலம், தனாது எயில் என ஆதுருபோடும் என கைகள், தன தாள்கள், என யானைகள், தன தானைகள் என அகரவுருபோடும் ஒட்டுக.*

*சாத்தனது ஆடை என்புழிச் சாத்தனது கை என்றாற் போலாது ஆடைக்குச் சாத்தன் பிறிது ஆதலின் அப்பிறிதினது கிழமை பிறிதின்கிழமை எனப்பட்டது.*

*அஃறிணை ஒருமை பன்மைகட்கு இயைந்த உருபு இங்ஙனம் கூறவே உயர்திணை ஒருமை பன்மையாகிய கிழமைப்பொருட்கு இவ்வுருபுகள் ஏலா என்பது*

பெற்றாம். அவை வருங்கால் அவனுடைய விறலி, அவனுடைய விறலியர் என மூன்று சொல்லாய் இரண்டு சந்தியாய் முன்னது எழுவாய்ச் சந்தியும் பின்னது பெயரெச்சக் குறிப்புச் சந்தியும் ஆம் என்க. அவன் விறலி என்புழி உடைய என்பது இசையெச்சம். சாத்தனுடைய இயல்பு, சாத்தனுடைய கை என்றல் தொடக்கத்தனவும் அன்ன. இவற்றை ஆறாம் வேற்றுமைச் சந்தி என்றும் உடைய என்பதனைச் சொல்லுருபு என்றும் கூறுவாரும்[286] உளர். ஆசிரியர் தொல்காப்பியனாரும் உயர்திணை ஒருமை பன்மைகட்கு இவ்வுருபுகள் ஏலா என்பது கருதி,

"அதுவென் வேற்றுமை யுயர்திணைத் தொகைவயின்
அதுவெ னுருபுகெடக் குகரம் வருமே" (தொல். வேற். மய. 11)

என்றார்.

<இவ்வாறாம்[287] வேற்றுமைப் பொருளாகிய குறைப்பொருள், "ஒற்றுமை வேற்றுமை" (இல. கொ. 40:1) என, "உரைக்கப் படும்" (இல. கொ. 40:1) எனவும் அவற்றுள், "ஒற்றுமை யாவதோர் பொருளே யாகும்" (இல. கொ. 40:2) எனவும் வேற்றுமையாவது,

"ஒன்றாய்த் தோன்ற லுரிமையாய்த் தோன்றல்
வேறாய்த் தோன்ற லென" (இல. கொ. 40:3-4)

மூவகைப்படும் எனவும் அம் மூவகையுள் ஒன்றாய்த் தோன்றல்,

"ஒன்றன் கூட்டம் பலவி னீட்டந்
திரிபி னாக்கஞ் சினைகுணந் தொழிலென" (இல. கொ. 40:5-6)

அறுவகைப்படும் எனவும் உரிமையாய்த் தோன்றல், "பொருளி டங்கால மிருவகை நூலென" (இல. கொ. 40:8) ஐவகைப்படும் எனவும்,

"வேறாய்த் தோன்றல் வேறிடத் துஞ்செலும்
நிலைமையி லுடைமைகள் பலவு மாகும்" (இல. கொ. 40:10-11)

எனவும் கொள்ளப்படும்.

உ-ம்: "என் னுயிர்" (குறள். 1213), இராகுத்தலை என்றாற் போல்வன ஒற்றுமை. வேற்றுமை வகையுள் ஒன்றாய்த் தோன்றலுக்கு உதாரணம் முன்னர் ஐவகைத்

[286] சுப்பிரமணிய தீக்கிதரும் (பி.வி. 6 உரை) சாமிநாத தேசிகரும் (இல. கொ. 25 உரை) உடைய என்பதனைச் சொல்லுருபு என்று கூறுவர்.
[287] இலக்கணக் கொத்து நூற்பாவும் (நூ. 40) உரையும்.

**தற்கிழமைக்குக் காட்டியனவேயாம்.**

**உரிமையாய்த் தோன்றலுக்கு உதாரணம் முருகனது வேல், முருகனது குறிஞ்சி, வெள்ளியது ஆட்சி, சம்பந்தனது தமிழ், சம்பந்தனது பிள்ளைத்தமிழ் என முறையே காண்க. வேறாய்த் தோன்றலுக்கு உதாரணம் சாத்தனது பசு, சாத்தனது சோறு, சாத்தனது பொன் என வரும். இவை முன் ஒருவர்க்கு உரிமையாயும் பின் வேறு ஒருவர்க்கு உரிமையாயும் வருதலின் நிலைமையில் உடைமை ஆயின. இம் மூவகை வேற்றுமையை வடநூலார் நூற்றொரு பேதம் ஆக்குவர்.>**

மேற் போந்த (298) கொள்வோனையும் கொடைப்பொருளினையும், "இதனி னிற்றிது" (தொல். வேற். 16) என விகற்பித்து உணர்ந்து கொடுத்தல் இவ்விரு கிழமைப் பொருளுடையோர் செயல் என்பது தோன்ற இஃது ஆறாம் வேற்றுமை எனப்பட்டது.

"ஆற னுருபே யதுவா தவ்வும்
வேறொன் றுடையதைத்[288] தனக்குரி யதையென
இருபாற் கிழமையின் மருவுற வருமே"

என்றார் ஆசிரியர் அகத்தியனாரும் என்க. (43)

## ஏழாம் வேற்றுமை

{301} **ஏழ னுருபுகண் ணாதி யாகும்
பொருண்முத லாறு மோரிரு கிழமையின்
இடனாய் நிற்ற லிதன்பொரு ளென்ப.**

எ-னின், ஏழாம் வேற்றுமையது இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: ஏழாம் வேற்றுமையின் உருபு மேற் கூறிய (292) கண்ணே அன்றி, அஃது ஆதியாய பிறவும் ஆம். இவற்றின் பொருளாவன தம்மை ஏற்ற பெயர்ப்பொருளாகிய பொருளாதி ஆறும் (276) மேற் போந்த (300) இருகிழமைப்பொருட்கும் இடமாகி நிற்க, அவற்றினை வேற்றுமை செய்தலாம் என்று சொல்லுவர் புலவர் எ-று.

இடப்பொருளே அன்றி, ஏனை ஐந்து பொருளும் ஈண்டு இடனாய் நிற்றலின், 'பொருண்முத லாறும்' என்றும் வினை வரினும் அவ்வினைமுதல் இவ்விரு கிழமை-யின்பாற் படும் ஆதலின், 'கிழமையின் இடன்' என்றும் கூறினார்.

---

[288] **"வேறொன் றுரியதைத்" என்பது மயிலைநாதர் (நன். 299) பாடம்.**

ஈண்டு, 'இது' என்றதூஉம்[289] தொகுதியொருமை.

வ-று: மணியின்கண் ஒளி, மணியின்கண் இருந்தது ஒளி எனவும் பனையின்கண் அன்றில், பனையின்கண் இருந்தது அன்றில் எனவும் இருகிழமைக்கும் பொருள் இடம் ஆயிற்று. ஊரின்கண் இல்லம், ஊரின்கண் இருந்தது இல்லம் எனவும் ஆகாயத்தின்கண் பருந்து, ஆகாயத்தின்கண் பறந்தது பருந்து எனவும் இடம் இடம் ஆயிற்று. நாளின்கண் நாழிகை, நாளின்கண் வந்தது நாழிகை எனவும் வேனிற்கண் பாதிரி, வேனிற்கண் பூத்தது பாதிரி எனவும் காலம் இடம் ஆயிற்று. கையின்கண் விரல், கையின்கண் இருந்தது விரல் எனவும் கையின்கண் கடகம், கையின்கண் கிடந்தது கடகம் எனவும் சினை இடம் ஆயிற்று. கறுப்பின்கண் அழகு, கறுப்பின்கண் இருந்தது அழகு எனவும் இளமையின்கண் செல்வம், இளமையின்கண் இருந்தது செல்வம் எனவும் குணம் இடம் ஆயிற்று. ஆடற்கண் சதி, ஆடற்கண் நிகழ்ந்தது சதி எனவும் ஆடற்கண் பாட்டு, ஆடற்கண் பாடப்பட்டது பாட்டு எனவும் தொழில்[290] இடம் ஆயிற்று.

'ஆதி' என்றமையான் வரும் உருபுகள் வரும் சூத்திரத்தால் கூறுப ஆகலின் அவை அங்ஙனம் காட்டுதும்.

இது பெயர்ப்பொருளை மேற் போந்த இரு கிழமைப்பொருள்கட்கும் இடமாக வேற்றுமை செய்தலின் ஏழாம் வேற்றுமை எனப்பட்டது.

**<இவ் இடவேற்றுமைப் பொருள்,**[291]

> **"உரிமை யிருவகை யோரிட மெங்கும்**
> **எனநான் கென்றே"** (இல. கொ. 42:1-2)

**சிலர் இயம்புவர். அவற்றிற்கு உதாரணம் நிலத்தின்கண் தேர் ஓடுகின்றது, கடற்கண் நாவாய் ஓடுகின்றது, ஆகாயத்தின்கண் பருந்து பறந்தது, காட்டின்கண் புலி வாழ்ந்தது எனவும் மதிக்கண் மறு, கையின்கண் விரல், குன்றின்கண் குவடு, நெற்றியின்கண் விழி, ஆண்டின்கண் இருது, நாளின்கண் வைகறை எனவும் ஊர்க்கண் இருந்தான், தேர்க்கண் இருந்தான் எனவும் மணியின்கண் ஒளி, உயிரின்கண் உணர்வு, பாலின்கண் சுவைநெய், தீயின்கண் சூடு, நீரின்கண் சீதம் எனவும் முறையே காண்க. இவை எல்லாம் முற் கூறியவற்றுள் அடங்கும்.**

[289]"அதன்பொருள்" (நன். 297) என்பதுபோல ஈண்டும் தொகுதியொருமை.

[290]"இதனுள், 'பொருண்முத லாறும்' என்றார் ஆயினும் வினை வேற்றுமை ஏலாமையின் ஈண்டுத் தொழிற்பெயரே கொள்க." என்று மயிலைநாதர் (நன். 300) நயம் காண்பார்.

[291]இலக்கணக் கொத்து நூற்பாவும் (நூ. 42) உரையும்.

இனி இடம் அல்லா இடம் மூவகைப்படும்,

"கூட்டிப் பிரித்தல் பிரித்துக் கூட்டல்
இருவரின் முடியு மொருவினைத் தொழிற்பெயர்" (இல. கொ. 42:5-6)

என. அவையாவன: "உடையா னரசரு ளேறு" (குறள். 381), "அவற்றுள், அஇ உஎ ஒக்குறில்" (நன். 64) எனவும், "வானுறையுந், தெய்வத்துள் வைக்கப் படும்" (குறள். 50), "மற்றையான், செத்தாருள் வைக்கப் படும்" (குறள். 214) எனவும், "புல்லி விடாஅப் புலவியுட் டோன்றும்" (குறள். 1324), தட்டுப்புடைக்கண் வந்தான், புல்லுதற்கண் வேர்வை வந்தது, பொருதற்கண் மழை பெய்தது, சூதாடற்கண் தூக்கம் வந்தது> எனவும் முறையே காண்க. (44)

## இடப்பொருள் உருபுகள்

{302} கண்கால் கடையிடை தலைவாய் திசைவயின்
முன்சார் வலமிட மேல்கீழ்* புடைமுதல்
பின்பா டளைதே முழைவழி யுழியுளி
உள்ளகம் புறமில் லிடப்பொரு ளுருபே.

எ-னின்[292] மேல், "கண் ணாதி யாகும்" (நூ. 301) என்றார்; அவை இவை என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: இங்ஙனம் கண் முதலாக இல் ஈறாக எண்ணப்பட்ட இருபத்தெட்டும்[293] இடப்பொருளாக வேற்றுமை செய்யும் உருபுகளாம் எ-று.

தொடர்பு தோன்றக் கண்ணுருபை ஈண்டும் அனுவதித்தார்.

வ-று: "ஊர்க்கா னிவந்த பொதும்பருள்" (கலி. 56:1), "வேலின், கடைமணிபோற் றிண்ணியான்" (திரி. 33:2-3), "நல்லா ரிடைப்புக்கு" (நாலடி. 314:3), "வலைத்தலை மானன்ன நோக்கியர்" (திரு. 144:1), "குரை கடல்வாயமு தென்கோ" (திரு. 511:1), "தேர்த்திசை யிருந்தான்" (வி. மே.), "அவர்வயிற் செல்லாய்" (வி. மே.), "கற்றார்முற் றோன்றா கழிவிரக்கம்" (நான்மணி. 8:1), "காட்டுச் சாரோடுங் குறுமுயால்" (தொல்.

[292] "வலமிடம் மேல்கீழ்" என்பது சங்கர நமச்சிவாயர் பாடம்.

[293] கண், கால் முதலியன வேற்றுமை உருபுகள் என்பது இளம்பூரணர் (தொல். வேற். 15), நச்சினார்க்கினியர் (தொல். வேற். 21) முதலியோர் கருத்து. அவை உருபுகள் அல்ல; இடப்பொருள் உணர்த்தி வரும் இடைச்சொற்கள் என்று சேனாவரையரும் (தொல். வேற். 21) பெயர்ச்சொற்கள் என்று வைத்தியநாத தேசிகரும் (இல. விள. 204) கூறுவார்கள்.

விளி. 34 இளம்.), "காழ்வரை நில்லாக் களிறன்னான் கைவலத், தியாழ்வரை நின்றது" (நன். 301* மயிலை.), "இல்லிடப் பரத்தை" (நன். 301 மயிலை.), "தன்மேற், கடுவரை நீரிற் கடுத்துவரக் கண்டும்" (பு. வெ. 11:2-3), "பிண்டிக்கண் ணார்நிழற்கீழ், எந்த மடிகள்" (யா. கா. பாயி.), "கடைப்புடை கொள்ளியநீர்" (நன். 301 மயிலை.), "சுரன்முதல் வந்த வுரன்மாய் மாலை" (நற். 3:6), "காதலி, பின்சென்ற தம்ம" (நாலடி. 395:1-2), "நம்பா டணையாத நாள்" (நன். 301 மயிலை.), "கல்லளைச் சுனைநீர் கையில் உண்மையான்" (நன். 301* மயிலை.), "தோழிக் குரியவை கோடாய் தேத்து" (இறை. 14*), **அவனுழை வந்தான்,** "நின்றதோர் நறவேங்கை நிழல்வழி யசைந்தன்ன" (நன். 301* மயிலை.), "உறைப்புழி யோலை போல" (புறம். 290:7), "குயில்சேர் குளிர்கா வுளிசேர் புறையும்" (நன். 301 மயிலை.), "முல்லையங் குவட்டுள் வாழும்" (சீவக. 1232:4*), "பயன்சாராப், பண்பில்சொற் பல்லா ரகத்து" (குறள். 194), "செல்லுமென் னுயிர்ப்புறத் திறுத்தந்த மருண்மாலை" (கலி. 148:7), ஊரில் இருந்தார் என இவை பல திறத்தன போலு-மேனும் அவை ஆகாது ஒரு திறத்தனவாய்க் கண்ணுருபின் பரியாய உருபாய் வருதல் காண்க.

இனிக் கண், கால் முதலியன இட விகற்பங்களை உணர்த்தின் ஒரு திறத்தவாகிய உருபாகாது பல திறத்தவாகிய இடங்களை உணர்த்தும் பெயர் ஆகி, "கண்ணகன் ஞாலம்" (திரி. காப்பு 1), "கடைநாள்" (சிலப். 10:3), "இடைச் சுரம்" (தொல். அகத். 44:3), "தலையாயார்" (நாலடி. 366:1), "தென்றிசை" (புறம். 132:8) என்றல் தொடக்கத்தனவாய் வருதல் காண்க.

மணியின் கண் ஒளி என்புழிக் கண் என்பது பெயர் ஆயின் மணியினது இடத்து ஒளி என்பது பொருளாய் மூன்று சொல்லாய் இரண்டு சந்தியாம் என்க. ஏனையவும் அன்ன.

**<இனிப் பெயர்[294] முதலாகக் கூறிய ஏழு உருபுகளும் தமக்கு உரிய பொருள் அல்லனவற்றையும் உணர்த்தும் எனக் கொள்வர். அவையாவன: மாடம் செயப்பட்டது என்புழி வினைமுதலன்றிச் செயப்படுபொருள் உணர்த்திற்று. வீட்டை விரும்பினான் என்புழிச் செயப்படுபொருளை அன்றி வேறு பொருளை விளக்கிற்று. மலையொடு பொருத மால்யானை, "தொடியொடு, தொல்கவின் வாடிய தோள்"** (குறள். 1235), **"பாலொடு தேன்கலந் தற்றே"** (குறள். 1121), **மதியோடு ஒக்கும் முகம், "விலங்கொடு மக்க ளனையர்"** (குறள். 410), **"எழுத்தொடு புணர்ந்த சொல்"** (தொல். எச்ச. 5) **என்புழிக் கருவி, கருத்தா, உடனிகழ்வதன்றி**

[294] **இலக்கணக் கொத்து நூற்பாக்களும் (நூ. 52-58) அவற்றின் உரைகளும்.**

வினையின்மை, வேறுவினை, மயக்கம், ஒப்பு, ஒப்பல் ஒப்பு, ஒற்றுமை எனப் பல பொருளும் உணர்த்தின.

சோற்றிற்கு அரிசி, கூழிற்குக் குற்றேவல், பூவிற்குப் போனான், உணற்கு வந்தான், "பிணிக்கு மருந்து" (குறள். 1102), உணற்குக் கருவி கை என்புழி கொள்வோனை விட்டு ஆதிகாரண காரியம், நிமித்தகாரண காரியம், இருவகைப் பெயர்ப்பின் வினையெச்சம், இருவகைப் பெயர்ப்பின் பெயரெச்சம் எனப் பல பொருளும் உணர்த்தின. "பித்தரிற் பேதையா ரில்" (நாலடி. 52:4) வேங்கடத்தின் தெற்கு, குமரியின் வடக்கு, வாணிகத்தின் ஆயினான், காக்கையின் கரிது களம்பழம் என்புழி ஒப்பு, எல்லை, ஏது, ஒப்பின்மை எனப் பல பொருளும் உணர்த்தின. வாளது வெட்டு என்புழிக் குறையே அன்றி வேறு பொருளும் உணர்த்திற்று. அறிவின்கண் திரிபு என்புழி இடமே அன்றி வேறு பொருளும் உணர்த்திற்று> எனக் கூறுவர். அவை எல்லாம் இவ்வாசிரியர் கூறியவற்றுள் சில வருமாறும் ஏனையவற்றை இலக்கியங்களுள்ளும் காண்க. (45)

## எட்டாம் வேற்றுமை

303. எட்ட னுருபே யெய்துபெய ரீற்றின்
றிரிபு குன்றன் மிகுத லியல்பயற்
றிரிபு மாம்பொருள் படர்க்கை யோரைத்
தன்முக மாகத் தானழைப் பதுவே.

எ-னின், எட்டாம் வேற்றுமையது இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: எட்டாம் வேற்றுமையாகிய விளிக்கு வேறு உருபு இன்று. அவ்விளி அடைந்த பெயரீற்றின் திரிபும் கேடும் மிகுதலும் இயல்பும் ஈற்றயல் நின்றதன் திரிபுமே உருபாம். இவற்றின் பொருளாவன இவற்றினை ஏற்ற படர்க்கைப்பெயர்ப் பொருளை ஒருவன் தனக்கு எதிர்முகமாக அழைக்கப்படுவதாக வேற்றுமை செய்தலாம் எ-று.

'எய்துபெய ரீற்றின்' என்றமையான் வேறு உருபு இன்று என்பது இசையெச்சமாய் நின்றது.

'இயல்பு' என்றமையான் இவ்வியல்பாய விளியுருபிற்கும் எழுவாயுருபிற்கும் சொல்லான் வேற்றுமை இன்றேனும் பொருளான் வேற்றுமை உண்டு என்பதூஉம், 'படர்க்கை யோரை' எனவே, "ஒருமொழி யொழிதன் னினங்கொளற் குரித்து" (நூ. 358) ஆகலின் படர்க்கை ஐம்பாலும் விளி ஏற்கும் என்பதூஉம் ஏனைத் தன்மை முன்னிலைகள் ஏலா என்பதூஉம் பெற்றாம்.

'தான்' என்பது அசைநிலை.

ஈறு திரிதல் முதலிய ஐவகை உருபும் பொருளும் பின் வரும் சிறப்புச் சூத்திரங்களான் (305-312) உணர்க.

இஃது எழுவாயினின்றும் ஒருவாற்றான் வேறுபட்டமையின் இறுதிக்கண் தந்து எட்டாம் வேற்றுமை எனப்பட்டது. (46)

## விளி ஏற்கும் பெயர்கள்

304. **இஉ ஊவோ டையோ னளரல**
**யவ்வீற் றுயர்திணை யோரவல் லிவற்றொடு**
**ணஃகா னாவீ றாகும் பொதுப்பெயர்**
**ஞநவொழி யனைத்தீற் றஃறிணை விளிப்பன.**

எ-னின், பெயருள் விளிக்கப்படுவன இவை என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: இ, உ, ஊ, ஐ, ஓ, ன, ள, ர, ல, ய என்னும் பத்து ஈற்று உயர்திணைப்பெயரும் இவற்றுள் ஓகாரமும் ரகாரமும் ஆன இரண்டும் ஒழித்து, நின்ற எட்டுடனே ணகாரமும் ஆகாரமும் ஆன இரண்டும் கூடிய பத்து ஈற்றுப் பொதுப்பெயரும், "நாலாறு மீறே" (நூ. 107) என்றவற்றுள் ஞகரமும் நகரமும் இன்னோரன்ன இடங்களில் ஈறாகாது என மேலை அதிகாரத்து (108) விலக்கிய எகரமும் ஒழிந்த இருபத்தோர் ஈற்று அஃறிணைப்பெயரும் விளிக்கப்படுவனவாம் எ-று.

'இஉ ஊவோடு' என்புழிக் குற்றுகரம் முற்றுகரம் என உகரத்தை விதவாமையின் இரண்டும் கொள்க.

'பெயர்' என்பதனை இருதிணைக்கண்ணும் கூட்டுக. 'விளிப்பன' என்பது வினைமுதல் வினையைச் செயப்படுபொருள்மேல் ஏற்றப்பட்டது.

இவ்வீற்றுப்பெயர்கள் விளிக்கப்படும் எனவே ஏனை ஈற்றுப்பெயர்கள் விளிக்கப்படா என்பது பெற்றாம். (47)

## மூவகைப் பெயர்க்கும் உரிய விளியுருபுகள்

305. **இம்முப் பெயர்க்க ணியல்பு* மேயும்**
**இகர நீட்சியு முருபா மன்னே.**

எ-னின்[295] மூவகைப் பெயர்க்கும் பொதுவாகிய விளியுருபு தொகுத்து உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: மேல் விளிக்கப்படும் (304) என்ற மூவகைப் பெயர்க்கண்ணும் இயல்பாதலும் ஏகாரம் மிகுதலும் இகரவீறு ஈகாரவீறாய்த் திரிதலும் விளியுருபாம் பெரும்பாலும் எ-று.

வ-று: முனி கூறாய், வேந்து கூறாய், ஆடூஉக் கூறாய், விடலை கூறாய், கோக் கூறாய், கோன் கூறாய், வேள் கூறாய், மாந்தர் கூறீர், தோன்றல் கூறாய், சேய் கூறாய்; முனியே, வேந்தே; நம்பீ என உயர்திணைக்கண் மூன்று உருபும் வந்தன. பிதாக் கூறாய், ஆண் கூறாய்; பிதாவே, ஆணே; சாத்தீ எனப் பொதுப்பெயர்க்கண் மூன்று உருபும் வந்தன. விளக் கொடியை, புறாக் கொடியை, புல்வாய் கொடியை; விளவே, புறாவே, புல்வாயே; மந்தீ என அஃறிணைக்கண் மூன்று உருபும் வந்தன. பிறவும் அன்ன.

'மன்னே' என்றமையான் இவ்வுருபுகள் சிலவற்றிற்கு ஏலாமையும் இப்பொதுவிதியினும் மேல் வரும் (306-312) சிறப்புவிதியினும் அடங்காது வரும் உருபுகள் சில உளவேல்[296] அவையும் கொள்க. (48)

ஐகாரவீற்றுப் பெயர்கள்

306. **ஐயிறு பொதுப்பெயர்க் காயு மாவும்**
**உருபா மல்லவற் றாயு மாகும்.**

எ-னின், ஐகாரவீற்றிற்கு எய்தியதன்மேல் சிறப்புவிதி உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: ஐகாரவீற்றுப் பொதுப்பெயர்க்கு இயல்பும் ஏகாரம் மிகுதலும் அன்றி ஐகாரம் ஆயும் ஆவுமாய்த் திரிதலும் உயர்திணை அஃறிணைப் பெயர்க்கு அவ்வுருபுகளன்றி ஐகாரம் ஆய் எனத் திரிதலும் உருபாம் எ-று.

வ-று: அன்னாய், தந்தாய் எனவும், "ஆவன்னா வலந்தே னெழுந்திராய்" (நன். 305* மயிலை.) எனவும் விரவுப்பெயர்க்கண் இரண்டு உருபும் வந்தன. விடலாய், மடந்தாய் எனவும், "சிறுமீன் கவுட்கொண்ட செந்தூவி நாராய்" (ஐந். எழு. 68:1), "கொன்றாய் குருந்தே கொடிமுல்லாய்" (திணை. நூற். 81:1) எனவும் இருதிணைப் பெயர்க்கண்ணும் ஆயுருபு வந்தது. (49)

---

[295] "பெயர்க்கண் ணியல்பு" என்பது சங்கர நமச்சிவாயர் பாடம்.

[296] இவ்வாறு அடங்காது வரும் உருபுகள் சிலவற்றை மயிலைநாதரும் (நன். 304) வைத்தியநாத தேசிகரும் (இல. விள. 207) எடுத்துக்காட்டுவர்.

### னகரவீற்றுப் பெயர்கள்

{{307}} ஒருசார் னவ்வீற் றுயர்திணைப் பெயர்க்கண்
அளபீ றழிவய னீட்சி யதனோ
டீறு போத லவற்றோ டோவுறல்
ஈறழிந் தோவுற லிறுதியவ் வாதல்
அதனோ டயறிரிந் தேயுற லீறழிந்
தயலே யாதலும் விளியுரு பாகும்.

எ-னின், னகரவீற்று உயர்திணைப்பெயர்க்கு எய்தியதன்மேல் சிறப்புவிதி உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: பொதுவிதியன்றி (305) னகரவீற்று உயர்திணைப்பெயர்களுள் சில அளபெழுதலும் சில ஈறு கெடுதலும் சில ஈற்றயல் நீடலும் சில ஈற்றயல் நீண்டு, ஈறு கெடுதலும் சில ஈற்றயல் நீண்டு, ஈறு கெட்டு, ஓகாரம் மிகுதலும் சில ஈறு கெட்டு, ஓகாரம் மிகுதலும் சில இறுதி னகரவொற்று யகரவொற்றாய்த் திரிதலும் சில இறுதி னகரவொற்று யகரவொற்றாய்த் திரிந்து, அயலில் ஆகாரம் ஓகாரமாய் ஏகாரம் மிகுதலும் சில ஈறு கெட்டு, அயலில் அகரம் ஏகாரம் ஆதலும் விளியுருபு ஆம் எ-று.

'ஒருசார்' என்பதனை விளியதிகாரம் (308-312) அனைத்தினும் கூட்டுக.

வ-று: அம்பர்கிழாஅன், வல்லங்கிழாஅன் என அளபாயின.

"எலுவ சிறாஅ ரெம்முறு நண்ப
புலவர் தோழ" (குறுந். 129:1-2*)

என ஈறு அழிந்தன. நம்பான், பெருமான் என ஈற்றயல் நீண்டன. இறைவா, மன்னா என அயல் நீண்டு ஈறு கெட்டன. ஐயாவோ, அப்பாவோ என ஈறு கெட்டு, அயல் நீண்டு ஓகாரம் மிக்கன. திரையவோ, ஐயவோ என ஈறு அழிந்து ஓகாரம் மிக்கன. வாயிலாய், ஆதிரையாய் என இறுதி ய ஆயின. "வாயி லோயே" (புறம். 206:1) என இறுதி யவ்வொற்றாய் ஈற்றயல் ஆகாரம் ஓகாரமாய் ஏகாரம் மிக்கது. "ஐயே எமக்கருள்" (நன். 306* மயிலை.), "மடவை மன்ற வாழிய முருகே" (நற். 34:11) என ஈறு அழிந்து, அயலில் அகரம் ஏகாரம் ஆயின. (50)

### ளகரவீற்றுப் பெயர்கள்

308. ளஃகா னுயர்பெயர்க் களபீ றழிவயல்
நீட்சி யிறுதி யவ்வொற் றாதல்

**அயலி லகரமே யாதலும் விளித்தனு.**

எ-னின், ளகரவீற்று உயர்திணைப்பெயர்க்கு எய்தியதன்மேல் சிறப்புவிதி உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: ளகரவீற்று உயர்திணைப்பெயர்க்குப் பொதுவிதியன்றி (305) அளபெழலும் ஈறு கெடலும் அயல் நீடலும் இறுதி ளகரவொற்று யகரவொற்று ஆதலும் ஈற்றயல் அகரம் ஏகாரம் ஆதலும் விளியுருபாம் எ-று.

வ-று: "மேவார்த் தொலைத்த விறன்மிகு வேஎள்" (நன். 307 மயிலை.) என அளபாயிற்று. "துனிகொள்ள லெல்லாநீ" (கலி. 35:8) என ஈறு கெட்டது. நமர்காள், எமர்காள் என ஈற்றயல் நீண்டன. குழையாய், வாயிலாய் என இறுதி ளகரவொற்று யகரவொற்று ஆயின. "தலைமீது கொள்வ மடிகேள்" (திருநூற். 63:3-4*) என ஈற்றயல் அகரம் ஏகாரம் ஆயிற்று.

எல்லா என்பது தோழி முன்னிலைப்பெயர் அன்றோ? விளி ஏலாது என விலக்கப்பட்ட (303) அம்முன்னிலைப்பெயரை ஈண்டுக் காட்டியது என்னை எனின்,

"முன்னிலை
எல்லீர் நீயிர் நீவிர் நீர்நீ
அல்லன படர்க்கை" (நூ. 285)

என வரையறுக்கப்பட்டமையின் தோழன் என்னும் பொருட்டாகிய ஏடன் என்னும் படர்க்கைப்பெயர் விளி ஏற்றமையின் ஏடா என்பது தோழன் முன்னிலைப்பெயர் என்றும் தோழி என்னும் பொருட்டாகிய எல்லாள், ஏடி என்னும் படர்க்கைப்பெயர்கள் விளி ஏற்றமையின், "எல்லாவு மேடியும் தோழிமுன் னிலைப்பெயர்" (திவா. தொகுதி 2*) என்றும் கூறப்பட்டனவன்றி அவை இயல்பாய் நின்ற முன்னிலைப்பெயர் அல்ல என்க. (51)

ரகரவீற்றுப் பெயர்கள்

309. **ரவ்வீற் றுயர்பெயர்க் களபெழ லீற்றயல்
அகரம் இஈ யாத லாண்டையா
ஈயாத லதனோ டேயுற லீற்றே
மிக்கயல் யாக்கெட் டதனய னீடல்
ஈற்றி னீருற லிவையுமீண் டுருபே.**

எ-னின், ரகாரவீற்று உயர்திணைப்பெயர்க்கு எய்தியதன்மேல் சிறப்புவிதி உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: பொதுவிதியன்றி (305) ரகாரவீற்று உயர்திணைப்பெயர்க்கு அளபெழலும் ஈற்றயல் அகரம் இகரம் ஆதலும் ஈகாரம் ஆதலும் அவ்விடத்து ஆகாரம் ஈகாரம் ஆதலும் அதனோடு ஏகாரம் ஏற்றலும் ஈற்றில் ஏகாரம் மிக்கு, அயலில் யாக் கெட்டு, அதன் அயல் இகரம் ஈகாரம் ஆதலும் ஈற்றின் ஈர் ஆதலும் விளியுருபாம் எ-று.

வ-று: சிறாஅர், மகாஅர் என அளபாயின. "என்னைமுன் னில்லன்மின் றெவ்விர்" (குறள். 771) என ஈற்றயல் அகரம் இகரம் ஆயிற்று. வேந்தீர், நாய்கீர் என அகரம் ஈகாரம் ஆயின. சான்றீர், மடவீர் என ஈற்றயல் ஆகாரம் ஈகாரம் ஆயின. "பல்சான் றீரே பல்சான் றீரே" (புறம். 195:1), கணியீரே என ஈற்றயல் ஆகாரம் ஈகாரமாய் ஏகாரம் ஏற்றன. நம்பீரே, தம்பீரே, தோழீரே, தொழும்பீரே என ஈற்றில் ஏகாரம் மிக்கு, அயல் யாக் கெட்டு, அதன் அயல் இகரம் ஈகாரம் ஆயின. எமரீர், தமரீர் என ஈர் ஏற்றன.

'ஈண்டு' என்ற மிகையானே கடலாரே, கடலீரே, கழியாரே, கழியீரே, சாத்தியாரே, சாத்தியீரே, கொற்றியாரே, கொற்றியீரே என அஃறிணைப்பெயர் விரவுப்பெயர்களைச் சிறப்பித்து, ரகரவீற்று உயர்திணைப்பெயர்போலக் கூறியவழியும் இவ்வுருபு ஏற்றல் கொள்க. (52)

### லகார யகார ஈற்றுப் பெயர்கள்

**310. லகாரவீற் றுயர்பெயர்க் களபய னீட்சியும்**
**யகார வீற்றிற் களபுமா முருபே.**

எ-னின், லகார யகார ஈற்று உயர்திணைப்பெயர்க்கு எய்தியதன்மேல் சிறப்புவிதி உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: பொதுவிதியன்றி (305) லகாரவீற்று உயர்திணைப்பெயர்க்கு அளபெழலும் ஈற்றயல் நீடலும் யகாரவீற்று உயர்திணைப்பெயர்க்கு அளபெழலும் உருபாம் எ-று.

'உயர்பெயர்' என்பதனை[297] யகாரவீற்றின்கண்ணும் உம்மையை அளபு என்பதன்கண்ணும் கூட்டுக.

வ-று: "வலம்புரித் தடக்கை மாஅ னின்னிறம்" (யா. வி. 83) எனவும் தோன்றால், மடவரால், தாழ்குழால் எனவும் சேஎய் எனவும் வரும். (53)

### னகரவீற்றுப் பெயர்கள்

**311. னவ்வீற் றுயர்திணை யல்லிரு பெயர்க்கண்**
**இறுதி யழிவத னோடய னீட்சி.**

[297] "உயர்திணைப்பெயர்" என்பது ஆறுமுக நாவலர் பாடம்.

எ-னின், னகரவீற்று அஃறிணைப்பெயர்க்கும் விரவுப்பெயர்க்கும் எய்தியதன்மேல் சிறப்புவிதி உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: பொதுவிதியன்றி (305) னகரவீற்று அஃறிணைப்பெயர்க்கண்ணும் விரவுப்-பெயர்க்கண்ணும் இறுதி கெடுதலும் அதனோடு ஈற்றயல் நீடலும் விளியுருபாம் எ-று.

இறந்தது தழீஇய எச்சவும்மைகளும் விளியுருபாம் என்பதூஉம் தொக்கு நின்றன.

வ-று: அலவ, இகல, கலுழ எனவும் அலவா, இகலா, கலுழா எனவும் சாத்த, கொற்ற எனவும் சாத்தா, கொற்றா எனவும் வரும். (54)

லகார ளகார ஈற்றுப் பெயர்கள்

312. **லளவீற் றஃறிணைப் பெயர்பொதுப் பெயர்க்கண்
ஈற்றய னீட்சியு முருபா கும்மே.**

எ-னின், லகார ளகார ஈற்று அஃறிணைப்பெயர்க்கும் விரவுப்பெயர்க்கும் எய்தி-யதன்மேல் சிறப்புவிதி உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: பொதுவிதியன்றி (305) லகார ளகார ஈற்று அஃறிணைப்பெயர்க்கண்ணும் விரவுப்பெயர்க்கண்ணும் ஈற்றயல் நீடலும் விளியுருபு ஆம் எ-று.

வ-று: "காட்டுச்சா ரோடுங் குறுமுயால்" (தொல். விளி. 34 இளம்.), கிளிகாள் எனவும் தூங்கால், மக்காள் எனவும் வரும். (55)

விளியுருபுகளுக்குப் புறனடை

313. **அண்மையி னியல்புமீ றழிவுஞ் சேய்மையின்
அளபும் புலம்பி னோவு மாகும்.**

எ-னின், மேல் (305-312) விதந்த விளியுருபுகட்கு ஆவதோர் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: மேற் போந்த விளியுருபுகளுள் இயல்புகளும் ஈறழிவுகளும் அண்மை விளிக்-கண்ணும் அளபுகள் சேய்மை விளிக்கண்ணும் ஓகாரங்கள் புலம்பல் விளிக்கண்ணும் வரும் எ-று.

எனவே ஏனை விளியுருபுகள் அண்மை, சேய்மை, புலம்பு என்னும் மூன்று இடத்தும் விராய் வரும் என்பது பெற்றாம். (56)

### விளி ஏற்காத பெயர்கள்

314. **நுவ்வொடு வினாச்சுட் டுற்ற னளர**
**வைதுத் தாந்தா னின்னன விளியா.**

*எ-னின், "இஉ ஊவோடு" (நூ. 304) என்னும் சூத்திரத்திற்கு ஆவதோர் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.*

*இ-ள்: மேல் (304) விளிக்கப்படும் என்றவற்றுள் நுவ்வுடனே மூன்று முதல்வினா-வையும் மூன்று சுட்டையும் வரன்முறையே பொருந்திய ன, ள, ர என்னும் மூன்று ஈற்று உயர்திணைப்பெயர்களும் வை, து என்னும் இரண்டு ஈற்று அஃறிணைப்-பெயர்களும் தான் என்னும் பொதுப்பெயரும் விளிக்கப்படா எ-று.*

*இங்ஙனம் விதந்த கிளைப்பெயர் வினாப்பெயர் சுட்டுப்பெயர்களின் இடை நிற்கும் எழுத்தை ஒழித்து, முதலெழுத்தோடு உற்றதாக இறுதி ன ள ரக்களை கூறினமையின் வரன்முறை என்றாம்.*

*நுவ்வொடு வை, து என்னும் ஈறு இரண்டும் பொருந்தா என்பார் அதனை, 'ஒடு'க் கொடுத்துப் பிரித்தார்.*

*மகரவீற்றுப் பொதுப்பெயர் முன்னரே (304) விலக்கப்பட்டமையின் ஈண்டுத், 'தாம்' என்றது[298] அசைநிலை.*

*வ-று: நுமன், நுமள், நுமர் எனவும் எவன், எவள், எவர், எவை, எது எனவும் யாவன், யாவள், யாவர், யாவை, யாது எனவும் ஏவன், ஏவள், ஏவர், ஏவை, ஏது எனவும் அவன், அவள், அவர், அவை, அது எனவும் இவன், இவள், இவர், இவை, இது எனவும் உவன், உவள், உவர், உவை, உது எனவும் தான் எனவும் வரும்.*

*'இன்னன' என்றமையானே பிறன், மற்றையான் என்றல் தொடக்கத்தனவும் கொள்க.* (57)

### முதல்சினைத் தொடர்பில் இரண்டன் உருபு

315. **முதலை யையுறிற் சினையைக் கண்ணுறும்**
**அதுமுதற் காயிற் சினைக்கை யாகும்.**

*எ-னின், முதல்சினைத் தொடர்பின்கண் இரண்டாம் உருபு வரின் முதல், சினை*

---

[298] ***மயிலைநாதர் (நன். 313) தாம் என்பதனை ஈண்டு மகரவீற்றுப் பொதுப்பெயராகக் கொள்வார்.***

இரண்டன்பாலும் வாராது, தடுமாறி வருதலே மரபு எனப் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: முதலினை ஐயுருபு பொருந்தின் சினையினைக் கண்ணுருபு பொருந்தும். அதுவுருபு முதலுக்கு வரின் சினைக்கு ஐயுருபு வரும் எ-று.

"ஒருமொழி யொழிதன் னினங்கொளற் குரித்தே" (நூ. 358) என்பதனான் ஆறாவதன் பன்மையுருபும் கொள்க.

இனி இரட்டுற மொழிதல் என்னும் உத்தியான் அது என்பதனைச் சுட்டு ஆக்கிக் கண்ணுருபு முதற்கு ஆயின் சினைக்கு ஐ ஆகும் எனவும் பொருள் உரைத்துக்கொள்க.

வ-று: யானையைக் காலின்கண் வெட்டினான், யானையது காலை வெட்டினான், யானையின கால்களை வெட்டினான், யனையின்கண் காலை வெட்டினான் எனவும் கையினை விரலின்கண் பிடித்தான், கையது விரலைப் பிடித்தான், கையின விரல்களைப் பிடித்தான், கையின்கண் விரலைப் பிடித்தான் எனவும் வரும்.

இங்ஙனம் கூறவே யானையைக் காலை வெட்டினான் என இரண்டன்பாலும் ஐயுருபு வாராது என்றாராயிற்று. வரின் செயப்படுபொருள் இரண்டாய் முதல் சினைகள் ஒரு பொருட் பகுதிய அல்லவாம். ஆதலின் இங்ஙனம் செய்யப்பட்டது ஒரு பொருளே; முதல் சினைகள் ஒரு பொருட் பகுதியவே என்பது தோன்றக் கண்ணுருபும் அதுவுருபும் வரும் என்பதாயிற்று.

இவ்வாறன்றி ஒரோவழி முதல், சினை இரண்டன்பாலும் ஐயுருபு வரின், "யாத னுருபிற் கூறிற் றாயினும்" (நூ. 317) என்னும் சூத்திரத்தான் முதலின்பால் ஐயுருபை அதுவுருபாயேனும் சினையின்பால் ஐயுருபைக் கண்ணுருபாயேனும் திரிக்கப்படும் என்க. (58)

## முதல் சினை பிண்டப் பொருள்கள்

316. **முதலிவை சினையிவை யெனவே றுளவில**
**உரைப்போர் குறிப்பின வற்றே பிண்டமும்.**

எ-னின், மேல் முதல், சினை இரண்டன்பாலும் ஐயுருபு வாராது என அருத்தா-பத்தியால் கூறினார். அங்ஙனம் வாராமைக்கு ஏதுவும் மேலைச் சூத்திரப் பொரு-ளோடு இப்பொருளைப் பிண்டப்பொருளுக்கும் ஏற்பித்தலும் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: கடங்கள் இவை, படங்கள் இவை என்றாற்போல முதற்பொருள்கள்

இவை, சினைப்பொருள்கள் இவை என இரண்டாக வேறு உள்ளன இலவாம்; ஒரு பொருளையே இரண்டாகப் பகுத்துக் கூறுவார் குறிப்பின் மாத்திரையவேயாம்; பிண்டப்பொருளும் அத்தன்மைத்தாம் எ-று.

யானையைக் குறித்தவழி யானை உண்டாய்க் கால், கை, கோடு முதலியன வேறு இல்லையாய்க் கால், கை, கோடு முதலியவற்றைக் குறித்தவழி அவை உண்டாய் யானை வேறு இல்லையாய் நிற்கும் ஒரு பொருட் பகுதிய ஆதலின் இவ்வாறு கூறப்பட்டன.

'வேறுளவில' என்றமையான் யானையைக் காலை வெட்டினான் என ஐயுருபு முதல், சினை இரண்டன்பாலும் வாராமைக்கு ஏது கூறினாராயிற்று.

இனி ஒரு பொருட்கண் முதலைக் கருதிச் சினை எனவும் சினையைக் கருதி முதல் எனவும் கூறுதல்போலப் பிண்டித்த பொருள்களைக் கருதியல்லது பிண்டம் எனல் கூடாமையின் பிண்டமும் அற்றே என்ற துணையானே பிண்டித்த பொருள்-களும் அனையவே என்பது தாமே போதரும் என்க. அவை வருமாறு: நெல்லைப் பொலியின்கண் வாரினான், நெல்லினது பொலியை வாரினான் என வரும். நெல்லைப் பொலியை வாரின்ான் என இரண்டன்பாலும் ஐயுருபு வாராது. இப்பிண்டப் பொருளாகிய பொலிக்குப்பையும் பிண்டித்த பொருள்களாகிய நெல்லும் முதல்சினை அனையவாய் வேறு உள இலவாம் ஆதலின் என்க.

இச்சூத்திரத்திற்கு இவ்வாறன்றி, யானையது கோடு, கோட்டது நுனி என ஒன்றற்குச் சினை மற்றொன்றற்கு முதலாயும் ஒன்றற்கு முதல் மற்றொன்றற்குச் சினையாயும் நியதியின்றி வருதலின் இவையே முதல்; இவையே சினை என வேறு அறியக் கிடப்பன இல்லை; அவை சொல்லுவோர் குறிப்பினான் ஆங்காங்கு முதல், சினை என உணரப்படுவனவாம். நெல்லினது குப்பை, குப்பையினது நெல் எனப் பிண்டப்-பொருளும் அத்தன்மைத்தாய்க் கிழமையாய் நின்றது கிழமைத்தாயும் கிழமைத்தாய் நின்றது கிழமையாயும் நியதியின்றிச் சொல்லுவோர் குறிப்பினான் அறிய வரும் எனப் பொருள் கூறுவாரும்[299] உளர். இப்பொருள் முதல், சினை இரண்டன்பாலும் ஐயுருபு வாராமைக்கு ஏது ஆகாமையானும் இவ்வாறு முதலும் சினையும் வருதல் வெளிப்-படை ஆதலின் இவற்றை, 'உரைப்போர் குறிப்பின' எனக் கூற வேண்டாமையானும் ஆசிரியர் தொல்காப்பியரும் முதல் சினைகள் ஒரு பொருட் பகுதிய என்பது தோன்ற, "முதலுஞ் சினையும் பொருள்வேறு படாஅ" (தொல். வேற். மய. 6) என்றமையானும் இப்பொருளும் இதனோடு மாட்டெறிந்த பொருளும் பொருந்தா என்க. (59)

[299] மயிலைநாதர் (நன். 315) இவ்வாறு பொருள் கூறுவார்.

## உருபுமயக்கம்

**{317} யாத னுருபிற் கூறிற் றாயினும்**
**பொருள்சென் மருங்கின் வேற்றுமை சாரும்.**

எ-னின்[300] வேற்றுமை உருபுகள் மயங்கி ஒன்று நிற்கும் நிலைக்களத்து மற்றொன்று வரினும் அமையும் எனப் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: ஒரு வேற்றுமைப் பொருள் மற்றொரு வேற்றுமை உருபால் கூறப்பட்டது ஆயினும் அவ்வுருபு மயங்கி வந்தமையின் அவ்வுருபு சென்ற வழியே பொருள் சாராது, பொருள் சென்ற வழியே அவ்வுருபு சாரும் எ-று.

எனவே அங்ஙனம் மயங்கி வந்த உருபைப் பொருளுக்கு இயைந்த உருபாகத் திரித்துப் பொருள் கொள்க என்பதாயிற்று.

வ-று: "நாகு வேயொடு நக்கு வீங்குதோள்" (நன். 316 மயிலை.) என்புழி நாகு வேய் உடனிகழ்ச்சிப்பொருள் ஆகாது செயப்படுபொருளாய் நிற்றலின் ஒடுவுருபை ஐயுருபாகத் திரித்துக்கொள்க.

"கிளையரி நாணற் கிழங்குமணற் கீன்ற
முளையோ ரன்ன முள்ளெயிற்றுத் துவர்வாய்" (அகம். 212:4-5*)

என்புழி மணல் ஏற்றுக்கோடற்பொருள் ஆகாது இடப்பொருளாய் நிற்றலின் குவ்வுருபைக் கண்ணுருபாகத் திரித்துக்கொள்க. பிறவும் அன்ன.

வேற்றுமை உருபு மயங்கி வரின்[301] பொருள் நோக்கித் திரித்துக்கொள்ள வேண்டும் என்பதாயிற்று.

**இனி இவ்வாறு மாறுபட நிற்றலன்றி உரையிற் கோடல் என்பதனால், "தடுமா றுருபுக டாஞ்சில வுள"** (இல. கொ. 61) **எனவும் ஒரு பொருட்கே தத்தம் உருபுகள்-போல வேறு உருபுகள் வருவன உள எனவும் கொள்க.**

**"தடுமா றுருபுக டாஞ்சில வுள"** (இல. கொ. 61) **ஆதற்கு[302] உதாரணம்,**

---

[300] இது தொல்காப்பிய (வேற். மய. 23) நூற்பா.

[301] "இஃது உருபுமயக்கம். பொருள்மயக்கம் தொகை சொல்லுழிச் சொல்லுதும்." என்று மயிலைநாதர் (நன். 316) விளக்கி, இந்நூற்பாவை, 'தொக்குழி மயங்குந' என்னும் பொது-வியல் நூற்பாவோடு (நன். 373) இயைத்துக் கூறுவார்.

[302] இலக்கணக் கொத்து நூற்பாக்களும் (நூ. 61, 44-50) அவற்றின் உரைகளும்.

<"அவ்வித் தழுக்கா றுடையானைச் செய்யவள்
தவ்வையைக் காட்டி விடும்" *(குறள். 167)*

என வரும். இதனுள் ஐயும் குவ்வும் தடுமாறி வருமாறு காண்க.

ஒரு பொருட்கே தத்தம் உருபுகள்போல வேறு உருபுகள் வருவன வினைமுதல் முதலாக முறையே உரைக்கின்றாம்.

"ஒன்று மூன்றுநான் காறெனு முருபொடு
வருமே வினைமுத லெனவகுத் தனரே" *(இல. கொ. 44)*

உ-ம்: அவர் செய்தார், அவராற் செய்யத் தகும் அக்காரியம், அவர்க்குச் செய்யத் தகும் அக்காரியம், அவரது வரவு என முறையே காண்க.

"எல்லா வுருபொடுஞ் செயப்படு பொருளெழும்" *(இல. கொ. 45)*

உ-ம்: சோறு அடப்பட்டது, சோற்றை அட்டான், அரிசியாற் சோறு ஆக்கினான், அவட்குக் கொள்ளும் இவ்வணிகலம், பழியின் அஞ்சும், நூலது குற்றம் கூறினான், தூணின்கண் சார்ந்தான் என முறையே காண்க.

"ஒன்று மூன்றுநான் கைந்தா றுருபொடு
கருவி வருமெனக் கருதினர் பெரியோர்" *(இல. கொ. 46*)*

உ-ம்: கண் காணும், கண்ணாற் காண்பன், கண்ணிற்குக் காணலாம், கண்ணிற் காணலாம், கண்ணினது காட்சி என முறையே காண்க.

"எல்லா வுருபொடுங் கொள்வோ னெழுமே" *(இல. கொ. 47)*

உ-ம்: "இரப்பவ ரென்பெறினுங் கொள்வர்" *(வி. மே.)*, "செய்யவள், தவ்வையைக் காட்டி விடும்" *(குறள். 167)*, நாகராற் பலி, நாகர்க்குப் பலி, நாகரின் அன்பு செய்தான், நாகரது பலி, நாகர்கண் அன்பு செய்தான் என முறையே காண்க.

"இரண்டுநான் கைந்தொடு மெழுமே நீக்கம்" *(இல. கொ. 48)*

உ-ம்: மதுரையை நீங்கினான், மதுரைக்கு வடக்குச் சிதம்பரம், மதுரையின் வடக்குச் சிதம்பரம் என முறையே காண்க.

"நான்கைந் தாறே ழொடுகுறை நடக்கும்" *(இல. கொ. 49)*

**உ-ம்: சாத்தனுக்கு மகன், மரத்தின் நீங்கின கொம்பு, சாத்தனது கை, உயிரின்கண் உணர்வு என முறையே காண்க.**

"ஒன்றி ரண்டுநான் கேழோ டிடமெழும்" (இல. கொ. 50*)

**உ-ம்: தூண் போதிகை தொட்டது, தூணைச் சார்ந்தூன், இன்றைக்கு, நாளைக்கு, பகலைக்கு, அந்திக்கு, சந்திக்கு, மாலைக்கு, காலைக்கு, ஊர்க்கு, வீட்டிற்கு வருவான், தூணின்கண் சார்ந்தான் என முறையே காண்க.>** (60)

சில உருபுகள் செய்யுட்கண் திரிதல்

318. **ஐயான்குச் செய்யுட் கவ்வு மாகும்**
**ஆகா வஃறிணைக் கானல் லாதன.**

எ-னின், சில வேற்றுமை உருபு செய்யுட்கண் திரிந்து வரினும் அமையும் எனப் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: ஐ, ஆன், கு என்னும் மூன்று உருபும் செய்யுளகத்து ஒரோவழி அகரமாகத் திரிந்து வரவும் பெறும். அஃறிணைக்கண் எனின் ஆன் ஒன்றுமே திரியும்; ஐயும் குவ்வும் திரியா எ-று.

'ஆகா வஃறிணைக் கானல் லாதன' எனவே உயர்திணைக்கண் மூன்று உருபும் திரியும் என்பது பெற்றாம்.

வ-று: காவ லோனைக் களிறஞ் சும்மே என்பது, "காவ லோனக் களிறஞ் சும்மே" (தொல். வேற். மய. 26 இளம்.) என்றும் புலவரான் என்பது, "புலவரான" (தொல். வேற். மய. 26 இளம்.) என்றும் கடிநிலை யின்றே யாசிரி யற்கு என்பது, "கடிநிலை யின்றே யாசிரி யற்க" (தொல். புள்ளி. 94*) என்றும் உயர்திணைக்கண் மூன்று உருபும் திரிந்தன. புள்ளினான் என்பது, "புள்ளினான" (தொல். வேற். மய. 26 இளம்.) என ஆன் உருபு ஒன்றும் அஃறிணைக்கண் திரிந்தது. 'அவ்வு மாகும்' என்னும் இழிவு சிறப்பும்மையான்[303] இங்ஙனம் திரிதல் ஒருதலை அன்று என்க.

அகரமாகத் திரியும் என்றமையின் ஆனும் குவ்வும் திரிந்துழி அவற்றின் முன் நின்ற ஆனும் குவ்வும் சாரியை என்பது பெற்றாம். அல்லது, 'அவ்வு மாகும்' என்பதனை

[303] **மயிலைநாதர் (நன். 317) இவ்வும்மையை எதிர்மறையாகக் கொண்டு, இவ்வாறு திரிதல் சிறுபான்மை என்பார்.**

இரட்டுற மொழிதல் ஆக்கி ஐயுருபு அகரமாய்த் திரியவும் பெறும்; ஆனுருபும் குவ்வுருபும் அகரத்தின்கண் ஆகவும் பெறும் எனப் பொருள் கோடலும் ஒன்று. (61)

### வேற்றுமைகளுக்கு முடிக்கும் சொல்

{319} **எல்லை யின்னு மதுவும் பெயர்கொளும்**
**அல்ல வினைகொளு நான்கே ழிருமையும்**
**புல்லும் பெரும்பாலு மென்மனார் புலவர்.**

*எ-னின்,* **எழுவாய் முதலிய எட்டு வேற்றுமைக்கும்**[304] **முடிக்கும் சொல்** *உணர்த்துதல் நுதலிற்று.*

*இ-ள்:* "நீங்கலொப் பெல்லை யேதுப் பொருளே" *(நூ. 299)* என்னும் நான்கு பொருள்களுள் எல்லைப் பொருட்டாகிய ஐந்தாம் வேற்றுமையும் ஆறாம் வேற்றுமையும் பெயரைக் கொண்டு முடியும். ஒழிந்த **எழுவாய் முதலிய** வேற்றுமைகள் எல்லாம் வினையைக் கொண்டு முடியும். அவற்றுள் நான்காம் வேற்றுமையும் ஏழாம் வேற்றுமையும் வினையினையே அன்றி வினையொடு பொருந்தும் பெயரையும் கொண்டு முடியும் பெரும்பாலும் என்று சொல்லுவர் புலவர் எ-று.

நான்கேழ் பெயரும் புல்லும் என்னாது, 'இருமையும் புல்லும்' என்றமையான் வினையொடு பொருந்தும் பெயர் என்றாம்.

'பெரும்பாலும்' என்றமையானே வினை கொளற்கு உரியன சிறுபான்மை தொழிற்பெயர் கோடலும் வினையால் அணையும் பெயர் கோடலும் **அவற்றுள் எழுவாய் வேற்றுமை வினை கொண்டு முடிதலே அன்றிச் சிறுபான்மை பெயரையும் வினாவையும் கொண்டு முடிதலும்** கொள்க.

*வ-று:* கருவூரின் கிழக்கு, சாத்தனது கை என எல்லை இன்னும் அதுவும் பெயர் கொண்டன. **சாத்தன் வந்தான், சாத்தன் நல்லன்;** குடத்தை வனைந்தான், குடத்தை உடையன்; வாளால் வெட்டினான், வாளால் வலியன்; சாத்தனுக்குக் கொடுத்தான்,

---

[304] **எழுவாய் வேற்றுமைக்கு, "வினைபெயர் வினாக்கொள லதன்பய னிலையே" (நன். 295) என்று முடிபு கூறியமையால் ஒழிந்த இரண்டு முதல் ஏழு வேற்றுமைக்கும் இந்நூற்பாவால் பயனிலை கூறினார் என்று மயிலைநாதரும் (நன். 318) சங்கர நமச்சிவாயரும் உரை கூறுவர். எழுவாய்க்கு முன்பே பயனிலை கூறியமையானும் எட்டாம் வேற்றுமை பெயரின் விகாரமாய்ப் பெயருள் அடங்குதலானும் இரண்டு முதல் ஏழு வரை உள்ள ஆறு வேற்றுமைகளுக்கும் ஈண்டு முடிபு கூறப்பட்டது என்று வைத்தியநாத தேசிகர் (இல. விள. 223) கூறுவார்.**

**சிவஞான முனிவர் இம்மூவரையும் மறுத்து, எழுவாய் முதலிய எட்டு வேற்றுமைக்கும் இந்நூற்பா முடிக்கும் சொல் உணர்த்திற்று என்று கூறுகிறார்.**

சாத்தனுக்கு நல்லன்; நோயின் நீங்கினான், நோயிற் கொடியன்; அவையின்கண் இருந்தான், அவையின்கண் பெரியன்; கொற்றா கொள், கொற்றா வலியை என அல்லன வினை கொண்டன. "பிணிக்கு மருந்து" (குறள். 1102), மணியின்கண் ஒளி என நான்காம் வேற்றுமையும் ஏழாம் வேற்றுமையும் வினையே அன்றிப் பெயரும் கொண்டன. இப்பெயர்கள் எல்லை இன்னும் அதுவும் கொள்ளும் பெயர்கள் போலாது பிணிக்குக் கொடுக்கும் மருந்து, மணியின்கண் இருக்கும் ஒளி என வினை வேண்டி நிற்றலின் வினையொடு பொருந்தும் பெயர்கள் ஆயின. இங்ஙனம் ஆதலின் இவற்றிற்கும் வினைப் பயனிலை ஒன்றுமே சிறந்தது என்பதூஉம் இது கருதி, 'அல்ல வினைகொளும்' என முடித்து ஓதினார் என்பதூஉம் பெற்றாம்.

'வினைகொளும்' எனப் பொதுப்படக் கூறினமையின் காட்டாது ஒழிந்த வினை விகற்பங்கள் எல்லாம் வருவித்து முடித்துக் காண்க.

**சாத்தன் வருதல், சாத்தன் வந்தவன்,** குடத்தை வனைதல், குடத்தை வனைந்தவன் எனச் **சிறுபான்மை தொழிற்பெயரும் வினையால் அணையும் பெயரும் கொண்டன.** பிறவும் அன்ன.

இங்ஙனம் காட்டாது ஒழிந்த உருபுகளோடும் இவ்வாறே ஒட்டுக.

**சாத்தன் அவன், சாத்தன் யாவன், சாத்தன் யார் எனப் பெயரே ஆகிய எழுவாய் வேற்றுமை சிறுபான்மை சுட்டுப்பெயரும் வினாப்பெயரும் வினா வினைக்குறிப்பும் கொண்டது.**

**இங்ஙனம், சாத்தன் என்பான் பிறன் ஒருவனால் சுட்டவும் வினாவவும் பட்டு நிற்றன் மாத்திரையே அன்றி இவன் இத்தொழில் இயற்றினான் என வாராமையின் இவ்வெழுவாய் வேற்றுமை வினை கொண்டு முடிதலே சிறந்தது என்பார் ஏனை உருபுகளோடு சேர்த்துப் பொதுப்பட, 'அல்ல வினைகொளும்' என வரையறுத்தும் சுட்டவும் வினாவவும் பட்டு நிற்றலின் பெயரும் வினாவும் கொண்டு முடிதலைப், 'பெரும்பாலும்' என்பதனால் தழுவவும் கூறினார் என்க.** (62)

பெயரியல் முற்றிற்று.

இரண்டாவது

## வினையியல்

### தெரிநிலைவினையின் பொது இலக்கணம்

{{320}} **செய்பவன் கருவி நிலஞ்செயல் காலஞ்**
**செய்பொரு ளாறுந் தருவது வினையே.**

எ-னின், "பெயர்வினை, எனவிரண் டாகும்" (நூ. 270) என நிறுத்த முறையானே வினைச்சொல் இலக்கணம் உணர்த்துவான் தொடங்கி, அவற்றுள் தெரிநிலை வினைச்-சொல்லின் பொது இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

வரும் சூத்திரத்தான் வினைக்குறிப்பு என்றமையின் இது தெரிநிலை என்பது பெற்றாம்.

இ-ள்: கருத்தாவும் கருவியும் இடமும் செயலும் காலமும் செயப்படுபொருளும் ஆகிய அறுவகைப் பொருளையும் தருவது தெரிநிலை வினைச்சொல்லாம் எ-று.

'வினை' என்றது ஆகுபெயர். நட, வா முதலிய எல்லாம் தழுவுதற்குச், 'செய்' என்றார்.

'செய்பவன்' என ஒரு பால்மேல் வைத்து ஓதினாரேனும், "ஒருமொழி யொழிதன் னினங்கொளற் குரித்தே" (நூ. 358) என்பதனான் ஐம்பாலும் கொள்க.

'செய்பவன்' என்றும், 'கருவி' என்றும் பொதுப்படக் கூறினமையின் இயற்றுதற் கருத்தா, ஏவுதற் கருத்தா என்னும் இரண்டனையும் முதற்காரணம், துணைக்காரணம் என்னும் இரண்டனையும் கொள்க.

'செய்பவன்' என்பது செய்பவனாகிய பொருள் என்னும் பயத்ததாய் நிற்றலின், 'ஆறும்' என்னும் அஃறிணைத் தொகைச்சொல்லோடு முடிந்தது. அன்றித் திணை விரவி, அஃறிணை முடிபினவாயின எனினும் அமையும்.

வ-று: வனைந்தான் என்புழிக் குலாலனாகிய இயற்றுதற் கருத்தாவும் மண்ணாகிய முதற்காரணமும் தண்டசக்கரம் முதலிய துணைக்காரணங்களும் வனையும் இடமும் வனைதற்செயலும் இறந்தகாலமும் குடம் முதலிய செயப்படுபொருளும் தோன்றுதல் காண்க. அரசன் ஆலயம் செய்தான் என்பது ஏவற் கருத்தா. இஃது இயற்றினான் தொழிற்கு ஏவினானைக் கருத்தா ஆக்கிக் கூறுதலின் ஏவற் கருத்தா எனப்படும்.

அரசன் ஆலயம் செய்வித்தான் என்பது ஏவற் கருத்தா என்பாரும்[305] உளர். செய்தல் தொழிலைத் தச்சன் இயற்றினாற்போலச் செய்வித்தல் தொழிலை அரசன் இயற்று-தலின் இத்தொழிற்கு அரசனும் இயற்றுதற் கருத்தாவேயாம் என்க.

"முற்றும்மை யொரோவழி யெச்சமு மாகும்" (நூ. 426) என்பதனான், 'ஆறுந் தருவது வினை' என்பதற்கு இத்தொகையில் சில குறைந்து வரவும் பெறும் எனப் பொருள் உரைத்துக்கொள்க. அவை வருமாறு: கொடி ஆடிற்று, கொடி துஞ்சும் என்புழி முன்னையது செயப்படுபொருளும் பின்னையது செயப்படுபொருளோடு கருவியும் குறைந்து வந்தன. கொடி துஞ்சும் என்பதற்குக் காற்றினது அபாவத்தைக் கருவியாகக் கூறினும் அமையும்.

இன்னும், 'ஆறும்' என்னும் முற்றும்மையை உயர்வு சிறப்பும்மை ஆக்கி இழிந்தன சில உள; அவையும் வேண்டுமேற் கொள்க எனவும் பொருள் உரைத்துக்கொள்க. அவை யாவை எனின் இன்னதற்கு எனவும் இது பயன் எனவும் வருவனவாம். குடத்தைத் தனக்கு வனைந்தான், பிறர்க்கு வனைந்தான் என்னும் இன்னதற்கு என்பதூஉம் அறம் முதலிய பயன் கருதி வனைந்தான் என்னும் இது பயன் என்பதூஉம் ஏதுவின்பாற் பட்டுக் கருவியுள் அடங்கவும் பெறூஉம் ஆதலின் இழிந்தனவாயின. இப்பொருளை, "முற்றும்மை யொரோவழி யெச்சமு மாகும்" (நூ. 426) என்பதன்பாற் படுத்து ஆறும் தருவது வினையே எட்டும் தருவது வினையே என அமையாதோ[306] எனின் இவ்விரண்டுடன் எட்டாய் வருவதன்றி, ஆறே வருவதோர் வினை இன்மையின் அமையாது என்க.

முற்றுவினைகளுள் பகுதியால் செயலும் விகுதியால் கருத்தாவும் இடைநிலை முதலியவற்றால் காலமும் பெயரெச்ச வினையெச்சங்களின் இம்முறையே செயலும் காலமும் தோன்றின. அங்ஙனம் ஆதலின் முற்றுச்சொல்லான் மூன்றும் எச்சச்-சொல்லான் இரண்டும் என்னாது ஆறும் தருவது வினைச்சொல் என்றது என்னை எனின் இவ் ஆறும் காரணமாகக் கூடும் கூட்டத்து இவற்றுள் செயல் என்னும் மூதற்காரணத்தினின்றும் ஓர் வினையாகிய காரியம் நிகழும் ஆதலின் இவ் ஆறு காரணத்தையும் தரும் காரியமாகிய வினையின் தொழிலை ஒற்றுமை நயம் கருதி அதன் சொல்மேல் ஏற்றப்பட்டது. காரணத்தைக் காரியம் தரும் என்பது, "புகைதன், னாதி யாய வனல்காட்ட லாகும்" (சிவ. சுப. அள. 10:2-3) என்றாற் போலும். இங்ஙனம் ஆகவே

[305] மயிலைநாதர் (நன். 319) இதனை ஏவற் கருத்தா என்பார்.

[306] ஆறும் என்னும் முற்றும்மையை எச்சவும்மை ஆக்கி மயிலைநாதர் (நன். 319) இவ்வாறு பொருள் கூறுவார்.

செய்பவன் முதலிய ஆறனுள் முற்றின்கண் மூன்றும் எச்சத்தின்கண் இரண்டும் வெளிப்படையாயும் ஏனைய குறிப்பாயும் தோன்றும் என்பதாயிற்று. இவ் ஆறும் காரணம் ஆகவே இவற்றுள் செயல் என்றது காரியமாகிய வினையடியை அன்று என உணர்க.

"கால மறிதொழில் கருத்தனோ டியையப்
பால்வகை தோறும் படுமொழி வேறே"

என ஆசிரியர் அவிநயனார் கூறியவாறும்,

"வினையெனப் படுவது வேற்றுமை கொள்ளாது
நினையுங் காலைக் காலமொடு தோன்றும்" (தொல். வினை. 1)

என ஆசிரியர் தொல்காப்பியனார் கூறியவாறும் காண்க. (1)

## குறிப்புவினையின் பொது இலக்கணம்

**{321} பொருண்முத லாறினுந் தோற்றிமுன் னாறனுள்
வினைமுதன் மாத்திரை விளக்கல் வினைக்குறிப்பே.**

எ-னின், குறிப்பு வினைச்சொல்லினது பொது இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: பொருளாதி ஆறும் அடியாக அவற்றின்கண் தோன்றி, மேல் (320) கருத்தா முதலாகச் சொன்ன ஆறனுள் கருத்தா ஒன்றையுமே விளக்குதல் வினைக்குறிப்புச் சொல்லினது இலக்கணமாம் எ-று.

மேலை அதிகாரத்துப் பகுபத உறுப்புக் கூறியவழித் (137) தெரிநிலைவினைக்கு வினையடிகள் விளங்கிக் கிடந்தமைபோலக் குறிப்புவினையடி அங்ஙனம் வகைப்பட விளங்காமையின் ஈண்டு விளங்கப், 'பொருண்முத லாறினுந் தோற்றி' என்றும் தெரிநிலைவினைபோல் இக்குறிப்புவினைக்கண்ணும் செய்பவன் முதலிய ஆறும் உள என்பார், 'முன் னாறனுள்' என்றும் அவற்றுள் செய்பவனை இச்சொல்லினது விகுதி விளக்கும்; மற்று உள்ளனவற்றுள் ஒன்றேனும் விளக்குதற்கு உரிய உறுப்பு இதனகத்து இன்று என்பார், 'வினைமுதன் மாத்திரை' என்றும் இது குறிப்புவினை ஆதலின் இதற்குக் கருத்தாவாக விகுதிப்பொருளைக் கோடலும் குறிப்பாம் என்பார் **தருதல்** என்னாது, 'விளக்கல்' என்றும் கூறினார்.

வ-று: குழையினன், குழையினள், குழையினர், குழையிற்று, குழையின, குழையினென், குழையினெம், குழையினை, குழையினீர் எனவும் அகத்தினன், புறத்தினன் எனவும் ஆதிரையான், ஓணத்தான் எனவும் குறுந்தாளன், செங்கண்ணன்

எனவும் கரியன், நெடியன், நல்லன், **உண்மையன்,** உடையன் எனவும் கடுநடையன். இன்சொல்லன் எனவும்,

"மதிபாய் சடைமுடித்து மாசுணப்பைம் பூட்டுச்
சதிபாய் குறுந்தாட்டுத் தான - நதிபாய்
இருகவுட்டு முக்கட்டு நால்வாய்த்தென் னுள்ளம்
உருகவிட்டு நின்ற வொளி" (உரிச். நிக. காப்பு)

எனவும் வரும். பிறவும் அன்ன.

இவை பொருளாதி ஆறான் ஒரு பொருளை வழங்குதற்கு வரும் பெயராய் நில்லாது இவன் குழையை உடையன் ஆயினான் என ஆறாம் வேற்றுமையினது உடைமைப்பொருட்கண்ணும் அகத்தின்கண் இருந்தனன், புறத்தின்கண் இருந்தனன் என ஏழாம் வேற்றுமையது நிலப்பொருட்கண்ணும் ஆதிரைநாளில் பிறந்தான், ஓணநாளில் உதித்தான் என அவ்வேழாம் வேற்றுமையது காலப்பொருட்கண்ணும் குறுந்தாளை உடையான், செங்கண்ணை உடையான் என அவ்வாறாம் வேற்றுமையது உடைமைப்பொருட்கண்ணும் கருவண்ணமாய் இருப்பன், நெடுவடிவாய் இருப்பன், நற்குணமாய் இருப்பன், உண்மைத் தன்மையன், உடைப்பொருள் சிறந்தான் எனக் குணப்பண்பின்கண்ணும்[307] கடுநடையாக நடப்பான், இன்சொல்லாகச் சொல்லுவான் எனத் தொழிற்பண்பின்கண்ணும் வருதலின் வினைக்குறிப்புச் சொல் ஆயின. இவை முன்பு வினைக்குறிப்பாய்ப் பின்பு பொருள்களை வழங்குதற்கு வரும் பெயராய் வரின் அவை குறிப்பு வினையால் அணையும் பெயராம். இவை தம்முள் வேற்றுமை என்க.

<**இவற்றுள்[308] குணமடியாகத் தோன்றிய வினைக்குறிப்புச் சொற்கள் குண விகற்பம் பல ஆதலின் பல விகற்பப்பட்டு வரும். அவையாவன: பொன் அன்னன், புலி போல்வன் என ஒப்பு உணர்த்தியும் எப்பொருளும் அல்லன் இறைவன், பொய்யர் நெஞ்சில் புனிதன் இலன், எவ்வுயிர்க்கண்ணும் இறைவன் உளன், மெய் வலியன் எனப் பண்பு உணர்த்தியும் ஆ உண்டு என உண்மை உணர்த்தியும் அவைதாம் இவை அல்ல, "மாற்றருந் துப்பின் மாற்றோர் பாசறை" இலன்** (புறம். 309:5), **"மாற்றருந் துப்பின் மாற்றோர்[309] பாசறை, யுளன்"** (புறம். 309:5-6), **"சொலல்வல்லன்"** (குறள். 647) **எனக் குறிப்பு உணர்த்தியும் குழை**

[307] "பண்பின்கண்ணும்" என்பது ஆறுமுக நாவலர் பாடம்.
[308] நச்சினார்க்கினியர் (தொல். வினை. 16-17) உரை.
[309] தண்டபாணி தேசிகர் இவண் வேறு பாடம் கொள்வார்.

**இலன், கச்சு இலன் என உடைமைக்கு மறையாயும் வருவனவாம். ஒப்பாவது, "வினைபயன் மெய்யுரு"** (தொல். உவம. 1) **என்பனவற்றால் ஒன்றனை ஒன்று ஒத்தல். பண்பாவது ஒரு பொருள் தோன்றும் காலத்து உடன் தோன்றி அது கெடும் துணையும் நிற்பது. உண்மையாவது ஒரு பொருட்குக் கேடு பிறந்தாலும் தனக்குக் கேடின்றித் தான் ஒன்றேயாய்ப் பல வகைப்பட்ட பொருள்தோறும் நிற்பது. குறிப்பாவது பொருட்குப் பின் தோன்றிச் சிறிது பொழுது நிகழ்வது.> இவை எல்லாம் தொல்காப்பியக் கடலில் தோன்ற விளங்கும். இந்நூல் சுருங்கிய நூல் ஆதலின் இன்றியமையாதனவற்றைச் சில இடங்களில் விரித்து எழுதுகின்றனவும் உள. அவை ஆராய்ந்து அறிந்துகொள்க.**

குழையினன் என்புழி குழையை உடையான் வினைமுதல்; இது விகுதியான் விளங்கிற்று. குடத்தின்கண் மண்போல் இவ்வினையாகிய காரியத்தின்கண் முதற்காரணமாகிய செயல் உண்டு எனவும் காலம் இன்றேல் இது வினை அன்றாம் ஆதலானும் முக்காலங்களுள் ஒன்றன்பாற் சார்தற்கு உரிய இடைநிலை இதற்கு வேண்டாமையானும் முக்காலமும் உண்டு எனவும் வினைமுதற்கு ஓர் ஆதாரம் வேண்டுதலின் இடன் உண்டு எனவும் ஒன்றை வனைந்தான், ஒன்றால் வனைந்தான் என்றாற்போல இரண்டாவதற்கும் மூன்றாவதற்கும் இது பயனிலையாக ஒன்றைக் குழையினன், ஒன்றாற் குழையினன் என இயையாமையின் இதன்கண் செயப்படுபொருளும் கருவியும் இல எனவும் உய்த்துணர்க. ஒன்றாற் குழையினன் என ஒரோவழி இயையின் அங்ஙனம் கருவி உளது என்று கொள்க. உடையன் என்னும் குறிப்புவினை ஒன்றை உடையன், ஒன்றினால் உடையன் என வருதலின் இதன்கண் ஆறும் உண்டு என்க. இவ்வாறே தெரிநிலைவினைபோலக் குறிப்புவினை பிறவற்றுள்ளும் செய்பவன் முதலிய ஆறும் வருதலும் சில குன்றி வருதலும் உய்த்துணர்க.

வினை தெரிநிலை, குறிப்பு என இருகூற்றதாம் என இவ்விரு சூத்திரத்தானும் கூறினார். இவற்றுள் தெரிநிலையின்பாற் படும் செய்யான் என்றல் தொடக்கத்து எதிர்மறைக்கண்ணும் குறிப்பின்பாற் படும் இலன் என்றல் தொடக்கத்து எதிர்மறைக்கண்ணும் வினை இல்லையாம். அங்ஙனம் ஆகவும் இவற்றை வினை என்பதூஉம் இவை செய்பவன் முதலிய ஆறும் தரும் என்பதூஉம் என்னை எனின் இவற்றை வினை என்பது முயற்கோடு, ஆகாயப்பூ என்றாற்போல இன்மையை உண்மைபோல வைத்துக் கூறுவதோர் இலக்கணை. இவை செய்பவன் முதலிய ஆறும் தரும் என்பது, "சீத மின்மை பனியின்மை காட்டல்" (சிவ. சுப. அள. 10:4) போல வினையின்மை, செய்பவன் முதலியவற்றின் இன்மைகளைக் காட்டி நிற்றலையாம். (2)

## வினைச்சொற்களின் வகை

{322} **அவைதாம்,**
**முற்றும் பெயர்வினை யெச்சமு மாகி**
**ஒன்றற் குரியவும் பொதுவு மாகும்.**

*எ-னின், மேல் தெரிநிலை, குறிப்பு எனத் தொகுத்து உணர்த்திய வினைச்சொற்களை வகுத்து உணர்த்துதல் நுதலிற்று.*

*இ-ள்: மேல் இரண்டு சூத்திரத்தானும் (320, 321) கூறிய தெரிநிலையாயும் குறிப்பாயும் வரும் வினைச்சொற்கள்தாம் முற்று வினைச்சொற்களும் பெயரெச்ச வினைச்சொற்களும் வினையெச்ச வினைச்சொற்களும் ஆகித் திணை பால் இடங்களின் ஒன்றற்கு உரியனவும் பொதுமையின் நிற்பனவும் ஆகும் எ-று.*

*திணை பால் இடங்களின் என்பது இசையெச்சம் (360). முக்காலங்களின் ஒன்றற்கு உரியவும் (142-144) பொதுவும் (145) ஆமாறு பதவியலுள் போந்தமையின் அஃது ஒழித்துத் திணை பால் இடங்களின் என்றாம். உதாரணம் தத்தம் சிறப்புச் சூத்திரங்களான் (323-351) உணர்க.*

**இனி, "ஒருமொழி யொழிதன் னினங்கொளற் குரித்தே"** *(நூ. 358)* **என்பதனான் இங்ஙனம்[310] <திணை, பால், இடம், பொழுது இவை தீண்டி, ஒன்றற்கு உரியவும் பொதுவுமாய் நிற்பனவன்றிப் பிறவாற்றான் ஒன்றற்கு உரியவும் பொதுவுமாய் வருவனவும் சில உள எனக் கொள்க. அவையாவன: பிரிவர், ஆடுவர்; இவை தன்வினை ஒன்றற்கே உரியன. பிரிப்பர், ஆட்டுவர்; இவை பிறவினை ஒன்றற்கே உரியன. "தேற்றா வொழுக்க மொருவன்க ணுண்டாயின்"** *(நாலடி. 75:2)*, **"நட்பாட றேற்றா தவர்"** *(குறள். 187)* **எனவும் அவனைத் தேற்றிக் கொடுத்தான், அவளைத் தேற்றிப் பிரித்தான் எனவும் இவை சொல் ஒன்றே தன்வினையும் பிறவினையும் ஆயின. "தொல்காப் பியனெனத் தன்பெயர் தோற்றி"** *(தொல். சிற. பாயி. 14)*, **இவன் வெளுத்தான் இவை போல்வனவும் அது. உண்பான், உண்ணான்: இவை விதிவினை, மறைவினை. செய்யாய், செய்யீர், "மகனெனல், மக்கட் பதடி யெனல்"** *(குறள். 196)*, **அல்லும் பகலும் அருச்சிக்க யாமந்தோறும் வல்லார், வல்லார் மாட்டாதார், வல்லார் திறை கொள்வர், வல்லார் திறை கொடுப்பர், "அகல்விசும்பி லார்"** *(குறள். 25*)*, **அருளான், வெகுளான்: இவை சொல் ஒன்றே விதிவினையும் மறைவினையும் ஆயின. உண்ட சாத்தன், உண்ட சோறு: இவை செய்வினை, செயப்பாட்டுவினை. புலி கொன்ற யானை, மீன்**

---

[310] இலக்கணக் கொத்து நூற்பாவும் (நூ. 67) உரையும்.

**விழுங்கினவன், ஒன்னார் வணங்கினான், அவள் விரும்பினவன் இவன், அறிந்து வந்தான், "தவரடி புனைந்த தலைமையோன்"** (சிவ. போ. பாயி. 11): **இவை சொல் ஒன்றே செய்வினையும் செயப்பாட்டுவினையும் ஆயின. சாத்தன் நடந்தான், கால் நடந்தது: இவை முதல்வினை, சினைவினை. வனம் பொலிந்தது, படை பொருதிற்று, அவன் பருத்தான், அருக்கன் உருக்கினான்: இவை போல்வன எல்லாம் முதல்வினையும் சினைவினையும் ஆயின. தேடிய பொருள், தேடிய வந்தான், ஓடிய புரவி, ஓடிய விழுந்தான் எனவும் பாங்கனொடு கூடிய தலைவன், தலைவியொடு கூடிய வந்தான் எனவும் இவை சொல் ஒன்றே ஈரெச்சம் ஆயின> என அறிக. இவை போல்வன பிறவும் அன்ன.** (3)

முற்றுவினை

323. **பொதுவியல் பாறையுந் தோற்றிப் பொருட்பெயர்**
**முதலறு பெயரல தேற்பில முற்றே.**

*எ-னின், மேற் கூறிய முற்று ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.*

இ-ள்: தெரிநிலைமுற்றும் குறிப்புமுற்றும் பெயரெச்சமும் பெயரெச்சக் குறிப்பும் வினையெச்சமும் வினையெச்சக் குறிப்பும் ஆகிய அறுவகை வினைக்கும் பொது இலக்கணமாகிய செய்பவன் முதலிய ஆறினையும் (320) தோற்றுவித்துப், பொருட்-பெயர் முதலிய அறுவகைப் பெயரையும் (132, 276) பயனிலையாக ஏற்பனவாகி, அல்லது ஒன்றனையும் ஏலாதன முற்றுவினை வினைக்குறிப்புக்களாம் எ-று.

ஐம்பாலவாகிய வினைமுதலைத் தரும் விகுதியுறுப்புக் குறைந்த குறைச்சொல்லாகிய எச்சங்களைப் போலாது அவ்வுறுப்போடு கூடி நிறைந்து நிற்றலின் முற்று எனப்படும் என்பார், 'ஆறையும்' என்றும் பெயரன்றி வினைச்சொல் முதலியவற்றுள் ஒன்றனையும் ஏலாதன முற்று எனவும் பெயரன்றிப் பெயர்ப் பின் வேறு ஒன்றனையும் ஏலாதன முற்று எனவும் இருபொருள் தோன்றப், 'பெயரலது' என்றும் கூறினார்.

வ-று: செய்தான் அவன், நல்லன் அவன், குளிர்ந்தது நிலம், வந்தது கார், குவிந்தது கை, பரந்தது பசப்பு, ஒழிந்தது பிறப்பு என வரும். ஏனைத் திணை பால் இடம் காலங்கள்தோறும் ஒட்டுக.

இவற்றுள் ஐம்பாலவாகிய வினைமுதலைத் தரும் விகுதியுறுப்புக் குறையாது முற்றி நிற்றலும் பொருளாதி ஆறு பெயரை (132, 276) அன்றி வினை முதலியவற்றைப் பயனிலையாக ஏலாமையும் பெயர்ப்பின் வேறு ஒன்றையும் ஏலாமையும் காண்க.

"மற்றுச்சொன் னோக்கா மரபி னனைத்தும்
முற்றி நிற்பது[311] முற்றியன் மொழியே"

என்றார் ஆசிரியர் அகத்தியனாரும் என்க. (4)

தெரிநிலை வினைமுற்றின் தொகை

324. **ஒருவன்முத லைந்தையும் படர்க்கை யிடத்தும்
ஒருமைப் பன்மையைத் தன்மைமுன் னிலையினு
முக்கா லத்தினு முரண முறையே
மூவைந் திருமூன் றாறாய் முற்று
வினைப்பத மொன்றே மூவொன் பானாம்.**

எ-னின், மேற் கூறிய தெரிநிலை, குறிப்பு என்னும் இருவகை முற்றுள் தெரிநிலைமுற்று ஒன்றுமே இறப்பு, எதிர்வு, நிகழ்வு என்னும் கால விகற்பங்களைப் பெறும் என்பதூஉம் அவற்றான் இத்துணையாம் என்பதூஉம் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: ஒருவன், ஒருத்தி, பலர், ஒன்று, பல என்னும் ஐம்பாலவாகிய வினைமுற்றுக்களைப் படர்க்கைக்கண்ணும் ஒருமை, பன்மை என்னும் இருபாலவாகிய வினைமுற்றுக்களைத் தன்மைக்கண்ணும் முன்னிலைக்கண்ணும் வைத்து முக்காலங்களானும் மாற, முறையே படர்க்கை வினைமுற்றுப் பதினைந்தும் தன்மை வினைமுற்று ஆறும் முன்னிலை வினைமுற்று ஆறும் ஆகிய முற்று வினைச்சொல் ஒன்றுமே இருபத்தேழாம் எ-று.

ஈண்டு, 'ஒருவன்' என்பது பெயரை அன்று; உயர்திணை ஆண்பால்வினையை உணர்த்தி நின்றதோர் குறிப்புச்சொல்.

'ஒருமைப் பன்மை' என்புழி இடையே தோன்றிய பகரம் சந்த இன்பப்பொருட்டு விரித்தல் விகாரமாய் வந்தது.

'ஒன்றே' என்னும் ஏகாரம் முற்று வினைப் பதம், முற்று வினைக்குறிப்புப் பதம் என்னும் இரண்டனுள் முற்று வினைப் பதம் ஒன்றுமே மூவொன்பானாம் என்னும் பொருள் தந்து நிற்றலின் பிரிநிலை. இங்ஙனம் கூறவே இவற்குச் செல்வம் முன் உண்டு, இப்பொழுது உண்டு, பின் உண்டு என வினைக்குறிப்புப் பதம் முக்காலமும் ஏற்குமேனும் காலம் காட்டும் இடைநிலை முதலிய வேண்டாது பொதுமையின்

[311] **"மரபின வனைத்து, முற்றி நிற்பன" என்பது மயிலைநாதர் (நன். 322) பாடம்.**

நிற்றலின் அதனை இவ்வாறு விரிக்கப்படாது என்பது பெற்றாம். (5)

## ஆண்பால் படர்க்கை வினைமுற்று

{325} **அன்ஆ னிறுமொழி யாண்பாற் படர்க்கை.**

எ-னின், மேற் கூறிப் போந்த இருவகை முற்றுள் திணை பால் இடங்களின் ஒன்றற்கு உரியன உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: அன், ஆன் என்னும் இருவிகுதியும் இறுதி ஆகிய மொழிகள் உயர்திணை ஆண்பால் படர்க்கை வினைமுற்றும் வினைக்குறிப்புமுற்றும் ஆம் எ-று.

ஆண், பெண் என்னும் விகற்பம் அஃறிணைப்பெயர்க்கண் அன்றி அவ்வினைக்கண் இன்மையின், 'ஆண்' என்றமையான் உயர்திணை என்பதூஉம், 'பால்' என்றமையான் முற்று என்பதூஉம் மேலைச் சூத்திரத்து, "முற்று, வினைப்பத மொன்றே" (நூ. 324) என விதந்தாற்போல இதனுள் விதவாமையின் இருவகை முற்றிற்கும் பொதுவாகக் கூறினார் என்பதூஉம் பெற்றாம். மேல் வரும் சூத்திரங்களும் அன்ன.

வ-று: நடந்தனன், நடந்தான்; நடவாநின்றனன், நடவாநின்றான்; நடப்பன், நடப்பான்: **நம்பி** என உயர்திணை ஆண்பால் படர்க்கை **இறந்தகால வினைமுற்றும் நிகழ்கால வினைமுற்றும்** எதிர்கால **வினைமுற்றும்** முறையே வந்தன. குழையினன், குழையான்: நம்பி **என உயர்திணை ஆண்பால் படர்க்கை** வினைக்குறிப்புமுற்று **வந்தன.** (6)

## பெண்பால் படர்க்கை வினைமுற்று

{{326}} **அள்ஆ ளிறுமொழி பெண்பாற் படர்க்கை.**

எ-னின், இதுவும் அது.

இ-ள்: அள், ஆள் என்னும் இருவிகுதியும் இறுதி ஆகிய மொழிகள் உயர்திணைப் பெண்பால் படர்க்கை வினைமுற்றும் குறிப்புமுற்றும் ஆம் எ-று.

வ-று: நடந்தனள், நடந்தாள்; நடவாநின்றனள், நடவாநின்றாள்; நடப்பள், நடப்பாள்; குழையினள், குழையாள்: நங்கை என வரும். (7)

## பலர்பால் படர்க்கை வினைமுற்று

{{327}} **அர்ஆர் பவ்வூ ரகரமா ரீற்ற**
**பல்லோர் படர்க்கைமார் வினையொடு முடிமே.**

எ-னின், இதுவும் அது.

இ-ள்: அர், ஆர், ப, மார் என்னும் நான்கு விகுதியினையும் இறுதியாக உடைய மொழிகள் உயர்திணைப் பன்மைப்படர்க்கை வினைமுற்றும் குறிப்புமுற்றும் ஆம். இவற்றுள் மாரீற்று வினைமுற்றுப் பொதுவிதியால் (323) பெயருடன் முடிவதன்றி வினையுடனும் முடியும் எ-று.

"மா ரெதிர்வும் பாந்தஞ், செலவொடு வரவும்" (நூ. 145) எனப் பதவியலுள் கூறினமையின் இவ்விரு விகுதியும் குறிப்புமுற்றின்கண் வாரா எனவும் மார் வினை-யுடனும் முடியும் என்றமையின் இதற்கு எய்தியதன்மேல் சிறப்புவிதி வகுத்தார் எனவும், 'வினையொடு முடிமே' என்புழி இறந்தது தழீஇய எச்சவும்மை இன்று எனக் கொள்ளினும் அமையக் கூறினமையின் வினையொடு முடிதல்போல் பெயரொடு முடிதல் பயின்று வருவது அன்று எனவும் கொள்க.

வ-று: நடந்தனர், நடந்தார்; நடக்கின்றனர், நடக்கின்றார்; நடப்பர், நடப்பார்; குழையினர், குழையார்: அவர் எனவும் நடப்ப, எய்துப, செல்லுப, புல்லுப: அவர் எனவும்,

"பெரிய வோதினுஞ் சிறிய வுணராப்
பீடின்று பெருகிய திருவிற்
பாடின் மன்னரைப் பாடன்மா ரெமரே" (புறம். 375:19-21)

எனவும் வரும். "பாடன்மார்" (புறம். 375:21) என்பது மாரீற்று எதிர்மறை வினைமுற்று ஆதலின் எதிர்கால வினை ஒன்றனையும் மறுத்துப் பாடுவார் அல்லர் என்னும் பொருட்டாய் நின்று, எமர் என்னும் பெயர் கொண்டது. இனி வினையொடு முடியுமாறு:

"ஆர்த்தார் கொண்மார் வந்தார்" (நன். 326* மயிலை.)

"விழுக்கோட் பலவின் பழூஉப்பயன் கொண்மார்
குறவ ரூன்றிய குரம்பை புதைஇ" (அகம். 12:8-9*)

என வரும்.

இதனை வினைமுற்று வினையெச்சம் ஆயிற்று என்றால் என்னை எனின் வினைமுற்றின வழி அதற்கு இயைந்த பெயர்ப் பயனிலை வாராது, இயையாத வினை வந்ததேல் அதற்கு இயைய வினைமுற்று வினையெச்சம் ஆயிற்று எனப்படும்.

இம்மாரீற்று வினைமுற்றிற்குப் பெயர்போல வினையும் இயைந்து வருதலின் முற்று எச்சம் ஆயினது அன்று; முற்றேயாம் என்க. பின் வரும், "செய்கெ னொருமையுஞ் செய்குமென் பன்மையும்" (நூ. 333) என்னும் முற்றுக்களும் அன்ன.

"காலமொடு கருத வரினு மாரை
மேலைக் கிளவியொடு வேறுபா டின்றே"

என்றார் ஆசிரியர் அகத்தியனாரும் என்க. (8)

ஒன்றன்பால் படர்க்கை வினைமுற்று

{{328}} **துறுடுக் குற்றிய லுகர வீற்ற**
**ஒன்றன் படர்க்கைடுக் குறிப்பி னாகும்.**

எ-னின், இதுவும் அது.

இ-ள்: இம்மூன்று குற்றியலுகர ஈற்று விகுதிகளையும் இறுதியாக உடைய மொழிகள் அஃறிணை ஒருமைப்படர்க்கை வினைமுற்றும் குறிப்புமுற்றும் ஆம். இவற்றுள் டுவ்விகுதி குறிப்பின்கண் அன்றித் தெரிநிலைக்கண் வாராது எ-று.

றுவ்விகுதி முக்கால வினைக்கண்ணும் பயின்று வாராமையானும் துவ்விகுதி தன் முன் நின்ற எழுத்து நோக்கி றுவ்விகுதியாய்த் திரிந்தது எனினும் அமையும் ஆதலானும் டுவ்விகுதி குறிப்பு ஒன்றற்கே வருதலானும் இதுவும் துவ்விகுதி திரிந்தது எனினும் அமையும் ஆதலானும் துவ்விகுதியின் பின் கூறப்பட்டன.

வ-று: நடந்தது, நடக்கின்றது, நடப்பது; வந்தன்று, கூயிற்று எனவும் அணித்து, சேய்த்து; அற்று, இற்று, எற்று எனவும் பொருட்டு, ஆதிரைநாட்டு, குண்டுகட்டு: அது எனவும்[312] வரும். வந்தன்று என்புழி அன் என்பது சாரியை.

சுட்டினும் வினாவினும் வந்த வினைக்குறிப்புக்கள், "பொருண்முத லாறினுந் தோற்றி" (நூ. 321) என்றவற்றுள் எப்பொருள எனின் பொருளாதி ஆறனுள் யாதானும் ஒன்றனைச் சுட்டியும் வினாவியும் வருதலின் அவ்வப் பொருளவாம் என்க.

---

[312] **ஆண், பெண், பலர், ஒன்று, பல என்னும் ஐம்பால் தெரிநிலை, குறிப்பு வினைமுற்றுக்-களுக்கும் காட்டப்படும் உதாரணங்களின் (325-329) வைப்புமுறையை நோக்கினால் பழைய பதிப்புகளில் உள்ள பாடமே சிறக்கும். ஏட்டுப் பாடமும் இதுவே.**

'குற்றிய லுகர வீற்ற' என்றமையான் எற்று என்றாற்போல ஏது, யாது என்பனவும் காரணப்பெயர் ஆமன்றி வினைக்குறிப்பும் ஆம் என்பதூஉம் அங்ஙனம் ஆகவே, "ஒருமொழி யொழிதன் னினங்கொளற் குரித்தே" (நூ. 358) என்பதனான் அது, இது என்றல் தொடக்கத்து முற்றுகர ஈற்றவும் வினைக்குறிப்பு ஆம் என்பதூஉம் பெற்றாம். (9)

## பலவின்பால் படர்க்கை வினைமுற்று

{{329}} **அஆ ஈற்ற பலவின் படர்க்கை**
**ஆவே யெதிர்மறைக் கண்ண தாகும்.**

எ-னின், இதுவும் அது.

இ-ள்: இவ்விரு விகுதியினையும்[313] இறுதியாக உடைய மொழிகள் அஃறிணைப் பன்மைப்படர்க்கை வினைமுற்றும் குறிப்புமுற்றும் ஆம். இவற்றுள் ஆகாரம் எதிர்மறை வினைக் கண்ணது ஆமன்றி உடன்பாட்டு வினைக்கண் வாராது எ-று.

'ஆவே யெதிர்மறைக் கண்ண தாகும்' என்றமையான் ஏனை விகுதிகள் உடன்பாட்டினும் எதிர்மறையினும் வரும் என்பது பெற்றாம்.

வ-று: நடந்தன, நடந்த; நடவாநின்றன, நடவாநின்ற; நடப்பன, நடப்ப; கரியன, கரிய: அவை எனவும் நடந்தில, நடவாநின்றில, நடவா: அவை எனவும் வரும்.

இல்லன, இல்ல என்னும் எதிர்மறை வினைக்குறிப்புமுற்றின்கண் பகுதியே மறைப்பொருள் தந்து நிற்றலின் இதற்கு எதிர்மறை ஆகாரம் வேண்டாமையின் ஏற்புழிக் கோடலான் இம்மறைவிகுதி தெரிநிலைக்கே கொள்க. இங்ஙனம் காட்டிய அன் பெறா அகரவீற்றுப் பலவறிசொற்களுள் நடப்ப என்பதன் இறுதி நோக்கி உயர்திணைப் பன்மைப்படர்க்கைக்கும் அஃறிணைப் பன்மைப்படர்க்கைக்கும் பொதுவினை என்று கொள்ளற்க. இதன்கண் பகரம் எதிர்கால வினை இடைநிலை ஆதலின் இத்தொடக்கத்தன எல்லாம் பல பொருள் ஒரு சொல்லாம் என்க. (10)

## இருதிணைப் பொதுவினை

330. **தன்மை முன்னிலை வியங்கோள் வேறிலை**
**உண்டீ ரெச்ச மிருதிணைப் பொதுவினை.**

---

[313] "வவ்வீறு அகர ஈறாய் அடங்குதலானும் கள்ளீறு தானே நின்று ஒரு வினைக்கு ஈறாய் வாரமையானும்" பவணந்தி முனிவர் இவற்றை அஃறிணைப் பன்மைப்படர்க்கை வினைமுற்று விகுதிகளாகக் கொண்டிலர் என்று மயிலைநாதர் (நன். 328) காரணம் கூறி விளக்குவார்.

எ-னின், திணை பால் இடங்கட்குப் பொதுவினை உணர்த்துவான் தொடங்கி, அவற்றுள் இருதிணைக்கும் பொதுவினை இவை என உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: தன்மை வினை, வினைக்குறிப்பு முற்றும் முன்னிலை வினை, வினைக்குறிப்பு முற்றும் வியங்கோள் வினைமுற்றும் வேறு, இல்லை, உண்டு என்னும் மூன்று வினைக்குறிப்புமுற்றும் பெயரெச்ச வினை, வினைக்குறிப்பும் வினையெச்ச வினை, வினைக்குறிப்பும் இருதிணைக்கும் பொதுவினையாம் எ-று.

'தன்மை முன்னிலை' என்றமையான் அவை முற்று என்பது பெற்றாம்.

'எச்சம்' எனப் பொதுப்படக் கூறினாரேனும் முற்றெச்சங்கள் முற்றோடு ஒக்கும் ஆதலின் அவை ஒழியக் கொள்க.

செய்யும் என்னும் முற்றும் இருதிணைப் பொதுவினை அன்றோ? அதனைக் கூறாது ஒழிந்தது என்னை எனின் முற்று எச்சம் ஆயினாற்போலச் செய்யும் என்னும் பெயரெச்சம் செய்யும் என்னும் முற்று ஆனமையின், 'ஈரெச்ச மிருதிணைப் பொதுவினை' என்ற துணையானே அம்முற்றும் இருதிணைப் பொதுவினை என்பது தாமே போதரும் என்க. செய்யுமென் எச்சம் முற்று ஆமாறும் அம்முற்றிற்கு ஈண்டுப் போந்த இருதிணைப் பொது ஒழிய, அஃது ஐம்பால் மூவிடங்களில் பொதுமையின் நிற்குமாறும் மேற் (341, 348) கூறுப. (11)

### தன்மையொருமை வினைமுற்று

{331} **குடுதுறு வென்னுங் குன்றிய லுகரமோ**
**டல்லன் னென்னே னாகு மீற்ற**
**இருதிணை முக்கூற் றொருமைத் தன்மை.**

எ-னின், நிறுத்த முறையானே (330) தன்மையொருமை வினைமுற்றும் குறிப்புமுற்றும் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: இவ்வெட்டு விகுதிகளையும் இறுதியாக உடைய மொழிகள் இருதிணைக்கண்ணவாகிய ஒருவன், ஒருத்தி, ஒன்று என்னும் முக்கூற்று ஒருமைத்தன்மை வினைமுற்றும் குறிப்புமுற்றும் ஆம் எ-று.

குவ்விகுதியை உடன் கூறினமையின் அதன் பின் நின்ற மூன்றும் காலம் காட்டும் விகுதிகள் என்பதூஉம், 'ஒருமை' என்றமையின் இவை திணைப்பொதுவன்றிப் பாற்பொது ஆகா என்பதூஉம் பெற்றாம். ஒருமை, பன்மை என மேல் (332, 335, 337) விதப்பனவும் அன்ன.

வ-று: உண்கு; கொண்டு; வந்து, வருது; சென்று, சேறு; உண்பல்; உண்டனன், உண்ணாநின்றனன், உண்பன்; உண்டனென், உண்ணாநின்றனென், உண்குவென்; உண்டேன், உண்ணாநின்றேன், உண்பேன் எனவும் தாரினென்; தாரினேன்: யான் எனவும் வரும். காட்டாது ஒழிந்தன வந்துழிக் காண்க.

தன்மைக்கண்ணும் அன்விகுதி கொள்ளாது ஒழியின், "எழுத்தசைசீர், பந்த மடி-தொடை பாவினங் கூறுவன்" (யா. கா. பாயி.) என்றல் தொடக்கத்தன அமையா என்க. (12)

உளப்பாட்டுத் தன்மைப்பன்மை வினைமுற்று

332. **அம்மா மென்பன முன்னிலை யாரையும்**
**எம்மே மோமிவை படர்க்கை யாரையும்**
**உம்மூர் கடதற விருபா லாரையுந்**
**தன்னொடு படுக்குந் தன்மைப் பன்மை.**

எ-னின், தன்மைப்பன்மை வினைமுற்றும் குறிப்புமுற்றும் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: தன் நிலையின் நிற்பதன்றி அம், ஆம் என்னும் இவ்விரு விகுதியினையும் இறுதியாக உடைய மொழிகள் முன்னிலையாரையும் எம், ஏம், ஓம் என்னும் இம்மூன்று விகுதியினையும் இறுதியாக உடைய மொழிகள் படர்க்கையாரையும் கும், டும், தும், றும் என்னும் இந்நான்கு விகுதியினையும் இறுதியாக உடைய மொழிகள் முன்னிலை, படர்க்கை என்னும் ஈரிடத்தாரையும் தன்னுடன் கூட்டும் உளப்பாட்டுத் தன்மைப்பன்மை வினைமுற்றும்[314] குறிப்புமுற்றும் ஆம் எ-று.

தன் நிலையின் நிற்பதன்றி என்னும் இறந்தது தழீஇய எச்சவும்மைகள் எண்ணும்மை-களாயும், 'இருபா லாரையும்' என்புழி இவற்றோடு முற்றும்மையாயும் நின்றன.

வ-று: உண்டனம், உண்ணாநின்றனம், உண்பம்; உண்டாம், உண்ணாநின்றாம், உண்பாம்; தாரினம்; தாரினாம்: யாம் எனவும் யானும் நீயும் எனவும் உண்டனெம்,

---

[314] ஒருமைத்தன்மை, பன்மைத்தன்மை எனத் தன்மைவினை இருவகைப்படும். இவை தனித்தன்மை, உளப்பாட்டுத்தன்மை என்றும் அழைக்கப்படும். தனித்தன்மை ஒருமையே ஆதலின் பன்மைத்தன்மை என்பது தன்னோடு பிறரை உளப்படுத்துவது.

முன் நின்றாரை உளப்படுத்தல், படர்க்கையாரை உளப்படுத்தல், அவ்விருவரையும் உளப்படுத்தல் என இது மூன்று வகைப்படும் என்று சேனாவரையர் (தொல். வினை. 5) விளக்குவார்.

உண்ணாநின்றனெம், உண்பெம்; உண்டேம், உண்ணாநின்றேம், உண்பேம்; உண்டோம், உண்ணாநின்றோம், உண்போம்; தாரினெம்; தாரேம்; தாரினோம்: யாம் எனவும் யானும் அவனும் எனவும் உண்கும்; உண்டும்; வந்தும், வருதும்; சென்றும் சேறும்: யாம் எனவும் யானும் நீயும் அவனும் எனவும் தனித் தன்மைப்பன்மையும் உளப்பாட்டுத் தன்மைப்பன்மையும் முறையே வந்தன.

இன்னும் இவ்வும்மைகளை ஐயவும்மைகள் ஆக்கி அம், ஆம் என்பன முன்னிலை-யாரையேனும் படர்க்கையாரையேனும் தன்னொடு படுக்கும் எனவும் ஆக்கவும்மை ஆக்கி அம், ஆம் என்பன முன்னிலையாரையும் படர்க்கையாரையும் ஒருங்கு தன்னொடு படுக்கும் எனவும் பொருள் உரைத்து, உண்டனம் யானும் அவனும் எனவும் யானும் நீயும் அவனும் எனவும் அருகி வருதல் கண்டுகொள்க. ஏனை எட்டு விகுதியும்[315] அன்ன. இவற்றை, "ஓரிடம் பிறவிடந் தழுவலு முளவே" (நூ. 380) என்னும் இட வழுவமைதியாகக் கோடலும் ஒன்று.

தன்மை ஒருமைக்கண் அன்விகுதியும் பன்மைக்கண் ஓம் விகுதியும் புதியன புகுதல். (13)

தன்மை வினைமுற்றுக்குச் சிறப்புவிதி

**333. செய்கெ னொருமையுஞ் செய்குமென் பன்மையும்
வினையொடு முடியினும் விளம்பிய முற்றே.**

எ-னின், எய்தியதன்மேல் சிறப்புவிதியும் எய்தியது இகந்துபடாமற் காத்தலும் உணர்த்துதல் நுதலிற்று.

'வினையொடு முடியினும்' என்றமையால் வினையொடு முடியும்[316] என்னும் விதி தாமே போதரும் ஆதலின் எய்தியதன்மேல் சிறப்புவிதி என்றாம்.

இ-ள்: செய்கு என்னும் தன்மை ஒருமை முற்றும் செய்கும் என்னும் தன்மைப்பன்மை முற்றும் பெயருடனே அன்றி வினையுடனேயும் முடியும்; அங்ஙனம் முடியினும் மேற் கூறிய (331, 332) முற்றேயாம் எ-று.

எச்சங்களைப் போலாது வினைமுதலைத் தரும் விகுதியுறுப்போடு கூடி முற்றி நிற்றலின் முற்று எனப்பட்டதன்றிப் பயனிலை கொண்டு முற்றலின் முற்று எனப்-

---

[315] அம் ஒழிந்த ஆம், எம், ஏம், ஓம், கும், டும், தும், றும் என்னும் எட்டு விகுதிகள்.

[316] "வினையொடு முடியும்" என்பதே ஆறுமுக நாவலரின் முதல் பதிப்பில் (பக். 220) உள்ள பாடம்.

பட்டது அன்று என்பார் பெயரே அன்றி, 'வினையொடு முடியினும் விளம்பிய முற்றே' என்றார்.

வ-று: உண்கு வந்தேன், உண்கும் வந்தேம் என வரும்.

இங்ஙனம் ஆயின் உண்பேன் வந்தேன், உண்பேம் வந்தேம் என இவ்வொருமை பன்மையும் வினையொடு முடியும் என்றால் என்னை எனின்,

"எப்பொரு ளெச்சொலி னெவ்வா றுயர்ந்தோர்
செப்பின ரப்படிச் செப்புதன் மரபே" (நூ. 388)

என்ப ஆகலின் செய்கென் ஒருமையும் செய்குமென் பன்மையும் பெயரொடும் வினை-யொடும் முடிதல் மரபு ஆயினாற்போல அவை பெயருடன் அன்றி வினையொடு முடிதல் மரபு அன்மையின் அஃது இயையாது என்க. (14)

உளப்பாட்டுப் பன்மை முன்னிலை வினைமுற்று

334. **முன்னிலை கூடிய படர்க்கையு முன்னிலை.**

எ-னின், உளப்பாட்டுப் பன்மை முன்னிலைக்கண்ணும் உளது என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: தன்மையோடு கூடிய முன்னிலை படர்க்கைகள் தன்மை ஆனாற்போல (332) முன்னிலையோடு கூடிய படர்க்கையும் முன்னிலை ஆம் எ-று.

விகுதிகளை விதவாது கூறினமையின் முன்னிலைப் பன்மைவிகுதிகள் (337) எல்லாம் படர்க்கையை உளப்படுத்தும் என்பதூஉம், 'படர்க்கை' என்றமையால் தன்மையை உளப்படுத்தா என்பதூஉம் பெற்றாம்.

வ-று: உண்டனிர், உண்டீர், உண்மின், குழையினிர், குழையீர்: நீயும் அவனும் எனவும்,

"ஒண்டூவி நாராய்நின் சேவலு நீயுமாய்
வண்டூதும் பூங்கானல் வைகலுஞ் சேறீரால்" (நன். 333* மயிலை.)

எனவும் வரும்.

இச்சூத்திரம் முன்னிலைப் பன்மைமுற்றுக் கூறியவழிக் (337) கூறாது ஒன்றின முடித்தல் தன்னின முடித்தல் என்னும் உத்தியான் ஈண்டுக் கூறப்பட்டது. (15)

முன்னிலையொருமை வினைமுற்று

{335} **ஐயா யிகர வீற்ற மூன்றும்**
**ஏவலின் வரூஉ மெல்லா வீற்றவும்**
**முப்பா லொருமை முன்னிலை மொழியே.**

எ-னின், முன்னிலையொருமை **வினைமுற்றும்** குறிப்புமுற்றும் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: ஐ, ஆய், இ என்னும் மூன்று ஈற்று மொழிகளும் **விகுதி குன்றாதும் குன்றியும் நிற்பனவாகிய** ஏவற்கண் வரும் இருபத்துமூன்று ஈற்று மொழிகளும் (137) ஒருவன், ஒருத்தி, ஒன்று என்னும் மூன்று கூற்றவாகிய முன்னிலையொருமை **வினைமுற்றும்** குறிப்புமுற்றும் ஆம் எ-று.

இகரவீற்று மொழிகட்கு இகரம் எதிர்காலம் காட்டுவதன்றி (145) இடைநிலை நின்றும் காலம் காட்டும் என்பது தோன்ற ஐ, ஆய் என்னும் விகுதிகளோடு இகர-விகுதியை உடன் கூறினார்.

ஏவன்முற்றுத் தெரிநிலை ஒன்றற்கே உரிமையின் உம்மை கொடுத்து விதந்து ஓதினார்.

வ-று: உண்டனை, உண்ணாநின்றனை, உண்பை; உண்டாய், உண்ணாநின்றாய், உண்பாய்; உண்டி, உண்ணாநின்றி, சேறி; நடவாய், வாராய், கேளாய், அஃகாய்; நட, வா, கேள், அஃகு எனவும் வில்லினை, வில்லாய், வில்லி: நீ எனவும் வரும்.

இகரவீற்று மொழிகள் எதிர்கால இடைநிலை ஏற்குமேல்[317] காண்க.

'ஏவல்' எனப் பொதுப்படக் கூறினமையின் செய்வி, செய்விப்பி என்னும் ஏவன்மேல் ஏவல்களும்[318] செய்யல், செய்யேல் என்றல் தொடக்கத்து எதிர்மறை ஏவல்களும் இருபத்துமூன்று ஈற்றுள் அடங்கிக் கிடந்தமை காண்க. பால் காட்டி நிற்றலின் ஏவலும் முற்றேயாம் என்க. (16)

---

[317]"வருவி, தின்பி என எதிர்காலத்திற்கு உரிய வகரமும் பகரமும் முன்னிலைக்கு உரிய இகரமும் ஏறி, இடைநிலைக்கு உரிய எழுத்துக்களும் பெற்று, எடுத்தல் ஓசையான் நிற்கும் என்று உணர்க." என்ற நச்சினார்க்கினியர் (தொல். வினை. 27) உரை ஈண்டுக் கருதத் தக்கது.

[318]நடத்துவிப்பி, வருவிப்பி, நடப்பிப்பி என வருவனவற்றை இருமடி ஏவல் என்பாரும் உளர். இருகால் ஏவுதல் கூறியது கூறல் ஆதலின் இவை இழிவழக்கு என மறுக்க என்ற நச்சினார்க்கினியர் (தொல். வினை. 27) உரையோடு இதனை ஒப்பிடுக.

### ஏவல்முற்றின்கண் வரும் எழுத்துப்பேறு

**336. முன்னிலை முன்ன ரீயு மேயும்**
**அந்நிலை மரபின் மெய்யூர்ந்து வருமே.**

*எ-னின்*[319] *ஏவன்முற்றிற்கு எய்தியதன்மேல் சிறப்புவிதி உணர்த்துதல் நுதலிற்று.*

*இ-ள்: முன்னிலை ஏவன்முற்று என மேற் கூறியவற்றிற்கு முன்னே ஈகாரமும் ஏகாரமும் ஆண்டு வந்து நிற்றற்கு உரிய மரபினை உடைய மெய் யாதானும் ஒன்றை ஊர்ந்து வரும் எ-று.*

*ஈகார ஏகாரங்களை, "அன்ஆன் அள்ஆள்" (நூ. 140) என விகுதி கூறியவழி எடுத்து ஓதாமையானும் மேலைச் சூத்திரத்து (335) ஐ ஆய் இகரங்களோடு ஒருங்கு ஓதாமை-யானும் இவை விகுதியுருபு அல்ல என்பதூஉம் ஏவற்கண் வரும் எழுத்துப்பேறு என்பதூஉம், அந்நிலை மரபின் மெய்' என விதந்தமையின் அஃது அம்மொழியிறுதி மெய் அன்று என்பதூஉம் பெற்றாம்.*

*வ-று: "சென்றீ பெருமநிற் றகைக்குநர் யாரே" (அகம். 46:16*) எனவும், "அட்டி லோலை தொட்டனை நின்மே" (நற். 300:12) எனவும் வரும்.*

*இவ்வெழுத்துப்பேறு, "நடவா மடி" (நூ. 137) என்னுஞ் சூத்திரத்தின் பிற் கூறாது ஈண்டுக் கூறினார் இவ்வாறு வரும் ஏவல்கள் பகுதி மாத்திரையன்றி நிற்றலின் இவை முன்னிலை ஒருமைவிகுதி உருபீற்று வினைமுற்றோ ஏவன்முற்றோ என்று ஐயுறு-வார்க்கு ஐயம் அறுத்தற்கு.*

*இவற்றிற்கு விகுதியுருபின் பொருள் இன்மையின் முன்னிலையசையாம்*[320] *என்க.* (17)

### முன்னிலைப்பன்மை வினைமுற்று

**337. இர்ஈ ரீற்ற விரண்டு மிருதிணைப்**
**பன்மை முன்னிலை மின்னவற் றேவல்.**

---

[319]இது தொல்காப்பிய (எச்ச. 55) நூற்பா.

[320]இவை இரண்டும் தத்தம் குறிப்பின் பொருள் செய்யும் இடைச்சொற்கள்; இவற்றின் பொருள் புறத்துறவு என்பார் இளம்பூரணர்; ஏகாரம் மகரம் ஊர்ந்தல்லது வாராது; இதனை அசைநிலை என்பாரும் உளர் என்பார் சேனாவரையர்; ஈகாரம் கடதறவை ஊர்ந்தும் வரும் என்பார் நச்சினார்க்கினியர். இக்குறிப்புகளை அவரவர் (தொல். எச்ச. 55) உரையில் காண்க.

எ-னின், முன்னிலைப்பன்மை வினைமுற்றும் குறிப்புமுற்றும் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: இர், ஈர் என்னும் இருவிகுதியினையும் இறுதியாக உடைய மொழிகள் இருதிணைப் பன்மைமுன்னிலை வினைமுற்றும் குறிப்புமுற்றும் ஆம். மின் என்னும் விகுதியை இறுதியாக உடைய மொழிகள் இருதிணைப் பன்மைமுன்னிலை ஏவன்-முற்றாம் எ-று.

வ-று: உண்டனிர், உண்ணாநின்றனிர், உண்குவிர்; உண்டீர், உண்ணாநின்றீர், உண்பீர்; உண்மின் எனவும் குழையினிர்; குழையீர்: நீர் எனவும் வரும்.

'மின்னவற் றேவல்' என்றமையான் உண்ணும், தின்னும்: நீர் என உம்மீற்றவாய் வரும் பன்மையேவல் புதியன என்பதூஉம் அவை, "புதியன புகுதலும், வழுவல" (நூ. 462) என்பதனான் அமையும் என்பதூஉம் பெற்றாம். (18)

## வியங்கோள் வினைமுற்று

338. **கயவொடு ரவ்வொற் றீற்ற வியங்கோள்**
**இயலு மிடம்பா லெங்கு மென்ப.**

எ-னின், வியங்கோள் முற்று உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: க, ய என்னும் இரண்டு உயிர்மெய்யினையும் ரகரவொற்றினையும் இறுதியாக உடையன வியங்கோள் முற்றாம். அவை மூவிடத்தினும் ஐம்பாலினும் செல்லும் என்று சொல்லுவர் புலவர் எ-று.

'ரவ்வொற்று' என்றமையான் முன்னைய இரண்டும் உயிர்மெய் என்பதூஉம், 'ஒடு' என்றமையான் ரகரவொற்றுக் ககர, யகர உயிர்மெய்கள்போல் தனித்து இயலாது, யகரத்தோடு வரப்பெறும் என்பதூஉம், 'என்ப' என்றமையான் இம்மூன்று ஈற்றவும் தொன்றுதொடு நெறிய என்பதூஉம் பெற்றாம்.

வ-று: வாழ்க; வாழிய; வாழியர், நிலீயர்: யான், யாம், நீ, நீர், அவன், அவள், அவர், அது, அவை எனவும், "பெறுகதில் லம்ம யானே" (குறுந். 14:3), "வெல்க வாழி-நின் வென்றி வார்கழல், செல்க தீயன சிறக்க நின்புகழே" (சூளா. 577:1-2*), "மன்னிய பெருமநீ நிலமிசை யானே" (புறம். 6:29) எனவும் வாழ்த்துதற் பொருண்மைக்கண் வந்தன. நடக்க, வருக, உண்க, செல்க என உயர்ந்தோன் இழிந்தோனை இன்னது செய்க என விதித்தற் பொருண்மைக்கண் வந்தன. "போற்றி யருளுகநின் னாதியாம்

பாதமலர்" (திரு. 174:1), "எங்கொங்கை நின்னன்ப ரல்லார்தோள் சேரற்க" (திரு. 173:4) எனவும், "கடாவுக பாகநின் கால்வ னெடுந்தேர்" (தொல். வினை. 29 சேனா.) எனவும் வேண்டிக்கோடற் பொருண்மைக்கண் வந்தன.

இங்ஙனம் கூறினார், "வகுத்துரை யாதவும் வகுத்தனர் கொளலே" (நூ. 257) என அல்லீற்று வியங்கோளும் உடன்பட்டுப் புணர்த்தமையான் எடுத்து ஓதாப் பிற ஈற்ற-வாய் இருதிணை ஐம்பால் மூவிடங்களினும் வாழ்த்து முதலிய ஏவற்பொருளவாய்ச் சென்றன உளவேல் அவை, "புதியன புகுதலும், வழுவல" (நூ. 462) என்னும் வழு-வமைதியாய் வந்த வியங்கோள் என்பதூஉம் பெற்றாம்.

"பயனில்சொற் பாராட்டு வானை மகனெனல்
மக்கட் பதடி யெனல்" (குறள். 196)

என்புழிப் பதடி எனல் என்பது வியங்கோள்; மகன் எனல் என்பது[321] எதிர்மறை ஒருமையேவல். இவ்வாறு பிற ஈற்றவாய் வரும் ஆயின்[322] அவை வியங்கோள் ஆதல் ஆராய்ந்து கொள்க.

ஏவல், வியங்கோள் என்பன ஒரு பொருட் கிளவி ஆயினும் இருதிணை ஐம்பால் மூவிடங்களினும் செல்லும் ஏவலை வியங்கோள் என்பது தொன்னெறி மரபாம் என்க. (19)

### பால் இடங்களுக்குப் பொதுவான வினைக்குறிப்பு

**{339} வேறில்லை யுண்டைம் பான்மூ விடத்தன.**

எ-னின், இவ்வினைக்குறிப்பு முற்று மூன்றும் பால் இடங்கட்குப் பொது ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: வேறு, இல்லை, உண்டு என்னும் மூன்று வினைக்குறிப்புமுற்றும் ஐம்பாற்கும் மூவிடத்திற்கும் உரியனவாம் எ-று.

'உண்டு' என்பது அஃறிணை ஒருமைக்கே அன்றிப் பொதுவினை ஆதல் புதியன புகுதலாம் (462) என்பார் பிற் கூறினார்.

---

[321] "அல்விகுதி வியங்கோள், முன் எதிர்மறையினும் பின் உடம்பாட்டினும் வந்தது." என்பது பரிமேலழகர் (குறள். 196) உரை.

[322] பிற ஈற்றவாய் வரும் ஆல், உம், மார், ஐ முதலிய வியங்கோள் விகுதிகளை வைத்திய-நாத தேசிகர் (இல. விள. 239) குறிப்பிடுவார்.

*வ-று: வேறு அவன், இல்லை அவன், உண்டு அவன், அவள், அவர், அது, அவை, யான், யாம், நீ, நீர் எனவும்,*

*"விளிந்தாரின் வேறல்லர் மன்ற" (குறள். 143),*

*"யாரு மில்லைத் தானே கள்வன்*
*தானது பொய்ப்பின் யானெவன் செய்கோ*
*தினைத்தா ளன்ன சிறுபசுங் கால*
*ஒழுகுநீ ராரல் பார்க்கும்*
*குருகு முண்டுதா மணந்த ஞான்றே" (குறுந். 25*),*

*"பெண்டிரு முண்டுகொல் பெண்டிரு முண்டுகொல்*
*கொண்ட கொழுந ருறுகுறை தாங்குறூஉம்*
*பெண்டிரு முண்டுகொல் பெண்டிரு முண்டுகொல்" (சிலப். 19:51-53),*

*"நாவுண்டு நீயுண்டு நாமந் தரித்தோதப்*
*பாவுண்டு நெஞ்சே பயமுண்டோ - பூவுண்டு*
*வண்டுறங்குஞ் சோலை மதிலரங்கத் தேவுலகை*
*உண்டுறங்கு வானொருவ னுண்டு" (நன். 338* மயிலை.),*

*எனவும் வரும்.*

*"பழியஞ்சிப் பாத்தூ ணுடைத்தாயின் வாழ்க்கை*
*வழியெஞ்ச லெஞ்ஞான்று மில்" (குறள். 44)*

*என்பது செய்யுள் ஆதலின் இல்லை என்பது இல் எனக் கடைக் குறைந்து நின்றது.*

**இனி மொழிந்த பொருளோடு ஒன்ற அவ்வயின் மொழியாததனை முட்டின்று முடித்தல் என்பதனால்[323] <வேண்டும், தகும், படும் என்னும் சொற்களும் ஐம்பால் மூவிடத்தனவாம் எனவும் கொள்க.**

*வ-று:*

***"ஓஒதல் வேண்டு மொளிமாழ்குஞ் செய்வினை***
***யாஅது மென்னு மவர்"** (குறள். 653),*

---

**[323]இலக்கணக் கொத்து (நூ. 85) உரை.**

யான் போகல் வேண்டும், நீ உரைத்தல் வேண்டும்,

"இனைத்தென வறிந்த சினைமுதற் கிளவிக்கு
வினைப்படு தொகுதியி னும்மை வேண்டும்" *(தொல். கிளவி. 33),*

"இனைத்தென் றறிபொரு ளுலகி னிலாப்பொருள்
வினைப்படுத் துரைப்பி னும்மை வேண்டும்" *(நன். 399),*

"இன்னென வரூஉம் வேற்றுமை யுருபிற்கு
இன்னென் சாரியை யின்மை வேண்டும்" *(தொல். புணர். 29),*

"வேறுவினைப் பல்பொரு டழுவிய பொதுச்சொலும்
வேறவற் றெண்ணுமோர் பொதுவினை வேண்டும்" *(நன். 389),*

"நலம்வேண்டி னாணுடைமை வேண்டும்" *(குறள். 960),*

இவரால் இக்காரியம் செய்யத் தகும், இக்கூழ் அருந்தத் தகும், இச்சோறு உண்ணத் தகும், இந்நீர் குடிக்கத் தகும் எனவும்,

"முகத்தி னினிய நகாஅ வகத்தின்னா
வஞ்சரை யஞ்சப் படும்" *(குறள். 824),*

"இளைய ரினமுறைய ரென்றிகழா நின்ற
ஒளியோ டொழுகப் படும்" *(குறள். 698*),*

"கற்றறிந் தோரைத்
தலைநிலத்து வைக்கப் படும்" *(நாலடி. 133:3-4),*

"கீழ்களைச்
செய்தொழிலாற் காணப் படும்" *(நாலடி. 347:3-4)*

எனவும் வரும்.

இம்மூன்றும் ஒரு பொருட் கிளவியாய்த் தொழிற்பெயராய்த் தேற்றப் பொருள்பட்டே நிற்கும் என்க.

**இங்ஙனம் வரும் செய்யுட்கு எல்லாம் நச்சினார்க்கினியர், சேனாவரையர், பரிமேலழகர், உரையாசிரியர் முதலாயினார் முற்றாயும் எச்சமாயும் பொருள் உரைக்கின் வழுவாம் என்று கருதி வியங்கோட் பொருட்டு என்றும் விதிப் பொருட்டு என்றும் தகுதிப் பொருட்டு என்றும் வேண்டுவ என்றும் தமக்கு வேண்டியவாறே பொருள் எழுதிச் சொற்குணம் வாளா போயினர்.>** அது நிற்க. (20)

பெயரெச்சம்

{340} **செய்த செய்கின்ற செய்யுமென் பாட்டிற்**
**காலமுஞ் செயலுந் தோன்றிப் பாலொடு**
**செய்வ தாதி யறுபொருட் பெயரும்**
**எஞ்ச நிற்பது பெயரெச் சம்மே.**

எ-னின், "**பெயர்வினை யெச்சமு மாகி**" *(நூ. 322)* என்றவற்றுள்[324] பெயரெச்சம் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: செய்த, செய்கின்ற, செய்யும் என்னும் மூவகைப்பட்ட சொல்லின்கண் முறையே இறப்பு, நிகழ்வு, எதிர்வு என்னும் மூன்று காலமும்[325] செயலும் தோன்றி, வினை முற்றுதற்கு வேண்டும் பால் ஒன்றும் தோன்றாது, அப்பாலுடனே செய்பவன், கருவி, நிலம், செயல், காலம், செய்பொருள் என்னும் அறுவகைப் பொருட்பெயரும் *(320)* ஒழிய நிற்பன பெயரெச்ச வினை வினைக்குறிப்புக்களாம். எ-று.

பாட்டு என்னும் பல பொருள் ஒரு சொல் ஈண்டுச் சொல்லை உணர்த்தி நின்றது.

இவற்றுள் செய்யும் என்னும் ஒன்றும் இறுதிநிலை காலம் காட்டியது.

இவை வெளிப்படையின் உணர்த்துவன காலமும் செயலும் என்பார், 'பாட்டு'

---

**[324]நன்னூலின் பழைய பதிப்புகளில் காணப்படும், "ஈரெச்சம் என்றவற்றுள்" என்ற உரைப்பாடம் தண்டபாணி தேசிகர் எண்ணுவதுபோல் பிழைப் பாடம் அன்று. இப்-பாடத்தில் உள்ள, 'ஈரெச்சம்' என்பதை உயிரீற்றுப் புணரியல் நூற்பாவில் (152) வரும், 'ஈரெச்சம்' என்று கொண்டதால் அவர் இவ்வாறு கருதினார். உண்மையில், 'ஈரெச்சம்' என்னும் தொகைமொழி இவ்வியலின் தொகைச் சூத்திரத்தில் (330) வருவது. எனவே பழைய பதிப்புகளில் காணப்படும், "ஈரெச்சம் என்றவற்றுள்" என்பதைப் பாட வேறுபாடாகக் கொள்வதே பொருத்தம்.**

**[325]பெயரெச்சத்திற்கு, "நிகழ்காலம் கொள்ளாதார் கோளும் அறிந்துகொள்க." என்ற மயிலைநாதரின் (நன். 339) குறிப்பு சிந்தனைக்கு உரியது.**

என்றும் பெயரெச்சம் என்றது வினை முற்றாத குறைச்சொல்லாய்த் திணை பால் இடங்கட்குப் பொதுவாகிப் பெயர் எஞ்ச நின்றனவற்றை என்பார், 'பாலொடு' என்றும் கூறினார்.

'நிற்பது' என்பது தொகுதியொருமை.

ஏற்புழிக் கோடலால், 'தோன்றி' என்பதன்காறும் தெரிநிலை உடன்பாட்டிற்கும் ஏனைய தெரிநிலையும் குறிப்பும் ஆகிய உடன்பாடு, எதிர்மறை இரண்டற்கும் கொள்க.

பதப்பொருள் ஒழிந்த உரை வினையெச்சத்திற்கும் (342) கொள்க.

வ-று: உண்ட, உண்ணாநின்ற, உண்ணும்: சாத்தன், கலம், இடம், ஊண், நாள், சோறு எனவும், "வேலாண் முகத்த களிறு" (குறள். 500), "மூவிலைய வேல்" (வி. மே.), உள்ள பொருள் எனவும் உண்ணாத சோறு எனவும் இல்லாத பொருள் எனவும் வரும்.

செய்வதாதி அறுபொருளும் காரணம் ஆதலின் இவ்வெச்சங்கள் காரியப் பொருட்டாய் நின்றன. வனைந்த குடம் என்புழிக் குடம் காரியமாயும் நிமித்தமாயும் நிற்றலி 'ா இவ்வெச்சம் காரணப் பொருட்டாயும் காரியப் பொருட்டாயும் நின்றது. பிறவும் அன்ன.

'அறுபொருட் பெயரும்' என்னும் உம்மையை, "ஆறுந் தருவது வினையே" (நூ. 320) என்னும் உம்மைபோல வைத்து அறுபொருட் பெயரில் சில குறைந்தும், "இன்னதற் கிதுபயன்" (தொல். வேற். மய. 29) என்னும் இருபொருட் பெயரும் பிற பெயரும் கூடியும் எஞ்ச நிற்பது எனவும் பொருள் உரைத்துக்கொள்க. அவை வருமாறு: ஆடின கொடி, துஞ்சின கொடி: இவை குறைந்து எஞ்ச நின்றன. களை கட்ட பயிர், களை கட்ட கூலி: இவை இன்னதற்கு **எனவும்** இது பயன் **எனவும் இருபெயரும்** எஞ்ச வந்தன. உண்ட இளைப்பு எனவும், "குண்டுசுனை பூத்த வண்டுபடு கண்ணி" (முருகு. 199) எனவும் குடி போன ஊர் எனவும் பொன் பெரிய நம்பி எனவும் பிற பெயர்கள் எஞ்ச நின்றன. பிறவும் அன்ன.

உண்ட இளைப்பு என்பது உண்ட காரணத்தான் வரும் காரியமாகிய இளைப்பு ஆதலின் செயப்படுபொருள் கொண்டது எனின் அமையாதோ எனின் சாத்தன் உண்ட சோறு என்புழிச் சோற்றை உண்ட சாத்தன் எனச் சோறு என்பது இரண்டாம் உருபு

ஏற்றாற்போல இளைப்பு என்பது அவ்வுருபு ஏலாமையின் அது செயப்படுபொருள் ஆகாது[326] என்க. இவ்வெச்சம் காரணப் பொருட்டாயே நின்றது. எனவே இப்-பெயரெச்சங்கள் காரணப் பொருட்டாயும் காரியப் பொருட்டாயும் இவ்விரு திறத்த-வாயும் வருதல் காண்க.

**இப்பெயரெச்சம்[327] அரசன் செய்த தேர் எனத் தலைமைபற்றியும் தச்சன் செய்த தேர் என அஃது இன்மைபற்றியும் வரும்.**

இனி, "காலங் கரந்த பெயரெச்சம் வினைத்தொகை" (நூ. 364) எனக் கூறுதலின் வினைத்தொகையினைப் பெயரெச்சவினையுள் அடக்கி இதுவே விதியாகக் கொள்க.

வ-று: அடுகளிறு, கோடு, களம், போர், நாள், கந்து என வரும்.

"காலமும் வினையுந் தோன்றிப்பா றோன்றாது
பெயர்கொள் ளும்மது பெயரெச் சம்மே"

என்றார் ஆசிரியர் அகத்தியனாரும் என்க. (21)

உம்மீற்றுப் பெயரெச்சத்திற்குச் சிறப்புவிதி

341. **செய்யுமெ னெச்சவீற் றுயிர்மெய் சேறலுஞ்**
**செய்யுளு ளும்முந் தாகலு முற்றேல்**
**உயிரு முயிர்மெய்யு மேகலு முளவே.**

எ-னின், செய்யுமென் எச்சத்திற்கு எய்தியதன்மேல் சிறப்புவிதி உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: செய்யும் என்னும் வாய்பாட்டுப் பெயரெச்சத்தின் இறுதி உயிர்மெய் கெடுதலும் செய்யுளகத்து அதன் இறுதி உம்மை உந்து எனத் திரிதலும் அது முற்று ஆயின் அதன் இறுதி உயிரேனும் உயிர்மெய்யேனும் கெடுதலும் உளவாம் எ-று.

செய்யுளுள் உம் உந்து ஆம் எனவே ஏனைய வழக்குச் செய்யுள் ஈரிடத்தும் ஆம் என்பதூஉம், 'முற்றேல்' எனவே செய்யுமென் எச்சம் முற்றும் ஆம் என்பதூஉம் இறந்தது தழீஇ, எண்ணி நின்ற இழிவுசிறப்பு உம்மைகளான் இவை ஒருதலை அல்ல என்பதூஉம் பெற்றாம்.

---

[326]"ஆறு சென்ற வியர் என்புழி, வியர் ஆறு சேறலான் வந்த காரியம் ஆகலின் செயப்படுபொருட்கண் அடங்கும்." என்று சேனாவரையர் (தொல். வினை. 37), வைத்தியநாத தேசிகர் (இல. விள. 243) தரும் விளக்கமும் அதற்குச் சிவஞான முனிவர் (இல. சூறா. பக். 126) கூறும் மறுப்பும் இவண் ஒப்பிடத் தக்கன.

[327]இலக்கணக் கொத்து (நூ. 84:7) உரையோடு ஒப்பிடுக.

முற்றுவிகுதியின்றி எச்சவிகுதியே முற்றுவிகுதிப் பொருளாகிய பால் காட்டி ஒரோ-வழி நிற்றலின் எச்சம் முற்று ஆம் எனப்பட்டது.

வ-று: ஆம் பொருள், போம் பொருள் எனவும், ."ஆம்பொருள்க ளாகுமவை யார்க்குமழிப் புண்ணாவாம்" (சீவக. 848:1*) போம் புழை, "வாம் புரவி வழுதி" (யா. வி. 95*) எனவும் செய்யுமென் எச்ச ஈற்று உயிர்மெய் கெட்டன. இவை மகரவொற்று நிற்றலின் வினைத்தொகை ஆகா என்க.

"நெல்லரியு மிருந்தொழுவர்
செஞ்ஞாயிற்று வெயின்முனையில்
தெண்கடற்றிரை மிசைப்பாயுந்து" (புறம். 24:1-3),

நீர்க்கோழி கூப்பெயர்க்குந்து" (புறம். 395:11*):

இவை உம் உந்து ஆயின. அஃது ஆம், இவை போம் எனவும், "சார னாடவென் தோழியுங் கலுழ்மே" (தொல். வினை. 39 இளம்.), "அம்ப லூரு மவனொடு மொழிமே" (குறுந். 51:6) எனவும் இவை முற்றாய் உயிரும் உயிர்மெய்யும் கெட்டன. செய்யும் என்னும் முற்று என்றேனும் செய்யும் என்னும் ஏவன்முற்று என்றேனும் விதவாது பொதுமையின், 'முற்றேல்' என்றமையின், "மாமறை மாக்கள் வருகுலங் கேண்மோ" (மணி. 13:93*), "முதுமறை யந்தணிர் முன்னிய துரைமோ" (மணி. 13:56) எனக் கேளும், உரையும் என்னும் ஏவன்முற்றும் இவ்வாறு உயிரும் உயிர்மெய்யும் கெட்டு வருதல் கொள்க. இவை இங்ஙனம் ஆதலின், "சொற்றொறு மிற்றிதன் பெற்றி" (நூ. 461) என்னும் சூத்திரத்தானே ஆடுவாமோ என்னும் தன்மைப்பன்மை முற்று, "பொன்னூச லாடாமோ" (திரு. 327:6) என எதிர்கால இடைநிலை கெட்டு வருதலும் பிறவும் கொள்க. (22)

### வினையெச்சம்

{{342}} **தொழிலுங் காலமுந் தோன்றிப் பால்வினை
ஒழிய நிற்பது வினையெச் சம்மே.**

எ-னின், வினையெச்சம் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: பின்னர்ச் செய்து, செய்பு முதலியவாய் விதந்து கூறும் (343) வாய்பாடு-களின்கண் தொழிலும் இறப்பு, நிகழ்வு, எதிர்வு என்னும் முக்காலங்களும் முறையே

தோன்றி, வினை முற்றுதற்கு வேண்டும் பால் ஒன்றும் தோன்றாது, அப்பாலுடனே வினை ஒழிய நிற்பன வினையெச்ச வினை வினைக்குறிப்புக்களாம் எ-று.

'வினை' எனப் பொதுப்படக் கூறினமையின் வினை, வினைக்குறிப்பின் விகற்பங்களும் அவ்வினையால் அணையும் பெயரும் தொழிற்பெயரும் கொள்க.

வ-று: அறமன்றி, அறமல்லாமல், அருளின்றி: செய்தான், செய்யான், செய்த, செய்து, செய்தவன், செய்தல், இலன், இல்லாத, இல்லாது, இன்மை, இல்லாமை என வரும்.

செய்தான் என்னும் தெரிநிலைவினைக்கண் செய்தல் என்னும் தெரிநிலைத் தொழிற்பெயர்போல இலன் என்னும் குறிப்புவினைக்கண் இன்மை, இல்லாமை என்பன குறிப்புத் தொழிற்பெயராய் நிற்றலின் அறமன்றி இன்மை, அறமன்றி இல்லாமை, "நீயலாற் பிறிதுமற் றின்மை" (திரு. 392:2) என முடிந்து நின்றன. பிறவும் அன்ன. தெரிநிலை வினையெச்சங்கட்கு உதாரணம் வரும் சூத்திரங்களான் உணர்க.

"காலமும் வினையுந் தோன்றிப் பாறோன்றாது
வினைகொள் ளும்மது வினையெச் சம்மே"

என்பது அகத்தியம். (23)

### வினையெச்ச வாய்பாடுகள்

343. **செய்து செய்பு செய்யாச் செய்யூச்**
**செய்தெனச் செயச்செயின் செய்யிய செய்யியர்**
**வான்பான் பாக்கின வினையெச் சம்பிற**
**ஐந்தொன் றாறுமுக் காலமு முறைதரும்.**

எ-னின், மேல், "தொழிலுங் காலமுந் தோன்றி" (நூ. 342) என்ற வினையெச்ச வாய்பாடுகள் இவை என வகுத்து உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: செய்து என்பது முதலிய ஒன்பது வாய்பாட்டான் வருவனவும் வான், பான், பாக்கு என்னும் மூன்று விகுதியவாய் வருவனவும் இவை போல்வன பிறவும் வினையெச்ச வினைகளாம். இவற்றுள் முன்னைய ஐந்தும் இறந்தகாலமும் செய என்பது ஒன்றும் நிகழ்காலமும் ஒழிந்த ஆறும் எதிர்காலமும் காட்டுவனவாம் எ-று.

இவற்றுள் செய்து என்பது இடைநிலையானும் ஏனைய இறுதிநிலையானும் காலம் காட்டின.

வான், பான், பாக்கு என்பன அவ்வவ் எச்சவிகுதியவாகிய மொழிகளை உணர்த்தி நின்ற குறிப்புச்சொல்.

'இன' என்றமையால், "அற்றா லளவறிந் துண்க" (குறள். 943), "ஒலித்தக்கா லென்னா முவரி" (குறள். 763), "காண்டலு மிதுவே சொல்லும்" (நன். 342* மயிலை.) எனச் செயின் என்னும் வாய்பாடுபோல் எதிர்காலம் காட்டுவனவும், "கூறாமற் குறித்ததன்மேற் செல்லுங் கடுங்கூளி" (கலி. கட. வா. 3), "கூறாமை நோக்கிக் குறிப்பறிவான்" (குறள். 701), "ஈத லியையாக் கடை" (குறள். 230) என எதிர்மறை விகற்பங்களாய் வருவனவும் இத்தொடக்கத்துக் குறைச்சொல்லாய் வினை எஞ்ச நிற்பன எல்லாமும் கொள்க.

"ஒலித்தக்கால்" (குறள். 763) என்புழிக் ககரவொற்று இடையே மிக்கமையின் கால் என்பது பெயரெச்சம் கொண்ட பெயர் அன்று; வினையெச்ச விகுதி என்பது பொருந்தும்.

"ஈத லியையாக் கடை" (குறள். 230) என்புழிக் கடை என்பது எதிர்மறைப் பெயரெச்சம் கொண்ட இடப்பெயர் என்றால்[328] என்னை எனின் அதனகத்து இடப்பொருளின்றி ஈதல் இயையாது ஆயின் என்னும் பொருள் தந்து நிற்றலின் வினையெச்ச விகுதியேயாம் என்க. பிறவும் அன்ன.

'பிற' என்றமையானே செய்து என்னும் வாய்பாட்டு எச்சங்களும் இடைநிலையின்றி ஆடிக் கொண்டான், தழீஇக்கொண்டான் என இறுதிநிலை தன் இயல்பினின்றும் விகாரமாயும் புக்கு நின்றான் என முதனிலை விகாரமாயும் காலம் காட்டுவன உள எனவும் செய என்னும் வாய்பாட்டு எச்சம் எதிர்காலத்திற்கும் உரித்து எனவும் இவ்வெச்சங்கட்கு விதந்து கூறாதன எல்லாம் அமைத்துக்கொள்க. (24)

### வினையெச்சங்களுக்கு முடிபு

344. **அவற்றுள்,**
**முதலி னான்கு மீற்றின் மூன்றும்**
**வினைமுதல் கொள்ளும் பிறவுமேற் கும்பிற.**

எ-னின், இவ்வெச்சங்கட்கு ஆவதோர் விதி உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: மேலைச் சூத்திரத்து முதற்கண் கூறிய செய்து, செய்பு, செய்யா, செய்யூ

---

[328] **பின், முன், கால், கடை என்பவற்றைக் காலம் பற்றிய இடப்பொருள் உருபுகள் என்று மயிலைநாதர் (நன். 342) கூறுவார்.**

என்னும் நான்கும் இறுதிக்கண் கூறிய வான், பான், பாக்கு என்னும் மூன்றும் வினைமுதலைக் கொண்டு முடியும்; இடை நின்ற செய்தென, செய, செயின், செய்யிய, செய்யியர் என்னும் ஐந்தும், "இன" (நூ. 343) என்றதனான் வருவனவும் வினையெச்சக் குறிப்புக்களும் வினைமுதலையும் அஃது அல்லாத பிறவற்றையும் கொண்டு முடியும் எ-று.

இடையின் ஐந்தும் என்னாது, 'பிற' என்றார், "இன" (நூ. 343) என்றதனான் வருவனவும் வினையெச்சக் குறிப்புக்களும் தழீஇக்கோடற்கு என்க.

வ-று: நடந்து வந்தான், "வாளொடு கனையிருள் வந்து தோன்றினான்" (சீவக. 320:4), "எண்ணித் துணிக கருமம்" (குறள். 467), "பரீஇ யுயிர்செகுக்கும்" (நாலடி. 220:3), "ஐவரொடு சினைஇ, நிலந்தலைக் கொண்ட" (புறம். 2:13-14) எனவும், "புலராப் பச்சிலை யிடையிடுபு தொடுத்த" (புறம். 33:12), "தெரிபு தெரிபு குத்தின வேறு" (கலி. 103:23) எனவும், "கல்லாக் கழிப்பர் தலையாயார்" (நாலடி. 366:1*), "நிலங் கிளையா, நாணி நின்றோ ணிலை" (அகம். 16:15-16) எனவும்,

"படுமகன் கிடக்கை காணூஉ
ஈன்ற ஞான்றினும் பெரிதுவந் தனளே" (புறம். 278:8-9),

"நிலம்புடையூஉ வெழுதரு வலம்படு குஞ்சரம்" (பதிற். திரட்டு 2:2) எனவும், "கொள்வான் கொடித்தானை கொண்டெழுந்தான்" (பு. வெ. 99:2*) எனவும், "அலைப்பான் பிறிதுயிரை யாக்கலுங் குற்றம்" (நான்மணி. 100:1) எனவும், "புணர்தரு செல்வந் தருபாக்குச் சென்றார்" (கார். 11:1) எனவும் முதலில் நான்கும் ஈற்றின் மூன்றும் வினைமுதல் கொண்டன.

"காந்தளஞ் சிலம்பிற் சிறுகுடி பசித்தெனக்
கடுங்கண் யானைக் கோடுநொடுத் துண்ணும்" (குறுந். 100:3-4*)

எனவும்,

"கோவா வாரம் வீழ்ந்தெனக் குளிர்கொண்டு
பேஎ நாறுந் தாழ்நீர்ப் பனிச்சுனை" (நன். 343 மயிலை.)

எனவும் உண்ண வந்தான், "கொளக்கொளக் குறைபடாக் கூழுடை வியனகர்" (புறம். 70:7*) எனவும் மழை பெய்ய நெல் விளைந்தது,

"மோப்பக் குழையு மனிச்ச முகந்திரிந்து
நோக்கக் குழையும் விருந்து" (குறள். 90)

எனவும்,

"தாம்வேண்டி னல்குவர் காதலர் யாம்வேண்டிற்
கௌவை யெடுக்குமிவ் வூர்" (குறள். 1150*)

எனவும்,

"காணியவா வாழி தோழி" (கலி. 42:10*)

எனவும்,

"மாணிழை யரிவை காணிய வொருநாட்
பூண்க மாளநின் புனைவினை நெடுந்தேர்" (பதிற். 81:31-32)

எனவும்,

"பசலை யுண்ணியர் வேண்டும்" (குறுந். 27:4*)

எனவும்,

"கொற்கைச் செழியர் கொங்கர்ப் பணியியர்...
பழையன் வேல்வாய்த் தன்ன" (நற். 10:6-8*)

எனவும் இடையின் ஐந்தும் வினைமுதலும் பிறவும் கொண்டன.

உண்டால் உவக்கும், உண்டால் பசி தீரும், "விண்ணின்று பொய்ப்பின்" (குறள். 13), "விருந்தின்றி யுண்ட பகல்" (திரி. 44:1) என, "இன" (நூ. 343) என்றதனான் வருவனவும் வினையெச்சக் குறிப்பும் வினைமுதலும் பிறவும் ஏற்றல் காண்க. நடந்து வந்தவன், வருதல், இடையிடுபு தொடுத்தவன், தொடுத்தல் எனவும்,"காந்தளஞ் சிலம்பிற் சிறுகுடி பசித்தெனக், கடுங்கண் யானைக் கோடுநொடுத்து" (குறுந். 100:3-4*) உண்டவன், உண்டல், "கோவா வாரம் வீழ்ந்தெனக் குளிர்கொண்டு, பேஎ" (நன். 343 மயிலை.) நாறுவது, நாறல், உண்ண வந்தவன், வருதல், மழை பெய்ய நெல் விளைவது, விளைதல் எனவும் வினையால் அணையும் பெயரும் தொழிற்பெயரும் வருவித்து வினைமுதலும் வினைமுதலோடு பிறவும் ஏற்றல் காண்க. பிறவும் அன்ன.

இச்சூத்திரத்துள், 'வினைமுதல் கொள்ளும் பிறவுமேற்கும்' என்பதற்கு வினைமுதல் வினை கொள்ளும்; பிற வினை கொள்ளும் எனப் பொருள் உரைத்தால்[329] என்னை எனின் அது பொருள் ஆயின் வினைமுதல் வினைகொளும் பிறவினை கொள்ளும் எனக் கூறினும் யாப்பு அமையும் ஆதலின் அங்ஙனம் கூறல் வேண்டும். அவ்வாறு

[329] **மயிலைநாதரும் (நன். 343) வைத்தியநாத தேசிகரும் (இல. விள. 247) இவ்வாறு பொருள் உரைப்பர்.**

கூறாமையானும் வினை கொண்டு முடியும் என இதற்குக் கூறினார் எனின் முன்னர்க் கூறிய பெயரெச்சத்திற்கும் பெயர் கொண்டு முடியும் எனக் கூறல் வேண்டும். அவ்வாறு கூறாமையானும் பொதுவியலுள், "பெயர்வினை யும்மை" (நூ. 360) என்னும் சூத்திரத்தானே முற்றாது குறைந்து நின்ற இப்பெயரெச்ச வினையெச்சங்கள் முதலியவாக இவ்வதிகாரத்துள் விதந்தும் விதவாதும் பரந்து கிடந்த எச்சங்களை எல்லாம் எடுத்து, ஒன்பதும் ஒன்றும் எனத் தொகை தந்து, "தத்த மெச்சங் கொள்ளும்" (நூ. 360) எனக் கூறுதலானும் இங்ஙனம் வினைமுதற் பொருண்மையினையும் அஃது ஒழிந்த பிற பொருண்மையினையும் கொள்ளும் எனக் கூறலே நூலாசிரியர் கருத்து என்க.

அங்ஙனம் ஆயின் இவ்விரு வகை எச்சங்களும் பெயரினையும் வினையினையும் கொண்டு முடிந்து நிற்க உதாரணம் காட்டியது என்னை எனின் பெயரெச்சம் பெயர் எஞ்ச நிற்றலும் வினையெச்சம் வினை எஞ்ச நிற்றலும் வினைமுதல் கோடலும் பிற கோடலும் தோன்றுதற்பொருட்டன்றிப் பெயரினையும் வினையினையும் கொண்டு முடிதல் தோன்றுதற்பொருட்டு அன்று என்க.

இவ்வினையெச்சங்கள்[330] நடந்து வந்தான், மழை பெய்ய நெல் விளைந்தது எனக் காரணப் பொருட்டாயும் நெல் விளைய மழை பெய்தது எனக் காரியப் பொருட்டாயும் உண்ண வந்தான் எனக் காரணம், காரியம் என்னும் இருபொருட்டாயும்,

"...கடிக்கமல முகங்காட்ட...
...கருநெய்தல் கண்காட்டும்" (தே. மேகராகக் குறிஞ்சி 1:3-4*)

எனக் காரண காரியம் இரண்டும் இன்றியும் உழுது பயன் கொண்டான் வேந்தன் எனத் தலைமைபற்றியும் உழுது பயன் கொண்டான் வறியன் என அஃது இன்மைபற்றியும் வருதல் காண்க. (25)

புறனடை

345. **சினைவினை சினையொடு முதலொடுஞ் செறியும்.**

எ-னின், மேல், "வினைமுதல் கொள்ளும்" (நூ. 344) என்றவற்றிற்கு ஓர் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: "முதலி னான்கு மீற்றின் மூன்றும்" (நூ. 344) என்ற வினையெச்சங்கள் சினைவினை ஆயின் அவை, "வினைமுதல் கொள்ளும்" (நூ. 344) என்ற விதியானே சினையொடு முடிதலே அன்றி முதலுடனும் முடியும்; அங்ஙனம் முடியும் ஆயினும்

---

[330] இலக்கணக் கொத்து (நூ. 84:7-8) உரையோடு ஒப்பிடுக.

சினையொடு முதற்கு ஒற்றுமை உண்மையின் வினைமுதல் கொண்டதேயாம் எ-று.

வ-று: கால் இற்று வீழ்ந்தான், கால் இறுபு வீழ்ந்தான், கால் இறா வீழ்ந்தான், கால் இறூஉ வீழ்ந்தான் எனவும் கண் வருவான் கதிரவன் தொழுதார், கண் தழைப்பான் கதிரவன் தொழுதார், கண் வருபாக்குக் கதிரவன் தொழுதார் எனவும் மாடு கால் இற்று வீழ்ந்தது எனவும் வரும். பிறவும் அன்ன.

கால் இற்று வீழ்ந்தான் என்புழி வீழ்தற்கு வினைமுதல் முதற்பொருளாம்; அஃதன்றிச் சினைப்பொருள் ஆயின் கண் விழித்துப் பார்த்தான், செல்வம் மிக்கு உயர்ந்தான், கண் பெரியன், நாடு பெரியன், செல்வம் பெரியன் என்றாற்போல, "உயர்திணை தொடர்ந்த பொருண்முத லாறும்" (நூ. 377) என்னும் சூத்திரத்தான் அமைவதாம் என்க. பிறவும் அன்ன. (26)

## வினையெச்ச விகுதிகள் திரிதல்

346. **சொற்றிரி யினும்பொரு டிரியா வினைக்குறை.**

எ-னின், இதுவும் அது.

இ-ள்: "முதலி னான்கு மீற்றின் மூன்றும், வினைமுதல் கொள்ளும்" (நூ. 344) என்ற வினையெச்ச வாய்பாடுகளாகப் பிற வினையெச்ச வாய்பாடுகள் திரியினும் அவற்றின் பொருள் திரியா எ-று.

வ-று: ஞாயிறு பட்டு வந்தான், கோழி கூவிப் பொழுது புலர்ந்தது,

"உரற்கால் யானை யொடித்துண் டெஞ்சிய
யாஅ விரிநிழற் றுஞ்சும்" (குறுந். 232:4-5*),

"செந்நா யேற்றை[331] கேழ றாக்கி
இரியற் பிணவ றீண்டலிற் பரீஇச்
செங்கா யுதிர்ந்த பைங்குலை யீந்தின்" (அகம். 21:18-20*)

எனவும், யான் கொள்வான் பொன் கொடுத்தார் எனவும் வரும். பிறவும் அன்ன.

இவை செயவென் எச்சம் செய்து, செய்வான் எனத் திரிந்து நின்றும் அச்செயவென் எச்சமுடிபு ஏற்று நின்றன. எனவே ஞாயிறு பட்டு வந்தான் என்பதற்கு ஞாயிறு பட வந்தான் எனப் பொருள் உரைக்க வேண்டும் என்பதாயிற்று. பிறவும் அன்ன.

---

[331] **இவ்வுதாரணம் சில பதிப்புகளில் குறையாகவும் பிழையாகவும் அச்சிடப்பட்டுள்ளது.**

'வினைக்குறை' எனப் பொதுப்படக் கூறினமையான் வினையெச்சங்களுள் ஒன்று ஒன்றாய்த் திரிந்து வருவன பிறவும் உளவேல் அவையும் கொள்க. (27)

## ஆக்க வினைக்குறிப்புக்குச் சிறப்புவிதி

347. **ஆக்க வினைக்குறிப் பாக்கமின் றியலா.**

*எ-னின், வினைக்குறிப்பிற்கு ஆவதோர் விதி உணர்த்துதல் நுதலிற்று.*

*இ-ள்:* ஆக்கத்தான் வரும் வினைக்குறிப்புச் சொற்கள் ஆக்கச்சொல்லின்றி வாரா எ-று.

வேற்றுமைப் புணர்ச்சிக்கு வேற்றுமை உருபுகள் விரிந்தும் தொக்கும் அதன் உடைமையாய் நின்றாற்போல (242, 255) ஆக்க வினைக்குறிப்பிற்கு ஆக்கச்சொல் விரிந்தும் தொக்கும் அதன் உடைமையாய் நிற்றலின், 'ஆக்கமின் றியலா' என்றார்.

*வ-று:* சாத்தன் நல்லன் ஆயினான், சாத்தன் நல்லன், கல்வியால் பெரியன் ஆயினான், கல்வியால் பெரியன், கற்று வல்லர் ஆயினார், கற்று வல்லர்,

"குருதி படிந்துண்ட காக முருவிழந்து
குக்கிற் புறத்த சிரல்வாய செங்கண்ண" *(களா. 5:2-3*)*

என ஆக்கச்சொல் விரிந்தும் தொக்கும் வந்தன.

எனவே நல்லன் என்பது இயற்கை வினைக்குறிப்பு ஆயின் விரிதல், தொகல் என்னும் இரண்டனுள் ஒருவாற்றானும் ஆக்கம் வேண்டாது சாத்தன் நல்லன் என்றே வரும் என்பதாயிற்று. இங்ஙனம் ஆகவே வினைக்குறிப்பு ஆக்க வினைக்குறிப்பு என்றும் இயற்கை வினைக்குறிப்பு என்றும் இருவகைப்படும் எனவும் அவை இவ்வாறு நடக்கும் எனவும் கூறினாராயிற்று. வினை ஆயினும் ஆக்கத்தை நோக்கி இயற்கை எனப்பட்டது.

இச்சூத்திரத்திற்கு வினையெச்சம் கொண்டு முடியும் ஆக்க வினைக்குறிப்பிற்கு ஆக்கச்சொல் விரிந்தே வரும் என்றும் தொக்கு வருவன செய்யுள் விகாரம் என்றும் பொருள் கூறுவாரும்[332] உளர். வினையெச்சம் கொண்டு முடியும் ஆக்க வினைக்குறிப்பு என விதவாமையானும் ஆக்க வினைக்குறிப்பு என்ற துணையானே வினையெச்சம் கொண்டு முடியும் வினைக்குறிப்பு என்பது தாமே போதரும் எனின் கல்வியாற் பெரியன் எனப் பிற வழியும் ஆக்க வினைக்குறிப்பு வருதலானும் அஃது யாண்டு

[332] **மயிலைநாதர் (நன். 346) இவ்வாறு பொருள் கூறுவார்.**

வரினும் ஆக்கச்சொல் விரிந்தேனும் தொக்கேனும் வேண்டியே நிற்றலானும் இவர் கற்று வல்லர் என வழக்கின்கண்ணும் ஆக்கச்சொல் தொக்கு வருதலானும், "காரண முதலா வாக்கம் பெற்றும்" (நூ. 405) என்னும் சூத்திரம் மாறுகொளக் கூறலாய் முடியும் ஆதலானும் அது பொருந்தாது என்க. (28)

செய்யுமென் முற்றுக்குச் சிறப்புவிதி

{348} **பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மையிற்**
**செல்லா தாகுஞ் செய்யுமென் முற்றே.**

எ-னின், செய்யுமென் எச்சம் திணை பால் இடங்கட்குப் பொதுவாம் என விதித்தலின் (322) அவ்வெச்சத்தான் ஆகிய செய்யும் என்னும் முற்றும் அவ்வாறு பொதுவாம் எனப் போந்தவற்றுள் சில பால் இடங்களிற் செல்லாது இம்முற்று என விலக்குதலின் எய்தியது ஒரு மருங்கு மறுத்தல் **உணர்த்துதல்** நுதலிற்று.

இ-ள்: உயர்திணைப் பன்மைப்படர்க்கையினும் முன்னிலையினும் தன்மையினும் செல்லாது செய்யும் என்னும் எச்சத்தான் ஆகும் செய்யும் என்னும் முற்று[333] எ-று.

பல்லோ ரொழிந்த படர்க்கைக் குரித்துச்
செய்யும் என்னத் தெரித்திடு முற்றே

எனச் சூத்திரம் செய்யாது எய்தியது ஒரு மருங்கு மறுத்தல் தோன்றப், 'பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மையிற் செல்லாது' என்றும் ஏனை முற்றுக்கள்போல் தன் இயல்பில் நில்லாது எச்சத்தான் ஆயது இம்முற்று என்பது தோன்ற, 'ஆகுஞ் செய்யுமென் முற்று' என்றும் கூறினார்.

இப் பால் இடங்களை விலக்கவே ஒழிந்த படர்க்கை நாற்பாலினும் செல்லும் என்பது பெற்றாம்.

வ-று: அவன் உண்ணும், அவள் உண்ணும், அது உண்ணும், அவை உண்ணும் என வரும். (29)

உயர்திணை முப்பாற்கும் உரிய வினைக்குறிப்பு

349. **யாரென் வினாவினைக் குறிப்புயர் முப்பால்.**

எ-னின், திணைப்பொதுவன்றிப் பாற்பொது வினை ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

---

[333] **"செய்யும் என்னும் நிகழ்கால முற்றுவினை" என்று மயிலைநாதர் (நன். 347) இங்கு விதந்து கூறுவார்.**

இ-ள்: வினாப் பொருண்மையைத் தரும் யார் என்னும் வினைக்குறிப்புமுற்று உயர்திணை முப்பாற்கும் பொதுவினையாம். எ-று.

திணைப்பொதுமைக்கண் கூறிய, "பொதுவினை" (நூ. 330) என்பதனை ஈண்டும் வரும் சூத்திரத்தும் தந்துரைத்துக்கொள்க.

வ-று: அவன் யார், அவள் யார், அவர் யார் என வரும்.

"ஊதைகூட் டுண்ணு முகுபனி யாமத்தெங்
கோதைகூட் டுண்ணிய தான்யார்மன் - போதெல்லாந்
தாதோடு தாழுந்தார்க் கச்சி வளநாடன்
தூதோடு வாராத வண்டு" (தொல். வினை. 13* சேனா.)

என அஃறிணைக்கண் வருதலும், "நானாரென் னுள்ளமார்" (திரு. 216:1) என யார் என்பது ஆர் என மரீஇ வருதலும் புதியன புகுதலாம் என்க. (30)

அஃறிணை இருபாற்கும் உரிய வினைக்குறிப்பு

350. **எவனென் வினாவினைக் குறிப்பிழி யிருபால்.**

எ-னின், இதுவும் அது.

இ-ள்: வினாப் பொருண்மையைத் தரும் எவன் என்னும் வினைக்குறிப்புமுற்று அஃறிணை இருபாற்கும் பொதுவினையாம் எ-று.

வ-று: அஃது எவன், அவை எவன் என வரும்.

இஃது என் எனவும் என்னை எனவும் மரீஇ வருதல்[334] புதியன புகுதலாம்.

---

[334]எவன் என்பது குறிப்பு வினைமுற்றாகவும் அஃறிணை வினாப்பெயராகவும் உயர்திணை வினாப்பெயராகவும் செயல்படும் பொதுச்சொல். இவற்றுள் உயர்திணை ஆண்பால் வினாப்பெயரின் வடிவம் (நன். 67, 276) திரியாது; மற்ற இரண்டும், 'என்', 'என்னை' என்று மருவியும் வழங்கும். எவன் என்னும் குறிப்பு வினைமுற்று வினாப் பொருண்மையில் வரும்; அஃறிணை வினாப்பெயர் வினாப் பொருளோடு, "கற்றதனால் ஆய பயன் என்" என இன்மைப் பொருளிலும் (குறள். 2 பரிமேலழகர்) வரும்.

எவன் என்னும் குறிப்பு வினைமுற்றைப் படுத்துச் சொல்லின் பெயராகும் என்பது இளம்பூரணர் (தொல். வினை. 21) கருத்து. நச்சினார்க்கினியரும் (தொல். வினை. 22) வைத்தியநாத தேசிகரும் (இல. விள. 235) இதனைத் தழுவிக்கொள்வர். எவன் என்னும் குறிப்பு வினைமுற்று வேறு; அஃறிணை வினாப்பெயர் வேறு என்பது சேனாவரையர் (தொல். வினை. 22) கருத்து.

"உயர் முப்பால்" (நூ. 349) என்றும், 'இழி யிருபால்' என்றும் விதந்தமையின் யார் என்றும் எவன் என்றும் ஈண்டுப் போந்த சொற்கள் பெயர்க்கும் வினைக்குறிப்பிற்கும் பொதுவாகிய யாவர் என்னும் சொல் யார், ஆர் என மரீஇய உயர்திணைப் பன்மைச்சொல்லும் இவ்வாறு பெயர்க்கும் வினைக்குறிப்பிற்கும் பொதுவாகிய எவன் என்னும் உயர்திணை ஆண்பாற்சொல்லும் அல்ல என்பது பெற்றாம். (31)

வினைமுற்றுக்குப் புறனடை

{351} **வினைமுற் றேவினை யெச்ச மாகலுங்**
**குறிப்புமுற் றீரெச்ச மாகலு முளவே.**

எ-னின், இருவகை முற்றிற்கும் ஆவதோர் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: வினைமுற்றே வினையெச்சமாகி வருதலும் வினைக்குறிப்புமுற்றே வினை-யெச்சமாகியும் பெயரெச்சமாகியும் வருதலும் உளவாம் எ-று.

ஏகாரத்தைப் பின்னும் கூட்டுக.

குறைச்சொல் ஆகாது பால் காட்டி நிற்றலின், 'முற்றே' என்றும் வினையெச்சப் பயனிலையினையும் பெயரெச்சப் பயனிலையினையும் அவாவி நிற்றலின், 'எச்சம்' என்றும் இவை சிறுபான்மைய ஆகலின், 'ஆகலும்' என்றும் கூறினார்.

வ-று: "காணான் கழிந்த வைகலுமுண் டென்றொருநாள்" (கலி. 37:10*), "மோயின ளுயிர்த்த காலை" (அகம். 5:24), "முகந்தனர் கொடுப்ப" (புறம். 33:6), "விளிப்பது பயிலுங் குறும்பர்துந் துமியொடு" (நன். 350* மயிலை.), "எருவினுண் டாது குடைவன வாடி" (குறுந். 46:4*), "பெயர்த்தனென் முயங்கயான்" (குறுந். 84:1), "மக்களு ளிரட்டையா மாறினம் பிறந்து யாம்" (யசோதர. 303*) எனவும், "சேர்ந்தனை சென்மோ பூந்தார் மார்ப" (ஐங். தனி. 5:3*), "கருங்கோட் டின்னிய மியக்கினிர் கழிமின்" (பெரும்பாண். 392) எனவும் மூவிடத்து ஐம்பாலினும் வினைமுற்று வினையெச்சம் ஆயின. "வரிபுனை வில்ல னொருகணை தெரிந்துகொண்டு" (அகம். 48:12), "அளிநிலை பெறா தமரிய முகத்தள், விளிநிலை கொள்ளாள்" (அகம். 5:1-2*), "உச்சிக் கூப்பிய கையினர் தற்-புகழ்ந்து" (முருகு. 185), "விழுமிது கழிவ தாயினும்" (குறுந். 253:2), "நிலமிசைப் புரளுங் கைய வெய்துயிர்த்து" (புறம். 44:4) எனவும், "துணையி னெஞ்சினேன் துயருழந் தினையேன்" (நன். 350* மயிலை.), "நீர்வார் கண்ணேந் தொழுதுநிற் பழிச்சி" (புறம். 113:6) எனவும், "நீர்வார் கண்ணை நீயிவ ணொழிய" (குறுந். 22:1), "வெள்வேல் வலத்திர் பொருடரல் வேட்கையி, னுள்ளினிர்" (கலி. 4:7-8*) எனவும் மூவிடத்து ஐம்பாலினும் வினைக்குறிப்புமுற்று வினையெச்சக் குறிப்பு ஆயின. "வெந்திறலினன்

விறல்வழுதி யொடு" (நன். 350* மயிலை.), "அஞ்சாயல ளாயிழைமுன்" (நன். 350 மயிலை.), "கடற்றானையர் கழல்வேந்தரை" (நன். 350 மயிலை.), "பெருவரை மிசையது நெடுவெள் ளருவி" (குறுந். 78:1), "புன்றா ளோமைய சுரனிறந் தோரே" (குறுந். 260:8) எனவும், "பெருவேட்கையே னெற்பிரிந்து" (நன். 350* மயிலை.), "கண்புரை காதலே மெம்மு முள்ளான்" (நன். 350* மயிலை.) எனவும், "உலங்கொ டோளினை யொரு-நின்னால்" (நன். 350 மயிலை.), "வினை வேட்கையிர் வீரர் வம்மின்" (நன். 350 மயிலை.) எனவும் மூவிடத்து ஐம்பாலினும் வினைக்குறிப்புமுற்றுப் பெயரெச்சக் குறிப்பு ஆயின. இவற்றுள் வரும் பெயர்கள் முற்றுப் பயனிலை ஆகாது பெயரெச்சப் பயனிலை ஆமாறு காண்க.

இனி வினைமுற்றுக்கள், "சொற்றிரி யினும்பொரு டிரியா" (நூ. 346) வினை-யெச்சமாய் வருமாறு:

"விண்ணிற் றூவியிட் டான்வந்து வீழ்ந்தன" (சீவக. 894:2),

"பாயு மாரிபோற் பகழி சிந்தினார்
ஆயர் மத்தெறி தயிரி னாயினார்" (சீவக. 421:3-4*),

"கானவ ரிரிய வில்வாய்க் கடுங்கணை தொடுத்த லோடும்
ஆனிரை பெயர்ந்த தாய ரார்த்தன ரணிந்த திண்டோள்
தானொன்று முடங்கிற் றொன்று நிமிர்ந்தது சரம்பெய் மாரி
போனின்ற தென்ப மற்றப் பொருவரு சிலையி னாற்கே" (சீவக. 452*),

"செய்யோன் செழும்பொற் சரஞ்சென்றன சென்ற தாவி" (சீவக. 2322:2)

என வரும். பிறவும் அன்ன.

**இனி எண்ணின்கண் நின்ற எதிரது தழீஇய எச்சவும்மையானே[335] <உண்டான் சாத்தன் ஊர்க்குப் போனான் என்புழி உண்ட சாத்தன் ஊர்க்குப் போனான் எனப் பொருள்படுதலின் வினைமுற்றுப் பெயரெச்சம் ஆதலும் உள எனவும் வெறுத்த ஞானி வீட்டை அடைந்தான், சாத்தன் உழுது வந்தான் என்புழி வெறுத்தான் ஞானி, சாத்தன் உழுதான் எனப் பொருள்பட்டு ஈரெச்சம் முற்று ஆதல்> உள எனவும், <"பெறுவது,[336] கொள்வாருங் கள்வரு நேர்"**

[335] **இலக்கணக் கொத்து (நூ. 82) உரை.**
[336] **இலக்கணக் கொத்து (நூ. 66) உரை.**

*(குறள். 813)* என்புழி நேர் நேர்வர் என முதனிலைத் தனிவினையும் வினைமுற்று ஆதல் உள எனவும், "வரிப்புனை பந்து" *(முருகு. 68)*, "அறுவேறு வகையின்" *(முருகு. 58)*, "செய்தக்க வல்ல செயக்கெடும்" *(குறள். 466)*, "மண்மாண் புனைபாவை யற்று" *(குறள். 407)* என்புழி வரிந்து, அற்று, செய்ய, மாட்சிமைப்பட என்று பொருள்பட்டு முதனிலைத் தனிவினைகள் வினையெச்சம் ஆதல்> உள எனவும் கொள்க. (32)

வினையியல் முற்றிற்று

மூன்றாவது

## பொதுவியல்

பெயரும் வினையும் பாற்பொது்மை நீங்குதல்

{352} **இருதிணை யாண்பெணு ளொன்றனை யொழிக்கும்**
**பெயரும் வினையுங் குறிப்பி னானே.**

எ-னின், முன் வந்த பெயர்க்கும் வினைக்கும் பின் வரும் இடைக்கும் உரிக்கும் பொது இலக்கணங்களைச் சிங்கநோக்காக[337] இவ்வியலான் உணர்த்துவான் இடை நிறீஇக் கூறலின் இது பெயர்க்கும் வினைக்கும் உரியதோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: உயர்திணை ஆண்பால், பெண்பால் என்னும் இருபாற்கும் பொதுவான பெயர்ச்சொல்லும் வினைச்சொல்லும் அஃறிணை ஆண்பால், பெண்பால் என்னும் இருபாற்கும் பொதுவான பெயர்ச்சொல்லும் வினைச்சொல்லும் அவ்விரு பாலுள் ஒரு பாலை ஒழிக்கும் குறிப்பினான் எ-று.

வ-று: ஆயிரம் மக்கள் தாவடி போயினார் என்புழி மக்கள் என்னும் உயர்திணை இருபாற்கும் பொதுப்பெயரும் போயினார் என்னும் உயர்திணை இருபாற்கும் பொதுவினையும் தாவடி என்னும் குறிப்பினான் பெண்பாலை ஒழித்தன. பெருந்தேவி பொறை உயிர்த்த கட்டிற்கீழ் நால்வர் மக்கள் உளர் என்புழி மக்கள் என்னும் பொதுப்பெயரும் உளர் என்னும் பொது வினைக்குறிப்பும் பொறை உயிர்த்தல் என்னும் குறிப்பினான் **உயர்திணை** ஆண்பாலை ஒழித்தன. இப்பெற்றங்கள் உழவு ஒழிந்தன என்புழிப் பெற்றங்கள் என்னும் அஃறிணை ஆண், பெண் இருபாற்கும் பொதுப்பெயரும் ஒழிந்தன என்னும் அஃறிணை ஆண், பெண் இருபாற்கும் பொதுவினையும் உழவு என்னும் குறிப்பினான் பெண்பாலை ஒழித்தன. இப்பெற்றங்கள் பால் சொரிந்தன என்புழிப் பெற்றங்கள் என்னும் பொதுப்பெயரும் சொரிந்தன என்னும் பொதுவினையும் பால் என்னும் குறிப்பினான் ஆண்பாலை ஒழித்தன. பிறவும் அன்ன.
(1)

---

[337] இராமாநுச கவிராயர் (நன். பெயர். தோற்றுவாய்) இதனை ஐந்து காரணங்கள் காட்டி மறுத்துக் கூறி, இலக்கண விளக்கத்தில் வைத்தியநாத தேசிகர் கொண்ட முறையைத் தழுவிப் பொதுவியலை நன்னூலின் இறுதியில் வைப்பார். இந்த மாற்றத்துக்கு ஏற்ப உரியியலில் உள்ள புறனடை நூற்பாக்கள் இரண்டினை (461, 462) அவர் பொதுவியலில் வைத்து உரை கூறுவார்.

அன்றியும் இடையியல், உரியியல் என்னும் பெயர்கள் அவர் பதிப்பில் இடைச்சொல்லியல், உரிச்சொல்லியல் என்று காணப்படுகின்றன.

### செய்யுட்கண் பெயர்வினைகளின் ஈற்றயல் திரிதல்

**353. பெயர்வினை யிடத்து னளரய வீற்றயல்
ஆவோ வாகலுஞ் செய்யுளு ளுரித்தே.**

எ-னின், பெயர்க்கும் வினைக்கும் செய்யுட்கண் ஆவதோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: பெயர்க்கண்ணும் வினைக்கண்ணும் னகார, ளகார, ரகார, யகார ஈற்றயல் நின்ற விகுதிமுதல் ஆகாரம் (140) ஓகாரம் ஆதலும் செய்யுளிடத்து உரித்தாம் எ-று.

வ-று:

"வில்லோன் காலன கழலே தொடியோள்
மெல்லடி மேலவுஞ் சிலம்பே நல்லோர்
யார்கொ லளியர் தாமே" (குறுந். 7:1-3),

"பெருஞ்சோற்று மிகுபதம் வரையாது கொடுத்தோய்" (புறம். 2:16) எனவும், "படைத்தோன் மன்றவப் பண்பி லாளன்" (புறம். 194:5), "நல்லோண் மன்ற நகூஉப்பெயர்ந் தோளே" (அகம். 248:16*), "சென்றோ ரன்பிலர் தோழி" (அகம். 331:9), "வந்தோய் மன்ற தண்கடற் சேர்ப்ப" (அகம். 80:3) எனவும் பெயர்க்கண்ணும் வினைக்கண்ணும் வந்தது.

வினையால் அணையும் பெயர்க்கண் அன்றி வினைக்கண்ணும் ஒரோவழி ஆ ஓ ஆதலின் அதனையும் உடன் கூறினார்.

உம்மையை எதிர்மறையும்மை ஆக்கி வில்லோன், வில்லான் என ஒன்றே ஆதலும் ஆகாமையும் இன்னும் அவ்வும்மையானே செக்கான், வண்ணான் என மற்றொன்று ஆகாமையும் அதனை ஆக்கவும்மை ஆக்கி, "பழமுதிர் சோலை மலைகிழ வோனே" (முருகு. 317) என ஆகாரமே அன்றி, அகரமும் ஓகாரம் ஆதலும் கொள்க. (2)

### உருபும் வினைவிகுதியும் எதிர்மறையில் திரியாமை

**354. உருபும் வினையு மெதிர்மறுத் துரைப்பினுந்
திரியா தத்தமீற் றுருபி னென்ப.**

எ-னின், வேற்றுமை உருபுகட்கும் வினைச்சொற்கட்கும் ஆவதோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: எட்டு வேற்றுமை உருபுகளும் (292) மூவகை வினைச்சொற்களும் (322) எதிர்மறுத்துச் சொல்லுமிடத்தும் தத்தம் ஈற்றினின்றும் அவ்வவ் உருபினின்றும் வேறுபடா என்று சொல்லுவர் புலவர் எ-று.

'இன்னுருபை, 'ஈற்று' என்பதன்கண்ணும் கூட்டி எதிர் நிரனிறையாகப் பொருள் கொள்க.

உருபின்கண் எதிர்மறுத்தல் அவற்றின் பயனிலைகளை என்க.

வ-று: சாத்தன் வாரான், குடத்தை வனையான், வாளால் எறியான், புல்லர்க்கு நல்கான், நிலையின் இழியான், பொருளினது இன்மை, தீயர்கண் சாரான், சாத்தா சாயல் எனவும் நடவான், நடவாத, நடவாது எனவும் வரும்.

"சொற்றொறு மிற்றிதன் பெற்றி" (நூ. 461) என்னும் சூத்திரத்தானே உண்மைக்கு மறையாகிய இன்மை என்னும் பெயர்க்கண்ணும் ஈறு திரியாமை காண்க.

நடத்தல், நடவாமை என்றல் தொடக்கத்தன ஈறு திரிந்தன அன்றோ எனின் அவை தொழிற்பெயர் ஆதலின் திரிந்தன என்க. ஓடாக் குதிரை, "ஆனா அறிவு" (யா. கா. 2) என்றல் தொடக்கத்தன ஓடாத, ஆனாத என்பனவற்றைக் குறைத்து வழங்கினவன்றி ஈறு வேறுபட்டன அல்ல என்க.

ஒரு வினை நிகழ்வழி அவ்வினைக்குக் கருத்தாவும் செயப்படுபொருளும் முதலிய-வாகப் பெயர்ப்பொருளை வேற்றுமை செய்து நின்ற உருபுகள் அவ்வினை நிகழா-வழியும் அவ்வாறு நிற்றலானும் வினைவிகுதிகளும் அவ்வினை நிகழ்வழி முற்றின்-கண் கருத்தாவையும் எச்சங்களின் பெயரொழிபையும் வினையொழிபையும் தந்து நின்றாற்போல வினை நிகழாவழியும் நிற்றலானும் இங்ஙனம் கூறப்பட்டது என்க. (3)

உருபும் வினையும் அடுக்கி முடிதல்

{355} **உருபுபல வடுக்கினும் வினைவே றடுக்கினும்**
**ஒருதம் மெச்ச மீறுற முடியும்.**

எ-னின், இதுவும் அது.

இ-ள்: வேற்றுமை உருபுகள் விரிந்தும் தொக்கும் தம்முள் விரவிப் பல அடுக்கி வரினும் வெவ்வேறு பல அடுக்கி வரினும் மூவகை வினைச்சொற்களும் (322) தம்முள் விரவி அடுக்கும் தன்மையவன்றி வெவ்வேறு பல அடுக்கி வரினும் தத்தம் எச்சம் இறுதியில் ஒன்று வர, அதனோடு அனைத்தும் முடிவனவாம் எ-று.

'பல' என்பதனை, 'வேறு' என்பதனோடும் கூட்டுக.

இவ்விரு வகை அடுக்கும் படை படை என்றாற்போல (152) அடுக்கிய அல்ல என்பார், 'பல வடுக்கினும்' என்றார்.

வினை வேறு பல அடுக்கினும் என விதந்தாற்போல உருபிற்கு விதவாமையின் அவை விரவியும் வெவ்வேறு பல அடுக்கும் என்பது பெற்றாம்.

வ-று: சாத்தன் யானையது கோட்டை நுனிக்கண் பொருட்கு வாளால் குறைத்தான் என்பன உருபுகள் விரவிப், பல அடுக்கிக் குறைத்தான் என்னும் ஒரு வினை கொண்டன. இவற்றுள் ஆறன் உருபு அடுக்கு அன்று; வினை அதற்கு எச்சம் அன்று ஆதலானும் கோடு என்னும் பெயர் கொண்டமையானும் என்க. சாத்தன் என்னும் பெயர்-வேற்றுமை குறைத்தற்கு வினைமுதலைக் காட்ட வந்தது; அன்றி அடுக்கு என்று கோடலும் ஒன்று. சாத்தனையும் கொற்றனையும் தேவனையும் பூதனையும் வாழ்த்தி-னான் எனவும் சாத்தனுக்கும் கொற்றனுக்கும் தேவனுக்கும் பூதனுக்கும் தந்தை எனவும் இரண்டாம் உருபும் நான்காம் உருபும் வேறு பல அடுக்கி வாழ்த்தினான் என்னும் ஒரு வினையும் தந்தை என்னும் ஒரு பெயரும் முறையே கொண்டன. வாள் கைக்கொண்டான் எனவும் அருளறம் உடையான் எனவும் உருபு தொக்கு அவ்வாறு வந்தன. உண்டான் தின்றான் ஓடினான் பாடினான் சாத்தன்,

"வருதி பெயர்தி வருந்துதி துஞ்சாய்
பொருதி புலம்புதி நீயும் - கருதுங்கால்
பண்டினை யல்லையாற் பாழித்தோட் கோதையைக்
கண்டனையோ வாழி கடல்" (நன். 354 மயிலை.)

எனவும்,

"இளையண் மெல்லியண் மடந்தை
அரிய சேய பெருங்கான் யாறே" (ஐங். தனி. 5:4-5*)

எனவும் வினைமுற்றும் குறிப்புமுற்றும் பெயரெச்சங்களோடு விரவாது வேறு பல அடுக்கிச், சாத்தன், நீ, மடந்தை, யாறு என்னும் ஒரு பெயர் முறையே கொண்டன. கற்ற கேட்ட பெரியோர் எனவும், "சிறிய பெரிய நிகர்மலர்க் கோதை" (யா. வி. 38) எனவும் பெயரெச்ச வினையும் குறிப்பும் வினை, வினைக்குறிப்பு முற்றோடு விரவாது வேறு பல அடுக்கிப், பெரியோர், மலர்க்கோதை என்னும் ஒரு பெயர் முறையே கொண்டன. கற்றுக் கேட்டு அறிந்தார் எனவும் விருப்பின்றி வெறுப்பின்றி இருந்தார்

எனவும் வினையெச்ச வினையும் குறிப்பும் வினையோடு முடியும் என விதந்த வினைமுற்றுக்களோடு விரவாது வேறு பல அடுக்கி, அறிந்தார், இருந்தார் என்னும் ஒரு வினை முறையே கொண்டன. பிறவும் அன்ன.

"சொல்லருஞ் சூற்பசும் பாம்பின் றோற்றம்போல்
மெல்லவே கருவிருந் தீன்று மேலலார்
செல்வமே போற்றலை நிறுவித் தேர்ந்தநூற்
கல்விசேர் மாந்தரி னிறைஞ்சிக் காய்த்தவே" (சீவக. 53)

என்னும் வினையெச்சங்கள் **கரு இருந்து ஈன்று என்பதன்றிக் கரு இருந்து தலை நிறுவி என முடியாது ஆகலான் அவற்றுள்** ஒன்றற்கு ஒன்று முடிபாய்த் தொடர்தலானும்,

"நாளன்று போகிப் புள்ளிடை தட்பப்
பதனன்று புக்குத் திறனன்று மொழியினும்
வறிது பெயர்குந ரல்லர் நெறிகொள" (புறம். 124:1-3*)

என்னும் வினையெச்சக் குறிப்புக்கள் ஆங்காங்கு முடிதலானும் இவை அடுக்கு ஆகா[338] என்க. (4)

## இடைப் பிற வரல்

356. **உருபு முற்றீ ரெச்சங் கொள்ளும்
பெயர்வினை யிடைப்பிற வரலுமா மேற்பன.**

எ-னின், இதுவும் அது.

இ-ள்: வேற்றுமை உருபுகளும் முற்றுக்களும் பெயரெச்சங்களும் வினையெச்சங்களும் கொண்டு முடியும் பெயர்க்கும் வினைக்கும் இடையே பிற சொற்கள் வருதலும் ஆம் ஆண்டைக்குப் பொருந்துவன எ-று.

'பிற' எனப் பன்மை கூறினாரேனும், "ஒருமொழி யொழிதன் னினங்கொளற் குரித்தே" (நூ. 358) என்பதனான் ஒரு சொல் வருதலும் கொள்க.

உம்மை உருபு, முற்று, ஈரெச்சங்களும் அவை கொள்ளும் பெயர், வினையும் மாத்திரையாய் நிற்றலே அன்றி என இறந்தது தழீஇ நின்றது.

---

[338] மயிலைநாதர் (நன். 354) இவற்றை வினையெச்ச அடுக்கு என்பார்.

வ-று: சாத்தன் வயிறார உண்டான், அறத்தை அழகு பெறச்[339] செய்தான், வாளால் மருவாரை மாய வெட்டினான். இதனுள் மாய என்பது ஒன்றுமே இடை வந்தது; மருவாரை என்பது அற்று அன்று[340] இவ்விரண்டன் உருபும் வாளால் என்னும் மூன்றன் உருபும் அடுக்காய்[341] நிற்றலின். தேவர்க்குச் செல்வம் வேண்டிச் சிறப்பு எடுத்தான், மலையினின்று உருண்டு வீழ்ந்தான், சாத்தனது இத்தடக்கை யானை, ஊர்க்கண் உயர்ந்த ஒளிமாடம், சாத்தா விரைந்து ஓடி வா எனவும் வந்தான் அவ்வூர்க்குப் போன சாத்தன், வந்த அவ்வூர்ச்சாத்தன், வந்து சாத்தன் இற்றை நாள் அவன் ஊர்க்குப் போயினான் எனவும் வரும். குறிப்புவினை முதலிய பிறவும் அன்ன.

"கருதலர்ச் சீறிய கடுங்கொல் யானை" (வி. மே.) என்புழிச் சீறிய என்னும் பெயரெச்சத்திற்கும் அது கொண்ட யானை என்னும் பெயர்க்கும் இடையே கொல் என்னும் வினைத்தொகைச் சொல் இடைப் பிற வரலாய் வந்தது அன்று. வினைத்தொகை காலம் கரந்த பெயரெச்சம் ஆதலால் பெயரெச்சவினை இரண்டு அடுக்கி, யானை என்னும் ஒரு பெயர் கொண்டனவாம் என்க. இவ்வாறே அடுக்காய் வந்தனவும் இடைப் பிற வந்தனவும் உய்த்துணர்ந்து கொள்க.

இனி, 'ஏற்பன' என்றமையான், "வல்ல மெறிந்த நல்லிளங் கோசர் தந்தை மல்லல் யானைப் பெருவழுதி" (தொல். வினை. 40 சேனா.) என்புழி வல்லம் எறிதல் பெருவழுதி மேற்றே எனின் நல்லிளங்கோசர் தந்தை என்பதனை இடை நிறுவின் ஏலாதாம்; வல்லம் எறிதல் நல்லிளங்கோசர் மேற்றாகப் பொருள்படும் ஆதலின் என்க. (5)

### முடிக்கும் சொல் நிற்கும் இடம்

357. **எச்சப் பெயர்வினை யெய்து மீற்றினும்.**

எ-னின், இதுவும் அது.

இ-ள்: உருபுகளும் முற்றுக்களும் பெயரெச்சங்களும் வினையெச்சங்களும் கொண்டு முடியும் எச்சமாகிய பெயரும் வினையும் அவற்றிற்கு ஈற்றினும் வரும் எ-று.

---

[339] "அறத்தை அழகு பெருகச் செய்தான்" என்பது ஆறுமுக நாவலர் பாடம்.

[340] மருவாரை மாய என்ற இருசொற்களையும் இடை வந்தனவாக மயிலைநாதரும் (நன். 355) சுப்பிரமணிய தீக்கிதரும் (பி. வி. 19) வைத்தியநாத தேசிகரும் (இல. விள. 329) கொள்வர்.

[341] "இதனுள் மாய என்பது ஒன்றுமே இடை வந்தது; மருவாரை என்பது அற்று அன்று இவ்விரண்டன் உருபும் வாளால் என்னும் மூன்றன் உருபும் அடுக்காய் நிற்றலின்." என்னும் உரை வாசகம் சில பதிப்புகளில் அடைப்புக்குறிக்குள் தரப்பட்டுள்ளது. தண்டபாணி தேசிகர் பதிப்புகளில் மட்டும் இப்பகுதி இடமாற்றம் பெற்றுள்ளது.

'ஈற்றினும்' என்னும் உம்மையான் முதலினும் வருதல் கொள்க.

வ-று: சாத்தன் வந்தான், மரத்தைக் குறைத்தான், சாத்தனால் வந்தான், சாத்தற்குக் கொடுத்தான், சாத்தனின் நீங்கினான், சாத்தனது ஆடை, சாத்தன்கண் சென்றான், சாத்தா வா எனவும் வந்தான் சாத்தன், வந்த சாத்தன், வந்து போயினான் எனவும் இறுதிக்கண் வந்தன. வந்தான் சாத்தன், குறைத்தான் மரத்தை, வந்தான் சாத்தனால், கொடுத்தான் சாத்தற்கு, நீங்கினான் சாத்தனின், சென்றான் சாத்தன்கண், வா சாத்தா எனவும் சாத்தன் வந்தான், போயினான் வந்து எனவும் முதற்கண் வந்தன.

'எய்து மீற்றின்' என்றாற்போல முதற்கண் வருதலை எடுத்து ஓதாது உம்மையால் தழீஇக்கொண்டார் ஆறன் உருபின் எச்சமும் ஏழன் உருபின் எச்சப்பெயரும் பெயரெச்சத்தின் எச்சமும் முதற்கண் வாரா என்பதூஉம் ஏனைய வரினும் இறுதிக்கண் வருதல்போல் சிறப்பின அல்ல என்பதூஉம் தோன்றுதற்கு என்க.

எழுவாயுருபு வினைமுற்றுப் பயனிலையை இறுதிக்கண் கொண்டதூஉம் வினைமுற்றுப் பெயர்ப் பயனிலையை முதற்கண் கொண்டதூஉம் சாத்தன் வந்தான் என வரும். தம்முள் வேற்றுமை யாதோ எனின் கேட்போர்க்குச் சாத்தன் இது செய்தான் என வினையை உணர்த்துவதூஉம் இது செய்தான் சாத்தன் என வினைமுதலை உணர்த்துவதூஉம் ஆம் என்க. வந்தான் சாத்தன் என வருவனவும் அன்ன. (6)

## சொற்கள் தத்தம் இனங்களைக் கொள்ளுதல்

## 358. ஒருமொழி யொழிதன் னினங்கொளற் குரித்தே.

எ-னின், நால்வகைச் சொற்கும்[342] ஆவதோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

'மொழி' எனப் பொதுப்படக் கூறினமையின் நால்வகைச் சொற்கும் என்பது[343] பெற்றாம்.

இ-ள்: பெயர், வினை, இடை, உரி என்னும் நால்வகைச் சொற்களுள் (270) ஒவ்வொன்று எஞ்சி நின்ற தன்தன் இனங்களைக் கொள்ளுதற்கு உரித்தாம் எ-று.

வ-று: சோற்றை நனி உண்டான் என்றவழிக் கறியை நனி தின்றான் என்றல் தொடக்கத்தனவும் பாக்கை நனி தின்றான் என்றவழி வெற்றிலையை நனி தின்றான், சுண்ணாம்பை நனி தின்றான் என்பனவும் நஞ்சு உண்டான் சாவான் என்றவழி நஞ்சு உண்டாள் சாவாள், நஞ்சு உண்டது சாம் என்பனவும் பார்ப்பான் கள் உண்ணான்

---

[342] மயிலைநாதர் (நன். 357) பெயர் வினைகளுக்கு உரிய விதியாக இதனைக் கொள்வார்.

[343] "மொழி எனப் பொதுப்படக் கூறினமையின் நால்வகைச் சொற்கும் என்பது பெற்றாம்." என்ற பகுதி தண்டபாணி தேசிகர் பதிப்புகளில் இடமாற்றம் பெற்றுள்ளது.

என்றவழிப் பார்ப்பனி கள் உண்ணாள் என்பனவும் கூறாதே அமைந்து கிடத்தலின் இனங்களாய் எஞ்சி நின்றன. இவற்றுள் சோற்றை என்னும் பெயர்ச்சொல்லும் உருபு இடைச்சொல்லும் கறியை என்னும் பெயர்ச்சொல்லையும் உருபு இடைச்சொல்லையும் நனி உண்டான் என்னும் உரிச்சொல்லும் வினைச்சொல்லும் நனி தின்றான் என்னும் உரிச்சொல்லையும் வினைச்சொல்லையும் கொள்ளுதற்கு உரியவாய் நிற்றல் காண்க. பிறவும் அன்ன. (7)

### பெயர்வினைகள் பொதுமை நீங்குதல்

**359. பொதுப்பெயர் வினைகளின் பொதுமை நீக்கும்**
**மேல்வருஞ் சிறப்புப் பெயர்வினை தாமே.**

எ-னின், பெயர்வினைகட்கு ஆவதோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: திணை பால் இடம் காலங்கட்குப் பொதுவாகிய பெயர்வினைகளினுடைய பொதுத் தன்மையினை நீக்கி, ஒன்றற்கு உரிமை செய்யும் மேல் வரும் சிறப்புப் பெயர் வினைகள்தாமே எ-று.

ஒன்றற்கு இருமருங்கினையும் மேல் என்ப ஆகலின் சிறப்புப் பெயர் வினை யாண்டு வரினும் கொள்க.

'தாமே' என்னும் பிரிநிலை ஏகாரம் குறிப்பினான் உற்று உணர்ந்து இடர்ப்பட வேண்டா என்னும் பொருள் தந்து நின்றது.

வ-று: சாத்தன் இவன், சாத்தன் இது எனவும் சாத்தன் வந்தான், சாத்தன் வந்தது எனவும் பெயர்த் திணைப்பொதுமையினைச் சிறப்புப் பெயரும் வினையும் வந்து நீக்கின. ஒருவர் என் ஐயர், ஒருவர் என் தாயர் எனவும் மரம் வளர்ந்தது, மரம் வளர்ந்தன எனவும் பெயர்ப் பாற்பொதுமையினைச் சிறப்புப் பெயரும் வினையும் வந்து நீக்கின. அவர் எல்லாம் இருந்தார், யாம் எல்லாம் வருவம், நீவிர் எல்லாம் போமின் எனப் பெயர் இடப்பொதுமையினைச் சிறப்புப் பெயரும் வினையும் வந்து நீக்கின. வாழ்க அவன், அவள், அவர், அது, அவை, யான் யாம், நீ, நீர் எனவும் உண்டு வந்தான், வந்தாள், வந்தார், வந்தது, வந்தன, வந்தேன், வந்தேம், வந்தாய், வந்தீர், வருகின்றான், வருவான் எனவும் வினைத் திணை, பால், இடம், காலப்பொதுமையினைச் சிறப்புப் பெயரும் வினையும் வந்து நீக்கின. பிறவும் அன்ன.

உண்டு என்பது இறந்தகால வினையெச்சம் ஆயினும் முக்கால வினைகளையும் கொண்டு முடிதற்கு உரிய பொதுமையினை உடைத்து ஆதலின் அதனை மேல் வரும்

சிறப்புவினை நீக்கின. (8)

எச்சங்களின் தொகையும் முடிபும்

**{360} பெயர்வினை யும்மைசொற் பிரிப்பென வொழியிசை**
**எதிர்மறை யிசையெனுஞ் சொல்லொழி பொன்பதுங்**
**குறிப்புந் தத்த மெச்சங் கொள்ளும்.**

எ-னின், நால்வகைச் சொற்கும் (270) ஆவதோர் இலக்கணம் உணர்த்தும்வழிச் சிலவற்றிற்கு எய்தியதன்மேல் சிறப்புவிதியும் சிலவற்றிற்கு எய்தாதது எய்துவித்தலும் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: பெயரெச்சமும் வினையெச்சமும் உம்மையெச்சமும் சொல்லெச்சமும் பிரிநிலையெச்சமும் எனவெச்சமும் ஒழியிசையெச்சமும் எதிர்மறையெச்சமும் இசையெச்சமும் ஆகிய சொல்லெச்சம் ஒன்பதும் குறிப்பெச்சம் ஒன்றும் தத்தம்[344] எச்சங்களைக் கொள்ளும் எ-று.

'சொல்லொழிபு' என்பதனை முற் கூறிய ஒன்பதனோடும் அதனுள், 'ஒழிபு' என்பதனைப் பிற் கூறிய குறிப்பினோடும் கூட்டுக. குறிப்புச் சொல்லொழிபு எனக் கூட்டி உரைத்தால் என்னை எனின் அது பின்னர்க்[345] கூறுதும்.

எனவே எச்சங்கள் சொல்லெச்சம், குறிப்பெச்சம் என இருவகைய என்பதூஉம் சொல்லெச்சம் ஒன்பது எனத் தொகை கூறினார் வகையுள் ஒன்றனையும் சொல்லெச்சம் என்றமையான் அவ்வகையுள் ஒன்றாகிய சொல்லெச்சம் என்பது சொல் விகற்பங்களின்றிச் சொல் என்னும் சொல் எஞ்சி நிற்பது என்பதூஉம் பெற்றாம்.

"சொல்லெ னெச்ச முன்னும் பின்னும்
சொல்லள வல்ல தெஞ்சுத லின்றே" (தொல். எச்ச. 45)

என்றார் ஆசிரியர் தொல்காப்பியனார் என்க. இவ்வாசிரிய வசனத்திற்கு இப்பொருளன்றி வேறு பொருள் கூறுவாரும்[346] உளர். அது நிற்க.

வ-று: செய்த சாத்தன், செய்கின்ற சாத்தன், செய்யும் சாத்தன் எனவும் நல்ல சாத்தன் எனவும் பெயரெச்சங்கள் தம் எச்சமாகிய செய்பவனது பெயர் கொண்டன. ஏனைக்

---

[344] இந்நூற்பாவில் வரும் தத்தம் எச்சம் என்னும் தொடருக்கு மயிலைநாதர் (நன். 359) தடைவிடைகளால் சிறப்புரை கூறுவார்.

[345] இந்நூற்பாவின் உரை இறுதியில், "இதனைக் குறிப்புச் சொல்லெச்சம் என்னாது குறிப்பெச்சம் என்றார்" என்று விளக்கும் பகுதியில் கூறுவார்.

[346] சேனாவரையரும் நச்சினார்க்கினியரும் (தொல். எச்ச. 45) வைத்தியநாத தேசிகரும் (இல. விள. 351) இதற்கு வேறு பொருள் கூறுவர்.

கருவி முதல் ஐந்தோடும் ஒட்டுக. வினைத்தொகைகளும் பெயரெச்சமாய் அடங்குதலின் அவையும் முற்றெச்சங்களும் அன்ன. செய்து வந்தான், செய்து நல்லன் ஆயினான், செய்து நல்லன், செய்து வருதல் எனவும், "விருந்தின்றி யுண்ட பகல்" (திரி. 44:1) எனவும் வினையெச்சங்கள் தம் எச்சமாகிய **வினை, வினைக்குறிப்பும்** தொழிற்-பெயரும் கொண்டன. காட்டாது ஒழிந்த வினையெச்சங்களும் முற்றெச்சங்களும் அன்ன.

இவ்வெச்சத்திற்கு முடிபாகிய வினைக்குறிப்பு ஆக்கமொடு வருதலும் அது தொக வருதலும், "ஆக்க வினைக்குறிப்பு" (நூ. 347) என்னும் சூத்திரத்துள் அமைந்து கிடந்தன.

சாத்தனும் வந்தான் என்னும் உம்மையெச்சம் முன்னர்க் கொற்றன் வந்தான் எனத் தன் எச்சம் கொண்டது.

"மிடியென்னுங் காரணத்தின் மேன்முறைக் கண்ணே
கடியென்றார் கற்றறிந் தார்" (நாலடி. 56:3-4),

"இசையா வொருபொரு ளில்லென்றல் யார்க்கும்
வசையன்று" (நாலடி. 111:1-2)

என்பன சொல்லெச்சம். கடி என்று சொன்னார், இல் என்று சொல்லுதல் எனச் சொல் என்னும் தம் எச்சம் கொண்டன. இவை பெயரெச்சம், வினையெச்சம் என்றாற்போலச் சொல் என்னும் எச்சத்தை உடைய இடைச்சொல்லைச் சொல்லெச்சம் என்றலின் ஆகுபெயர். மேல் வரும் எனவென் எச்சம் ஒழிந்தனவும் அன்ன.

சாத்தனே கொண்டான், சாத்தனோ கொண்டான் என்பன பிரிநிலையெச்சம். இவை பிறர் கொண்டிலர் எனத் தம் எச்சம் கொண்டன. கோடல் தொழிலால் சாத்தனின்றும் பிரிக்கப்பட்டார் பிறர் ஆதலின் பிரிநிலை என்க.

கடல் ஒல்லென ஒலித்தது, நரம்பு விண்ணென இசைத்தது, தலை இடியென இடித்தது என்பன எனவெச்சம். இவை தம் எச்சமாகிய வினை கொண்டன. மிகவும் ஒலித்தது, மிகவும் இசைத்தது, மிகவும் இடித்தது என்பன இவற்றிற்குப் பொருளாம் ஆதலின் இவ் எனவெச்சம் மிகுதிப்பொருள் தருவதோர் இடைச்சொல்லாம் என்க.

"தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யு மழை" (குறள். 55)

என்பதனுள் என என்பது பெய் எனச் சொல்ல என வினைப்பொருள் தருதலின்

இடைச்சொல் அடியாகப் பிறந்த செயவென் எச்சமாய் முன்னர்ப் போந்த வினை-யெச்சத்துள் அடங்கும் என்க.

"கூரியதோர் வாண்மன்" (தொல். எச்ச. 38 இளம்.), "வருகதில் லம்ம" (அகம். 276:7) கொளலோ கொண்டான் என்பன ஒழியிசையெச்சம். இவை முறையே கோடிற்று, வந்தால் இன்னது செய்வல், கொண்டுய்யப் போயினான் அல்லன் எனத் தம் எச்சம் கொண்டன.

வரலும் உரியன், யானோ செய்தேன் என்பன எதிர்மறையெச்சம். இவை முறை-யானே வாராமைக்கும் உரியன், யான் செய்கிலன் எனத் தம் எச்சம் கொண்டன.

இதுகாறும் வினையியலின் ஒழிபாகிய பெயரெச்ச, வினையெச்ச முடிபும் இடையியலின் ஒழிபாகிய ஏனை அறுவகை எச்சமுடிபும் எடுத்து விதந்தார். இவ்வாறு எடுத்து விதத்தற்கு வரையறைப்படாது வரும் சொல்லெச்சங்களை எல்லாம் தொகுத்து இசையெச்சம் என இறுதிக்கண் கூறினார். இசை என்பது சொல். இசையெச்சம் எனப் பொதுப்படக் கூறினமையின் இவ்வெச்சமும் இது கொள்வதும் பெயர், வினை, இடை, உரி என்னும் நால்வகைச் சொல்லுள் ஒன்றும் பலவும் தனித்தும் தொடர்ந்தும் வரும் என்பது பெற்றாம். அவற்றுள் சில இசையெச்சங்கள் வருமாறு:

"இணரெரி தோய்வன்ன வின்னா செயினும்
புணரின் வெகுளாமை நன்று" (குறள். 308)

என்புழிப் பிற உயிர்க்கு இன்னா செயின் அவை பிழையாது தமக்கு வருதல் கருதித், தம்மாட்டு அன்பும் பிற உயிர்கண்மாட்டு அருளும் இன்னா செய்தலான் மேன்மேல் வளரும் பிறப்பிறப்பின் அச்சமும் நம்மால் இன்னா செயப்பட்டாரை நாம் அடைந்து இரத்தல் கூடினும் கூடும். அதனால் யார்மாட்டும் இன்னா செயக் கடவம் அல்லம் என்னும் வருங்கால உணர்ச்சியும் இலராய், ஒருவர் தன்னால் ஆற்றல் கூடாத இன்னாதனவற்றைத் தன்கண் செய்தார் ஆயினும் அவர் தமக்கு வேண்டுவதோர் குறை முடித்தல் கருதி நாணாது, தன்னை அடைந்தார் ஆயின் அவர் செய்த இன்னாமை கருதி அவரை வெகுளாது, அவற்றை மறந்து, அவர் வேண்டும் குறை முடித்து, முன் செய்த இன்னாமையால் அவர் கூசி ஒழுகுதல் தவிர்தற்குக் காரணமாகிய மெய்ப்பாடு முதலியன தன்கண் குறிப்பின்றி நிகழ, அவர்க்கு இனியனாகி இருத்தல் தன் சால்புக்கு நன்று என நால்வகைச் சொற்களுள் வேண்டுவன எல்லாம் தந்து, அகலம் கூற வேண்டி நிற்பன இசையெச்சமாம் என்க. பிறவும் அன்ன.

இனிக் குறிப்பெச்சங்களாவன, "ஒன்றொழி பொதுச்சொல்" (நூ. 269) முதலிய குறிப்புச்சொற்களாம் குறிப்பான் உணரப்படுவன முறையே எஞ்சி நிற்றலின். அவை

அவ்வெச்சம் கொள்ளுமாறு:

பெருந்தேவி பொறை உயிர்த்த கட்டிற்கீழ் நால்வர் மக்கள் உளர் என்புழி மக்கள் என்னும் பொதுப்பெயர் பெண்மக்கள் எனப் பெண் என்னும் சிறப்புப்பெயர் கொண்டது. "குறுத்தாட் பூதம்" (யா. வி. 95) என்புழித் தகர வல்லொற்று அதற்கு இனமாகிய மெல்லொற்றையும், "மரையிதழ் புரையும்" (யா. வி. 95) என்புழி மரை என்பது தா என்னும் முதலெழுத்தையும் கொண்டன. வாய் பூசி வருதும என்பது எச்சில் கழித்து வருதும் என்பது கொண்டது. புளித் தின்றான் என்பது பழமாகிய புளி எனப் பழம் என்பது கொண்டது. பொற்றொடி என்பது பொற்றொடியை உடையாள் என இரண்டாம் உருபும் அதன் பயனிலையும் கொண்டது. நல்லன் இவன் என்பது பெயர்ப்பொருள் கொள்ளாது வினைக்குறிப்புப் பொருளோடு நல்லன் ஆயினான் இவன் என ஆக்கம் கொண்டது. "அறத்தா றிதுவென வெள்ளைக் கிழிபு" (யா. கா. 15) என்பது,

"அறத்தா றிதுவென வேண்டா சிவிகை
பொறுத்தானோ டூர்ந்தா னிடை" (குறள். 37)

என்பது கொண்டது. "அலங்குளைப் புரவி யைவரொடு சினைஇ" (புறம். 2:13) என்பது தருமன், வீமன், அருச்சுனன், நகுலன், சகாதேவன் என்பன கொண்டது.

"பீலிபெய் சாகாடு மச்சிறு மப்பண்டஞ்
சால மிகுத்துப் பெயின்" (குறள். 475)

என்பதூஉம் உண்ணாநின்றான் கற் கறித்துழி அட்டோன் முகம் நோக்கி, நன்கு அட்டாய் என்பதூஉம் மெலியர் ஆயினும் பலர் தொகின் வலியரையும் வெல்வர் என்பதனையும் நன்கு அட்டாய் அல்லை என்பதனையும் முறையே கொண்டன. பிறவும் அன்ன. இவை, "ஒன்றொழி பொதுச்சொல்" (நூ. 269) முதலிய குறிப்பெச்சங்கள் தம் எச்சம் கொண்டன. இதனைக் குறிப்புச் சொல்லெச்சம் என்னாது குறிப்பெச்சம் என்றார் சொல்லே அன்றிப் பொருள் மாத்திரையும் எழுத்தும் எஞ்ச வருவனவும் உள ஆதலின் என்க.

இப்பத்து எச்சங்கட்கும் வேறு பொருள் கூறுவாரும்[347] உளர். அவை எல்லாம்

---

[347] **இவ்வெச்சங்களுக்கு இளம்பூரணர் முதலிய தொல்காப்பிய உரையாசிரியர்களும் அவிநய உரையாசிரியரும் மயிலைநாதரும் வேறு பொருள் கூறுவர். இந்நூற்பாவின் உரையில் அவிநய உரையாசிரியர் உரையையும் இளம்பூரணர் உரையையும் எடுத்துக்-காட்டும் மயிலைநாதரின் (நன். 359) புலமை நேர்மையும் நடைநயமும் படித்து மகிழத் தக்கன.**

இசையெச்சமாயும் குறிப்பெச்சமாயும் அடங்கும் ஆதலானும் பெயரெச்சம், வினையெச்சம் முதலியவற்றிற்கு ஆங்காங்கு முடிபு கூறாராயினார் ஈண்டு எச்சங்களை எல்லாம் தொகுத்துக் கூறும்வழி முடிபு கூறார் ஆயின் குன்றக் கூறல் என்னும் குற்றம் (12) ஆதலானும் அது பொருந்தாது என்க. (9)

## தொகைநிலைத் தொடர்மொழி

361. **பெயரொடு பெயரும் வினையும் வேற்றுமை**
**முதலிய பொருளி னவற்றி னுருபிடை**
**ஒழிய விரண்டு முதலாத் தொடர்ந்தொரு**
**மொழிபோ னடப்பன தொகைநிலைத் தொடர்ச்சொல்.**

எ-னின், பெயர்க்கும் வினைக்கும் ஆவதோர் விதி உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: பெயர்ச்சொல்லோடு பெயர்ச்சொல்லும் பெயர்ச்சொல்லோடு வினைச்சொல்லும், "வேற்றுமை வினைபண்பு" (நூ. 362) எனப் பின்னர் வகுத்துக் கூறும் அறுவகைப் பொருட் புணர்ச்சிக்கண் அவற்றின் உருபுகள் இடையே தொக்கு நிற்ப, இரண்டு முதலிய பல சொற்கள் தொடர்ந்து ஒரு மொழிபோல் நடப்பன யாவை, அவை தொகைநிலைத் தொடர்ச்சொற்களாம் எ-று.

தொகை என்னும் பல பொருள் ஒரு சொல் ஈண்டு உருபு மறைதலை உணர்த்தி நின்றது,

"ஐயுங் கண்ணு மல்லாப் பொருள்வயின்
மெய்யுருபு தொகா விறுதி யான" (தொல். வேற். மய. 22)

என்ப ஆகலின்.

வினையொடு வினை தொகைநிலைத்தொடர் ஆகாமையின் அதனை ஒழித்தும் நிலத்தைக் கடந்தான், நிலங்கடந்தான் என உருபு இடை விரியின் பிளவுபட்டும் தொக்கதேல் பிளவுபடாதும் தொடரும் ஆதலின், 'ஒரு மொழிபோல்' என்றும் கூறினார்.

ஒரு மொழிபோல் நடத்தலாவது கொல்யானை வந்தது, நிலங்கடந்தான் சாத்தன் என இரண்டு முதலிய பல சொல் தொடர்ந்து, ஒரு பெயராயும் வினையாயும் நின்று தம் முடிபு ஏற்றல் எனப் பொருள் கூறின்[348] அவ்வாறு தொகாநிலைத்தொடரும் கொன்றயானை வந்தது, நிலத்தைக்கடந்தான் சாத்தன் என நடக்கும் ஆதலின் அது பொருந்தாது என்க. (10)

---

[348] மயிலைநாதர் (நன். 360) இவ்வாறு பொருள் கூறுவார்.

அறுவகைத் தொகைகள்

362. **வேற்றுமை வினைபண் புவமை யும்மை**
**அன்மொழி யெனவத் தொகையா றாகும்.**

எ-னின், மேல், "வேற்றுமை, முதலிய" (நூ. 361) என்றார்; அவை இவை என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: வேற்றுமைத்தொகையும் வினைத்தொகையும் பண்புத்தொகையும் உவமைத்தொகையும் உம்மைத்தொகையும் அன்மொழித்தொகையும் என மேற் கூறிய (361) தொகைநிலைத் தொடர்ச்சொல் அறுவகைப்படும் எ-று. (11)

வேற்றுமைத்தொகை

363. **இரண்டு முதலா மிடையா றுருபும்**
**வெளிப்பட லில்லது வேற்றுமைத் தொகையே.**

எ-னின், நிறுத்த முறையானே (362) வேற்றுமைத்தொகை ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: எழுவாய்க்கும் விளிக்கும் இடையே நின்ற இரண்டாவது முதலிய ஆறு வேற்றுமை உருபும் தொக்க தொடர்ச்சொற்கள் வேற்றுமைத்தொகைகளாம் எ-று.

வேற்றுமைப் பொருட் புணர்ச்சிக்கண் பெயரொடு பெயரும் வினையும் கூடிய கூட்டத்தை வேற்றுமைத்தொகை என்றது அன்று என்பார், 'ஆறுருபும் வெளிப்பட லில்லது' என்றார். ஏனைத் தொகைகளும் அன்ன.

வ-று: நிலம் கடந்தான், தலை வணங்கினான், சாத்தன் மகன், ஊர் நீங்கினான், சாத்தன் கை, "குன்றக் கூகை" (குறுந். 153:1), யானைக்கோட்டு நுனி குறைத்தான் என ஆறு உருபும் இடையே தொக்கவாறு காண்க.

இடையே தொக்கதனைத் தொகைநிலைத்தொடர் என்றமையானே கடந்தான் நிலம், இருந்தான் குன்றத்து என இறுதிக்கண் தொக்குப் பிளவுபட்டு நின்றன தொகைநிலைத்தொடர் ஆகாவோ[349] எனின் நிலம் கடந்தான், குன்றத்து இருந்தான் என்பனவற்றை ஒரோவழி மாறிக் கூறுதலின் பிளவுபட்டு நின்றனவன்றி, அவையும்

[349] **வேற்றுமை உருபுகள் இறுதிக்கண் தொக்கன தொகைநிலைத்தொடர்கள் ஆகா; அவை செய்யுள் விகார வகையால் தொக்கன என்று மயிலைநாதர் (நன். 362) கூறுவார்.**

இடைக்கண் தொக்க தொகைநிலைத்தொடரேயாம் என்க.

இனி, 'ஆறுருபும்' என்னும் முற்றும்மையை எச்சவும்மை ஆக்கிப் பொற்குடம் என ஒரோவழி உருபும் பொருளும் உடன் தொக்கதூஉம் வேற்றுமைத்தொகை எனக் கொள்க. அது விரியுழிப் பொன்னால் செய்த குடம் என விரியும். பிறவும் அன்ன. (12)

## வினைத்தொகை

**364. காலங் கரந்த பெயரெச்சம் வினைத்தொகை.**

எ-னின், வினைத்தொகை ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: காலம்பற்றிப் புடைபெயர் வினையுருபாகிய தம் இறுதிகள்[350] தொக்கு நிற்பச், செய்வதாதி அறுபொருட் பெயராகிய தம் எச்சம் கொண்ட பெயரெச்சங்கள் (340) வினைத்தொகைகளாம் எ-று.

காலம் என்றது[351] ஆகுபெயர்.

முதனிலை வினையுருபு தொகாது நிற்பப், புடைபெயர்ச்சி வினையுருபு தொக்கன-வற்றை வினைத்தொகை எனப்படும் என்பார், 'காலங் கரந்த' என ஆகுபெயரால் கூறினார். புடைபெயர்ச்சி வினைகளை முதனிலை ஒழிந்த இறுதிகள் காட்டி நிற்றலின் அவ்வினைகட்கு அவை உருபாயின.

வ-று: நெருநல் அடுகளிறு, இன்று அடுகளிறு, நாளை அடுகளிறு, வேல், களம், தொழில், பொழுது, கந்து என வரும். இவை விரியுழி நெருநல் அட்ட களிறு, இன்று அடாநின்ற களிறு, நாளை அடும் களிறு என விரியும். இவை முறையே இறந்தகால வினைத்தொகை, நிகழ்கால வினைத்தொகை, எதிர்கால வினைத்தொகை எனப்படும். இஃது ஒவ்வொரு காலத்தையே பற்றாது முக்காலமும் பற்றி நெருநலும் அட்ட களிறு, இன்றும் அடாநின்ற களிறு, நாளையும் அடும் களிறு என விரிய வரின் முக்கால வினைத்தொகை எனப்படும். இங்ஙனம் கால விகற்பம்பற்றிப் புடைபெயர் வினை கருதாது அரிவாள், ஆ உரிஞ்சுதறி என்றாற்போல அடுகளிறு என்பது இத்தொழிற்கு உரியது இஃது என்னும் பொருள்பட வரும் ஆயின் வினைத்தொகைக் குறிப்பு எனப்படும் என்க. இவ்வாறே ஏனை வினைத்தொகைகளை எல்லாம் உய்த்-துணர்ந்து கொள்க. இதற்கு வருமொழி பெயர் ஆதலின் இஃது தொகைநிலையாயே தொடரும்; இரண்டிறந்த மொழிகள் இல என்க.

---

[350] **காலம் என்பதற்குக் காலங்கள் என்று பொருள் கூறிக், "காலமாவது முக்காலத்தையும் தோற்றுவிக்கும் இடைநிலைகள். அவை ஆகுபெயராய் நின்றன." என்று மயிலைநாதர் (நன். 363) விளக்குவார்.**

[351] **தண்டபாணி தேசிகர் பதிப்புகளில் இந்த உரை வாசகம் காணப்படவில்லை.**

அட்டது களிறு, அடாநின்றது களிறு, அடுவது களிறு என முற்றுக்கள் இறுதி தொகுதலின் அடுகளிறு என வினைத்தொகை ஆயிற்று எனின் அடுகளிறு இது, அடுகளிறு வந்தது எனப் பின்னும் ஓர் பெயர்வினைகளை ஏற்றலின் அவை அன்று எனவும் அடு என்னும் முதனிலைவினையாகிய காரணத்தின்கண் முக்கால வினை-யாகிய காரியங்கள் தொக்கு நிற்றலின் அடுகளிறு என வினைத்தொகை ஆயிற்று எனின் காரணத்தின்கண் காரியம் தொக்கு நிற்றற்குக் களிறு என்னும் முடிக்கும் சொல் வேண்டாமையின் அஃது ஒருமொழி இலக்கணமன்றி இங்ஙனம் அதிகரித்த தொடர்-மொழி இலக்கணம் அன்மையின் அஃது அன்று எனவும் விலக்கிப், பெயரெச்சத்து இறுதி தொக்கது வினைத்தொகை என்றார். (13)

பண்புத்தொகை

{365} **பண்பை விளக்கு மொழிதொக் கனவும்**
**ஒருபொருட் கிருபெயர் வந்தவுங் குணத்தொகை.**

எ-னின், பண்புத்தொகை ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: குணப்பெயரோடு குணிப்பெயர் புணருங்கால் அக்குணியோடு குணத்துக்கு உண்டாகிய ஒற்றுமை நயத்தை விளக்குதற்கு ஆண்டு வரும் ஆகிய என்னும் மொழியாகிய பண்புருபு தொக்கு[352] நிற்பனவும் அப்பண்புருபு தொக்கு நிற்பப், பொதுப்பெயரும் சிறப்புப்பெயருமாய் ஒரு பொருட்கு இருபெயர் வந்தனவும் ஆகிய இவ்விரண்டும் பண்புத்தொகைகளாம் எ-று.

'குணத்தொகை' என்றமையான் ஒரு பொருட்கு இருபெயர் வந்தனவற்றின்கண்ணும் பண்புருபு தொகும் என்பது பெற்றாம்.

வ-று: செந்தாமரை, கருங்குவளை, வட்டக்கல், சதுரப்பலகை, ஒருபொருள், இரு-பொருள், தீங்கனி, துவர்க்காய் எனவும் ஆயன்சாத்தன், "வேழக் கரும்பு" (பெரிய. ஏனாதி. 2), "அகர முதல" (குறள். 1), "சகரக் கிளவி" (தொல். மொழி. 29) எனவும் செந்நிறக்குவளை, "கரும்புரு வச்சிலை" (திருக். 352:3) எனவும் வரும். இவை விரியுழிச்

[352] பண்புத்தொகையில் தொக்கு நிற்பது எது என்பதில் கருத்து வேறுபாடு உண்டு. கருமை என்ற ஐகாரம் தொக்கது என்று மயிலைநாதரும் (நன். 364) அது, அன் முதலிய பால் ஈறுகள் தொக்கன என்று இளம்பூரணர், நச்சினார்க்கினியர் (தொல். எச்ச. 20) முதலியோரும் கூறுவர். பண்புத்தொகையில் பண்பை விளக்குவது ஆகிய என்னும் பண்புருபு. அதனால் ஈண்டுத் தொக்கு நிற்பதும் அதுவே என்பது சங்கர நமச்சிவாயர் கருத்து.

செம்மையாகிய தாமரை, ஆயனாகிய சாத்தன், செம்மையாகிய நிறமாகிய குவளை என விரியும். இவ் ஆகிய என்னும் உருபின்கண் ஆக்கவினை இன்மையின் இலக்கணையால் செய்த என்னும் வாய்பாட்டின்பாற் படுவதோர் வினையிடைச்சொல். ஆயன் என்னும் பொதுப்பெயர் சாத்தன் என்னும் சிறப்புப்பெயரை விசேடித்தும் வேழம் என்னும் சிறப்புப்பெயர் கரும்பு என்னும் பொதுப்பெயரை விசேடித்தும் வந்தன. பிறவும் அன்ன.

முற்று எச்சம் ஆகிய காலத்து முற்றுப்பொருளை ஒழித்து, எச்சப்பொருளை உணர்த்தி நின்றாற்போல ஆயன், வேழம் என்றல் தொடக்கத்து நிலைமொழிகள் பண்பிச்சொல் ஆயினும் அப்பண்பிகளை ஒழித்துப் பொதுப்பண்பினையும் சிறப்புப்-பண்பினையும் உணர்த்தி, வருமொழிக்கு அடையாய் நிற்றலின் அவையும் பண்புத்-தொகை ஆயின.

**ஆகிய என்பது அன்று; பண்பை விளக்கும் மொழி என்பது** மைவிகுதி என்றால்[353] என்னை எனின் ஒரு மொழிக்கு உறுப்பாகிய விகுதியை மொழி என்றல் கூடாமையானும் வட்டம், சதுரம் முதலிய பண்பிற்கு அவ்விகுதி இன்மையானும் வட்டக்கல்[354] என்புழி மகரவீறு கெட்டுப் புணர்ந்தாற்போல மையீறு கெட்டுப் புணர்ந்தது என்பது, "ஈறு போதல்" (நூ. 136) என்னும் சூத்திரத்தால் பெறுதலானும் அஃது அன்று என்க.

செய்ய தாமரை என்னும் எச்ச இறுதி தொக்கது இத்தொகை என்பாரும்[355] செய்யது தாமரை என்னும் முற்று இறுதி தொக்கது இத்தொகை என்பாரும்[356] உளர். இவையும் மொழி அன்மையானும் வட்டக்கல் முதலிய பண்புத்தொகைக்கு அவ்வெச்ச இறுதி விரித்தல் கூடாமையானும் அவ்வெச்ச இறுதி தொக்கதேல் அதனை வினைத்தொகைக் குறிப்பு என்றல் கூடுமன்றிப் பண்புத்தொகை என்றல் கூடாமையானும் முற்று இறுதி தொக்கதேல் பண்புத்தொகை என்றல் கூடாமையே

---

353"கருமைக் குதிரை என்பது மகர ஐகாரம் தொக்குக் கருங்குதிரை என நின்றதேல் அது கருமைக் குதிரை என விரிதல் வேண்டும். அங்ஙனம் விரிந்த வழி வேற்றுமைத்-தொகை ஆவதல்லது பண்புத்தொகை விரி ஆகா"து என இந்நூற்பாவை மறுத்துக் கூறும் வைத்தியநாத தேசிகர் (இல. விள. 339) உரையைக் கருதியது இவ்விளக்கம்.

354"வட்டக்கடல்" என்பதும் பாடம்.

355"கருஞ்சாத்தன் என்பது கரிய சாத்தன் என இருதிணை ஐம்பாற்கும் பொதுவாகிய பெயரெச்ச வாய்பாட்டான் விரியும்." என்ற மயிலைநாதர் (நன். 364) உரையைக் கருதியது போலும் இக்குறிப்பு.

356முற்றிறுதி தொக்கதாக இளம்பூரணரும் நச்சினார்க்கினியரும் (தொல். எச்ச. 20) கொள்வர்.

அன்றிச்[357] செந்தாமரை இது, செந்தாமரை விரிந்தது என மேல் பெயர், வினை ஏற்றல் கூடாமையானும் அது பொருந்தாது என்க.

இனிக் குணியோடு குணத்துக்கு உண்டாகிய ஒற்றுமை நயம் கருதாது ஒரு பொருளைக் குணகுணியாகப் பிரித்து அவ்வேற்றுமை நயம் கருதிச் செம்மையை உடைய தாமரை என விரிக்கின்[358] இரண்டாம் வேற்றுமை உருபும் பொருளும் உடன் தொக்க தொகையாம் என்க. பிறவும் அன்ன. (14)

## உவமத்தொகை

366. **உவம வுருபில துவமத் தொகையே.**

எ-னின், உவமத்தொகை ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: வினை, பயன், மெய் உரு[359] என்பனபற்றி வரும் உவமவுருபுகள் தொக்க தொடர்ச்சொற்கள் உவமத்தொகைகளாம் எ-று.

வ-று: புலிக்கொற்றன், மழைக்கை, துடியிடை, பொற்சுணங்கு எனவும் குருவி கூப்பிட்டான், சக்கரம் சுற்றி வந்தான் எனவும் மரகதக்கிளிமொழி, இருள்மழைக்கை எனவும் வரும். இவை விரியுழிப்[360] புலியைப் போலும் கொற்றன், குருவியைப் போலும் கூப்பிட்டான், மரகதத்தைப் போலும் கிளியைப் போலும் மொழி என விரியும். இறுதிக்கண் காட்டிய இரண்டிறந்த தொடர் உவமைக்கு உவமை அன்று; முன்னது உருவுவமையும் பின்னது பயனுவமையும் ஆதலின் என்க.

இவை இரண்டாம் வேற்றுமை உருபும் பொருளும் உடன் தொக்க தொகை அன்றோ? உவமத்தொகை என்றது என்னை எனின் செயப்படுபொருள் கருதிக் கூறியவழி இரண்டாம் வேற்றுமை உருபும் பொருளும் உடன் தொக்க தொகை-யாகவும் உவமைப்பொருள் கருதிக் கூறியவழி அதனையே உவமத்தொகையாகவும் கொள்ளப்படும் என்க. (15)

---

[357]"என்றல் கூடாமையே அன்றிச் செந்தாமரை விரிந்தது" என்பது தண்டபாணி தேசிகர் பாடம்.

[358]இவ்வாறு விரித்துப் பொருள் கூறுவோரை மயிலைநாதர் (நன். 364) குறிப்பிடுவார்.

[359]"வினைபயன் மெய்யுரு என்ற நான்கே" என்பது (உவம. 1) தொல்காப்பியம்.

[360]உவமையாகிய பாலோடு பொருளாகிய மொழியைப் புணர்த்தலே கருத்து என்பதால் பால்மொழி என்னும் உவமத்தொகையைப் பால் போலும் மொழி என்றே மயிலை-நாதர் (நன். 365) விரிப்பார். பாலைப் போலும் மொழி என உருபு சேர்த்து விரித்தால் உவமையோடு பொருளுக்குப் புணர்ச்சி இல்லை என்பது அவர் கருத்து.

உவமவுருபுகள்

**367. போலப் புரைய வொப்ப வுறழ**
**மானக் கடுப்ப வியைய வேய்ப்ப**
**நேர நிகர வன்ன வின்ன**
**என்பவும் பிறவு முவமத் துருபே.**

எ-னின், உவமவுருபு இயற்சொல் மாத்திரையாய் நில்லாது திரிசொல்லால் பல ஆதலின் அவை இவை என உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: போல என்பது முதலிய செயவென் எச்சம் பத்தும் அன்ன, இன்ன என்னும் பெயரெச்சக் குறிப்பு இரண்டும் இவை போல்வன பிறவும் உவமவுருபுகளாம் எ-று.

'இன்ன' என்பது அருகியன்றி வாராமையின் பிற் கூறினார்.

'பிற' என்றமையானே, 'போலப் புரைய' என்றல் தொடக்கத்து வினையடியாகப் பிறத்தற்கு உரிய ஏனை வினையெச்ச விகற்பங்களும் பெயரெச்ச விகற்பங்களும் பொருவ, ஏற்ப, அனைய என்றல் தொடக்கத்தனவும் கொள்க.

வ-று: குருவிபோலக் கூப்பிட்டான், குருவிபுரையக் கூப்பிட்டான், புலியன்ன கொற்றன் எனப் பெயரொடு வினை புணருங்கால் வினையெச்ச உருபுகள் அனைத்தினையும் பெயரொடு பெயர் புணருங்கால் பெயரெச்ச உருபுகள் அனைத்தினையும் விரித்துக்கொள்க.

பெயரொடு பெயர் புணரினும் புலியைப் போலப் பாயும் சாத்தன், மழையைப் போலக் கொடுக்கும் கை, துடியைப் போலச் சுருங்கிய இடை, பொன்னைப் போல விளங்கிய சுணங்கு என வினையெச்ச உருபு விரிந்தல்லது நால்வகை[361] உவமையும் விளங்காமையின் அவ்வுருபை முன்னர் எடுத்து விதந்தார் என்க. (16)

உம்மைத்தொகை

**{368} எண்ண லெடுத்தன் முகத்த னீட்டல்**
**எனுநான் களவையு ளும்மில தத்தொகை.**

எ-னின், உம்மைத்தொகை ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: எண்ணல் அளவை, எடுத்தல் அளவை, முகத்தல் அளவை, நீட்டல் அளவை என்னும் நால்வகை அளவைகளான் பொருள்களை அளக்குங்கால் தொடரும் அவ்

[361] **வினையுவமை, பயனுவமை, வடிவுவமை, உருவுவமை (நிறனுவமை) என்பன.**

அளவைப்பெயர்களுள் உம்மையாகிய உருபு தொக்கு நிற்பன[362] உம்மைத்தொகைகளாம் எ-று.

எண்ணல் அளவையான் அளத்தலே அன்றி அவ் அளவையை எடுத்தல் முதலிய கருவியின்பாற் **படுத்து அளத்தலின்** அளவை நான்கு என்றதன்றி, எண்ணல் அளவையே அளவை ஆதலின் **அது முற் கூறப்பட்டது.**

வ-று: கபிலபரணர், இராப்பகல், புலிவிற்கெண்டை, அறுபத்துமூவர், ஆயிரத்தைஞ்நூற்று ஐம்பத்தொன்றேகாலே அரைக்கால் அரைமாகாணி முந்திரி எனவும் கழஞ்சேகால், கழஞ்சரையே அரைமா அரைக்காணி முந்திரி எனவும் நாழியாழாக்கு, கலனே முக்குறுணி, நாழியாழாக்கே முச்செவிடு எனவும் சாணரை, சாணரையே அரைக்கால் எனவும் வரும். இவை விரியுழிக் கபிலனும் பரணனும், இராவும் பகலும், புலியும் வில்லும் கெண்டையும், அறுபதின்மரும் மூவரும் என விரியும். பிறவும் அன்ன.

இவற்றுள் அறுபது என்பது எண்ணல் அளவையாய்த் தொடராது எண்ணுறழ்ச்சியாய்த் தொடர்ந்தமையின் உம்மைத்தொகை அன்று; பண்புத்தொகையாம் என்க.

கபிலபரணர் என்பது எண்ணுப்பெயர் ஆகியது என்னை எனின் கபிலபரணர் இருவரும் வந்தார் எனத் தொகை பெறுதலின் என்க. இவை போல்வன பிறவும் அன்ன.

கபிலபரணர்ப் பரவினான் என வருவழிக்[363] கபிலனையும் பரணனையும் பரவினான் என வேற்றுமை உருபும் உடன் விரியுமாலோ எனின் பரவினான் என்னும் வருமொழி நோக்கி வேற்றுமைத்தொகையாகவும் கபிலபரணர் என்னும் நிலைமொழி இரண்டனையும் நோக்கி உம்மைத்தொகையாகவும் கொள்ளப்படும் என்க.

இவ்வும்மை இடையினும் இறுதியினும் ஒருங்கு தொகும் என்பார் அதிகரித்த முறையானே *(362)* இடைக்கண் தொகும் வேற்றுமைத்தொகை முதலிய நான்கிற்கும் இடையே தொகும் என்ற **பொதுவிதி** *(361)* மாற்றி, இறுதிக்கண் தொகும் எனக் கூறும் அன்மொழித்தொகைக்கும் இடையே இத்தொகையை வைத்தார் என்க. எண்ணிடைச்சொற்கள் உம்மையே அன்றிப் பிறவும் உளவேனும் *(422, 424, 428, 429)*

---

**[362]வேற்றுமைத்தொகை முதலியன பல சொற்களால் தொகுதல் சிறுபான்மை என்றும் உம்மைத்தொகை இருசொற்களாலும் பல சொற்களாலும் ஒப்பத் தொகும் என்றும் சேனாவரையர் (தொல். எச்ச. 21) கருதுவார்.**

**[363]"வரும் வழி" என்பதும் பாடம்.**

அஃது இயற்சொல் ஆதலின் உம்மைத்தொகை[364] எனப்பட்டது. (17)

## அன்மொழித்தொகை

### 369. ஐந்தொகை மொழிமேற் பிறதொக லன்மொழி.

எ-னின், அன்மொழித்தொகை ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: வேற்றுமைத்தொகை முதலிய ஐவகைத் தொகைநிலைத் தொடர்மொழி-கட்கும் புறத்து அவை அல்லாத பிற மொழிகளாகிய உருபுகள் தொகுதல் அன்மொழித்-தொகையாம் எ-று.

'மேல்' என்றமையான், "அவற்றி னுருபிடை, ஒழிய" (நூ. 361) என்ற பொதுவிதியை விலக்கினார் என்பது பெற்றாம்.

வ-று: பூங்குழல், பொற்றொடி, கவியிலக்கணம், பொற்றாலி, கிள்ளிகுடி, கீழ்-வயிற்றுக்கழலை எனவும் தாழ்குழல், கருங்குழல், துடியிடை, தகரஞாழல் எனவும் தகரஞாழன்முலை எனவும் வரும்.

இவை விரியுழிப் பூவை உடைய குழலினை உடையாள், பொன்னால் ஆகிய தொடியினை உடையாள், கவிக்கு இலக்கணம் சொன்ன நூல், பொன்னின் ஆகிய தாலியினை உடையாள், கிள்ளியது குடி இருக்கும் ஊர், கீழ்வயிற்றின்கண் எழுந்த கழலை போல்வான் எனவும் தாழ்ந்த குழலினை உடையாள், கருமையாகிய குழலினை உடையாள், துடியன்ன இடையினை உடையாள், தகரமும் ஞாழலும் விராய்ச் சமைந்த சாந்து எனவும் தகரமும் ஞாழலும் விராய்ச் சமைந்த சாந்தை அணிந்த முலையினை உடையாள் எனவும் விரியும்.

இனி இரண்டிறந்த மொழிகளில் அறுவகைத் தொகையும் விரவித் தொகுமாறு: "திகழ்செவ் வான்மதித் திருமுகப் பூங்குழல்" (வி. மே.) என வரும். இவை விரியுழித் திகழ்ந்த செம்மையாகிய வானத்தின்கண் மதி போலும் திருமுகத்தினையும் பூவை உடைய குழலினையும் உடையாள் என விரியும். (18)

## தொடர்மொழிகளில் பொருள் சிறக்கும் இடம்

### {370} முன்மொழி பின்மொழி பன்மொழி புறமொழி
### எனுநான் கிடத்துஞ் சிறக்குந் தொகைப்பொருள்.

---

[364] "எண்ணின்கண் வரும் இடைச்சொற் பலவேனும் தொக்கு நிற்கும் ஆற்றல் உடையது உம்மைப்பெயர் ஆகலான் உம்மைத்தொகை ஆயிற்று." என்னும் சேனாவரையர் (தொல். எச்ச. 21) உரையை ஈண்டு ஒப்பிடுக.

எ-னின், தொகைநிலைத் தொடர்ச்சொற்கள் ஒன்றுபடத் தொடர்ந்தனவேனும் அப்பொருளும் ஒன்றுபடத் தொடராது பிளவுபட்டு, ஓர் இடத்துச் சிறந்தும் ஓர் இடத்துச் சிறவாதும் நிற்கும் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: தொகைநிலைத் தொடர்மொழிகளில் முன்மொழிக்கண்ணேனும் பின்மொழிக்கண்ணேனும் அனைத்து மொழிக்கண்ணுமேனும் அனைத்து மொழிக்கும் புறமொழிக்கண்ணேனும் சிறந்து நிற்கும் தொகைநிலைத்தொடர்ப் பொருள் எ-று.

இவ்விடங்களில் சிறக்கும் எனவே ஏனை இடங்களில் சிறவாது நிற்கும் என்பது பெற்றாம்.

தன் இயல்பு **இறவாமல்,** 'பன்மொழி' என்றார்.

வ-று: குடம் வனைந்தான், குழிசி வனைந்தான், வேங்கைப்பூ, சண்பகப்பூ, முள்மரம், முள்ளின்மரம், விரிபூ, குவிபூ, செந்தாமைரை, வெண்டாமரை, வேற்கண், கயற்கண் என்பனவற்றுள் குடம் முதலிய முன்மொழிகள் இனம் விலக்கி நிற்றலின் அம்முன்மொழிக்கண் பொருள் சிறந்தும் வனைந்தான் முதலிய பின்மொழிக்கண் சிறப்பின்றியும் நின்றன. நிலம் உழுதான், கண்ணிமை, நீர்க்குவளை, முட்டாட்டாமரை, சுடுதீ, செஞ்ஞாயிறு, தாய்த்தலையன்பன் என்பனவற்றுள் நிலம் முதலிய முன்மொழிகள் இனமும் இனத்தை விலக்குதலும் இன்றி வாராநின்றமையின் அம்முன்மொழிக்கண் பொருட்சிறப்பின்றியும் உழுதான் முதலிய பின்மொழிக்கண் **பொருள்** சிறந்தும் நின்றன. உழுதான் என்ற துணையானே நிலத்தை என்பது தாமே போதரும் ஆதலின் பின்மொழிக்கண் பொருள் **சிறந்தனவாயின.** ஏனையவும் அன்ன. கபிலபரணர், புலிவிற்கெண்டை என்றல் தொடக்கத்து உம்மைத்தொகைகள் அனைத்து மொழிக்கண்ணும் பொருள் சிறந்தன. பூங்குழல், தாழ்குழல் என்றல் தொடக்கத்து அன்மொழித்தொகைகள் அனைத்து மொழிக்கண்ணும் பொருட்சிறப்பின்றி, அனைத்து மொழிக்கும் புறமொழிக்கண் **பொருள்** சிறந்து நின்றன.

தொகைநிலைத்தொடர்கள் உருபு தொகுதலின் சொல்லால் பிளவுபடாதும் பொருளால் பிளவுபட்டும் இவ்வாறு வரும் எனவே தொகாநிலைத்தொடர்கள் உருபு தொகாமையின் இவ்விரு திறத்தானும் பிளவுபட்டுப் புறமொழி ஒழிந்த மூன்று இடத்தும் இவ்வாறு பொருள் சிறந்து நிற்கும் என்பது தாமே போதரும் என்க. அவையும் இவ்வாறே காண்க.

அங்ஙனம் ஆயின் தொகைநிலை, தொகாநிலை இரண்டற்கும் இறுதிக்கண்

இவ்விலக்கணம் கூறாது[365] ஈண்டுக் கூறியது என்னை எனின் புறமொழிக்கண் பொருள் சிறத்தல் தொகாநிலைத்தொடர்க்கு இன்மையின் என்க.

இனி முன்மொழி பின்மொழிகளுள் பொருள் சிறந்தனவற்றிற்கு ஒருவர்க்கு ஒருவர் மலைந்து பொருள் கூறுவாரும்[366] உளர். அம்மலைவு அவர் காட்டும் உதாரணங்களுள் காண்க. (19)

## இடத்தொகை பெயர்த்தொகை வேறுபாடு

371. **வல்லொற்று வரினே யிடத்தொகை யாகும்**
**மெல்லொற்று வரினே பெயர்த்தொகை யாகும்.**

எ-னின், இடத்தின்கண் தொக்க தொகையோ பெயரின்கண் தொக்க தொகையோ என்று ஐயுறற்பாலனவற்றுள் சிலவற்றைத் துணிதற்கு ஆவதோர் குறி உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: வல்லொற்று இடையே வந்துழி இடத்தின்கண் தொக்க தொகை ஆம். மெல்லொற்று இடையே வந்துழிப்[367] பெயரின்கண் தொக்க தொகை ஆம் எ-று.

மெல்லொற்று அருகி வருதலின் பிற் கூறினார்.

வ-று: வடுகக்கண்ணன், வடுகங்கண்ணன்; கன்னடக்கொற்றன், கன்னடங்கொற்றன்; துளுவச்சாத்தன், துளுவஞ்சாத்தன் என வரும். பிறவும் அன்ன.

இவை விரியுழி வல்லொற்று வரின் வடுகநாட்டில் பிறந்த கண்ணன் எனவும் மெல்லொற்று வரின் வடுகனாகிய கண்ணன் எனவும் விரியும். வடுகன் என்பது தந்தை பெயராய் மெல்லொற்று வரின் வடுகற்கு மகனாகிய கண்ணன் என விரியும். ஏனைய-வும் அன்ன.

'வல்லொற்று வரின்' 'மெல்லொற்று வரின்' என்றமையான், "இயல்பினும் விதியினு நின்ற" (நூ. 165) உயிரீற்று மொழிமுன் வல்லின முதன்மொழி வந்து இடத்தொகையும் பெயர்த்தொகையுமாய் ஐயுற நிற்கின் இக்குறியால் துணியப்படும் என்பதூஉம் வடுக-

---

[365] தொகாநிலைத்தொடர்களைக் கூறும், 'முற்றீ ரெச்சம்' (நூ. 374) என்ற நூற்பாவை அடுத்து இந்நூற்பா இருத்தல் வேண்டும் என்பது கருத்து.

[366] ஒருவர்க்கு ஒருவர் மலைந்து பொருள் கூறுவதை அவிநய உரையாசிரியரும் இளம்பூரணரும் காட்டிய எடுத்துக்காட்டுகளோடு மயிலைநாதர் (நன். 369) விளக்குவார்.

[367] "இஃது எழுத்து முடிபேனும் தொகை அதிகாரப்பட்டமையான் ஈண்டு வைத்தார் என்க." என்று நூற்பாவின் வைப்புமுறைக்கு மயிலைநாதர் (நன். 370) விளக்கம் கூறுவார்.

நாகன், வடுகவணிகன், வடுகவரசன் என வரின் சொல்லுவான் குறிப்பான் அன்றி இவ்வாறு துணியப்படா என்பதூஉம் தாமே போதரும் என்க. (20)

## உம்மைத்தொகைக்குச் சிறப்புவிதி

372. **உயர்திணை யும்மைத் தொகைபல ரீறே.**

எ-னின், உம்மைத்தொகைக்கு ஆவதோர் விதி உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: உயர்திணை ஒருமைப்பாலின்கண் வரும் உம்மைத்தொகைகள் ரவ்வீறும் கள்ளீறும்[368] ஆகிய பலர் ஈற்றனவேயாம் எ-று.

'பல ரீறே' என்றமையான் ஒருமைப்பால் என்பது பெற்றாம்.

வ-று: கபிலபரணர், கல்லாடமாமூலர், சேரசோழபாண்டியர், தேவன்தேவிகள், பார்ப்பான்பார்ப்பனிகள், வில்லிவாளிகள் என வரும்.

இவ்வொருமைகள் இத்துணையர் என்னும் பொருள்பட நிற்றலின் பலர் ஈற்ற-வாயின.

னகரவீறு இடையே கெடுதல், "சில விகாரமா முயர்திணை" (நூ. 159) என்பதனானும் இறுதிக்கண் கெடுதல் இதனுட், 'பல ரீறே' என்பதனானும் கொள்க.

'பல ரீறே' என்னும் தேற்றத்தான் அஃறிணையொருமை உம்மைத்தொகைகளும் பொதுவொருமை உம்மைத்தொகைகளும் தத்தம் பன்மை ஈற்றனவேயாம் என்னும் நியதிய அல்ல என்றாராயிற்று. அவை வருமாறு: உண்மையின்மைகள், உண்மை-

---

[368] "மக்கள்" (261), "மெய்கள்" (126), "பதங்கள்" (133), "உருபுகள்" (242) என்று கள்ளீற்று விகுதியை உடன்பட்டுப் புணர்த்திக் கூறுவதோடு, "கள்ளொ னீற்றி னேற்பவும்" (நன். 278) என்றும், "கள்ளிறு மொழியும்" (நன். 280) என்றும் பவணந்தி முனிவர் கள்ளீற்றைப் பலர்பால் விகுதியாகவும் பலவின்பால் விகுதியாகவும் குறிப்பிடுவார். ஆயினும் விகுதி-களைக் கூறும் நூற்பாக்களில் (141, 327, 329) இவ்விகுதியை அவர் விதந்து கூற-வில்லை.

"வகுத்தனர் கொளலே" (நன். 257) என ஆசிரியர் உடன்பட்டுப் புணர்த்திக் கூறும் அல்லீற்று வியங்கோள் விகுதியைச் சங்கர நமச்சிவாயர் ஏற்றுக்கொள்வதைப் போல (338) கள்ளீற்றை ஏற்றுக்கொள்ளாமல், பகுதிப்பொருள் விகுதி (278, 280) என்றும் விகுதிமேல் விகுதி (278) என்றும் கூறுவது கருதத் தக்கது.

அவர்கள், அரசர்கள், உண்டவர்கள் என்று, "ரகார ஒற்றும் கள் என்னும் விகுதியும் கூடி வந்தாலும் முதல் நின்ற ரகார ஒற்றே பால் விளக்கும்; ஏனையது வாய்பாடு நிரம்பல் மாத்திரையே ஆவதல்லது, பால் உணர்த்தாது என்க." என்று மயிலைநாதரும் (நன். 277) குறிப்பிடுவார்.

யின்மை; நன்மைதீமைகள், நன்மைதீமை; இராப்பகல்கள், இராப்பகல்; நிலம்நீர்தீக்காற்றுஆகாயங்கள், நிலம்நீர்தீக்காற்றுஆகாயம் எனவும் தந்தைதாயர், தந்தை தாய்கள், தந்தைதாய், சாத்தன்சாத்தியர், சாத்தன்சாத்திகள், சாத்தன்சாத்தி எனவும் பன்மை ஈற்றானும் இயல்பாய ஒருமை ஈற்றானும் வந்தன.

இயல்பாகிய ஒருமை ஈற்றான் வந்தனவேல் உம்மைத்தொகையன்றிக் கபிலன் பரணன் இருவரும் வந்தார் என்றாற்போலச் செவ்வெண்ணாம் பிற எனின் பல மொழிகளையும் திரட்டி ஒரு பிண்டமாகக் கூறியவழி உம்மைத்தொகையாகவும் பிளவுபடக் கூறியவழிச் செவ்வெண்ணாகவும் கொள்ளப்படும் என்க. (21)

## தொகைநிலைத்தொடர்களில் பொருள் மயங்குமாறு

**373. தொக்குழி மயங்குந விரண்டு முதலேழ்**
**எல்லைப் பொருளின் மயங்கு மென்ப.**

எ-னின், தொகைநிலைத் தொடர்ச்சொற்கள் உருபு தொக்கு நின்றமையின் சில பொருளான் மயங்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: வேற்றுமை உருபு முதலிய உருபுகள் தொக்கு நின்றவழிப் பொருள்களான் மயங்கும் இயல்பினவாகிய தொடர்ச்சொற்கள் இரண்டு முதல் ஏழு ஈறாகிய பொருள்களான் மயங்கும் என்று சொல்லுவர் புலவர் எ-று.

'தொக்குழி' எனவே தொகாவிடத்து மயங்கா என்பதூஉம் மயங்குவன மயங்கும் எனவே மயங்கும் இயல்பு இல்லன மயங்கா என்பதூஉம், 'பொருள்' எனப் பொதுப்படக் கூறினமையின் தொகைநிலைப் பொருளானும் தொகாநிலைப் பொருளானும் தொகைநிலைத் தொடர்ச்சொல் மயங்கும் என்பதூஉம் பெற்றாம்.

வ-று: தெய்வவணக்கம், தாழ்குழல் என்பன தெய்வத்தை வணங்கும் வணக்கம், தெய்வத்துக்கு வணக்கம், தாழ்ந்த குழல், தாழ்ந்த குழலினை உடையாள் என இருபொருளான் மயங்கிய ஒரு தொடர்த் தொகைச்சொல்.

"தற்சேர்ந்தார்" (நாலடி. 93:1), "கடிப்பகை" (மணி. 7:58) என்பன தன்னைச் சேர்ந்தார், தன்னொடு சேர்ந்தார், தன்கண் சேர்ந்தார், கடிக்குப் பகை, கடியினது பகை, கடியாகிய பகை என்று மூன்று பொருளான் மயங்கிய ஒரு தொடர்த் தொகைச்சொல்.

சொல்லிலக்கணம் என்பது சொல்லினது இலக்கணம், சொற்கு இலக்கணம், சொல்லின்கண் இலக்கணம், சொல்லிலக்கணம் சொன்ன நூல் என நான்கு பொருளான் மயங்கிய ஒரு தொடர்த் தொகைச்சொல்.

பொன்மணி என்பது பொன்னின் ஆகிய மணி, பொன்னாகிய மணி, பொன்னின்கண் மணி, பொன்னொடு சேர்ந்த மணி, பொன்னும் மணியும் என ஐந்து பொருளான் மயங்கிய ஒரு தொடர்த் தொகைச்சொல்.

மரவேலி என்பது மரத்தைக் காக்கும் வேலி, மரத்துக்கு வேலி, மரத்தினது வேலி, மரத்தின் புறத்து வேலி, மரத்தான் ஆகிய வேலி, மரமாகிய வேலி என ஆறு பொருளான் மயங்கிய ஒரு தொடர்த் தொகைச்சொல்.

சொற்பொருள் என்பது சொல்லான் அறியப்படும் பொருள், சொல்லினது பொருள், சொற்குப் பொருள், சொல்லின்கண் பொருள், சொல்லும் பொருளும், சொல்லாகிய பொருள், சொல்லானது பொருள் என ஏழு பொருளான் மயங்கிய ஒரு தொடர்த் தொகைச்சொல். சொல்லானது பொருள் என்றது தொகாநிலைப் பொருளாகிய எழுவாய். சொல்லான் அறியப்படும் பொருள், சொல்லின் அறியப்படும் பொருள் என மூன்றாவதனோடு ஐந்தாவதும் விரிப்பாரும்[369] உளர். அவை இரண்டற்கும் ஏதுப்பொருள் ஒன்றே ஆதலின் அது வேற்றுப்பொருளான் மயங்கியது அன்று என்க.

"வாளைமீ னுள்ள றலைப்படல்" (திரி. 7:1) என்பது வாளைமீனை உள்ளல் தலைப்படல், வாளைமீன் உள்ளலைத் தலைப்படல் என இரண்டாவதும் எழுவாயும் ஆகிய இருபொருளான் மயங்கிய பல தொடர்த் தொகைச்சொல்.

புலிகொல்யானை, குரங்கெறிவிளங்காய் என்பன புலியைக் கொன்ற யானை, புலியானது கொன்ற யானை, புலியால் கொல்லப்பட்ட யானை, குரங்கை எறிந்த விளங்காய், குரங்கானது எறிந்த விளங்காய், குரங்கால் எறியப்பட்ட விளங்காய் என இரண்டாவதும் எழுவாயும் மூன்றாவதும் ஆகிய மூன்று பொருளான் மயங்கிய பல தொடர்த் தொகைச்சொல். பிறவும் அன்ன.

இவ்வாறு செம்பொருள் கொள்ளாது வலிந்து பொருள் கொள்ளப் புகின், 'ஏழ் எல்லை' என்னும் வரையறையின் நில்லாது, பல ஆம் ஆதலின் அது தொன்னெறி அன்று என்பார், 'என்ப' என்றார்.

இனி அலர்முல்லை என்னும் வினைத்தொகை முதலியன மயங்காதனவாம். அலரை உடைய முல்லை என மயங்குமாலோ[370] எனின் அலர் என்பது வினைத்தொகைக்கண்

[369] மயிலைநாதரும் (நன். 372) வைத்தியநாத தேசிகரும் (இல. விள. 344) இவ்வாறு விரிப்பர்.

[370] மயிலைநாதர் (நன். 372) அலரை உடைய முல்லை என மயங்கும் என்பார்.

வினையாயும் வேற்றுமைத்தொகைக்கண் பெயராயும் சொல் வேறுபட்டமையின் அது பொருளான் மயங்கியது அன்று என்க. (22)

தொகாநிலைத் தொடர்மொழி

374. **முற்றீ ரெச்ச மெழுவாய் விளிப்பொருள்**
**ஆறுரு பிடையுரி யடுக்கிவை தொகாநிலை.**

*எ-னின், நால்வகைச் சொற்கும் ஆவதோர் விதி உணர்த்துதல் நுதலிற்று.*

*இ-ள்:* முற்றும் பெயரெச்சமும் வினையெச்சமும் எழுவாயும் விளியும் ஆகிய ஐவகைப் பொருளின்கண் பெயர்வினைகள் புணரும் புணர்ச்சியும் வேற்றுமைப் பொருளின்கண் அவற்றின் உருபாகிய இரண்டாவது முதலிய ஆறும் இடையே விரிந்து நிற்பப், பெயர்வினைகள் புணரும் புணர்ச்சியும் ஏனை இடைச்சொற் புணர்ச்சியும் உரிச்சொற் புணர்ச்சியும் ஒரு சொல் அடுக்கி வரும் புணர்ச்சியும் ஆகிய ஒன்பதும் தொகாநிலைத்தொடராம் எ-று.

'தொகாநிலை' என்றமையால் காலம் கரவாத பெயரெச்சம் ஈண்டுக் கொள்க.

*வ-று:* உண்டான் சாத்தன், குழையன் கொற்றன், உண்ட சாத்தன், நல்ல சாத்தன், உண்டு வந்தான், உழுதன்றி உண்ணான், சாத்தன் வந்தான், கொற்றா கொள், குடத்தை வனைந்தான், வாளால் எறிந்தான், இரப்போர்க்கு ஈந்தான், மலையின் இழிந்தான், சாத்தனது கை, மணியின்கண் ஒளி, "அதுகொ றோழி காம நோயே" (குறுந். 5:1), "நனிபே தையே நயனில் கூற்றம்" (புறம். 227:1), பாம்பு பாம்பு என முறையே காண்க.

வேற்றுமைத்தொகையும் வினைத்தொகையும் விரிந்தவழி வேற்றுமைத் தொகாநிலையும் பெயரெச்சத் தொகாநிலையும் ஆம் என்றார். ஏனை நான்கு தொகையும் விரிந்தவழித் தொகாநிலை ஒன்பதனுள் எவையாம்[371] பிற எனின் பண்புத்தொகையும் உவமைத்தொகையும் உம்மைத்தொகையும் விரிந்தவழி இடைச்சொற் புணர்ச்சியும் அன்மொழித்தொகை விரிந்தவழி வேற்றுமைத் தொகாநிலை முதல் ஏற்பனவும் ஆம் என்க. (23)

எழுவகை வழுக்கள்

{375} **திணையே பாலிடம் பொழுது வினாவிறை**

---

[371]**"வினைத்தொகை முதல் ஐந்தும் விரிந்தவழி" என்று தொடங்கும் பகுதியில் (நன். 152) இக்கருத்தை இவர் முன்பும் விளக்கினார்.**

**மரபா மேழு மயங்கினாம் வழுவே.**

எ-னின், வழு அறிந்தல்லது அவற்றைக் களைதல் கூடாமையின் அவை இவை என உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: திணை முதலாக மரபு ஈறாக வரும் ஏழும் தத்தம் நெறி மயங்கின் வழு ஆம் எ-று.

திணை முதலிய அனைத்தும் மரபாம் ஆயினும் இங்ஙனம் விதவாது ஒழிந்தனவற்றை மரபு எனக் கொள்க என்பார் அதனை இறுதிக்கண் கூறினார்.

வ-று: அவன் வந்தது என்பது திணைவழு. அவன் வந்தாள் என்பது பால்வழு. யான் வந்தான் என்பது இடவழு. நாளை வந்தான் என்பது காலவழு. கறக்கின்ற எருமை பாலோ சினையோ? ஒரு விரல் காட்டிச் சிறிதோ பெரிதோ? **என்பன** வினாவழு. கடம்பூர்க்கு வழி யாது எனின் இடம்பூணி என் ஆவின் கன்று அன்று, கருவூர்க்கு வழி யாது எனின் பருநூல் பன்னிரு தொடி **என்பன விடைவழு.** யானை மேய்ப்பானை இடையன், ஆடு மேய்ப்பானைப் பாகன், யானைச்சாணி, எருமையிலத்தி **என்பன** மரபுவழு. இவ்வாறே இவ்வெழு வகை வழு விகற்பங்கள் எல்லாம் **உணர்ந்துகொள்க.** (24)

திணை பால்களில் வினா விடைகள் வழுவாமை

376. **ஐயந் திணைபா லவ்வப் பொதுவினும்**
**மெய்தெரி பொருண்மே லன்மையும் விளம்புப.**

எ-னின், திணையொடு வினா விடையும் பாலொடு வினா விடையும் வழுவாது காத்தல் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: திணை ஐயத்தினை அவற்றின் பொதுச்சொல்லானும் பால் ஐயத்தினை அவற்றின் பொதுச்சொல்லானும் துணிந்த பொருள்மேல் அல்லாத தன்மையினை வைத்தும் கூறுவர் புலவர் எ-று.

வ-று: குற்றியோ மகனோ எனத் திணை ஐயம் தோன்றியவழிக் குற்றியோ மகனோ அங்ஙனம் தோன்றாநின்றது, தோன்றாநின்றான் எனச் சிறப்புச்சொல்லால் கூறின் திணைவழுவும் வினாவழுவும் ஆம். அவை ஒழித்துக், குற்றியோ மகனோ அங்ஙனம் தோன்றாநின்ற உரு எனப் பொதுச்சொல்லால் கூறுக. உரு என்பது பொதுச்சொல்லாய் வழாநிலை ஆயது என்னை எனின் குற்றிக்கும் மகனுக்கும் உரு

பொதுப்பட நின்றமையின் என்க. ஆண்மகனோ பெண்மகளோ என உயர்திணைப் பால் ஐயம் தோன்றியவழி ஆண்மகனோ பெண்மகளோ அங்ஙனம் தோன்றாநின்றான், தோன்றாநின்றாள் எனச் சிறப்புச்சொல்லால் கூறின் பால்வழூஉம் வினாவழூஉம் ஆம். அவை ஒழித்து, ஆண்மகனோ பெண்மகளோ அங்ஙனம் தோன்றாநின்றார் எனப் பொதுச்சொல்லால் கூறுக. தோன்றாநின்றார் என்பது பொதுச்சொல்லாய் வழாநிலை ஆயது என்னை எனின் ஆண், பெண் இரண்டல்லது பலர்பால் என வேறு ஒன்றின்றி அவ்விரு பாற்கும் பொதுமையின் நிற்றலின் என்க. ஒன்றோ பலவோ என அஃறிணைப் பால் ஐயம் தோன்றியவழி ஒன்றோ பலவோ இச்செய் புக்கது, புக்கன எனச் சிறப்புச்சொல்லால் கூறின் பால்வழூஉம் வினாவழூஉம் ஆம். அவை ஒழித்து, ஒன்றோ பலவோ இச்செய் புக்க பெற்றம் எனப் பொதுச்சொல்லால் கூறுக.

இனி மெய் தெரிந்த பொருள் குற்றி எனின் மகன் அன்று எனவும் மகன் எனின் குற்றி அல்லன் எனவும் ஆண்மகன் எனின் பெண்மகள் அல்லன் எனவும் பெண்மகள் எனின் ஆண்மகன் அல்லள் எனவும் கூறுக. மகன் அன்று குற்றி எனக் கூறின்[372] குற்றியோ மகனோ என வினாவினார்க்கு மகன் அன்று எனின் அமையும்; குற்றியின்மேல் வைத்துக் கூறல் வேண்டா கூறலாம். மகன் அன்று என்பதனை மகனின் அன்று என ஐந்தாம் வேற்றுமைப் புணர்ச்சி என்பாரும்[373] உளர். அதுபோல் வரும் நீ அல்லன் என்பதும் அங்ஙனம் விரித்தல் கூடாமையின் அல்வழிப் புணர்ச்சியுள் எடுத்து விதந்த பதினான்கின் (152) புறத்ததாய் அடங்கும் என்க. ஏனை மூன்று காட்டும் அன்ன.

மெய் தெரியாப் பொருள்மேல் அல்லாத தன்மையினை வைத்து, மகன் அல்லன்; குற்றி எனின்[374] குற்றி என்னும் பயனிலைக்கு எழுவாய் தந்து, மகன் அல்லன்; அவ்வுருக் குற்றி எனக் கூறல் வேண்டும். அங்ஙனம் கூறவே சொல் பல்குதல் என்னும் விடைவழூவாம். அவ்வழு வாராது, 'மெய்தெரி பொருண்மே லன்மையும் விளம்புப' என்றார். (25)

திணை வழுவமைதி

377. உயர்திணை தொடர்ந்த பொருண்முத லாறும்
அதனொடு சார்த்தி னத்திணை முடிபின.

---

[372]மயிலைநாதரும் (நன். 375) வைத்தியநாத தேசிகரும் (இல. விள. 296) இவ்வாறு கூறுவர்.

[373]மயிலைநாதர் (நன். 375), இளம்பூரணர், கல்லாடர் (தொல். கிளவி. 25) முதலியோர் ஐந்தாம் வேற்றுமைப் புணர்ச்சி என்று கூறுவர்.

[374]இவ்வுரை இளம்பூரணரால் (தொல். கிளவி. 25) வேறு ஒருவர் உரையாகக் குறிப்பிடப்படுகிறது.

எ-னின், திணை வழுவமைப்பு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: உயர்திணையைத் தொடர்ந்த அஃறிணைப் பொருளாதி ஆறும் (132) உயர்திணையோடு சார்த்தி முடிப்பின் உயர்திணை முடிபினவாம் எ-று.

தொடர்தலாவது அஃறிணைப் பொருளாதி ஆறும் உயர்திணைக்குக் கிழமைப்பொருள்களாய் நிற்றல்.

சார்த்தலாவது உயர்திணை எழுவாயின் பயனிலையோடு அஃறிணை எழுவாயினையும் உடன் முடித்தல்.

'உயர்திணை தொடர்ந்த பொருண்முத லாறு' என்றமையின் பொருள் என்பது உயர்திணைப்பொருள் அன்று என்பதாம்.

வ-று: நம்பி பொன் பெரியன், நாடு பெரியன், வாணாள் பெரியன், மூக்குக் கூரியன், குடிமை நல்லன், நடை கடியன் என வரும்.

"சொற்றொறு மிற்றிதன் பெற்றி" (நூ. 461) என்பதனானே கிணறு நீர் ஊறிற்று, மாடு கோடு கூரிது என அஃறிணையோடு சார்த்தின் அஃறிணை முடிபின ஆதலும் கொள்க. 'சார்த்தின்' எனவே சார்த்தாவிடின் வழாநிலையாய்ப் பொன் பெரிது, மூக்குக் கூரிது எனத் தம் முடிபு கொள்ளும் என்க. பொன் என்னும் அஃறிணை எழுவாய் நம்பி என்னும் உயர்திணை எழுவாயினது பயனிலையாகிய பெரியன் என்னும் உயர்திணை வினைக்குறிப்பைக் கொண்டு முடிதலின் வழுவாய், தொடர்புண்மை கருதிச் சார்த்தி முடித்தலின் அமைதி ஆயிற்று என்க. பொன்னினது பெருமையை உடையன் என ஆறாம் உருபு விரித்து வழாநிலை என்றால் என்னை எனின் வேற்றுமைப் புணர்ச்சிக்கு உரிய எழுத்துச் சந்தி[375] இன்மையின் அது பொருந்தாது என்க. பிறவும் அன்ன. (26)

## திணை பால் மரபு வழுவமைதி

**{378} திணைபால் பொருள்பல விரவின சிறப்பினும்
மிகவினும் இழிபினும் ஒருமுடி பினவே.**

எ-னின், திணை, பால், மரபு வழுவமைப்பு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: திணையும் பாலும் வேறு வினைப் பல பொருள்களும் விரவி நின்றவழி

---

[375] எழுத்துச் சந்தி என்பது வேற்றுமைப் புணர்ச்சியில் வல்லினம் வரின் னகரம் றகரமாகத் திரிவதைக் (நன். 209) குறிக்கும்.

அவை பலவும் ஒரு முடிபினவாம் சிறப்பினானும் மிகுதியினானும் இழிபினானும் எ-று.

வ-று:

"அங்கண் விசும்பி னகனிலாப் பாரிக்குந்
திங்களுஞ் சான்றோரு மொப்பர்மன் - திங்கண்
மறுவாற்றுஞ் சான்றோரஃ தாற்றார் தெருமந்து
தேய்வ ரொருமா சுறின்" (நாலடி. 151)

எனவும்,

"பழியஞ்சான் வாழும் பசுவு மழிவினாற்
கொண்ட வருந்தவம் விட்டானுங் - கொண்டிருந்
தில்லஞ்சி வாழு மெருது மிவர்மூவர்
நெல்லுண்ட நெஞ்சிற்கோர் நோய்" (திரி. 79)

எனவும் இவை திணை விரவிச் சிறப்பினான் உயர்திணை முடிபு ஏற்றன. இழிந்தோரை எண்ணியபின் அதனுள் சிறப்பு என்னை எனின் பசு, விட்டான், எருது என்னும் மூன்றனுள் விட்டான் என்பது உயர்திணை ஆண் சிறப்பு; பசு, எருது என்பன உயர்திணைப்பொருளவேனும் அஃறிணையாக உருவகப்படுத்தினமையின் இங்ஙனம் அமைக்கப்பட்டன.

"தன்பான் மனையா ளயலான்றலைக் கண்டு பின்னும்
இன்பா லடிசிற் கிவர்கின்றகைப் பேடி போலா
நன்பாற் பசுவே துறந்தார்பெண்டிர் பாலர் பார்ப்பார்
என்பாரை யோம்பே னெனின்யானவ னாக வென்றான்" (சீவக. 443)

எனவும்,

"பார்ப்பார் தவரே சுமந்தார் பிணிப்பட்டார்
மூத்தா ரிளையார் பசுப்பெண்டி ரென்றிவர்கட்
காற்ற வழிவிலங்கி னாரே பிறப்பிடைப்
போற்றி யெனப்படு வார்" (ஆசாரக். 64*)

எனவும் இவை திணை விரவி மிகுதியினான் உயர்திணை முடிபு ஏற்றன.

"நசைதர வந்தோர் நசைபிறக் கொழிய
வசைபட வாழ்ந்தோர் பலர்கொல் புரையில்

நற்பனுவ னாஅல்வேதத்
தருஞ்சீர்த்திப் பெருங்கண்ணுறை
நெய்ம்மலி யாகுதி பொங்கப் பன்மாண்
வீயாச் சிறப்பின் வேள்வி முற்றி
யூப நட்ட வியன்களம் பலகொல்
யாபல கொல்லோ பெரும" (புறம். 15:15-22*)

என இவை சிறப்பினான் அஃறிணை முடிபு ஏற்றன.

"எச்சிலார் தீண்டார் பசுப்பார்ப்பார் தீத்தெய்வம்
உச்சந் தலையோ டிவையென்ப யாவருந்
திட்பத்தாற் றீண்டாப் பொருள்" (ஆசாரக். 5)

என இவை மிகுதியினான் அஃறிணை முடிபு ஏற்றன.

"வடுக ரருவாளர் வான்கரு நாடர்
சுடுகாடு பேயெருமை யென்றிவை யாறுங்
குறுகா ரறிவுடை யார்" (தொல். கிளவி. 51 இளம்.)

எனவும், "மூர்க்கனு முதலையுங் கொண்டது விடா" (நன். 377 மயிலை.) எனவும் இவை இழிபினான் அஃறிணை முடிபு ஏற்றன. பன்மை ஒரு முடிபின என்னாது, 'ஒருமுடிபின' என வாளா கூறினமையின், "தானுந் தேரும் பாகனும் வந்தென் னலனுண்டான்" (யா. வி. 28) எனத் திணை விரவிச் சிறப்பினான் ஆண்பால் முடிபு ஏற்றலும்,

"தொல்லை நால்வகைத் தோழருந் துணைமணி நெடுந்தேர்
மல்லற் றம்பியு மாமனு மதுவிரி கமழ்தார்ச்
செல்வன் றாதையுஞ் செழுநக ரொடுவள நாடும்
வல்லைத் தொக்கது வளங்கெழு கோயிலு ளொருங்கே" (சீவக. 2360*)

எனத் திணை விரவிச் சிறப்பினான் ஒருமை முடிபு ஏற்றலும் கொள்க.

"நானுமென் சிந்தையு நாயகனுக் கெவ்விடத்தோந்
தானுந்தன் றையலுந் தாழ்சடையோ னாண்டிலனேல்" (திரு. 229:1-2)

என ஆண்பாலும் பெண்பாலும் விரவிச் சிறப்பினான் ஒரு முடிபு ஏற்றன.

"சொற்றொறு மிற்றிதன் பெற்றி" (நூ. 461) என்பதனானே விரவாது எண்ணித், தோழனும் தானும் வந்தான், தோழியும் தானும் வந்தாள் என முடிதலும் கொள்க. கறியும் சோறும் உண்டான், மாலையும் முடியும் கவித்தான், குஞ்சமும் குடையும்

கவித்தான், சாந்தமும் முலையும் தழுவினான் என வேறு வினைப் பல்பொருள் விரவிச் சிறப்பினான் ஒரு முடிபு ஏற்றன. பிறவும் அன்ன.

இங்ஙனம் இறுதிக்கண் கூறிய மரபு வழுவமைதி, "வேறுவினைப் பல்பொரு டழுவிய பொதுச்சொலும்" (நூ. 389) என்னும் சூத்திரத்தோடு மாறுகொளக் கூறலாம் பிற எனின் சிறப்பு முதலிய கருதாது ஒத்த நிலைமையின் எண்ணியவழி முடியும் மரபு அங்ஙனம் கூறுதலின் அது **மாறுகொளக் கூறல்** அன்று என்க.

> "பாணன் பறையன் கடம்பன் றுடியனென்
> றந்நான் கல்லது குடியு மில்லை" (புறம். 335:7-8*)

என உயர்திணை **எண்ணி**, அஃறிணை **முடிபினவாய** வழு யாண்டு அமைக்கப்படும் எனின் குடி என்பதனைப் பாணன் முதல் நான்கோடும் கூட்டி உரைக்கப்படுதலின் வழாநிலையாம் என்க.

இனிப் பால் விரவி ஒரு முடிபு ஏற்பனவற்றிற்கு ஒருவன்கொல்லோ பலர்கொல்லோ இச்செய் புக்கார் என உதாரணம்[376] காட்டின், "ஐயந் திணைபா லவ்வப் பொதுவினும்" (நூ. 376) என்பதனான் வந்தனவன்றி ஈண்டைக்கு ஆகாமையானும் இங்ஙனம் காட்டிய இலக்கியங்கட்கு இலக்கணம் இன்மையானும் அது காட்டு அன்று என்க. (27)

பால் திணைகளுக்கு வழுவமைதி

**379. உவப்பினு முயர்வினுஞ் சிறப்பினுஞ் செறலினும்
இழிப்பினும் பாறிணை யிழுக்கினு மியல்பே.**

எ-னின், திணைபால் வழுவமைப்பு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: உவப்பு முதலிய ஐந்தினும் பாலும் திணையும் வழுவி வரினும் இயல்பாம் எ-று.

பாலை முற் கூறினார் அவ்வழுவமைதி பயின்று வருதலின். 'இழுக்கினும்' என்னும் உம்மை உவப்பு முதலியவற்றின் இழுக்கியே வரும் என்னும் நியதிய அல்ல என்னும் பொருள் தந்து நின்றது.

வ-று: தன் புதல்வனை என் அம்மை வந்தாள் என்பது உவப்பின் ஆண்பால் பெண்பால் ஆயிற்று. ஒருவனை அவர் வந்தார் என்பது உயர்வின் ஒருமைப்பால் பலர்பால் ஆயிற்று.

---

[376] மயிலைநாதர் (நன். 377) இவ்வாறு உதாரணம் காட்டுவார்.

"தாதாய் மூவே மூலகுக்குந் தாயே" (திரு. 444:1)

என்பது சிறப்பின் ஆண்பால் பெண்பால் ஆயிற்று.

"எனைத்துணைய ராயினு மென்னாந் தினைத்துணையுந்
தேரான் பிறனில் புகல்" (குறள். 144)

என்பது செறலின் பலர்பால் ஒருமைப்பால் ஆயிற்று. பெண்வழிச் செல்வானை நோக்கி இவன் பெண் என்பது இழிவின் ஆண்பால் பெண்பால் ஆயிற்று. ஓர் ஆவினை என் அம்மை வந்தாள் என்பது உவப்பின் அஃறிணை உயர்திணை ஆயிற்று.

"செந்தார்ப் பசுங்கிளியார் சென்றார்க்கோ ரின்னுரைதான்
தந்தாரேற் றந்தாரென் னின்னுயிர்" (சீவக. 1036:1-2)

என்பது உயர்வின் அஃறிணை உயர்திணை ஆயிற்று. "தம்பொரு ளென்பதம் மக்கள்" (குறள். 63) என்பது சிறப்பின் உயர்திணை அஃறிணை ஆயிற்று.

"ஏவவுஞ் செய்கலான் றான்தேறா னவ்வுயிர்
போஒ மளவுமோர் நோய்" (குறள். 848)

என்பது செறலின்[377] உயர்திணை அஃறிணை ஆயிற்று. நாம் அரன் உடைமை என்பது இழிப்பின் உயர்திணை அஃறிணை ஆயிற்று. பிறவும் அன்ன.

"சொற்றொறு மிற்றிதன் பெற்றி" (நூ. 461) என்பதனானே புதல்வனை அப்பன் வந்தான் என்றும் புதல்வியை அம்மை வந்தாள் என்றும் வரும் மரபு வழுவமைதிகளும் கொள்க. இவ்வழுவமைதி உருவக உவமைகளின் வழுவி அமைவன ஒழியக் கொள்க. (28)

பால் இடங்களுக்கு வழுவமைதி

380. **ஒருமையிற் பன்மையும் பன்மையி னொருமையும்**
**ஓரிடம் பிறவிடந் தழுவலு முளவே.**

எ-னின், முற் கூறிய உவப்பு முதலிய காரணத்தான் அன்றி அமைந்த பால் வழுவமைப்பும் அவ்வாறு அமைந்த இட வழுவமைப்பும் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: ஒருமைப்பாலின்கண் பன்மைச்சொல்லைத் தழுவிக் கூறுதலும் பன்மைப்பாலின்கண் ஒருமைச்சொல்லைத் தழுவிக் கூறுதலும் ஓர் இடத்தின்கண் பிற இடச்-

---

[377] **இது இழிப்பின்கண் உயர்திணை அஃறிணை ஆயிற்று என்று மயிலைநாதரும் (நன். 378) வைத்தியநாத தேசிகரும் (இல. விள. 299) கூறுவர்.**

சொல்லைத் தழுவிக் கூறுதலும் உளவாம் எ-று.

வ-று: வெயில் எல்லாம் மறைத்தது மேகம், இக்குளத்து நீர் எல்லாம் கொண்டுய்த்-தான் இவன் எனவும் இரண்டு கண்ணும் சிவந்தது, "இருநோக் கிவளுண்க ணுள்ளது" (குறள். 1091) எனவும் அஃறிணைக்கண் ஒருமையின் பன்மையும் பன்மையின் ஒருமையும் வந்தன.

"அகுதை தந்தை
அண்ணல் யானை யடுபோர்ச் சோழர்" (அகம். 96:12-13*)

எனவும்,

"புலைய னெறிந்த பூசற் றண்ணுமை
ஏவ லிளையர் தாய்வயிறு கரிப்ப" (த. விள. 24* உரை)

எனவும் உயர்திணை ஒருமையின் பன்மையும் பன்மையின் ஒருமையும் வந்தன. சாத்தன் தாய் இவை செய்வலோ,

"கல்விய னென்னும் வல்லாண் சிறாஅன்
ஒல்வே னல்ல னதுவா யாகுதல்" (புறம். 346:3-4*)

என்பது தன்மையின்கண் படர்க்கை வந்தது.

"திண்பொரு ளெய்த லாகுந் தெவ்வரைச் செகுக்க லாகும்
நண்பொடு பெண்டிர் மக்கள் யாவையு நண்ண லாகும்
ஒண்பொரு ளாவ தையா வுடன்பிறப் பாக்க லாகா
எம்பியை யீங்குப் பெற்றே னென்னெனக் கரிய தென்றான்" (சீவக. 1760)

என்பது முன்னிலைக்கண் படர்க்கை வந்தது. நீயோ அவனோ யார் இது செய்தார்? யானோ அவனோ யார் இது செய்தார்? நீயோ யானோ யார் இது செய்தார்? நீயோ அவனோ யானோ யார் இது செய்தார் என விரவி, ஓர் இடத்தின்கண் பிற இடம் வருதலும் கொள்க. பிறவும் அன்ன.

ஒரு பாற்பொருளை மற்றொரு பாற்சொல்லானும் ஓர் இடப்பொருளை மற்றோர் இடச்சொல்லானும் கூறுதலின் வழுவாய், அவை சான்றோர்க்கு ஒப்ப முடிந்தமையின் அமைதி ஆயின.

"ஒருவி ரொருவி ரோம்பினிர் கழிமின்" (மலைபடு. 218), யான் எம் ஊர் புகுவன் என்பன ஒருமையிற் பன்மை வந்த வழுவமைதி எனின் ஒருவிர் ஒருவிர் ஓம்பினை கழிவை எனின் வழாநிலையாக வேண்டும். அங்ஙனம் ஆகாமையின், "ஒருவ ரென்ப துயரிரு பாற்றாய்" (நூ. 289) என்னும் சூத்திரத்துள், "ஒருமொழி யொழிதன் னினங்-கொளற் குரித்தே" (நூ. 358) என்பதனான் அமைந்த வழாநிலையாம். யான் எம் ஊர் புகுவன் என்புழித் தன் கிளையினைத் தன்னொடு படுத்து எம் ஊர் என்றான் ஆதலின் வழாநிலையாம். இத்தொடக்கத்து வழாநிலைகளை இவ்வழுவமைதியாக உதாரணம் கூறுவார்[378] கூற்றை எல்லாம் உய்த்துணர்ந்து களைக. (29)

### இடம் வழுவாமல் காத்தல்

381. **தரல்வரல் கொடைசெலல் சாரும் படர்க்கை
எழுவா யிரண்டு மெஞ்சிய வேற்கும்.**

எ-னின், இடம் வழுவற்க எனக் காத்தல் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: இந்நால் வகைச் சொற்களையும் படர்க்கை சாரும்; இவற்றுள் முதற்கண் நின்ற தரல், வரல் என்னும் இருவகைச் சொற்களையும் தன்மை முன்னிலைகள் ஏற்கும் எ-று.

'தரல்வரல் கொடைசெலல்' என்பன அப்பகுதிகளை உணர்த்தி நின்றன.

வ-று: அவனுக்குத் தந்தான், அவன்பால் வந்தான், அவனுக்குக் கொடுத்தான், அவன்-பால் சென்றான் எனவும் எனக்குத் தந்தான், என்பால் வந்தான் எனவும் நினக்குத் தந்தான், நின்பால் வந்தான் எனவும் வரும். இப்பகுதியில் பிறந்த ஏனைய வினை விகற்பங்களோடும் தொழிற்பெயரோடும் இவ்வாறே ஒட்டுக.

இவை படர்க்கை, இவை தன்மை, முன்னிலை என்னாது, 'சாரும்' 'ஏற்கும்' என்றமையான் இடவிகுதிகள்போல் இவை இடப்பகுதிகள்[379] ஆகாது, அவ்விடங்-கட்கு இயைந்த மரபினவாம் என்பதூஉம் தரல், வரல் என்னும் இரண்டனையும் தன்மை முன்னிலைக்கும் கூட்டினமையின் படர்க்கைக்கே சிறந்தன கொடை, செலல் என்னும் இரண்டும் என்பதூஉம் ஏனைத் தரலும் வரலும் அத்துணைச் சிறப்பின அல்ல என்பதூஉம் இந்நெறி மயங்கி எனக்குக் கொடுத்தான், என்பால் சென்றான், நினக்குக் கொடுத்தான், நின்பால் சென்றான் என வரின் முன்னர்க் கூறிய இட வழுவமைதியின்பாற் படும் என்பதூஉம் பெற்றாம். படர்க்கைக்குப் பின்னைய

[378] மயிலைநாதர் (நன். 379) இவ்வாறு உதாரணம் காட்டுவார்.

[379] சேனாவரையரும் நச்சினார்க்கினியரும் (தொல். கிளவி. 28) வைத்தியநாத தேசிகரும் (இல. விள. 301) இவற்றை இடப்பகுதிகள் என்பர்.

இரண்டும் சிறந்தும் முன்னைய இரண்டும் அத்துணைச் சிறப்பின்றியும் வருதல் காட்டிய உதாரணங்களுள் காண்க. (30)

காலம்

382. **இறப்பெதிர்வு நிகழ்வெனக் கால மூன்றே.**

எ-னின், முன்னர் வழு உணர்த்தும் சூத்திரத்துள் (375) முதற்கண் நின்ற திணை பால் இடங்களின் பெயரும் முறையும் தொகையும் பெயரியலுள் (261, 262, 263, 266) போந்தமையின் அவற்றை ஒழித்து, இறுதிக்கண் நின்ற காலம் முதல் நான்கினையும் உணர்த்தினல்லது அவற்றின் வழுவும் வழாநிலையும் வழுவமைதியும் தோன்றாமையின் அவற்றுள் காலத்தின் பெயரும் முறையும் தொகையும் உணர்த்துதல் நுதலிற்று.

பிறிதோர் இலக்கணம் கூறிய முகத்தான் முன்னர் (142, 143, 144, 145, 340, 342, 343) விளங்கிக் கிடந்த கால விகற்பங்களை ஈண்டுத் தொகுத்து உணர்த்தினமையின் இது முடிந்தது முடித்தல் என்னும் உத்திக்கு இனம்.

இ-ள்: முன்னர்க் கூறிய (375) காலம் இறந்தகாலமும் எதிர்காலமும் நிகழ்காலமும் என மூன்றாம் எ-று.

யாது ஒரு பொருளும் தோன்றும் அளவின் தோன்றி, வளரும் அளவின் வளர்ந்து, முதிரும் அளவின் முதிர்ந்து, அழியும் அளவின் அழியுமன்றி உயிர்கள் வேண்டியவாறு ஆகாமையின் அவற்றை அவ்வளவின் அவ்வாறு இயற்றுவது காலம் எனவும் அதனால் இயலும் பொருள்களின் தொழில் இறந்ததும் எதிர்வதும் நிகழ்வதும் ஆதலின் அவ்வாறு இயற்றும் காலமும் மூன்று கூற்றதாம் எனவும் உய்த்துணர்தலின் இங்ஙனம் உணராது, காலம் இன்று எனவும் நிகழ்காலம் ஒன்றுமே எனவும் இறந்தகாலம், எதிர்காலம் இரண்டுமே எனவும் கூறுவார் கூற்றை[380] விலக்கிக், 'கால மூன்றே' என்றார். இதன் திறம் இன்னும் விரித்து உரைப்பின் பெருகும்.

நிகழ்காலம்போல வெள்ளிடைப் பொருளன்றி இறந்தகாலம், எதிர்காலம் இரண்டும் மறைபொருளாய் நிற்றலின் இறப்புநிகழ்வு என்னாது, 'இறப்பெதிர்வு' என்றார். (31)

கால வழுவமைதி

383. **முக்கா லத்தினு மொத்தியல் பொருளைச்**
**செப்புவர் நிகழுங் காலத் தானே.**

எ-னின், கால வழுவமைப்பு உணர்த்துதல் நுதலிற்று.

---

[380] இக்கருத்துக்களை மயிலைநாதர் (நன். 381) விரிவாக எடுத்துக்காட்டுவார்.

இ-ள்: தம் தொழில் இடையறாது, முக்காலத்தினும் ஒரு தன்மையவாய் இயலும் பொருள்களை நிகழ்காலத்தால் கூறுவர் புலவர் எ-று.

வ-று: அவனியைத் தாங்கி அரசர்[381] இருக்கிறார், நினக்குத் துணை யான் இருக்கிறேன், எனக்குத் துணை நீ இருக்கிறாய், தெய்வம் இருக்கிறது, நிலம் கிடக்கிறது, மலை நிற்கிறது, யாறு ஒழுகுகிறது என வரும்.

இதற்குச் செய்யும் என்னும் முற்றை உதாரணம் காட்டுவாரும்[382] உளர். அது பல்லோர்படர்க்கை, முன்னிலை, தன்மையாக வரும் முக்காலத்தினும் ஒத்து இயல் பொருட்கு இயையாமையானும் அவ்வழக்கு இன்மையானும் அது பொருந்தாது என்க. யாறு ஒழுகும், தீச் சுடும் என வழங்குமாலோ எனின் அது ஒழுகும் தன்மையை உடையது, சுடும் தன்மையை உடையது என்னும் பொருட்டாய் நிற்றலின், "இயற்கைப் பொருளை யிற்றெனக் கிளத்தல்" (நூ. 404) என்னும் சூத்திரத்தின்பாற் படும் என்க. யாறு ஒழுகுவது, தீச் சுடுவது என்பதும் அது. (32)

**{384} விரைவினு மிகவினுந் தெளிவினு மியல்பினும்**
**பிறழவும் பெறூஉமுக் காலமு மேற்புழி.**

எ-னின், இதுவும் அது.

இ-ள்: விரைவு, மிகுதி, தெளிவு என்னும் மூன்று காரணத்தினானும் இக்காரண-மின்றியும் **முக்காலங்களையும் ஒன்றை** ஒன்றாகக் கூறப்படும் ஏற்குமிடத்து எ-று.

காரணமின்றி என்பார், 'இயல்பினும்' என்றும் பிறழ்தல் ஒருதலை அன்று என்பார், 'பிறழவும்' என்றும் விரைவு முதலிய நான்கினும் தனித்தனி முக்காலங்களும் முறையே பிறழா என்பார், 'ஏற்புழி' என்றும் கூறினார்.

வ-று: சோறு வேவாநிற்ப, அஃது உண்டு போதற்பொருட்டாக இருந்தோன் ஒருவனைப் புறத்து நின்றான் ஒருவன் இருவரும் போக வேண்டும் குறையுடைமை-யின் இன்னும் உண்டிலையோ என்றால் உண்டேன் உண்டேன் என்னும்; உண்ணா-நின்றானும் உண்டேன் உண்டேன் என்னும். இவை விரைவின் எதிர்காலமும் நிகழ்-காலமும் இறந்தகாலம் ஆயின.

---

[381] "அவனியைத் தாங்கி அரசர் இருக்கின்றார், நினக்குத் துணை யான் இருக்கின்றேன், எனக்குத் துணை நீ இருக்கின்றாய்" என்பதும் பாடம்.

[382] இளம்பூரணர் (தொல். வினை. 41) முதலிய தொல்காப்பிய உரையாசிரியர்களும் மயிலைநாதரும் (நன். 382) வைத்தியநாத தேசிகரும் (இல. விள. 303) இவ்வாறு உதாரணம் காட்டுவர்.

அக்காட்டில் புகின் கூறை கோட்பட்டான், கள்வான் நினையின் கை அறுப்புண்டான்: இது மிகுதியின் எதிர்காலம் இறந்தகாலம் ஆயிற்று. கூறை கோட்படுதலும் கை அறுப்புண்ணுதலும் தவறினும் தவறும் ஆதலின் இது மிகுதி ஆயிற்று.

அறம் செயின் சுவர்க்கம் புக்கான், எறும்பு முட்டை கொண்டு திட்டை ஏறின் மழை பெய்தது: இது தெளிவின் எதிர்காலம் இறந்தகாலம் ஆயிற்று. உரை அளவையானும்[383] காட்சி அளவையானும் இவற்றிற்கு இவை காரணமாகத் தெளிந்தமையின் இது தெளிவு ஆயிற்று.

யாம் பண்டு விளையாடுவது இக்கா, யாம் பண்டு விளையாடுகிறது இக்கா: இது காரணமின்றி இயல்பினான் இறந்தகாலம் எதிர்காலமும் நிகழ்காலமும் ஆயிற்று. பிறவும் அன்ன.

இவ்வுதாரணங்களுள் சிலவற்றை மாறிக் காட்டுவாரும்[384] உளர். அவை பொருந்தாமை அப்பொருள்களான் உணர்க. உழுது வருக, உண்டு வருக என்புழி உழுது, உண்டு என்பனவற்றையும் இயல்பின் எதிர்காலம் இறந்தகாலமாய் மயங்கின என்பாரும்[385] உளர். வருதலை நோக்குங்கால் அவை இறந்தகாலமே ஆதலின் வழாநிலையாம் என்க. (33)

### அறுவகை வினா

385. **அறிவறி யாமை யையுறல் கொளல்கொடை**
**ஏவ றரும்வினா வாறு மிழுக்கார்.**

எ-னின், வினாவின் பெயரும் முறையும் தொகையும் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: அறிவு முதலியன தருதலான் வரும் வினா ஆறனையும் களையாது கொள்வர் புலவர் எ-று.

வ-று: ஆசிரியன் இச்சூத்திரத்திற்குப் பொருள் யாது என்பது அறிவினா. மாணாக்கன் அவ்வாறு கூறுவது அறியா வினா. குற்றியோ மகனோ என்பது ஐயவினா. பொன்

[383] காட்சி, கருதல், உரை, இன்மை, பொருள், ஒப்பு என்னும் அறுவகை அளவைகளுள் (சிவ. சுப. அள. 1) உரை அளவை ஒன்று. இது வடமொழியில் ஆகமப் பிரமாணம் என்றும் சத்தப் பிரமாணம் என்றும் சொல்லப்படும். காட்சி அளவை முன்பு (நன். 261) விளக்கப்பட்டது.

[384] இளம்பூரணர், சேனாவரையர், நச்சினார்க்கினியர், கல்லாடர் (தொல். வினை. 43) மயிலைநாதர் (நன். 383) வைத்தியநாத தேசிகர் (இல. விள. 304) முதலியோர் இந்த உதாரணங்களுள் சிலவற்றை மாற்றிக் காட்டுவர்.

[385] இவை இயல்பான் மயங்கின என்று மயிலைநாதர் (நன். 383) கூறுவார்.

உளவோ மணி உளவோ என்பது கொளல்வினா. சாத்தற்கு ஆடை இல்லையோ என்பது கொடைவினா. சாத்தா உண்டாயோ என்பது ஏவல்வினா.

இவற்றுள் அறிவும் அறியாமையும் இவ்விரண்டும் விரவிய ஐயமும் அன்றி வினாவைத் தருவது ஒன்று இன்மையின் அவற்றை முற் கூறி, ஏனையவும் அவற்றின்கண் அடங்குமேனும் கொளல், கொடை, ஏவல் என்னும் பொருள் விசேடத்தான் வேறு விதந்து பிற் கூறி, மூன்று ஆகற்பாலனவற்றை ஆறாகக் கூறுதல் தொன்றுதொடு நெறி என்பார், 'ஆறு மிழுக்கார்' என்றும் கூறினார்.

"அறியான் வினாவ லறிவொப்புக் காண்டல்
ஐய மறுத்த லவனறிவு தான்கோடல்
மெய்யவற்குக் காட்டலோ டைவகை வினாவே" (நன். 384* மயிலை.)

என்னும் ஒருசார் ஆசிரியர் கூற்றினுள்ளும் பின்னைய இரண்டும் முன்னைய மூன்றனுள் அடங்கும் என்பது தோன்ற, அவற்றை முற் கூறுதல் காண்க. (34)

எண்வகை விடை

386. **சுட்டு மறைநே ரேவல் வினாதல்**
**உற்ற துரைத்த லுறுவது கூறல்**
**இனமொழி யெனுமெண் ணிறையு ளிறுதி**
**நிலவிய வைந்துமப் பொருண்மையி னேர்ப.**

எ-னின், இறையின் பெயரும் முறையும் தொகையும் வழுவமைதியும் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: இவ் இறை எட்டனுள் முன்னைய மூன்றும் செவ்வன் இறையாம்; பின்னைய ஐந்தும் இறைப்பொருள் பயத்தலின் இறையாகத் தழீஇக்கொள்வர் புலவர் எ-று.

எனவே இறையாவது செவ்வன் இறையும் இறை பயப்பதும் என இருகூற்றதாம் என்க.

வ-று: வஞ்சிக்கு வழி யாது என்றவழி இது என்றும், "மாவீழ் நொச்சி" (நன். 389 மயிலை.) என்பதற்குப் பொருள் யாது என்றவழி வண்டு வீழ்ந்து தேன் உண்ணும் நொச்சிப்பூ என்றும் கருதிக் கூறும் தொடக்கத்தன எல்லாம் சுட்டு. சாத்தா இது செய்வாயோ என்றவழிச் செய்யேன் என்பது மறை; செய்வேன் என்பது நேர்; நீ செய் என்பது ஏவல்; செய்வேனோ என்பது வினாதல். இவ்வோகார இடைச்சொற்கு எதிர்மறை முதலிய பொருள் (423) விலக்கி, ஆற்றலான் வினாப்பொருளே கொள்க. உடம்பு நொந்தது, நோவாநின்றது என்பது உற்றது உரைத்தல். நோவாநின்றது என்பது

நிகழ்காலம் ஆயினும் நோவு எழுந்த காலம் கருதி உற்றது உரைத்தல் ஆயிற்று. உடம்பு நோம் என்பது உறுவது கூறல். மற்றையது செய்வேன் என்பது இனமொழி.

இறை பயப்பனவற்றுள் வினா எதிர் வினாதல் ஒன்றும் நேர்தற்பொருளையும் ஏனைய நான்கும் மறைப்பொருளையும் பயத்தல் காண்க.

இறை பயப்பனவற்றை, 'நிலவிய' என விசேடித்தமையின் நிலவாதனவும் சில உள எனப் பொருள் உரைத்துச் செய்வேனோ என எதிர்மறை ஓகாரமாயும் யானோ செய்வேன் எனச் சிறப்பு ஓகாரமாயும் நின்று, செய்யேன் என்னும் இறைப்பொருள் பயந்து வருதலும் பிறவும் கங்கை ஆடிப் போந்தேன்; ஒரு கூறை ஈக என வினா இல்வழி இறை நிகழ்தலும் கொள்க. (35)

வினா விடைகளில் சினைமுதல் வழுவாமை

{387} **வினாவினுஞ் செப்பினும் விரவா சினைமுதல்.**

எ-னின், வினாவும் செப்பும் முதல்சினை ஒற்றுமை கருதி வழுவக் கூறின் **அமையா** எனக் காத்தல் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: வினாவுதற்கண்ணும் செப்புதற்கண்ணும் சினை முதல்கள் ஒற்றுமை கருதி, மயங்கக் **கூறப்படா** எ-று.

வ-று: கண் பிறழ்ந்ததோ கயல் பிறழ்ந்ததோ எனவும் சாத்தன் நல்லனோ கொற்றன் நல்லனோ **எனவும் இவ்வாறு** வினாவினார்க்குக் கண் பிறழ்ந்தது, கயல் பிறழ்ந்தது, சாத்தன் நல்லன், கொற்றன் நல்லன் **எனவும்** வரும். பிறவும் அன்ன.

எனவே கண் பிறழ்ந்ததோ எனச் சினையை வினவுவான் அதனை ஒழித்து அதனை உடையாளைக் கருதி, இவள் பிறழ்ந்தாளோ கயல் பிறழ்ந்ததோ என வினவுதலும் இவள் பிறழ்ந்தாள் எனச் செப்புதலும் இவ்வாறு முதலை வினவுவானும் செப்புவானும் அதனை ஒழித்துச் சினையை வினவுதலும் செப்புதலும் வழுவாம் என்பதாயிற்று.

இங்ஙனம் ஆயின் குயிலோ கிளவி என வினவுவான் குயிலிசையைக் குயிலோ என்று வினவுதல் வழுவாம் பிற எனின் அவ்வாறு கூறுவான் குயிலைக் கருதாது, அதன் இசையையே கருதிக் கூறுதலானும் குயிலிசையோ கிளவி என இசை என்னும் சொல் எஞ்சி நிற்றலானும் இத்தொடக்கத்தன வழு ஆகா என்க. (36)

மரபு

388. **எப்பொரு ளெச்சொலி னெவ்வா றுயர்ந்தோர்
செப்பின ரப்படிச் செப்புதன் மரபே.**

எ-னின், மரபு ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: யாது ஒரு பொருளை யாது ஒரு சொல்லான் யாது ஒரு நெறியான் அறிவுடையோர் சொன்னார்களோ அப்பொருளை அச்சொல்லான் அந்நெறியான் சொல்லுதல் மரபாம் எ-று.

'எவ்வாறு' என்பது ஒரு பொருளைப் பல சொல்லானும் பல பொருளை ஒரு சொல்லானும் கூறுதல் முதலியவற்றை என்க. அவற்றுள் சில வருமாறு: குதிரைக்குட்டி, யானைக்குட்டி எனவும் யானைக்கன்று, பசுவின் கன்று, மான்கன்று எனவும் வரும். பிறவும் அன்ன.

இவ்வாறன்றிப் பசுவின் குட்டி, குதிரைக்கன்று எனக் கூறின் வழுவாம் ஆதலின் சான்றோர் வழக்கினுள்ளும் செய்யுளுள்ளும் பயின்று வரும் மரபு[386] அறிந்துகொள்க. (37)

## பொதுவினைகள் மரபு வழுவாமை

**389. வேறுவினைப் பல்பொரு டழுவிய பொதுச்சொலும்
வேறவற் றெண்ணுமோர் பொதுவினை வேண்டும்.**

எ-னின், மரபு வழுவற்க என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: வெவ்வேறு வினைக்கு உரிய பல பொருள்களையும் ஒருங்கு தழுவி நிற்கும் ஓர் பொதுச்சொல்லும் அவற்றின் சிறப்புச்சொற்களாய் எண்ணி நிற்கும் பல சொல்லும் ஒன்றற்கு உரிய சிறப்புவினை வேண்டாது எல்லாவற்றிற்கும் உரியதோர் பொதுவினை வேண்டுவனவாம் எ-று.

வ-று: அடிசில் என்பது உண்பன, தின்பன, நக்குவன, பருகுவனவற்றிற்கு எல்லாம் பொதுச்சொல் ஆகலான் அதனை அயின்றார், மிசைந்தார் என்க. அணி என்பது கவிப்பன, கட்டுவன, இடுவன, தொடுவனவற்றிற்கு எல்லாம் பொதுச்சொல் ஆதலின் அதனை அணிந்தார், தாங்கினார் என்க. இயம் என்பது கொட்டுவன, ஊதுவனவற்றிற்கு எல்லாம் பொதுச்சொல் ஆதலின் அதனை இயம்பினார், படுத்தார் என்க. படை என்பது எய்வன, எறிவன, வெட்டுவன, குத்துவனவற்றிற்கு எல்லாம் பொதுச்சொல் ஆதலின் அதனை வழங்கினார், தொட்டார் என்க.

---

[386] **இந்நூற்பாவுக்கு மயிலைநாதர் (நன். 387) உதாரணம் காட்டுவதோடு, "ஐம்பெருங் காப்பியம், எண்பெருந் தொகை, பத்துப்பாட்டு, பதினெண் கீழ்க்கணக்கு என்னும் இவ்விலக்கியங்களுள்ளும் விரிந்த உரிச்சொல் பனுவல்களுள்ளும் உரைத்தவாறு" பெயர்களை மரபு அறிந்து வழங்குக என்று கூறுவார்.**

இனி எண்ணியவழியும் சில நாள் சோறும் சில நாள் இடியும் சில நாள் பாலும் சில நாள் நீரும் சில நாள் சருகும் அயின்றார், மிசைந்தார் என்க. கறியும் சோறும் உண்டான் என எண்ணிக், கறியோடு விராய சோற்றை உண்டான் என்னும் பொருட்டாய்ச் சிறப்பின் ஒரு முடிபு ஏற்றனவற்றிற்கும் இவற்றிற்கும் வேற்றுமை உணர்க. குழையும் நெடுநாணும் அணிந்தார், பறையும் குழலும் இயம்பினார், வாளும் வேலும் வழங்கினார் என்க. பிறவும் அன்ன. (38)

சிறப்புவினைகள் மரபு வழுவாமை

390. **வினைசார் பினமிட மேவி விளங்காப்**
**பலபொரு ளொருசொற் பணிப்பர்சிறப் பெடுத்தே.**

எ-னின், இதுவும் அது.

இ-ள்: குறித்த பொருளை விளக்கும் வினையினையும் சார்பும் இனமும் இடமும் முதலிய பெயரினையும் பல பொருள் ஒரு சொல் பொருந்தி விளங்கிக் கிடந்ததேல் அதனை வாளா கூறி, அவ்வினைபெயர்களைப் பொருந்தாமையால் விளங்காது கிடந்ததனைச் சிறப்போடு கூட்டிக் கூறுவர் புலவர் எ-று.

பாக்குவெற்றிலை தின்றான் என்றால் சுண்ணாம்பும் கர்ப்பூரமும் உடன் தின்றான் என்பது தழீஇக்கோடல்போல் சார்பு, இனம், இடம் எனச் சிறந்தன எடுத்து ஓதி, ஏனைய பெயர்களையும் தழீஇக்கோடலின் முதலிய என்றாம். அன்றி, "இனைத்தென் றறிபொருள்" (நூ. 399) எனக் கூறுதலும் ஒன்று.

'மேவி' என்னும் வினையெச்சம், 'விளங்கா' என்பதன்கண் முதனிலையோடு முடிந்தது.

வ-று: மா என்பது மாமரத்திற்கும் வண்டிற்கும் ஒருசார் விலங்கிற்கும் திருவிற்கும் பொதுவான பல பொருள் ஒரு சொல். இப்பொருள்களுள் மாப் பூத்தது, மாக் காய்த்தது என்ற துணையானே மரம் என்பது வினையான் விளங்கிற்று. "மாவீழ் நொச்சி மணிக்குர லூழ்த்தது" (நன். 389 மயிலை.) என்ற துணையானே வண்டு என்பது சார்பான் விளங்கிற்று. சேனை, யானை, தேர், மாச் சதுரங்கம் என்ற துணையானே குதிரை என்பது இனத்தான் விளங்கிற்று. "சொற்றொறு மிற்றிதன் பெற்றி" (நூ. 461) என்பதனானே இதனுள் சேனை என்பது யானை முதலிய மூன்று உறுப்பினையும் ஒழித்துக் காலாள்மேல் சேறலும் இவ்விதியின்பாற் படுத்துக. "மாமறுத்த மலர்மார்பு" (புறம். 7:5) என்ற துணையானே திரு என்பது இடத்தான் விளங்கிற்று. இவை வாளா கூறப்பட்டன. இனி மா ஏறினான், மா யாது என்றவழிக் குறித்த பொருள் விளங்காமையின் விளங்குதற்பொருட்டுப் பாய்மா ஏறினான், மாமரத்தின்கண்

ஏறினான், பாய்மா யாது, மாமரம் யாது எனச் சிறப்பொடு கூட்டிக் கூறுக. பிறவும் அன்ன. (39)

### இசையறுத்துக் கூறப்படும் தொடர்மொழிகள்

391. **எழுத்திய றிரியாப் பொருடிரி புணர்மொழி**
**இசைத்திரி பாற்றெளி வெய்து மென்ப.**

எ-னின், இதுவும் அது.

இ-ள்: எழுத்தினது இயல்பு வேறுபடாது பொருள் வேறுபட்டுச், சொல்லும் பொருளும் ஐயுற நிற்கும் தொடர்மொழிகள் அங்ஙனம் குறித்துக் கூறும் சொற்களின் இறுதியும் முதலும் தோன்ற, இசையறுத்துக் கூறும் வேறுபாட்டால் துணியப்படும் என்று சொல்லுவர் புலவர் எ-று.

எனவே அவ்வாறு இசையறுத்துக் கூறுதல் மரபு என்பதாயிற்று.

வ-று: செம்பொன்பதின்றொடி, நாகன்றேவன்போத்து, தாமரைக்கணியார், குன்றேறாமா, குறும்பரம்பு, ஆற்றுக்கரை, செம்பருத்தி என்றல் தொடக்கத்தனவற்றை அவ்வாறு இசையறுத்து உச்சரித்துக்[387] காண்க. (40)

### மரபு வழாநிலையும் வழுவமைதியும்

392. **ஒருபொருண் மேற்பல பெயர்வரி னிறுதி**
**ஒருவினை கொடுப்ப தனியு மொரோவழி.**

எ-னின், மரபு வழுவற்க எனக் காத்தலும் அதன் வழுவமைப்பும் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: ஒரு பொருள்மேல் பல பெயர் வரும் ஆயின் பொருள் ஒன்றே என்பது தோன்ற, இறுதிக்கண் ஒரு வினை கொடுத்துக் கூறுவர்; ஒரு பொருள் ஆதல் தவறாத-வழிப் பெயர்தோறும் கொடுத்துக் கூறுவர் புலவர் எ-று.

ஒரு பொருட்கு ஒரு முடிபு என்பார், 'ஒருவினை கொடுப்ப' என்றாரன்றி ஒரு பெயர் கொடுத்தலை ஒழித்தார் அல்லர் என்க.

வ-று: ஆசிரியன் பேரூர்கிழான் சாத்தன் வந்தான் எனவும் பாண்டியன் பல்யாக-சாலை முதுகுடுமிப் பெருவழுதி இவன் எனவும்,

---

[387] **செம்பு ஒன்பதின் தொடி, செம்பொன் பதின் தொடி; நாகன் தேவன் போத்து, நாகு அன்றே வன்போத்து; தாமரைக் கணியார், தாமரைக்கு அணி யார்; குன்று ஏறா மா, குன்று ஏறு ஆமா; குறும் பரம்பு, குறும்பர் அம்பு; ஆற்றுக் கரை, ஆற்றுக்கு அரை; செம் பருத்தி, செம்பு அருத்தி என வேறுபடுத்திச் சொல்லி அறிக.**

"குயிலைச் சிலம்படிக் கொம்பினைத் தில்லையெங் கூத்தப்பிரான்
கயிலைச் சிலம்பிற்பைம் பூம்புனங் காக்குங் கருங்கட்செவ்வாய்
மயிலைச் சிலம்பகண் டியான்போய் வருவன்வண் பூங்கொடிகள்
பயிலச் சிலம்பெதிர் கூய்ப்பண்ணை நண்ணும் பளிக்கறைக்கே" (திருக். 30)

எனவும்,

"பொருப்பர்க் கியாமொன்று மாட்டேம் புகலப் புகலெமக்காம்
விருப்பர்க் கியாவர்க்கு மேலர்க்கு மேல்வரு மூரெரித்த
நெருப்பர்க்கு நீடம் பலவருக் கன்பர் குலநிலத்துக்
கருப்பற்று விட்டெனக் கொய்தற்ற தின்றிக் கடிப்புனமே" (திருக். 143*)

எனவும் இவை இறுதிக்கண் ஒரு வினையும் பெயரும் கொடுக்கப்பட்டன. இனிப் பெயர்தோறும் கொடுக்குமாறு:

"மின்றோய் வரைகொன்ற வேலோன் புகுதுக
இன்றேன் கமழ்தா ரியக்கன் புகுதுக
வென்றோன் புகுதுக வேலோன் புகுதுக
என்றே நகர மெதிர்கொண் டதுவே" (சீவக. 2122*)

என வரும். பிறவும் அன்ன. (41)

சிறப்புப்பெயரோடு இயற்பெயர் வருமாறு

{393} **திணைநிலஞ் சாதி குடியே யுடைமை**
**குணந்தொழில் கல்வி சிறப்பாம் பெயரோ**
**டியற்பெய ரேற்றிடிற் பின்வரல் சிறப்பே.**

எ-னின், இதுவும் அது.

இ-ள்: திணை முதலாகக் கல்வி ஈறாக விதந்தன முதலியபற்றி வரும் சிறப்புப்-பெயருடனே இயற்பெயரை ஒரு பொருள் ஒருங்கு ஏற்கும் ஆயின் அவ்வியற்பெயர் பின் வருதல் சிறந்த மரபாம் எ-று.

ஏற்றற்கு வினைமுதல் ஒரு பொருள் என்பது மேலைச் சூத்திரத்தால் பெற்றாம்.

'சிறப்பே' என்றமையான் முன் வரும் என்பதூஉம் அது வழூவமைதி என்பதூஉம் பெற்றாம்.

வ-று: குன்றவன் கொற்றன், அருவாளன் அழகன், பார்ப்பான் பாராயணன், ஊர்கிழான் ஓணன், பொன்னன் பொறையன், கரியன் கம்பன், நாடகி நம்பி, ஆசிரியன்

அமிழ்தன் என வரும். இவை இயற்பெயர் பின் வந்தன. இனிக் கொற்றன் குன்றவன், அழகன் அருவாளன் என முறையே இயற்பெயர் முன்னும் வருதல் காண்க. இன்னும் இயற்பெயர் முன் வருங்கால் வெண்கொற்றப் படைத்தலைவன், வெள்ளேறக் காவிதி என இறுதி விகாரமாய் வருதலும் காண்க. பிறவும் அன்ன. (42)

படர்க்கைப்பெயரோடு சுட்டுப்பெயர் வருமாறு

394. **படர்க்கைமுப் பெயரோ டணையிற் சுட்டுப்**
**பெயர்பின் வரும்வினை யெனிற்பெயர்க் கெங்கும்**
**மருவும் வழக்கிடைச் செய்யுட் கேற்புழி.**

எ-னின், இதுவும் அது.

இ-ள்: படர்க்கை இடத்தவாகிய உயர்திணைப்பெயர், அஃறிணைப்பெயர், விரவுப்-பெயர் என்னும் மூவகைப் பெயரோடு சுட்டுப்பெயர் சாரின் அச்சுட்டுப்பெயர் அம் மூவகைப் பெயர்க்கும் பின் வரும் அவ்வழி வினை நிகழ்வழி எனின்; வினை நிகழ்ச்சி இன்றேல் அப்பெயர்க்குப் பின்னும் முன்னும் வரும். இம்மரபு வழக்கின் கண்ணவாம். செய்யுட்கண்ணே எனின் நியதியின்றி வேண்டியவாறே வரப்பெறும் எ-று.

வ-று: நம்பி வந்தான் அவற்குச் சோறு இடுக, எருது வந்தது அதற்குப் புல் இடுக, சாத்தன் தெய்வம் அவற்குப் பலி இடுக, சாத்தன் வந்தது அதற்குப் புல் இடுக என வினை நிகழ்வழிச் சுட்டுப்பெயர் பின் வந்தன. வந்தான் நம்பி அவற்குச் சோறு இடுக எனவும் முறையே ஒட்டுக.

இவற்றுள் சாத்தன் தெய்வம் என்புழி வினையின்றிப் பெயர் வந்ததாலோ எனின் படர்க்கை முப்பெயரும் தனித்து நில்லாது, பெயர்வினைகளைக் கொண்டு முடிந்தும் பெயர்வினைகட்குப் பயனிலையாயும் புடைபெயரும் புடைபெயர்ச்சியை வினை என்றும் அப்புடைபெயர்ச்சி உள்வழிச் சுட்டுப்பெயர் வரின் பின் வரும் என்றும் கூறினாரன்றி இவ்வினையை வினை என்றார் அல்லர் என்க.

மைந்தன் பிறந்தான் அதனால் தந்தை உவக்கும் என்புழி அது என்னும் சுட்டு மைந்தனை அணைந்தது இல்லையாலோ எனின் அவன் தற்கிழமையாகிய பிறத்தலை அணைதலின் அவனை அணைந்ததேயாம் என்க. அன்றிச், "சொற்றொறு மிற்றிதன் பெற்றி" (நூ. 461) என்னும் சூத்திரத்தான் அமைத்தலும் ஒன்று. நம்பி அவன், அவன் நம்பி எனப் பெயர்க்குப் பின்னும் முன்னும் சுட்டுப்பெயர் வந்தன. ஏனைப் பெயர்-களோடும் ஒட்டுக.

பெயர்க்குப் பின்னும் முன்னும் சுட்டுப்பெயர் வருதல் மரபாம் அன்றே? இதனை வழுவற்க எனக் காத்தல் எவ்வழு வாராமை கருதி எனின், 'சுட்டுப் பெயர்பின் வரும்-வினை யெனின்' எனக் கூறினமையின் வினை இல்வழிச் சுட்டுப்பெயர் படர்க்கை முப்பெயர்க்கும் பின் வருமோ முன் வருமோ இருமருங்கும் வருமோ வாராது ஒழியுமோ யாங்ஙனம் ஆங்கொல்? என்னும் ஐயம் அறுத்தற்குக் கூறினாரன்றி, இது வழுவற்க எனக் காத்தார் அல்லர். அக்கருத்துச், 'சுட்டுப் பெயர்பின் வரும்வினை யெனின்' என்றதற்கே கொள்க. அதனை அவ்வாறு காத்தல் எவ்வழு வாராமை கருதி எனின் நம்பி வந்தான் அவற்குச் சோறு இடுக என்பான் அவற்குச் சோறு இடுக நம்பி வந்தான் என்றேனும் அவன் வந்தான் நம்பிக்குச் சோறு இடுக என்றேனும் சுட்டுப்-பெயரை முன் வைத்துக் கூறின் அஃது ஒரு பொருள்மேல் இருபெயர் வந்தது ஆகாது, நம்பி வேறு அவன் வேறாய் முடியும்; அவ்வழு வாராமை கருதி என்க.

இனிச் செய்யுட்கு ஏற்புழி வருமாறு:

"அவனணங்கு நோய்செய்தா னாயிழாய் வேலன்
விறன்மிகுதார்ச் சேந்தன்பேர் வாழ்த்தி - முகனமர்ந்
தன்னை யலர்கடப்பந் தாரணியி னென்னைகொல்
பின்னை யதன்கண் விழைவு" (தொல். கிளவி. 39* இளம்.)

என வரும். செய்யுட்கண் பின் வருதல் வழுவற்க எனக் காத்தலும் இப்பாட்டின்கண் முன் வருதல் வழுவமைதியும் ஆம் என்க. பிறவும் அன்ன. (43)

## அடுக்குத்தொடர்

**{395} அசைநிலை பொருணிலை யிசைநிறைக் கொருசொல்
இரண்டு மூன்றுநான் கெல்லைமுறை யடுக்கும்.**

எ-னின், இதுவும் அது.

இ-ள்: அசைநிலைக்கும் விரைவு, வெகுளி, உவகை, அச்சம், அவலம் முதலிய பொருள்நிலைக்கும் இசைநிறைக்கும் ஒரு சொல் இரண்டு, மூன்று, நான்களவு முறையே அடுக்கும் எ-று.

எனவே அசைநிலைக்கு இரண்டும் பொருள்நிலைக்கு இரண்டும் மூன்றும் இசைநிறைக்கு இரண்டும் மூன்றும் நான்கும் அடுக்கும் என்பதாயிற்று.

வ-று: ஒக்கும் ஒக்கும், அன்றே அன்றே என்பன அசைநிலை. உண்டேன் உண்டேன், **போ போ போ** என்பன விரைவு. எய் எய், எறி எறி எறி என்பன வெகுளி. வருக

வருக, பொலிக பொலிக பொலிக என்பன உவகை. பாம்பு பாம்பு, தீத் தீத் தீ என்பன அச்சம். உய்யேன் உய்யேன், வாழேன் வாழேன் வாழேன் என்பன அவலம். இவை முதலியன பொருள்நிலை. "ஏஎ யம்பன் மொழிந்தனள் யாயே" (தொல். எச்ச. 15* இளம்.), "நல்குமே நல்குமே நல்குமே நாமகள்" (நன். 394 மயிலை.), "பாடுகோ பாடுகோ பாடுகோ பாடுகோ" (யா. வி. 51) என்பன இசைநிறை. பிறவும் அன்ன.

ஒரு சொல்லைப் பல கால் கூறுதல் வழு ஆயினும் இவ்விடத்து ஆம் என்றல் வழுவமைதியும் இதற்கு இவ்வெல்லை இறவாது என்றல் வழுவற்க எனக் காத்தலும் ஆம் என்க. (44)

### இரட்டைக்கிளவி

**{396} இரட்டைக் கிளவி யிரட்டிற்பிரிந் திசையா.**

எ-னின்[388] மரபு வழுவற்க எனக் காத்தல் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: இரட்டைச்சொற்கள் **அவ்விரட்டிப்பில்** பிரிந்து, தனித்து ஒலியா எ-று.

எனவே வலிந்து பிரித்துக் கூறின் பொருள்படாது என்பதூஉம் இரட்டித்துக் கூறுதலே மரபு என்பதூஉம் ஆயிற்று.

வ-று: "சலசல மும்மதம் பொழிய" (சீவக. 82:1*), "கலகல, கூஉந்துணை யல்லால்" (நாலடி. 140:2-3), "குறுகுறு நடந்துஞ் சிறுகை நீட்டியும்" (புறம். 188:3*), "வற்றிய வோலை கலகலக்கும்" (நாலடி. 256:3), "துடிதுடித்துத் துள்ளி வரும்" (நன். 395* மயிலை.) என வரும்.

துடிதுடித்து என்புழிப் பின்னையது பிரிந்து இசைக்குமேனும் முன்னையது பிரிந்து இசையாமையின் இரட்டைச்சொல்லேயாம் என்க. பிறவும் அன்ன. (45)

### ஒரு பொருளைக் குறிக்கும் பல பெயர்கள்

**{397} ஒருபொருட் பல்பெயர் பிரிவில வரையார்.**

எ-னின்[389] இதுவும் அது.

இ-ள்: ஒரு பொருள்மேல் பல பெயர் கூறுங்கால் அப்பொருளினின்றும் பிரிதல் இல்லாதனவற்றை நீக்காது கூறுவர் புலவர் எ-று.

---

[388] **இது தொல்காப்பிய (கிளவி. 48) நூற்பா.**
[389] **இது தொல்காப்பிய (எச்ச. 64) நூற்பாவின் திரிபு.**

எனவே பிரிவு உள்ளனவற்றைக் கூறார் என்பதாயிற்று.

வ-று: ஆசிரியன் பேரூர்கிழான் சாத்தன் வந்தான், பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி வந்தான் என்பன பிரிவு இலவாய்ப் பல பெயரும் ஒரு பொருள்மேல் சென்று, கேட்போர்க்குக் கூறுவோன் கருதிய பொருள் விளக்கி நின்றன.

"வையைக் கிழவன் வயங்குதார் மாணகலந்
தையலாய் நீயின்று நல்கினை நல்காயேற்
கூடலார் கோவொடு நீயும் படுதியே
நாடறியக் கவ்வை யொருங்கு" (தொல். எச்ச. 63* இளம்.)

எனவும்,

"கொய்தளிர்த் தண்டலைக்[390] கூத்தப் பெருஞ்சேந்தன்
வைகலு மேறும் வயக்களிறே - கைதொழுவல்
காலேக வண்ணனைக் கண்ணாரக் காணவெஞ்
சாலேகஞ் சார நட" (தொல். எச்ச. 63* இளம்.)

எனவும் சுட்டின் பொருளவாய் வரும் பெயரொடு தொக்க ஒரு பொருட் பல பெயர்களும் அன்ன.

**'பிரிவு'** என்றதற்கு இவ்வாறு பொருள் கூறாது, "கொய்தளிர்த் தண்டலை" (தொல். எச்ச. 63 இளம்.) என்னும் பாட்டினுள் காலேகவண்ணம் சேந்தனுக்கும் பிறர்க்கும் உண்டாதலைப் பிரிவு என்று கருதி, இது வழு என்பாரும்[391] உளர். காலேக-வண்ணம் பொதுவியல்பன்றிச் சேந்தனிற் பிரிந்தது அன்று ஆதலானும் சேந்தனைக் களிற்றின்மேல் சேய்மைக்கண் வரக் கண்டாள் அவனைக் கண்ணாரக் காண வேண்டும் பெருவேட்கை தந்தது அவனது காலேகவண்ணம் என்பாள் அவ்வாறு கூற வேண்டும் ஆதலானும் இது சான்றோர் இலக்கியம் ஆதலானும் அது பொருள் அன்று என்க.

இனிப் பிரிவு உளதாய் வழுவியது யாதோ எனின், "பகையியல் பாயிலி படைக்கை மறவன்" (வி. மே.) என வரின் பகை இயல்பாய் இலியைப் படைக்கை மறவன் என்றல் கூடாமையின் பிரிந்து வழு ஆம் என்க. பிறவும் அன்ன. (46)

---

[390] **இப்பாடலை முத்தொள்ளாயிரம் என்பதற்குப் (சோம. இளவரசு, 1981. பக். 491) போதிய சான்று இல்லை.**

[391] **இளம்பூரணரும் (தொல். எச்ச. 63) மயிலைநாதரும் (நன். 396) இதனை வழு என்பர்.**

### மரபு வழுவமைதி

{398} **ஒருபொருட் பன்மொழி சிறப்பி னின்வழா.**

எ-னின், மரபு வழுவமைப்பு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: ஒரு பொருளைக் குறித்து வரும் பல சொற்கள் அவ்வாறு வருதற்கு ஓர் காரணம் இன்றேனும் சிறந்து நிற்றலின் **அவை** வழு என்று **நீக்கப்படா** எ-று.

சிறந்து நிற்றல்- செவிக்குச் சொல்லின்பம் தோன்ற நிற்றல்.

'சிறப்பினின்' என்றமையால் காரணமின்றி வந்தன என்பது பெற்றாம்.

வ-று: "மீமிசை ஞாயிறு கடற்பாய்ந் தாங்கு" (நன். 397 மயிலை.), "புனிற்றிளங் கன்று" (பெரிய. திருவாரூர். 22:4), "நாகிளங் கமுகு" (கம்ப. முதற்போர். 255:3), "அடுபசி யுழந்தநின் னிரும்பே ரொக்கல்" (பொருந. 61*), "உயர்ந்தோங்கு பெருவரை" (மலைபடு. 41*), "குழிந்தாழ்ந்த கண்ணவாய்த் தோன்றி" (நாலடி. 49:2) என வரும். பிறவும் அன்ன.

இனிச், 'சிறப்பினின்' என்றதற்கு அப்பொருளைச் சிறப்பித்தலின் எனப் பொருள் கூறுவாரும்[392] உளர். அச்சொற்கு அப்பொருள் இயையாமையானும் அக்காரணத்தான் வந்தனவேல் ஈண்டு ஒரு பொருட் பன்மொழியாய் வரும் பெயர்கள் ஒரு பொருட் பல பெயருள் அடங்கும் (397) ஆதலானும் மீமிசை என்றால் மேல் **என்றே** பொருளன்றி விசேடித்ததோர் சிறப்பு இன்மையானும் உண்டேல் அஃது இஃது என விதந்து கூறுவர் ஆதலானும் அது பொருள் அன்று என்க. (47)

### முற்றும்மை வேண்டும் இடம்

{399} **இனைத்தென் றறிபொரு ளுலகி னிலாப்பொருள்**
**வினைப்படுத் துரைப்பி னும்மை வேண்டும்.**

எ-னின், மரபு வழுவற்க எனக் காத்தல் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: இத்துணைத்து என்று வரையறை உணரப்படும் பொருளும் எக்காலத்தும் எவ்விடத்தும் இல்லாத பொருளும் **அவற்றை** வினைப்படுத்துக் கூறுங்கால் முற்றும்மை வேண்டி நிற்கும் எ-று.

---

[392] **மயிலைநாதரும் (நன். 397) வைத்தியநாத தேசிகரும் (இல. விள. 356) இவ்வாறு பொருள் கூறுவர்.**

**இராமாநுச கவிராயர் (நூ. 439) வேறு காரணம் காட்டி இவ்வுரையை மறுப்பார்.**

'பொருள்' என வேறு விதந்தமையின், 'உலகு' என்றது ஒழிந்த காலம் அனைத்தினையும் இடம் அனைத்தினையும் என்பதூஉம், 'இனைத்தென் றறிபொருள்' என்றமையானும், 'உலகு' எனக் காலம் அனைத்தினையும் இடம் அனைத்தினையும் கூறுதலானும், 'உம்மை' என்றது முற்றும்மையை என்பதூஉம் பெற்றாம்.

வ-று: தமிழ்நாட்டு மூவேந்தரும் வந்தார், உலகம் மூன்றினையும் ஒருங்கு உணர்ந்தான், நின்கண் வைத்த பொருள் நூற்றினையும் அவ்விருவருக்கும் கொடு, இறைவற்குக் கண் மூன்றும் முச்சுடர், இறைவற்கு உடை, போர்வை இரண்டும் தோல் என இனைத்து என்று அறிபொருள் வினைப்படுத்து உரைப்பின் உம்மை வேண்டி நின்றன. இவற்றுள் முச்சுடர், தோல் என்பன பெயராலோ எனின் ஈண்டு வினை என்றதூஉம், "சுட்டுப், பெயர்பின் வரும்வினை யெனின்" (நூ. 394) என்றது போலும்.

பவளக்கோட்டு நீலயானை என்றும் இல்லை, முயற்கோடு, ஆகாயப்பூ என்றும் இல்லை, மண்ணிற் படம் என்றும் இல்லை, நூலிற் கடம் என்றும் இல்லை, ஒளிமுன் இருள் என்றும் இல்லை என உலகின் **இல்லாத** பொருள் வினைப்படுத்து உரைப்பின் உம்மை வேண்டி நின்றன. எவ்விடத்தும் இல்லை எனவும் ஒட்டுக.

உம்மை வரும் என்னாது, 'உம்மை வேண்டும்' என்றமையான் அஃது இசையெச்சமாய் நிற்க, அதனை வேண்டுவனவாய், "வன்பறழ்க் குமரி இருதோ டோழர் பற்ற" (நன். 398 மயிலை.), "எருமை நாற்கா னீர்க்கீ ழவ்வே" (நன். 398 மயிலை.) எனவும் மண்ணிற் படம் இல்லை, நூலிற் கடம் இல்லை, ஒளிமுன் இருள் இல்லை எனவும் வரும்.

இவ் இல்பொருளின்கண் காலப்பெயர் இடப்பெயர்களும் உடன் எஞ்சி நின்றன. இவ்வாறு வருதல் கருதாது, செய்யுள் விகாரமாக உம்மை தொக்கது என்பாரும்[393] உளர். உலகின் **இல்லாப்** பொருள் உள்பொருள்போல் காலத்தோடு பட்டது அன்று என்பது தோன்ற என்றும் இல்லை என்னாது காலத்தோடு பட்டதுபோல வைத்துப், பவளக்கோட்டு நீலயானை பண்டும் இல்லை என எச்சவும்மை தந்து, உதாரணம்[394] காட்டுவார். அது யானை குடத்தினும் இல்லை; குழிசியினும் இல்லை என்றது போலும் என்க.

---

[393]மயிலைநாதர் (நன். 398), சேனாவரையர், நச்சினார்க்கினியர் (தொல். கிளவி. 33), வைத்தியநாத தேசிகர் (இல. விள. 315) முதலியோர் செய்யுள் விகாரமாக உம்மை தொக்கது எனப் பொருள் கூறுவர்.

[394]மயிலைநாதர் (நன். 398) எச்சவும்மை தந்து உதாரணம் காட்டுவார்.

இரட்டுற மொழிதலான் உலகின்கண் நிலையில் பொருள் வினைப்படுத்து உரைப்பின் எச்சவும்மை வேண்டும் எனவும் பொருள் உரைத்துக்கொள்க. அவை வருமாறு: செல்வமும் நில்லாது, செல்வமும் பொய் என வரும். செல்வம் நில்லாது, செல்வம் பொய் என எச்சவும்மை கொடாது வாளா கூறின் இளமை, யாக்கை முதலியன நிலைபெறும் எனவும் மெய்ப்பொருள் எனவும் பொருள்படும் என்க. 'உம்மை வேண்டும்' என்றதனால் செல்வம் நில்லாது, செல்வம் பொய் என உம்மை எஞ்சி நிற்றலும் கொள்க. (48)

## வழக்கில் கருமம் கருத்தா ஆகுமாறு

400. **செயப்படு பொருளைச் செய்தது போலத்
தொழிற்படக் கிளத்தலும் வழக்கினு ளுரித்தே.**

எ-னின்[395] மரபு வழுவமைப்பு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: செயப்படுபொருளைக் கருத்தாவைப் போல வைத்து, அதன்மேல் வினை-முதல் வினை ஏற்றிக் கூறுதலும் வழக்கின்கண் உரித்தாம் எ-று.

வ-று: இம்மாடு யான் கொண்டது, இச்சோறு யான் கொடுத்தது, இவ்வெழுத்து யான் எழுதியது என வரும்.

உம்மையால் கருமத்தைக் கருத்தாவாக இவ்வாறு கூறுதலே அன்றிக் கருவி நிலம் செயல் காலங்களைக் கருத்தாவாகக் கூறுதலும் அமையும் என்பது பெற்றாம். அவை வருமாறு: இவ்வெழுத்தாணி யான் எழுதியது, இவ்வீடு யான் இருந்தது, இத்தொழில் யான் செய்தது, இந்நாள் யான் பிறந்தது என வரும்.

இனி இல்லம் மெழுகிற்று, எழுத்தாணி எழுதிற்று என உதாரணம் காட்டுவாரும்[396] உளர். இல்லம் மெழுகிற்று என்பதோர் வழக்கு இன்மையானும் நடத்த நடந்த தேரி-னைப் போல ஒருவன் எழுத எழுதியது எழுத்தாணி ஆதலின் அது தன் தொழிலே அன்றி ஒருவன் தொழில் அன்று ஆதலானும் அவை காட்டு ஆகா என்க. (49)

---

[395] இது தொல்காப்பிய (வினை. 49) நூற்பாவின் திரிபு.

[396] இளம்பூரணர் (தொல். வினை. 47) முதலிய தொல்காப்பிய உரையாசிரியர்களும் மயிலைநாதரும் (நன். 399) வைத்தியநாத தேசிகரும் (இல. விள. 357) இவ்வாறு உதாரணம் காட்டுவர்.

## இருவழக்கிலும் அடைமொழிகள் வருமாறு

401. **பொருண்முத லாறா மடைசேர் மொழியினம்**
**உள்ளவு மில்லவு மாமிரு வழக்கினும்.**

எ-னின், மரபு வழுவற்க எனக் காத்தலும் மரபு வழுவமைப்பும் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: பொருளாதி ஆறாகிய (132) அடைகள் அடுத்து வரும் மொழிகள் இனம் உள்ளனவே ஆமன்றி இனம் இல்லனவும் ஆம் உலக வழக்கினுள்ளும் செய்யுள் வழக்கினுள்ளும் எ-று.

'உள்ளவும்' என்னும் உயர்வு சிறப்பும்மையும், 'இல்லவும்' என்னும் இழிவு சிறப்பும்மையும் எண்ணி நின்றன.

வ-று: நெய்க்குடம், குளநெல், கார்த்திகைவிளக்கு, பூமரம், செந்தாமரை, குறுங்கூலி எனவும் உப்பளம், ஊர்மன்று, நாளரும்பு, இலைமரம், செம்போத்து, தோய்தயிர் எனவும் வழக்கின்கண் இனம் உள்ளனவும் இல்லனவும் வந்தன.

"பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்கம்" (குறள். 913), "கான்யாற் றடைகரை (இனிய. 5:3), "முந்நாட் பிறையின் முனியாது வளர்ந்தது" (நன். 400 மயிலை.), "கலவ மாமயி லெருத்திற் கடிமல ரவிழ்ந்தன காயா" (சீவக. 1558:1), "சிறுகோட்டுப் பெரும்பழந் தூங்கி யாங்கிவள்" (குறுந். 18:4), "ஆடுபாம் பெனப்புடை யகன்ற வல்குன்மேல்" (சீவக. 1007:1) எனவும், "பொற்கோட் டிமயமும் பொதியிலும் போன்றே" (புறம். 2:24*), "வடவேங்கடந் தென்குமரி" (தொல். சிற. பாயி. 1), "வேனிற் கோங்கின் பூம்பொகுட் டன்ன" (புறம். 321:4), "சிறகர் வண்டு செவ்வழி பாட" (சீவக. 74:3),

"செஞ்ஞாயிற்று நிலவுவேண்டினும்
வெண்டிங்களுள் வெயில்வேண்டினும்" (புறம். 38:7-8),

"முழங்கு கடலோத மூழ்கிப் போக" (தொல். செய். 64* பேர்.) எனவும் செய்யுட்கண் இனம் உள்ளனவும் இல்லனவும் வந்தன.

இனம் உள்ளனவற்றை வாளா கூறின் குறித்த பொருள் தோன்றாமையின் அடை கொடுத்து விதந்து கூறுக எனவும் இனம் இல்லனவற்றிற்கு அடை கொடுத்துக் கூறு-தல் மிகையாம் ஆயினும் அமையும் எனவும் பொருள் போந்தமையின் முன்னையது வழுவற்க எனக் காத்தலும் பின்னையது வழுவமைப்பும் ஆம் என்க.

ஆசிரியர் தொல்காப்பியனார்,

"இனச்சுட் டில்லாப் பண்புகொள் பெயர்க்கொடை
வழக்கா றல்ல செய்யு ளாறே" (தொல். கிளவி. 18)

என்றமையின், 'பொருண்முத லாறா மடை' என்றும், 'இரு வழக்கினும்' என்றும் இவ்விருமையும் பயின்று வரும் என்பது தோன்ற, 'உள்ளவு மில்லவு மாம்' என இனம் உள்ளனவற்றோடு ஒருங்கு எண்ணியும் கூறினார் என்க. (50)

அடை அடுத்த மொழிகள் வருமாறு

{402} **அடைமொழி யினமல் லதுந்தரு மாண்டுறின்.**

எ-னின், மர' | வழுவற்க எனக் காத்தல் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: மேற் கூறிய, "அடைசேர் மொழி" (நூ. 401) இனத்தைத் தருதலே அன்றி, அதனோடு இனம் அல்லதனையும் தரும் அவ்விடத்திற்குப் பொருந்தும் ஆயின் எ-று.

**'ஆண்டுறின்' என்றமையான் பொருந்துவன கொள்க[397] என்றார்.**

வ-று: பாவம் செய்தான் நரகம் புகும் என்ற துணையானே புண்ணியம் செய்தான் சுவர்க்கம் புகும் என இனத்தைத் தருதலே அன்றி, அவன் இது செய்யின் இது வரும் என்னும் அறிவிலி என்னும் இனம் அல்லதனையும் தந்தது. மேலைச்சேரிச் சேவல் அலைத்தது என்ற துணையானே கீழைச்சேரிச் சேவல் அலைப்புண்டது என இனத்-தைத் தருதலே அன்றி, அச்சேவல் உடையார்க்கு வெற்றி ஆயிற்று என்னும் இனம் அல்லதனையும் தந்தது.

இனி இரட்டுற மொழிதலான், 'இனமல் லதுந்தரும்' என்பதற்கு இனத்தைத் தருதலை ஒழித்து, இனம் அல்லதனையும் தரும் எனவும் பொருள் உரைத்துக்கொள்க. அவை வருமாறு: சுமந்தான் வீழ்ந்தான் என்றால் சுமவாதான் வீழ்ந்தான் அல்லன் என்னும் கருத்துச் சொல்லுவார்க்கு இன்று ஆதலின் அவ்வினத்தை ஒழித்துச், சுமையும் வீழ்ந்தது என்னும் இனம் அல்லதனையும் தந்தது. காலை எழுந்து கருமத்திற் செல்வான் கோழி கூவிற்று என்றால் ஏனைப் புட்கள் கூவுகில என்னும் கருத்து அவற்கு இன்று. ஆதலின் அவ்வினத்தை ஒழித்துப், பொழுது புலர்ந்தது என்னும் இனம் அல்லதனைத் தந்தது.

---

[397] **இந்த உரை வாசகம் ஆறுமுக நாவலர் பதிப்பிலும் (1851. பக். 278-279) சாமிநாதையர் பதிப்பிலும் (1925. பக். 221-222) சிறு வேறுபாட்டுடன் இருமுறை அச்சிடப்பட்டுள்ளது; இடமாற்றமும் பெற்றுள்ளது.**

பெய்முகில் அனையான் என்றால் கைம்மாறு கருதாத பெருங்கொடையாளன் என்னும் இனம் அல்லதனை இனம் இலதாகிய அடைமொழி தந்தது. இவ் அடை கொடாது முகில் அனையான் என வாளா கூறினும் இக்கொடைப் பொருள் தருமாலோ எனின் அவ்வாறு கூறின் முகில்வண்ணன் எனவும் பொருள்படும் ஆதலின் அதனை ஒழித்துக், கொடைப்பொருட்கு உரிமை செய்தது அவ் அடையேயாம் என்க. பிறவும் அன்ன. (51)

அடைமொழிகள் சினை முதல்களோடு வருதல்

403. **அடைசினை முதன்முறை யடைதலு மீரடை**
**முதலோ டாதலும் வழக்கிய லீரடை**
**சினையொடு செறிதலு மயங்கலுஞ் செய்யுட்கே.**

எ-னின், மரபு வழுவற்க எனக் காத்தலும் மரபு வழுவமைப்பும் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: மேற் கூறிய (401) அடை சினை முதல்களை அடுத்து வருங்கால் ஓர் அடையும் ஒரு சினையும் ஒரு முதலும் ஒன்றை ஒன்று விசேடித்து வருதலும் இரண்டு அடை முதலை விசேடித்து வருதலும் வழக்குநடையாம். இரண்டு அடை சினையை விசேடித்து வருதலும் இவ்வரம்பு இறந்து வருதலும் செய்யுள்நடையாம் எ-று.

'ஈரடை முதலோ டாதலும்' என்றமையான், 'முறை' என்றது ஒன்றை ஒன்று விசேடித்து வருவது என்பதூஉம் அங்ஙனம் வரவே அடை பல, சினை பல வாராது ஒவ்வொன்று வரும் என்பதூஉம் பெற்றாம்.

வ-று: வேற்கை முருகன், நிலப்பூ நெரிஞ்சில், கார்த்திகைப் பூக்கொடி, பழக்குலை வாழை, செங்கால் நாரை, முழங்கு திரைக்கடல் எனவும் மனைச் சிறுகிணறு, சிறு கருங்காக்கை எனவும் வழக்கின்கண் வந்தன.

"சிறுபைந் தூவியிற் செயிரறச் செய்த" (நன். 402 மயிலை.) எனவும், "கருநெடுங் கண்டருங் காம நோயே" (நன். 402 மயிலை.) எனவும், "பெருந்தோட் சிறுமருங்குற் பேரமர்க்கட் பேதை" (தொல். கிளவி. 26 இளம்.) எனவும் செய்யுட்கண் வந்தன. பிறவும் அன்ன.

இவற்றுள், 'அடைசினை முதன்முறை யடைதல்' ஒன்றும் வழுவற்க எனக் காத்தலும் ஏனைய மூன்றும் அவ்வாறு நில்லாமையின் வழுவமைதியும் ஆம் என்க.

"கவிசெந் தாழிக் குவிபுறத் திருந்த
செவிசெஞ் சேவலும் பொகுவலும் வெருவா
வாய்வன் காக்கையுங் கூகையுங் கூடி" (புறம். 238:1-3)

என வருவன கொம்பு கூர் மாடு, மடல் விரிதாழை என்றாற்போல வருதலின், "உயர்திணை தொடர்ந்த பொருண்முத லாறும்" (நூ. 377) என்னும் சூத்திரத்துள் அஃறிணையோடு சார்த்தின் அஃறிணை முடிபினவாம் என அமைத்ததன்பாற் படும் என்க. (52)

இயற்கைப்பொருளைக் கூறுமாறு

404. **இயற்கைப் பொருளை யிற்றெனக் கிளத்தல்.**

எ-னின்[398] மரபு வழுவமைப்பு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: இயற்கைப்பொருள் செயற்கைப்பொருள் (405) என இருவகைப்படும்[399] பொருள்களுள் இயற்கைப்பொருளை இத்தன்மைத்து என்று கூறுக எ-று.

இயற்கை என்பது அவிகாரம்; செயற்கை என்பது[400] விகாரம்.

வ-று: மெய் உள்ளது, பொய் இல்லது, நிலம் வலிது, நீர் தண்ணிது, தீ வெய்து, மயிர் கரியது, பயிர் பசியது என வரும்.

நிலம், நீர் முதலிய பூதங்கள் மாயையின் விகாரம் என்பதை நோக்கின் செயற்கைப்பொருள் ஆயினும் பூதத்தின் விகாரங்களை நோக்கின் இயற்கைப்பொருளாம் என்க.

'இயற்கைப் பொருளை யிற்று' என்னும் வினைக்குறிப்பாகிய செயற்படுத்துக் கூறுதலின் இது வழுவமைதி ஆயிற்று. இது கருதாது, இவ்வாறு கூறுதல் மரபு என்பாரும்[401] உளர். அது நிற்க.

---

[398] இது தொல்காப்பிய (கிளவி. 19) நூற்பா.

[399] உலகத்துப் பொருள் எல்லாம் இயற்கைப்பொருளும் செயற்கைப்பொருளும் என இருவகைப்படும் என்று இளம்பூரணர் (தொல். கிளவி. 19) பாகுபடுத்துவார்.

[400] இயற்கையாவது பொருளுக்குப் பின் தோன்றாது உடன் நிகழும் தன்மை; செயற்கையாவது ஒரு காரணத்தால் திரியும் தன்மை என்று சேனாவரையர் (தொல். கிளவி. 19, 20) விளக்குவார்.

[401] இளம்பூரணரும் (தொல். கிளவி. 19) மயிலைநாதரும் (நன். 403) இவ்வாறு கூறுதல் மரபு என்பர்.

வளி உளரும் தன்மைத்து, உயிர் உணரும் தன்மைத்து என்னாது வளி உளரும், உயிர் உணரும் எனவும் உதாரணம்[402] காட்டுவர். வளியின்கண்ணும் உயிரின்கண்ணும் உளர்தலும் உணர்தலும் ஆகிய செயல் நிகழ்ந்த துணையானே அவற்றிற்கு அவை செயற்கை ஆமன்றி இயற்கை ஆகாமையானும் அவ்வாறு கூறுதற்கு ஓர் விதி இன்மையானும் அவை பொருந்தா என்க. (53)

செயற்கைப்பொருளைக் கூறுமாறு

405. **காரண முதலா வாக்கம் பெற்றுங்
காரண மின்றி யாக்கம் பெற்றும்
ஆக்க மின்றிக் காரண மடுத்தும்
இருமையு மின்றியு மியலுஞ் செயும்பொருள்.**

எ-னின், மரபு வழுவற்க எனக் காத்தலும் மரபு வழுவமைப்பும் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: முதல் துணை நிமித்தங்களால் செய்யும் பொருளாகிய செயற்கைப்பொருளைக் கூறுங்கால் காரணச்சொல் முன் வர, ஆக்கச்சொல் பின் வரப்பெற்றும் காரணச்சொல் தொக்கு நிற்ப, ஆக்கச்சொல் வரப்பெற்றும் ஆக்கச்சொல் தொக்கு நிற்பக், காரணச்சொல் வரப்பெற்றும் இவ்விரு வகைச் சொல்லும் தொக்கு நிற்கவும் நடக்கும் எ-று.

காரணச்சொல்லும் ஆக்கச்சொல்லும் யாண்டு வரினும் அந்நிலைக்களத்துத் தந்து பொருள் உரைக்கப்படுதலின், 'காரண முதலா' என்றார்.

வ-று: கடுவும் கை பிழி எண்ணெயும் பெற்றமையான் மயிர் நல்ல ஆயின, எருப் பெய்து இளங்களை கட்டு, நீர் கால் யாத்தமையான் பயிர் நல்ல ஆயின எனவும் மயிர் நல்ல ஆயின, பயிர் நல்ல ஆயின எனவும் கடுவும் கை பிழி எண்ணெயும் பெற்றமையான் மயிர் நல்ல, எருப் பெய்து இளங்களை கட்டு, நீர் கால் யாத்தமையான் பயிர் நல்ல எனவும் மயிர் நல்ல, பயிர் நல்ல எனவும் வரும்.

---

[402] **இளம்பூரணர் (தொல். கிளவி. 19) முதலிய தொல்காப்பிய உரையாசிரியர்களும் மயிலைநாதரும் (நன். 403) வைத்தியநாத தேசிகரும் (இல. விள. 313) இவ்வாறு உதாரணம் காட்டுவர்.**

"பல்லார்தோ டோய்ந்து வருதலாற் பாய்புனல்
நல்வய லூரநின் றார்புலால் - புல்லெருக்கம்
மாசின் மணிப்பூணெம் மைந்தன் மலைந்தமையாற்
காதற்றாய் நாறு மெமக்கு" (தொல். கிளவி. 56* இளம்.)

எனப் பரத்தையிற் பிரிந்த தலைவனைப் புலந்தும் அவன் செய்த தீங்கினைத் தன் இனிய முகத்தால் தணிக்கும் புதல்வனை உவந்தும் ஒன்று ஒன்று ஆகாதனவற்றை ஆயினபோற் கூறும்வழி ஆக்கச்சொல் தொக வருதலும் அதன்பாற் படுத்துக. பிறவும் அன்ன.

காரண முதலா ஆக்கம் பெறுதல் ஒன்றும் வழுவற்க எனக் காத்தலும் ஏனைய மூன்றும் வழுவமைதியும் ஆம் என்க. (54)

விடைமரபு வழுவாமல் காத்தல்

406. **தம்பா லில்ல தில்லெனி னினனாய்**
**உள்ளது கூறி மாற்றியு முள்ளது**
**சுட்டியு முரைப்பர் சொற்சுருங் குதற்கே.**

எ-னின், மரபு வழுவற்க எனக் காத்தல் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: ஒருவன் வினவியது தம்பக்கல் இல்லை ஆயின் அதனை இல்லை என்னலுறின் அவன் வினவியதற்கு இனமாய்த் தம்பக்கல் உள்ளதனைக் கூறி, அக்கூற்றானே அதனை இல்லை என்றும் உள்ளது ஆயின் இத்துணை உண்டு என்றும் கூறுவர் புலவர் வினவுதலும் செப்புதலும் ஆகிய சொற்கள் சுருங்குதற்பொருட்டு எ-று.

குன்றக் கூறல் முதலிய குற்றங்கள் (12) நீக்கிச், சுருங்கச் சொல்லல் முதலிய அழகொடு (13) கூறுதல் வழக்கிற்கும் வேண்டும் என்பார், 'சொற்சுருங் குதற்கே' என்றார்.

வ-று: பயறு உண்டோ வணிகீரே என்றார்க்கு அஃது இன்று என்பார் உழுந்து உண்டு, உழுந்தும் துவரையும் உண்டு என்க. இவ் இனமொழிகள் பயறு இல்லை என்னும் இறை பயந்து நிற்றலின், 'இனனாய் உள்ளது கூறி மாற்றியும்' என்றார். அஃது உண்டு என்பார் இத்துணை உண்டு என்க. நூறு விற்கும் பட்டாடை உண்டோ என்றார்க்கு அஃது இன்று என்பார் ஐம்பது விற்கும் கோசிகம் உண்டு என்க. அஃது உண்டு என்பார் எண்பது விற்பது உண்டு என்க. பிறவும் அன்ன.

இவ்வாறன்றி உழுந்தல்லது இல்லை; இத்துணைப் பயறு உள என உதாரணம் காட்டுவாரும்[403] உளர். அவை, 'சொற்சுருங் குதற்கே' என்பதனோடு மாறுபட்டு, மிகைபடக் கூறல் என்னும் குற்றம் (12) ஆம் என்க. (55)

## இரக்கும் சொற்கள் வழங்குமாறு

{407} **ஈதா கொடுவெனு மூன்று முறையே**
**இழிந்தோ னொப்போன் மிக்கோ னிரப்புரை.**

எ-னின், இதுவும் அது.

இ-ள்: ஈ என்பது இழிந்தோன் உயர்ந்தோன்மாட்டு இரக்கும் சொல்லாம்; தா என்பது ஒப்போன் ஒப்போன்மாட்டு இரக்கும் சொல்லாம்; கொடு என்பது உயர்ந்தோன் இழிந்தோன்மாட்டு இரக்கும் சொல்லாம் எ-று.

வ-று: தந்தை ஈ, தோழ தா, மைந்த கொடு என வரும். பிற வழி வரும் ஒப்பு, உயர்வு, தாழ்வினும் இவ்வாறே ஒட்டுக.

வழங்கு, வீசு, நல்கு என்றல் தொடக்கத்து இரப்புரைகள் போலாது ஈவோர்க்கும் ஏற்போர்க்கும் ஒப்பு உயர்வு தாழ்வுகளை, 'ஈதா கொடு' என்ற துணையானே உணர்த்தி நிற்றலின் இவற்றை, "இனைத்தென் றறிபொரு"ளாகக் (நூ. 399) கூறினார். அருள், அளி என்னும் இரப்புரைகள் ஈவோர்க்கு உயர்வும் ஏற்போர்க்கு இழிவும் உணர்த்தினவாலோ எனின் அவை கருணைக்கு உரிய **சொற்குறிப்பினான்** இரத்தற்பொருளை உணர்த்தி நின்றனவன்றி இரப்புரை அல்ல என்க.

இம்மரபு மயங்கி வருவன உளவேல், "புதியன புகுதலும், வழுவல" (நூ. 462) என்றதன்பாற் படுத்துக. (56)

## குறிப்பால் பொருள் உணரப்படும் சொற்கள்

408. **முன்னத்தி னுணருங் கிளவியு முளவே.**

எ-னின்[404] மரபு வழுவமைப்பு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: வெளிப்படையான் அன்றிக் குறிப்பால் பொருள் உணரப்படும் சொற்களும் சில உளவாம் எ-று.

---

[403] மயிலைநாதர் (நன். 405) இவ்வாறு உதாரணம் காட்டுவார்.

[404] இது தொல்காப்பிய (எச்ச. 63) நூற்பாவின் முற்பகுதி.

அவையாவன: "ஒன்றொழி பொதுச்சொல்" (நூ. 269) முதல் சொல்லுவான் குறிப்பு ஈறாக விதந்தன முதலியனவாம்.

செவி எல்லாம் சாலச் செம்பொன் அணியும் செல்வத்தினர் என்பார் செஞ்செவியர் என்றும் குற்றமற்ற மரபினர் என்பார் வெள்ளொக்கலர் என்றும் பெருவாழ்க்கையினர் என்பார் குழைகொண்டு கோழி எறியும் வாழ்க்கையர்[405] என்றும் கூறும் சொல்லுவான் குறிப்பு ஒன்றுமே உதாரணம் காட்டுவாரும்[406] உளர். அங்ஙனம் ஆயின் ஏனைய குறிப்பின் பொருள் தரும் மொழி அல்லவாம் என்க.

கேட்போர் இடர்ப்படாது வெளிப்படையில் கூறுதல் மரபு ஆதலின் இது வழுவமைதி ஆயிற்று. (57)

## மரபு வழுவமைப்பு

409. **கேட்குந போலவுங் கிளக்குந போலவும்**
**இயங்குந போலவு மியற்றுந போலவும்**
**அஃறிணை மருங்கினு மறையப் படுமே.**

எ-னின், இதுவும் அது.

இ-ள்: கேளாதனவற்றைக் கேட்குவனபோலவும் சொல்லாதனவற்றைச் சொல்லுவனபோலவும் நடவாதனவற்றை நடப்பனபோலவும் இத்தொழில்கள் அல்லன பிற செய்யாதனவற்றைச் செய்வனபோலவும் அஃறிணையிடத்தும் சொல்லப்படும் எ-று.

முன்னையபோல விதவாது இறுதிக்கண், 'இயற்றுந' எனப் பொதுப்படக் கூறினமையின் இத்தொழில்கள் அல்லன பிற என்னும் சொல் எஞ்சி நின்றன.

வ-று: "நன்னீரை வாழி யனிச்சமே" (குறள். 1111), "இரவெலா நின்றாயா வீர்ங்கதிர்த் திங்காள்" (நன். 408 மயிலை.) எனவும், "பகைமையுங் கேண்மையுங் கண்ணுரைக்கும்" (குறள். 709),

"மாய்தலும் பிறத்தலும் வளர்ந்து வீங்கலுந்
தேய்தலு முடைமையைத் திங்கள் செப்புமால்" (சீவக. 2932:1-2)

எனவும் இவ்வழி அவ்வூர்க்குப் போம், இவ்வரசன் ஆணை எங்கும் செல்லும் எனவும்,

---

[405] "கோழி எறியும் அவர் வாழ்க்கை" என்பது ஆறுமுக நாவலர் பாடம்.

[406] இளம்பூரணர் (தொல். எச்ச. 62), சேனாவரையர் (தொல். எச்ச. 63), மயிலைநாதர் (நன். 407), வைத்தியநாத தேசிகர் (இல. விள. 354) ஆகியோர் இவ்வாறு உதாரணம் காட்டுவர்.

"தன்னெஞ் சறிவது பொய்யற்க பொய்த்தபின்
தன்னெஞ்சே தன்னைச் சுடும்" *(குறள். 293),*

"வண்சிறைப் பவளச் செவ்வாய்ப் பெடையன மடமை கூரத்
தண்கய நீருட் கண்ட தன்னிழல் பிறிதென் றெண்ணிக்
கண்டனங் கள்வ மற்றுன் காதலி தன்னை நீர்க்கீழ்ப்
பண்டைய மல்லம் வேண்டா படுக்கவென் றூடிற் றன்றே" *(சீவக. 1623*),*

"கருவிரற் செம்முக வெண்பற்சூன் மந்தி
பருவிரலாற் பைஞ்சுனைநீர் தூவிப் - பெருவரைமேல்
தேன்றேவர்க் கீயு மலைநாட வாரலோ
வான்றேவர் கொட்கும் வழி" *(திணை. நூற். 10*),*

எனவும் முறையே காண்க.

'அஃறிணை மருங்கினும்' என்ற உம்மையான் உயர்திணை மருங்கினும் இவ்வாறு சொல்லப்படுதல் புலம்பல் முதலியவற்றுள் காண்க. (58)

அணிகளில் திணை சினை முதல்கள் மயங்குதல்

410. **உருவக வுவமையிற் றிணைசினை முதல்கள்
பிறழ்தலும் பிறவும் பேணினர் கொளலே.**

எ-னின், இதுவும் அது.

இ-ள்: உருவகத்தின்கண்ணும் உவமைக்கண்ணும் இருதிணை தம்முள் மயங்குதலும் சினை முதல் தம்முள் மயங்குதலும் இவ்வியலுள் சொல்லாது ஒழிந்தனவும் போற்றிக்கொள்க எ-று.

வ-று:

"மன்னர் மடங்கன் மறையவர் சொன்மாலை
அன்ன நடையினார்க் காரமுதந் - துன்னும்
பரிசிலர்க்கு வானம் பனிமலர்ப்பூம் பைந்தார்
எரிசினவேற் றானையெங் கோ" *(பு. வெ. 189*)*

என்பன உயர்திணை அஃறிணையோடு மயங்கின.

"தாழிருந் தடக்கையு மருப்புந் தம்பியர்
தோழர்தன் றாள்களாச் சொரியு மும்மதம்

ஆழ்கடற் சுற்றமா வழன்று சீவக
ஏழுயர் போதக மினத்தொ டேற்றதே" (சீவக. 775)

என்பன உயர்திணை அஃறிணையோடும் முதல் சினையோடும் மயங்கின. முகமதி என்பது சினை முதலோடு மயங்கிற்று.

"அகழ்கிடங் கந்துகி லார்ந்த பாம்புரி
புகழ்தரு மேகலை ஞாயில் பூண்முலை
திகழ்மணிக் கோபுரந் திங்கள் வாண்முகஞ்
சிகழிகை நெடுங்கொடி செல்விக் கென்பவே" (சீவக. 1444*)

இஃது அஃறிணை உயர்திணையோடு மயங்கிற்று. இவை உருவகம்.

"கொங்கலர் கோதைக் குமரி மடநல்லாள்
மங்கலங் கூற மலிவெய்திக் - கங்கையாள்
பூம்புன லாகந் தழீஇயினான் போரடுதோள்
வேம்பார் தெரியலெம் வேந்து" (பு. வெ. 224*),

"இலமென் றசைஇ யிருப்பாரைக் காணின்
நிலமென்னு நல்லா ணகும்" (குறள். 1040),

"வருந்தி யீன்றாண் மறந்தொழிந்தாள்
வளர்த்தாள் சொற்கேட் டில்கடிந்தாள்
முருந்தின் காறுங் கூழையை
முனிவார் நின்னை யென்முனிவார்
பொருந்திற் றன்றா லிதுவென்னாய்
பொன்று மளித்திவ் வுயிரென்னாய்
திருந்து சோலைக் கருங்குயிலே
சிலம்ப விருந்து கூவுதியால்" (சீவக. 1661)

என்றல் தொடக்கத்தனவும் அன்ன. "மல்லன் மலையனைய மாதவரை வைதுரைக்கும்" (சீவக. 2789:1) என்பது உயர்திணையோடு அஃறிணை மயங்கிற்று. "கல்விசேர் மாந்தரி னிறைஞ்சிக் காய்த்தவே" (சீவக. 53:4) என்பது அஃறிணையோடு உயர்திணை மயங்கிற்று. கயற்கண் என்பது சினை முதலோடு மயங்கிற்று. தளிர்மேனி என்பது முதல் சினையோடு மயங்கிற்று. பிறவும் அன்ன.

"தருமன் றண்ணளி யாற்றன தீகையால்
வருணன் கூற்றுயிர் மாற்றலின் வாமனே

அருமை யாலழ கிற்கணை யைந்துடைத்
திரும கன்றிரு மாநில மன்னனே" (சீவக. 160),

"இந்திர குமரன் போல விறைமக னிருந்து காண" (சீவக. 1253:3),

என்றல் தொடக்கத்தனவாய் மயங்காது வருதல் மரபாம் ஆதலின் இது வழுவமைதி ஆயிற்று.

இனிப், 'பிறவும்' என்றதனால் உருவக உவமைக்கண் இவன் பாரதி, இவன் பாரதி அனையான் எனப் பால் மயங்கக் கூறுதலும் கயலினது பிறழ்ச்சி போலும் கண்ணினது பிறழ்ச்சி என்பார் கயற்கண் என்று சொல்லின் முடிவின் அப்பொருள் முடியாது எஞ்சக் கூறுதலும் பிறவற்றுள்ளும் இவ்வாறு எஞ்சக் கூறுதலும் செங்கோல், கொடுங்கோல், வீரக்கழல், சினவேல் என ஒரு பொருள் தன்மையை மற்றொரு பொருள்மேல் வைத்துக் கூறுதலும் ஈந்தான் என்பார் அருளினான் என ஒரு வினையை மற்றொரு வினையால் கூறுதலும்,

"அடிவண்ண மல்லா லலங்குதார்க் கோதை
முடிவண்ணங் கண்டறியா வேந்து" (நன். 409 மயிலை.),

"துஞ்சாக் கண்ண வடபுலத் தரசே" (புறம். 31:17),

என உயர்திணையை அஃறிணையாகக் கூறுதலும் இவை போல்வன பிறவும் வழுவமைதியாகக் கொள்க. (59)

பொருள்கோளின் பெயரும் தொகையும்

411. **யாற்றுநீர் மொழிமாற்று நிரனிறை விற்பூண்
டாப்பிசை யளைமறி பாப்புக் கொண்டுகூட்
டடிமறி மாற்றெனப் பொருள்கோ ளெட்டே.**

எ-னின், நால்வகைச் சொற்களானும் செய்யும் செய்யுள் (268) கொள்ளும் பொருள்கோளின் பெயரும் தொகையும்[407] உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: யாற்றுநீர்ப் பொருள்கோளும் மொழிமாற்றுப் பொருள்கோளும் நிரனிறைப் பொருள்கோளும் விற்பூட்டுப் பொருள்கோளும் தாப்பிசைப் பொருள்கோளும் அளை-

[407]பொருள்கோள்கள் நான்கு எனத் தொல்காப்பியமும் (எச்ச. 8) ஒன்பது என நேமிநாதமும் (நூ. 92) கூறும். உரையாசிரியர்கள் (இறை. 56; யா. வி. 95; வீர. 88, 89) அவற்றின் பெயர் முறை தொகைகளை வெவ்வேறாகக் கூறுவர். இதனை மயிலைநாதர் (நன். 410) குறிப்பிடுவார்.

மறிபாப்புப் பொருள்கோளும் கொண்டுகூட்டுப் பொருள்கோளும் அடிமறிமாற்றுப் பொருள்கோளும் எனப் பொருள்கோள் எட்டாம் எ-று.

இவற்றுள் தாப்பிசை என்பதற்கு ஊசல்போல் இடை நின்று இருமருங்கும் செல்லும் சொல் என்பது பொருள். தாம்பு என்பது ஊசல். அஃது அளை மறி பாம்பு என்பது பாப்பு என நின்றாற்போல வலிந்து நின்றது. ஏனையவும் காரணக்குறி ஆதல் காண்க. (60)

## யாற்றுநீர்ப் பொருள்கோள்

412. **மற்றைய நோக்கா தடிதொறும் வான்பொருள்**
**அற்றற் றொழுகுமஃ தியாற்றுப் புனலே.**

எ-னின், நிறுத்த முறையானே (411) யாற்றுநீர்ப் பொருள்கோள் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: மொழிமாற்று முதலியபோல் பிறழ்ந்து செல வேண்டாது யாற்றுப்புனல் ஒழுக்குப்போல் நெறிப்பட்டு, அடிதோறும் வான்பொருள் அற்று அற்று ஒழுகும் அப்பொருள்கோள் யாற்றுநீர்ப் பொருள்கோளாம் எ-று.

இடையறாது ஒழுகும் யாற்றுநீர் ஒழுக்கு உவமை ஆதலின் அடிதொறும் வான்பொருள் அற்று அற்று ஒழுகுதலாவது மொழிமாற்று முதலியபோல் பிறழ்ந்து செல்லும் செலவற்று ஆங்காங்கு அமைந்து ஒழுகுதல் ஆமன்றி, அடிதோறும் பொருள் முடிதல் அன்றாம் என்க. அங்ஙனம் ஆயின் ஆங்காங்கு எனப் பொதுப்படக் கூறாது, 'அடிதொறும்' என்றது என்னை எனின் அவ்வாறே கூறுவார் ஓர் இலக்கணைமேல் வைத்துக் கூறினார் என்க.

வ-று:

"சொல்லருஞ் சூற்பசும் பாம்பின் றோற்றம்போல்
மெல்லவே கருவிருந் தீன்று மேலலார்
செல்வமே போற்றலை நிறுவித் தேர்ந்தநூற்
கல்விசேர் மாந்தரி னிறைஞ்சிக் காய்த்தவே" (சீவக. 53)

என வரும். இப்பாட்டினுள் சொல் என்னும் எழுவாயினை முதல் எடுத்து, அதன் தொழிலாகிய வினையெச்சங்கள் ஒன்றனை ஒன்று கொள்ள இடையே முறை நிறீஇக், காய்த்த என்னும் பயனிலையை இறுதிக்கண் தந்து முடித்தமையின் இப்பொருள்

ஒழுகுதல் யாற்றுநீர் ஒழுக்குப் போறல் காண்க.

இதற்கு இவ்வாறன்றி, ஏனை அடிகளை நோக்காது அடிதோறும் பொருள் முடிந்து வருவது யாற்றுநீர்ப் பொருள்கோள் எனப் பொருள் உரைத்து,

"அலைப்பான் பிறிதுயிரை யாக்கலுங் குற்றம்
விலைப்பாலிற் கொண்டூன் மிசைதலுங் குற்றஞ்
சொலற்பால வல்லாத சொல்லுதலுங் குற்றங்
கொலைப்பாலுங் குற்றமே யாம்" (நான்மணி. 100)

என உதாரணம் காட்டுவாரும்[408] உளர். யாற்றுநீர் ஒழுக்குக்கு இடையறுதல் இன்மையானும் அற்றதேல் அதனை ஒழுக்கு என்றல் கூடாமையானும் அஃது உவமை அன்றாம். ஒவ்வோர் அடி ஒழுகுதற்கு உவமை ஆயிற்று எனின் பாட்டு முழுவதும் இடையறாது ஒழுகிப் பயின்று வரும் பொருள்கோள் மொழிமாற்று முதலியவற்றுள் அடங்காமையின் குன்றக் கூறலாம். இங்ஙனம் ஆதலின் அது பொருள் அன்றாய்[409] அவர் காட்டிய உதாரணம் அடிமறிமாற்றின்பாற் படும் என்க. அப்பொருள்கோளின் விகற்பம் அச்சூத்திரத்துள் (419) தோன்றக் கூறுதும்.

இதனை, 'வான்பொருள்' என்றார் இது நெறிப்பட்டு வருதலானும் பயின்று வருதலானும் மொழிமாற்று முதலிய வந்த செய்யுட்கண்ணும் விராய் வருதலானும் என்க. (61)

மொழிமாற்றுப் பொருள்கோள்

{413} **ஏற்ற பொருளுக் கியையு மொழிகளை**
**மாற்றியோ ரடியுள் வழங்கன்மொழி மாற்றே.**

எ-னின், மொழிமாற்றுப் பொருள்கோள் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: இரண்டு மொழியும் அவை கொள்ளும் இரண்டு பயனிலையுமாய் வரக் கூறுவார் அந்நான்கனுள் ஏற்ற பயனிலைகட்கு இயையும் மொழிகளைத் தனித்தனி கூட்டிக் கூறாது, ஏலாத பயனிலைகட்கு இயையாத மொழிகளைத் தனித்தனி கூட்டி, ஓர் அடியுள்ளே கூறும் பொருள்கோள் மொழிமாற்றுப் பொருள்கோளாம் எ-று.

ஒன்றற்கு ஒன்று பொருந்தியது என்பார், 'ஏற்ற பொருளுக் கியையு மொழி' என்றார்.

---

[408]யாப்பருங்கல விருத்தியின் ஆசிரியர் (நூ. 95), மயிலைநாதர் (நன். 411), வைத்தியநாத தேசிகர் (இல. விள. 362) முதலியோர் இவ்வாறு உதாரணம் காட்டுவர்.
[409]"அது பொருள் அன்றாம்." என்பது ஆறுமுக நாவலர் பாடம்.

மொழிமாற்று என்பது தனக்கு உள்ளதைக் கொடுத்துப் பிறர்க்கு உள்ளதை வாங்கும் பண்டமாற்றுப் போறலின் இரண்டு மொழியும் அவை கொள்ளும் இரண்டு பயனிலையும் வந்தல்லது மொழிமாற்றுதல் கூடாமையின் அத்தொகை தந்து கூறினாம்.

வ-று:

"சுரையாழ வம்மி மிதப்ப வரையனைய
யானைக்கு நீத்து முயற்கு நிலையென்ப
கானக நாடன் சுனை" (யா. வி. 59)

என வரும். **இதனுள்** ஆழ என்னும் பயனிலைக்கு இயைந்த அம்மி என்னும் மொழியினை மிதப்ப என்னும் பயனிலைக்கும் மிதப்ப என்னும் பயனிலைக்கு இயைந்த சுரை என்னும் மொழியினை ஆழ என்னும் பயனிலைக்குமாக மாற்றிக் கூறியவாறும் நீத்து என்னும் பயனிலைக்கு இயைந்த முயல் என்னும் மொழியினை நிலை என்னும் பயனிலைக்கும் நிலை என்னும் பயனிலைக்கு இயைந்த யானை என்னும் மொழியினை நீத்து என்னும் பயனிலைக்குமாக மாற்றிக் கூறியவாறும் காண்க.

"ஆலத்து மேல குவளை குளத்துள
வாலி னெடிய குரங்கு" (யா. வி. 95)

என ஈரடி முதலியவற்றுள் கூறின்[410] சேய்மைக் கண்ணவாய் மொழிமாற்று என்பது தோன்றாமையின் அஃது **இலக்கணம்** அன்று என விலக்கி, அண்மைக்கண் கூறுவதே மொழிமாற்று என்பார், 'ஓர் அடியுள்' என்றார்.

"ஆலத்து மேல" (யா. வி. 95) என்பது ஓர் அடியுள் வாராமையின் கொண்டுகூட்டு என்பாரும்[411] உளர். அது மொழிமாற்றிற்கும் கொண்டுகூட்டிற்கும் வேற்றுமை உணரார் கூற்றாம் என்க. அவர் இச்சூத்திரத்திற்கு மொழிமாற்றோடு பொருந்தாது கொண்டுகூட்டொடு பொருந்தப் பொருள் கூறிச், "சுரையாழ" (யா. வி. 59) என்னும் உதாரணம்[412] காட்டுவர். (62)

## நிரனிறைப் பொருள்கோள்

414. **பெயரும் வினையுமாஞ் சொல்லையும் பொருளையும்**

---

[410] **யாப்பருங்கல விருத்தியின் ஆசிரியர் (நூ. 95) ஈரடி முதலியவற்றுள் மொழிமாற்றுப் பொருள்கோள் கூறுவார்.**

[411] **"ஆலத்து மேல" என்ற பாடலை மயிலைநாதர் (நன். 417) ஈரடிக் கொண்டுகூட்டு என்பார்.**

[412] **மயிலைநாதர் (நன். 412) இவ்வாறு பொருள் கூறிச், "சுரையாழ" என்னும் உதாரணத்தைக் காட்டுவார்.**

**வேறு நிரனிறீஇ முறையினு மெதிரினும்**
**நேரும் பொருள்கோ ணிரனிறை நெறியே.**

எ-னின், நிரனிறைப் பொருள்கோள் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: பெயரும் வினையும் ஆகிய சொற்களையும் அவை கொள்ளும் பெயரும் வினையும் ஆகிய பயனிலைகளையும் வேறு வேறு நிரையாக நிறுத்தி, முறையாயேனும் எதிராயேனும் இதற்கு இது பயனிலை என்பது படக் கூறும் பொருள்கோள் நெறிப்பட்ட நிரனிறைப் பொருள்கோளாம் எ-று.

வ-று:

"கொடிகுவளை கொட்டை நுசுப்புண்கண் மேனி
மதிபவள முத்த முகம்வாய் முறுவல்
பிடிபிணை மஞ்ஞை நடைநோக்குச் சாயல்
வடிவினளே வஞ்சி மகள்" (யா. வி. 95*)

இது பெயர்ச்சொற்களும் பெயர்ப் பயனிலைகளுமாய் நின்ற முறை நிரனிறை.

"காதுசேர் தாழ்குழையாய் கன்னித் துறைச்சேர்ப்ப
போதுசேர் தார்மார்ப போர்ச்செழிய - நீதியான்
மண்ணமிர்த மங்கையர்தோண் மாற்றாரை யேற்றார்க்கு
நுண்ணிய வாய பொருள்" (யா. வி. 95)

இது வினைப் பயனிலைகளும் பெயர்ச்சொற்களுமாய் நின்ற முறை நிரனிறை.

"களிறுங் கந்தும் போல நளிகடற்
கூம்புங் கலனுந் தோன்றுந்
தோன்றன் மறந்தோர் துறைகெழு நாட்டே" (யா. வி. 95)

இது பெயர்ச்சொற்களும் பெயர்ப் பயனிலைகளுமாய் நின்ற எதிர் நிரனிறை.

"ஆடவர்க ளெவ்வா றகன்றொழிவார் வெஃகாவும்
பாடகமு மூரகமும் பஞ்சரமா - நீடியமால்
நின்றா னிருந்தான் கிடந்தா னிதுவன்றோ
மன்றார் மதிற்கச்சி மாண்பு" (யா. வி. 95*)

இது பெயர்ச்சொற்களும் வினைப் பயனிலைகளுமாய் நின்ற எதிர் நிரனிறை. பிறவும் அன்ன.

மேலைச் சூத்திரத்துள், "மொழி" (நூ. 413) என்றும் இச்சூத்திரத்துள், 'சொல்' என்றும் கூறிய, "நிறுத்த சொல்"லும் (தொல். புணர். 5) அது கொள்ளும் பயனிலை எனினும் பொருள் எனினும் ஒக்கும், "குறித்துவரு கிளவி"யும் (தொல். புணர். 5) அன்றி, அல்வழி வேற்றுமை உருபுகளும் பிற சொற்களும் உடன் வருமாலோ எனின் சாத்தன் வந்தான் என்றால் அவன் ஆடை, அணி முதலியனவும் உடன் வருதல் கூறாதே அமைதல் போலும் என்க.

"சொற்றொறு மிற்றிதன் பெற்றி" (நூ. 461) என்பதனானே,

"காமவிதி கண்முக மென்மருங்குற் செய்யவாய்
தோமி றுகடினி சொல்லமிர்தந் - தேமலர்க்
காந்தள் குரும்பை கனக மடவாள்கை
ஏந்திளங் கொங்கை யெழில்" (யா. வி. 95*)

என வரும் எழுத்து நிரனிறையும்,

"வெண்பா முதலாக வேதிய ராதியா
மண்பால் வகுத்த வருணமா - மொண்பா
இனங்கட்கு மிவ்வாறே யென்றுரைப்பர் தொன்னூல்
மனந்திட்பக் கற்றோர் மகிழ்ந்து" (யா. வி. 55*)

எனத் தொகுத்துக் கூறும் நிரனிறை முதலியவும் கொள்க.

"அம்ம் பவள்ள் வரிநெடுங்கண் ணாய்வஞ்சிக்
கொம்ம் பவள்ள் கொடிமருங்குல் கோங்கின்
அரும்ம் பவண்முலை யொக்குமே யொக்குங்
கரும்ம் பவள்வாயிற் சொல்" (யா. வி. 3*)

என்னும் யாற்றுநீர்ப் பொருள்கோளை மயக்க நிரனிறை என்பாரும்[413] உளர். இது சொல்லையும் பொருளையும் தனித்தனி நிறீஇக் கூறியதன்றி நிரனிறையாக நிறீஇக் கூறாமையின் நிரனிறை அன்று என்பார், 'நெறியே' என்றார். (63)

---

[413]**யாப்பருங்கலம் உடையார் இவ்வாறு காட்டியதாக மயிலைநாதர் (நன். 413) குறிப்பிடுவார். ஆனால் இவ்வுதாரணம் அப்பகுதியில் இல்லை.**

### பூட்டுவிற் பொருள்கோள்

**{415} எழுவா யிறுதி நிலைமொழி தம்முட்**
**பொருணோக் குடையது பூட்டுவில் லாகும்.**

*எ-னின், பூட்டுவிற் பொருள்கோள் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.*

*இ-ள்: செய்யுட்கண் முதலினும் ஈற்றினும் நிற்கும் மொழிகள் தம்முள் பொருள் நோக்கமுடைய பொருள்கோள் பூட்டுவிற் பொருள்கோள் ஆம் எ-று.*

**செய்யுட்கு எல்லாம் முதலினும் ஈற்றினும் என்னாமையின் அதனகத்து எங்-ஙனம் இவ்வாறு வரினும் ஆம் என்க.**

*வ-று:*

*"திறந்திடுமின் றீயவை பிற்காண்டு மாதர்*
*இறந்து படிற்பெரிதா மேத - முறந்தையர்கோன்*
*தண்ணார மார்பிற் றமிழர் பெருமானைக்*
*கண்ணாரக் காணக் கதவு" (முத்.*)*

*என வரும். பிறவும் அன்ன.* (64)

### தாப்பிசைப் பொருள்கோள்

**416. இடைநிலை மொழியே யேனையீ ரிடத்தும்**
**நடந்து பொருளை நண்ணுத றாப்பிசை.**

*எ-னின், தாப்பிசைப் பொருள்கோள் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.*

*இ-ள்: இடை நிற்கும் மொழி, ஒழிந்த முதலினும் ஈற்றினும் சென்று பொருளைக் கூடும் பொருள்கோள் தாப்பிசைப் பொருள்கோளாம் எ-று.*

*வ-று:*

*"உண்ணாமை யுள்ள துயிர்நிலை யூனுண்ண*
*அண்ணாத்தல் செய்யா தளறு" (குறள். 255)*

*என வரும்.* (65)

## அளைமறிபாப்புப் பொருள்கோள்

{417} **செய்யு ளிறுதி மொழியிடை முதலினும்**
**எய்திய பொருள்கோ ளளைமறி பாப்பே.**

எ-னின், அளைமறிபாப்புப் பொருள்கோள் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: செய்யுட்கண் ஈற்றில் நின்ற சொல் இடையினும் முதலினும் சென்ற பொருள்-கோள் அளைமறிபாப்புப் பொருள்கோளாம் எ-று.

வ-று:

"தாழ்ந்த வுணர்வினராய்த் தாளுடைந்து தண்டூன்றித் தளர்வார் தாமுஞ்
சூழ்ந்த வினையாக்கை சுடவிளிந்து நாற்கதியிற் சுழல்வார் தாமும்
மூழ்ந்த பிணிநலிய முன்செய்த வினையென்றே முனிவார் தாமும்
வாழ்ந்த பொழுதினே வானெய்து நெறிமுன்னி முயலா தாரே"

*(யா. வி. 95*)*

என வரும்.

**இருமருங்கினையும், 'இறுதி' என அமையும் ஆதலின், "வாழ்ந்த பொழுதினே வானெய்து நெறிமுன்னி முயலா தாரே" என்னும் சொற்களை அம்மருங்கு வைத்துச் செய்யுள் ஆக்கினும்[414] இப்பொருள்கோளாம் என்க.** (66)

## கொண்டுகூட்டுப் பொருள்கோள்

418. **யாப்படி பலவினுங் கோப்புடை மொழிகளை**
**ஏற்புழி யிசைப்பது கொண்டு கூட்டே.**

எ-னின், கொண்டுகூட்டுப் பொருள்கோள் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: செய்யுளடி பலவினும் இயல்பாகிய யாற்றுநீர்ப் பொருளுக்கு ஏலாது கோத்துக் கிடந்த மொழிகளை எடுத்து, அப்பொருளுக்கு ஏற்ற இடத்துக் கூட்டும் பொருள்கோள் கொண்டுகூட்டுப் பொருள்கோளாம் எ-று.

---

[414] **"ஒன்றற்கு இருமருங்கினையும் மேல் என்ப ஆகலின் சிறப்புப் பெயர் வினை யாண்டு வரினும் கொள்க." என்னும் சங்கர நமச்சிவாயர் உரையைத் (நன். 359) தழுவி அமைந்துள்ள இப்புத்துரைப் பகுதியை யாப்பருங்கல விருத்தியோடும் (நூ. 95) நேமிநாத உரையோடும் (நூ. 62) ஒப்பிடுக.**

இயல்பாகிய யாற்றுநீர்ப் பொருள்கோளிற் பிறழ்ந்து வருவனவற்றை மொழிமாற்று முதலியவாகப் பகுத்தமையின் அப்பொருளுக்கு ஏற்ற இடத்து என்றாம்.

வ-று:

"தெங்கங்காய் போலத் திரண்டுருண்ட பைங்கூந்தல்
வெண்கோழி முட்டை யுடைத்தன்ன மாமேனி
அஞ்சனத் தன்ன பசலை தணிவாமே
வங்கத்துச் சென்றார் வரின்" (யா. வி. 95),

என வரும். இதனுள் வங்கத்துச் சென்றார் வரின் அஞ்சனத்தன்ன பைங்கூந்தலை உடையாள் மாமேனிமேல் தெங்கங்காய்போலத் திரண்டு உருண்ட கோழி வெண்முட்டை உடைத்தன்ன பசலை தணிவாம் எனக் கொண்டுகூட்டுக.

"உருவக வுவமையிற் றிணைசினை முதல்கள்" (நன். 410) என்பதனை முதல்சினை என முறைநிறீஇப் பொருள் கொள்வதும் அது. (67)

அடிமறிமாற்றுப் பொருள்கோள்

{419} **ஏற்புழி யெடுத்துடன் கூட்டுறு மடியவும்
யாப்பீ றிடைமுத லாக்கினும் பொருளிசை
மாட்சியு மாறா வடியவு மடிமறி.**

எ-னின், அடிமறிமாற்றுப் பொருள்கோள்[415] ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: பொருளுக்கு ஏற்குமிடத்து எடுத்து நீங்காது கூட்டும் அடியினை உடையவும் யாதானும் ஓர் அடியை எடுத்து, அச்செய்யுட்கண் முதல் இடை ஈறுகளின் யாதானும் ஓர் இடத்துக் கூட்டினும் பொருளோடு ஓசைமாட்சியும் ஓசை ஒழியப் பொருள்மாட்சியும் வேறுபடாத அடியினை உடையவும் ஆகிய பொருள்கோள் அடிமறிமாற்றுப் பொருள்கோளாம் எ-று.

மாட்சி- நெறிப்பட்டு ஒழுகுதல்.

ஏற்புழி எடுத்துக் கூட்டுதல் இருவகை அடிமறிமாற்றிற்கும் பொருந்தும் ஆயினும் அவ்வடிகள் மாற்றுதற்கு அமைந்து நீங்கும்; இவ்வடிகள் நீங்கா என்பார், 'உடன்' என்றும் ஓசை ஒழியப் பொருள்மாட்சி மாத்திரையும் மாறா அடியவும் என்பார்,

---

[415] நாலடிச் செய்யுட்கண் அன்றி இப்பொருள்கோள் பெரும்பாலும் வராது என்பது சேனாவரையர் (தொல். எச்ச. 11) கருத்து.

'பொருளிசை மாட்சியும்' என உம்மை தந்தும் கூறினார்.

வ-று:

"நடுக்குற்றுத் தற்சேர்ந்தார் துன்பந் துடையார்
கொடுத்துத்தான் றுய்ப்பினு மீண்டுங்கா லீண்டும்
மிடுக்குற்றுப் பற்றினு நில்லாது செல்வம்
விடுக்கும் வினையுலந்தக் கால்" (நாலடி. 93)

என்பதனுள்,

கொடுத்துத்தான் றுய்ப்பினு மீண்டுங்கா லீண்டும்
விடுக்கும் வினையுலந்தக் கால்
மிடுக்குற்றுப் பற்றினு நில்லாது செல்வம்

இஃது அறியார்,

நடுக்குற்றுத் தற்சேர்ந்தார் துன்பந் துடையார்

என அடிகளை ஏற்புழி எடுத்துக் கூட்டுக.

"மாறாக் காதலர் மலைமறந் தனரே
ஆறாக் கட்பனி வரலா னாவே
ஏறா மென்றோள் வளைநெகி ழும்மே
கூறாய் தோழியான் வாழு மாறே" (யா. வி. 73)

என்பதனுள் யாதானும் ஓர் அடியை எடுத்து, யாதானும் ஓர் இடத்துக் கூட்டி உச்சரித்துப், பொருளும் ஓசையும் வேறுபடாமை காண்க.

"அலைப்பான் பிறிதுயிரை யாக்கலுங் குற்றம்
விலைப்பாலிற் கொண்டூன் மிசைதலுங் குற்றஞ்
சொலற்பால வல்லாத சொல்லுதலுங் குற்றங்
கொலைப்பாலுங் குற்றமே யாம்" (நான்மணி. 100)

**என்பதனுள்** ஈற்றடி ஒழிந்த மூன்று அடியுள் யாதானும் ஒன்றை எடுத்து, யாதானும் ஓர் இடத்துக் கூட்டி **உச்சரித்துப்,** பொருளும் ஓசையும் வேறுபடாமையும் ஈற்றடியை எடுத்து, யாதானும் ஓர் இடத்துக் கூட்டி உச்சரித்து, ஓசை வேறுபட்டுப் பொருள் வேறுபடாமையும் காண்க.

செய்யுளடி பலவினையும் தொகுத்துக் கூறாது மூன்றும் ஒன்றுமாகப் பிரித்தது என்னை எனின் எண்வகைப்பட்ட பொருள்கோளும் அவற்றின் விகற்பங்களும் ஆய பொருள்கோள்களுள் ஒன்று ஒரு செய்யுள் முழுவதூஉம் அமைந்து கிடக்க வேண்டும் என்னும் யாப்புறவின்றி, ஒன்றும் பலவும் அமைந்து கிடத்தலின் என்க. அவ்வாறு அமைந்து கிடத்தல் அவ்வப் பொருள்கோட்குக் காட்டிய செய்யுட்கண்ணும் பிற செய்யுட்கண்ணும் கண்டுகொள்க. அடி மறித்தலன்றி மாற்றுதல், 'ஏற்புழி யெடுத்துடன் கூட்டுறு மடியவும்' என்றதற்கு இன்றாம். அங்ஙனம் ஆக அதனையும் அடிமறிமாற்று என்றது என்னை எனின் மறித்தற்கு உரிய கொண்டுகூட்டோடும் மறித்தற்கும் மாற்று-தற்கும் உரிய அடிமறிமாற்றோடும் சார அதனை முதற்கண் கூறி, அடியாக மறித்தல் உடைமையின் அடிமறிமாற்றின்பாற் படுத்துச், சில உறுப்புக் குறைந்தாரையும் மக்கள் என்றாற்போல அதற்கும் அடிமறிமாற்று எனப் பெயர் தந்து கூறினார் என்க.

செய்யுட்கு உரிய பொருள்கோளை ஈண்டுக் கூறியது என்னை[416] எனின் செய்யுட்குத் தொடர் என்னும் காரணக்குறி போந்தது மொழி தொடர்ந்ததால் அன்றே? அங்ஙனம் ஆதலின் இதுவும் தொடர்மொழி இலக்கணமேயாம் என்க. (68)

பொதுவியல் முற்றிற்று

[416] இவ்வினாவிற்கு மயிலைநாதர் (நன். 418) உதாரணத்தோடு சற்று விரிவாக விடை கூறுதல் காண்க.

நான்காவது

# இடையியல்

## இடைச்சொல்லின் பொது இலக்கணம்

{420} **வேற்றுமை வினைசா ரியையொப் புருபுகள்**
**தத்தம் பொருள விசைநிறை யசைநிலை**
**குறிப்பெனெண் பகுதியிற் றனித்திய லின்றிப்**
**பெயரினும் வினையினும் பின்முன் னோரிடத்**
**தொன்றும் பலவும்வந் தொன்றுவ திடைச்சொல்.**

எ-னின், "இடையுரி யடுத்து, நான்குமாம்" (நூ. 270) என நிறுத்த முறையானே இடைச்சொல் இலக்கணம் இவ்வியலால் உணர்த்துவான் தொடங்கி, அவை இத்துணைய; இவ்வியல்பின என அவற்றின் பொது இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: எழுவாயுருபு முதலிய எட்டு வேற்றுமை உருபுகளுள் (292) **பெயரும் பெயரது விகாரமும் ஆகிய எழுவாயும் விளியும் ஒழித்து, ஒழிந்த ஐ முதலிய ஆறு உருபுகளும்** (152) பகுதி, விகுதி, இடைநிலை என்னும் தெரிநிலையும் குறிப்பும் ஆகிய வினையுருபுகளுள் **முதனிலைத் தனிவினைப்பெயரும் பொருளாதி அறுவகைப் பெயரும் ஆகிய பகுதி ஒழித்து, ஒழிந்த விகுதி முதலிய வினையுருபுகளும்** (140, 142-145; 340, 341, 343) அன், ஆன் முதலிய சாரியையுருபுகளும் (244) போலப், புரைய முதலிய உவமவுருபுகளும் (367) பிறவாறு தத்தமக்கு உரிய பொருளை உணர்த்தி வருவனவும் (422-425; 428, 431-433; 435, 437, 438) வேறு பொருளின்றிச் செய்யுள் இசை நிறைத்தலே பொருளாக வருவனவும் (422, 436) அசைத்தலே பொருளாக நிற்பனவும் (422, 423, 432, 433, 435, 437, 439-441) வெளிப்படையின் வரும் இவை போலாது குறிப்பின் வருவனவும் (424) என்னும் எட்டு வகையினை உடையவாய்த் தனித்து நடத்தலின்றிப் பெயரின் அகத்தும் வினையின் அகத்தும் அவற்றின் புறமாகிய பின்னும் முன்னும் இவ்விடங்கள் ஆறனுள்[417] ஓர் இடத்து ஒன்றேனும் பலவேனும் வந்து, அப்பெயர்வினைகட்கு அகத்துறுப்பாயும் புறத்துறுப்பாயும் ஒன்றுபட்டு நடக்கும் தன்மையது இடைச்சொல்லாம் எ-று.

தெரிநிலைவினை இடைநிலைபோல ஏனை இடைநிலை சாரியைகட்கு வேறு பொருள் இன்றேனும் பெயர்வினைகட்கு இன்றியமையாது வருதலே பெரும்பால ஆதலின் அவற்றின் பொருளே பொருள் என்பது கருதி, இசைநிறை அசைநிலைகளைச் சார வையாது முதற்கண் வைத்தார் என்க.

---

[417] **பெயரின் அகத்தும் வினையின் அகத்தும் அவற்றின் புறமாகிய பெயரின் பின்னும் பெயரின் முன்னும் வினையின் பின்னும் வினையின் முன்னும் ஆகிய ஆறு இடங்கள்.**

'பெயரினும் வினையினும்' என்ற உம்மையைப், 'பின்முன்' என்பனவற்றோடும் கூட்டுக.

இச்சொற்கள் முதற் கூறிய[418] <பெயர்ச்சொல் வினைச்சொற்களும்[419] ஆகாது அவற்றின் வேறும் ஆகாது இடை நிகரனவாய் நிற்றலின் இடைச்சொல் எனக் காரணக்குறி பெற்றன. இது பாலைத்திணை நடுவுநிலைத்திணை> எனப் பெயர் பெற்றது போலும் என்க.

<அற்றேல் பாலைத்திணை[420] நடுவுநிலைத்திணை என்று ஆயவாறு என்னை எனின் ஆசிரியர் தொல்காப்பியர்,

"நடுவுநிலைத் திணையே நண்பகல் வேனிலொடு
முடிவுநிலை மருங்கின் முன்னிய நெறித்தே" (தொல். அகத். 11)

எனக் கூறியவழி அங்ஙனம் நடுவுநிலைத்திணை என்னும் சொல்லே தன் காரணம் இனிது விளக்கி நிற்றலான் அது நடுவு நிற்றல் காரணத்தான் பெற்ற பெயர் என்பது பெற்றாம். இன்னும் அவ்வாசிரியர் ஏனை நாற்றிணையும் முறையானே கூறி, இறுதிக்கண் ஓதுதலான் இஃது அவற்றின் வேறு என்பது விளங்குதலானும் எஞ்ச நின்றது பாலையே ஆகலானும்,

"நடுவ ணைந்திணை நடுவண தொழியப்
படுதிரை வையம் பாத்திய பண்பே" (தொல். அகத். 2)

என நிலம் பகுத்து ஓதுங்கால் நடுவணது எனக் குறியிட்டமையானும் அங்ஙனம் பகுக்கப்படும் நிலங்களும் ஆகாது அவற்றின் வேறும் ஆகாது தனக்கு உரிய நிலம் நடுநிகர்த்ததாய் நிற்றல்பற்றி நடுவுநிலைத்திணை எனக் குறியீடு பெற்றது எனக் கொள்க.> இங்ஙனம் இதன் திறம்[421] விரிக்கின் பெருகும். அது நிற்க.

இனி இடை நிகரனவாய் நிற்றலின் இடைச்சொல் எனக் காரணக்குறி போந்ததூஉம் அன்றித், தனித்து நடத்தலின்றிப் பெயர்வினைகள் இடமாக நடத்தலின் இடைச்சொல் எனக் காரணக்குறி போந்தது எனினும் அமையும். அது முதல்நூலின் வழியாக நடக்கும் நூலை அங்ஙனம் கூறாது வழிநூல் என்றாற்போலப்

---

[418] "முற் கூறிய" என்பதும் பாடம்.
[419] தொல்காப்பியச் சூத்திர விருத்தி (பக். 65).
[420] தொல்காப்பியச் சூத்திர விருத்தி (பக். 66-68).
[421] "இன்னம் இதன் திறம்" என்பதும் பாடம்.

பெயர்வினைகள் இடமாக நடக்கும் சொல்லை அங்ஙனம் கூறாது இடைச்சொல் **எனப்பட்டது.**

அங்ஙனம் ஆயின் இடம் என இயற்சொல்லால் கூறாது இடை எனத் திரிசொல்லால் கூறியது என்னை எனின் இயற்சொல்லால் கூறின் இடப்பொருளை உணர்த்தும் சொல் எனப் **பொருள்படும்** ஆதலின் அதனோடு இதற்கு வேற்றுமை தோன்றற்கு என்க. எண்வகையுள் தோன்றாது ஒழிந்தன வரும் சூத்திரங்களான் உணர்க.

**வ-று: நம்பியை, நம்பியால், நம்பிக்கு என்புழிப் பெயரின் புறத்துறுப்பாய் ஐயுருபு முதலிய இடைச்சொல் ஒன்று வந்தது.** தச்சன், **தச்சச்சி,** முடியினன் என்புழிப் பெயரின் அகத்துறுப்பாய் விகுதி, இடைநிலை, சாரியை இடைச்சொற்கள் **பல** வந்தன. வினைக்குறிப்பின் அகத்துறுப்பாய் பல வருவனவும் அன்ன. நடந்தான், நடந்தனன் என்புழித் தெரிநிலைவினையின் அகத்துறுப்பாய் விகுதி, இடைநிலை, சாரியை இடைச்சொற்கள் பல வந்தன. அவன், எவன், **ஏனோன், ஏனையோன்** எனவும் போல, புரைய எனவும் சாத்தன் என்பான், சாத்தன் ஆயினான் எனவும் இடைச்சொல் அடியாகப் பிறந்த பெயராயும் வினையாயும் வினை இலக்கணையாயும் நிற்றலின் இவற்றின் பகுதி, விகுதி முதலியவும் அன்ன. "அதுமன்" (புறம். 147:9), "அதுமற் றம்ம" (வி. மே.) எனவும், "கொன்னூர்" (குறுந். 138:1), "ஓஒ வுவம னுறழ்வின்றி" (கள. 36:1) எனவும் பெயரின் **புறத்துறுப்பாய்ப்** பின்னும் முன்னும் ஒன்றும் பலவும் வந்தன. **"வருகதில்"** (அகம். 276:7), **"வருகதில் லம்ம"** (அகம். 276:7) **எனவும், "ஓஒ தந்தார்"** (நன். 419 மயிலை.), **"ஏயே யம்பன் மொழிந்தனள் யாயே"** (தொல். எச்ச. 15* இளம்.) **எனவும் தெரிநிலைவினையின் புறத்துறுப்பாய்ப் பின்னும் முன்னும் ஒன்றும் பலவும் வந்தன.** பிறவும் அன்ன.

இவற்றுள் சில ஒரோவழி விகாரப்பட்டு மன், கொன் எனற்பாலன மன்னை, கொன்னை என வருவனவும்[422] உள. அவை எல்லாம், "புதியன புகுதலும், வழுவல" (நூ. 462) என்பதன்பாற் படுத்துக. (1)

இடைச்சொற் பொருள்கள்

421. **தெரிநிலை தேற்ற மையமுற் றெண்சிறப்**
**பெதிர்மறை யெச்சம் வினாவிழை வொழியிசை**
**பிரிப்புக் கழிவாக்க மின்னன விடைப்பொருள்.**

எ-னின், மேல், "தத்தம் பொருள" (நூ. 420) என்றார்; அப்பொருளாவன இவை என்பது உணர்த்துதல் நுதலிற்று.

---

[422] **இவ்வாறு ஈறு திரிந்து நிற்பனவற்றை, "வருவது என்னாது வந்தொன்றுவது என்றதனால்" மயிலைநாதர் (நன். 419) கொள்வார்.**

*இ-ள்: தெரிநிலை முதலாக விதந்த பதினான்கும் இவை போல்வன பிறவும் மேல், "தத்தம் பொருள" (நூ. 420) என்ற இடைச்சொற் பொருள்களாம் எ-று.*

*'இன்னன' என்றதனால் சில வருமாறு: அக்கொற்றன், எக்கொற்றன் என்பன சுட்டுப்பொருளும் வினாப்பொருளும் தந்தன. நக்கீரர், நப்பாலத்தனார் என்புழி நகர இடைச்சொல் சிறப்புப்பொருள் தந்தது. "அஆ, இழந்தானென் றெண்ணப் படும்" (நாலடி. 9:3-4), "ஆஅ வளிய வலவன்றன் பார்ப்பினோடு" (யா. வி. 41), "அந்தோ விசையை பட்டனள்" (சீவக. 312:1*),*

*"அரக்காம்ப னாறும்வா யம்மருங்கிற் கன்னோ*
*பரற்கான மாற்றின கொல்லோ" (நாலடி. 396:1-2)*

*என்புழி அஆ, ஆஅ, அந்தோ, அன்னோ என்னும் இடைச்சொற்கள் இரங்குதற்பொருள் தந்தன. இவற்றிற்கு அதிசயப்பொருளும் உள. "அறிதோ றறியாமை கண்டற்றால்" (குறள். 1110), "சேரி தொறிது செல்வத் தியற்கையே" (சீவக. 129:4*) என்புழித் தோறு, தொறு என்னும் இடைச்சொற்கள் இடப்பன்மைப் பொருள் தந்தன. இனிச் செய்வான், இனி எம் எல்லை என்புழி இனி என்னும் இடைச்சொல் காலப்பொருளும் இடப்பொருளும் முறையே தந்தது. பிறவும் இவ்வாறு தனித்து நடக்கும் பெயர், வினை ஆகாது வருவன எல்லாம் கொள்க.* (2)

ஏகார இடைச்சொல்

{422} **பிரிநிலை வினாவெண் ணீற்றசை தேற்றம்**
**இசைநிறை யெனவா றேகா ரம்மே.**

*எ-னின், வேற்றுமை உருபு முதலிய நான்கும் மேலே (420) சொல்லப்பட்டமையின் அவற்றை ஒழித்து, ஏனையவற்றை*[423] *உணர்த்துவான் தொடங்கி, அவற்றுள் ஏகார இடைச்சொல் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.*

*இ-ள்: தெரிநிலை முதலிய பதினான்கும் (421) அவை போல்வன பிறவும் ஆகிய பொருள்களுள்ளும் இசை நிறைத்தல், அசைத்தல், குறிப்பு என்னும் மூன்று பொருள்களுள்ளும் (420) பிரிநிலை முதலிய ஆறு பொருளையும் தரும் ஏகார இடைச்சொல் எ-று.*

[423] **வேற்றுமை உருபு முதலிய நான்கு: ஐ முதலிய ஆறு வேற்றுமை உருபுகள், விகுதி முதலிய வினையுருபுகள், சாரியையுருபுகள், உவமவுருபுகள் ஆகியன. ஏனையவை: தத்தம் பொருள் உணர்த்துவன, இசைநிறைப் பொருளன, அசைநிலைப் பொருளன, குறிப்பின் வருவன என்னும் நான்கு.**

*வ-று:* அவனே கொண்டான் என்பது ஒரு குழுவினின்றும் ஒருவனைப் பிரித்து நிற்றலின் **பிரிநிலை. இவ்வேகாரம்** அவனே கொண்டான் என்னும் பொருள்பட வினாவி நிற்பின் வினா. நிலனே நீரே தீயே வளியே என்பது நிலனும் நீரும் தீயும் வளியும் என்னும் பொருள்பட எண்ணி நிற்றலின் எண். "கடல்போற் றோன்றல காடிறந் தோரே" (அகம். 1:19) என்பது சொல்லிறுதிக்கண் அசைத்தற்பொருள் தருதலின் ஈற்றசை. இவ்வேகார அசைநிலை முதற்கண் வாராது என்பார், 'ஈற்றசை' என்றார். அவனே கொண்டான் என்பது துணிதற்பொருள் தரின் தேற்றம். இத்தேற்றப்பொருள் பிரிநிலைக்கண்ணே உளது ஆதலின் இப்பொருளை வேறு எடுத்துக் கூறுதல் ஏனையபோற் சிறப்பு உடைத்து அன்று என்பார் இதனைப் பொருட்சிறப்பு இல்லா ஈற்றசைக்கும் இசைநிறைக்கும் இடையே கூறினார். "ஏஎ யிவளொருத்தி பேடியோ வென்றார்" (சீவக. 652:4*) என்பது இசை நிறைத்தற் பொருள் தருதலின் இசைநிறை. அவனே கொண்டான் என்பது ஒரோவழி அவன் கொள்கிலன் என எதிர்மறைப்-பொருள் **தரின் அது செம்பொருளன்றி** வலிந்து **கொள்ளப்படுதலின்,** "புதியன புகுதலும், வழுவல" (நூ. 462) என்பதன்பாற் படுத்துக. (3)

ஓகார இடைச்சொல்

423. **ஒழியிசை வினாச்சிறப் பெதிர்மறை தெரிநிலை**
**கழிவசை நிலைபிரிப் பெனவெட் டோவே.**

எ-னின், ஓகார இடைச்சொல் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: ஒழியிசை முதலிய எட்டுப் பொருளையும் தரும் ஓகார இடைச்சொல் எ-று.

*வ-று:* கொளலோ கொண்டான் என்பது கொண்டுய்யப் போயினான் அல்லன் என்றல் தொடக்கத்து ஒழிந்த சொற்களைத் தருதலின் ஒழியிசை. குற்றியோ மகனோ என்பது வினா. சிறப்பு உயர்வுசிறப்பு, இழிவுசிறப்பு என இருவகைத்து. ஓஒ பெரியன் என்பது உயர்வுசிறப்பு. ஓஒ கொடியன் என்பது இழிவுசிறப்பு. அவனோ கொண்டான் என்பது கொண்டிலன் என்னும் பொருள் தந்தவழி எதிர்மறை. அலியை நோக்கி ஆணோ அதுவும் அன்று, பெண்ணோ அதுவும் அன்று என்பது அத்தன்மை இன்மை தெரிந்தவழி நிற்றலின் தெரிநிலை. உறுதி உணராது கெட்டாரை, "ஓஒ தமக்கோ ருறுதி யுணராரோ" (நன். 422 மயிலை.) என்பது கழிவிரக்கப்பொருள் தருதலின் கழிவு."காணிய வம்மினோ கங்குலது நிலையே" (நன். 422 மயிலை.) என்பது அசைநிலை. அவனோ கொண்டான் என்பது பலருள்நின்றும் ஒருவனைப் பிரித்தமை கருதியவழிப் பிரிநிலை. இப்பொருள் எதிர்மறைக்கண்ணே உளது ஆதலின் அசைநிலையின் பின் வைத்தார். (4)

## என என்று என்னும் இடைச்சொற்கள்

**424. வினைபெயர் குறிப்பிசை யெண்பண் பாறினும்
எனவெனு மொழிவரு மென்று மற்றே.**

எ-னின், என எனவும் என்று எனவும் வரும் இடைச்சொல் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: வினைப்பொருள் முதலிய ஆறு பொருளினும் என என்னும் இடைச்சொல் வரும். என்று என்னும் இடைச்சொல்லும் அவ்வாறு வரும் எ-று.

வ-று: கொள்ளெனக் கொண்டான், மைந்தன் பிறந்தான் எனத் தந்தை உவந்தான் என்பது வினை. "ஊர் எனப்படுவது உறையூர்" (யா. வி. 1), "அழுக்கா றெனவொரு பாவி" (குறள். 168) என்பது பெயர். விண்ணென விசைத்தது, "பொள்ளென வாங்கே புறம்வேரார்" (குறள். 487) என்பது குறிப்பு. ஒல்லென ஒலித்தது, "நிலையருங் குட்டத்துத் துடுமெனப் பாய்ந்து" (புறம். 243:9*) என்பது இசை. நிலனென நீரெனத் தீயென வளியென வரும் பூதம் நான்கும் உருவம் என்பது எண். வெள்ளென விளர்த்தது, மெல்லென நடந்தது என்பது பண்பு. இங்ஙனம் எண்ணுப்பொருட்குக் காட்டிய பெயர்கள் தனித்து நில்லாது எண்ணி, அளவைப் பண்புப்பொருள் உணர்த்தலின் அப்பொருள் முதற்கண் நிறீஇய பெயர்ப்பொருள் அன்று என்க. என்று என்பதனையும் கொள்ளென்று கொண்டான் என முறையே இயையுமாறு ஒட்டுக.

சுட்டுப்பெயர் வினாப்பெயர்கட்குத் தமக்கு என ஒரு பொருளின்றிச் சுட்டவும் வினவவும் படும் பொருளாதி ஆறு பெயர்ப்பொருளே (132, 276) பொருளாக வருதல்போல இவ்விரண்டு இடைச்சொற்கும் தமக்கு என ஒரு பொருளின்றி வினை முதலியவாய் இங்ஙனம் விதந்தவற்றின் பொருளே பொருளாக வரும் என்பார் ஆறு பொருளையும் தரும் என்னாது, 'ஆறினும் வரும்' என்றார். (5)

## உம்மை இடைச்சொல்

**425. எதிர்மறை சிறப்பைய மெச்சமுற் றளவை
தெரிநிலை யாக்கமோ டும்மை யெட்டே.**

எ-னின், உம்மை இடைச்சொல் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: எதிர்மறை முதலிய எட்டுப் பொருளையும் தரும் உம்மை இடைச்சொல் எ-று.

வ-று: கொற்றன் வருதற்கும் உரியன் என்பது எதிர்மறை. "குறவரு மருளுங் குன்று" (மலைபடு. 275*), இவ்வூர்ப் பூசையும் புலால் தின்னாது என்பது உயர்வுசிறப்பு.

பார்ப்பானும் கள் உண்டான், "புலையனும் விரும்பாப் புன்புலால் யாக்கை" (அரிச். மயான. 128:1*) என்பது இழிவுசிறப்பு.

பூசையும் புலால் தின்னாது என்பதனை இழிவுசிறப்பு என்பாரும்[424] உளர். அங்ஙனம் ஆயின் ஒரு பொருளினது உயர்வைச் சிறப்பித்தல், இழிவைச் சிறப்பித்தல் எனப் பொருள்படாது, உயர்ந்த பொருளான் மற்றொன்றைச் சிறப்பித்தல், இழிந்த பொருளான் மற்றொன்றைச் சிறப்பித்தல் எனப் பொருள்படும். அவ்வாறு பொருள்படின் ஓகாரப் பொருளாய் வரும் உயர்வுசிறப்பிற்கும் இழிவுசிறப்பிற்கும் (423) ஆகாமையின் அது பொருந்தாது என்க. இனி இவ்வும்மைப் பொருளைக் குன்று முதலியவற்றிற் கொள்ளாது குறவர் முதலியவற்றிற் கொண்டு, பூசையும் என்பதனை இழிவு சிறப்பும்மை எனக் கோடலும் ஒன்று. இங்ஙனம் இழிவுசிறப்பு என்பதற்கு இழிவினுள் சிறந்த இழிவு எனப் பொருள் கூறுக. உயர்வுசிறப்பும் அது. பூசைக்குப் புலால் தின்னுதல் இழிபும் தின்னாமை சிறப்புமாகப் பொருள் கொளின் குறவர்க்கு மருளுதல் சிறப்பாக வேண்டும்; ஆதலின் அது பொருந்தாது என்க.

பத்தானும் எட்டானும் கொடு என்பது ஐயம். சாத்தனும் வந்தான் என்பது கொற்றன் வந்ததன்றி எனப் பொருள்படின் இறந்தது தழீஇய எச்சவும்மை; கொற்றனும் வருவான் எனப் பொருள்படின் எதிரது தழீஇய எச்சவும்மை. தமிழ்நாட்டு மூவேந்தரும் வந்தார், எல்லாரும் வந்தார் என்பது முற்றும்மை. சாத்தனும் கொற்றனும் தேவனும் பூதனும் வந்தார் என்பது எண்ணும்மை. ஆணும் அன்று; பெண்ணும் அன்று என்பது தெரிநிலையும்மை. தெரிநிலை ஓகாரம்போல் (423) பொருள் உரைத்துக்கொள்க. நெடியனும் ஆயினான், பாலும் ஆயிற்று என்புழி அவனே வலியனும் ஆயினான், அதுவே மருந்தும் ஆயிற்று எனப் பொருள்படின் ஆக்கவும்மை. (6)

## முற்றும்மைக்குச் சிறப்புவிதி

### 426. முற்றும்மை யொரோவழி யெச்சமு மாகும்.

எ-னின், முற்றும்மைக்கு எய்தியதன்மேல் சிறப்புவிதி உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: முற்றும்மை ஒரோவிடங்களின் எச்சவும்மையும் ஆம் எ-று.

வ-று: "ஆறுந் தருவது வினையே" (நன். 320) என்புழி ஐந்தும் தருவது வினையே

[424] நச்சினார்க்கினியர், கல்லாடர் (தொல். இடை. 7), வைத்தியநாத தேசிகர் (இல. விள. 256) முதலியோர் இழிவுசிறப்பு என்பர்.

என்றும் எல்லாரும் இது செய்யார் என்புழிச் சிலர் இது செய்வார் என்றும் முற்றும்மைப் பொருளும் எச்சவும்மைப் பொருளும் ஒருங்கு தருதல் காண்க. இங்ஙனம் தருதலின், 'எச்சமும்' என இறந்தது தழீஇய எச்சவும்மையால் கூறினார். (7)

### செவ்வெண்ணின்கண் எச்சவும்மை வருமாறு

427. **செவ்வெண் ணீற்றதா மெச்ச வும்மை.**

எ-னின், எச்சவும்மைக்கு ஆவதோர் விதி உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: எச்சவும்மை செவ்வெண்ணின்கண் வரும் ஆயின் ஈற்றின்கண் வரும் எ-று.

வ-று:

செய்பவன்[425] கருவி நிலஞ்செயல் காலஞ்
செய்பொரு ளுந்தருந் திறத்தது வினையே

என்புழி இவற்றுள் சிலவும் தரும் திறத்தது வினையே எனவும் கல்வி, செல்வம், ஒழுக்கம், குடிப்பிறப்பும் பெறுவாரும் உளர் என்புழி இவற்றுள் சில பெறுவாரும் உளர் எனவும் பொருள்படுதல் காண்க. (8)

### சில எண்ணிடைச்சொற்களுக்கு இலக்கணம்

{428} **பெயர்ச்செவ் வெண்ணே யென்றா வெனாவெண்**
**ணான்குந் தொகைபெறு மும்மையென் றெனவோ**
**டிந்நான் கெண்ணுமஃ தின்றியு மியலும்.**

எ-னின், முன்னர் எடுத்து விதந்தும் விதவாதும் வரும் சில எண்ணிடைச்சொற்கட்கு ஆவதோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: பெயர்களினிடையே எண்ணிடைச்சொல் தொக்கு நிற்ப வரும் செவ்வெண்ணும் பெயரோடு தொகாது வரும் ஏகாரவெண்ணும் என்றாவெண்ணும் எனாவெண்ணும் ஆகிய நான்கும் தொகை பெற்று நடக்கும். உம்மையெண்ணும் என்றெண்ணும் எனவெண்ணும் ஒடெண்ணும் ஆகிய இந்நான்கு எண்ணும் தொகை பெற்றும் பெறாதும் நடக்கும் எ-று.

---

[425] **இது, "செய்பவன் கருவி" என்னும் வினையியல் நூற்பாவின் (320) பாடபேதமாக இருக்கலாம் என்று சாமிநாதையர் (1935 பக். 411), தண்டபாணி தேசிகர் (1957 பக். 462; 1971 பக். 614) முதலியோர் கருதுவர். அதற்குத் தக்க சான்று இல்லை.**

பெயரெண் என்னாது, 'செவ்வெண்' என்றதனால் அஃது எண்ணிடைச்சொல் தொக்க தொகைநிலை என்பதூஉம் அங்ஙனம் ஆதலின் அதனையும் ஏகாரம் முதலிய எண்ணிடைச்சொற்களோடு உடன் **கூறப்பட்டது** என்பதூஉம் பெற்றாம்.

வ-று: சாத்தன் கொற்றன் தேவன் பூதன் நால்வரும் வந்தார், சாத்தனே கொற்றனே தேவனே பூதனே நால்வரும் வந்தார், சாத்தனென்றா கொற்றனென்றா தேவனென்றா பூதனென்றா நால்வரும் வந்தார், சாத்தனெனாக் கொற்றனெனாத் தேவனெனாப் பூதனெனா நால்வரும் வந்தார். இவை தொகை பெற்றே வந்தன. பெயர்ச் செவ்வெண் தொகை பெறுதற்கு இச்சூத்திரத்தைக் காட்டினும் அமையும்.

இவை வழக்கிடத்து ஒரோவழித் தொகை பெறாது வரின் இசையெச்சமாகவும் செய்யுட்கண் தொகை பெறாது வரின், "தொகுக்கும்வழித் தொகுத்த"லாய் (தொல். எச்ச. 7) அமையின் அவ்விகாரமாகவும் அன்றேல் இசையெச்சமாகவும் கொள்க.

சாத்தனும் கொற்றனும் தேவனும் பூதனும் நால்வரும் வந்தார், சாத்தனென்று கொற்றனென்று தேவனென்று பூதனென்று **நால்வர் உளர்,** சாத்தனெனக் கொற்றனெனத் தேவனெனப் பூதனென நால்வர் உளர், சாத்தனோடு கொற்றனோடு தேவனோடு பூதனோடு நால்வர் **இவன்** மைந்தர் எனவும் சாத்தனும் கொற்றனும் தேவனும் பூதனும் வந்தார், நிலனென்று நீரென்று தீயென்று காற்றென்று அளவறு காயமென்று ஆகிய உலகம், நிலனென நீரெனத் தீயெனக் காற்றென அளவறு காயமென ஆகிய உலகம், நிலனோடு நீரோடு தீயோடு காற்றோடு அளவறு காயமோடு ஆகிய பூதம் எனவும் இவை தொகை பெற்றும் பெறாதும் வந்தன. (9)

### சில எண்ணிடைச்சொற்களுக்குச் சிறப்புவிதி

429. **என்று மெனவு மொடுவு மொரோவழி**
**நின்றும் பிரிந்தெண் பொருடொறு நேரும்.**

எ-னின், எண்ணிடைச்சொல்லுள் சிலவற்றிற்கு எய்தியதன்மேல் சிறப்புவிதி உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: இம்மூன்று எண்ணும் எண்ணும் பொருள்தோறும் நிற்றலே அன்றி, ஓர் இடத்து நின்றும் பிரிந்து எண்ணும் பொருள்தோறும் பொருந்தும் எ-று.

வ-று:

"வினைபகை யென்றிரண்டி னெச்ச நினையுங்கால்
தீயெச்சம் போலத் தெறும்" (குறள். 674),

"பகைபாவ மச்சம் பழியென நான்கும்
இகவாவா மில்லிறப்பான் கண்" (குறள். 146),

"பொருள்கருவி காலம் வினையிடனொ டைந்தும்
இருடீர வெண்ணிச் செயல்" (குறள். 675)

என வரும்.

எண்ணும் பொருள்தோறும் தனித்தனி நிற்றலினும் ஒரோவழி நின்று பிரிதல் இம்மூன்று எண்ணிற்கும் அமைந்து கிடந்தன ஆதலின் ஈண்டும் கூறப்பட்டன. எனவே ஏனை எண்கட்கு எண்ணும் பொருள்தோறும் நிற்கும் நிலையே சிறந்தன என்பதூஉம் ஒரோவழி நின்று பிரிதல் வலிந்து கொளற்பாலன என்பதூஉம் அவை ஈண்டு அமையாது, தீவகம்[426] என்னும் அணியிலக்கணத்தின்பாற் படும் என்பதூஉம் பெற்றாம். (10)

## எண்ணிடைச்சொற்கள் வினையோடு வருதல்

**{430} வினையொடு வரினுமெண் ணினைய வேற்பன.**

எ-னின், மேல் பெயரோடு வந்த எண்ணிடைச்சொற்கள் வினையோடு வருமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: எண்ணிடைச்சொற்கள் வினையோடு வரினும் மேல் பெயரோடு வந்தாற் போலும் **ஏற்பன** எ-று.

'ஏற்பன' எனவே வினையோடு ஏலா எண் வருதலும் தொகை பெறுதலும் இல்லை என்க.

வ-று:

"மண்டில மழுங்க மலைநிறங் கிளர
வண்டின மலர்பரந் தூத மிசையே
கண்டற் கானங் குருகின மொலிப்ப" (அகம். 260:1-3*)

[426] செய்யுளின் முதல், இடை, கடை என்னும் ஓர் இடத்து நின்ற சொல் ஏனை இடத்து நின்ற சொற்களோடு சென்று பொருந்திப் பொருளை விளக்குவது (வீர. 150; தண்டி. 40; மாறன். 160) தீவக அணி. விளக்கணி என்பது தமிழ் வழக்கு.

என்பது செவ்வெண். கற்றும் கேட்டும் கற்பனை கடந்தான் என்பது உம்மையெண். உண்ணவென்று உடுக்கவென்று பூசவென்று முடிக்கவென்று வந்தான் என்பது என்றெண். உண்ணவென உடுக்கவெனப் பூசவென முடிக்கவென வந்தான் என்பது எனவெண். உண்ண உடுக்கப் பூச முடிக்கவென்று வந்தான், உண்ண உடுக்கப் பூச முடிக்கவென வந்தான்,

"நன்னிதி பெறுக நாடொறும் வாழ்கவென்
றுன்னுமிவ் வேட்கை யொழிந்தன ரிலரே" (வி. மே.)

என்பன என்றும் எனவும் ஒரோவழி நின்றும் பிரிந்தன. பிறவற்றுள்ளும் ஏற்பன வந்தவழிக் காண்க.

சாத்தன் வந்தான், கொற்றன் வந்தான் இருவரும் வந்தமையால் கலியாணம் பொலிந்தது என வினைச் செவ்வெண் தொகை பெற்றது என்பாரும்[427] உளர். தொகைச்சொல் பெயர் ஆதலின் அறுவகைப் பெயர்களோடு (132, 276) பொருந்தி இருபெயரொட்டு ஆமன்றி வினையோடு பொருந்தாமையானும் இங்ஙனம் இருவர் என்னும் தொகை சாத்தன் கொற்றனாகிய இருவர் எனப் பெயர்த்தொகை ஆதலா-னும் அது பொருந்தாது என்க. (11)

தில் இடைச்சொல்

431. **விழைவே கால மொழியிசை தில்லே.**

எ-னின்[428] தில் என்னும் இடைச்சொல் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: இம்மூன்று பொருளையும் தரும் தில் என்னும் இடைச்சொல் எ-று.

வ-று:

"வார்ந்திலங்கு வையெயிற்றுச் சின்மொழி யரிவையைப்
பெறுகதில் லம்ம யானே" (குறுந். 14:2-3)

என்பது பெறுதல் வேட்கையை உணர்த்தலின் விழைவு. "பெற்றாங், கறிகதில் லம்மவிவ் வூரே" (குறுந். 14:3-4) என்பது பெற்ற காலத்து அறிக எனக் காலத்தை உணர்த்தலின்

---

[427] இளம்பூரணர் உரையைத் (தொல். இடை 45) தழுவி வினைச் செவ்வெண் தொகை பெற்றது என்று மயிலைநாதர் (நன். 429) கூறுவார்; நச்சினார்க்கினியரும் இவ்வாறே உரை காண்பார். வைத்தியநாத தேசிகரும் (இல. விள. 262) சங்கர நமச்சிவாயரும் சேனாவரையர் உரையைத் தழுவி இவ்வுரையை மறுப்பர்.

[428] இது தொல்காப்பிய (இடை. 5) நூற்பாவின் திரிபு.

காலம். "வருகதில் லம்மவெஞ் சேரி சேர" (அகம். 276:7) என்பது வந்தால் ஒன்று செய்வல் என்னும் சொல் ஒழிந்து நிற்றலின் ஒழியிசை. (12)

மன் இடைச்சொல்

432. **மன்னே யசைநிலை யொழியிசை யாக்கங்**
**கழிவு மிகுதி நிலைபே றாகும்.**

எ-னின், மன் என்னும் இடைச்சொல் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: இவ் ஆறு பொருளையும் தரும் மன் என்னும் இடைச்சொல் எ-று.

வ-று: "அதுமன் கொண்கன் றேரே" (தொல். இடை. 47 இளம்.) என்பது அசைநிலை. "கூரியதோர் வாண்மன்" (தொல். இடை. 4 இளம்.) என்புழி அதனாற் கருந்தாது அறத் துணித்தது என்னும் சொல் ஒழிய நின்றமையின் ஒழியிசை. "நெடியன்மன்" (வி. மே.) என்புழி அவனே வலியனும் ஆயினான் எனப் பொருள் தரின் ஆக்கம். "சிறியகட் பெறினே யெமக்கீயு மன்னே" (புறம். 235:1) என்புழி இப்பொழுது அவன் இறத்தலின் எமக்கு ஈதல் கழிந்தது எனப் பொருள் தருதலின் கழிதல். "எந்தை யெமக்கருளுமன்" (வி. மே.) என்புழி மிகுதியும் அருளும் எனப் பொருள் தருதலின் மிகுதி. "மன்னா வுலகத்து மன்னியது புரைமே" (கலி. 54:20*) என்புழி இவ்விடைச்சொல் அடியாகப் பிறந்த வினையுள் மன் என்பது நிலையினை உணர்த்தினமையின் நிலைபேறு. (13)

மற்று இடைச்சொல்

433. **வினைமாற் றசைநிலை பிறிதெனு மற்றே.**

எ-னின், மற்று என்னும் இடைச்சொல் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: இம்மூன்று பொருளையும் தரும் மற்று என்னும் இடைச்சொல் எ-று.

வ-று: "மற்றறிவா நல்வினை யாமிளைய மென்னாது" (நாலடி. 19:1) என்பது விரைந்து அறிவாம் என்னும் வினையை ஒழித்து, விரையாது அறிவாம் என்னும் வினையைத் தந்து நின்றமையின் வினைமாற்று. "மற்றடிகள் கண்டருளிச் செய்ய மலரடிக்கீழ்" (சீவக. 1873:1*) என்பது அசைநிலை.

"ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினுந் தான்முந் துறும்" (குறள். 380)

என்பது ஊழல்லது ஒன்று என்னும் பொருள் தந்தமையின் பிறிது. (14)

## மற்று இடைச்சொல்லுக்குப் புறனடை

{434} **மற்றைய தென்பது சுட்டிய தற்கினம்.**

எ-னின், மேலதற்கு ஓர் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: **மேற் கூறிய** மற்று என்னும் இடைச்சொற் பொருள் மூன்றனுள் மற்றையது என்னும் **பொருளாகிய** வினைமாற்றும் பிறிதும் அங்ஙனம் கருதியதற்கு இனமாகிய வினைமாற்றும் இனமாகிய பிறிதும் ஆமன்றி வேறு வினைமாற்றும் வேறு பிறிதும் அல்லவாம் எ-று.

மேற் காட்டிய (433) உதாரணத்துள் நல்வினையை விரைந்து அறிவாம் எனக் கருதியதற்கு விரையாது அறிவாம் எனவும் ஊழ் ஒன்று எனக் கருதியதற்கு ஊழல்லது ஒன்று எனவும் இனம் வந்தவாறு காண்க.

வேறு பிறிதாவது என்னை எனின் இரண்டு மணி உள்வழி ஒன்று கண்டான் மற்றொன்று காண வேண்டும் என்றான் **ஆகின்** மற்றொன்று என்பதற்கு இனம் ஆகியதோர் மணி எனப் பொருள் கொள்ளாது ஆடை, அணி **எனப்** பொருள் கோடல் என்க. வினைமாற்றும் இவ்வாறே காண்க.

மேலைச் சூத்திரத்துள் வினைமாற்று எனவும் பிறிது எனவும் பொதுப்படக் கூறினமையின் இச்சூத்திரத்தால் புறனடை கொடுத்துக் காத்தார் என்க.

இச்சூத்திரத்திற்கு இவ்வாறன்றி, மற்றையது என்பதனை ஓர் இடைச்சொல்லாக வைத்து அச்சொல் அங்ஙனம் கருதிய பொருட்கு இனமாகிய பொருளைத் தரும் எனப் பொருள் கூறுவாரும்[429] உளர். மற்றையது என்பது இடைச்சொல் அடியாகப் பிறந்த பெயரும் வினைக்குறிப்பும் ஆம் ஆதலானும் **விகுதி** கூறினாரேனும்[430] பகுதிப்பட்ட மற்றை என்னும் ஐகாரவீற்று **இடைச்சொற்கு இப்பொருள்**[431] கூறினார் எனின் மன் மன்னை, கொன் கொன்னை என நின்றாற்போல மற்று மற்றை என இறுதி விகாரமாய் நின்றதன்றி இதற்கு என வேறு பொருள் இன்மையானும் அதனோடு இதற்கு வேற்றுமை **இஃது** இனத்தையே தருதல் எனப் பொருள் கொளின் மற்று

[429] மயிலைநாதர் (நன். 433) மற்றையது என்பதனைத் தனி இடைச்சொல்லாகக் கொண்டு இவ்வாறு பொருள் கூறுவார்.

[430] "விகுதியோடு கூறினாரேனும்" என்பதும் பாடம்.

[431] சேனாவரையர், நச்சினார்க்கினியர், தெய்வச்சிலையார் (தொல். இடை. 16) முதலியோர் மற்றை என்பதனை ஐகாரவீற்று இடைச்சொல்லாகக் கொள்வர். அதோடு, "மேல் வினைமாற்று என்றார்; இது பொருள்மாற்று என்பதனை விளக்குதற்கு அது என்பதனைக் கூட்டி உரைத்தார்." என்று தெய்வச்சிலையார் நயவுரையும் கூறுவார்.

என்பது இனத்தையும் **இனம் அல்லதையும்** தரும் எனப் பொருள்படும் ஆதலானும் எல்லாவற்றானும் இனமாய் உள்ளதே வினைமாற்றும் பிறிதுமாய் வருமன்றி இனம் அல்லது ஒருவாற்றானும் வாராமையானும் அது பொருந்தாது என்க. (15)

## கொல் என்னும் இடைச்சொல்

### 435. . கொல்லே யைய மசைநிலைக் கூற்றே.

எ-னின்[432] கொல் என்னும் இடைச்சொல் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: கொல் என்பது இவ்விரண்டு பொருளையும் தரும் சொல்லாம் எ-று.

வ-று: இவ்வுருக் குற்றிகொல் மகன்கொல் என்பது குற்றியோ மகனோ என்னும் பொருள்பட வருதலின் ஐயம்.

"பிரிவெண்ணிப் பொருள்வயிற் சென்றநங் காதலர்
வருவர்கொல் வயங்கிழாய்" (கலி. 11:4-5)

என்பது அசைநிலை. (16)

## ஒடு தெய்ய என்னும் இடைச்சொற்கள்

### 436. ஒடுவுந் தெய்யவு மிசைநிறை மொழியே.

எ-னின், ஒடு எனவும் தெய்ய எனவும் வரும் இடைச்சொல் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: இவ்விரண்டும் இசை நிறைத்தற் பொருளைத் தரும் சொற்களாம் எ-று.

வ-று:

"முதைப்புனங் கொன்ற வார்கலி யுழவர்
விதைக்குறு வட்டி போதொடு பொதுள" (குறுந். 155:1-2)

எனவும், "சொல்லேன் தெய்ய நின்னொடு பெயர்த்தே" (தொல். இடை. 48* சேனா.) எனவும் வரும். (17)

## அந்தில் ஆங்கு என்னும் இடைச்சொற்கள்

### 437. அந்திலாங் கசைநிலை யிடப்பொரு ளவ்வே.

---

[432] இது தொல்காப்பிய (இடை. 20) நூற்பாவின் திரிபு.

எ-னின், அந்தில் எனவும் ஆங்கு எனவும் வரும் இடைச்சொல் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: இவ்விரண்டு இடைச்சொல்லும் அசைநிலைப் பொருளவாயும் இடப் பொருளவாயும் வரும் எ-று.

வ-று:

"அந்திற்
கழலினன் கச்சினன்" (அகம். 76:6-7*)

என்பது அசைநிலை.

"வருமே சேயிழை யந்திற்
கொழுநற் காணிய" (குறுந். 293:7-8*)

என்பது அவ்விடத்து என்னும் பொருள் தருதலின் இடம்.

"ஆங்கத்,
திறனல்ல யாங்கழற" (கலி. 86:25-26*)

என்பது அசைநிலை. இதனுள் ஆங்கு என்னும் அசைநிலை ஆங்க என இறுதி விகாரமாய் நின்றது. "ஆங்காங் காயினு மாக" (முருகு. 250*) என்பது இடம். (18)

## அம்ம என்னும் இடைச்சொல்

### 438. அம்ம வுரையசை கேண்மினென் றாகும்.

எ-னின், அம்ம என்னும் இடைச்சொல் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: அம்ம என்பது உரையசைப் பொருளதாயும்[433] ஒன்று சொல்வன் கேண்மின் என்னும் ஏவற் பொருளதாயும் வரும் எ-று.

வ-று: "அதுமற் றம்ம" (வி. மே.) என்பது உரையசை. இது செய்யுட்கண் வரினும் அச்செய்யுளின்பொருட்டன்றித் தான் அடைந்த சொல்லின்பொருட்டு வருதலின் உரையசை ஆயிற்று. "அம்ம வாழி தோழி" (நற். 158:1) என்பது ஒன்று சொல்வன் கேள் என்னும் ஏவற்பொருள் தந்தது. (19)

---

[433] "சிறிது பொருள் உணர்த்துவனவற்றை உரையசை என்றும் பொருள் உணர்த்தாது, சொற்களை அசைத்து நிற்பனவற்றை அசைநிலை" என்றும் நச்சினார்க்கினியர் (தொல். இடை. 29) இவை இரண்டையும் வேறுபடுத்துவார்.

### மா என்னும் இடைச்சொல்

**439. மாவென் கிளவி வியங்கோ ளசைச்சொல்.**

எ-னின்[434] மா என்னும் இடைச்சொல் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: மா என்னும் சொல் வியங்கோளின்கண் வரும் அசைச்சொல்லாம் எ-று.

வ-று: "மாயக் கடவுட் குயர்கமா வலனே" (தொல். இடை. 25 இளம்.), "உப்பின்று, புற்கை யுண்கமா கொற்கை யோனே" (தொல். உயிர். 35 இளம்.) என வரும். (20)

### முன்னிலை அசைச்சொற்கள்

**440. மியாயிக மோமதி யத்தை யித்தை**
**வாழிய மாளவீ யாழமுன் னிலையசை.**

எ-னின், மியா முதலிய இடைச்சொற்களின் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: இங்ஙனம் கூறிய பத்து இடைச்சொற்களும் முன்னிலைக்கண் வரும் அசைநிலைகளாம் எ-று.

வ-று:

"சிலையன் செழுந்தழையன் சென்மியா வென்று
மலையகலான் வாடி வரும்" (யா. வி. 2*)

எனவும், "தண்டுறை யூர காணிக வெனவே" (நன். 439* மயிலை.) எனவும், "காமஞ் செப்பாது கண்டது மொழிமோ" (குறுந். 2:2) எனவும், "சென்மதி பெரும" (தொல். இடை. 26 இளம்.) எனவும்,

"மெல்லியற் குறுமக ளுள்ளிச்
செல்வ லத்தை" (புறம். 196:14-15)

எனவும், "வேய்நரல் விடரக நீயொன்று பாடித்தை" (கலி. 40:10) எனவும், "காணியவா வாழிய மலைச்சாரல்" (நன். 439 மயிலை.) எனவும்,

"சிறிது தவிர்ந் தீக மாளநின்
பரிசில ருய்ம்மார்" (நன். 439 மயிலை.)

எனவும், "சென்றீ பெருமநிற் றகைக்குநர் யாரே" (அகம். 46:16*) எனவும், "நீயே,

---

[434] இது தொல்காப்பிய (இடை. 25) நூற்பா.

செய்வினை மருங்கிற் செலவயர்ந் தியாழ" (கலி. 7:5) எனவும் முறையே காண்க. (21)

## எல்லா இடத்தும் வரும் அசைச்சொற்கள்

441. **யாகா பிறபிறக் கரோபோ மாதிகுஞ்**
**சின்குரை யோரும் போலு மிருந்திட்**
**டன்றாந் தாந்தான் கின்றுநின் றசைமொழி.**

*எ-னின், யா முதலிய இடைச்சொற்களின் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.*

*இ-ள்: இவ்விருபது இடைச்சொல்லும் முன்னைய போலாது எல்லா இடத்தினும் எல்லாச் சொல்லினும் வரும் அசைச்சொல்லாம் எ-று.*

*விதவாமையின் எல்லா இடத்தினும் எல்லாச் சொல்லினும் வரும் என்பது பெற்றாம்.*

*வ-று:*

"வாழ்கநின் கழலடி மைந்த வென்னவே
தோழியா சுவாகதம் போத வீங்கிதென்" *(சீவக. 1021:1-2*)*

எனவும்,

"அறநிழ லெனக்கொண்டாய் நின்குடை யக்குடைப்
புறநிழற் பட்டாளோ விவளிவட் காண்டிகா" *(கலி. 99:8-9*)*

எனவும்,

"மேயுநிரை முன்னர்க் கோலூன்றி நின்றாயோர்
ஆயனை யல்ல பிற" *(கலி. 108:11-12)*

எனவும், "பிறக்கதனுட் செல்லான் பெருந்தவப் பட்டான்" (நன். 440 மயிலை.) எனவும், "நோதக, விருங்குயி லாலு மரோ" (கலி. 33:24-25) எனவும்,

"எரியி னன்ன செந்தலை யன்றில்
பிரியின் வாழா தென்போ" (நன். 440 மயிலை.)

எனவும், "விளிந்தன் று மாதோ தெளிந்தவெங் கண்ணே" (நற். 178:10*) எனவும், "கண்டிகு மல்லமோ கொண்க" (ஐங். 121:1) எனவும், "ஈங்கா கியவா லென்றிசின்" (நற். 55:12*) எனவும், "அது பெறலருங் குரைத்தே" (புறம். 5:8) எனவும், "அஞ்சுவ தோரு மறனே" (குறள். 366) எனவும், "வடுவென்ற கண்ணாய் வருந்தினை போலும்" (நன். 440 மயிலை.) எனவும்,

"ஓராற்றா லென்கண் ணிமைபொருந்த வந்நிலையே
கூரார்வேன் மாறனென் கைப்பற்ற - ஓரா
நனவென் றெழுந்திருந்தே னல்வினையொன் றில்லேன்
கனவு மிழந்தொழிந்த வாறு" (முத்.*)

எனவும், "நெஞ்சம் பிளந்திட்டு" (கலி. 101:19) எனவும், "தேவாதி தேவ னவன்சேவடி சேர்து மன்றே" (சீவக. 1:4) எனவும்,

"பணியுமா மென்றும் பெருமை சிறுமை
அணியுமாந் தன்னை வியந்து" (குறள். 978)

எனவும் நீர்தாம் எனவும் நீதான் எனவும், "யான்பிற னளியன் வாழ்வா னாசைப்பட்டி ருக்கின் றேன்" (சீவக. 1487:4) என்புழி ஆசைப்பட்டேன் என்பது பொருள் ஆதலின் கின்று என்பது நிகழ்கால இடைநிலை அன்று எனவும்,

"அழலடைந்த மன்றத் தரந்தயராய் நின்றார்
நிழலடைந்தே நின்னையென் றேத்தி" (பு. வெ. 42:1-2*)

எனவும் முறையே காண்க. பிறவும் அன்ன. (22)

இடையியல் முற்றிற்று.

ஐந்தாவது

## உரியியல்

### உரிச்சொல்லின் பொது இலக்கணம்

{442} **பல்வகைப் பண்பும் பகர்பெய ராகி
ஒருகுணம் பலகுணந் தழுவிப் பெயர்வினை
ஒருவா செய்யுட் குரியன வுரிச்சொல்.**

எ-னின், நிறுத்த முறையானே (270) உரிச்சொல் இலக்கணம் இவ்வியலான் உணர்த்துவான் தொடங்கி, அவற்றின் பொது இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: **பண்புகள்** குணப்பண்பும் (452, 454) தொழிற்பண்பும் (453, 455) ஆகிய இரண்டனுள் அடங்கும் **ஆயினும் இசை, குறிப்பு, பண்பு**[435] **எனப் பல வேறு வகைப்படுதலின்** பல வேறு வகைப்பட்ட பண்புகளையும் உணர்த்தும் பெயராகி, அங்ஙனம் உணர்த்துழி ஒரு சொல் ஒரு குணத்தை உணர்த்துவனவும் (456, 458, 459) பல குணத்தை உணர்த்துவனவுமாய் (457), ஏனைப் பெயர்வினைகளை விட்டு நீங்காவாய்ச், செய்யுட்கு உரியனவாய்ப், பொருட்கு உரிமை பூண்டு வருவன உரிச்சொல்லாம் எ-று.

இவ்வாறு வருதல் மேற் காட்டும் உதாரணங்களுள் காண்க.

இவையும் பண்புப்பெயர் ஆயினும் ஏனைப் பெயர் வினைகளை விட்டு நீங்காமையின் வேறு ஓதப்பட்டன என்பதூஉம் செய்யுட்கு **உரியனவாய்ப் பொருட்கு உரிமை பூண்டன** ஆதலின் இவற்றிற்கு உரிச்சொல் எனக் காரணக்குறி போந்தது என்பதூஉம் இவற்றின் இலக்கணம் கூறிய முகத்தான் உணர்த்தியவாறு காண்க.

**இசை- ஓசை. குறிப்பு- மனத்தான் குறித்து உணரப்படுவது. பண்பு - பொறியால் உணரப்படும்**[436] **குணம். இவற்றை அடக்கி நின்ற குணமும் தொழிலும் பொருள் எனவும் படும் ஆதலின் இவற்றை உணர்த்தும் உரிச்சொல்லும் பெயர்ச்சொல் எனப்படும். ஆதலின், 'பல்வகைப் பண்பும் பகர்பெய ராகி' என்றார்.** (1)

---

[435] "இசையினுங் குறிப்பினும் பண்பினுந் தோன்றி" (தொல். உரி. 1) என்பது தொல்காப்பியம்.

[436] இந்நூற்பாவில் உள்ள புத்தம் புத்துரைப் பகுதிகளைச் சேனாவரையர் (தொல். உரி. 1) உரையோடு ஒப்பிடுக.

பண்பு

443. **உயிருயி ரல்லதாம்* பொருட்குணம் பண்பே.**

எ-னின்[437] மேல், "பண்பு" (நூ. 442) என்றார்; அஃது இஃது என உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: உயிராகிய பொருளும் உயிர் அல்லாத பொருளும் என இருவகையுள் அடங்கும் உலகத்துப் பொருள்களின் குணங்கள் பண்பாம் எ-று.

கடவுட்பொருளை ஒழித்தார் அதற்கு ஓர் குணம் இன்மையானும்[438] உண்டேல் சுட்டப்பட்டு உலகப்பொருள் ஆம் ஆதலானும் என்க. (2)

உயிர்ப்பொருள்

{444} **மெய்ந்நா மூக்கு நாட்டஞ் செவிகளின்
ஒன்றுமுத லாக்கீழ்க் கொண்டுமே லுணர்தலின்
ஓரறி வாதியா வுயிரைந் தாகும்.**

எ-னின், மேல் உயிராகிய பொருள் என்றார்; அவை இவை எனத் தொகுத்து உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: இங்ஙனம் மெய் முதலாகக் கூறிய ஐம்பொறிகளானும் பரிசம், இரதம், கந்தம், உருவம், சத்தம் என்னும் ஐம்புலனையும் உணருங்கால் மெய்யால் பரிசத்தை உணரும் உணர்ச்சி ஒன்று முதலாகக் கீழ்ப் போன உணர்ச்சியும் கொண்டு, மேல் வரும் புலன்களை ஒன்றோடு ஒன்றாக உணர்தலின் ஓரறிவுயிர் முதலாக ஐந்து ஆம் அவ்வுயிர்[439] எ-று. (3)

ஓரறிவுயிர்

{445} **புன்மர முதலவுற் றறியுமோ ரறிவுயிர்.**

எ-னின், மேற் கூறிய உயிர் ஐந்தனுள் ஓரறிவுயிர் இவை என உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: புல்லும் மரமும் முதலியன மெய்யால் பரிசித்துப் பரிசத்தை அறியும் ஓரறிவுயிர்களாம் எ-று. (4)

---

[437] "உயிருயி ரில்லதாம்" என்பது சங்கர நமச்சிவாயர் பாடம்.

[438] திருவள்ளுவர் கடவுளை, "எண்குணத்தான்" (குறள். 9) என்ற தொடரால் குறிப்பார்.

[439] "ஆறறி வதுவே அவற்றொடு மனனே" (மரபு. 27) என்பது தொல்காப்பியம்.

ஈரறிவுயிர்

446. **முரணந் தாதிநா வறிவொடீ ரறிவுயிர்.**

எ-னின், ஈரறிவுயிர் இவை என உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: இப்பியும் சங்கும் முதலியன கீழ்ப் போன மெய்யறிவே அன்றி நாவால் இரதத்தை அறியும் அறிவோடு ஈரறிவுயிர்களாம் எ-று. (5)

மூவறிவுயிர்

447. **சிதலெறும் பாதிமூக் கறிவின்மூ வறிவுயிர்.**

எ-னின், மூவறிவுயிர் இவை என உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: கறையானும் எறும்பும் முதலியன கீழ்ப் போன இரண்டு அறிவுகளே அன்றி மூக்கால் கந்தத்தையும் அறியும் அறிவினோடு மூவறிவுயிர்களாம் எ-று.

மேல், "ஒடு"வை (நூ. 446) ஈண்டும் வருவித்துக்கொள்க. (6)

நாலறிவுயிர்

448. **தும்பிவண் டாதிகண் ணறிவினா லறிவுயிர்.**

எ-னின், நாலறிவுயிர் இவை என உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: தும்பியும் வண்டும் முதலியன கீழ்ப் போன மூன்று அறிவே அன்றிக் கண்ணால் உருவத்தை அறியும் அறிவினோடு நாலறிவுயிர்களாம் எ-று. (7)

ஐயறிவுயிர்

{449} **வானவர் மக்க ணரகர் விலங்குபுள்**
**ஆதிசெவி யறிவோ டையறி* வுயிரே.**

எ-னின்[440] ஐயறிவுயிர் இவை என உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: வானவரும் மக்களும் நரகரும் விலங்கும் புள்ளும் முதலியன கீழ்ப் போன நாலறிவே அன்றிச் செவியால் சத்தத்தை அறியும் அறிவினோடு ஐயறிவுயிர்களாம் எ-று.

சித்துப்பொருள், சடப்பொருள் என்பார், "உயிருயி ரல்லதாம் பொருள்" (நூ.

---

[440] "யறிவொ டையறி" என்பது சங்கர நமச்சிவாயர் பாடம்.

443) எனக் கூறியவாறும் சித்தாகிய உயிரறிவு சடமாகிய உடலோடு கூடியவழியன்றி நிகழாமையானும் அந்நிகழ்ச்சி கண்டல்லது உயிர் உண்டு என்பதூஉம் அதற்கு ஓர் அறிவு உண்டு என்பதூஉம் தோன்றாமையானும் உயிரைப் பிரித்து ஓதாது, உடலோடு கூட்டிப், "புன்மர முதல" (நூ. 445) என முறையே கூறியவாறும் அவ்வுயிரறிவு உடலோடு கூடி நிகழ்வழி ஐம்பொறியானும் ஐந்தாய் நிகழ்தலின், 'ஐயறிவு' எனக் கூறியவாறும் இவ் ஐம்பொறியும் எல்லா உடற்கண்ணும் ஒருங்கு நில்லாது, இங்ஙனம் கூறிய முறையே (445-449) நின்று அறிவை நிகழ்த்தலின் உயிர்கள் பல ஆயினும் அறியும் வகையான் உயிர் ஐந்து எனக் கூறியவாறும் காண்க.

ஆசிரியர் தொல்காப்பியர், "மக்க டாமே யாறறி வுயிரே" (தொல். மரபு. 33) எனக் கூறியிருக்க, மக்கள் முதலியோரை ஐயறிவுயிர் எனக் கூறல் மாறுகொளக் கூறலாம்[441] பிற எனின் மக்கள் முதலியோர் மன அறிவோடு ஆறறிவுயிர் என்பது நோக்கி அன்றே முன்னர், "மக்க டேவர் நரக ருயர்திணை" (நூ. 261) எனக் கூறிப் போந்ததூஉம்; ஆதலின் இங்ஙனம் ஐம்புலன் மாத்திரையே நுகரும் அறிவுடைய மக்கள் முதலியோரை விலங்கு முதலியவற்றோடு எண்ணி, ஐயறிவுயிர் எனக் கூறினார் என உய்த்துணர்ந்து கொள்க. (8)

உயிரல் பொருள்

450. உணர்விய லாமுயி ரொன்று மொழித்த
உடன்முத லனைத்து முயிரல் பொருளே.

எ-னின், உயிரல் பொருளாவன இவை என உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: அறிவுமயமாம் உயிர் ஒன்றுமே அன்றி, அவ்வுடம்பு முதலிய உலகத்துப் பொருள்கள் எல்லாம் உயிர் அல்லாத பொருள்களாம் எ-று.

முன்னர் உயிர் மாத்திரையே கூறுவார் உடம்பொடு கூட்டிக் கூறினாரன்றி, உடம்பையும் உளப்படுத்தி, உயிர்ப்பொருள் என்றார் அல்லர் என்பது இதனான் உணர்க. (9)

புறனடை

{451} ஒற்றுமை நயத்தி னொன்றெனத் தோன்றினும்
வேற்றுமை நயத்தின் வேறே யுடலுயிர்.

எ-னின், மேலதற்கு ஓர் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

441 இதற்கு மயிலைநாதர் (நன். 448) கூறும் அமைதியும் இவண் கருதத் தக்கது.

இ-ள்: பசுவுடம்பு எடுத்துழித் தன் கன்றினுக்கு இரங்கி, நன்கு இழைத்த உயிர் அவ்வுடம்பு நீங்கிப் புலியுடம்பு எடுத்துழி இரங்காது, அக்கன்றினுக்கே தீங்கு இழைக்கும். ஆதலின் எவ்வுயிர் எவ்வுடம்பு எடுத்ததோ அவ்வுடம்பின் மயமாய் நிற்கும் ஒற்றுமை நயம் கருதியவழி ஒன்றுபோல் தோன்றும் ஆயினும் உயிர் சித்தாயும் உடம்பு சடமாயும் நிற்கும் வேற்றுமை நயமாகிய உண்மை கருதியவழி அவ்விரண்டும் தம்முள் வேறாம்; ஆதலின் உயிரோடு கூடி நின்ற காலத்தும் **அவ்வுடம்பினை** உயிரல் பொருள் என்று ஆம் எ-று. (10)

உயிர்க்குணம்

452. **அறிவரு ளாசை யச்ச மானம்**
**நிறைபொறை யோர்ப்புக் கடைப்பிடி மையல்**
**நினைவு வெறுப்புவப் பிரக்கநாண் வெகுளி**
**துணிவழுக் காறன் பெளிமை யெய்த்தல்**
**துன்ப மின்ப மிளமை மூப்பிகல்**
**வென்றி பொச்சாப் பூக்க மறமதம்**
**மறவி யினைய வுடல்கொ ளுயிர்க்குணம்.**

எ-னின், உயிரின் குணம் (443) என்றார்; அவை இவை என உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: அறிவு முதலிய முப்பத்திரண்டும்[442] இவை போல்வன பிறவும் உடலோடு கூடிய உயிர்க்குணங்களாம் எ-று.

உடலோடு கூடாவழி உயிர்க்குணங்கள் தோன்றா என்பார், 'உடல்கொ ளுயிர்க்-குணம்' என்றார். பின் வருவதும் அது. (11)

உயிரின் தொழிற்குணம்

453. **துய்த்த றுஞ்ச றொழுத லணிதல்**
**உய்த்த லாதி யுடலுயிர்த் தொழிற்குணம்.**

எ-னின், உயிரின் தொழிற்குணம் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: ஐம்புலனையும் நுகர்தல்[443] முதலிய இவ்வைந்தும் இவை போல்வன பிறவும்

[442] உயிர்க்குணங்கள் முப்பத்திரண்டிற்கும் மயிலைநாதர் (நன். 451) உதாரணங்களைக் காட்டுவார்.

[443] மயிலைநாதர் (நன். 452) உயிரின் தொழிற்குணங்களை விளக்கிக் கூறி உதாரணங்-களும் தருவார்.

உடலோடு கூடிய உயிரின் தொழிற்குணங்களாம் எ-று. (12)

உயிர் அல்லாத பொருள்களின் குணம்

{454} **பல்வகை வடிவிரு நாற்றமை வண்ணம்**
**அறுசுவை யூறெட் டுயிரல் பொருட்குணம்.**

எ-னின், உயிர் அல்லாத பொருள்களின் குணம் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: வட்டம், இருகோணம், முக்கோணம், சதுரம் முதலிய பல வகை வடிவும்[444] நற்கந்தம், துர்க்கந்தம் என்னும் இருநாற்றமும் வெண்மை, செம்மை, கருமை, பொன்மை, பசுமை என்னும் ஐந்து வண்ணமும் கைப்புப், புளிப்புத், துவர்ப்பு, உவர்ப்புக், கார்ப்பு, இனிப்பு என்னும் ஆறு இரதமும் வெம்மை, தண்மை, மென்மை, வன்மை, நொய்மை, சீர்மை, இழுமெனல், சருச்சரை என்னும் எட்டு ஊறும் உயிர் அல்லாத பொருள்களின் குணங்களாம். (13)

பொருள்களின் தொழிற்பண்பு

455. **தோன்றன் மறைதல் வளர்தல் சுருங்கல்**
**நீங்க லடைத லடுங்க லிசைத்தல்**
**ஈத லின்னன விருபொருட் டொழிற்குணம்.**

எ-னின், உயிரல் பொருட்கே உரிய தொழிற்குணம் அருகிக் கிடத்தலின் அதனை ஒழித்து, அவ்விரு பொருட்கும் பொதுவான தொழிற்குணம் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: தோன்றல் முதலிய ஒன்பதும் இவை போல்வன பிறவும் உயிர்ப்பொருள், உயிரல் பொருள் என்னும் இரண்டற்கும் பொதுவான தொழிற்குணங்களாம் எ-று.

வ-று: உயிர் தோன்றி மறைந்தது, உடல் தோன்றி மறைந்தது, நெருப்புத் தோன்றி மறைந்தது என இத்தொடக்கத்தன எல்லாம் இருபொருட்கும் பொதுவாகிய தொழிற்குணம் ஆதல் காண்க. (14)

ஒரு குணம் தழுவி வரும் உரிச்சொற்கள்

{456} **சால வுறுதவ நனிகூர் கழிமிகல்.**

எ-னின், "பல்வகைப் பண்பு" (நூ. 442) என்றார்; அவை இவை என இதுகாறும் உணர்த்தி, அப்பண்புகளுள் ஒரு குணம், பல குணம் தழுவி வரும் என்னும் உரிச்-

---

[444] "வடிவாவது கட்புலனாகியே நிற்கும். அது வட்டம், சதுரம் முதலிய முப்பத்திரண்டனுள் ஒன்று." என்று நச்சினார்க்கினியர் (தொல். சிற. பாயி.) கூறுவார்.

சொற்கள் இவை என உணர்த்துவான் தொடங்கி, அவற்றுள் ஒரு குணம் தழுவிய உரிச்சொல்லுள் சில உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: சால என்பது **முதல்** கழி என்பது ஈறாகக் கூறிய **ஆறு உரிச்சொல்லும்** மிகுதியாகிய ஒரு குணத்தை உணர்த்தும் சொற்களாம் எ-று.

வ-று: "பருவந்து சாலப் பலர்கொலென் றெண்ணி" (வளையாபதி. 45:1), "உறுவளி தூக்கு முயர்சினை மாவின்" (கலி. 84:1*), "தவச்சேய் நாட்டா ராயினும்" (நற். 115:8), "நனிபே தையே நயனில் கூற்றம்" (புறம். 227:1), "பொறைநில்லா நோய்கூரப் புல்லென்ற நுதலிவள்" (கலி. 3:4*), "சினனே காமங் கழிகண் ணோட்டம்" (பதிற். 22:1) என முறையே காண்க. இவற்றுள் சால என்பது சால் என்னும் உரிப்பெயர் அடியாகப் பிறந்த வினையெச்சக் குறிப்பு. சாலப் பல ஆம் என[445] ஆம் என்னும் வினைப் பயனிலை தொக்கு நின்றது.

இப்பண்படிகளை நோக்கிப், "பல்வகைப் பண்பும் பகர்பெய ராகி" (நூ. 442) என்றார்.

சால் எனப் பண்படியாகச் சூத்திரம் செய்யாது சால என வினையெச்சக் குறிப்பாகச் **சூத்திரம்** செய்தல் அவ்வுரிப்பெயர் அடியாக வினை விகற்பங்கள் எல்லாம் பிறக்கும் என்பது தோன்ற உடம்பொடு புணர்த்தலாம் என்க. அவை எல்லாம் வந்தவழிக் காண்க. (15)

### பல குணம் தழுவி வரும் உரிச்சொல்

457. **கடியென் கிளவி காப்பே கூர்மை**
**விரையே விளக்க மச்சஞ் சிறப்பே**
**விரைவே மிகுதி புதுமை யார்த்தல்**
**வரைவே மன்றல் கரிப்பி னாகும்.**

எ-னின், பல குணம் தழுவிய உரிச்சொல்லுள் ஒன்று உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: கடி என்னும் உரிச்சொல் காப்பு முதலிய பதின்மூன்று குணத்தையும் உணர்த்தும் எ-று.

வ-று: "ஒண்சுடர் நல்லி லருங்கடி நீவி" (அகம். 7:8*) என்பது காப்பு. "கடிநுனைப் பகழி" (நன். 456* மயிலை.) என்பது கூர்மை. "கடிமாலை சூடி" (சீவக. 1574:1) என்பது நாற்றம். "கண்ணாடி யன்ன கடிமார்பன்" (சீவக. 2327:1) என்பது விளக்கம். "கடியர

---

[445] **இந்த உரைக்குறிப்பு தெளிவாக அமையவில்லை.**

மகளிர்க்கே கைவிளக் காகி" (நன். 456* மயிலை.) என்பது அச்சம். "கடிமலர் மிசைபூத்துக் கம்புளோா டன்ன மார்க்கும்" (நன். 456 மயிலை.) என்பது சிறப்பு. "எம்மம்பு கடிவிடுது நும்மரண் சேர்மின்" (புறம். 9:5) என்பது விரைவு. "கடியுண் கடவுட் கிட்ட செழுங்குரல்" (குறுந். 105:2) என்பது மிகுதி. இது புதிதுண் கடவுள் என்றும் ஆம். "கடிமுரசு" (வி. மே.) என்பது ஆர்த்தல். "கடித்துக் கரும்பினைக் கண்டகர நூறி" (நாலடி. 156:1) என்பது வரைவு. "கடிவினை முடிகென" (நன். 456* மயிலை.) என்பது மன்றல். "கடிமிளகு தின்ற கல்லா மந்தி" (தொல். உரி. 87 இளம்.) என்பது கரிப்பு. (16)

ஒரு குணம் தழுவி வரும் உரிச்சொற்கள் சில

{458} **மாற்ற நுவற்சிசெப் புரைகரை நொடியிசை**
**கூற்றுப் புகறன் மொழிகிளவி விளம்பறை**
**பாட்டுப் பகர்ச்சி யியம்பல் சொல்லே.**

எ-னின், இதுவும் ஒரு குணம் தழுவிய உரிச்சொல்லுள் சில உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: மாற்றம் முதல் இயம்பல் ஈறாகக் கூறிய பதினாறும் சொல் என்னும் ஒரு குணத்தை உணர்த்தும் உரிச்சொற்களாம் எ-று.

"சால வுறுதவ" (நூ. 456) என்பதனைச்[446] சார வையாது ஈண்டுக் **கூறினார்** இவை ஒலிப்பண்பை உணர்த்தி ஏனைப் பெயர்வினைகளை ஒருவாது நடத்தலின் அத்துணைச் சிறப்பினவன்றி ஒரோவழி **ஒருவியும்** நடக்கும் என்பது தோன்றற்கு என்க.

வ-று: "கோவ லர்வாய், மாற்ற முணர்ந்து" (சீவக. 432:1-2), "இருபிறப் பாளர் பொழுதறிந்து நுவல" (முருகு. 182), "தெருண்டாரவை செப்ப லுற்றேன்" (சீவக. 6:4), "உரைப்பா ருரைப்பவை யெல்லாம்" (குறள். 232), "அறங்கரை நாவி னான்மறை முற்றிய" (தொல். சிற. பாயி. 10), "அஞ்சொற் பெரும்பணைத்தோ ளாயிழையா டானொடியும்" (பு. வெ. 335:1*),

"நசையுநர்க் கடையா நன்பெரு வாயில்
இசையெனப் புக்கு" (பொருந. 66-67*),

"உற்றது நாங்கள் கூற வுணர்ந்தனை" (நன். 457* மயிலை.), "புகன்ற வன்றியும் புறமிக

[446] **"சால வுறுதவ... ... என்பது தோன்றற்கு என்க." என்னும் இவ்வுரைப் பகுதி பல பதிப்புகளில் இடம் மாறியுள்ளது.**

வருமே" (நன். 457 மயிலை.), "காமஞ் செப்பாது கண்டது மொழிமோ" (குறுந். 2:2), "கிளக்குங் கிளவி பாண கேளினி" (புறம். 155:3*), "மெய்ம்மூ வாறென விளம்பினர் புலவர்" (நன். 63), "அறிவன தடிதொழு தறைகுவ னெண்ணே" (வி. மே.),

"ஒருவன்
செய்தி கொன்றோர்க் குய்தி யில்லென
அறம்பா டின்றே" (புறம். 34:5-7*),

"வார்த்தை பகர்குற்றேன்" (நன். 457 மயிலை.), "இடிபோல வியம்பி னானே" (சீவக. 432:4) என முறையே காண்க. (17)

459. **முழக்கிரட் டொலிகலி யிசைதுவை பிளிறிரை**
**இரக்கழுங் கியம்ப லிமிழ்குளி றதிர்குரை**
**கனைசிலை சும்மை கௌவை* கம்பலை**
**அரவ மார்ப்போ டின்னன வோசை.**

என்-னின்[447] இதுவும் அது.

இ-ள்: முழக்கு முதலிய இருபத்திரண்டும் இவை போல்வன பிறவும் ஓசை என்னும் ஒரு குணத்தை உணர்த்தும் உரிச்சொற்களாம் எ-று.

வ-று: "முழங்கு முந்நீர் முழுவதும் வளைஇ" (புறம். 18:1), "குடிஞை யிரட்டுங் கோடுயர் நெடுவரை" (நன். 458 மயிலை.), "ஒல்லென் றொலிக்கு மொலிபுன லூரற்கு" (ஐந். ஐம். 28:1*), "கலிகெழு மூதூர்" (புறம். 52:12*), "பறையிசை யருவி" (புறம். 126:8), "தோல், துவைத்து" (புறம். 4:5*), "பிளிறுவா ரிடிமுரசம்" (சீவக. 1617:3*), "இரைக்கு மஞ்சிறைப் பறவைகள்" (சூளா. 877:1), "இரங்கு முரசின்" (புறம். 137:1), "இரும்பிழி மாரி யழுங்கன் மூதூர்" (அகம். 122:1*), "காலை முரசங் கனைகுர லியம்பும்" (சிலப். 17. 1:6), "இமிழ்கடல் வளைஇய வீண்டகன் கிடக்கை" (புறம். 19:1), "குளிறு முரசங் குணில்பாய" (பு. வெ. 48:1), "களிறுங் களித்ததிருங் கார்" (பு. வெ. 37:4), "குரைபுனற் கன்னி" (சீவக. 39:4), "கனைகடற் றண்சேர்ப்ப" (நாலடி. 138:1), "சிலைத்தார் முரசங் கறங்க" (புறம். 36:12), "தள்ளாத சும்மை மிகுதக்கண நாடு நண்ணி" (சீவக. 20:1*), "கௌவைநீர் வேலி" (பு. வெ. 83:1*), "வினைக்கம்பலை மனைச்சிலம்பவும்" (யா. வி. 15), "அறைகழ லரவத் தானை" (சூளா. 680:1*), "ஆர்த்தபல்லி யக்குழாம்" (சூளா. 475:1) என முறையே காண்க. (18)

---

[447] **"கவ்வை" என்பது சங்கர நமச்சிவாயர் பாடம்.**

## உரியியலுக்குப் புறனடை

{460} **இன்ன தின்னுழி யின்னண மியலும்**
**என்றிசை நூலுட் குணகுணிப் பெயர்கள்**
**சொல்லாம் பரத்தலிற் பிங்கல முதலா**
**நல்லோ ருரிச்சொலி னயந்தனர் கொளலே.**

எ-னின், இவ்வியலுக்கு ஓர் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: பெயர், வினை, இடை, உரி என்னும் நால்வகைச் சொல்லுள் இன்ன சொல் தன்மை, முன்னிலை, படர்க்கை என்னும் மூன்று இடத்துள்ளும் வழக்குச், செய்யுள் என்னும் இரண்டு இடத்துள்ளும் இவ்விடத்து இவ்விலக்கணத்ததாய் நடக்கும் என்று சொல்லக் கடவதாகிய இந்நூலுள் அவ்விலக்கணம் காட்டுதற்கு வேண்டிய மாத்திரையே கூறுவதன்றி, உரிச்சொல்லாகிய குணப்பெயரையும் ஏனைக் குணிப்-பெயரையும் நிகண்டினுள் கூறினாற்போல விரித்துக் கூறக் கடவம் அல்லம்; விரிக்கின் மற்றொன்று விரித்தல் என்னும் குற்றம் வரும் ஆதலின். அவற்றினைக் கண்டறிய வேண்டினார் இவ்விலக்கணம் அறிதற்கு **முன்னரே பிங்கலர் முதலாகிய** ஏனைப் புலவரால் கூறப்பட்ட பிங்கலம், திவாகரம், சூடாமணி முதலிய நூல்களுள் வகுக்கும் உரிச்சொல் தொகுதியுள் விரும்பிக் **கொள்க** எ-று.

இவ்விலக்கணம் அறிதற்கு முன்னரே நிகண்டு அறிக என்றாம் அறியும் முறை அது ஆதலான்.

**இவ்வியலுள்,** "சால" (நூ. 456) என்பது முதல், "ஆர்ப்பு" (நூ. 459) என்பது ஈறாக நாற்பத்தைந்து உரிச்சொல் எடுத்துச் சுருங்கச் சொல்லுதல், சொல்லியல் உணர்த்தும் நூலுள் சொல் தொகுதிகளை விரிக்கின் மற்றொன்று விரித்தலாம் என உணரார் குன்றக் கூறலாம் என்பார் ஆதலின் அது பரிகரித்தற்கு இச்சூத்திரத்தால் புறனடை கூறினார். இங்ஙனம் கூறவே பெயரியலுள் பெயர்த் தொகுதியினையும் வினையியலுள் வினைத் தொகுதியினையும் இடையியலுள் இடைத் தொகுதியினையும் விரியாது அவ்விலக்கணம் காட்டுதற்கு வேண்டிய மாத்திரையே கூறுதற்கும் இதுவே புறனடையாம் என்க.

பெயரியல் என்பது பெயர் இலக்கணம். பெயர்த் தொகுதி என்பது பெயர்க் கூட்டம். ஏனையவும் அன்ன. கூட்டம் எனினும் நிகண்டு எனினும் ஒக்கும்.

இலக்கணம் கூறும் நூலுள் நிகண்டினையும் உடன் கூறாது அதனை வேறு ஓர் நூலாகக் கூறுதல் தமிழுள்ளே அன்றி ஆரியம் முதலியவற்றுள்ளும் காண்க. (19)

சொல்லதிகாரப் புறனடை

461. **சொற்றொறு மிற்றிதன் பெற்றியென் றனைத்து**
**முற்ற மொழிகுறின் முடிவில வாதலிற்**
**சொற்றவற் றியலான் மற்றைய பிறவுந்**
**தெற்றென வுணர்த றெள்ளியோர் திறனே.**

எ-னின், இவ்வதிகாரத்திற்கு ஓர் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: சொற்றொறும் இத்தன்மைத்து இதன் இலக்கணம் என்று முற்ற மொழியப் புகின் வரம்பு இலவாம். ஆதலின் எடுத்துக் கூறிய சொற்களின் இலக்கணங்களைக்கொண்டு சொல்லாதனவற்றின் இலக்கணங்களையும் ஒப்புமை கருதி, இதுவும் அது என முற்ற விளங்க உணர்தல் நூல் ஓதித் தெளிதற்கு உரிய மாணாக்கர் திறனாம் எ-று.

இவற்றிற்கு உதாரணம் முன்னரே வந்துழி வந்துழிக்[448] காட்டினாம்; ஆங்காங்கு உணர்க. (20)

நூலுக்குப் புறனடை

462. **பழையன கழிதலும் புதியன புகுதலும்**
**வழுவல கால வகையி னானே.**

எ-னின், இந்நூலிற்கு ஓர் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: முற்காலத்து உள்ள இலக்கணங்களுள் சில பிற்காலத்து இறத்தலும் முற்காலத்து இல்லன சில பிற்காலத்து இலக்கணமாய் வருதலும் குற்றம் அல்லவாம் காலவேற்றுமை அது ஆகலான் எ-று.

இவற்றிற்கும் உதாரணம் முன்னர் வந்துழி வந்துழிக்[449] காட்டினாம்; ஆங்காங்கு உணர்க. (21)

உரியியல் முற்றிற்று.

சொல்லதிகாரம் முற்றுப்பெற்றது.

நன்னூல் மூலமும் விருத்தியுரையும் முற்றும்.

---

[448] **காட்டிய இடங்கள்: நூ. 341, 354, 377, 378, 379, 390, 394, 414 முதலியன.**

[449] **காட்டிய இடங்கள்: நூ. 7, 332, 337, 338, 339, 349, 350, 407, 420, 422 முதலியன. இறந்தது விலக்கல், எதிரது போற்றல் என்னும் உத்திகளால் தழுவப்படுவனவும் (124, 140) ஈண்டுக் காட்டத் தக்கன.**

## சொல்லதிகார நூற்பாக்களின் தொகையும் பொருளடைவும்

பேரறு பத்திரண்டு பின்வினையெண் ணான்குபொது[450]
ஓரறுபத் தெட்டிடை மூவேழின் - மேலொன்
றுரியிருபத் தொன்றாகச் சொற்சூத் திரத்தின்
விரியிருநூற் றோரைந்தா வேண்டு.

இருதிணை மூவிட நான்மொழி யைம்பா லறுதொகையேழ்
அருவழு வெட்டுரு பொன்பான் றொகாநிலை யாய்ந்தவெச்சம்
ஒருபது கோளெட்டு முப்பொழு தீரிட மோரியல்பாய்
வருமொழி மூன்று முணரச்சொல் வண்மை வருந்திருவே.

---

[450] சொல்லதிகாரத்தின் இயல் வைப்புமுறையைப், 'பேர், வினை, பொது, இடை, உரி' என்று இவ்வெண்பா சுட்டுவது நோக்கத் தக்கது.

# நன்னூல்
## நூற்பா முதற்குறிப்பு அகராதி
(எண்: நூற்பா எண்)

நன்னூல் நூற்பாவின் முதற்குறிப்பையும் தொடர் எண்ணையும் தொடர்ந்து தொல்காப்பியத்தின் அதிகாரம், இயல், நூற்பா ஆகியவற்றின் எண்கள் அடைப்புக்-குறிக்குள் தரப்பட்டுள்ளன. நூற்பாக்களின் எண்களிலிருந்து இயல்களின் எண்களை வேறுபடுத்திக்கொள்ள அவற்றுக்கு ரோமன் எண்கள் கொடுக்கப்பட்டுள்ளன. காட்டாக, அஇ உம்முதற் 66 (எ. i 31) என்பதை, "அஇ உம்முதற்" என்று தொடங்கும் நன்னூல் 66 ஆம் நூற்பாவைத் தொல்காப்பிய எழுத்ததிகாரத்தின் முதல் இயலாகிய நூன்மரபு 31 ஆம் நூற்பாவோடு ஒப்பிடுக என்று விரித்து உரைத்துக்கொள்க.

தொல்காப்பியத்திலிருந்து நன்னூலில் எடுத்தாளப்பட்டுள்ள ஆசிரிய வசனங்களின் எண்களுக்கு அத்தி னகர (252) என்பதுபோல அடைப்புக்குறி இடப்பட்டுள்ளது.

எ. தொல்காப்பிய எழுத்ததிகாரம்
சொ. தொல்காப்பியச் சொல்லதிகாரம்
பொ. தொல்காப்பியப் பொருளதிகாரம்

### வே



### ள



### ற



### ன

# சிவஞான முனிவர் செய்த திருத்தங்கள்

## ஒரு கண்ணோட்டம்

சங்கர நமச்சிவாயர் உரையில் சிவஞான முனிவர் செய்துள்ள திருத்தங்களை மதிப்பிட உதவும் இந்தக் குறிப்புகள் நூற்பாவின் எண், நூற்பா முதற்குறிப்பு, திருத்தம் பற்றிய குறிப்பு என்றவாறு வரிசைப்படுத்தப்பட்டுள்ளன.

## பாயிரம்

{0}மலர்தலை யுலகின் - பிற உரை

{3}நூலே நுவல்வோ - விளக்கம்

{9}முன்னோர் மொழிபொருளே - சொல்லளவுத் திருத்தம்

{10}அறம்பொரு ளின்பம்வீ - புத்துரை

{12}குன்றக் கூறன் - சொல்லளவுத் திருத்தம்

{14}நுதலிப் புகுத - மேலது

{18}சில்வகை யெழுத்திற் - மேலது

{{49}}முதனூல் கருத்த - சங்கரர் உரையைக் குறைத்தல்

{50}தொகுத்தல் விரித்த - புத்துரை

## எழுத்ததிகாரம்

**எழுத்தியல்**

{00}அதிகாரத் தோற்றுவாய் - பிற உரை

{56}பூமலி யசோகின் - சொல்லளவுத் திருத்தம்

{60}உயிர்மெய் யாய்த - விளக்கம்

{63}அம்முத வீரா - சொல்லளவுத் திருத்தம்

{71}ஐஔ இஉச் - மேலது

{73}சிறப்பினு மினத்தினுஞ் - பிற உரை

{74}நிறையுயிர் முயற்சியி - சொல்லளவுத் திருத்தம்

{75}அவ்வழி, ஆவி யிடைமை - மேலது

{88}எடுத்தல் படுத்த - மேலது

{89}புள்ளிவிட் டவ்வொடு - பிற உரை

{91}இசைகெடின் மொழிமுத - மேலது

{94}நெடிலோ டாய்த - விளக்கமும் பிற உரையும்
{95}தற்சுட் டளபொழி - விளக்கம்
{98}தொல்லை வடிவின - சொல்லளவுத் திருத்தம்
{99}மூன்றுயி ரளபிரண் - விளக்கம்
{105}அஆஎ ஒவ்வோ - சொல்லளவுத் திருத்தம்
{106}சுட்டியா வெகர - விளக்கம்
{110}கசதப வொழித்த - சொல்லளவுத் திருத்தம்
{125}அம்மு னிகரம் - புத்துரை

**பதவியல்**

{128}எழுத்தே தனித்துந் - விளக்கம்
{132}பொருளிடங் காலஞ் - பிற உரை
{133}பகுதி விகுதி - சொல்லளவுத் திருத்தம்
{{134}}தத்தம், பகாப்ப தங்களே - சங்கரர் உரையைக் குறைத்தல்
{136}ஈறு போத - சொல்லளவுத் திருத்தம்
{137}நடவா மடிசீ - விளக்கமும் பிற உரையும்
{138}செய்யென் வினைவழி - சங்கரர் உரையைக் குறைத்தலும் விளக்கமும்
{139}விளம்பிய பகுதிவே - சொல்லளவுத் திருத்தம்
{140}அன்ஆன் அள்ஆள் - மேலது
{142}தடறவொற் றின்னே - விளக்கம்
{145}றவ்வொ டுகர - விளக்கமும் பிற உரையும் சங்கரர் உரையைக் குறைத்தலும்

**உயிரீற்றுப் புணரியல்**

{152}வேற்றுமை யைம்முத - சொல்லளவுத் திருத்தம்
{158}எண்மூ வெழுத்தீற் - மேலது
{163}எகர வினாமுச் - சங்கரர் உரையைச் சொல்லளவுக் குறைத்தலும் திருத்தமும்
{164}உயிர்வரி னுக்குறண் - மேலது
{165}இயல்பினும் விதியினு - எ-னின் என்ற பகுதியில் திருத்தம்
{167}செய்யிய வென்னும் - மேலது
{170}பலசில வெனுமிவை - மேலது
{171}அல்வழி யாமா - மேலது
{173}அன்றி யின்றியென் - மேலது
{174}உரிவரி னாழியி - மேலது

{175}சுவைப்புளி முன்னின - மேலது
{176}அல்வழி இஐம் - மேலதும் விளக்கமும்
{177}ஆமுன் பகரவீ - எ-னின் என்ற பகுதியில் திருத்தம்
{178}பவ்வீ நீமீ - மேலது
{179}மூன்றா றுருபெண் - மேலது
{181}வன்றொட ரல்லன - மேலது
{182}இடைத்தொட ராய்தத் - சங்கரர் உரையைக் குறைத்தலும் விளக்கமும்
{183}நெடிலோ டுயிர்த்தொடர்க் - எ-னின் என்ற பகுதியில் திருத்தம்
{184}மென்றொடர் மொழியுட் - மேலது
{185}ஐயீற் றுடைக்குற் - மேலது
{186}திசையொடு திசையும் - சொல்லளவுத் திருத்தம்
{194}ஒன்பா னொடுபத்து - திருத்தமும் விளக்கமும்
{195}முதலிரு நான்கா - எ-னின் என்ற பகுதியில் திருத்தம்
{196}ஒருபஃ தாதிமுன் - மேலது
{197}ஒன்றுமுத லீரைந் - மேலது
{198}இரண்டு முன்வரிற் - மேலது
{199}ஒன்ப தொழித்தவெண் - மேலது
{200}பூப்பெயர் முன்னின - மேலது
{201}இடைச்சொல் லேயோ - மேலது
{203}பனைமுன் கொடிவரின் - மேலது

**மெய்யீற்றுப் புணரியல்**

{207}ஞணநம லவளன - எ-னின் என்ற பகுதியில் திருத்தம்
{211}சாதி குழூஉப்பரண் - மேலது
{212}னஃகான் கிளைப்பெய - மேலது
{213}மீன்றவ் வொடுபொரூஉம் - மேலது
{214}தேன்மொழி மெய்வரி - மேலது
{215}மரமல் லெகின்மொழி - மேலது
{216}குயினூன் வேற்றுமைக் - மேலது
{217}மின்பின் பன்கன் - மேலது
{218}தன்னென் னென்பவற் - மேலது
{220}வேற்றுமை மப்போய் - மேலது
{221}நுந்தம், எம்நம் மீறா - மேலது

{222}அகமுனர்ச் செவிகை - மேலது
{223}ஈமுங், கம்மு முருமுந் - மேலது
{226}கீழின்முன் வன்மை - மேலது
{228}குறில்வழி லளத்தவ் - மேலது
{229}குறில்செறி யாலள - மேலது
{230}லளவிறு தொழிற்பெய - மேலது
{231}வல்லே தொழிற்பெய - மேலது
{233}இல்லெ னின்மைச் - மேலது
{234}புள்ளும் வள்ளுந் - மேலது
{238}உருபின் முடிபவை - சொல்லளவுத் திருத்தம்

**உருபு புணரியல்**

{245}எல்லா மென்ப - எ-னின் என்ற பகுதியில் திருத்தம்
{{247}}தான்தாம் நாம்முதல் - சங்கரர் உரையைக் குறைத்தல்
{252}அத்தி னகர - எ-னின் என்ற பகுதியில் திருத்தம்

## சொல்லதிகாரம்

**பெயரியல்**

{000}அதிகாரத் தோற்றுவாய் - பிற உரை
{260}ஒருமொழி யொருபொரு - மேலது
{261}மக்க டேவர் - விளக்கம்
{262}ஆண்பெண் பலரென - சொல்லளவுத் திருத்தம்
{264}பெண்மைவிட் டாணவா - மேலது
{265}படர்க்கை வினைமுற்று - மேலது
{267}இலக்கண முடைய - பிற உரை
{{269}}ஒன்றொழி பொதுச்சொல் - சங்கரர் உரையைச் சொல்லளவுக் குறைத்தல்
{270}அதுவே, இயற்சொற் றிரிசொ - விளக்கமும் பிற உரையும்
{275}இடுகுறி காரண - திருத்தம்
{276}அவற்றுள், கிளையெண் குழூஉமுதற் - சொல்லளவுத் திருத்தம்
{{278}}கிளந்த கிளைமுத - சங்கரர் உரையைச் சொல்லளவுக் குறைத்தல்
{284}அவற்றுள், ஒன்றே யிருதிணைத் - விளக்கமும் திருத்தமும் பிற உரையும்
{285}தன்மை யானான் - விளக்கம்
{290}பொருண்முத லாறோ - பிற உரையும் விளக்கமும்

{291}ஏற்கு மெவ்வகைப் - சொல்லளவுத் திருத்தம்
{292}பெயரே ஐஆல் - பிறர் உரை
{293}ஆற னுருபு - புத்துரை
{295}அவற்றுள், எழுவா யுருபு - விளக்கமும் பிற உரையும்
{296}இரண்டா வதனுரு - பிறர் உரை
{297}மூன்றா வதனுரு - மேலது
{298}நான்கா வதற்குரு - மேலது
{299}ஐந்தா வதனுரு - மேலது
{300}ஆற னொருமைக் - மேலது
{301}ஏழ னுருபுகண் - மேலது
{302}கண்கால் கடையிடை - மேலது
{{307}}ஒருசார் னவ்வீற் - சங்கரர் உரையைச் சொல்லளவுக் குறைத்தல்
{317}யாத னுருபிற் - பிறர் உரை
{319}எல்லை யின்னு - விளக்கம்

**வினையியல்**

{{320}}செய்பவன் கருவி - சங்கரர் உரையைச் சொல்லளவுக் குறைத்தல்
{321}பொருண்முத லாறினுந் - பிற உரை
{322}அவைதாம், முற்றும் பெயர்வினை - பிறர் உரை
{325}அன்ஆ னிறுமொழி - திருத்தம்
{{326}}அள்ஆ ளிறுமொழி - சங்கரர் உரையைச் சொல்லளவுக் குறைத்தல்
{{327}}அர்ஆர் பவ்வூ - மேலது
{{328}}துறுடுக் குற்றிய - மேலது
{{329}}அஆ ஈற்ற - மேலது
{331}குடுதுறு வென்னுங் - சொல்லளவுத் திருத்தம்
{335}ஐயா யிகர - மேலது
{339}வேறில்லை யுண்டைம் - பிறர் உரை
{340}செய்த செய்கின்ற - மேலது
{{342}}தொழிலுங் காலமுந் - சங்கரர் உரையைச் சொல்லளவுக் குறைத்தல்
{348}பல்லோர் படர்க்கை - சொல்லளவுத் திருத்தம்
{351}வினைமுற் றேவினை - பிறர் உரை

**பொதுவியல்**

{352}இருதிணை யாண்பெணு - சொல்லளவுத் திருத்தம்
{355}உருபுபல வடுக்கினும் - திருத்தம்
{360}பெயர்வினை யும்மைசொற் - சொல்லளவுத் திருத்தம்
{365}பண்பை விளக்கு - மேலது
{368}எண்ண லெடுத்தன் - மேலது
{370}முன்மொழி பின்மொழி - மேலது
{375}திணையே பாலிடம் - மேலது
{378}திணைபால் பொருள்பல - மேலது
{384}விரைவினு மிகவினுந் - மேலது
{387}வினாவினுஞ் செப்பினும் - மேலது
{393}திணைநிலஞ் சாதி - மேலது
{395}அசைநிலை பொருணிலை - மேலது
{396}இரட்டைக் கிளவி - மேலது
{397}ஒருபொருட் பல்பெயர் - மேலது
{398}ஒருபொருட் பன்மொழி - மேலது
{399}இனைத்தென் றறிபொரு - மேலது
{402}அடைமொழி யினமல் - உரையை இடம் மாற்றுதல்
{407}ஈதா கொடுவெனு - சொல்லளவுத் திருத்தம்
{413}ஏற்ற பொருளுக் - மேலது
{415}எழுவா யிறுதி - விளக்கம்
{417}செய்யு ளிறுதி - மேலது
{419}ஏற்புழி யெடுத்துடன் - சொல்லளவுத் திருத்தம்

**இடையியல்**

{420}வேற்றுமை வினைசா - பிற உரையும் விளக்கமும்
{422}பிரிநிலை வினாவெண் - சொல்லளவுத் திருத்தம்
{428}பெயர்ச்செவ் வெண்ணே - மேலது
{430}வினையொடு வரினுமெண் - மேலது
{434}மற்றைய தென்பது - மேலது

**உரியியல்**

{442}பல்வகைப் பண்பும் - பிற உரை

{444}மெய்ந்நா மூக்கு - சொல்லளவுத் திருத்தம்

{445}புன்மர முதலவுற் - மேலது

{449}வானவர் மக்க - விளக்கம்

{451}ஒற்றுமை நயத்தி - சொல்லளவுத் திருத்தம்

{454}பல்வகை வடிவிரு - மேலது

{456}சால வுறுதவ - மேலது

{458}மாற்ற நுவற்சிசெப் - உரையை இடம் மாற்றுதல்

{460}இன்ன தின்னுழி - சொல்லளவுத் திருத்தம்

## இடம் விளங்காத மேற்கோள்கள்

*(எண்கள்: நன்னூல் நூற்பாக்களின் எண்கள்)*

*அங்ங் கனிந்த வருளிடத்தார்க் கன்புசெய்து*
*நங்ங் களங்கறுப்பா நாம் (நூ. 92)*

*அதுமற் றம்ம (நூ. 420; 438)*

*அவர்வயிற் செல்லாய் (நூ. 302)*

*அறிவன தடிதொழு தறைகுவ னெண்ணே (நூ. 458)*

*இடக்க ரென்பது மறைத்துமொழி கிளவி (நூ. 267)*

*இரப்பவ ரென்பெறினுங் கொள்வர் (நூ. 295, 317)*

*இலங்ங்கு வெண்பிறைசூ டீசனடி யார்க்குக்*
*கலங்ங்கு நெஞ்சமிலை காண் (நூ. 92)*

*எங்ங் கிறைவனுள னென்பாய் மனனேயான்*
*எங்ங் கெனத்திரிவா ரின் (நூ. 92)*

*எந்தை யெமக்கருளுமன் (நூ. 432)*

*கடிமுரசு (நூ. 457)*

*கருதலர்ச் சீறிய கடுங்கொல் யானை (நூ. 356)*

*கேள்வி விமரிசம் பாவனை (சிற. பாயி.)*

*சந்தனப் பொதியச் செந்தமிழ் முனியும்*
*சவுந்தர பாண்டிய னெனுந்தமிழ் நாடனும்*
*சங்கப் புலவருந் தழைத்தினி திருக்கும்*
*மங்கலப் பாண்டி வளநா டென்ப (நூ. 271)*

*சார்வுழிச் சார்ந்த தகையள் (நூ. 163)*

*சூருயிர்க் குடித்த (நூ. 232)*

சென்றதுகொல் போந்ததுகொல் செவ்வி பெறுந்துணையும்
நின்றதுகொ னேர்மருங்கிற் கையூன்றி - முன்றின்
முழங்குங் கடாயானை மொய்ம்மலர்த்தார் மாறற்
குழந்துபின் சென்றவென் னெஞ்சு *(நூ. 269)*

தரும் வளவன் *(நூ. 96)*

திகழ்செவ் வான்மதித் திருமுகப் பூங்குழல் *(நூ. 369)*

தேர்த்திசை யிருந்தான் *(நூ. 302)*

நன்னிதி பெறுக நாடொறும் வாழ்கவென்
றுன்னுமிவ் வேட்கை யொழிந்தன ரிலரே *(நூ. 430)*

நெடியன்மன் *(நூ. 432)*

பகையியல் பாயிலி படைக்கை மறவன் *(நூ. 397)*

பதிகக் கிளவி பல்வகைப் பொருளைத்
தொகுதி யாகச் சொல்லுத றானே *(நூ. 1)*

புறங்கொடை யறியா மறந்திகழ் வேலோன் *(நூ. 290)*

மடங்ங் கலந்த மனனே களத்து
விடங்ங் கலந்தானை வேண்டு *(நூ. 92)*

மண்புகுந்தும் விண்பறந்து மாலுமய
னுங்காணா வொருபொருள் *(நூ. 257)*

மருவினென் செய்யுமோ நிலவு *(நூ. 172)*

மூவிலைய வேல் *(நூ. 340)*

# இலக்கணக் கலைச்சொற்கள்

(எண்: நூற்பா எண்)

இப்பகுதியில் நன்னூல் மூலபாடத்தில் வரும் இலக்கணக் கலைச்சொற்கள் அகர-வரிசையில் தொகுக்கப்பட்டுள்ளன. அடி அளவால் நன்னூல் நூற்பாக்கள் குறைந்தன என்பதால் நூற்பா எண்கள் மட்டுமே தரப்பட்டுள்ளன; அடி எண்கள் தரப்படவில்லை. இது நன்னூல் மூலபாடத்துக்குச் சொல்லடைவோ அருஞ்சொல் அகராதியோ அல்ல. எனவே அங்காப்பு, எழுத்து, சொல், பகுதி, விகுதி போன்ற தனிச்சொற்களும் ஆகுபெயர், உயர்திணை, தொழிற்பெயர், விரவுப்பெயர் போன்ற தொகைச்சொற்களும் ஒரு பொருட் பன்மொழி, பால் பகா அஃறிணைப்பெயர், வினையால் அணையும் பெயர் போன்ற பன்மொழித்தொடர்களும் செய்யென் ஏவல், செய்யென் வினை என்று வாய்பாடுகளை உணர்த்த வரும் தொடர்மொழிகளும் இத்தொகுப்பில் இடம் பெற்றுள்ளன. ஆயினும் அஃகு, இசை, உறழ், புணர், மயங்கு போன்ற வினையடிகள் இதன்கண் கொடுக்கப்படவில்லை.

சாரியையும் (உ-ம்: விகாரத்து, 151) உருபும் (உ-ம்: அங்காப்போடு, 77) சாரியையோடு உருபும் (உ-ம்: இனத்தோடு, 142) பன்மை விகுதியும் (உ-ம்: மெய்கள், 126) ஏற்றுத் திரிந்த பெயர்கள் அத்திரிபுகளோடு இங்கு இடம் பெறவில்லை. திரிபும் விகாரமும் இல்லாத அங்காப்பு, இனம், மெய், விகாரம் என்னும் தனிப்பெயர்கள் மட்டுமே இவண் காணப்படும். உவமத்து உருபு, பெயரின் எச்சம் போன்ற தொகைமொழிகள் செய்யுட்-கண் அருகி வருவன. அதனால் உவமவுருபு, பெயரெச்சம் என்று மாற்றாமல் மூலத்தில் உள்ளவாறே அவை கொடுக்கப்பட்டுள்ளன.

குற்றியலிகரம், குற்றியலுகரம், ஐகாரக் குறுக்கம், ஔகாரக் குறுக்கம், மகரக் குறுக்கம் என்னும் சார்பெழுத்துக்களை அஃகிய இ, அஃகிய உ, அஃகிய ஐ, அஃகிய ஔ, அஃகிய மஃகான் என்று ஒவ்வொன்றிற்கும் தனித்தனிப் பெயரெச்ச அடைமொழி கொடுத்துக் கூறாமல், "அஃகிய இஉ ஐஔ மஃகான்" (நூ. 60) என ஒரே அடியில் மணிச்சுருக்கமாகப் பவணந்தி முனிவர் கூறுவார். நூற்பா செய்யுள் என்பதாலும் மனப்-பாடம் செய்வதற்கு ஏற்ப அவற்றைச் சுருக்கிச் சொல்வது மரபு என்பதாலும் ஆசிரியர் இந்த நுட்பமுறையை வேறு பல நூற்பாக்களிலும் (உ-ம்: 61, 62, 79, 81, 99, 106, 160, 178, 182) திறம்படக் கையாண்டுள்ளார். இத்தகைய இடங்களில் பொருள் விளக்கத்துக்காக விரிக்கப்படும் சொற்கள் அடைப்புக்குறிக்குள் தரப்பட்டுள்ளன. (அஃகிய) உ, (அஃகிய) ஐ, (அஃகிய) ஔ, (அஃகிய) மஃகான், இக்(குறுக்கம்), ஐக்(குறுக்கம்), (யா) வினா

போன்ற கலைச்சொற்கள் இதற்கு நல்ல உதாரணங்கள். ஆகவே அடைப்புக்குறிக்குள் தரப்பட்டுள்ள சொற்கள் நூற்பாவில் வந்துள்ளவை அல்ல என்பதை நினைவுகூர்தல் நல்லது.

கலைச்சொல் என்பதைத் தெளிவாக விளக்கி வரையறை செய்து, தமிழிலக்கண நூல்களிலும் உரைகளிலும் தொன்றுதொட்டு வழங்கிவரும் கலைச்சொற்கள் அனைத்திற்கும் இலக்கண அகராதி ஒன்று உருவாகும் போது இத்தொகுப்பில் தரப்-பட்டுள்ள சில சொற்கள் தள்ளப்படலாம். உதாரணமாக அழைப்பது, இருவழி, ஒருத்தி, ஒருவன், ஒன்று, குறியது, சாதல், செய்தது, செலவு, பல, பலர், வரவு, வினையெஞ்சு போன்ற சொற்களைக் குறிப்பிடலாம். நன்னூல் விருத்தியைக் கற்பவர்களுக்கு உதவும் நோக்கத்தில், உரையைத் தழுவி, இத்தொகுப்பில் அவையும் கொடுக்கப்பட்டுள்ளன. இலக்கணம் என்று சொன்னால் நம் மனக்கண்ணில் தோன்றுவது மூலமும் உரையும் கொண்ட ஒரு தொகுதியே. அதனால் இலக்கணக் கலைச்சொற்களோடு உடன்படல், குன்றக் கூறல், சுருங்கச் சொல்லல், செய்வித்தோன், நுதலிப் புகுதல் போன்ற உரைமரபுத் தொடர்களும் அயல் நீடல், ஆதி நீடல், இறுதி அழிவு, ஈறு போதல் போன்ற இலக்கணச் செய்கைகளைக் குறிக்கும் தொடர்களும் இந்தத் தொகுப்பில் சேர்க்கப்-பட்டுள்ளன. இவற்றை எல்லாம் உள்ளடக்கி, மிகுதி பற்றிய வழக்காக இலக்கணக் கலைச்சொற்கள் என்னும் குறியீடு இதற்குத் தரப்பட்டுள்ளது. இச்சொற்களுக்கு நூலிலும் உரையிலும் விளக்கம் அமைந்திருப்பதால் அவற்றுக்கு மீண்டும் பொருள் எழுதும் முயற்சி மேற்கொள்ளப்படவில்லை.

## துணை புரிந்த நூல்கள்

**நன்னூல் பதிப்புகள்**

*(உரையாசிரியர் காலமுறை)*

### மயிலைநாதர்


*பவணந்தி முனிவர் இயற்றிய*

*நன்னூல் மூலமும் மயிலைநாதருரையும்*

**சாமிநாதையர், உத்தமதானபுரம் வே.** *(ப - ர்)*

*சென்னை: வைஜயந்தி அச்சுக்கூடம், 1918. பக்.* ii, xxii, ii, *312, 51,* i.

*2-ஆம் பதிப்பு*

**கலியாண சுந்தரையர், எஸ்.** *(ப - ர்)*

*சென்னை: கபீர் அச்சுக்கூடம், 1946. பக்.* xxiii, i, *299,* i.


### சங்கர நமச்சிவாயர்


*பவணந்திமுனிவர் இயற்றிய*

*நன்னூல் மூலமும் சங்கர நமச்சிவாயர் உரையும்*

**சாமிநாதையர், உ. வே.** *(ப - ர்)*

*சென்னை: கமர்ஷியல் அச்சுக்கூடம், 1925. பக். 1, 24, 312.*

*2-ஆம் பதிப்பு 1935. பக்.* xxxvi, *528. 3-ஆம் பதிப்பு 1942. பக்.* xxviii, *451.*

*4-ஆம் பதிப்பு 1953. பக்.* xxviii, *451,* i. *5-ஆம் பதிப்பு 1991. பக்.* xxxi, *463.*


### சங்கர நமச்சிவாயர்
### சிவஞான முனிவர்


*சனகாபுரம் பவணந்திமுனிவர் இயற்றிய நன்னூன் மூலமும்*

*திருநெல்வேலி சங்கரநமச்சிவாயப் புலவரால் செய்யப்பட்டு*

*திருவாவடுதுறையாதீன வித்துவானாகிய சிவஞானசுவாமிகளால் திருத்தப்பட்ட*

*விருத்தியுரையும்*

**ஆறுமுகநாவலர், யாழ்ப்பாணம் நல்லூர்** *(ப - ர்)*

*(யாழ்ப்பாணம்): வித்தியாநுபாலன யந்திரசாலை, விரோதிகிருதுவருஷம் ஐப்பசிமாதம் (1851) பக். 352, 7.*

*5-ஆம் பதிப்பு 1933. பக். 329, 7. 6-ஆம் பதிப்பு 1944. பக். 329, 7.*
*7-ஆம் பதிப்பு 1947. பக். 329, 7. 9-ஆம் பதிப்பு 1966. பக். 464.*

சனகாபுரம் பவணந்தி முனிவர் செய்த நன்னூல் மூலமும்
திருநெல்வேலிச் சங்கர நமச்சிவாயப்புலவரால் செய்யப்பட்டுத்
திருவாவடுதுறையாதீனச் சிவஞானசுவாமிகளாற் றிருத்தப்பட்ட விருத்தியுரையும்
இயற்றமிழாசிரியராகிய திருத்தணிகை விசாகப்பெருமாளையர் அவர்களால்
செய்யப்பட்ட பதவுரையும்
**சந்திரசேகரகவிராஜ பண்டிதர், தில்லையம்பூர்** *(ப - ர்)*
*(சென்னை): முத்தமிழ் விளக்க அச்சுக்கூடம், இராக்ஷசவருடம் கார்த்திகைமாதம், (1855).*
*பக். 7, 1, 341.*

பவணந்தி முனி செய்த
நன்னூல் மூலமும் பொழிப்புரையும்
**போப்பையர், ஜி. யூ.** *(ப - ர்)*
*(இலக்கண நூல் இரண்டாம் பங்கு)*
*மெட்ராஸ்: அமெரிக்கன் மிஷன் பிரஸ், 1857. பக். 1-184.*

சனகாபுரம் பவணந்தி முனிவர் செய்த நன்னூல் மூலமும்
இயற்றமிழாசிரியர் திருத்தணிகை விசாகப்பெருமாளையர் அவர்கள் இயற்றிய
காண்டிகையுரையும்
திருநெல்வேலி சங்கர நமச்சிவாயப் புலவர் இயற்றி,
திருவாவடுதுறையாதீனம் சிவஞானசுவாமிகள் திருத்திய விருத்தியுரையும்
**தெய்வசிகாமணி முதலியார், திருமயிலை** *(ப - ர்)*
**சண்முகம் பிள்ளை, திருமயிலை** *(ப - ர்)*
*சென்னை: அமெரிகன் அச்சுக்கூடம், 1889. பக். 10, 446, 7.*

பவணந்தி முனிவர் இயற்றிய நன்னூல் மூலமும்
சங்கர நமச்சிவாயப் புலவர் இயற்றிச்
சிவஞானமுனிவர் திருத்திய விருத்தியுரையும்
**கழகப் புலவர்குழுவினர்** *(ப - ர்)*
*சென்னை: திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,*

*லிமிடெட், 1956. பக். 31, 450.*
*மறு வெளியீடு 1959; 1961; 1964.*

ஸ்ரீ மாதவச்சிவஞானசுவாமிகள் இயற்றிய
புத்தம்புத்துரை என்னும் நன்னூல் விருத்தியுரை
**தண்டபாணி தேசிகர், ச.** (ப - ர்)
*திருவாவடுதுறை: திருவாவடுதுறை ஆதீனம், 1957. பக். 28, 492.*
*2-ஆம் பதிப்பு*
*சென்னை: பாரி நிலையம், 1971. பக். 650.*

பவணந்திமுனிவர் இயற்றிய நன்னூல் மூலமும்
மாதவச் சிவஞானசுவாமிகள் இயற்றிய
புத்தம் புத்துரை என்னும் விருத்தியுரையும்
**சுந்தரேசம் பிள்ளை, எம்.** (ப - ர்)
இரு பகுதிகள்
*திருப்பனந்தாள்: முத்துக்குமரன் இல்லம், 1969. பக். 14, 168; 196.*

நன்னூல் விருத்தியுரை
**இளவரசு, சோம.** (ப - ர்)
*அண்ணாமலைநகர்: அண்ணாமலைப் பல்கலைக்கழகம், 1981. பக். xx, 579.*
*2-ஆம் பதிப்பு 1990. பக். 24, 660.*

### கூழங்கைத்தம்பிரான்

நன்னூல் மூலமும் கூழங்கைத்தம்பிரான் உரையும்
**தாமோதரன், அ.** (ப - ர்)
*வீஸ்பாடன்: ஃப்ரான்ஸ் ஸ்டைனர் ஃபெர்லாக், 1980. பக். xxviii, ii, 246.*
*மறு பதிப்பு*
*சென்னை: உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், 1998.*

## விசாகப்பெருமாளையர்

நன்னூல் மூலமுங் காண்டிகையுரையும்
திருத்தணிகைக் க. விசாகப்பெருமாளையர் உரை
*சென்னபட்டணம்: கல்விவிளக்கவச்சுக்கூடம், சாலீவாகனசகாப்தம், 1756 ஜயவருஷம் (1834). பக். 3, 334, 8.*
*2-ஆம் பதிப்பு*
*சென்னபட்டணம்: கல்விவிளக்கவச்சுக்கூடம், சாலீவாகனசகாப்தம், 1762 விகாரி-வருஷம் தைமாதம் (1840). பக். 6, 240.*

## இராமாநுச கவிராயர்

நன்னூல் விருத்தியுரை
இராமாநுச கவிராயர் உரை
*சஞ்சீவிராயன்பேட்டை (சென்னை): சாலிவாகனசகாப்தம், 1768 பிலவங்கவருஷம் (1847). பக். 4, 336, 7, 1.*

பவணந்திமுனிவர் இயற்றிய நன்னூல் மூலமும்
இயற்றமிழாசிரியர் முகவை இராமானுசக் கவிராயர் அவர்கள் இயற்றிய விருத்தியுரையும்
*கா. ர. கோவிந்தராஜ முதலியார் அவர்களால் எழுதப்பெற்ற குறிப்புரையுடன்*
**கோவிந்தராஜ முதலியார்,** *கா. ர. (ப - ர்)*
*மதுரை: இ. மா. கோபாலகிருஷ்ணக் கோனார், 1940. பக்.* xxii, *516,* iii.

## இ. சாமுவேல்பிள்ளை
## வால்ற்றர் ஜாயீஸ்

தொல்காப்பிய நன்னூல்
*சாமுவேல்பிள்ளை, இ*
*வால்ற்றர் ஜாயீஸ்*
*சென்னைமாநகரம்: [illegible] விளக்கச்சங்கத்தார் அச்சுக்கூடம், 1858.*
*பக்.* xvi, *128, 70*

## ஆறுமுகநாவலர்

*நன்னூற் காண்டிகையுரை*
*ஆறுமுகநாவலர், யாழ்ப்பாணம் நல்லூர்*
*சென்னபட்டணம்: வித்தியாநுபாலன யந்திரசாலை, விக்கிரமவருடம் சித்திரைமாதம் (1880). பக். 400, 2, 8.*
*14-ஆம் பதிப்பின் நிழற்படப் பதிப்பு*
*தஞ்சாவூர்: தமிழ்ப் பல்கலைக்கழகம், 1984. 396.*

## சடகோபராமாநுஜாசாரியர் கிருஷ்ணமாசாரியர்

*நன்னூற் காண்டிகையுரை*
*சடகோபராமாநுஜாசாரியர், திருவல்லிக்கேணி வை. மு.*
*கிருஷ்ணமாசாரியர், திருவல்லிக்கேணி சே.*
*4-ஆம் பதிப்பு*
*சென்னை: வைஜயந்தி அச்சுக்கூடம், 1903. பக். 1, 2, 2, 261, 1.*
*முதல் பதிப்பு*
*சென்னை: மிமோரியல் அச்சுக்கூடம், 1892.*

## குமாரசுவாமிப்புலவர்

*நன்னூற் காண்டிகையுரை விளக்கம்*
*குமாரசுவாமிப்புலவர், புலோலி வ.*
*யாழ்ப்பாணம்: விவேகாநந்தயந்திரசாலை, கலி 5004 சுபகிருதுவருடம் ஆவணிமாதம், 1902. பக். 6, 11, 436.*

## பவானந்தம் பிள்ளை

*பவணந்தி முனிவர் இயற்றிய நன்னூல்*
*மயிலைநாதர், சங்கரநமச்சிவாயப் புலவர், இராமானுஜ கவிராயர் முதலிய*
*உரையாசிரியர்களைப் பின்பற்றி எழுதிய உரையுடன்*
*பவானந்தம் பிள்ளை, ச.*
*சென்னை: மாக்மில்லன் அண்டு கம்பெனி, லிமிடெட், 1922. பக். xxv, 365.*

## பிற நூல்கள்

(ஆசிரியர் அகர வரிசை)

**அரவிந்தன், மு. வை.**

உரையாசிரியர்கள்

சிதம்பரம்: மணிவாசகர் நூலகம், 1968. பக். xxix, 643.

3-ஆம் பதிப்பு

சென்னை: மணிவாசகர் பதிப்பகம், 1995. பக். 768.

**அறவாணன், க. ப.**

எழுநூறு ஆண்டுகளில் நன்னூல்

சென்னை: பாரி நிலையம், 1977. பக். 371.

**ஆறுமுகநாவலர்** (ப - ர்)

ஸ்ரீ சிவஞான சுவாமிகள் அருளிச்செய்த

தொல்காப்பியச் சூத்திர விருத்தி

இலக்கணவிளக்கச் சூறாவளி

6-ஆம் பதிப்பு

சென்னை: வித்தியாநுபாலன அச்சகம், 1956. பக். 132.

முதல் பதிப்பு (அக்ஷயவருடம்) 1866. பக். 69.

**இளங்குமரன், இரா.**

இலக்கண வரலாறு

சென்னை: மணிவாசகர் பதிப்பகம், 1988. பக். xliv, 452.

**இளவரசு, சோம.**

இலக்கண வரலாறு

சிதம்பரம்: தொல்காப்பியர் நூலகம், 1963. பக். 246.

**கோபாலையர், தி. வே.** (ப - ர்)

சாமிநாத தேசிகர் இயற்றிய

இலக்கணக் கொத்து மூலமும் உரையும்

தஞ்சாவூர்: தஞ்சை சரசுவதி மகால், 1973. பக். vi, i, 431.

**கோபாலையர், தி. வே.** *(ப - ர்)*

*சுப்பிரமணிய தீக்கிதர் இயற்றிய*

*பிரயோக விவேகம் மூலமும் உரையும்*

*தஞ்சாவூர்: தஞ்சை சரசுவதி மகால், 1973. பக்.* viii, *203, 1, 474, 1.*

**சதாசிவப் பண்டாரத்தார், வை.** *(ப - ர்)*

*ஆத்திரையர் பேராசிரியர் அருளிய*

*தொல்காப்பியப் பொதுப்பாயிரம் மூலமும் உரையும்*

*கும்பகோணம்: ஸ்ரீ கோமளாம்பா பிரஸ், 1923. பக்.* viii, *15.*

**சாமிநாதையர், உ. வே.**

*என் சரித்திரம்*

*சென்னை: கபீர் அச்சுக்கூடம், 1950. பக்.* xvi, *1038.*

**தண்டபாணி தேசிகர், ச.** *(ப - ர்)*

*ஸ்ரீ மாதவச் சிவஞான யோகிகள் அருளிச்செய்த*

*தொல்காப்பியச் சூத்திர விருத்தி*

*திருவாவடுதுறை: திருவாவடுதுறை ஆதீனம், 1968. பக். 16, 174.*

**நடராசா, எவ். எக்ஸ்.**

*நன்னூற் காண்டிகை உரையும் நாவலர் பெருமானும்*

*காரைநகர் (ஈழம்): தமிழ் வளர்ச்சிக் கழகம், 1987. பக். 19.*

**நாச்சிமுத்து, கி.**

*டாக்டர் உ. வே. சா. இலக்கணப்பதிப்புகள்*

*சென்னை: உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், 1986. பக்.* v, *124.*

**பதிப்பு ஆசிரியக் குழுவினர்** *(ப - ர்)*

*தொல்காப்பியம்*

*சென்னை: எஸ். ராஜம், 1960. பக்.* vi, *162.*

**விநாயகம், க.**

*சிவஞான முனிவர் உரைத்திறன்*

*ஸ்ரீ அன்னை நூலகம்: மயிலம், 1991. பக்.* xxvii, *437.*

**வெள்ளைவாரணனார், க.**

தொல்காப்பியம் - நன்னூல் எழுத்ததிகாரம்

*3-ஆம் பதிப்பு*

*சிதம்பரம்: ஆசிரியர் வெளியீடு, 1974. பக். 325.*

**வெள்ளைவாரண(னா)ர், க.**

தொல்காப்பியம் - நன்னூல் சொல்லதிகாரம்

*மறு பதிப்பு*

*தஞ்சாவூர்: தமிழ்ப் பல்கலைக்கழகம், 1984. பக். 457.*

**வேங்கடசாமி, மயிலை சீனி.**

*பத்தொன்பதாம் நூற்றாண்டில் தமிழ் இலக்கியம் (1800 - 1900)*

*சென்னை: சாந்தி நூலகம், 1962. பக். 426.*

**வேங்கடராமையா, கே. எம்.**

*சுப்பிரமணியன், ச. வே.*

*நாகராசன், ப. வெ. (ப - ர்)*

தொல்காப்பிய மூலம் பாட வேறுபாடுகள்- ஆழ்நோக்காய்வு

*திருவனந்தபுரம்: பன்னாட்டுத் திராவிட மொழியியற் கழகம், 1996. பக். xxxi, 424.*

**வையாபுரிப் பிள்ளை, எஸ்.**

*தமிழ்ச் சுடர்மணிகள்*

*சென்னை: பாரி நிலையம், 1968. பக். xv, 431.*

## உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

சென்னை – 600 113

### அண்மை வெளியீடுகள்

| | |
|---|---|
| தமிழின் பா வடிவங்கள் | 35. 00 |
| சங்க இலக்கியம் – கவிதையியல் நோக்கு | 110. 00 |
| நாடக மேடை நினைவுகள் | 160. 00 |
| சின்னணைஞ்சான் கதை | 65. 00 |
| தொல்காப்பிய இலக்கியக் கோட்பாடுகள் | 110. 00 |
| நன்னூல் மூலமும் கூழங்கைத்தம்பிரான் உரையும் | 65. 00 |
| யாப்பருங்கலம் | 170. 00 |
| மண்டல புருடர் வழங்கிய சூடாமணி நிகண்டு | 65. 00 |
| தமிழ் நாடகமேடை முன்னோடிகள் | 40. 00 |
| காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர் கோவில் – ஓர் ஆய்வு | 60. 00 |
| திருக்குற்றாலநாத சுவாமி கோயில் வரலாறும் பண்பாடும் | 60. 00 |
| வெள்ளுடை வேந்தர் தியாகராயரின் வாழ்வும் பணியும் | 65. 00 |
| தமிழ்நாட்டு வரலாற்றில் இலக்கிய ஆதாரங்கள் | 100. 00 |
| இந்திய விடுதலைக்கு முந்தைய தமிழ் இதழ்கள், தொகுதி – 1 | 100. 00 |
| கதிர்வேற்பிள்ளை – தமிழ்ச் சொல்லகராதி, மூன்று பாகங்கள் | 600. 00 |
| சங்க இலக்கியத்தில் கலையும் கலைக்கோட்பாடும் | 65. 00 |
| சதாசிவப் பண்டாரத்தார் ஆய்வுக் கட்டுரைகள் | 40. 00 |
| பம்மல் சம்பந்த முதலியாரின் உரைநடை நூல்கள், தொகுதி–1 | 50. 00 |
| பம்மல் சம்பந்த முதலியாரின் உரைநடை நூல்கள், தொகுதி–2 | 40. 00 |
| நாட்டிய நன்னூல் | 25. 00 |
| கன்னடத்தில் காரைக்காலம்மையார் வரலாறு | 20. 00 |
| கபிலர் | 70. 00 |
| சங்கத் தமிழர் வாழ்வியல் | 75. 00 |
| வேதகிரியார் சூடாமணி நிகண்டு | 65. 00 |
| தமிழக மேடை நாடகப் பெண் கலைஞர்கள் – குறிப்பேடு | 25. 00 |
| Studies in Tamil Prosody and Poetics | 45. 00 |
| Persona in Tolkapiyam | 50. 00 |
| A Grammar of Contemporary Literary Tamil | 80. 00 |
| Cilappatikaram (மொ.நூ.ம.ப) | 100. 00 |
| Tani pacura togai (மொ.நூ.ம.ப) | 30. 00 |
| Dedication (மொ.நூ.ம.ப) | 25. 00 |
| Temple chimes (மொ.நூ.ம.ப) | 20. 00 |
| Nala venba (மொ.நூ.ம.ப) | 45. 00 |
| Tamil Heroic Poems (மொ.நூ.ம.ப) | 40. 00 |
| Six Long Poems From Sangam Tamil (மொ.நூ.ம.ப) | 30. 00 |
| Kurinci-p-pattu-Muttollayiram (மொ.நூ.ம.ப) | 40. 00 |